# ॥ श्रीविष्णुसहस्रनामस्तोत्रम् ॥

# ஸ்ரீ விஷ்ணு
# ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்



தமிழ் உரை

சி.வெ. ராதாகிருஷ்ண சாஸ்திரி

।। श्री:।।

# ।। श्रीविष्णुसहस्रनामस्तोत्रम् ।।

# ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

தமிழ் உரையுடன்




பேருரையாளர்

சி.வெ. ராதாகிருஷ்ண சாஸ்திரி



வெளியிடுவோர்

**அகஸ்தியர் பதிப்பகம்**

க்ளைவ்ஸ் பில்டிங், நந்தி கோவில் தெரு, தெப்பக்குளம்,

திருச்சி – 620 002. த.பெ.எண்: 334 போன் : 2700061

# இரண்டொரு வார்த்தைகள்

பூஜ்யர் என் தந்தை சிமிழி ஸ்ரீ வெங்கடராம சாஸ்திரி அவர்கள் எனது முதல் குரு, முக்கிய குருவுமாவார். அவர் தந்த அறிவை அவரது நினைவில் இந்த நற்பணியில் பயன்படுத்துகிற வாய்ப்பு என் வாழ்க்கையில் எனக்குக் கிட்டிய பெரும்பேறு என்று பெருமித மடைகிறேன். மிகுந்த அறிஞர்களும் அனுபவம் மிக்கவர்களுமான பெற்றோர், கருணையும் பேரருளும் பரிவும் உருவான குருவரர்கள், அன்பும் அக்கரையும் காட்டி நற்பணிகளில் தூண்டுகிற சூழ்நிலை, சிறுவயதில் பெற்ற ஸம்ஸ்க்ருத மொழியறிவும் ஆயுர்வேத வேதாந்தப் பயிற்சியும் இன்றுவரை குன்றாமல் தொடர்வது, எனச் சிறந்த வாய்ப்பு எனக்கு அகலாத துணையாக நிற்கிறது.

தேவியின் அருளால் பல நூல்களை அறிமுகப்படுத்த நேர்ந்துள்ளது. ஜகத்குரு ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களின் வரலாற்றை ஸ்ரீ சங்கர விஜய நூல்களிலிருந்து தொகுத்தது முதன் முயற்சி. தோன்றாத் துணையாக என் உள்ளத்தில் அமர்ந்து ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்ததிபர்களான ஜகத்குருவரர்கள் என் அறிவைத் தூண்டியதும், என் குருநாதர் ப்ரஹ்மஸ்ரீ V.S. வெங்கட ஸு்ப்ரஹ்மண்ய ஶாஸ்த்ரிகள் அவர்கள் பரிவுடன் என் நூலைத் தன் நூலாகப் பாவித்துச் செப்பனிட்டதும் காரணமாக வெளியான ஸ்ரீ சங்கர விஜய மகரந்தம் என்ற ஸம்ஸ்க்ருத நூல் மூன்று பதிப்புகளைக் கண்டது. அதன் ஸங்க்ரஹ நூலாக ஸ்ரீ சங்கரவிஜய மகரந்த ஸாரமும் வெளியானது. இதன் துணைச் சிறு நூல்களாக ஸ்ரீ சங்கரோதந்தம், Age of Sankara, மற்றும் ஸ்ரீ ஆசார்ய ப்ரசஸ்தி மகரந்தம் அடுத்து வந்தன. திருச்சியில் நிகழ்ந்த சொற்பொழிவை நாடாவில் பதித்துப் புத்தக ரூபமாக வந்தவை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திர விரிவுரையும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திர விரிவுரையும் துர்க்கா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திர விரிவுரையும். ஆயுர்வேத மாதப் பத்திரிகைகளான வைத்திய சந்திரிகை, ஆரோக்கியம் இவற்றின் ஆசிரியராக இருந்து எழுதியவற்றின் தொகுப்பாக ஆயுர்வேத ஸாரம், உணவும் பானமும், ஆரோக்கிய வாழ்க்கை முறை, சாரீரச் சொற்கள் அகராதி, முதலிய வெளியாயின. அந்தணர்களின் வாழ்க்கை முறைத் தொகுப்பான தர்ம சாஸ்த்ரம் என்ற நூலும் தமிழ் உரையுடன் விதுர நீதி என்ற நூலும் அண்மையில் வெளியாயின. இவற்றை வெளியிட அறிவும் ஆற்றலும் நிதியும் தந்து உதவியவள் தேவி.

பரிசீலனைக்கு நூல் தந்து உதவியவர்கள், மனச் சோர்வு ஏற்பட்டபோது ஆசி கூறி ஊக்கியவர்கள், நூல் விநியோகத்திற்கு உதவியவர்கள், நிதியுதவிய நல்லிதயம் படைத்தவர்கள், என்று பலரைப் பல வகைகளில் எனக்கு உதவத் தேவி தந்தாள். இன்றும் இந்நூலின் மறுபதிப்பினும் அப்படிப் பலர் உதவியுள்ளார்கள். அவர்களனைவரையும் தேவியின் உருவில் கண்டு வணங்குகிறேன். கைமாறு எதிர்பாராத உதவிகள் இவை. இந்த மறு பதிப்பை விரைவில் மிக அழகாக அச்சிட்டு வெளிக்கொணர உதவிய ஸ்ரீ V.K.N. Enterprisesன் உரிமையாளர் ஸ்ரீ V.K. நாராயணன் அவர்களுக்கும், மிகவும் அழகாக பீஷ்மரின் விஷ்ணு ஸஹஸ்ரநாம உபதேசத்தைச் சித்திரம் தீட்டி முகப்புப் படமாக்கித் தந்த ஸ்ரீ பத்மவாஸன் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

வழிபடுகிற தெய்வம் தேவி, கட்டிக் காக்கிற குல தெய்வம் ஏழுமலையான். இருவரும் ஒருவரே என்று பல நேரங்களில் இருவருமே எனக்குக் காட்டியுள்ளனர். கோப்த்ரீ கோவிந்த ரூபிணீ, என்ற அவள் பெயர்களும் அடிக்கடி இதனை உணர்த்தும்.

''ஜன்மலாப: பர: பும்ஸாம் அந்தே நாராயண ஸ்மிருதி:'' என்று யோகிவர்யரான சுகரின் வாக்கு. ஒவ்வொரு செயலின் இறுதியில், எண்ணத்தின் இறுதியில், வாக்கின் இறுதியில் (அந்தே) நாராயணனின் நினைவேற்படின் வாழ்க்கை பயன் பெற்றதைக் காட்டும். என் செயல்களோ எண்ணமோ சொல்லோ இறை பணியாகத் தொடங்கியவையாக இருக்க இயலாது. எல்லாம் அவர் செயலாக அவர் சொல்லாக அவர் எண்ணமாக இருந்தால் மட்டுமே நினைவில் அவர் நிற்பார். அதற்கான பயிற்சியாக எழுதி எழுதி, நினைத்து நினைத்து, பேசிப் பேசி ஒரு இடையறுத் தொடர்பு கொள்கிற முயற்சியாக இப்பணி அமையட்டும் என்ற எனது பெரும் எதிர்பார்வை என்னை நற்பணிகளில் அடிக்கடி ஈடுபடுத்துகிற ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீகாமகோடி பீடத்தாசாரிய ஸ்ரீ சரணர்களின் அருளால் நிறைவேறும். இதனை அப்பெரியோர்களின் திருவடிகள் வழியே ஈசனிடம் அர்ப்பணம் செய்கிறேன்.

**ராதாகிருஷ்ண சாஸ்திரி**

*22, வீரேச்வரம் அப்ரோச் ரோடு,*
*ஸ்ரீரங்கம்-620 006, திருச்சிராப்பள்ளி.*

श्री चन्द्रमौलीश्वराय नमः

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய
ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்கள் அருளிய

## ஸ்ரீ முகம்

श्रीशङ्करभगवत्पादाचार्यपरम्पराऽऽगत
श्रीकाञ्चीकामकोटिपीठाधिपति
जगद्गुरु श्रीशङ्कराचार्यस्वामिनां
श्रीमठसंस्थानम्
काञ्चीपुरम्

*யாத்ராஸ்தானம் - ருஷீகேசம்.*

*புராணங்களில் சிவன், விஷ்ணு, ஸ்கந்தன், கணபதி, தேவி என எல்லா தெய்வங்களுக்கும் ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரங்கள் காணப்படுகின்றன. ஆனாலும் பீஷ்மாசார்யர் சொன்ன இந்த விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தை பகவான் ஸ்ரீ கிஷ்ணனே கேட்டு ஆமோதித்தார். இந்தத் தனிப்பெரும் பெருமையுள்ள விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்கு ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யர்கள் பாஷ்யம் எழுதினார்கள். அதனால் ''அவர்கள் பாஷ்யம் செய்த ஸூத்ரங்கள், உபனிஷத்துக்கள், பகவத் கீதை இவற்றிற்கு என்ன பெருமையோ அவ்வளவு பெருமையும் இதற்கு உண்டு; ப்ரஸ்தானம் மூன்றையும் படிப்பதனால் என்ன பயனோ அந்தப் பயன் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தைப் படிப்பதனால் ஏற்படும்'' என்று தெரிகிறது. ஸ்ரீ ஆசார்யர்கள் ''பகவன் நாமாவுக்கு ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் செய்து வைக்கும் சக்தி உண்டு'' என்று அந்த பாஷ்யத்தின் முகவுரையில் பல ப்ரமாணங்களுடன் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.*

*ஸௌந்தரியலஹரியின் பல வியாக்யானங்கள் அனைத்தையும் சேர்த்துப் பதிப்பிக்க உதவியது, ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்கு முன்னோர்கள் செய்த வியாக்யானங்கள் மற்றும் ஸ்ரீ வித்யா தந்த்ரத்தைச் சார்ந்த பல க்ரந்தங்களைப் பரிசீலனை செய்து*

ப்ராமாணிகமாகத் தமிழில் ஒரு உரை எழுதியது முதலிய அனுபவங்களால் ஏற்பட்ட தெளிவான ப்ரதிபயைக் கொண்டு நமது அத்யந்தப் பிரிய சிஷ்யரான சிமிழி வைத்ய ஸ்ரீ எஸ்.வி. ராதாக்ருஷ்ண சாஸ்திரிகள் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்குத் தமிழில் ஒரு விரிவுரை எழுதியிருக்கிறார்.

அதில் விசேஷமாக நாம ஸித்தாந்த விஷயமான பல ஸூக்ஷ்மங்கள், உபநிஷத்துக்களில் காணப்படுகின்ற பல நாமாக்கள் இந்த ஸ்தோத்திரத்தில் காணப்படுவதால் அவற்றிற்கு வேதாந்த ஸம்மதமான அர்த்தங்களுடன் அவை இந்த ஸ்தோத்திரத்தில் அமைந்த ஸந்தர்ப்பங்களை அனுஸரித்துக் கிடைக்கும் விசேஷமான அர்த்தங்கள், ஒரே நாமா இரண்டு மூன்று இடங்களில் இருந்தாலும் அவைகள் அமைந்த ஸந்தர்ப்பத்தினால் கிடைக்கும் விசேஷமான வேற்றுமைகள், பல க்ரந்தங்களில் காணக் கூடிய அர்த்தவாதம் போலத் தோன்றும் கருத்துகளுக்கு உண்மையான மதிப்பீடுகள் முதலியவை வித்வான்களும், ஆஸ்திகர்களும் படித்துப் போற்றத்தக்கவை.

அவருடைய தகப்பனார் பெயரில் அவரால் ஸ்தாபிக்கப்பட்ட சிமிழி வெங்கடராம சாஸ்திரி டிரஸ்டின் சார்பில் இந்தச் சிறந்த நூலை வெளியிடுகின்ற ஸ்ரீ எஸ்.வி. ராதாகிஷ்ண சாஸ்திரிகள் ஸ்ரீநிவாஸனின் க்ருபையால் ஸகல சிரேயஸ்ஸுகளையும் அடைய ஆசீர்வதித்து.

அக்ஷய வைசாக சதுர்சசி — நாராயண ஸ்ம்ருதி:

## ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஆசிகள்

ஸ்ரீரங்கநாயகீஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீரங்கநாத திவ்யமணி பாதுகாப்யாம் நம:

*பூர்வ ஜன்மங்களில் செய்த புண்ணியங்களின் பயனாக இம்மனிதப் பிறவியை அடைந்தும் உண்டியே உடையே உகந்தோடித் திரிந்துழல்கின்றவர்களுக்கு இக்கலியில் பகவந் நாமகீர்த்தநம் ஒன்றுதான் ஸம்ஸாரபந்தம் நீங்குவதற்கான உபாயம். ஸஹஸ்ரநாமம் என விஷ்ணு ஸஹஸ்ரநாமத்துக்குத்தான் பெயர். ப்ராசீனமாக பல ஸஹஸ்ரநாமங்கள் இருந்தாலும் ஆதி சங்கரபகவத் பாதாள் இதற்குத்தான் வ்யாக்யானம் செய்தார். பகவத் ராமானுஜருடைய நியமனத்தால் ஸ்ரீ பராசரபட்டர் இதற்கு பகவத் குணதர்பணம் என்ற வ்யாக்யானம் செய்தார். பீஷ்மர் உபதேசிக்கத் தர்மபுத்ரர் கேட்டார். ஸ்ரீ விஷ்ணுவின் அவதாரமான வேதவ்யாஸர் ருஷிகளால் அனுஸந்தானம் பண்ணப்பட்ட அந்த நாமங்களைத் தொகுத்தார். இதில் ஒவ்வொரு நாமமும் பகவானுடைய குணங்களைச் சொல்கின்றன. ''யாநி நாமாநி கௌணாநி விக்க்யாதாநி மஹாத்மந:''.*

*பீஷ்மர் எல்லா தர்மங்களையும் உபதேசித்தார். தர்மபுத்ரர் இவற்றுள் உமக்கு எது உயர்ந்த தர்மம் என்று திருவுள்ளமோ அதைச் சொல்ல வேண்டும் என்று கேட்க ஸஹஸ்ரநாம கீர்த்தநம்தான் சிறந்த தர்மம் என என் மதம் என்றார்.*

*இந்த ஸஹஸ்ரநாமங்களுக்கு ஆறுவிதமான ஏற்றம் உண்டு. 1. மஹாபாரதத்தில் ஸாரமானது, 2. ஸநகாதிகளால் பல்லாயிரக் கணக்கான நாமங்களிலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்டது, 3. வேதவ்யாஸர் தொகுத்தது. 4. உபதேசித்தவர் பீஷ்மர், கேட்டவர் தர்ம புத்திரர் என ச்ரோத்ரு வக்த்ரு வைலக்ஷண்யம் உள்ளது. 5. பலராலும் வ்யாதி நிவ்ருத்திக்கும், பாபப்பிராயச்சித்தத்திற்கும்*

உகந்ததாகக் கொண்டாடப்பட்டது. 6. பகவத்கீதையில் சொன்ன அர்த்தங்களை ஆங்காங்கு நிர்ணயம் பண்ணித் தருவது என.

பார்வதிக்கு சிவபெருமான் ஸ்ரீராம என்ற ஒரு நாமமே ஸஹஸ்ரநாமங்களுக்கும் ஸமமானது என உபதேசித்தார். விஷஹர மந்திரம்போல் அர்த்தம் தெரியாமல் சொன்னாலும் பயனுண்டு. ஆகிலும் அர்த்தம் தெரிந்து சொன்னால் பகவதனுபவம் ஏற்படும். பகவதனுபவம் மோக்ஷ ஆனந்தத்தைவிடச் சிறந்தது. 'நின் புகழில் வைகும் சிந்தையிலும் மற்று இனிதோ நீ அவர்க்கு வைகுந்த மென்று அருளும் வான்' என்று நம்மாழ்வார் அருளிச் செய்தார். ஸ்ரீ வைஷ்ணவ மதஸ்தர்களான ஆழ்வார்கள் பதின்மரும் 'இந்த ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லி பகவானை ஆராதியுங்கோள்' என்றும் 'தேவர்களும் இந்த நாமங்களைச் சொல்லி பகவானை ஆசிரயிக்கிறார்கள்' என்றும் பேசியுள்ளார்கள். பெரியாழ்வார் 'அடி தொழுது ஆயிர நாமம் சொல்லி' என்றும் ஸ்ரீ ஆண்டாள் 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி' என்றும் திருமங்கையாழ்வார் 'பேர்கள் ஆயிரம் பரவி நின்று' என்றும் பல படியாகப் பேசியுள்ளார்கள்.

இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு ராதாக்ருஷ்ண சாஸ்த்ரிகள் அழகான முறையில் உரை எழுதியிருக்கிறார். இவருக்கு ஸம்ஸ்க்ருத பாஷையில் போற்றத்தக்க பாண்டித்தியம் இருக்கிறது. உயர்ந்த குலத்தில் பிறந்தவர். இவரது தகப்பனார் சிறந்த பண்டிதர். இந்த ஸஹஸ்ரநாம உரை எளிய நடையில் அமைந்துள்ளது. அத்வைத விசிஷ்டாத்வைத பரமான அர்த்தங்கள் எல்லாவற்றையும் காட்டி உள்ளார். இதில் உள்ள திருநாமங்கள் உபநிஷத்துக்களில் உள்ளவை என்பதை ஆங்காங்கு தெளிவாக காட்டியிருக்கிறார். இந்த நூல் எல்லோருக்கும் பயன்படும் என்று நம்புகிறோம். இந்நூலாசிரியர் இம்மாதிரி பல நூல்களை எழுதி உலகில் ஆஸ்திக்யத்தை வளர்த்துக் கொண்டு பல்லாண்டு பல்லாண்டுகள் பெருமையுடன் விளங்க வேண்டுமென்று அரங்கேசனையும் அவனது திருவடி நிலைகளையும் இறைஞ்சுகின்றேன்.

**ஸ்ரீரங்கம்** ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகா ஸ்ம்ருதி:

**ஸ்ரீமதாண்டவன் ஆச்ரமம்**

# விரிவுரைக்கு உதவிய நூல்கள்

| | |
|---|---|
| மஹாபாரதம்— | நீலகண்டர் உரையுடன் தமிழாக்கம்-ஸ்ரீ ம.வீ. ராமாநுஜாசார்யர் பதிப்பு. |
| ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமம்— | ஸ்ரீ சங்கர பாஷ்யம்<br>ஸ்ரீ தாரகபிரும்மாநந்த ஸரஸ்வதியின் ஸ்ரீ சங்கர பாஷ்ய விவ்ருதி<br>ஸ்ரீ பராசரப்பட்டரின் பகவத்குண தர்பணம், உரை.<br>ப்ரணவ நிருக்தி,<br>நிர்வசனம்<br>ஸ்ரீ ஸத்யஸந்தயதி - உரை.<br>ஸ்ரீ சங்கரபாஷ்யத் தமிழுரை - காமகோடி கோசஸ்தான வெளியீடு.<br>ஸ்ரீ சங்கர-பட்டபாஷ்யத் தமிழாக்கம் ஸ்ரீ ம.வீ. ராமாநுஜாசார்யர். |
| ஸ்ரீ விஷ்ணு புராணம். | |
| ஸ்ரீமத் பாகவதம். | |
| ஸ்ரீமத் ராமாயணம் | |
| உபநிஷத் பாஷ்யங்கள் | — ஸ்ரீ சங்கரர் இயற்றியவை.<br>உபநிஷத் ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வதி இயற்றியவை. |
| வேதாந்தநாமரத்ன ஸஹஸ்ரம் | — ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதி இயற்றியது |
| சிவாஷ்டோத்தர சதநாமாவளி உரை | — ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர். ஸ்ரீ பாஸ்கரராயர் |
| பகவத் கீதை | |

# பொருளடக்கம்

## ॥ प्रभो वेङ्कटेश प्रसीद प्रसीद ॥

गुरुर्गुरुतमो धाम गुरुमण्डलरूपिणी

### समर्पणम्

सा बाला त्वं बालः सा ललिता त्वं महान्प्रांशुः ।
श्रीमाता सा त्वमसि प्रेष्ठो देवो भवे भवे भूयाः ॥

विवृतिः सहस्रनामसु जननीवाचा कृतेयमादरतः ।
प्राक्तनगुरुवरदर्शितरीत्या भक्त्या समर्प्यते पदयोः ॥

ध्यानं तपः सपर्या नामस्मरणं गुणानुभव इत्थम् ।
सम्पन्नं सर्वं मे स्वीकुरु दयया हृषीकेश ॥

### ஸமர்ப்பணம்

*இஷ்டதெய்வமாக வழிபடப் பெறுபவள் பாலா. குல தெய்வமாக வழிபடப் பெறுபவரான நீரும் பாலாதான். அவள் மெல்லியலாள். நீரோ நெடிதுயர்ந்த பெருமாள். அவள் மாபெரும் தாய். அவளே நீர். என் இஷ்ட தெய்வமாகக் குல தெய்வமாக இப்படி ஒவ்வொரு பிறவியிலும் இருப்பீராக!*

*உமது ஆயிரம் பெயர்களின் விளக்கம் என் தாயின் மொழியில் மிகவும் கவனத்துடன் தரப்பட்டுள்ளது. முன்னோர் குருவரர்களான பீஷ்மர் வியாஸர் சங்கரர் முதலானோர் காட்டிய வழியில் அது அமைந்துள்ளது. அது உம் திருவடிகளில் ஸமர்ப்பிக்கப்படுகிறது.*

*இந்த விளக்கப் பணியே த்யானம், தவம், வழிபாடு, உமது நாம ஸ்மரணம், உமது பெருமைகளை உணர்ந்து அனுபவித்தல் என எனக்கு எல்லாமாகி நிறைவடைந்துள்ளது. என் உடல் மனச் செயலனைத்தையும், கட்டிக் காக்கும் தெய்வமானீர். இதனைத் தயையுடன் ஏற்றுக் கொள்வீராக.*

श्रीहरिः शरणम्

# ॥ श्रीविष्णुसहस्रनामस्तोत्रम् ॥

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

॥ श्रीगुरुभ्यो नमः ॥

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम्।
प्रसन्नवदनं वन्दे सर्वविघ्नोपशान्तये॥

व्यासाय विष्णुरूपाय व्यासरूपाय विष्णवे।
नमो वै ब्रह्मनिधये वासिष्ठाय नमो नमः॥

वन्दे गुरुपदद्वन्द्वं अवाङ्मनसगोचरम्।
रक्तशुक्लप्रभामिश्रं अतर्क्यं त्रैपुरं महः॥

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम्।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे॥

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काऽप्यन्यतमिका।
मदाराध्यश्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया॥

श्रुतिस्मृतिपुराणानां आलयं करुणालयम्।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम्॥

परित्यज्य मौनं वटाधःस्थितिं च
व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम्।
मधुस्यन्दिवाचा जनान्धर्ममार्गे
नयन्श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते॥

# ''शुभेक्षण:''
# अनुकूलः शतावर्तः

## முன்னுரை

இன்று விஜயதசமி நன்னாள்: ஒன்பது நாட்களாகத் தொடர்ந்து இறைவனைச் சிறப்பாக வழிபட்டு உடலிலும் உள்ளத்திலும் தெய்விக சக்தியை நிரப்பிக்கொண்டு நிறைவுபெறும் நாள்.[1]

நமது ஓர் ஆண்டு காலவரை தேவர்களின் ஒரு நாளாகும். உத்தராயணம் பகலாகும், தக்ஷிணாயனம் இரவாகும். இந்த புரட்டாசி ஐப்பசி மாதங்களில் தேவர்களின் நள்ளிரவை நெருங்கியிருக்கிறோம். பொதுவாக நள்ளிரவு என்பது நமது சக்திகள் அனைத்தும் நம்முள் அந்தர்யாமியாக நின்று ஆள்கிற இறைவனிடம் ஒடுங்கும் வேளை. தெய்விகக் கலப்பற்ற எண்ணங்களாலும் செயல்களாலும் சேர்ந்துள்ள மாசுகளைக் களைந்துகொள்ளும் வேளை. தெய்விகப் புத்துணர்ச்சியுடன் மலர்ச்சி பெற்று விழித்தெழும் வேளைக்கு முன்னோடி. நாம் அறிந்தும் அறியாமலும் நிகழும் அன்றாடச் செயல்முறை இது. நவராத்திரி என்ற தேவர்களின் நள்ளிரவு வேளையிலும் நாம் நமது சக்திகள் அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைக்கிறோம். அவற்றை அவர் புதுப்பித்துத் தெய்விக ஒளிமிக்கதாக்கித் தருகிறார். விஜயதசமியன்று அவர் அருளால் அவற்றைத் திரும்பப் பெறுகிறோம். இதனைக் கொண்டாடுவதே நவராத்திரித் திருவிழாவின் நோக்கமாகும்.

இறைவனின் அருளால் சுய அறிவு, கல்வியறிவு, ஆற்றல், நினைவாற்றல், தெளிவு. அமைதி, மேதை, பொறுமை, மேனி ஒளி, உடல் வலிவு, செல்வம், சுகானுபவம் முதலிய பல சிறப்புகளைப் பெற்றுள்ளோம். தெய்விகச் சிறப்புமிக்க அந்த சக்திகளைத் தெய்விகமல்லாத பல வழிகளிலும் பயன்படுத்தி மாசுள்ளதாக்கிக் கொண்டோம். வானம் தெளிந்த தூய நீராக நம்மிடம் அளித்ததை

---

★ விஜயதசமியன்று தொடங்கிப் பொன்மலை ஸ்ரீ ராமகிருஷ்ண சாரதா ஸமிதியில் நிகழ்ந்துவந்த ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம விரிவுரைகளை ஒட்டி இறைவனருளால் இந்நூல் அமைந்துள்ளது.

நாம் பயன்படுத்திக்கொண்டு கழிவுநீராக்கிவிடுகிறோம். அதனை சூர்யன் தன் கிரணங்களால் ஏற்று மாசு நீக்கித் தெளிந்த தூய நீராக வானிலிருந்தும் திருப்பித் தருகிறார். இறைவனின் இந்தத் திருவருட்பாங்கைப் பல வகைகளில் உணர்ந்த நாம் ஆண்டு தோறும் ஒரு முறை அவர் அளித்த செல்வங்கள் அனைத்தையும் அவரிடம் ஸமர்ப்பணம் செய்து தூய்மையுடன் புதுப்பிக்கச் செய்து திரும்பப்பெறுகிற நோக்குடன் நவராத்திரியைக் கொண்டாடுகிறோம். நமது உடலிலும் மனத்திலும் உள்ளும் புறமும் இயங்கும் சக்திகள் அனைத்தும் இறைவனின் அருளொளிக் கதிர்களே என்ற உணர்வு, ஆண்டு முழுவதும் நீடித்திருப்பதற்கு இந்த ஒன்பது நாட்களுக்கான விரதம் உதவும்.

மஹாபாரதத்தில் ஒரு சிறு நிகழ்ச்சி. வனவாசம் முடிந்ததும் கண்ணனைத் தூது அனுப்பிப் பாண்டவர்கள் தம் பங்கான அரசைத் திருப்பிக் கேட்கின்றனர். துரியோதனன் எதனையும் தர மறுக்கிறான். போர் என்ற முடிவுடன் திரும்புகிற கண்ணன் குந்தி தேவியிடம் அனுமதி பெறச் செல்கிறார். குந்தி பாண்டவர்களுக்கு அவர் மூலம் விதுலை எனும் க்ஷத்திரியத் தாய் போரில் தோற்றுத் தளர்ந்து நின்ற தன் குமாரனை உற்சாகப்படுத்தக் கூறிய உபதேச மொழிகளைச் செய்தியாகச் சொல்லி அனுப்புகிறாள்.

''எலியின் கையை நிரப்ப ஒன்றிரண்டு தானிய மணிகள் போதும். சிறு வாய்க்காலை நிரப்பச் சில நிமிஷங்களின் மழை போதும். தரம் கெட்ட மனிதனுக்கு அற்ப ஆசை நிறைவேறினால் போதும். இத்தகைய சிறு ஆசைகளுக்கு உட்படுவது நம் ஆத்மாவையே அவமதிப்பதாகும். இப்படிச் சிறு சிறு ஆசைகளை முன்னிட்டு வாழ்வதைவிடப் பெரிய நோக்குடன் துணிந்து வாழ்ந்து அதில் உயிர் இழப்பதும் மேல்''.

''உயர்ந்த பெருநோக்குடன் எழுவாய்! முழு விழிப்புடன் செயல்படுவாய்! மங்களமான நன்மை பயக்கும் செயல்களில் முழு மூச்சுடன் ஈடுபடுவாய்! வெற்றி நிச்சயம் என்ற உறுதிகொள்வாய்! இடையறாது பணிபுரிகிறபோது நேரிடுகிற இன்னல்களைப் . பொருட்படுத்தாதிருப்பாய்!'' என்ற விதுலையின் உபதேசத்தைக் குந்தி பாண்டவர்களுக்குச் சுட்டிக் காட்டுகிறாள்.

सुपूरा वै कुनदिका सुपूरो मूषिकाञ्जलिः ।
सुसन्तोषः कापुरुषः स्वल्पकेनैव तुष्यति ॥

अलातं तिन्दुकस्येव मुहूर्तमपि विज्वल ।
मा तुषाग्निरिवानर्चिः धूमायस्व जिजीविषुः ॥

उत्थातव्यं जागृतव्यं योक्तव्यं भूतिकर्मसु ।
भविष्यतीत्येव मनः कृत्वा सततमव्यथैः ॥

*(உத்யோக பர்வ-135)*

उत्तिष्ठत जाग्रत प्राप्य वरान् निबोधत என்ற உபனிடதத்தின் விளக்கமே விதுலையின் உபதேசம்.

வாழ்வின் சிறு சிறு எதிர்பார்வைகளை நிறைப்பதிலேயே வாழ்நாள் முழுவதையும் பயன்படுத்தி, அழியும் தன்மை கொண்ட வற்றையே சாசுவதமாக நம்பி ஏமாறுவதைத் தவிர்த்து நிலையானதொன்றை வாழ்வின் இலட்சியமாகக்கொள்ளுதல் அவசியம். மனிதனின் மனம் எளிதில் இதற்கு ஒப்புக்கொள்வதில்லை. அற்ப ஆசைகள் நிறைவுறுவதைக் கண்டே மனம் மகிழ்ந்து மதர்த்து நிற்கிறது. நிலையானதொன்றிருப்பதை அறிவதற்கே மனத்திற்குப் பலநாட்பயிற்சி தேவைப்படுகிறது. அதனால் சுய அறிவால் இந்த எண்ணம் ஏற்படுகிற வாய்ப்பு மிகக் குறைவானதென்பதை உணர்ந்த ஆஸ்திகர்கள் சுய சிந்தனை வருமுன்னரே, சிறு வயதிலேயே நிலையான பொருளில் நாட்டத்தை இறைவனிடம் உள்ள நம்பிக்கையாக - தெய்வ பக்தியாகப் பழக்கிவிடுகின்றனர்.

असतो मा सद्गमय। तमसो मा ज्योतिर्गमय। मृत्योर्मा अमृतं गमय।

''நிலையற்றதில் உள்ள நாட்டத்தை மாற்றி நிலையானதை என்னை அடையச் செய்வாய்! இருளிலிருந்த நாட்டத்தை அகற்றி ஒளியை அடையச் செய்வாய்! அழிவை நோக்கிச் செல்வதைத் தடுத்து அழிவற்ற வாழ்க்கையை அடையச் செய்வாய்!'' இப்படி இறைவனிடம் ஒரு பிரார்த்தனை.

இறைவனை வழிபடுத்துபவராக நம்பி எவர் வழிபடுகிறாரோ, அவருக்கு இறைவன் துணை நின்று நல்வழியில் அழைத்துச் சென்று அடையவேண்டியதை அடையச் செய்கிறார்.

வழிகாட்டுபவனும், வழித் துணையாக வருபவனும், சேரு மிடத்திற்கு நம்மைத் தூக்கிச் செல்லமாட்டான். நல்வழி செல்லமுற்படுவதும், துணை தேடுவதும், துணைவன் காட்டியபடி வழிநடப்பதும், சேரவேண்டிய இடத்தை அடைவதும், நம் முயற்சியாலும் உழைப்பாலும் நடைபெறுபவை. இப்படித் தீவிர முயற்சியும் உழைப்புமில்லாதவன் சேர வேண்டிய இடத்தை அடைய முடியாது. இதனை உணர்ந்தே முன்கூறிய பிரார்த்தனையில் கமய — அடையச் செய் — அடைய உதவுவாய் என்றே பிரார்த்தனை அமைந்துள்ளது. இப்படி வாழ்க்கையின் பல்வேறு நிலைகளில் இறைவனை வழிகாட்டியாகவும், உற்ற துணையாகவும், பொறுப்பாளராகவும் எல்லாமாயும் கருதி அவருடன் இணைகிற உணர்வு கொண்டவர்களையே அடியார்கள் எனப் போற்றுகிறோம்.

**அறவழியில் தெய்வத்துணை:** நமது முயற்சியும் உழைப்பும் நல்வழியில் அமையவேண்டும். இறைவனின் அருளை நேர்மை யற்ற நோக்குடன் வேண்டிப்பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்த இரணியகசிபு, இராவணன், சூரபத்மன் முதலானவர்களின் வாழ்க்கையில் அவர்களது நோக்கமே அவர்களைத் தவறான பாதையில் அழைத்துச் சென்று அழிவைக் காட்டிவிட்டதைக் காண்கிறோம். அதனால்தான். ऋतात् सत्यं उपैमि என்று நேர்மையில் நின்று ஸத்யத்தை அடைவேன் என்று விரதம் கொள்கிறோம். உள்ளமும், சொல்லும், செயலும் நேர்மைக்கோட்டில் நிற்பதே ருதம் — தர்மம் — அறவழி ஆகும். இதற்கு மாறானதே அந்ருதம் — நேர்மையற்றது. நேரான வழியில் செல்லத் தெய்வம்தான் துணைபுரிய வேண்டும்.

முன்பிறவிகளின் வினைப்பயனாக இப்பிறவியிலும் அறவழியில் செல்லும் மனப்பண்பு உள்வாஸனையாக அமைந்தவர்களும் அதற்கேற்ற சூழ்நிலையில் வாழ்பவர்களும் தர்ம வழியில் எளிதில் செல்வதைக் காண்கிறோம். தெய்வம் இவர்களுக்குத் துணை நிற்பதை நாம் உணர முடியாது. ஆனால் உள் வாஸனையும் சூழ்நிலையும் அறநிலைக்கு எதிராக வலிவுடன் நிற்கும்போது போர்வீரர்கள்போல் கடும் முயற்சியும் உறுதியும் உழைப்பும் கொண்டு அறவழியில் செல்பவர்களுக்குத் தெய்வம் துணைபுரிவதை அவர்களும் உணருவர். பிறரும் எளிதில் உணரக்கூடும்.

**தெய்வம் — சிறு விளக்கம்.** தெய்வத்தின் துணையை நாடுவது அவசியம். அத்துணையை நாடிப் பெறுவது எப்படி? அந்தத்

தெய்வம் என்பது யாது? இந்தக் கேள்விகளுக்கு விடை காண்பது எளிதல்ல. தெய்வத்தைப் பற்றிய நூல் குறிப்புகளும் பெரியோர்களின் உபதேசங்களும் நிறையக் கிடைக்கின்றன. அவை எளிதில் மனத்தில் படிவதில்லை. தெய்வம் அவ்வளவு எளிதாக மனத்திற் கொள்ளத்தக்கதல்ல. அறிய அறிய விரிந்துகொண்டே போகும் பாங்குள்ளது. எனினும் ஓரளவாவது வரைபடம்போல் தெய்வத்தைப் பற்றி அறிந்து கொள்ளுதல் அவசியம்.

தெய்வத்தைப்பற்றிப் பல விளக்கங்கள் உண்டு. இவற்றைத் தொகுத்துப் பார்ப்போம்.

பிரும்மம் — பரம்பொருள் . முதலாவது — நான்மறைகளின் முடிவாகத் தெளிந்த பரம்பொருள் - பிரும்மம். எங்கும் நீக்கமற நிரம்பியிருப்பது, எல்லாமாயிருப்பது, வேற்றுமையை உணர்த்தக்கூடிய வடிவமைப்பு, குணச்சிறப்பு, செயல் சிறப்பு, பெயர் முதலிய எந்தக் குறிப்பீட்டிற்கும் உட்படாதது. ஏகமானது. ஸத் சித் ஆனந்தம் என்று உணரக்கூடியது. மற்றவற்றால் விளக்கப்பெறாதது. தானே தன்னை விளக்கிக்கொள்வது.

ஜகத்காரணமான ஈசுவரன். இரண்டாவது—: பரம்பொருளிடம் உள்ளடங்கித் தனித்தன்மை பெறாதிருந்த மாயை எனும் சக்தி, பரம்பொருளிடமிருந்து இந்த உலகைத் தோற்றுவிக்கும் ஸங்கல்ப வடிவும் விளக்கமும் பெறுகிறது. அந்த மாயை போர்த்திய நிலையில் உலகின் தோற்றத்திற்குக் காரணமானவர் இவர். உலகம் பலவகைத் தோற்றம் பெற உதவுகிற படைப்பு, உலகமாக இயங்க உதவுகிற பாதுகாப்பு, பயனற்றதை அழித்துப் புது உருவம் பெற உதவுகிற லயம் என்ற முத்தொழிலையும் புரிகிற ஈசுவரன் இவர். பிரும்மா, விஷ்ணு, ருத்திரர் என்ற திரிமூர்த்தி, ப்ரத்யும்னர், அநிருத்தர், ஸங்கர்ஷணர் என்ற வ்யூஹம். பிரும்மா, விஷ்ணு, ருத்திரர், ஈச்வரர், ஸதாசிவர் என்ற தோற்றங்களில் பஞ்சகிருத்யங்களை நிறைவேற்றுகிற பஞ்சப் பிரும்மம். இவ்வடிவிலுமிருந்து இவை அனைத்தையும் தன் ஸங்கல்பத்தால் நடத்துகிற பரவாஸுதேவனாக, பரமேசுவரனாக, பராசக்தியாக விளங்குபவர் இந்த ஈசுவரன்.

ஜகந்நியாமகரான ஈசுவரன். மூன்றாவது —: அப்படித் தான் தோற்றுவித்த உலகம் தன் ஆஜ்ஞைக்கு உட்பட்டு ஸ்வதந்திரமாக (தானியங்கியாக) நடைபெறுவதற்காக அந்தப் பரம்

பொருளானது இந்திரன், யமன், வருணன், அக்னி, வாயு, ஸூர்யன், சந்திரன் முதலிய ஆதிகாரிக (ஒவ்வொரு துறையில் தனித்து நிர்வாகம் செய்யும் சக்தி பெற்ற) தேவதைகளாக வடிவெடுக்கிறது. இந்த அமைப்பு அண்டத்திலும் பிண்டத்திலும் அதனதன் இயக்கங்களை நெறிப்படுத்துகிறது. ஜகந்நியமனம் என்ற நிலையில் பரம்பொருள் ஏற்கும் பல வடிவங்கள் இவை.

ஆத்மா. நான்காவது —: தோற்றுவித்த பொருள் அனைத்திலும் தானே ஜீவனாக உயிராக ஆத்மாவாக உட்புகுந்து பரவி நின்று அது அது, அது அதுவாகப் பலவாறாகத் தோன்றும்படி அதனதன் சிறப்பைத் தனித்து வெளியாகச் செய்கிற ஆத்ம ஸ்வரூபம் இது.

கர்மபலதாதா - விதி. ஐந்தாவது —: பிரளய காலத்தில் தன்னிடம் லயித்தவை அனைத்தின் வினைப்பயன்களைக் கொண்டு படைப்பின் தொடக்கத்திலும பின்னரும் தொடர்ந்து அந்தந்த வினைப்பயனுக் கேற்றதான உடலையும் மனம்முதலிய கரணங்களையும் வாஸனையையும் போகப் பொருளையும் சூழ்நிலையையும் அமைத்துத் தந்து அவரவர் வினைக்கேற்ப பலதரப்பட்ட ஸுக துக்கங்களை அனுபவிக்கச் செய்கிற விதியாக நிற்பவர். மனிதன் கஷ்டப்படும்போது தெய்வம் விதி என்று நொந்துகொள்ளப்படும் ஈசுவர வடிவு இது.

அந்தர்யாமி. ஆறாவது —: வினைப்பயனும் சூழ்நிலையும் பலவகைகளில் ஜீவனை அலைத்தழிக்கும்போது அவனவனுள் உள்நிலை ஸாக்ஷியாக இருந்து நிலையுணர்த்தி அவனவனுக்கேற்ற நல்வழி உணர்த்துபவர். 'மார்பில் கைவைத்து விடை தா' என்று பிறர் கேட்டதும் உள்ளுணர்வில் அமர்ந்த இவர் கூறுவதை உற்றுக்கேட்பவர் உண்டு.

தீனவத்ஸலன். ஏழாவது —: துன்பத்தில் ஆழ்ந்து ஏங்கிச் சீர்குலைந்து வாடுபவனுக்குத் துணை நிற்கிற அன்புருவம். தாய், தந்தை, நண்பன், ஆசான், ஈசன் என்று வெவ்வேறு உருவில் அருகில் நின்று அணைத்துக் காப்பவர். நாம் இழைக்கிற தவறுகளைப் பெரிது படுத்தாமல் மன்னித்து உய்விப்பவர். அருளே - கருணையே வடிவானவர். நமது எளிய வழிபாட்டிற்குரியவர். வழிபாட்டை எற்பவர்.

இந்த விளக்கங்களை ஆராயும்போது தெளிபவை —: ''இறைவனை விட்டு ஒதுங்கி நாம் வாழ முடியாது. இறைவன்

நம்மை நம் வினைப்படி கட்டுப்படுத்துகிறார். வினைப்பிடி தளர்வதற்கு உரிய செயல்களில் நம்மைத் தூண்டுகிறார். அச்செயல்களில் ஈடுபடும்போது நம்மை அணைத்துக் காக்கிறார்''. என்பவையே.

ஒன்றோடொன்று முரண்படுமாப் போல் தோன்றுகிற இவ்விளக்கங்கள் தொடர்ந்த சிந்தனைக்கு உரியவை. முதல் ஆறு நிலைகளின் மூலம் உணர்ந்த ஈசுவர தத்துவத்தை வழிபாட்டால் — ஆராதனத்தால் திருப்தி செய்விக்க முடியாது. ஏழாமவராக உள்ள தீனவத்ஸலனே நாராயணனாக, சிவனாக, விநாயகராக, முருகனாக, தேவியாக இப்படிப் பல வடிவங்களை ஏற்று ஸாதகனது வழிபாட்டிற்கு உரியவராக ஆகிறார். நமது கோரிக்கைகளை ஏற்று நிறைவேற்றுகிறார். துஷ்டனும் ஏதேனும் ஒரு பயனை எதிர்பார்த்து வழிபடுகிறான். அந்தப் பழக்கத்தால் எதற்கும் ஈசுவரனையே எதிர்பார்க்கிற தன்மை வளர்ந்து அவனும் நல்லவனாகி விடுவதுண்டு.

அந்தர்யாமியான ஈசுவரன் மனச்சாக்ஷியாகி நல்லதை உணர்த்தி நமக்கு வழிகாட்டுகிறார். அவரது குரல் சூழ்நிலையாலும் கெட்ட எண்ணங்களின் பரப்பாலும் அமிழ்ந்துவிடும்போது நாம் அதனைப் புறக்கணிக்கக் கூடும். தீனவத்ஸலனை இறைவனை வழிபட்டுச் சித்தசுத்தி ஏற்பட்டிருப்பவனுக்கு அந்தர்யாமியின் குரல் நன்கு கேட்கும். அவரது பிரேரணையின்படி நடப்பதும் பழக்கத்திற்கு வந்துவிடும்.

கர்மபலதாதாவாக விளங்கும் ஈசுவரன் விருப்பு வெறுப்பிற்கு ஆட்படாதவர். நம் வினைக்கேற்ப நல்லதையோ கெட்டதையோ தருபவர். தீனவத்ஸலனை வழிபடும் பழக்கமுள்ளவனுக்கு இவரது பாங்கு நன்கு விளங்கிவிடும். ''புண்யத்தின் பலனாக எனக்குச் சுகம் கிட்டியுள்ளது. இதில் மகிழ்ச்சிக்கு இடமில்லை. பாபத்தின் பயனாக எனக்குத் துக்கம் கிட்டியது. இதில் வருந்துவதற்கு இடமில்லை. இவற்றை நிறுத்தவோ தவிர்க்கவோ இயலாது. ஈசுவரன் நியாய உணர்வுள்ளவர். அவருக்கு நம்மை வருத்தி ஆவதொன்று மில்லை'', என்ற உண்மை நிலையுணர்வு மேலிட்டு நிற்க, வருவதை வருமாப்போல் ஏற்கிற திடச்சித்தம் ஏற்படுகிறது. சித்தசுத்தி வலிவடைகிறது. விவேகம் நிலைக்கிறது. இதுவும் தீனவத்ஸலனின் அருட்பயனே.

தீனவத்ஸலனின் தொடர்ந்த வழிபாட்டால் ஜகத்காரண மாகவும் ஜகந்நியாமகராகவும் உள்ள ஈசுவர தத்துவம் உலகை இயக்கி ஆட்டிப் படைப்பதை உணர்ந்து உலக சக்கிரச் சுழலில், இறைவனது படைப்பில் அடங்கியிருக்கிற தன் அற்ப நிலை உணர்ந்து தன்னை எந்தச் சூழ்நிலையில் தோன்றவைத்துள்ளாரோ அந்தச் சூழ்நிலைக்கேற்றவாறு அறவழியில் நின்று அவரது ஆணைகளுக்கு ஆட்பட்டு நடப்பதையே தனது உரிமையாகவும் கடமையாகவும் உணர்கிறான். சித்த சுத்தி, வைராக்கியம், சமம், தமம் முதலியவை ஏற்பட்டு அவனுக்கு ஆத்ம ஸாதனத்திற்குள்ள தகுதி அமைகிறது.

இந்தப் பயிற்சி வழிகாட்ட, பரம்பொருள் ஈசுவரன் உலகம் ஆத்மா என்ற பல புதிர்கள் தானே விடுபட, ஐயமற்றவனாக, சிடுக்குகள் நீங்கியவனாக, தெள்ளத் தெளிந்த உள்ளத்தில் ஈசுவரனை எல்லா வடிவங்களிலும் கண்டு களிக்கிறான்.

இவை இறைவனின பல்வேறு நிலைகள்.

இறைவனின் வழிபாடு எவ்வாறு ஸாதகனுக்கு உதவுகிறது? இந்த தீனவத்ஸலனாகிய இறைவனின் வழிபாட்டில் நிலைத்திருப்பவனுக்கு அவனது அந்தர்யாமியின் குரல் எப்போதும் தெளிவாகக் கேட்கிறது. அதனால் அவன் அந்தர்யாமி காட்டிய பாதையில் கெட்டதைத் தவிர்த்து நற்பணிகளில் ஈடுபடுவான். விதிவசத்தால் கிட்டும் சுக துக்கங்களால் பாதிப்படையாமல் தன் கடமைகளில் செவ்வனே ஈடுபடுவான். சித்தசுத்தி இவனுக்கு நன்கு அமைந்து ஞானயோகத்திற்கு இவனை உரிமையுள்ளவனாக்கும். ஞானயோகத்தால் ஈசுவரன், உலகம் இந்த இரண்டின் தத்துவத்தை உணர்ந்து மேனிலை அடைவான்.

இறைவனை வழிபடத் தொடங்கும்போது அவரது மாட்சியையும் தன் சிறுமையையும் உணர்ந்து மதம் பிடித்த யானையிடம் எச்சரிக்கையுடன் பழகுபவன்போல் பயம் கலந்த பக்தியுடன் முதலில் ஈடுபடுகிறான். பின்னர் இறையனுபவம் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவுபடத் தொடங்கியதும் பயம் நீங்கி, இளவரசனைக் கண்ட மக்கள் போல் வியப்பும் மரியாதையும் கலந்த பக்தியுடன் ஈடுபடுகிறான். அரசனைப் போல் அவரை அலங்கரித்துப் பார்த்து மகிழ்ந்து நிறைவு பெறுகிறான். பின்னர் நெருக்கம் வளர வளர வீட்டிற்கு வரும் அன்புக்குரிய

விருந்தினர்போல் பாவித்து அன்புடன் தம்மிடம் உள்ளதை எல்லாம் அளித்துத் திருப்தி செய்விக்கிறான். மேலும் இறைவனது நெருக்கம் வளர வளரத் தன்னையே அவரிடம் ஒப்படைத்துவிடுகிறான். இது பக்தி தரும் நெருக்கம்.

இறைவனை வழிபட பக்தி: இறைவனது வழிபாட்டில் பக்தி எனும் அன்பு பெரிதும் உதவுகிறது. முதலில் ஸங்கல்ப பூர்வமாகச் செயற்கையாக ஏற்படுத்திக்கொண்ட பக்தியே பின்னர் இயல்பாக அமைகிறது. உலகியலிலும் அப்படித்தானே! புதிதாக மணந்தவர் மனைவியிடமோ கணவனிடமோ வேறு எதிர்பார்த்தலை முன்னிட்டே ஏற்படுத்திக்கொண்ட காரியார்த்தமான அன்பு, பின்பு வேறு எதிர்பார்த்தலின்றியும், எதிர்பார்ப்பதற்கு வாய்ப்பே இல்லாத போதும், அருகிலும் தூரத்திலும் மாறாத இயல்பான அன்பாக மாறுகிறது. அப்படித்தான் பக்தியும் சிறுகச் சிறுக வளர்ந்து வலிவடைகிறது. பக்தி வலிவுபெறவும் நிலைத்திருக்கவும் இறைவனைப்பற்றிய தத்துவ அறிவு பெரிதும் உதவுகிறது.

இறைவனது பெயரும் வடிவும் — கருணையால் ஈசுவரன் உலகப் பாதுகாப்பிற்காகப் புரியும் பல லீலைகளையும் அதன் பின்புலனாக உள்ள இறைதத்துவத்தையும் புராணங்களும் இதிகாசங்களும் தல வரலாறுகளும் அடியார்கள் இயற்றிய ஸ்தோத்திரங்களும் எளிய கதைகளாக்கித் தருகின்றன. பெயரும் ஊரும் குறிப்புமற்ற இறைவன் இந்த லீலைகள் மூலம் புதிய வடிவைப் பெறுகிறார், புதுப் பெயரைப் பெறுகிறார். அந்தப் பெயர் அவருக்கு முன்னரும் உண்டு.

பரம்பொருள் ஞானியின் மனத்தை தன்னைத் தவிர வேறு ஒன்றிலும் ஈடுபடாமல் தன்பால் ஈர்த்து விடுவதால் (ரமயதி) ராமன் என அதனைக் குறிப்பிட்டார்கள். வஸிஷ்டர் தசரதரது குமாரனுக்கு அப்பெயரே ஏற்றதெனக் கண்டார். தசரத ராமனும் ராம ராம ராம எனும்படி உலகைத் தன்பால் ஈர்த்து, அப்பெயரைப் பொருளுள்ளதாக்கி அது தனது பெயரே என்று உரிமை கொண்டாடினார். கிருஷ்ணன் (கர்ஷதி - இழுப்பவன்) என்பதும் அதேபொருளுடைய பரம்பொருளின் பெயரே. கர்க்கர் அந்தப் பெயரை வஸுதேவரின் புதல்வனுக்கு உகந்ததாகக் கருதி வைத்தார், கண்ணன் அதனைத் தன்னுரிமையாக்கிக் கொண்டார்.

உலகெங்கும் பரவி நின்று எல்லாவற்றின் இருக்கைக்கும் காரணமாகி நின்று விளையாடுகிற பரம்பொருளை வாஸுதேவன் எனக் குறிப்பிட்டனர். (சு. 164) வஸுதேவரின் குமாரனாகப் பிறந்தமையால் வாஸுதேவன் என்றாகி அந்தப்பெயரைப் பொருளுள்ளதாக்கி எங்கும் நிறைந்த பரம்பொருளாகத் தன்னைக் கண்ணன் பல தடவைகளில் நிரூபித்துவிட்டார். உலகனைத்தையும் தன் கருவில் கொண்டமையால் தாமோதரனாகி நின்ற இறைவன், வயிற்றில் கயிற்றால் யசோதை கட்டியதால் தாமோதரனாகி, உலகைத் தன் வயிற்றுக்குள்ளிருப்பதை அவளுக்கு உணர்த்தியதால் மீண்டும் தாமோதரன் ஆனார். அது கண்ணனது உரிமைப் பெயராகிவிடுகிறது. இப்படி ரூடியாகவும் கௌணமாகவும் அமைந்த இறைவனது பெயர்களே இறைவனை நமக்கு உணர்த்திவிடுகின்றன. கருணையால் இறைவன் பேராயிரம் கொள்கிறார். வடிவாயிரம் கொள்கிறார்.

வியாஸர் — புராணங்களையும் இதிஹாஸங்களில் மஹாபாரதத்தையும் தொகுத்தளித்தவர் வியாஸர். ஒவ்வொரு மன்வந்தரத்திற்கும் 71 சதுர்யுகங்கள். (கிருதம், திரேதா, துவாபரம், கலி என்று நான்கு யுகங்கள்). ஒவ்வொரு சதுர்யுகத்திலும் துவாபர யுகமுடிவில் விஷ்ணுவின் அவதாரமாக வியாஸர் தோன்றுகிறார். ஸ்வாயம்புவர், ஸ்வாரோசிஷர், உத்தமர், தாமஸர், ரைவதர், சாக்ஷுஷர் என்ற ஆறு மனுக்களின் அந்தரங்கள் (ஆட்சிக்காலவரை) முடிந்து ஏழாவதான வைவஸ்வதமனுவின் அந்தரம் நடைபெற்றுவருவதில் தற்போது 27 சதுர்யுகங்கள் நடைபெற்று 28-வது சதுர்யுகத்தில் கலியுகம் நடைபெறுகிறது. விஷ்ணு புராணத்தில் (3.3.5-20) கூறியுள்ளபடி இதுவரை 28 வியாஸர்கள் விஷ்ணுவின் அவதாரங்களாக துவாபர யுகங்களின் முடிவில் தோன்றியுள்ளார்கள். அவர்கள் பின் வருமாறு—

ஸ்வயம்பூ, ப்ரஜாபதி, உசநா, ப்ருஹஸ்பதி, ஸவிதா, ம்ருத்யு, இந்திரர், வஸிஷ்டர், ஸாரஸ்வதர், திரிதாமா, திரிசிகர், பாரத்வாஜர், அந்தரிக்ஷர், வர்ணீ, த்ரையாருணர், தனஞ்ஜயர், ருதுஞ்ஜயர், ஜயர், பரத்வாஜர், கௌதமர், ஹரி (ஹர்யாத்மா), வாஜச்ரவர், ஸோமசுஷ்மாயணர் என்று திருணபிந்து, வால்மீகி என்ற ருக்ஷ-பார்க்கவர், சக்தி, பராசரர், ஜதூகர்ணர், கிருஷ்ணத்வைபாயனர்

இருபத்தி எட்டாவது வியாஸரே கிருஷ்ணர், துவைபாயனர் என்ற பெயருடன் பராசரருக்கு ஸத்யவதியிடம் தோன்றியவர். சதுர்யுகத்தின் தொடக்கத்தில் மனிதனுக்கு இருந்த தவ வலிவு, சக்தி, ஓதும் திறன், தாரணை இவை சிறிது சிறிதாகக் குறைந்து, துவாபர யுகத்தின் இறுதியில் வேதம் முழுவதும் ஓதும் சக்தி மிகக் குறைந்துவிட்டதை இறைவன் உணர்ந்தார். வேதத்தை நான்காக வகுத்து எளிதாக்கத் திருவுள்ளம் கொண்டார். அவர் ஒருவருக்கே வேதத்தை வகுக்கும் உரிமையும் திறனும் உண்டு. இதற்கென அவர் எடுத்த அவதாரம் வேத வியாஸர்.

வேதத்தை வகுத்துத் தந்தமையால் வேத வியாஸர். வேதத்தின் பொருளை விளக்கித் தருவது புராணம். அதனையும் பதினெட்டாக வகுத்துத் தந்தார். இப்படி அறிவு நூல்களை அதிகாரிகளுக்கேற்ப வகுத்துத் தந்தமையால் வியாஸர். இரு தீவுகளுக்கிடையே பிறந்து வளர்ந்தவரானதால் துவைபாயனர், நிறத்தால் கறுப்பானதால் கிருஷ்ணர்.

மஹாபாரதம்: வேதத்தில் கூறியுள்ளவற்றை எளிதில் அறியும்படி விளக்குவதற்கும், வேதம் ஓதி அதன் பொருளை நேரிடையாக உணர வாய்ப்பில்லாதவர்களும் வேதப்பொருளை உணர்வதற்கும், வியாஸர் புராண மாலையின் சூடாமணி போன்ற மஹா பாரதத்தை இயற்றினார். மஹா பாரதம் பரத வம்சத் தோன்றலான புண்யச்லோகர் என்ற தனிச் சிறப்பு பெற்ற தர்ம புத்திரரைக் கதாநாயகராகக்கொண்டு அவரது வம்ச சரித்திரமாக அமைந்தது. (இதிஹாஸம் என்பது இப்படி அல்லவா வாழ்ந்தார்! என்று விளக்குகிற ஒருவரது வாழ்க்கைச் சித்திரமாகும்.) இதனை ஐந்தாம் வேதம் என்பர். அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களை அறிவதற்கும் பெறுவதற்கும் உரிய உபாயங்களைப் பற்றி இதில் கூறியுள்ள அளவில் விளக்கம் தரும் வேறு நூல் கிடையாதென்பர்.

धर्मे चार्थे च कामे च मोक्षे च भरतर्षभ।
यदिहास्ति तदन्यत्र यन्नेहास्ति न तत् क्वचित्॥

(பாரதம், ஸ்வர்காரோஹண பர்வம் 5-44)

புராண இதிஹாஸங்களில் இறைவனது ஸ்தோத்திரங்கள். இறைவன் உலகுடன் அவ்வப்போது வெளிப்படையாகக்

கொள்ளும் தொடர்புகளைக் காட்டுவதன்மூலம் இறைவனது பெருமைகளைப் புராண இதிஹாஸங்களில் வியாஸர் விளக்குகிறார். இறைவன் ஏற்ற வெளிப்படையான உலகத் தொடர்புகளில் சிலவற்றை அவதாரங்கள் என்ற சிறப்பு நிகழ்ச்சிகளாகக் காட்டுகிறார். இறைவன் அவதரித்து நிகழ்த்துகிற தர்ம பரிபாலனம், துஷ்ட சிக்ஷணம் முதலிய பணிகளை உணர்ந்தவர்களும் அவற்றால் நன்மை பெற்றவர்களும் இறைவனை நன்றியுணர்ச்சியுடன் நினைந்து உருகிப் பாடிய பல பாடல்களை ஸ்தோத்திரங்களாக புராண இதிஹாஸங்களில் பல இடங்களில் காணலாம். அந்த ஸ்தோத்திரங்களின் சொற்களில் இறைவன் இன்றும் நிறைந்து நிற்கிறார். அதனால் அவற்றை அவை தோன்றிய காலத்தில் வாழ்ந்திராத நாமும் இன்று கூறும்போது அக்காலத்தில் அவர்கள் அனுபவித்த இறையனுபவத்தைப் பெறமுடிகிறது. அத்தகைய ஸ்தோத்திரங்களின் இடையே இடம் பெறுகின்ற இந்த விஷ்ணுஸஹஸ்ரநாமஸ்தோத்திரம் ஒரு தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

**விஷ்ணுஸஹஸ்ரநாமத்தின் தோற்றுவாய்.** ஸ்ரீமஹா பாரதத்தில் பாரதப் போரில் வெற்றி கண்ட தர்மபுத்திரர் முடிசூடி அரசாளத் தொடங்கியதும் பாரதப் போரில் தன் ஒருவனது நன்மைக்காக லக்ஷக்கணக்கானவர் மாண்டதற்குத் தன்னையே காரணமாக உணர்ந்து, இம்மாபெரும் பாபச் செயலுக்குத் தக்க கழுவாய்முறை தோன்றாமல் திகைத்து வருந்தினார். தர்மபுத்திரரின் குற்ற உணர்வைப் போக்கக் கண்ணனும் வியாஸரும் மற்றவரும் முயன்றும் முடியாததால் பீஷ்மரிடம் அழைத்துச்சென்றனர்.

தர்மபுத்திரர் முதலான கௌரவ பாண்டவர்களின் பாட்டனாரான பீஷ்மர் பாரதப்போரின் பத்தாவது நாளில் உடல் முழுவதும் சல்லடைக் கண்களாக அர்ஜுனனின் அம்புகள் தாக்கிப் பூமியில் விழுந்தார். வீரரான அவர் வீரருக்கேற்றவாறு அர்ஜுனன் அமைத்துத் தந்த அம்புப் படுக்கையில், தன் விருப்பப்படித் தன் இறுதியை அமைத்துக்கொள்கிற வர வலிமையால், தன் இறுதிக்காக உத்தராயணத்தை எதிர்நோக்கிக் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் படுத்திருந்தார். தர்மபுத்திரரின் மன அமைதிக்காக அப்போது பீஷ்மர் கூறிய உபதேசங்கள் மஹாபாரதத்தின் சாந்திபர்வம் அனுசாஸன பர்வம் என்ற இரண்டு பெரும்பர்வங்களாக அமைந்துள்ளன.

அறநெறியை விளக்கி அதன்படி வாழ்க்கை நடைமுறையை அமைத்துக்கொள்ளப் பெரியோர்கள் கூறும் அன்புக் கட்டளையை அனுசாஸனம் என்பர். இந்தக் கட்டளையில் அரசனது கட்டளையில் காண்கின்ற கடுமை இராது. இவற்றைப் பின்பற்ற வேண்டிய நிர்ப்பந்தமும் அன்பால் உணர்த்தப்பட்டிருக்கும். அதனால் தானே இசைந்து விரும்பிப் பின்பற்றுகிற வகையில் இந்த தர்ம அனுசாஸனம் அமைந்திருக்கும். பெரியோர்கள் வாழ்ந்த முறையை முன்னுதாரணமாக விளக்கி அறநெறிகளை பீஷ்மர் அனுசாஸனமாக விளக்குவதால் இது அனுசாஸன பர்வமாகிறது. இந்த அனுசாஸனங்களின் இடையே ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தின் அனுசாஸனமும் இடம்பெறுகின்றது.

**மூன்று ரத்தினங்கள்** - மஹாபாரதம் எனும் ஞானக்கடலில் ஆயிரக்கணக்கான ரத்தினங்கள் உண்டு. அவற்றுள் மிகச்சிறந்த விலையில்லா மாணிக்கங்களாக விளங்குபவை மூன்று - **ஸநத்ஸுஜாதீயம். பகவத்கீதை, விஷ்ணு ஸஹஸ்ரநாமம்** என. புராண பிரஸ்தானத்தில் இம் மூன்றிற்குமே ஸ்ரீ சங்கர பகவத்பாதர் பாஷ்யம் இயற்றியுள்ளார்.

புத்திரனிடத்திலும் ராஜ்யத்திலும் வைத்த துரபிமானத்தால் மதியிழந்து திகைத்துச் செய்வதறியாமல் தூக்கமின்றி ஆவரண சக்திமிக்க தமோகுணம் நிறைந்த நிலையில் திருதராஷ்டிரருக்கு விதுரர் தனது நீதிநல்லுரை(விதுரநீதி)களில் தெளிவு ஏற்படாததைக் கண்டு, தன் தவ வலிமையால் ஸ்ரீ ஸநத்ஸுஜாதரைத் திருதராஷ்டிரர் முன் தோன்றச் செய்து அவர்மூலம் ஞான உபதேசம் செய்வித்தார். அந்த உபதேச நூலே **ஸனத்ஸுஜாதீயம்** என்பது. அந்த உபதேசமும் திருதராஷ்டிரருக்குப் பலன் தரவில்லை. திருதராஷ்டிரர் என்ற கருவியைக் கொண்டு ஞானிகள் நல்லுபதேசம் பெற்றனர் எனலாம்.

பாரதப்போர் தொடங்குமுன் பந்துக்களின் நாசம் ஏற்படவிருப்பதைக் கண்டு தன் கடமை யாதெனத் தெரியாமல் கலங்கி விக்ஷேபசக்திமிக்க ரஜோகுணத்தால் தெளிவற்றிருந்த அர்ஜுனனுக்கு கண்ணன் அளித்த ஞானோபதேசம் யோகசாஸ்திரமான **பகவத்கீதை.** அதனால் அர்ஜுனன் தெளிவுபெற்றான். அதனாலும் பெரும் பயனடைந்தவர் ஞானிகளே.

*தர்ம ஸம்சயங்கள் மிகுந்திருந்த நிலையில் தர்மபுத்திரர்பீஷ்மரது தர்ம உபதேசங்களால் தெளிவு பெற்றுவிட்டார். தர்ம புத்திரருக்கு திருதராஷ்டிரர் போலவோ அர்ஜுனன் போலவோ துயரமோ கலக்கமோ அறியாமையோ, அப்போது பாதிக்கவில்லை. ஸத்வ குணம் மேலிட்டிருந்த நிலையில் கருணை பொங்கியது. உலகில் பிறந்த எவனும், பாமரனும் மூடனும் கூட, எளிதில் கடைத்தேறுவதற்கான வழியை அறிய ஆவல் எழுந்தது. தான் கடைத்தேறவேண்டும் என்ற சுயநல சிந்தனை அதில் இல்லை. மனிதன் கடைத்தேறப் பல மார்க்கங்கள் இருப்பினும் பீஷ்மர் எதனைச் சிறந்ததாகக் கருதுகிறார் என்று பாட்டனாரிடம் உள்ள சலுகையுடன் கேட்டுப் பெற்ற உபதேசம் விஷ்ணுஸஹஸ்ரநாமம். 'பக்தியால் இறைவனை அடையச் செய்கிற சிறந்த உபாயமாக இறைவனே தன் நாம வடிவில் கருணையுடன் உதவுகிறான்; அவற்றைக் கருணை உள்ளம் படைத்த ஹிதகாரிகளும் ஆப்தர்களுமான மஹரிஷிகள் கண்டு உலகம் உய்ய வெளிப்படுத்தினர்'' என்று பீஷ்மர் தந்த அனுசாஸனம் இது.*

பேராயிரமே அவனது ஸ்தோத்திரம். *பேராயிரம் கொண்டவர் இறைவன். அப்பெயர்களின் மூலம் அவர் லீலையால் தானே எடுத்துக்கொண்ட வடிவாயிரமும் நம் கண் முன் நிற்கின்றன. அவ்வடிவங்களின் மூலம் அவர் நிகழ்த்திய சிறந்த பணியாயிரங்களும் மனத்தில் பதிகின்றன. அவற்றின் நினைவில் ஊறிக் கசிந்த உள்ளத்தை ஆண்டவன் தன்னிடமாக ஆக்கிக்கொள்கிறான். நரை திரை மூப்பு பிறப்பு என்ற இயற்கைப் பிணிகள் மறைகின்றன. அந்தப் பேராயிரமே ஸ்தோத்திரமாகிறது.*

ஸ்தோத்திரம் - *குணச் சிறப்புள்ளவனின் குணங்களை உணர்ந்து மனம் மகிழ்ந்து அவற்றைப் பிறரறியக் கூறுவது துதி (ஸ்துதி-ஸ்தோத்திரம்)யாகும். இருப்பதைக் கூறுவதால், உணர்ந்ததைக் கூறுவதால், எளிதானது. இல்லாததைப் புதிதாகக் கற்பனை செய்து உண்டாக்கிச் சொல்ல வேண்டிய சிரமம் இல்லை. துதியால் துதிக்கப்படுபவர் மகிழ்கிறார். துதிப்பவருக்கும் துதிக்கப்படுபவருக்குமிடையே அன்பு மலர்ந்து பிணைப்பு ஏற்படுகிறது. இறைவனை நம்முடன் அன்பால் பிணைத்துக்கொள்ளப் பேராயிரம் கூறும் இந்த ஸ்தோத்திரம் உதவுகிறது.*

பேராயிரமே அவரது மந்திரம். *சிற்சில அக்ஷரங்களுக்கும் அவற்றால் அமைந்த சொற்களுக்கும் வாக்கியங்களுக்கும் தனித்த*

தெய்விக சக்தி உண்டு. அவற்றை ஒரு குறிப்பிட்ட முறையில் கூறும்போது அவற்றின் சக்தி பல மடங்கு பெருகுகின்றது. அவற்றை மந்திரங்கள் என்பர். மந்திராக்ஷரங்கள், அவற்றில் வெளிப்படுகின்ற தேவதா சக்தி, அந்த தேவதையின் ஸ்வரூபம் இவைகளை இணைத்து இடைவிடாமல் வேறு நோக்கில்லாமல் சிந்தனை செய்வது - சிந்தனையால் ஒன்றிப்போவது - மனனம். இதனுல் மனனம் செய்யப்பெறும் தேவதையின் பூர்ணஸ்வரூபமாகத் தான் ஆகிவிட்ட உணர்வு ஏற்படும். இந்த மனனம் நம்மை ஸம்ஸாரச் சுழல் ஈருன பல ஆபத்துக்களிலிருந்து பாதுகாக்கின்றது. அதனுல் மந்திரம் (மனனுத்-திராயதே) எனப்படுகிறது. (பூர்ண-அஹந்தா-அனுஸந்த்யாத்மா ஸ்பூர்ஜந் மநநதர்மத:. ஸம்ஸார க்ஷயக்ருத் த்ராணதர்மதோ மந்த்ர உச்யதே)

நாமஜபத்தின் பலன் — இறைவனின் பெயர்கள் மந்திர சக்தி மிக்கவை.

अंहः संहरदखिलं सकृदुदयादेव सकललोकस्य।
तरणिरिव तिमिरजलधिं जयति जगन्मङ्गलं हरेर्नाम॥

''இறைவனின் நாமம் உலகத்திற்கு மங்களமானது. அது வெளிப்படும்போதே நமது பாபங்கள் அனைத்தையும் போக்கிவிடுகிறது. கதிரவன் கடல் போன்ற இருட்டை உதித்தவுடன் போக்குவது போல்'' என்கிருர் பகவந்நாம கௌமுதியில் லக்ஷ்மீதரர்.

सदानन्दः श्रीमान्निरुपधिककारुण्यविवशः
जगत्क्षेमाय श्रीहरिगिरिशरूपं विधृतवान्।
अपर्याप्तं तद्रूपं जगदवन एतत्पुनरिति
प्रभुर्जागर्ति श्रीहरिगिरिशनामात्मकतया॥

''நித்தியமான ஆனந்தமுள்ளவரும், எப்போதும் செல்வ நிறைவுள்ளவருமான பகவான் எதனையும் மாற்றாக எதிர்பார்க்காத கருணைக்கு ஆட்பட்டார். உலகம் வாழ ஸ்ரீ ஹரியாகவும், சிவபெருமானுகவும் வடிவெடுத்துக்கொண்டார். அதுவும் உலகத்தைக் காப்பாற்றுவதற்குப் போதுமானதல்ல எனக் கருதினுர். ஸ்ரீ ஹரியின் நாமங்களாகவும், சிவபெருமானின் நாமங்களாகவுமாகி, அந்த பிரபு என்றும் விழிப்புடன் விளங்குகிருர்.''

यथाकथञ्चित् श्रितरक्षणाय सुदीक्षितं यज्जगदेकभर्तुः ।
नामामृतं मद्वदनारविन्दे सदा ममास्त्विष्टसमर्पणाय ॥

*''தன்னை அண்டியவர்களை எப்படியாவது காப்பாற்றுவதற்கெனக் கங்கணம் கட்டிக்கொண்டுள்ள உலகத்தின் ஏக நாயகனின் நாமம் எனும் அமுதம் எனது விருப்பம் நிறைவேறுவதற்காக என் வாயில் எப்போதும் துலங்கட்டும்''. என்கிறார் பகவந்நாம போதேந்திரர். அத்தகைய நாமங்களில் சில இறைவனின குணச் சிறப்பைக் கூறுபவை. சில அவரது அருட்செயல்களைக் குறிப்பிடுபவை. அவற்றைக் கீர்த்தனம் செய்வது இறைவனின் அருள் பெற மிகச் சிறந்த உபாயம், மிக எளியதும் கூட.*

*கலி யுகத்தில் நாம கீர்த்தனத்தாலேயே மேன்மை பெறலாம் என்பர்.* "த்யாயந் க்ருதே, யஜந் யஜ்ஞை: த்ரேதாயாம், த்வாபரே அர்ச்சயந். யதாப்நோதி ததாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம்" *''கிருத யுகத்தில் தைலதாரைபோல் தாரை துண்டிக்கப் பெறுமல் தொடர்ந்து ஒரு முனைப்புடன் மனம் ஈடுபட்ட தியானம் இறைவனின் தொடர்பை வலுப்படுத்தும். திரேதா யுகத்தில் வேள்விகளாலும் துவாபர யுகத்தில் பூஜை வழிபாட்டாலும் அதனைப் பெறலாம். கலியுகத்தில் நாம கீர்த்தனத்தால் அதனைப் பெறலாம்.'' தொடர்ந்து பக்தியுடன் செய்யப்பெறுகிற நாம கீர்த்தனமே தியானம், வேள்வி, வழிபாடு என்ற மூன்று சிறந்த உபாயங்களின் ஸாதனமாகவும் அவற்றின் மாற்றுபாயமாகவும் ஆகிறது. ஸஹஸ்ர நாம முன்னுரையாக அமைந்துள்ள* "ஜகத் ப்ரபும் தேவதேவம் அநந்தம் புருஷோத்தமம். ஸ்துவந் நாம ஸஹஸ்ரேண புருஷ: ஸததோத்தித: தமேவ சார்ச்சயந் நித்யம் பக்த்யா புருஷமவ்யயம். த்யாயந் ஸ்துவந் நமஸ்யம்ச்ச யஜமாநஸ் தமேவ ச... ஸர்வதுக்காதிகோ பவேத்" *என்ற சுலோகங்கள் இதனைக் குறிப்பிடுகின்றன. (சு.10-13)*

நாம ஸங்கீர்த்தனம் சிறந்த வேள்வி. *''யஜ்ஞாநாம்* ஜபயஜ்ஞோஸ்மி'' *என்று கீதையில் கண்ணன் இதன் சிறப்பைக் குறிப்பிடுகிறார். ஸ்ரீ சங்கர பகவத்பாதர் தனது ஸஹஸ்ரநாம பாஷ்ய முன்னுரையில். வேள்வி முதலியவற்றை விட நாம ஸங்கீர்த்தனம் எளிய சிறந்த உபாயம் என்பதை வற்புறுத்துகிறார்.*
"ஏஷ மே ஸர்வதர்மாணாம் தர்மோ அதிகதமோ மத:" *(சு. 14)!* இதுவே மற்ற அனைத்து வழிபாட்டு முறைகளை விடச் சிறந்தது, என்ற பீஷ்மரின் விடையாக அமைந்த சுலோகத்திற்கு உரை *எழுதுகையில் ஸ்ரீ சங்கர பகவத்பாதர் குறிப்பிடுகிறார்.*

'अस्य स्तुतिलक्षणस्य अर्चनस्य आधिक्ये किं कारणम्? उच्यते- हिंसादिपुरुषान्तरद्रव्यान्तरदेशकालादिनियमानपेक्षत्वं आधिक्ये कारणम्।

*வேள்வி முதலிய வழிபாட்டு முறைகளில் பிராணி ஹிம்ஸை அவசியமாகலாம். நாம ஜபத்தில் அது இல்லை. பிறர் காதுகளில் படுமாறு உரக்கச் சொல்வதை விட, பிறர் காதுகளில் படாதவாறு உதட்டளவில் ஒலி வெளியாகும்படி செய்யப்பெறும் உபாம்சு ஜபம் சிறந்தது. உதடுகள் கூட அசையாமல் மனத்தளவில் ஜபிப்பது சாலச் சிறந்தது. அதனால் பெயரளவில் கூட ஹிம்ஸைக்கு இடம் இல்லை.*

*வேள்வி முதலியவற்றில் இவனிவன் இவ்விவ்வாறு தகுதி பெற்ற பின்னரே செய்யலாம் எனத் தகுதி சோதனை உண்டு. இந்த இந்த பொருளைக்கொண்டுதான் இந்த இந்த வழிபாட்டைச் செய்யலாம் என்ற திரவிய நியமம் உண்டு. பொருளிலுள்ள குறையும் பொருளைச் சேகரிப்பதிலும் அர்ப்பணம் செய்வதிலும் உள்ள குறையும், அர்ப்பணம் செய்பவனின் குறையும் சூழ்நிலைக் குறையும் செய்த செயலின் பலனைக் குறைத்துவிடும். விபரீத பலன் தரக்கூடியதாகவும் ஆகலாம். இந்த இந்த இடத்தில் இந்த நேரத்தில் தான் செய்யலாம் என்ற விதி முறை உண்டு. இந்த நியமங்கள் எதையும் எதிர்பாராமல் செய்பவனின் தூய்மை — தூய்மையின்மை, சுற்றுப்புறத் தூய்மை — தூய்மையின்மை என்று எதையும் எதிர்பாராமல் நாம ஜபத்தைச் செய்ய முடியும்.*

தூய்மை தருகிற நாமம் - *மற்றும் ஒரு சிறப்பு — தூய்மையற்ற நிலைமையில் கூட நாம ஜபம் ஏற்படுத்துகிற இறைவனின் நினைவே அங்கு தூய்மையை ஏற்படுத்திவிடுகிறது. தகாத வேளையும், தக்க சிறந்த வேளையாகிறது. ஸாதனக் குறையுள்ள இடங்களில் நாம ஜபமே நிறைவைத் தருகிறது. நாம ஜபத்துடன் செய்யும் பணி குறைவற்றதாக — பூர்ணமாக ஆகிறது.* "அபவித்ர: பவித்ரோவா ஸர்வாவஸ்தாம் கதோபி வா. ய: ஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸபாஹ்யாப்யந்தர: சுசி:" *"தூய்மை யில்லாதவனும் தூய்மையுள்ளவனும் எந்நிலையில் இருப்பவனும் தாமரைக் கண்ணனை நினைத்தவுடன் உள்ளும் புறமும் தூய்மையுடையவன் ஆகிறான்."* "ததேவ லக்னம் ஸுதினம் ததேவ தாராபலம் சந்த்ரபலம் ததேவ. வித்யாபலம் தைவபலம் ததேவ லக்ஷ்மீபதேரங்க்ரியுகம் ஸ்மராமி" *"லக்ஷ்மீபதியின் திருவடிகளை நினைக்கிறேன். நினைக்கும் வேளையே நல்ல வேளை, நல்ல நாள்.*

நினைத்தவுடனே நக்ஷத்திர பலமும் நல்ல ராசிகளில் சந்திரன் ஸஞ்சரிக்கும் பலமும் செய்முறை அறிவுடன் செய்யும் பலமும் தெய்வ அருள் பலமும் எல்லாம் கூடுகின்றன''. ''மானஸம் ஸ்நானம் விஷ்ணுசிந்தனம்'' ''விஷ்ணுவின் நினைவே மனத்தால் செய்யப்பெறும் ஆத்ம சுத்தி தரும் ஸ்நானமாகும்.'' ''யஸ்ய ஸ்ம்ருத்யா ச நாமோக்த்யா தபோயாகக்ரியாதிஷு. ந்யூநம் ஸம்பூர்ணதாம் யாதி ஸத்யோ வந்தே தம் அச்யுதம்''. எவரது நினைவாலும் நாம கீர்த்தனத்தாலுமே பெரும் தவம் வேள்வி முதலியவற்றில் உள்ள குறைகள் அனைத்தும் அகன்று நிறைவு ஏற்படுமோ அந்த அச்யுதனை உடன் வணங்குகிறேன்.'' என்று பெரியோர்கள் தம் அனுபவத்தால் உணர்ந்த திருநாமப் பெருமைகளைக் கூறி நம்மை வழிப்படுத்தியுள்ளார்கள்.

வேள்வி முதலியவற்றில் வேறு பேச்சு செயல் எண்ணம் இவை குறுக்கிடாமல் தொடர்ந்து செயல்புரிய நேரும். ஆனால் மனித இயற்கையால் வேறு பேச்சும், வேறு செயலும், வேறு எண்ணமும் குறுக்கிடலாம். அந்தக் குறையை நீக்கும் ஒரே மருந்தாக — விஷ்ணு: (நா. 2, 258,657) திரிவிக்ரம: (நா 530) திரிபத: (நா. 534) என்ற இறைவனின் நாமங்களைக் கூறுவதும் அந்நாமங்களின் பொருளை உணர்வதும், அந்நாமங்கள் குறிப்படுகிற இறைவனின் அருட்செயல்களை நினைவிற்கொணர்வதும் உபாயமாகக் கையாளப்படுகின்றன. ''இதம் விஷ்ணுர் விசக்ரமே'' என்று தொடங்குகிற வேத மந்திரம் நாம மகிமையை உணர்த்தி இத்தகைய பாதுகாப்பு மந்திரமாகப் பயன்படுகின்றது.

பெயரும் பெயரின் உடையவனும் — ஒருவனது பெயரைக் கூறியவுடனேயே அப்பெயருடையவனின் நினைவு நமக்கு ஏற்படுகிறது. வடிவைவிடப் பெயருக்குத் தொடர்பு ஏற்படுத்துவதில் சக்தி அதிகம். திரும்பத் திரும்பப் பெயரைக் குறிப்பிடும்போது பெயருடையவனின் நினைவும் அலை அலையாகத் தொடரும். இப்படி அலை அலையாகத்தொடரும் நினைவில் கிருஷ்ணனைக் கொணர்வதற்கு (அனுஸ்மரணத்திற்கு) கிருஷ்ண என்ற அவரது பெயரைத் தொடர்ந்து கூறுவது (ஜபம்) உதவுகிறது. இந்த கிருஷ்ணானுஸ்மரணம் பிராயச்சித்தங்களுக்குள்ளே மிகச் சிறந்தது என்பர். ''ப்ராயச்சித்தாநி அசேஷாணி தப: கர்மாத்மகாநி வை. யாநி தேஷாம் அசேஷாணாம் க்ருஷ்ணானுஸ்மரணம் பரம்.'' *(விஷ்ணு புராணம் 2.6.39)*

பக்தி - பக்தியுடன் இறைவனின் நாமங்களைக் கூறுவது அவசியம். பக்தியில்லாமல் செய்யப்பெறுகிற நாமஜபம் பக்தியுடன் நாமஜபம் செய்கிற தகுதியைத் தரும். பக்தியுடன் செய்யப்பெறுகிற நாமஜபம் தியான யோகமும் யஜ்ஞமும் அர்ச்சனமுமாகும். அன்பால் நெகிழ்ந்த உள்ளமானது, தியானத்திற்குத் தான் ஏற்றுக்கொண்ட தேவதையின் வடிவ மாகவே மாறுவது பக்தியாகும். நெகிழ்ந்த உள்ளத்தில் இறைவனின் வடிவம் அப்படியே பதிந்து நிலைத்துவிடுகிறது.

கண்ணால் பார்க்கப் பெற்ற ஒரு பொருளில் மனம் லயிக்கும்போது மனத்தில் அந்தப் பொருளின் வடிவம் பதிந்துவிடுகிறது. அந்தப் பொருள் மனத்தைக் கட்டிவிடுவதால் அதனை விஷயம் (விஷிஞ்ஞோதி - பத்த்நாதி - நன்கு கட்டிவிடுகிறது) என்பர். அப்படி ஒவ்வொரு பொறியாலும் உணரப்பட்ட பொருள்கள் அனைத்தும் விஷயமாகி விஷயத் தொடர்பால் நெகிழ்ந்த உள்ளத்தினுள் பரவி நிறைந்து விஷய வாஸனையாக நிலைத்துவிடுகின்றன. விக்ரஹம் வார்ப்பதற்கான மூசை சூட்டுடனிருக்கும்போது சூட்டால் இளகிய உலோகத்தை அதனுள் வார்த்தால் அது மூசையின் வடிவைப் பெறுவது போல் மனம் இளகி உணரப்பெறுகிறபொருளின் வடிவை அடைகின்றது. பொறிகள்மூலம் உணரப்பெறுகிற விஷயங்கள் அனைத்தும் அநித்தியமே. அதனால் விஷயம் அழியும்போது மனம் தான் வெற்றிடமாகிவிட்டதால் வேறு விஷயத்தை நாடிச் செல்கிறது. இந்த விஷய நாட்டமே ஸம்ஸாரபந்தமாகிறது. ஆனால் இதே பொறிகள் இறைவனை விஷயமாக்கி ஏற்கும்போது இந்திரிய விஷயமாகிவிட்ட இறைவனின் நாமமும் குணச் சிறப்புகளும் வடிவமும் நித்தியமானதால் ஸாதகனின் மனத்தில் நிலைத்த நிறைவை ஏற்படுத்துகின்றன. வெற்றிட உணர்ச்சியின்மையால் வேறு பொருள் நாட்டமில்லை. அதனால் பகவானின் குணச் சிறப்புகளைக் கேட்டதாலும் சொன்னதாலும் நெகிழ்ந்த மனத்தில் இறைவனின் வடிவம் முதலியவை திடமாகப் பதிகின்றன. பகவான் அந்த மனத்தைத் தன் வசப்படுத்திக்கொள்கிறார், அவனைக் கரையேற்றிவிடுகிறார். ஸச்சிதானந்த வடிவம் படிந்த மனம் ஸச்சிதானந்த நிலை பெறுகிறது.

முக்கிய பக்தி - கௌண பக்தி. நம்மைச் சுகமாக இருக்கவிடாமல் அலைத்தழிக்கும் மனம் தன்னை இழந்து

இறைவனின் வடிவமாகவே ஆகி, அதில் நிலைத்து, ஆனந்தமாக இருப்பதே பக்தியாகும். இந்த நிலையை முக்கிய பக்தி என்பர். இந்த முக்கிய பக்தி நிலையைப் பெற உதவுகிற பயிற்சிகள் உண்டு. இவற்றை ஸாதன பக்தி, கௌண பக்தி என்பர். மனம் இதன்வகைகளில் ஒன்றையோ பலவற்றையோ கடைபிடித்து இறைவனிடம் தன்னை இழந்து நிற்கப் பழகுகிற முறையே இந்த ஸாதன பக்தி.

ஸாதன பக்தி - இது சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்ய்யம், ஆத்ம நிவேதனம் என ஒன்பது வகைப்படுவதாக பிரஹ்லாதர் கூறுகிறார். (பாகவதம் 7.5.23) பிரஹ்லாதருக்கு பக்தி மார்க்கத்தைக் கர்ப்ப தீக்ஷையாக உபதேசித்த குருவான நாரதர் தமது பக்தி ஸூத்ரத் தொகுப்பில் ஸாதன பக்தியை குண மாஹாத்ம்ய ஆஸக்தி, ரூப ஆஸக்தி, பூஜா ஆஸக்தி, ஸ்மரண ஆஸக்தி, தாஸ்ய ஆஸக்தி, ஸக்ய்ய ஆஸக்தி, வாத்ஸல்ய ஆஸக்தி, காந்த ஆஸக்தி, ஆத்ம நிவேதன ஆஸக்தி, தந்மயதா ஆஸக்தி, பரம விரஹ ஆஸக்தி எனப் பதினோரு வகைப்பட்டதாகக் குறிப்படுகிறார். இந்த ஸாதன பக்தி முறைகள் முக்ய பக்தி நிலை பெற அமைந்த படிகளாகும்.

பக்தியின் முதற்படியாக அமைந்தது சிரவணம். இது இறைவனின் குணச் சிறப்புகளையும் பெருமைகளையும் அருட்செயல்களையும் விளக்கவந்த நாமங்களைப் பிறர் கூறக் கேட்பதாகும். நாமே வாய்மட்டும் ஈடுபடும் நிலையில் கூறுவதைவிடப் பிறர் சொல்வதைக் கேட்பதில் சிறிது மன உன்னிப்பு அதிகமாக இருக்கும். சிரவணம் என்ற பிறர் கூறிக்கேட்கும் முறையில் மன உன்னிப்பை வளர்த்துப் பின்னர் கீர்த்தனம் என்ற தாமே நாமத்தைக் கூறுகின்ற முறையைக் கையாள்வதால் நாமகீர்த்தனத்தில் முன் பழக்கிக் கொண்ட உன்னிப்பு அதிகமாகி மனம் ஈடுபட்டுக் கசிந்து நெகிழ்ந்து இறைவடிவையும் பெருமையையும் உணர நாமகீர்த்தனம் உதவுவதால் இந்த இரண்டாம் படியான கீர்த்தனம் பக்தியை வலிவுடையதாக ஆக்குகிறது.

சிரவணம் கீர்த்தனம் என்ற இருமுறைகளில் அமைந்த நாமஜபமே குணமாஹாத்ம்யாஸக்தி என்று நாரதர் குறிப்பிடும் முதற்படி. இந்த சிரவணம் கீர்த்தனம் குணமாஹாத்ம்யாஸக்தி என்ற பக்திப்படியாகப் பெரியோர்கள் அனுபவத்தில் சிறந்த திருவருட்சாதனமாகக் கையாண்டு வரப்பெறுவது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரபாராயணமாகும்.

விஷ்ணுஸஹஸ்ர நாம பாராயண முறை - இதனைப் பக்தியுடன் பாராயணம் செய்யவேண்டும். பக்திவளர இறைவனின் பேராயிரம் கொண்ட விஷ்ணுஸஹஸ்ரநாமங்களின் சிரவணமும் கீர்த்தனமுமே உதவும். அவன் அருளால் அவன் தாள் வணங்கவேண்டும். அவன் தாள் வணங்கி அவன் அருள்பெற வேண்டும். இவற்றில் எது ஸாதனம், எது ஸாத்தியம் என்றே புரிந்துகொள்ள முடியாது. இறைவனை வணங்க அவர் யார்? எதற்கு எப்படி வணங்கவேண்டும்? என்ற அறிவு தேவை. இந்த அறிவை இறைவன் உணர்த்தித்தான் பெறமுடியும். அதனால் பக்தியால் விஷ்ணு ஸஹஸ்ர நாம ஜபஸித்தியா, விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தால் பக்திஸித்தியா என்று குழம்பிக்கொள்ளாமல், பெரியோர்கள் சென்ற வழி என்ற ஒரே விளக்கத்தை நம்பி முதலில் வெளிப்படையாக மனப்பதிவற்ற நிலையிலும் துதிக்க முற்பட்டதும், இவ்வினையே சிறிது சிறிதாக இறைவனின் அருளைக் கூட்டுவிக்கிறது. இந்த அருளால் பக்தி பெருகுகிறது. பக்தியுடன் நாமம் கூறும் வாய்ப்பும் கிட்டுகிறது. அதனால் ஸாத்தியத்தையே ஸாதனமாக்கிகொண்டு இறங்கி ஸாத்ய ஸித்தியைப் பெறுகிறோம். இது பக்தியின் விசித்திரமான சக்தியாகும். இந்த ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லும் தகுதியைப் பெறுவதற்கும் திரும்பத் திரும்ப ஸஹஸ்ரநாமத்தைச் சொல்வதே ஸாதனமாகிறது. இதுவே பெரியோர்கள் சென்ற வழி. இந்த ஸஹஸ்ரநாமத்தை மந்திரமாகக் குருமுகமாக உபதேசமாகப் பெறவேண்டுமென்று வேட்கை ஏற்படும்போது இறையருள் நல்ல குருவைக் கூட்டுவிக்கின்றது. முன் பிறவியில் செய்த நல்வினைப் பயனால் ஸத்குரு தானே வந்து ஆட்கொள்வதும் உண்டு.

நாமங்களில் சிறப்பு மிக்கவை. ஆயிரம் பெயர்களில் சிறந்தவை எவை என்றொரு கேள்வி எழும். எல்லாமே சிறந்தவை தான். எனினும் அதிகம் வழக்கிலுள்ள சிலவற்றை இதற்கு விடையாக்கலாம்.

ஸஹஸ்ரநாமம் முழுவதும் கூறுவதற்கு இயலாதவன் லகுவாக எதனைச் சொல்லிப் பயன் பெறலாம் என உலகின் அன்னையான பார்வதி, தந்தையான பரமசிவனிடம் கேட்டாள். அறிவாளிகள் ஏற்று அனுபவத்தில் கொணர்ந்து பலனடைந்த முறையாக இருக்கவேண்டும் என்றும் கேட்டாள். பரமேசுவரனின் விடை,

ஸ்ரீராம என்ற நாமம் ஸஹஸ்ரநாமத்திற்கு ஈடு என், (சுலோ, 165-166)

ஈடுபாடுள்ள பக்தர்களைக் காக்கவேண்டும் எனக் கண்ணனிடம் அர்ஜுனன் விண்ணப்பித்தான். ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் முழுவதையும் சொல்ல விருப்பமிருந்தும் இயலாத நிலையில் ஒரு சுலோகத்தைச் சொன்னால் போதுமென்று கண்ணன் விடையளித்தார். வியாஸர் வாஸுதேவன் என்ற நாமத்தை விளக்கி அந்த ஒரு நாமமுடையானை வணங்குகின்ற சுலோகம் அது. (சுலோ 162-164)

பேராயிரத்தில் விஷ்ணு: (நா. 2,258, 657), நாராயண: (நா.245), வாஸுதேவ: (நா. 332,695, 709), பகவான்: (நா,558) என்ற நான்கு பெயர்கள் மிக மிகப் பிரசித்தமானவை.

வேதத்தின் கர்ம காண்டப் பகுதியில் விஷ்ணு என்ற பெயரே அதிகம் வழக்கில் உள்ளது. அவரது சிறந்த செயலாக மூன்று அடிகளால் மூவுலகை அளந்து வியாபித்தது பல மந்திரங்களில் துதிக்கப்படுகிறது. விஷ்ணு என்ற சொல்லிற்கு, எப்போதும் எங்கும் நீக்கமற நிரம்பிய பரம்பொருள் என்ற பொருள் ஏற்றம் தருகிறது.

வேதாந்தமான உபநிஷத்துக்களில் நாராயண என்ற பெயர் அதிகம் காணப்படுகிறது. உலகனைத்திற்கும் தோற்றுவாயாக கடை இடமாக அடையவேண்டிய ஸ்தானமாக இந்தப் பெயர் இறைவனைச் சுட்டிக் காட்டுகிறது. இந்தப் பெயரைக் கொண்டமைந்த அஷ்டாக்ஷர மந்திரம் வைஷ்ணவ மந்திரங்களில் மிக முக்கியத்துவம் பெற்றுள்ளது. வேத மந்திரங்களை ஓதும்போது அறியாமையாலும், கவனக்குறைவாலும் எழுத்து மாறுபாடு, ஸ்வர மாறுபாடு முதலிய தோஷங்கள் ஏற்படக்கூடும். அதனால் கெடுதி வரும். இந்த தோஷம் விலக 'நாராயண' (நா.245) என்று கூறி முடிப்பது உண்டு. **"யதக்ஷர பரிப்ரஷ்டம் மாத்ராஹீனம் து யத் பவேத். தத்ஸர்வம் க்ஷம்யதாம் தேவ நாராயண நமோஸ்துதே."**

எதனையும் ஈசுவரார்ப்பணம் என்ற நினைவுடன் செய்வது வினைப்பயன் தொடர்பை அறுக்கும். இந்த நினைவை நிலைக்கச் செய்வது நாராயண எனும் நாமம். அதனால் எந்தப் பணியையும், **"காயேந வாசா மநஸேந்த்ரியைர்வா புத்த்யாத்மநா வா ப்ரக்ருதே:**

ஸ்வபாவாத். கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை நாராயணு ஸமர்ப்பயாமி'' என்று கூறி முடிப்பர்.

*ஆலய வழிபாட்டு முறை அமைத்துப் பக்திப் பெருக்கிறகு வழிகாட்டும் ஆகமங்கள்* வாஸுதேவர் *என்ற பெயரை அதிகம் பயன் படுத்துகின்றன. கீதையில் தன்னை வாஸுதேவன் எனும் பரம் பொருளாகக் கண்ணன் விளக்கிக் கொள்கிருர். வஸுதேவரின் பிள்ளை என்ற முறையில் அந்தப் பெயர் கண்ணனிடம் அழகாகப் பொருந்துகிறது. வாஸுதேவாக்யம் பரம் ப்ரம்ஹ என்று பாஷ்யம் எழுதும் ஸ்ரீ சங்கர பகவத்பாதர் குறிப்பிடுகிருர். இந்தப் பெயரமைந்த துவாதசாக்ஷர மந்திரம் புராணங்களிலும் ஆகமங்களிலும் அதிகச் சிறப்பு பெறுகின்றது. உலகனைத்திலும் தான் இருந்து உலகின் இருக்கைக்கு காரணமாகித் தன் சிறப்பைத் தானே வெளிப்படுத்திக் கொண்டு பரம் பொருள் லீலை புரிவதை இந்தப் பெயர் விளக்குகிறது.*

*தன்னையே வாஸுதேவன் நால்வராகக்கிக் கொண்டு உலகின் படைப்பு, காப்பு, ஒடுக்கம் என்ற பணிகளில் ஈடுபடும் போது வ்யூஹ நிலையில் அவர் ஏற்றுக கொண்டபெயர்கள், வாஸுதேவ: (நா. 332, 695) ஸங்கர்ஷண: (நா. 552) ப்ரத்யும்ந: (நா. 640) அநிருத்த: (நா. 185, 638) என்பவை. ஆகமத்தை ஒட்டி நடக்கிற ஆலய வழிபாட்டில் இந்த வ்யூஹ நிலைக்கும் பெயர்களுக்கும் அதிக இடம் உள்ளது. (நா. 138)*

இந்த வ்யூஹமே பன்னிரண்டாக விரிந்து கேசவ: *(நா. 23, 648)*, நாராயண: *(நா. 245)*, மாதவ: *(நா. 72, 167, 735)*, கோவிந்த: *(நா. 187)*, விஷ்ணு: *(2, 258, 657)*, மதுஸூதன: *(நா. 73)*, த்ரிவிக்ரம: *(நா. 530)*, வாமன: *(நா. 152)*, ஸ்ரீதர: *(நா. 610)*, ஹ்ருஷீகேச: *(நா. 47)*, பத்மநாப: *(நா. 48, 196, 348)*, தாமோதர: *(நா. 367)* என்ற பெயர்களுடன் விளங்குகிறது. மேலும் பன்னிரண்டு வ்யூஹ நிலைகள் உண்டு. ஸங்கர்ஷண: *(நா. 552)* வாஸுதேவ: *(நா. 332, 695, 749)* ப்ரத்யும்ந: *(நா. 640)* அநிருத்த: *(நா. 185, 638)* புருஷோத்தம: *(நா 24)* அதோக்ஷஜ: *(நா. 415)* நரஸிம்ஹ: *(நா. 12)* அச்யுத: *(நா 100, 318, 352)* ஜநார்தந: *(நா. 126)* உபேந்த்ர: *(நா. 151)* ஹரி: *(நா. 359, 650)* க்ருஷ்ண: *(நா 57, 550)* என.

பகவான் என்ற நாமத்தால் நாராயணனைத் தவிர வேறு சில தேவதைகளும் வஸிஷ்டர், ஸனத்குமாரர், வியாஸர் முதலிய மஹரிஷிகளும் குறிப்பிடப்பட்டிருந்தாலும், அப்பெயர் அதிக அளவில் நாராயணனிடம் பொருந்தியிருப்பதைப் புராணங்களில் காணலாம். பாகவதம், பாகவதர் என்ற சொற்கள் இந்தச் சொல்லுடன் நாராயணனின் தொடர்பை விளக்குகின்றன. உலகின் தோற்றம். காப்பு, ஒடுக்கம் என்ற மூன்று நிலைகளுக்கும் முக்கிய காரணம் என்ற பொருளில் பகவான் என்ற சொல் ஸ்ரீமன் நாராயணனுடன் பொருந்துகிறது. பகம் எனப்படும் ஜ்ஞானம் ஐச்வர்யம் சக்தி பலம் வீர்யம் தேஜஸ் என்ற ஆறு சிறப்புகள் கொண்டமையால் பகவான் என்ற பெயர் பொருளுள்ளதாகிறது. இந்த நான்கும் அதிகம் வழக்கிலுள்ள பெயர்கள்.

அறநெறிப் பாதுகாப்பிற்கும் துஷ்ட சிக்ஷணத்திற்கும் ஸாதுரக்ஷணத்திற்குமென லீலையாக அவர் எடுத்த அவதாரங்களைப் பல நாமங்கள் காட்டுகின்றன. ஸ்ருஷ்டித் தொடக்கத்தில் பிரும்மாவிற்குக் கேடு விளைவிக்க வந்த மது என்ற அஸுரனைக் கொன்ற மதுஸூதன: (நா.73) பூமியைத் தாங்கிய மஹாவராஹ: (நா. 538), கஜேந்திரனைக் காப்பாற்ற வந்த ஹரி: (நா. 650). அம்ருதம் கடைவதற்குத் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் உதவி, கூர்மர், தன்வந்தரி, மோஹினி முதலிய பல தோற்றங்களை எடுத்த அஜித: (நா. 549), பிரஹ்லாதனைத் காக்க வந்த நாரஸிம்ஹவபு: (நா. 21) பலியிடமிருந்து இந்திரனுக்குப் பதவியை யரசித்துத் தந்த வாமன: (நா. 152), உபேந்திர: (நா. 151), வாஸவானுஜ: (நா. 322), த்ரிவிக்ரம: (நா. 530), த்ரிபத: (நா. 534), ஞானாசாரியனாக வந்த கபில: (நா. 898), கபிலாசார்ய: (நா. 531), வைகுண்டத்தை ரமா தேவிக்காக அமைத்துத் தந்தவரும் சுப்ரர் — விகுண்ட்டா தம்பதிகளிடம் தோன்றியவருமான வைகுண்ட்ட: (நா. 405), பரசுராமராக கண்டபரசு: (நா. 568), ராமனாக ராம: (நா. 394) பலராமனாக ஹலாயுத: (நா. 562), கண்ணனாக க்ருஷ்ண: (நா. 57, 550), கேசிஹா (நா. 649) கதாக்ரஜ: (நா. 764) கோவிந்த: (நா. 187) சாணூராந்த்ர நிஷூதன: (நா. 825), தாமோதர: (நா. 367), தாசார்ஹ: (நா. 511), தேவகிநந்தன: (நா. 989), யதுச்ரேஷ்ட: (நா. 705), சௌரி: (நா. 340, 344), ஸாத்வதாம்பதி: (நா. 512), வியாஸராக

வ்யாஸ: (நா. 572), என்ற நாமங்கள் அவதாரங்களை விளக்குகின்றன.

அவர் ஆயுதம் தாங்கியுள்ள அழகை கதாதர: (நா. 997), சக்ரகதாதர: (நா. 546) சக்ரீ (நா. 908-995) நந்தகீ (நா. 994) ரதாங்கபாணி: (நா. 998) சார்ங்கதந்வா (நா. 996) என்ற நாமங்களும் வடிவழகை அரவிந்தாக்ஷ: (நா. 347) பத்மநாப: (நா. 196-346) புண்டரீகாக்ஷ: (நா. 111) ஸ்ரீவத்ஸவக்ஷா: (நா. 601) என்ற நாமங்களும், லக்ஷ்மீநாதனாக இருப்பதை மாதவ: (நா. 27, 167, 735) லக்ஷ்மீவான் (நா. 361) ஸ்ரீதர: (நா. 610) ஸ்ரீநிவாஸ: (நா. 183, 607) ஸ்ரீபதி: (நா. 603) என்ற நாமங்களும் குறிப்பிடுகின்றன. விஷ்ணுவிற்கே உரித்தானவைகளாகக் கௌணமான நாமங்கள் அதோக்ஷஜ: (நா. 415) கருடத்வஜ: (நா. 354) ஜநார்த்தன: (நா. 126) புருஷோத்தம: (நா. 24) முகுந்த: (நா. 515) மஹோததிசய: (நா. 519) ஹ்ருஷீகேச: (நா. 47) என்றவாறு.

பரம் பொருள் பிரும்மா விஷ்ணு சிவன் என்ற மூன்று வடிவங்களை ஏற்று முத்தொழில் புரிவதாகப் புராணங்கள் கூறும். "ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகரணீம் ப்ரும்ஹவிஷ்ணுசிவாத்மிகாம். ஸ ஸம்ஜ்ஞாம் யாதி பகவான் ஏக ஏவ ஜநார்த்தன: — (விஷ்ணு புராணம் 1-2-66) அப்படிப் பரம்பொருள் சிவவடிவை ஏற்ற பெருமையை ஈசாந: (நா. 64) ஈச்வர: (நா. 36-74) உக்ர: (நா. 421) கண்ட பரசு: (நா. 568) பரமேச்வர: (நா. 377) மஹாதேவ: (நா. 491) ருத்ர: (நா. 114) சம்பு: (நா. 38) சர்வ: (நா. 26) சிவ: (நா. 27,600) ஸ்த்தாணு: (நா. 28) என்ற பெயர்களும், சிவனுக்கும் விஷ்ணுவிற்கும் பொதுவான வ்ருஷாகபி: (நா. 101) சிபிவிஷ்ட: (நா. 273) என்ற பெயர்களும் பிரும்மாவின் வடிவை ஏற்ற பெருமையை அஜ: (நா. 95, 204, 521) ஆத்மயோநி: (நா. 985) தாதா (நா. 43, 951) பரமேஷ்ட்டீ (நா. 419) ப்ரும்ஹா (நா. 663) விதாதா (நா. 44-484) வேதா: (நா. 547) ப்ரஜாபதி: (நா. 69, 197) ஸ்வயம்ப்பூ: (நா. 37) என்ற பெயர்களும் குறிப்பிடுகின்றன.

பரம்பொருளின் நேரிடைத்தோற்றமாக "அஸௌ யஸ் தாம்ரோ அருண உத பப்ப்ரு: ஸுமங்கல:. உதைநம் கோபா அத்ருசன் அத்ருசன் உதஹார்ய:. உதைநம் விச்வா பூதானி ஸ த்ருஷ்டோ ம்ருடயாதி ந:" என்று ஸ்ரீருத்திரம் குறிப்பிட்டபடி

பாமரனும் அறியும் வண்ணம் கதிரவனுகத் தோன்றுவது பரம் பொருளே. "புநஶ்ச பத்மாத் உத்பந்நா ஆதித்யோ அபூத் யதா ஹரி:" ஸ்ரீஹரி ஆதித்யனுக ஸூர்யனுக அவதரித்தபோது லக்ஷ்மீ தாமரையில் தோன்றியவளாகப் பின் தொடர்ந்தாள்.'' (விஷ்ணு புராணம் 1-9-143) ''த்த்யேய: ஸதா ஸவித்ருமண்டலமத்த்யவர்தீ நாராயண:" அந்த ஸூர்யமண்டலத்தில் உறைபவன் நாராயணனே என்ற கருத்திற்கேற்ப அர்க: (நா. 795) ஆதித்ய: (நா. 39, 563) பானு: (நா. 284) ரவி: (881) ஸவிதா (நா. 884-969) ஸூர்ய: (நா. 883) என்ற நாமங்கள் ஸூர்யனைக் குறிப்பிடுபவை.

பரம் பொருள் ஏற்ற பல வடிவங்களைக் குறிப்பிடுவது போல் பரம் பொருளையே பெயரிட்டு விஷ்ணு ஸஹஸ்ரநாமம் அழைக்கின்றது. வேதாந்த நாமரத்ன ஸஹஸ்ரம் என்ற நூலை, ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடத்தில் 57-வது ஸ்ரீசங்கராசார்ய ஜகத்குருவாக வீற்றிருந்த ஸ்ரீ பரமசிவேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீசரணர்கள் 28 பிரஸித்தமான உபநிடதங்களிலிருந்து பரப்ருஹ்மத்தைக் குறிப்பிடுகிற தடஸ்த—ஸ்வரூப லக்ஷண பரமான ஆயிரம் நாமங்களைத் தொகுத்தளித்திருக்கிறார்கள். ஒவ்வொரு நாமத்தையும் உபனிடத உரையாசிரியர்கள் வேதாந்த நூலாசிரியர்கள் எழுதிய அறுபதுக்கும் மேற்பட்ட உரைகளை மேற்கோள் காட்டிப் பொருள் கூறி விளக்கியுள்ளார்கள். அத்தொகுப்பிலுள்ள உபநிடதங்கள் குறிப்பிட்டுள்ள நாமங்களில் 140 நாமங்கள் அப்படியே அதே சொல்லமைப்பில் (சப்தானுபூர்வீ) விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் இடம் பெறுகின்றன. (இவற்றைப் பற்றிய குறிப்புகள் அந்தந்த நாமப் பொருளுரையில் சேர்க்கப் பெறுகின்றன.)

இறைவன் தானே தன்னிடமிருந்து தன்னையே தன்னிடம் பலவாக ஆக்கியும் பிரித்தும் ஒவ்வொன்றினுள்ளும் நுழைந்து பரவியும் அவை அவற்றை அவையவையாகக் காட்சி தரும்படி செய்து ஆட்டுவித்து விளையாடச்செய்து அந்த விளையாட்டைச் சாட்சியாக நின்று கவனித்தும் பற்றற்று நிற்கிறார் என்ற இறையியலை விஷ்ணு ஸஹஸ்ரநாமம் பல கோணங்களில் விளக்கிக் காட்டுகின்ற அழகு இணையற்றது. பரம்பொருள், மாயை, பிரகிருதி, உலகம், ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், பிறப்பு, வாழ்வு என்ற பல புதிர்களையும் அழகாக விளக்கி இறையுணர்வை ஏற்படுத்துகிறது.

தினந்தோறும் நினைவிற்கொள்ளப் பெறும் நாமங்கள்: வேதம் முதலியவற்றை ஓதும்போது, ஹரி: ஓம் (நா. 409, 650, 957) என்று தொடங்குவதற்கு முன்னரும், முடிக்கும்போதும் கூறுவது சிஷ்டர்களின் ஸம்பிரதாயம். அவ்விதமே புண்ணிய நதி - தீர்த்தங்களில் ஹரி: (நா. 650) என்று கூறிக்கொண்டே ஸ்நானம் செய்வர்.

கலிஸந்தரண உபநிடதமானது ஹரி கிருஷ்ண ராம (நா. 650, 57, 394) என்ற மூன்று பெயர்களும் கலியில் பாபம் சேராதபடி பாதுகாக்கும் என்று விளக்கி **''ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே ஹரே. ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே''** என்று மந்திரஜபம் செய்ய உபதேசித்துள்ளது.

மனத்தாலும் சொல்லாலும் செயலாலும் சேமித்த பாபங்கள் அனைத்தும் ஸ்ரீ ராம (நா. 394) என்று கூறி அவரை நினைத்தால் விலகும் எனக் கூறிக்கொண்டு நற்பணிகள் செய்யுமுன் ஸ்ரீ ராம ராம ராம என்று கூறுவதும் ஸ்ரீ ராமனை நினைப்பதும் உண்டு. **''மானஸம் வாசிகம் வாபி கர்மணாஸமுபார்ஜிதம். ஸ்ரீராமஸ்மரணேனைவ வ்யபோஹதி ந ஸம்சய:! ஸ்ரீ ராம ராம ராம''.**

திதி வாரம் முதலியவை நற்பணியைத் தொடங்குவதற்கு ஏற்றவையாக அமையாதிருக்குமோ என்ற ஐயம் ஏற்படின் ஸ்ரீ கோவிந்த கோவிந்த கோவிந்த (187-539) என்ற ஸ்மரணத்துடன் விஷ்ணு திதியில் விஷ்ணு வாரத்தில் விஷ்ணு நக்ஷத்திரத்தில் விஷ்ணு யோகத்தில் விஷ்ணு கரணத்தில் இதனைச் செய்கிறேன் என்று கால அளவின் ஐந்து அங்கங்களையும் (பஞ்சாங்கம்) நினைத்து ஸங்கல்பம் செய்வதுண்டு. **''திதிர் விஷ்ணுஸ் ததா வார: நக்ஷத்ரம் விஷ்ணுரேவ ச. யோகச்ச கரணம் சைவ ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத். ஸ்ரீ கோவிந்த கோவிந்த கோவிந்த''.**

இறைவனது நினைவுடன் கோவிந்த கோவிந்த கோவிந்த என்று சொல்லிக்கொண்டே உணவேற்பது வழக்கம். இறைவனுக்கு அர்ப்பணமாகப் பலருக்கு உணவிடும்போதும், தான் உணவேற்கும் போதும் சொல்கிற சுலோகம். **ஏகோ விஷ்ணுர் மஹத் பூதம் ப்ருதக் பூதான்யநேகச: த்ரீந் லோகாந் வ்யாப்ய பூதாத்மா புங்க்தே விச்வபுக் அவ்யய:.** என்பது பெரும் பொருளாகி ஒன்றேயான விஷ்ணுவே பலவாறாகப் பிரிந்து எல்லாவற்றிலும் பரவி நின்று எல்லாவற்றையும் உண்டு எதிலிருந்தும் நீங்காதவராக ஆத்மாவாக விளங்குகிறார் எனப் பொருள். ஏக:

(நா-125), விஷ்ணு: (நா. 2-258) மஹத் பூதம்: (நா. 805), பூதாத்மா: (நா-8), விச்வபுக் (நா. 239), அவ்யய: (நா. 13) என்ற நாமத் தொகுப்பின் ஸ்மரணத்துடன் உணவு ஏற்கப்படுவதும் வழங்கப்பெறுவதும் நடைமுறையில் உள்ளது.

நோய்வாய்ப்பட்டவன் அச்யுத (நா. 100-318) அநந்த (நா. 659-886) கோவிந்த (நா. 187-539) என்று கூறி அதனை மருந்தாக பாவித்து வர நோய் நீங்கும் என்று த்ரிநாமஸ்மரணத்தை மந்திர சாஸ்திரம் விதிக்கிறது. இந்த திரிநாம மந்திரத்திற்கு காசியபர் அத்ரி பரத்வாஜர் என்ற மூவர் ருஷிகள், அனுஷ்டுப் சந்தஸ், ஸ்ரீமஹா விஷ்ணு தேவதை. "ஸமஸ்த துஸ்தர வ்யாதிஸங்க த்வம்ஸ படீயஸே. அச்யுதாநந்தகோவிந்த நாம்நே தாம்நே நமோ நம: என்று தியான சுலோகம். இந்த மூன்று நாமங்களை உச்சரித்து ஆசமனம் செய்வது உடல் மனம் இரண்டையும் சுத்தி செய்யும் என்று இதனை நற்பணியின் தொடக்கத்திலும் இறுதியிலும் தூய்மை கோரிச் செய்வர்.

ஓம் (நா. 409, 957), தத் (நா. 731), ஸத் (நா. 478), என்ற மூன்றும் பரம்பொருளின் வாசகம் என்பதால், (ஓம் தத்ஸதிதி நிர்தேச: ப்ரம்ஹணஸ் த்ரிவித: ஸ்ம்ருத:— பகவத்கீதை 17-23) இந்த மூன்றையும் கூறிப் பரம்பொருளிடம், செய்பவன் செயல் செய்கை என்ற மூன்றையும் அர்ப்பணம் செய்வதும் ஸம்பிர தாயமாகும்.

தனிச்சிறப்பும் சக்தியும் மிக்க சில நாமங்கள் - ஆயிரம் நாமங்களும் இறைவனிடம் பொருந்துகின்றன. ஒவ்வொரு நாமத்திற்கும் தனித்த சக்தி இயல்பாக அமைந்துள்ளது. விஷ்ணு தர்மோத்தரம் என்ற நூலில் இந்த நாமங்களின் தனித்த சக்திகள் குறிப்பிடப்பெறுகின்றன.

மனத்தூய்மை தந்து தர்ம வழியில் செல்லுமாறு மனத்தைப் பண்படுத்தக்கூடிய நாமங்கள் - தர்மகுப் (நா. 475) தர்மக்ருத் (476) தர்மீ (477) தர்ம: (403) தர்மவிதுத்தம: (404) சுசி: (155, 251) சுசிச்ரவா: (118) யஜ்ஞாங்க: (974) புஷ்கராக்ஷ: (40, 556) அதோக்ஷஜ: (415) சிபிவிஷ்ட: (273) யஜ்ஞபதி: (972) யஜ்ஞஸாதந: (930) முதலியவை.

செல்வம் தருபவை: ஸ்ரீத: (605) ஸ்ரீச: (606) ஸ்ரீநிவாஸ: (607) ஸ்ரீநிதி: (608) ஸ்ரீ விபாவந: (609) ஸ்ரீபதி: (603) ஸ்ரீமான் (178, 220,

*613) ஸ்ரீவத்ஸவக்ஷா: (601) நாரஸிம்ஹவபு: (21) துராதர்ஷ: (81) ஜய: (509) விஷ்ணு: (2, 258, 657) த்ரிவிக்ரம: (530).*

கோரியதைப்பெற–: *காம: (297) காமப்ரத: (298) காந்த: (296, 654) காமபால: (652) ஹரி: (650) ஆநந்த: (526) மாதவ: (72, 167, 735).*

வெற்றி பெற–: *ராம: (394) நாரஸிம்ஹவபு: (21) விஷ்ணு: (2, 258, 657) த்ரிவிக்ரம: (530).*

கல்வியில் தேர்ச்சி பெற–: புருஷோத்தம: (24)

சிறையிலிருந்து விடுபட–: *தாமோதர: (367)*

கண் தெளிவு பெற–: *கேசவ: (23, 648) புண்டரீகாக்ஷ: (111) புஷ்கராக்ஷ: (556)*

பயம் நீங்க–: *ஹ்ருஷீகேச: (47).*

நோய் நீங்க–: *அச்யுத: (100, 318) அம்ருத: (119)*

ஒளி பெற–: *ப்ராஜிஷ்ணு: (141) அநல: (295, 711) பாநு: (234).*

போர்முனையில்–: *அபராஜித: (716, 862).*

பூமிக்கடியில்–: *நாரஸிம்ஹவபு: (21).*

நீரின் நடுவே–: *மஹாவராஹ: (538).*

பிரயாணத்தில்–: *சங்க்கப்ருத் (993) சக்ரீ (908, 995) கதாதர: (997) சார்ங்கதந்வா (996) நந்தகீ (994).*

தீர்வு பெறாத வழக்குகளில்–: *அஜித: (549) அத்ருத: (842) ஸர்வ: (25) ஸர்வேச்வர: (96).*

ஆபத்துகளில்–: *நாராயண: (245) நாரஸிம்ஹவபு: (21).*

விஷத் தீண்டலில்–: *கருடத்வஜ: (354).*

ஸ்நாநம், தேவார்ச்சனை ஹோமம், நமஸ்காரம், வலம் வருதல் இவற்றில் *வாஸுதேவ: (332, 695, 709).*

செல்வம், தான்யம் முதலியவற்றைக் காப்பகத்தில் வைக்கும் போது *அச்யுத: (100, 318, 552) அநந்த: (659, 886) நாராயண: (245) சார்ங்கதந்வா (996) ஸ்ரீதர: (610) புருஷோத்தம: (24)*

கெட்ட கனவு ஏற்படின்–: வாமந: (152) நந்தகீ (994) விஷ்ணு: (2, 258, 657).

*இப்படிச் சில நாமங்களின் தனித்த சக்திகள் குறிப்பிடப் பட்டுள்ளன. இவை விஷ்ணு தர்மோத்தரத்திலுள்ளவை. (அ. 41) இந்நூலில் நாம விளக்கத்தின்போது சில நாமத் தொகுப்புகளின் விசேஷ சக்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவைகளையும் நினைவு கொள்ளலாம்.*

**நோய் நீங்க–:** *ஔஷதம் ஜகதஸ்ஸேது: நிர்வாணம் பேஷஜம் பிஷக்.*

**நல்லுதவி பெற–:** *அநுகூலச் சதாவர்த: பத்மீ பத்மநிபேக்ஷண:*

**சோகம் நீங்க–:** *அசோகஸ் தாரணஸ்தார: விசோகச் மோக நாசந:*

**கால் நடைகளைக்காபாற்ற–:** *கோஹிதோ கோபதிர் கோப்தா வ்ருஷபாக்ஷோ வ்ருஷப்ரிய:*

**ஆபத்திலிருந்து மீள–:** *த்ருடஸ் ஸங்கர்ஷணோ(அ)ச்யுத:*

**க்ஷேமம் பெற–:** *ஸம்க்ஷேப்தா க்ஷேமக்ருத் ஶிவ:*

**வாக்குவன்மைபெற:–** *அக்ஷோப்ய: ஸர்வாகீஶ்வரேஶ்வர:*

**மங்களம் பெற:–** *ஸ்வஸ்தித: ஸ்வஸ்திக்குத் ஸ்வஸ்தி.*

**பாபவினை தீர–:** *உத்தாரணோ துஷ்க்ருதிஹா புண்யோ துஸ்ஸ்வப்ந நாசந:*

**நினைத்தது நிறைவேற–:** *ஸித்தார்த்த: ஸித்தஸங்கல்ப: ஸித்தித: ஸித்தஸாதந:*

**நல்வழிப்படுத்த–:** *ராமோ விராமோ விரதோ மார்க்கோ நேயோ நயோ(அ)நய:*

*இந்தத் தோத்திரத்தின் பின்னுரையாக அமைந்துள்ள பலசுருதிப் பகுதியில் பீஷ்மர் இந்த நாமாவளி பாராயணத்தால்*

ஏற்படும் பலனை விரிவாகக் கூறியுள்ளார். ஆயுர்வேதத்தின் மூலஸம்ஹிதா நூல்களில் ஒன்றான சரக ஸம்ஹிதையில் ஜ்வர நோய் சிகித்ஸையில் மனித சக்திக்கு மீறிய காரணங்களால் தோன்றிய ஜ்வரங்களில் தைவவ்யபாச்ரய சிகித்ஸை (தைவத்தைத் துணையாக்கி செய்யப்படும் மருத்துவம்) செய்யப் பணிக்கும் போது விஷ்ணுவை ஸஹஸ்ரநாமத்தால் துதி செய்ய ஜ்வரம் நீங்கும் என்கிறார் சரக மஹரிஷி. அதன் உரையாசிரியர் ஸஹஸ்ரநாமம் என்பது மஹா பாரதத்தில் உள்ளது என விளக்குகிறார். ''சிவபெருமானைப் பரிவாரங்களுடன் பூஜை செய்வதும் ஸ்ரீமன் நாராயணனை ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தால் துதிப்பதும் ஜ்வரத்தைப் போக்க வல்லது'' என்கிறார்.

सोमं सानुचरं देवं समातृगणमीश्वरम्।
पूजयन् प्रयतः शीघ्रं मुच्यते विषमज्वरात्॥

विष्णुं सहस्रमूर्धानं चराचरपतिं विभुम्।
स्तुवन् नामसहस्रेण ज्वरान् सर्वानपोहति॥

சரக ஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானம் அத். 3, 311-312

இதன் உரையாசிரியர் சக்ரபாணி கூறுவது:—

सहस्रमूर्धानं — सहस्रशीर्षेत्यादिवेदप्रतिपादितं, नामसहस्रेणेत्यादि महाभारतोक्तनामसहस्रेण।

இவ்விதமே சோதிட கர்மவிபாக நூல்களில் பலதுர் தசைகளில் நேர்கிற சிரமங்கள் விலக விஷ்ணுஸஹஸ்ரநாம பாராயணம் செய்ய விதித்துள்ளது. துச்சகுனம், துஸ்ஸ்வப்னம், மனக்குழப்பம், மன நோய், உடல் நோய், விஷத்தீண்டல், பிசாசபாதை முதலியவை நீங்குவதற்கும், பாபங்களைப் போக்கிக் கொள்ளுவதற்கும், தனம் தான்யம் புகழ் வெற்றி முதலிய இம்மை நன்மைகளைப் பெறவும் பக்தி வளரவும் திருவருள் பெறவும் வீடு பெறவும் ஸாதனமாக விஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் செய்வர். பொதுவாக கிருஹ ரக்ஷையாகவும் குடும்ப ரக்ஷையாகவும் தனி மனிதனது ரக்ஷையாகவும் விபூதியில் பகவானைத் தியானம் செய்து தனி ஒருவராகவும் பலரும் சேர்ந்து ஸஹஸ்ர நாம பாராயணம் செய்து அந்த விபூதியைத் தரிப்பது இன்றும் நடைமுறையில் உள்ளது. ஆத்ம சக்தி வளரவும் தெய்விகச் சூழ்நிலை பரவவும் மிகச் சிறந்த உபாயம் இது.

நாமமே பகவானின் வடிவம். இந்த ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம் பகவானின் பெயர்ப் பட்டியலாக அமைந்ததல்ல. அவர் வடிவற்றவர். அவரை உணர்வதற்கு ஸாதகன் ஒரு உருவகத்தை எதிர்பார்க்கிருன். ஸாதகனுக்கு உதவும் பொருட்டே அவர் பல வடிவங்களில் தன்னைக் காட்டிகொள்கிருர். அவைகளைப் பிரதீகம் என்பர்.

கண்டகி நதியில் கிடைக்கின்ற ஸாலக்ராம சிலைகளில் நாராயணனும் நர்மதையில் கிடைக்கின்ற பாண சிலைகளில் சிவபெருமானும் எப்போதும் குடிகொண்டுள்ளார்கள். அவைகளின் மூலம் வழிபடும்போது பகவானுக்கு ஆவாஹனமோ விஸர்ஜனமோ கிடையாது. அங்கு இல்லாத வருக்கல்லவா ஆவாஹனம் (வரவேற்பது) தேவை? அங்கிருந்து அகன்று செல்பவருக்கல்லவா விஸர்ஜனம் (வழியனுப்புதல்) தேவை? நித்தியமாய் அங்கு நிலைத்தவருக்கு இரண்டும் இல்லை. ஆனால்ஸாலக்ராம பாண சிலைகளில் பகவானை எளிதில் பாமரன் உருவகப்படுத்த முடியாது. சிரத்தையால் அங்கே இருப்பதாகப் பாவனை செய்வதொன்றே வழி. அந்த ஸாலக்ராம சிலை பகவானின் அவ்யாக்ருத (உருவமைப்பு பெருத) சரீரம்.

மனிதனைப்போல் கைகள், கால்கள், முகம் முதலிய வடிவமைப்பு இருந்தால் ஒருவாறு காணமுடியும். அதற்கெனவே இறைவன் கொள்கின்ற கோலம் நான்கு கைகள், ஆயுதங்கள், தாமரை போன்ற கண், நாபி, பாதம் முதலிய வடிவமைப்பு. அந்த திவ்ய வடிவையும் நாம் காண முடியாதென உலோகம், சிலை முதலியவைகளில் நாம் வடிவமைத்துத் தந்தால் அதில் அவர் அவ்விதமாகவே குடியிருப்பார். இந்த வடிவை நாம் மனத்தால் உருவகப்படுத்திக்கொள்ள முடியும். இதுதான் இறைவனின் வடிவு என்று அறுதியிட்டுக் கூற இயலாவிடினும் இதிலும் அவர் இருக்கிருர். இவையே ஆலயங்களிலும் வீட்டிலும் நாம் வழிபடும் விக்கிரஹங்கள். (விசேஷேண க்ருஹ்யதே - சிறப்பாக மனத்திற்கொள்ளத்தக்கது). இதுவும் இறைவனது ஸ்தூல வடிவம்தான்.

இந்த இறைவடிவத்தில பாவனு பலத்தால் பக்தியால் கசிந்த உள்ளம், உயிரூட்டி அதை அவனே இவனே வா வா எனக் கூப்பிடுமளவில் நெகிழ்ந்து சேதனனுக, நண்பனுக, நாதனுக, அம்மையப்பனுக எல்லாமாக உணர்ந்து அனுபவிக்கப் பெறுகிறதே அதுதான் பரவடிவம்.

ஸாலக்ராம சிலைபோல், பாண சிலைபோல், விக்ரஹங்கள் போல் இறைவனின் திருநாமமும் ஒரு பிரதீகமே. அந்த நாமத்தை வாயாரச் சொல்வதே இறை வழிபாடு. அதனைக் கேட்பதே பூஜை. நாமத்தின் ஒவ்வொரு அக்ஷரத்திலும் அக்ஷரத்தின் அணுவிலும் இறைவன் நிரம்பியுள்ளார். அந்த நாமத்தைச் சரியாகக் கூறினாலும் உளறினாலும் தன்னைக் கூறியதாக இறைவன் ஏற்றுக்கொள்கிறார். அது அவரது நாமமாதலால் அவருக்கு அது புரியும். கருணை வடிவானவர் அதைத் தன்னைக் கூறியதாகவே ஏற்றுக்கொள்கிறார்.

''ஸர்வேஷாமபி அகவதாம் இதமேவ ஸுநிஷ்கிருதம்
நாமவ்யாஹரணம், விஷ்ணோ: யத: தத்விஷயா மதி:''

''ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேலனமேவ வா
வைகுண்ட நாமக்ர ஹணம் அசேஷாகஹரம் விது:''

''யதா அகதம் வீர்யதமம் உபயுக்தம் யத்ருச்சயா
அஜாநதா அபி ஆத்மகுணம் குர்யாத் மந்த்ரோபி உதாஹ்ருத:''

*(ஸ்ரீமத் பாகவதம், அஜாமிளோ பாக்க்யானம்.)*

'கெட்ட வினைப் பயனாகத் துன்புறுபவர் அனைவருக்கும் இறைவனின் பெயரைக் கூறுவதொன்றே கழுவாய். ஏனெனில் விஷ்ணுவிற்கு அப்பெயர்கள் விஷயத்தில் தனதென்ற அபிமானம் உள்ளது.'' ''இடுபெயர்ச் சொல்லாகவோ பரிஹாஸச் சொல்லாகவோ நீட்டிமுழக்கிக்கொண்டோ கிண்டலாகவோ கூட வைகுண்டனின் பெயர் கூறுவது அனைத்து வினைப் பயன்களையும் அகற்றும்''. இன்னதென அறியாமலோ மருந்தின் குணமறியாமலோ தற்செயலாகவோ ஒரு வீர்யமுள்ள மருந்தை உபயோகிக்கும்போது. எப்படி அது தன் குணத்தைக் காட்டத் தவறுதோ அப்படித்தான் இறைவனின் பெயரும்''.

இறைவனது பெயரென்று அறியாமல், அல்லது இறைவனது பெயரென்றறிந்தும் அதன் பொருளும் சிறப்புமறியாமல், சொல்லவேண்டுமென்ற ஸங்கல்பமின்றித் தற்செயலாக இறைவனின் பெயரைக் கூறினாலும் அதற்கும் பலன் உண்டு. ஏனெனில் இறைவனின் பெயர் அதிக வீர்யம் உள்ளது. சொல்பவனது திறமையையோ அறிவையோ நேரத்தையோ இடத்தையோ பொறுத்து அது செயலாற்றுவதில்லை. அது அவரிச்சையால் செயலாற்றுகிறது.

இறைவனுக்குத் தன் பெயரில் அத்தனை அபிமானம். (விஷ்ணோர் யதஸ் தத்விஷயா மதி:) தன் பெயரில் அபிமானம் ஏற்படுவது இயற்கை. அப்பெயரைக் கேலியாகக் கூப்பிட்டாலோ சிதைத்துக் கூப்பிட்டாலோ மனிதன் வேதனைப்படுவான். நிந்தனைக்கும் துதிக்கும் அப்பாற்பட்ட இறைவன் அதனால் பாதிக்கப்படுவதில்லை. அவரது கருணை உள்ளம் இந்தப் பாகுபாடுகளை உணர்வதில்லை.

இறைவனது வடிவம் எப்படி இறைவனுடன் தொடர்பை ஏற்படுத்தித் தருகிறதோ அப்படி இறைவனது பெயரும் தொடர்பை ஏற்படுத்தித் தருகிறது. இறைவன் அப்பெயர்களை நமக்காக ஏற்படுத்திக்கொண்டார். தம்மிடம் அவை பொருந்தப் பல லீலைகளைப் புரிந்தார். இந்த நாமங்களைப் பொருளறியாது கூறும்போதும் அவை இறைவனேயானதால் காக்கின்றன. இந்த நாமங்கள் அந்நிலையில இறைவனின் அவ்யாகிருதமான - உருவமைப்பு பெறாத வடிவமாகின்றன.

இந்த நாமங்களையே வியாஸரும் சங்கரரும் பட்டரும் ஏனையோரும் விளக்கியபடி பொருள் உணர்ந்து அப்பெயர் ஏற்பட்ட காரணத்தையும் நிலையையும் உணர்ந்து பின் இறைவனது பெருமை உணரும்போது அந்த நாமங்களே இறைவனது திவ்ய விக்ரஹங்களாகின்றன. விக்கிரஹத்தைப் பார்த்தவுடன் இறைவனது லீலா வடிவம் மனத்தில் புலப்படுவதுபோல் இந்த நாமத்தைக் கேட்டதுமே இறைவனின் திவ்ய மங்கள விக்ரஹம் மனத்தில் காட்சி தருகிறது. கண்ணால் பார்ப்பது ரூபம் எனும் வடிவில்: காதால் கேட்பது சப்தம் எனும் வடிவில்; இரண்டுமே பிரதீகம்தான். அப்போது அதே நாமங்கள் இறைவனது ஸ்தூல வடிவமாகின்றன.

நாமத்தைக் கேட்டவுடன் அல்லது சொன்னவுடன் நாமப் பிரதீகம் மறைந்து உள்ளத்தினுள்ளே, உடலின் ஒவ்வொரு அணுவிலும், அவரை உணர்ந்து புல்லரித்துக் கண்ணீர் கசிந்து நாத்தழுதழுக்கப் பூரித்து நிற்கும் நிலை ஏற்படுமாயின் அப்போது அந்த நாமமே இறைவனின் ஸூக்ஷ்ம வடிவமாகின்றது. இறைவனின் அடியார்களிடம் பரபக்தி வடிவமாக பரஞான வடிவமாக இந்த நாமமே வடிவெடுத்துப் பரனுடன் இரண்டறச் சேர்ந்து வேறொன்றுமறியாத பர நிலையைத் தருவதைக் காணலாம்.

இறைவனது ரூபத்தைவிட இறைவனது நாமம் அதிக வேகம் உள்ளது. பௌதிக சக்திகளில் சப்தத்திற்கு சக்தி அதிகம். துரௌபதியைக் காக்கவும் அடியார்களைக் காக்கவும் கூப்பிட்டவுடன் கூப்பிடு தூரத்தில் உள்ளவராகத் தோன்றி உதவிய கண்ணனை அருகில் கொணர்ந்தது அவரது நாமமே. இதனை ஓரளவு தர்ம புத்திரர் அனுபவத்தால் உணர்ந்திருந்தாலும் குரு முகமாக அதனை அறியும் பேரார்வத்துடன் பீஷ்மரைக் கேட்டார். ஆனால் நாமப் பெருமைகளை விளக்குவீர் என்று நேரிடையாகக் கேட்காமல் நாமப்பெருமை மட்டுமே விடையாக வருவதாக உள்ள கேள்வி கேட்கிறார். (வால்மீகி ராமனது பெருமை கேட்க விரும்பி ராமனைச் சுட்டிக் கேட்காமல் ஆனால் ராமனே விடையாக வரும்படி நாரதரிடம் கேட்டதை இத்துடன் பொருத்திப் பார்க்கலாம்.) பீஷ்மர் அதற்குத் தந்தவிடை விஷ்ணுஸஹஸ்ர நாமம் — பெருமானின் பேராயிரம். ஸ்ரீ சங்கரர் முதலிய ஞானிகள் காட்டிய வழியில் அதை மனனம் செய்யும்போது அது வேதாந்த பிரஸ்தானத்தின் சிறந்த ப்ரகரணக்கிரந்தமாக அமைந்துள்ளதை உணரமுடியும்.

**பக்தியின் மற்றபடிகளுக்கு உதவும் நாம கீர்த்தனமும் நாம சிரவணமும்:** சிரவணம் கீர்த்தனம் என்ற பக்தியின் இரு படிகளில் மனம் பதியப் பெற்றவனுக்கு பாவனுபலத்தால் இறைவனை உருவகப்படுத்தி நீண்டநேரம் நினைவில் கொள்ளுதலாகிய ஸ்மரணம் என்ற மூன்றாவதுபடி அமைந்துவிடுகிறது. மனம் முழுவதையும் இறைவன் தம் வசமாக்கி நிரப்பிவிடுகிறார். அப்படி நினைவில் வடிவமமைந்து நிற்பவரைப் பாவனையால் அமைத்துக்கொண்ட பூஜைப் பொருள்களால் மானசிகமாகவும், தியானத்தில் அமைந்தவரை வெளியில் விக்ரஹம் படம் முதலிய பிரதீகங்களில் தோன்றுமாறு செய்து உயர்ந்த புஷ்பங்கள், அணிகள், உணவுகள் முதலியவற்றைச் சமர்ப்பித்து வெளிப்படையாகவும் (பாஹ்யமாகவும்) உபசரிக்கிறான். உள்ளமடங்க உடலடங்க வணங்கி எழுந்து உபசரிக்கிறான். அவருக்குப் பணிவிடை, அவரைச் சார்ந்தவர்களுக்கு பணிவிடை, அவராகத் தோன்றும் பொருள் அவராகத் தோன்றுபவர்கள் அனைத்திற்கும் பணிவிடை என்று அவருக்கே அடிமையாகித் தன் வாழ்வை நிறைவுறச் செய்கிறான். **பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம்** என்ற நான்கு படிகளும் எளிதில் அவனை இறைவனுக்கு அருகில் கொண்டு செல்கின்றன. பகவான் இவனைத் தன்னைச் சார்ந்தவன் எனக் கண்டு கொள்வதாக

உணரும்போது பாகவதன் (பகவத: அயம்) ஆகிறான். பகவானைத்தவிர மற்றொன்றில் தான் ஈடுபடாதிருப்பதை உணரும்போது பக்தனாக ஆனதை உணர்கிறான்.

அவரது நினைவையே தன் நினைவாக்கி, அவரது சுகதுக்கங்களைத் தன் சுக துக்கங்களாக்கி, அவர் அறியாதபடி செய்வதற்கு ஒன்றுமில்லை என்ற எண்ண வலிவுடன் தன் வாழ்க்கை முழுவதையும் பகவானுக்கு அறிமுகப்படுத்திக்கொள்ளும்போது அவர் தன்னை நண்பனாக ஏற்றுக்கொள்ளும் வகையில் தான் நடந்துகொள்கிறான். ஸக்ய்யம் என்ற படி இதனால் வசமாகிறது. (ஸமாநா க்யாதி: ஸுகதுக்கயோ: யயோ:- தயோ: பாவ: — ஸமாந: க்யாயதே, தஸ்ய பாவ:)

பகவானை விட்டுப் பிரிந்து கணமும் வாழமுடியாத அளவில் அன்பால் நெருக்கம் ஏற்பட்டதும், தான் தனது என்ற எண்ணங்கள் போக்கிடமின்றி மறைகின்றன. உடலும் உள்ளமும் உணர்வும் அவருடையதேயாகிவிடுகின்றன. ஆத்ம நிவேதனம் என்ற கடைப்படி இது.

இவை மட்டுமே இதே வரிசையில்தான் பக்திக்குப்படிகள் என்றில்லை. ஏறுபவனுக்காகவே படிகளின் அமைப்பு. ஒரே எட்டில் அனுமார் போன்று எட்டுபடிகளைத் தாண்டியவரும் உண்டு. ஒவ்வொரு படியைத் தாண்டவும் பல பிறவிகளை எடுப்போரும் உண்டு. ஸாதகனின் தகுதிக்கேற்றவாறும் ஸாதனை புரியும் கணத்தில் உள்ள நிலைகளுக்கேற்றவாறும் ஏதேனும் ஒருபடியோ சில படிகளோ எல்லாமோ துணையாகி நின்றும், படிகளே இல்லாதிருந்தும் அவரை அடைவதுண்டு.

பக்தி அமைவதற்காகப் பெரியோர்கள் கையாண்ட முறைகளில் எளிதானவை இறைவனது நாமஜபமும் நாமபாராயணமும். அவரது திருநாமங்களில் ஏதேனும் ஒன்றை மட்டுமே தொடர்ந்து கோடிக்கணக்கில் ஜபிப்பது நாமஜபமாகும். திருவையாற்றில் வாழ்ந்த ஸ்ரீ தியாகையர் போன்றோர் இந்த வழியில் இறைவனை அடைந்தார்கள். விஷ்ணுஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம் முதலிய திவ்ய நாமத் தொகுப்பைத் திரும்பத் திரும்பப் படிப்பது நாமபாராயணமாகும். அத்தகைய நாமத் தொகுப்புகளில் ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம், எளிதானது, அழகானது, சொல்லச் சொல்லத் தெவிட்டாமல் மனம் தானே லயிக்கும்படி சொல்லமைப்புகள் கொண்டது.

நாமபாராயணத்தில் ஈடுபட்டவர்களுக்கு இது ஓர் அரிய அருட்பிரஸாதம்.

**நாமாவளியும் அர்ச்சனை முறையும்** - நாமாவளி - நாமத் தொகுப்பு. விச்வம் விஷ்ணு: என்று தொடங்குகின்ற இந்த ஸ்தோத்திரம் நாம பாராயணத்திற்கு ஏற்பட்டது.ஆங்காங்கு இல்லங்களிலும் மடங்கள் போன்ற பொதுவிடங்களிலும் மாலைக்கடன்களாக ஸந்தியாவந்தனம் முதலியவை முடிந்ததும் தெய்வ ஸந்நிதியில் உட்கார்ந்து பக்தியுடன் இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்வர். இந்த நாமாவளி பெரும்பாலும் ஆண்பாலில் ஒருமையைக் குறிப்பதாக இருக்கும். மிகச் சில பெண்பாலிலும் அஃறிணையிலும் அமைந்திருக்கும். ஒரே சொல் (ஸந்த:) பன்மையைக் குறிப்பது. ஸ்ரீமன் நாராயணன் ஆணோ பெண்ணோ அலியோ அல்ல, எந்தப்பாகுபாடுமற்றவர் என்றாலும், புருஷோத்தமன் பரம புருஷன் முதலிய இடங்களில் வரும் புருஷ என்ற சொல் ஆணைக் குறிப்பிடுவதில்லை. எனினும், ஸகுண வடிவில் ஆணாகவே, லக்ஷ்மியின் கணவனாகவே வழிபடப்பெறுகிறார். ஆதலால் ஆண்பாலில் அவரைக் குறிப்பிடலாம். பரம்பொருள் பால்பிரிவினைக் குட்படாதாகையால் அஃறிணையாகவே குறிப்பிடப்பெறும். முதல் நாமமே விச்வம் என்ற அஃறிணைச்சொல்தான். பெண்பால் சொற்கள் சில உண்டு. அவை விஷ்ணு என்ற தேவதையைக் குறிப்பதாகக்கொள்ளப்படும்.

இந்த நாமங்களை நாலாம் வேற்றுமையிலுள்ளதாக மாற்றி 'நம:' சேர்த்து 'விச்வஸ்மை நம: 'விசுவத்திற்கு நமஸ்காரம், 'விஷ்ணவே நம:' 'விஷ்ணுவிற்கு நமஸ்காரம்' என்று பொருள் படும்படி கூறுவது அர்ச்சனை முறையாகும். 'நம:' என்று சொல்லும் போது மானசிகமாகவோ காயிகமாகவோ வாசிகமாகவோ வணங்குகிறோம் என்று கொள்ளத்தகும், ஆனால் நம: எனச்சொல்லி அக்ஷதத்தையோ குங்குமம் புஷ்பம் முதலானவற்றையோ திருவடிகளில் சமர்ப்பிப்பதே நடைமுறையில் உள்ளது. மானசிகமாகவாவது வணங்குவதாக உணர்ந்து இதனைச் செய்தால் அதிக பலன் உண்டு. பிறரைக்கொண்டு அர்ச்சனை செய்விக்கையில் அவரும் அதனை உணராமல் நாமும் அதனை உணராமல் செய்ய நேர்வதால் நமஸ்காரம் என்ற உணர்வுக்கலப்பு சிறிதுமில்லாத ஏதோ ஒரு செயல் ஆகிறது. அதற்கும் பலன் உண்டு என்று கொண்டாலும்

இந்தச் செய்கையில் உயர்ந்ததை ஈனத்திற்குப் பயன்படுத்திய அறியாமை நன்கு புலப்படுகின்றது. இதனை உணர்ந்து பக்தியுடன் ஒவ்வொரு அர்ச்சனையாலும் இறைவனை வணங்குவதாக மானசிகமாகக் கற்பனை செய்தால் கூட நல்ல பலன் ஏற்படும். சித்த சுத்தி அமையும். சித்தம் தெளியத் தெளிய என்றோ ஒருநாள் பாவனை வலிவால் இறைவனை நேரில் வணங்குவதாக இச்செயல் அமையக்கூடும். ஒருவித வழிபாட்டுச் சாதனமுமற்ற பாமரனும் நாம பாராயணத்தில் எளிதில் ஈடுபடவேண்டுமென்பதற்காகவே எல்லா ஸஹஸ்ர நாமங்களும் முதல் வேற்றுமைச் சொற்களாலேயே அமைந்துள்ளன என்றும் கருதலாம்.

**ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தை விளக்கவந்த உரையாசிரியர்கள்.** உரையாசிரியர் என்று குறிப்படப்படாவிடினும் வியாஸரும் பீஷ்மரும் முதல் உரையாசிரியர்களே. மந்திர சக்திமிக்க நாமங்களை ருஷிகள் கண்டுபிடித்தனர். (ருஷிபி: பரிகீதாநி) அவற்றில் பலவற்றை வியாஸர் மஹாபாரதத்தின் பல நிகழ்ச்சிகளில் கண்ணனின் நாமங்களை விளக்குமிடங்களில் விவரித்துள்ளார். அவற்றை வரிசைப்படுத்தித் தொகுத்தவர் பீஷ்மர். உதிரி உதிரியாகச் சொல்லிலும் பொருளிலும் அமைந்தவற்றை, ஒன்றோடொன்று பிணைந்து பல அழகிய கருத்துக்களை விளக்குமாறு பீஷ்மர் தொகுத்து இருக்கிறார். தனி நாமம் கூறுகிற பெருமையைவிட அது அமைந்துள்ள இடம் புதிய கருத்தைக் கொணர்கிறது. சில உதாரணங்களைக் காண்போம்.

இறைவன் நமக்கு எப்போதும் உதவுகிறார். சமயத்திற்கு உதவி புரியும் மாண்பை **அனுகூல:** *(நா. 342)* என்ற நாமம் விளக்குகிறது. இது பதிந்துள்ள இடத்தைக் காண்போம். *''அனுகூல: சதாவர்த்த: பத்மீ பத்மநிபேக்ஷண:''. (நா. 342-345)* உதவி புரிய அன்புடன் இணைந்து நிற்கும் இறைவன், ஒரு தடவை அப்படி இருப்பதில் திருப்தி பெறாமல் நூறு தடவை — எண்ணற்ற தடவை திரும்பத் திரும்ப வருகிறார் - **சதாவர்த்த:**. உதவி புரிபவர் உதவி புரிகிறோம் என்ற செருக்கைக் காட்டாமல் அன்பைக் கையில் ஏந்திய தாமரையாலும் தாமரையை ஒத்த கண்களாலும். காட்டுகிறார், தனியே **சதாவர்த்த: பத்மீ பத்மநிபேக்ஷண:** என்ற நாமங்கள் கூறும் பொருளைக் காட்டிலும் அனுகூல: என்பதுடன் சேர்ந்ததும் எத்தனை மெருகுடன் பொருள் விளக்கம் தருகின்றன!

இறைவன் தற்பெருமையற்றவர். உடல் வலிமை, அழகு, செல்வம், கல்வி முதலியவற்றால் செருக்குற்றுத் தன்னைப்

பெருமைப்படுத்திக்கொள்ளத் தேவையில்லாதவர். தன்னைக் காட்டிலும் சிறந்து அல்லது தனக்கு ஈடாக மற்றொருவரிருப்பதை மதிக்காதிருப்பதற்கு இந்தத் தற்பெருமை உதவுகிறது. இறைவனுக்குச் சமமானவரோ அவரை மிக்கவரோ எவரும் இல்லை. அதனால் அவர் அமாநீ (நா . 747) உலகியலில் சிறிது தற்பெருமை தேவை. இதனை உணர்ந்த இறைவன் தன் அன்புக்குரிய அடியார்களிடம் இந்தத் தற்பெருமை உணர்ச்சியை ஊட்டுகிறார் - மாநத: (நா 748) ஆஞ்ஜநேயர் இலங்கைவானில் நின்று ''ந ராவண ஸஹஸ்ரம் மே யுத்தே ப்ரதிபலம் பவேத். ஆயிரம் ராவணர்கள் வந்தாலும் போரில் எனக்கு எதிர் நிற்க முடியாது'' என்று கர்ஜித்தது இறைவன் தந்த மான உணர்ச்சியால். ஆனால் இறைவன் அருளால் பெறாத மான உணர்ச்சியை ஒருவன் செருக்கால் வெளிப்படுத்தினால் அதனை அங்கேயே வெட்டிச்சிறுமைப்படுத்துகிறார் — மாநத:. தான் தற்பெருமைகொள்ளாதவராயிருப்பதற்காக 'ம்ருதுர் ஹி பரிபூயதே' மென்மையாக நடந்துகொள்பவன் இகழ்ச்சியடைவது இயற்கை என்றவாறு ஆகாமல் தன்னை எல்லோரும் பெருமைப்படுத்தும்படி நடந்துகொள்பவர் - மாந்ய: (நா.749). 'அமாநீ மாநத: மாந்ய:' (நா. 747-749) எத்தனை பொருள் செறிவுள்ள தொகுப்பு? இப்படி எத்தனை தொகுப்புகள்? நாமத் தொகுப்பாசிரியரான பீஷ்மர் அவைகளை வரிசையமைத்த பாங்கால் மேலும் அழகூட்டுவதால் உரையாசிரியராக முதலிடம் பெறுகிறார் எனலாம்.

ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இதற்கு பாஷ்யம் எழுதி உள்ளார். அவரது உரை நடை மிக அழகானது. பல இடங்களில் அழகிய சந்தக்கட்டுடன் செய்யுள் நடையமைப்பை அது தானே அடைகிறது. சாஸ்திர ரீதியில் விளக்கம் தருமிடங்களில் கூட இனிய காவியமாகவே அவ்வுரை அமைந்துள்ளது.

ஸ்ரீ சங்கரர் இதற்கு உரை எழுத முற்பட்டதனை விளக்கும் அழகிய கதை உண்டு. நமது சமயக் கோட்பாடுகள் அமைந்துள்ள நூல்கள் மூன்று பிரிவுகளில் அடங்கும். 1. ச்ருதி ப்ரஸ்தானம் - வேதம். 2. ஸ்மிருதி ப்ரஸ்தானம்- வேதம் கூறிய கருத்தை வரிசைப்படுத்தித் தீர்க்க தரிசிகளான பெரியோர்கள் தந்த நினைவுக் குறிப்புகள் - ஸ்மிருதிகள். 3. புராணப்ரஸ்தானம். வேதம் கூறியபடி வாழ்ந்து காட்டிய பெருமை பெற்ற பெரியோர்கள், அதன்படி நடவாமல் சீரழிந்தவர்கள் இவர்களின் வாழ்க்கை

முறையைக் கதையாக விளக்கி வேதம் கூறிய அறநெறிகளில் ஈடுபாட்டை ஏற்படுத்தும் புராண இதிஹாஸங்கள். இந்த மூன்று பிரிவுகளிலும் உள்ள சிறந்த நூல்களுக்கு - ஆத்மப் பொருள் விளக்கம் தருபவைகளுக்குப் பாஷ்யம் எழுதத் தொடங்கிய ஆசாரிய சங்கரர் வேதக்கடைப் பகுதியான உபநிடதங்களுக்கும் ஸ்மிருதியான வியாஸர் தொகுத்த பிரும்ம சூத்திரங்களுக்கும் உரை இயற்றினார்.

புராணப் பிரிவில் எதற்கு உரை எழுதுவது என்று ஸ்ரீ சங்கரர் சிந்தித்துக்கொண்டிருந்தார். அங்கு ஒரு சிறுமி வந்தாள். முடிவு தெரியாமலிருந்தால் தெய்வத் திருவுள்ளமறிவதற்குப் பேதைப் பருவத்திலுள்ள சிறுவர் தரும் குறிப்பைத் திருவுள்ளமாக ஏற்றுச் செயல்படுவது பெரியோர் வழக்கம். தன் முன்னுள்ள புராணச் சுவடிகளிலிருந்து ஒன்றை எடுத்துத் தருமாறு ஆசாரியர் அந்தச் சிறுமியை வேண்டினார். அவள் எடுத்துத் தந்தது ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமச் சுவடி. மஹா பாரதத்தின் ஒரு பகுதி. ஆசாரியர் இறைவனே திருவருள் புரிந்து இதனைத் தந்ததாக ஏற்றார். இதற்கு உரை எழுதினார். அவர் தன் குருவிடமிருந்து பெற்ற - வாழையடி வாழையாக வந்த - உபனிடதத்தத்துவ விளக்கமனைத்தும் பொருந்திய நூலாக இது அமைந்ததில் மேலும் ஆர்வம் கூடியது. இறைவன், ஆத்மா, அவர் படைத்த உலகம், உலகில் காணும் இறைவனது பேரியல்பு, ஒவ்வொரு அணுவிலும் ஒவ்வொரு தனிப் பாங்காக நின்று ஆட்டுவிக்கிற இறைவனது சிறப்பியல்புகள், எல்லாவற்றையும் பரம்பொருளாகப் பார்ப்பதற்கு உதவுகின்ற அவரது லீலா விபூதிகள் என்றவாறு எண்ணி மாளாத பல சிறப்பியல்புகளை ஒருங்கே அழகாக விளக்கிய நூல் விஷ்ணு ஸஹஸ்ரநாமம் ஒன்றே. உபநிடதங்கள் வெளியிட்டதும் பிரும்ம ஸூத்ரம் குறிப்பாகத் தந்ததும் புராணங்கள் அனைத்தும் பலவாறு விளக்கியதுமான கருத்துக்கள் அனைத்தும் சிறு சிறு நாம வடிவில் விஷ்ணுஸஹஸ்ர நாமத்தில் உலாவி வருகின்றன. இதனைக் கண்ட ஆசாரியர் ஈசுவர தத்வ விளக்கப் பெரு நூலாக இதனைப் போற்றிப் பாஷ்யம் எழுதியுள்ளார். இறைவன் ஸாதகானுக்ரஹத்திற்கெனவே ஸகுண வடிவமேற்றுப் பாமரனையும் தன்னிடம் ஈடுபடுத்திச் சிறிது சிறிதாக ஸர்வாத்மபாவம் பெறச் செய்து தனது பர நிலையை உணர்த்தி, அவனது அஞ்ஞானங்கள் விலக அருள்புரிந்து குருவாகி வழி நடத்தித் தன் பரநிலையை அவனையே அடையச் செய்யும் பாங்கை சங்கரர் விளக்குகிறார்.

இவர் எழுதிய பாஷ்ய உரையின் சிறப்பிற்கு ஒரு சான்று:— நீலகண்டர் என்பவர் ஸ்ரீ மஹா பாரதத்திற்கு உரை எழுதியுள்ளார். அவர் ஒருவரே ஸம்ஸ்கிருத உரையாளர் எனலாம். மற்றவிடங்களில் தெளிவாக உரை எழுதி வந்த அவர் விஷ்ணுஸஹஸ்ர நாமப் பகுதிக்கு வந்ததும், "நாமபதங்களின் பொருள் ஸ்ரீ சங்கரபகவத்பாதரின் பாஷ்யத்திலிருந்தே அறிந்துகொள்ளத்தக்கது". "नामपदानामवयवार्थस्तु श्रीशङ्कराचार्य-भगवत्पादीयभाष्यादेव अवगन्तव्यः" என்று வினயத்துடன் குறிப்பிட்டுள்ளார்.

ஸ்ரீ பராசரபட்டர் இதற்கு பகவத்குண தர்பணம் என்ற அழகிய உரையணி அணிவித்துள்ளார். ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் ஸ்ரீ கூரேசபட்டரது குமாரராகத் தோன்றியவர். தத்துவரத்நாகரம், ஸ்ரீ குணரத்னகோசம், கிரியாதீபம் முதலிய பெரு நூல்களை இயற்றியவர். மாசற்றவையும் மங்கள கரமானவையும் திவ்யமான வையுமான அனந்த கல்யாண குணங்கள் நிரம்பிய பகவான் ஸ்ரீமன் நாராயணன் பர-வ்யூஹ-விபவ - அவதார - அர்ச்சா நிலைகளில் காட்டிய திவ்ய ஆத்மஸ்வரூபம், திவ்ய மங்கள வடிவமைப்பு, அண்டினவரைக் காப்பாற்ற நடத்திய அருட்பணிகள், தன் அளவிலாப் பெருமை காட்ட நிகழ்த்திய திவ்ய லீலைகள், இவற்றை இத்திருநாமங்கள் விளக்குவதை மிகச் சிறந்த முறையில் இவ்வுரையில் குறிப்பிட்டுள்ளார். பரமன் தன் தனி நிலையிலிருந்து இறங்கிப் பாமரனும் போக்யமாகக் கருதும்படி ஸர்வ விலக்ஷணமாகத் தன் லீலைகளைப் பரப்பித் தன் திவ்ய மஹிமானுபவத்தை வழங்கிய பாங்கைப் பட்டர் விளக்குகிறார்.

மத்வ ஸம்பிரதாயத்தினரான ஸ்ரீ ஸத்யஸந்தயதீசுவரர் எழுதிய பாஷ்யம் அவர்களுக்கே உரித்தான சப்தநிர்வசனத் திறமையை வெளிப்படுத்திக்கொண்டு பகவந் நாம வைபவங்களை விளக்குகிறது.

ஸ்ரீ சங்கர பாஷ்யத்திற்கு ஸ்ரீ தாரக ப்ரம்ஹானந்த ஸரஸ்வதி என்ற ஸன்யாஸி விவ்ருதி என்ற உரையை எழுதியுள்ளார். இது மிகச் சிறந்த பாஷ்ய விளக்க நூல். ஸ்ரீ சங்கரரது பாஷ்யக் கருத்துக்களை சுருக்கி சுலோகவடிவில் ஸ்ரீ ராம சாஸ்திரி என்ற சிறந்த பண்டிதர் ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாம பாஷ்யார்த்த ஸங்கிரஹம் எனற நூலை எழுதியுள்ளார். இது 548 சுலோகங்கள்

கொண்டது: ஸ்ரீ பராசர பட்டர் உரையைச் சுருக்கமாகத் தரும் நூல் ப்ரணவ நிருக்தி என்பது. 792 சுலோகங்கள் கொண்டது. இதனை எழுதியவர் யார் என்று தெரியவில்லை. மற்றொன்று நிர்வசனம். இது நாமங்களை இலக்கண ரீதியில் சொல்லாராய்ச்சி செய்து விவரிப்பது. ஸ்ரீ வரதாசார்யர் என்பவர் இதனை இயற்றியவர்.

ஸ்ரீ வித்யாராஜர், ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீராகவேந்திரஸூரி முதலிய பலரும் உரை எழுதியுள்ளதாகத் தெரிகிறது. ஸுமத்வ விஜயத்தில் ஒரு நிகழ்ச்சி குறிப்பிடப்பட்டு உள்ளது. ''மத்வாசாரியர் விஷ்ணுஸஹஸ்ர நாமத்திலுள்ள ஒவ்வொரு பெயரும் நூறு பொருள் கொண்டதெனப் பண்டித ஸபையில் கூறினார். ஸபையிலிருந்த பண்டிதர்கள் அவரை நூறு பொருள் கூறும்படிக் கேட்டனர். 'நான் கூறுகிறேன், நீங்கள் அவற்றைத் திரும்பக் கூறவேண்டுமென்று மத்வர் ஸபையினருக்கு நிபந்தனையிட்டார், விச்வம் என்ற முதல் நாமத்தின் நூறு பொருள்களையும் ஸ்ரீ மத்வர் கூறி முடித்ததும் அதனைத் திருப்பிக் கூற இயலாமல் ஸபையினர் திகைத்து நின்றனர்' என்று.

பாட பேதங்கள். மஹா பாரதம் தோன்றி 5000 ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டன. அதன்பின் அதிலுள்ள விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை நூலுருவில் விளக்கியவர் ஸ்ரீசங்கர பகவத்பாதர். மஹாபாரதம் தோன்றியதிலிருந்து சுமார் 2500 ஆண்டுகள் வழக்கிலிருந்த பாடத்தை ஒட்டி ஸ்ரீசங்கரர் உரை எழுதியுள்ளார். அவர் தம் உரையில் குறிப்பிட்டுள்ள பாட பேதங்கள் பெரும்பாலும் ஸந்தியில் அகாரம் மறைந்துவிடுவதால் ஏற்படும் வேற்றுமைதான். பீம:- அபீம: (நா. 356), அபூ: - பூ: (நா. 437), நந்த:- அநந்த: (நா. 528), கண்டபரசு:- அகண்டபரசு: (நா. 568), அநிவிருத்தாத்மா - நிவிருத்தாத்மா (நா. 597), நியம:- அநியம: (நா. 865) யம:- அயம: (நா. 866) ஸுகத:- அஸுகத: (நா. 889), தாதா - அதாதா (நா. 951) என்ற அகாரச் சேர்க்கையால் விளைந்த ஒன்பது இடங்களும் க்ருதாக்ருத:- க்ருதாக்ருதி: என்ற இடமுமே ஸ்ரீசங்கர பாஷ்யத்திலுள்ள பாட பேதங்களாகும். ஸ்ரீதாரக ப்ரும்மானந்த ஸரஸ்வதி அவர் காலத்தில் ஸ்ரீசங்கர பாஷ்யத்திலேயே சில பாட பேதங்களைக் குறிப்பிட்டு விரத:- விரஜ: (நா. 396), ஸவிதா - ஸ பிதா (நா. 969), ஸ்கந்ததர: (स्कन्दधरः) ஸ்கந்ததர: (स्कन्धधरः) (நா. 328) ஸ்துதி:- ஸ்துத: (நா. 682) என்ற பாட பேதங்களை ஸ்ரீசங்கரர் ஏற்றவைகளாகக் குறிப்பிடுகிறார்.

இந்த ஸ்தோத்திரத்தில் 1011 முதல் வேற்றுமைச் சொற்கள் உள்ளன. அவற்றை நாமங்களாக்கிஞல் 1011 நாமங்களாகும். 'விஷ்ணேர் நாம ஸஹஸ்ரம் மே ச்ருணு' என்று தொடக்கத்திலும் 'நாம்நாம் ஸஹஸ்ரம் திவ்யாநாம்' என்று முடிவுரையிலும் பீஷ்மர் 1000 நாமங்கள் எனக் குறிப்பிட்டுள்ளபடியால் 11 நாமங்களே இரு சொற்கள் கொண்டவையாக, ஒன்றுக்கொன்று விசேஷணச் சொல்லாகக் கொண்டவைகளாகக் கூறும் வழக்கு ஸ்ரீசங்கர பகவத்பாதருக்கு முன்னிருந்ததை அவரது உரையிலிருந்து காணலாம். அதிலும் பாட பேதங்களிருப்பதை ஸ்ரீசங்கரர் ஆங்காங்கு குறிப்பிட்டு உள்ளார்.

அடுத்து ஸ்ரீபராசரபட்டார் ஸ்ரீஸத்யஸந்தயதி இவர்கள் காலத்தில் இந்த பாட பேதங்கள் அதிகமாகவே வழக்கிலிருந்திருப்பதை அவர்களின் உரையிலிருந்து ஊகித்தறியலாம். இரு நாமச்சேர்க்கை விஷயத்திலும் பாட பேதங்கள் காணப்படுகின்றன. இவை ஆங்காங்கு குறிப்பில் காட்டப்பட்டுள்ளன. ஸ்ரீசங்கரர், ஸ்ரீபராசரபட்டர், ஸ்ரீஸத்ய ஸந்தயதி இம்மூவரின் உரைகளே இந்த விரிவுரைக்கு ஆதாரமாகின்றன. ஸ்ரீசங்கரர் காலத்திலிருந்த பாடமே மூலத்தில் தரப்பட்டு உள்ளது. பாட பேதங்கள் விளக்கத்தில் தரப்பட்டுள்ளன.

**சுலோகச்சேர்க்கை** - தமிழ்நாட்டில் வழக்கிலுள்ள ஸ்தோத்திர முறைப்படி இங்கு மூலம் தரப்பட்டுள்ளது. இதில் 7-19, 32-138, 140-161, சுலோகங்கள் மட்டுமே மஹாபாரதத்தில் உள்ளவை. முன்னும் பின்னும் விஷ்ணு புராணம், பத்ம புராணம், கீதை முதலியவற்றில் காணப்பெறும் சுலோகங்கள் ஸம்பிரதாயத்தில் வந்தவையாகச் சேர்க்கப்பட்டுள்ளன. நடுவில் உள்ள ருஷி - சந்தஸ் - தேவதா முதலிய குறிப்புகளும் தியான சுலோகங்களும் பின்னர் சேர்க்கப்பட்டவைகளே. மஹா பாரதத்தில் உள்ளவைகளுக்கு மட்டும் ஸ்ரீசங்கர பாஷ்யம் உள்ளது.

*ஸ்ரீ சங்கர பகவத்பாதரது மங்கள சுலோகங்கள் — ஸ்ரீசங்கரர் தமதுபாஷ்யத்தைத் தொடங்கு முன் மூன்று சுலோகங்களால் குரு - தேவதா வந்தனம் செய்கிறார்.*

सच्चिदानन्दरूपाय कृष्णायाक्लिष्टकारिणे ।
नमो वेदान्तवेद्याय गुरवे बुद्धिसाक्षिणे ॥

ஸச்சிதாநந்த ரூபாய க்ருஷ்ணாயாக்லிஷ்டகாரிணே
நமோ வேதாந்தவேத்யாய குரவே புத்திஸாக்ஷிணே.

பேரிருப்பு, பேரறிவு, பேராநந்தம் இவற்றை வடிவாகக் கொண்டவரும் உடல் மனம் வருந்தாமல் செயல் புரிபவரும் வேதத்தின் இறுதிப் பொருளாக உணரப் பெறுபவரும் அறிவினுள் ஸாக்ஷியாக இருப்பவரும் குருவுமான கிருஷ்ணனுக்கு நமஸ்காரம். (கிருஷ்ண: (நா. 57) குரு: (நா. 209).

कृष्णद्वैपायनं व्यासं सर्वभूतहिते रतम् ।
वेदाब्जभास्करं वन्दे शमादिनिलयं मुनिम् ॥

க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் ஸர்வபூதஹிதே ரதம்.
வேதாப்ஜபாஸ்கரம் வந்தே ஶமாதிநிலயம் முநிம்.

கிருஷ்ணர் த்வைபாயனர் என்ற பெயர் பெற்றவரும் அனைத்து உயிர்களின் நன்மையில் எப்போதும் ஈடுபட்டவரும், வேதம் எனும் தாமரையை மலரச் செய்யும் கதிரவனும், சமம் முதலிய குணங்கள் தங்குமிடமும், சித்தமும் பொறிகளும் அடங்கியவருமான வியாஸரை வணங்குகிறேன். (நா. 550,572)

सहस्रमूर्तेः पुरुषोत्तमस्य सहस्रनेत्राननपादबाहोः ।
सहस्रनाम्नां स्तवनं प्रशस्तं निरुच्यते जन्मजरादिशान्त्यै ॥

ஸஹஸ்ரமூர்த்தே: புருஷோத்தமஸ்ய ஸஹஸ்ரநேத்ராநநபாதபாஹோ:.
ஸஹஸ்ரநாம்நாம் ஸ்தவனம் ப்ரஶஸ்தம் நிருச்யதே ஜந்மஜராதிஶாந்த்யை.

வடிவாயிரம் பெற்றவரும் ஆயிரக்கணக்கான கண்கள் முகங்கள் கால்கள் கைகள் உள்ளவருமான புருஷோத்தமனின் ஆயிரம் பெயர்கள் அடங்கிய புகழ் பெற்ற ஸ்தோத்திரமானது பிறப்பு மூப்பு முதலியவை நீங்குவதற்காகச் சொற்களைப் பிரித்து விரிவுரை செய்யப்படுகிறது. (நா. 24,224,226,227,966)

*ஸ்ரீ பராசர பட்டரது மங்கள சுலோகங்கள் - ஸ்ரீபராசரபட்டர் தனது பகவத் குணதர்பணம் எனும் உரையின் தொடக்கத்தில் செய்துகொண்ட மங்கள சுலோகங்கள்.*

ओं नमो गजवक्त्राद्यैः पारिषद्यैः प्रशासते ।
श्रीरङ्गराजसेनान्ये सूत्रवत्या समेयुषे ॥

ஓம் நமோ கஜவக்த்ராத்யை: பாரிஷத்யை: ப்ரஶாஸதே
ஸ்ரீரங்கராஜ ஸேநாந்யே ஸூத்ரவத்யா ஸமேயுஷே

கஜவக்திரர் முதலான பரிவார தேவர்கள் மூலம் ஆணையைச் செலுத்துபவரும் ஸூத்ரவதியுடன் எப்போதும் கூடியிருப்பவருமான ஸ்ரீரங்கராஜப் பெருமானின் படைத்தலைவருக்கு ஓம் என்று சொல்லி நமஸ்காரம். (சு. 2 )

नमो नारायणायेदं कृष्णद्वैपायनात्मने ।
यदामुष्यायणा वेदाः महाभारतपञ्चमाः ॥

நமோ நாராயணாயேதம் க்ருஷ்ணத்வைபாயநாத்மநே
யதாமுஷ்யாயணா வேதா: மஹாபாரத பஞ்சமா:

மஹாபாரதத்தை ஐந்தாவதாக்கிக்கொண்ட வேதங்கள் எவரிடமிருந்து தோன்றியவையாகத் தம்மை வெளிப்படுத்திக் கொள்கின்றனவோ அந்த கிருஷ்ணர் த்வைபாயனர் என்ற பெயருடன் கூடிய வடிவைத் தனதாக்கிக்கொண்ட நாராயணனுக்கு இந்த வணக்கம். (நா. 245,550,572)

श्रीहरिः शरणम्

# ।। श्रीविष्णुसहस्रनामस्तोत्रम् ।।

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

## पूर्वभागः- முற்பகுதி

।। श्रीगुरुभ्यो नमः ।।

ஸ்ரீ குருப்ப்யோ நம:

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत् सर्वविघ्नोपशान्तये ।। १ ।।

ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்புஜம் ।
ப்ரஸந்நவதநம் த்யாயேத் ஸர்வவிக்னோபஶாந்தயே ॥

ஸ்ரீ குருவின் திருவடிகளுக்கு நமஸ்காரம்.

வெண்ணிற ஆடை தரித்தவரும் எங்கும் நிரம்பியவரும் சந்திரனுக்கொப்பான மேனிவண்ணம் கொண்டவரும் நான்கு கைகள் உள்ளவரும் மதம் பிடித்த யானை முகமுள்ளவருமான விநாயகப் பெருமானை நினைவிற்கொள்ளவும். (1)

*எங்கும் நீக்கமற நிரம்பியுள்ள விஷ்ணுவான பரம் பொருளே இந்த ஸ்தோத்திரத்தால் துதிக்கப்பெறுகிற மூலப்பொருள். அதுவே விநாயகராகத் தோன்றி இடையூறுகளைக் களைகிறது. வெண்ணிறம் தூய்மையைக் குறிக்கும். அம்பரம்-ஆகாசம். தூயதான ஆகாயத்தையே ஆடையாக உடலாகக் கொண்டது பரம்பொருள். 'ஆகாச சரீரம் ப்ரம்ஹ' என்ற உபநிடத வாக்கியமும் அம்பலவாணர் (அம்பலம் - அம்பரம் - ஆகாயம், வாணம் - உடல்). என்ற வழக்கும் இதனைக் குறிக்கின்றன. ப்ரஸன்ன என்ற சொல்லுக்கு மத்தவாரண:- மதம்பிடித்த யானை என்று கோசம் பொருள் தருகின்றது. பூர்ணமான பரம்பொருள் ஏற்ற விநாயகர் வடிவில் உள்ள பூர்ணத்துவத்தை அதனால் ஏற்பட்ட முகமலர்ச்சியை இந்தச்சொல் குறிப்பிடுகிறது.*

*சந்திரன் மனத்தின் தேவதை. அவனைக் கண்டால் மனத்தெளிவும் மகிழ்ச்சியும் கிட்டும். மேனி நிறத்தால் சந்திரனாகி*

*மனத் தெளிவும் மகிழ்ச்சியும் தருகிறார் விநாயகர். இடையூறுகளைக் களைகிறார். வெண்ணிற ஆடை தரித்துத் தூய அறிவை அளிக்கிறார். தூய அறிவே இறைவனை உணர்த்தும். அவரே குரு. (விநாயகர் - வழிப்படுத்தி அழைத்துச் செல்பவர்) அவரே விஷ்ணு. அவரே பரம் பொருள். பரம்பொருளின் நினைவே மங்களத்தைத் தரும். இந்த சுலோகத்தை வாயால் சொல்வதுடன் மனத்தால் உருவகப் படுத்தி வணங்கவேண்டும். அதுவே இடையூறுகளை விலக்கும். விநாயகர் வழிபாட்டிற்கான பல சுலோகங்கள் இருப்பினும் இந்த சுலோகமே எல்லோராலும் நற்பணிகளைத் தொடங்கு முன் சொல்லப்படுகின்றது. சக்தி மிக்கதொரு சொல்லமைப்புள்ளது என்று பெரியோர் சொல்வர். 'த்யாயேத்' (நினைவிற்கொள்ளவும்) என்பதை வந்தே (வணங்குகிறேன்) என மாற்றிக் கூறுபவரும் உண்டு. (நா. 2, 140, 258, 657,)*

**यस्य द्विरदवक्त्राद्याः पारिषद्याः परःशतम् ।**
**विघ्नं निघ्नन्ति सततं विष्वक्सेनं तमाश्रये ॥ २ ॥**

**யஸ்ய த்விரத வக்த்ராத்யா: பாரிஷத்யா: பரஶ்ஶதம் ।**
**விக்நம் நிக்நந்தி ஸததம் விஷ்வக்ஸேனம் தம் ஆஶ்ரயே ॥ 2 ॥**

கஜவக்திரர் முதலான நூற்றுக்கணக்கானவர் எவரைச் சூழ்ந்திருப்பவர்களாகி எப்பொழுதும் இடையூறுகளை நீக்குகின்றனரோ, அந்த விஷ்வக்ஸேனரைச் சரணடைகிறேன். (2)

**விஷ்வக்ஸேனர்:** *விஷ்வக்ஸேனர், ஆதிசேஷன், கருடன் முதலானோர் ஸ்ரீமன் நாராயணனின் அந்தரங்க பரிவார தேவதைகளாக விளங்கும் நித்யஸூரிகள். பகவானது ஸேனாதிபதி என்ற பொறுப்பு விஷ்வக்ஸேனருக்கு உண்டு. ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாதப்பெருமானின் ஸேனாதிபதியாக நகர்வலம் வந்து சோதனை செய்பவரானதால் 'ஸ்ரீரங்கராஜ ஸேநா நீ' என்று இவரைக் குறிப்பிடுவர். இவர் மனைவி ஸூத்ரவதி. கஜவக்த்ரர், ஜயத்ஸேனர், ஹரிவக்த்ரர், காலப்ரக்ருதி என்று இவருக்கு நான்கு பரிவாரங்கள், கஜவக்த்ர என்பதையே 'த்விரதவக்த்ர' என்று சுலோகத்தில் குறிப்பிட்டுள்ளது.*

*அரசன் என்ற நிலையில் இறைவனுக்கும் பாதுகாவலர் உண்டு. பாதுகாப்பாளர்களின் தலைவர் விஷ்வக்ஸேனர். தன்னைத் தவிர வேறு ஒன்று இருக்கமுடியாத அளவிற்கு நீக்கமற நிரம்பியுள்ள இறைவனுக்கு எதிரி இருக்க வாய்ப்பில்லை. ஆஸனமோ*

*வாஹனமோ தேவையிராது. எனினும் இறைவனே திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவராக ஸ்ரீரங்கராஜராக — கோவிந்தராஜராக — வரதராஜராக — பேரரசராகக் கருணை கூர்ந்து தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும்போது ஸேனாபதியும் வாஹனமும் ஆஸனமுமாகத் தனது திவ்யதேஜஸிலிருந்து இவர்களைத் தானே வெளிப்படுத்தி அருளுகிறார். இறைவனைப் போலவே திவ்யரலங்காரங்கள் பூண்டிருப்பவர் விஷ்வக்ஸேனர். மேலும் கீழும் நாற்புறமும் பரவிப் பாயக்கூடிய (விஷ்வக்) ஸேனைகளுடன் கூடியவர். கஜவக்திரர் முதலானவர் இவரது உபஸேனாபதிகள். இவர்களுக்குக் கீழே நூற்றுக்கணக்கான வீரர்கள் உண்டு. அவ்வீரர்கள் எப்போதும் உத்தரவை எதிர்பார்த்து விஷ்வக்ஸேனரைச் சூழ்ந்து நிற்பார்கள். (பாரிஷத்யா:) (நா. 125)*

**व्यासं वसिष्ठनप्तारं शक्तेः पौत्रमकल्मषम्।**
**पराशरात्मजं वन्दे शुकतातं तपोनिधिम्॥ ३ ॥**

**வ்யாஸம் வஸிஷ்ட்டநப்தாரம் ஶக்தே: பௌத்ரமகல்மஷம்।**
**பராஶராத்மஜம் வந்தே ஶுகதாதம் தபோநிதிம் ॥ 3 ॥**

**வஸிஷ்டரின் கொள்ளுப்பேரரும், சக்தியின் பேரரும், பராசரரது புத்திரரும் சுகரது தந்தையும் மாசற்றவரும் தவத்தின் பாதுகாப்பகமுமான வியாஸரை வணங்குகிறேன். (3)**

*மந்திரங்கள் தெய்விக சக்திமிக்க சொல்லமைப்புகளாகும். ஞானதிருஷ்டி பெற்ற பெரியோர்களான ருஷிகள் மந்திரங்களைத் தவத்தால் கண்டறிந்தனர். இவர்கள் புதிதாக மந்திரங்களைப் படைத்தவரல்ல. சக்தி மிக்க மந்திரச் சொல்லமைப்புகள் அழியாத அமிருதச் சொற்களாகப் பரவெளியில் எப்போதும் இருக்கின்றன. அவைகளை இவர்கள் கண்டனர். அதனால் இவர்களே அந்தந்த மந்திரம் சம்பந்தப்பட்ட ஆதிகுரு. இந்த குருவை நினைத்து அவரிடமிருந்து தொடங்கி நமக்கு உபதேசித்த குருவரை உள்ள அனைவரையும் வணங்கி ஜப - பாராயணங்களைத் தொடங்குவது முறையாகும். விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைத் தந்த குரு மஹரிஷி வியாஸர்.*

*பிரும்மாவின் மானஸ புத்திரர் வஸிஷ்டர். தம் பொறிகளையும் மனத்தையும் தம் வசத்தில் கொண்டவர் என்ற தனிச்சிறப்புப் பெயர் கொண்டவர். இந்த மன்வந்தரத்தின் ஸப்தரிஷிகளில் ஒருவர். வானில் காணும் ஸப்தரிஷி மண்டலத்தில் இவர் மட்டும் தன் பத்தினியான அருந்ததியுடன் காட்சி தருகிறார். விவாஹத்தில்*

இந்த தம்பதிகளைக் காண்பது மங்களமானது. இவர்களது புத்திரர் சக்தி. சக்தியின் மனைவி அத்ருச்யந்தீ. பிறர் கண்ணில் படாத பதிவிரதை. இவர்களது குமாரர் பராசரர், விஷ்ணுபுராணத்தைத் தொகுத்தவர். பராசரருக்கும் ஸத்தியவதிக்கும் குமாரராகத் தோன்றியவர் வியாஸர், வேதத்தை நான்காகவும், புராணத்தைப் பதினெட்டாகவும் பிரித்து அமைத்தவர். சுகர் இவரது தவக்குமாரர். பரீக்ஷித்திற்கு ஸ்ரீமத் பாகவதத்தை உபதேசித்த மகாயோகி. உத்தம வம்சத்தில் தோன்றியவர் என்ற பாவனைச் சிறப்புடன் வியாஸரை வணங்குகிறோம்.

மஹாபாரதத்தில் அனுசாஸன பர்வத்தில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம் அடங்குகிறது. மஹாபாரதத்தின் எந்தப்பகுதியைப் படித்தாலும் நர நாராயணர்கள், ஸரஸ்வதி இவர்களுடன் வியாஸரை நினைத்து அவரது பெயரை முன் கூறுவது முறை.[1] இதன் காரணமாகவும் வியாஸரை முதலில் வணங்குகிறோம். (நா. 572)

व्यासाय विष्णुरूपाय व्यासरूपाय विष्णवे।
नमो वै ब्रह्मनिधये वासिष्ठाय नमो नमः ॥ ४ ॥

வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே।
நமோ வை ப்ரம்ஹநிதயே வாஸிஷ்ட்டாய நமோ நம: ॥ 4 ॥

விஷ்ணு வடிவில் உள்ள வியாஸருக்கும் வியாஸர் வடிவில் உள்ள விஷ்ணுவிற்கும் நமஸ்காரம். தவத்திற்குக் காப்பிடமான வஸிஷ்டவம்சத் தோன்றலான அவருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம். (4)

பொதுவாக, குரு, குருவால் உபதேசிக்கப்பெற்ற மந்திரம், மந்திரத்தின் தேவதை இம்மூன்றும் ஒன்றே என்ற ஐக்ய பாவனையுடன் உபாசிப்பதே பலன் தரும் என்பர். இங்கோ குருவிற்கும் தேவதைக்கும் வேறுபாடின்மை இயற்கையாகவே அமைந்துள்ளது. வியாஸர் ஸ்ரீமன் நாராயணனின் ஞான சக்தியின் அவதாரம் என்று பெரியோர் கூறுவர்.[2]

---

1. नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं व्यासं ततो जयमुदीरयेत् ॥

2. ब्रह्मसूत्रकृते तस्मै वेदव्यासाय वेधसे ।
ज्ञानशक्त्यवताराय नमो भगवतो हरेः ॥

*ஸ்ரீவியாஸர் நாராயணனின் பதினேழாவது அவதாரம் என்று ஸ்ரீமத் பாகவதம் கூறும். (1-3-21, 2-7-36) இங்கு குருவே தேவதை. தேவதையே குரு. பிரும்மம்-பரம்பொருள். அதனையே நிதியாகக் காண்பவர் ஞானி. நிதி எளிதில் காணமுடியாதவாறு மறைந்திருக்கின்ற அரியபொருள். பிரும்மம் அத்தகையது. அதனைக் காட்டுகிற வேதமும், வேதம் காட்டிய வழியில் புரியும் தவமும் பிரும்மமே. (ப. 66) இம் மூன்றையும் நிதியாகக் கொண்டவர் வியாஸர்.*

*இந்த ஸ்தோத்திரத்தினால் வழிபடப்பெறும் இறைவனை இரு சுலோகங்கள் விளக்குகின்றன.*

अविकाराय शुद्धाय नित्याय परमात्मने।
सदैकरूपरूपाय विष्णवे सर्वजिष्णवे॥ ५ ॥

அவிகாராய பு॰த்தாய நித்யாய பரமாத்மநே।
ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே॥ 5 ॥

மாறுபாடு இல்லாதவரும், தூயவரும், என்றும் உள்ளவரும், பரம்பொருளும், எப்போதும் நிலைத்த வடிவுள்ளவரும், எல்லோரையும் எப்போதும் வெல்பவரும் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவருமான விஷ்ணுவிற்கு நமஸ்காரம். (5)

यस्य स्मरणमात्रेण जन्मसंसारबन्धनात्।
विमुच्यते नमस्तस्मै विष्णवे प्रभविष्णवे॥ ६ ॥
ओं नमो विष्णवे प्रभविष्णवे।

யஸ்ய ஸ்மரணமாத்ரேண ஜந்மஸம்ஸார பந்தநாத்।
விமுச்யதே நமஸ்தஸ்மை விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே॥ 6 ॥
ஓம் நமோ விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே.

எவரை நினைத்த அளவிலேயே பிறவியிலிருந்து தொடர்கிற கட்டிலிருந்தும் மனிதன் விடுபடுகிறானோ அந்த எல்லாம் வல்ல விஷ்ணுவிற்கு நமஸ்காரம். அந்த எல்லாம் வல்ல விஷ்ணுவிற்கு நமஸ்காரம். (6)

*இந்த சுலோகங்கள் விஷ்ணுபுராணத்தில் (1-2) உள்ளன. விகாரம்-மாறுபாடு. தோன்றுவதும் இருப்பதும் வளர்வதும் நிலை மாறுதல் அடைவதும் வளர்ச்சி குன்றித் தேய்வதும் மறைவதும் எனப் பொதுவாக ஆறுநிலைகள் ஒரு பொருளின் பரிணாமத்தைக்*

காட்டுபவை. தோன்றுகிற பொருள் அனைத்திலும் இந்த ஆறு நிலைகளைக் காணலாம். இறைவன் தோன்றுதவர், மறையாதவர். தோற்றத்திற்கும் மறைவிற்கும் இடையே நேர்கிற மாறுபாடுகளும் தோற்றம் மறைவு என்ற இரு மாறுபாடுகளும் அவருக்கு இல்லை. அதனால் அவர் அவிகாரர்.

வெளிமலம் உள்மலம் எனத் தூய்மையைக் குறைக்கிற அழுக்குகள், இரண்டு. உடலில் கசிவுப் பொருளாக, உடலிலிருந்து அகற்றப் படுகிற மலங்கள் — உடலைப்பற்றியவை. ஆசை, வெறுப்பு, கோபம் போன்ற மன அழுக்குகள் மனதைப்பற்றிய மலங்கள். வெளிப்புறச் சூழலிலிருந்து நம்மிடம் சேருபவை லேபம் எனும் அழுக்கு. இவை அனைத்தும் உடலோடு பிறந்தவனிடம் ஒட்டும். இறைவனிடம் அவை ஒட்டமாட்டா. அவர் நிர்மலர், நிர்லேபர், அதனால் சுத்தர்.

காலம், தேசம் என்ற கட்டிற்கு அகப்படாமையால் ஆதியும் அந்தமுமற்றவர் நித்தியர். காலத்திற்கு உட்படுபவன், தேசத்திற்கு உட்படுபவன், உருவத்தால் சிறியவன், எங்கும் பரந்து-வியாபித்து - இருக்க முடியாதவன், இவன் அவன் என்று வேறுபடுத்தப்படுபவன் — இவன் அநித்யனே. இறைவன் இந்த நிலைகளுக்கு அடங்காதவர். அதனால் நித்யர். அவரே பரம்பொருள். எங்கும் எப்போதும் ஒரே நிலையில் இருப்பவர். எங்கும் நீக்கமற நிரம்பி இருத்தலால் - எல்லாமாயிருத்தலால் அவர் விஷ்ணு ஜிஷ்ணு - அவர் படைத்த உலகில் அவரை எதிர்க்கும் வலிவுள்ளது எதுவும் இல்லை. அதனால், வெற்றி வீரர். (நா. 2,11,258,657)

கண்டதும் கேட்டதும் முகர்ந்ததும் மற்றதும் மனத்தில் ஆழப்பதிந்துவிடுமானால் அதனை வேண்டும்போது நினைக்க முடியும். கண்டது எல்லாம் நினைவில் வராது. கண்டு மனத்திற் பதிந்தவையே நினைவிற்கு வரும். இறைவனை உள்ளமுருகப் பாடிக் கசிந்து கண்ணீர்மல்கக் கண்டு களித்தவனே இறைவனை நினைவிற் கொணர முடியும். இறைவன் நினைவில் நின்றால், ஸம்ஸார பந்தம் நீங்கும். ஸம்ஸாரம் எனும் தளை பிறவியில் தொடங்கி மறு பிறவி வரை சங்கிலியாகத் தொடர்கிறது. இறைவனின் நினைவு கத்தியாகி அத்தளையை அறுத்து அகற்றிவிடும். அவர் பிரபு, எல்லாம் வல்லவர், சீரும் சிறப்பும் செல்வாக்கும் திறமையும் உரிமையும் பெற்றவர். அவருக்கு நமஸ்காரம்.

*இந்த ஆறு சுலோகங்களும் மஹாபாரதத்தில் இல்லாதவை, ஸம்பிரதாயத்தில் விஷ்ணுஸஹஸ்ர நாமத்தின் முற்பகுதியாகப் பாராயணம் செய்யப்படுபவை. இவற்றைச் சொன்ன பிறகே மஹாபாரதத்தில் உள்ள விஷ்ணுஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தைத் தொடங்குவர். இது ஒரு தனிப் பகுதி என்பதைக் காட்டவே இறுதியில் உள்ள விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே என்பது மறுமுறையாக ஓம் நம: (ஓங்கார ஸ்மரணத்துடன் நமஸ்காரம்) என்று முன் சேர்த்துச் சொல்லப்படுகிறது.*

*இனி வரும் பகுதிகள் மஹாபாரதத்தில் உள்ளவை. வைசம்பாயனர் எனும் மகரிஷி வியாஸபகவான் தொகுத்தளித்த மஹாபாரதத்தை ஜனமேஜயருக்கு யாக மண்டபத்தில் விளக்கி வருகிறார். அதில் அனுசாஸன பர்வத்தின் 149வது அத்யாயமாக விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம் அமைந்துள்ளது.*

**श्री वैशंपायनः उवाच —**

श्रुत्वा धर्मानशेषेण पावनानि च सर्वशः ।
युधिष्ठिरः शान्तनवं पुनरेवाभ्यभाषत ॥ ७ ॥

ஸ்ரீ வைசம்பாயன: உவாச —

ஶ்ருத்வா தர்மாநஶேஷேண பாவனானி ச ஸர்வஶ: ।
யுதிஷ்டிரஶ் ஶாந்தனவம் புநரேவாப்ப்யபாஷத ॥ 7 ॥

வைசம்பாயனர் கூறினார் — தர்மங்களையும் தூய்மைப் படுத்துபவைகளையும் பற்றி ஒன்றும் விடப்படாமல் முழுவதும் கேட்ட யுதிஷ்டிரர் சந்தனுவின் குமாரரான பீஷ்மரை மறுபடி அணுகிக்கேட்டார். (7)

*மஹாபாரதப்போர் முடிந்ததும் தர்மபுத்திரர் ஹஸ்தினாபுரம் சென்று அகண்டமான ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்து கொண்டார். மக்கள் மகிழ்ந்தனர். தன் ஒருவனுக்காகப் பதினெட்டு அக்ஷௌஹிணி ஸைன்யங்கள் அழிந்ததையும் நாதனை இழந்து பெண்களும் சிறுவர்களும் துயருற்றதையும் தர்மபுத்திரர் கண்டு குற்ற உணர்வு மேலிட்டு வருந்தினார். மக்களுக்குத் தான் இழைத்த துரோகம் மிகப் பெரிது. இதற்குக் கழுவாயாகச் செய்வது யாது எனக் கலங்கிக் கண்ணனிடமும் வியாசரிடமும் கேட்டார். அவர்கள் ''யுத்தம் ராஜதர்மம். போரில் வீரர்களின் நாசமும் தர்மபரிபாலனத்திற்காக நடந்ததே. இதனால் அது குற்றமாகாது'' என விளக்கிய பின்னரும் அவர் தெளிவு பெறவில்லை.*

இந்த பாபச் செயலுக்குப் பரிஹாரமாக அவர்கள் கூறிய முறைகளும் தர்மபுத்திரருக்கு ஏற்புடையதாகத் தோன்றவில்லை. குருக்ஷேத்திரத்தில் யுத்த களத்தில் தன் இறுதிக்கு உத்தராயணத்தை எதிர்பார்த்திருந்த பீஷ்மரிடம் கண்ணன் அவரை அழைத்துச் சென்றார்.

தர்மபுத்திரரின் ஐயப்பாடுகளை நீக்கும் வகையில் ராஜ தர்மம், ஆபத் தர்மம், பற்றற்ற நிலையிலும் பற்றுள்ள நிலையிலும் ஆணும் பெண்ணும் வர்ண — ஆசிரம நிலைகளுக்கேற்ப அமைத்துக் கொள்ளவேண்டிய முறைகள், தான தர்மம், பகவத் தர்மம், மோக்ஷ தர்மம் என்று பலவற்றைப் பீஷ்மர் உபதேசித்தார். தர்மபுத்திரருக்குத் தர்மத்தின் பல கோணங்களையும் பற்றி விரிவாக விளக்கி வந்த பீஷ்மர் ஒரு ஞானக்கடல்: சந்தனுவிற்கும் கங்கைக்கும் புதல்வனாகப் பிறந்தவர்; மிக அரிய ஸத்ய விரதத்தால் பீஷ்மர் என்ற சிறப்புப் பெயர் பெற்றவர். தர்மபுத்திரருக்கு அவர் பாட்டனார் ஸ்தானத்தில் இருந்தவர். அந்தச் சலுகையுடன் தர்மபுத்திரர் பீஷ்மரிடம் உபதேசம் கேட்க வாய்ப்பிருந்தது. ஆனால், தர்மபுத்திரரைப்போல் குறையும் நிறைவும் பற்றிப் பகுத்தறிய இயலாத பாமரமக்கள் இத்தகைய ஞானாசிரியரைப் பெறவோ, அவரைப்போல் ஞானாசிரியரிடம் கேட்க வேண்டியதைக் கேட்டுப் பெறவோ வாய்ப்பிராதே! அதனால் பாமரர்கள் விஷயத்தில் அதிக அக்கறைகொண்ட தர்மபுத்திரர் அரசனாகிய தான் அவர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளில் முக்கியமானதாகக் கருதிவாழ்க்கையில் கடைத்தேறு வதற்கான மார்க்கங்களை பீஷ்மரிடம் கேட்டார்.

வாழ்க்கையில் முன்னேறுவதற்கான உபாயங்கள் மூன்று. (1) பாவனமானவை. முன்னேறத் தடையாயிருக்கிற பாபவாஸனைகளை அழிப்பவை. முன் பிறவிகளிலும் இப்பிறவியில் இதற்கு முன்னும் மனிதன் செய்த பல செயல்கள் நன்மை பயக்காதவை. இவை அச்செயல் முடிந்த பின்னரும் மறுபடி நன்மை பயக்காத செயல்களில் மனிதனைத் தூண்டுகிற வாஸனையாக அமைபவை. இவற்றைக் களைவதற்காகன தீர்த்த யாத்திரை, மமகாரத்தை அகற்றவல்ல தானம், இது போன்ற பல செயல்கள் பாவனமானவை. தூய்மைப்படுத்துபவை. இவற்றைப்பற்றி விரிவாகத் தர்மர் பீஷ்மரிடமிருந்து தெரிந்துகொண்டு விட்டார். (ப. 70)

(2) **அப்ப்யுதய தர்மம்.** இம்மையில் வாழ்க்கையை மேம்படச் செய்தல், நன்மை பயக்கத்தக்க நல்லொழுக்கங்கள்; அஹிம்ஸை, ஸத்யம், பிறர் பொருள் நாடாமை, கருணை, அன்பு முதலிய சிறந்த குணங்கள்; மனத்தின் வாஸனைகளாக இவை பதியும்படி செயல் முறையை அமைத்துக்கொண்டு தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் உலகிற்கும் பயன்படுமாறு நெறிகளை வகுத்துக்கொள்ளுதல். இது அப்யுதய தர்மம் எனப்படும்.

(3) **நிச்சிரேயஸ தர்மம்.** பலனை எதிர்பாராத செயல்கள் மூலம் மனத்தூய்மையால் பெற்ற மமதை அகலப் பெற்று ஈசுவரார்ப்பணம் என்ற நோக்குடன் செயலனைத்தையும் அமைத்துக்கொண்டு அகங்காரம் நீங்கப் பெற்றவனாக உத்தமனான ஆசாரியனை நாடி அவன் மூலம் இறைவனையும் ஆத்மாவையும் பற்றிய உண்மை தத்துவ நிலையை அறிந்து ஆராய்ந்து உணர்ந்து பக்தி ஞான மார்க்கங்களால் இம்மையிலும் மறுமையிலும் ஏற்றத்தை அடைவதுடன் அவனருளால் 'இதற்குமேல் நல்லதொன்றில்லை' என்ற வீடுநிலை பெறுதலானது **நிச்சிரேயஸ தர்மம்** எனப்படும். இவைகளைப் பற்றியும் பீஷ்மர் விரிவாக உபதேசித்துள்ளதைக் தர்மர் தெரிந்துகொண்டு விட்டார்.

இவையனைத்தும் மிகுந்த பிரயாசையுடன் கடும் கவனத்துடன் ஆற்ற வேண்டிய செயல் முறைகள். பாமரர் - சாதாரண அறிவு பெற்றவர்களால் கையாள முடியாதவை. பாவனமாயும், அப்யுதய நிச்சிரேயஸ தர்மமாயும் ஆகி, ஆனால் எளிதில் எல்லோரும் கையாளக் கூடியதாயும் உள்ளதொரு உபாயம் இருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்ளவே தர்மபுத்திரர் பீஷ்மரை அணுகிக் கேட்கிறார். (7)

युधिष्ठिर उवाच —

किमेकं दैवतं लोके किं वाऽप्येकं परायणम्।
स्तुवन्तः कं कमर्चन्तः प्राप्नुयुर्मानवाः शुभम्॥ ८॥

யுதிஷ்டிர உவாச —

கிமேகம் தைவதம் லோகே கிம் வாऽப்யேகம் பராயணம்.
ஸ்துவந்த: கம் கமர்ச்சந்த: ப்ராப்னுயுர் மானவா: ஶுபம். 8

**யுதிஷ்டிரர் பேசினார் — சிறந்த ஒரே தெய்வம் எது? அடைவதற்குரிய மேலான நிலை எது? எந்த தெய்வத்தை அவரது குணச் சிறப்புகளைப் புகழ்ந்து பாடியும், அவரது உருவத்தைப்**

**புறத்தே அல்லது மனத்தினுள்ளே பல முறைகளால் வழிபட்டும் மனிதர்கள் மங்களம் பெறுவார்கள்? (8)**

*இந்த சுலோகத்தில் தர்மபுத்திராரது நான்கு கேள்விகள் அமைந்துள்ளன. பரம்பொருள் ஒன்றே. பரம்பொருள் லீலையால் ஏற்றுக்கொள்கிற வடிவங்களும் அவற்றுக்கான பெயர்களும் எண்ணற்றவை. அவற்றில் ஒரு குறிப்பிட்ட வடிவத்தையும் பெயரையும் தனக்கு விருப்பமானது என்று ஸாதகன் ஏற்றுக்கொள்ள வாய்ப்பு உண்டு. ஸாதகன் பெற்றுள்ள மனப்பக்குவத்திற்கேற்றவாறும் ஸாதகனின் விருப்பத்திற் கேற்றவாறும் இறைவன் வடிவும் பெயரும் ஏற்று ஸாதகனின் வழிபாட்டை ஏற்றுக்கொள்ளுகிறூர்.*

*ஒருவர் விரும்புவதை மற்றவர் விரும்பாதிருக்கலாம். இதற்காகவே இறைவன் பேராயிரமும் வடிவாயிரமும் கொண்டுள்ளார். இவற்றில் எது உயர்ந்தது, எது தாழ்ந்தது என்ற சிந்தனைக்கு இடம் இல்லை. எனினும் இறைவனைப் புகழ்ந்து பாடுகிற வேதங்களும் ஆகமங்களும் மற்ற ஏனைய நூல்களும் துதிப்பதற்கேற்ற சில நாமங்களைத் தனிச் சிறப்புள்ளவையாகத் தருகின்றன. அப்பெயர்களுக்குத் திவ்ய நாமங்கள் என்று பெயர். திவ் என்ற வினைச்சொல்லானது எல்லையில்லா விளையாட்டு, வெற்றியில் நாட்டம், ஒளிமிக்கதாக விளங்குதல், ஆனந்தப்படுதல், பெருமிதத்துடனிருத்தல், அழகுடன் துலங்குதல். எங்கும் செல்லுதல் என்ற பொருள்களைக் கொண்டது. இத்தனை சிறப்புகளும் தெய்விகத் தன்மைகள். இவை ஒருங்கே அமைந்தவரை* **தேவன், தேவி, தேவதை, தைவதம்** *என்று குறிப்பிடுவர். அந்த தேவதையின் பெயர்* **'திவ்யம்'**. *அதுவும் இத்தனை சிறப்புகள் உள்ளது. முக்கியமாகத் துதிக்கப்படுகிற தேவதையின் நாமங்களையே தைவதம் என நிருக்தம் கூறுகிறது.*[1]

**லோகம் - வித்யாஸ்தானம்:—** *உண்மை நிலை அறிந்து விளக்கம் தருபவர்களையும் விளக்கம் தருகிற வேதம் முதலிய நூல்களையும் லோகம் எனக் கூறுவர். வேதங்கள் நான்கு; சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்ற ஆறு*

1. यानि नामानि प्राधान्यस्तुतीनां देवतानां तद् दैवतं इत्याचक्षते (यास्क, निरुक्ते)

வேதாங்கங்கள்; மீமாம்ஸை, நியாயம் என்ற இரு தரிசனங்கள், தர்ம சாஸ்திரம், புராணம் இவை பதினான்கும் வித்யா ஸ்தானங்கள். இவை உண்மை நிலை விளக்கம் தருபவைக ளாதலால் **லோகம்**[1] எனப்படும். இவற்றுடன் ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வம், அர்த்த சாஸ்திரம் என்ற நான்கு உபவேதங்களையும் சேர்த்துப் பதினெட்டு **வித்யா ஸ்தானங்கள்.** இவற்றையும் **லோகம்** என்பர். இந்த வித்யாஸ்தானங்கள் தைவதத்தின் பல வடிவங்களையும் பெயர்களையும் பற்றி விளக்குகின்றன. இந்த லோகம் எனும் வித்யாஸ்தானங்களில் கூறப்பட்டுள்ள தைவதங்களில் சிறந்த தைவதம் எது? அந்த தேவதையின் சிறந்த பெயர் எது? இது முதற் கேள்வி.

**பராயணம்** — பரமான அயனம், மேலான வேண்டிய இடம், நிலை, பராயணம் ஆகும். அப்படி மேலான நிலையை அடைவதால் ஏற்படக்கூடிய லாபங்கள் என்ன? எதன் ஆணையை மீறி வாழ முடியாதோ, எதன் ஆணைக்கு உட்பட்டே மனிதன் தன் தன் பணியில் ஈடுபடுகிறானோ, அதுவே பர-அயனமாகும். எதனை உணர்ந்ததும் அறியாமையால் ஏற்பட்ட சிக்கல்கள் நீங்குமோ, ஐயம் நீங்கித் தெளிவு ஏற்படுமோ, முன் வினைகள் தன் துன்புறுத்துகிற சக்தியை இழக்குமோ அதுவே பர-அயனமாகும். எதனை அறிந்த கணத்திலேயே ஆனந்தமே உருவான மோக்ஷம் எனும் பேறு கிட்டுமோ, எதனை அறிந்தவன் பயமடையமாட்டானோ, எதனுள் உணர்வால் புகுந்தவனுக்கு மீண்டும் பிறப்பில்லையோ, எதனை உணர்ந்ததும் அதுவே ஆகிவிடுகிறானோ, எதனைத் தவிர்த்து வேறு கதி அடையவேண்டியதில்லையோ அது ஒன்றே பர-அயனமாகும். இவ்வாறு உபநிடதங்கள் முதலியவை கூறுகின்றன. ஏனைய வித்யா ஸ்தானங்கள் கூறுகின்ற அத்தகைய பராயணம் எது? இது இரண்டாம் கேள்வி.

குணச் சிறப்புள்ளவனின் குணங்களைக் கூறுவது துதியாகும். துதிப்பது மிக எளிய உபாயம். புதிதாக உண்டாக்கிச் சொல்ல வேண்டியதில்லை. இருப்பதைக் கூறுவதில் சிரமமில்லை. இப்படித்

---

1. वनौकसोऽपि सन्तो लोकज्ञा वयम् என்ற காளிதாஸனின் சாகுந்தல வாக்கியத்தில் இந்தப் பொருளில் லோகம் என்ற சொல்லைக் காணலாம். लौकिकस्तु परीक्ष्य वक्ता என்று ஆராய்ந்து உணர்ந்து பேசுவனை லௌகிகன் - லோகத்தைச் சார்ந்தவன் என்பர்.

துதிப்பதை ஏற்று மங்களமான பலன் தரும் தைவதம் எது? இது மூன்றும் கேள்வி.

மனத்தால் தியானத்தால் உருவகப்படுத்திய தெய்வத்தை மனத்தால் அமைத்துக்கொண்ட உபசாரங்களால் வழிபடுவது மானஸிக அர்ச்சனமாகும். திருப்தி தரக்கூடிய வெளிப்படையான பொருள்களால் உபசரித்து வழிபடுவது வெளிப்படையான (பாஹ்ய) அர்ச்சனமாகும். இவ்விரு அர்ச்சனங்களையும் ஏற்று மங்களமான பலன் தரும் தைவதம் எது? இது நான்காம் கேள்வி.

மங்களமான பலன்கள் இரண்டு. (1) இம்மையிலும் மறுமையிலும் விரும்பியதும் இதமானதுமான சுகமான வாழ்க்கை (2) மோக்ஷம் எனும் பிறப்பிறப்பற்ற நித்ய ஆனந்த நிலே.

குரு உபதேசித்த முறை வழுவாமல் நடப்பவர்கள், அறக்கட்டுப்பாட்டிற்கு உட்பட்டவர்கள் - சிஷ்டர்கள். அவர்களது நடைமுறை சிஷ்டாசாரம். சிஷ்டர்களில் சிறந்தவரான தர்மபுத்திரர் அப்படி சிஷ்டர்களில் மிகச் சிறந்த பீஷ்மரிடம் தனது சந்தேகங்களுக்கு விடை எதிர்பார்த்துக் கேட்டார். நாம் விரும்பியதை அடைய உதவுவதும் அதற்கு இன்றியமையாதிருப்பதும் ஸாதனம் அல்லது உபாயம் எனப்படும். (ஸாதனம் - ஸாதித்துத் தருவது. உபாயம் — பலனருகில் அழைத்துச் செல்வது). கடும் உடலுழைப்பை எதிர்பார்ப்பது, மனக்கிலேசம் தருவது, பெரும் உழைப்பிற்குச் சிறிது பயன் தருவது போன்ற குறைகளில்லாததாக உபாயம் இருத்தல் வேண்டும். அத்துடன் பயனைத் தவருமல் அளிப்பது, அபாயமில்லாதது, எளியது, சிறு உழைப்பிற்கு மிகுந்த பலன் தருவது என்ற குணங்கள் மிகுந்திருக்க வேண்டும். அத்தகைய உபாயம் விரும்பத்தக்கது. மற்றும் நாம் எதனை எதிர்பார்க்கிறோமோ அதற்கேற்றவாறு இந்த உபாயம் அமைதலும் அவசியம்.

நாம் எதிர்பார்ப்பது - ஸாதிக்க விரும்புவது உபேயம் -அல்லது ஸாத்தியம் எனப்படும். (உபேயம் - பலனடையத்தக்கது. ஸாத்யம் - சாதிக்கத்தக்கது). மனித சக்திக்கு உட்பட்டவைகளை மனித சக்தியால் அடைய முற்படலாம். ஆனல் அப்படி மனித சக்திக்கு உட்பட்டவை மிகச் சில. மனித சக்திக்கு உட்படாதவை பல. அவற்றை மனித இயல்பிறகு அப்பாற்பட்டதொன்றே தர முடியும். அதனைத் தெய்வம் தேவதை என்கிறோம். மனிதனுக்கு

இயல்பாக அமைகிற செயல்சுதந்திரமின்மை, அறிவுச் சுதந்திர மின்மை முதலியவற்றால் பாதிக்கப்படாதது தெய்வம் — தேவதை என்பர். தேவதைகளிலும் ஏற்றத்தாழ்வு இருக்குமேயாயின், எதனிடம் எல்லாம் அடங்குமோ அந்த ஏக தேவதையை வழிபடுவது — உபேயமாகக் கொள்வது நல்லது. அதன் வழிபாட்டிற்குரிய உபாயங்களை அமைத்துக்கொள்ளுதல் சிறந்தது.

உபாயத்தையும் உபேயத்தையும் பற்றிக் கேட்கும்போது இது யாருக்கு உபாயம்? யாருக்கு உபேயம்? என்பதையும் சிறிது சிந்திக்க நேர்கிறது. உபாயமானது எளியவனுக்கும் எளிதான தாகவும், அந்த உபாயத்தால் பெறவேண்டிய ஸாத்தியமானது பரத்திற்கும் பரமானதுமாக அமைந்துவிட்டால் அந்த உபாயமும் உபேயமும் (ஸாதனமும் ஸாத்தியமும்) எல்லோருக்கும் பொதுவாகிவிடும். இதனைக் கருத்திற்கொண்டே 'மானவா:' என மனிதனாகப் பிறந்தவன் என்ற ஒரு தகுதி மாத்திரம் உள்ளவன் கூட ஈடுபடக்கூடிய உபேயம் எது என்பதை முதல் இரண்டு கேள்விகளால் கேட்டார். அதற்கு இதுகாறும் எளிதெனத் தான் கருதியிருந்த ஸ்தோத்திரம் அர்ச்சனம் என்ற இரு உபாயங்களைக் கொண்டு வழிபடுபவர், எல்லோரும் சிறந்ததெனக் கருதும் மங்களத்தைப் பெற முடியுமா? என்று பின் இரண்டு கேள்விகளால் கேட்டார்.

சிஷ்டர்களான பெரியோர்கள் பலருண்டு. அவர்கள் கையாண்ட வழிபாட்டு முறைகளோ பலப்பல. அவற்றில் எளிய முறைகள் பல. அவை எல்லாவற்றையும் கையாண்டு சிறந்ததைத் தேர்ந்து எடுத்துக்கொள்வதாயின் வாழ்நாள் போதாது. பீஷ்மரிடம் தர்மபுத்திரருக்கு அளவு கடந்த பிரியம். பீஷ்மருக்கும் தர்மபுத்திரரிடம் அளவு கடந்த பிரியம். பீஷ்மர் வெகு காலம் வாழ்ந்தவர். பண்பில் ஊறியவர். அவர் பல பெரியோர்களிடம் பல அறநெறி முறைகளைக் கற்றுத் தன் வாழ்நாட்களில் அதன்படி நடந்திருக்கிறார். அந்த நீண்ட கால அனுபவத்தால் அவர் சிறந்ததென ஒன்றைக் கண்டிருந்தால், அது தனக்கு ஏற்றதென அவர் உணர்ந்திருந்தால், அதனை அன்புமிக்க அவரிடமிருந்து உபதேசமாகப் பெறுவது எளிதாகுமே! அவரும் கபடின்றி அன்புடன் நல்லதைக் கூறுவாரே! என்ற நோக்கில் தர்மபுத்திரர் ஐந்தாவதும் ஆறாவதுமான கேள்விகளைக் கேட்கிறார். (8)

को धर्मः सर्वधर्माणां भवतः परमो मतः।
किं जपन् मुच्यते जन्तुः जन्मसंसारबन्धनात्॥ ९॥

கோ தர்ம: ஸர்வதர்மாணாம் பவத: பரமோ மத:
கிம் ஜபந் முச்யதே ஜந்து: ஜந்மஸம்ஸாரபந்தநாத்॥ 9॥

எல்லா வழிபாட்டு நெறிகளிலும் சிறந்த நெறியாகத் தங்கள் விருப்பிற்கும் கருத்திற்கும் ஏற்றது எது? எதனை ஜபித்துக் கொண்டிருக்கும் மனிதன் பிறப்பால் தொடர்கிற கட்டிலிருந்தும் விடுபடுகிறான்? (9)

பாவனம், அப்ப்யுதயம், நிச்சிரேயஸம் என மூன்று விதமாக *வாழ்வைச் சிறப்பிக்கிற அறநெறிகள் பல கூறப்பட்டுள்ளன. (ப. 54) தொடர்பற்றவையாகிவிட்ட இரண்டை அல்லது பலவற்றை அவற்றின் இயற்கையான தொடர்பையுணர்த்தி இணைத்து அந்த இணைப்பை நிலைக்கச் செய்வதே* தர்மம் *- அறநெறி. அதற்கான வழிகள் பல.* இவற்றில் இறைவனுடன் தொடர்பை - இணைப்பை *நிலைக்கச் செய்பவையே சிறந்த தர்மங்கள். அவையும் பலப்பல. இவற்றில் எது சிறந்ததென்று அறிய முற்பட்ட தர்மபுத்திரர் ''பல்வேறு வழிகளில் அனுபவம் பெற்ற பெரியோர்களிடமிருந்து ஸாரமானவற்றைப் பற்றி அன்புடன் உபதேசம் பெற்றுள்ள தாங்கள் பஹுச்ருதரானபடியாலே ஸாரமறிந்தவர். தங்களுடைய நீண்ட ஆயுட்காலத்தில் ஸாரமான பலவற்றை நடைமுறைக்குக் கொணர்ந்திருப்பீர்கள். அவற்றில் எளிதானதும் பராயணத்தைப் பெற உதவுவதுமான உபாயமான தர்மம் இதுதான் எனக் கண்டிருப்பீர்கள். அன்புப் பெயரனுக்குத் தாங்கள் அதைக் கட்டாயம் உபதேசித்தருள வேண்டும்.''* என்று கேட்டார். இதுவே *தர்மரது ஐந்தாவது கேள்வி.*

*அப்படி அவர் கூறும் எளிய உபாயத்தால் சிறந்த உபேயமான* தேவதையிடமிருந்து *பெற விரும்புவது எது? பிறப்பு என்ற ஒன்றை அடைந்தவர் அனைவரும் 'ஜந்து' ஆவார். தான் பிறந்துள்ளதை அறியாமல் ஒருவன் இருக்க முடியாது. பிறந்ததில் இருந்து தொடங்கி 'ஏன் பிறந்தேன்' என்று நினைத்து வருந்தச் செய்கிற வினைத்தொடரானது, பிறந்ததால் ஏற்பட்ட வினை என்று நினைவுபடுத்திக் கொண்டிருக்கிறது. பிறப்பு என்பது ஸம்ஸாரக்கட்டின் ஒரு முனை. வட்டச்சுழல் வடிவிலுள்ள அந்தக் கட்டின் தொடக்கம் எங்கே? முடிவு எங்கே? என அறிய இயலவில்லை: ஜந்துவிற்குப் பிறப்பு தெரியும். தெரிந்த*

பிறப்பிலிருந்து சுற்றிச் சுற்றிப் பல நிலைகளைக் கடந்து மறுபடி பிறப்பிற்கு வந்தவர்களே அனைவரும். அதனால் பிறப்பே கட்டாகத் தோன்றுகிறது. இந்தக் கட்டிலிருந்தும் விடுபடுவதே கோரக்கூடிய வைகளில் மிகச் சிறந்த விருப்பம் அதனைத்தான் அடையவேண்டும். எதனை ஜபித்தால் அந்தக்கட்டு விடுபடும்? என்பதே ஆறும் கேள்வி. ஜபத்தால் இந்தக் கட்டு விடுபடுமாயின் கோரக் கூடிய மற்ற பலன்களை எளிதில் அடைய முடியும் என்று நம்பலாம்.

'பிறந்தவர்' அனைவருமே ஜபத்திலும் ஸ்தோத்திரத்திலும் வழிபாட்டு முறைகளிலும் ஈடுபடலாம். அவை எளிதானவையே! அவற்றிலும் ஜபம் மிக எளியதல்லவா! புறச்சாதனங்களின் எதிர் பார்த்தலின்றி எளிதில் அமையக் கூடியது. அதனால் எதனை ஜபிப்பது? எதனை ஜபித்தால் பிறப்புத்தொடர் ஒழியும்? இந்தக் கேள்விக்கு விடை தெரிந்தால் போதுமானது என்ற தர்மபுத்திரரின் ஆதுரம் இந்தக் கடைசிக் கேள்வியில் ஒலிக்கிறது.

ஜபம் பல வகைகளில் அமையும். பிறர் நன்கு அறியும் வண்ணம் உச்சாரணப் பிழையின்றி உரக்கச் சொல்வது வாசிகம். வேத மந்திரங்களை இப்படித்தான் ஜபிப்பர். உதடுகள் அசைவதைக் கொண்டு எதையோ சொல்லிக் கொண்டிருப்பதை உணரும்படியும். சொல்கிற சொல்லின் ஒலி வடிவம் பிறர் காதிற்படாமலும் சொல்வது உபாம்சு ஜபம். சொல்லும் அதன் பகுதிகளான எழுத்துக்களும் வைகரி என்ற கடைவடிவை அடையாமல் சொல்லும் எழுத்தும் மனத்தால் உருவகப்படுத்தப்பட்டுச் சிந்திக்கப் பெறுமேயாயின் அது மானஸஜபம். வாசிகத்தைவிட உபாம்சு பலன் மிக்கது. உபாம்சுவைவிட மானஸம் சக்தி மிக்கது. பழகப் பழக மூன்றும் பாமரனுக்கும் எளிதானவை. (9)

श्रीभीष्मः उवाच—

जगत्प्रभुं देवदेवं अनन्तं पुरुषोत्तमम्।
स्तुवन्नामसहस्रेण पुरुषः सततोत्थितः॥ १० ॥

तमेव चार्चयन् नित्यं भक्त्या पुरुषमव्ययम्।
ध्यायन् स्तुवन् नमस्यंश्च यजमानस्तमेव च॥ ११ ॥

अनादिनिधनं विष्णुं सर्वलोकमहेश्वरम्।
लोकाध्यक्षं स्तुवन् नित्यं सर्वदुःखातिगो भवेत्॥ १२ ॥

ब्रह्मण्यं सर्वधर्मज्ञं लोकानां कीर्तिवर्धनम्।
लोकनाथं महद् भूतं सर्वभूतभवोद्भवम्॥ १३ ॥

ஸ்ரீபீஷ்ம உவாச —
ஜகத்ப்ரபும் தேவதேவம் அநந்தம் புருஷோத்தமம்.
ஸ்துவந் நாமஸஹஸ்ரேண புருஷ: ஸததோத்த்தித:॥ 10 ॥

தமேவ சார்ச்சயந் நித்யம் பக்த்யா புருஷமவ்யயம்.
த்யாயந் ஸ்துவந் நமஸ்யம்ஶ்ச யஜமாநஸ் தமேவ ச॥ 11 ॥

அநாதிநிதநம் விஷ்ணும் ஸர்வலோகமஹேஶ்வரம்.
லோகாத்த்யக்ஷம் ஸ்துவந் நித்யம் ஸர்வதுக்காதிகோ பவேத்॥ 12 ॥

ப்ரஹ்மண்யம் ஸர்வதர்மஜ்ஞும் லோகாநாம் கீர்த்திவர்த்தனம்.
லோகநாதம் மஹத்பூதம் ஸர்வபூதபவோத்பவம்॥ 13 ॥

பீஷ்மர் விடை தருகிறார் — உலகிற்கு உடையவரும், தேவர்களுக்கும் தேவரும், இடம் பொருள் காலம் இவற்றில் அடங்காதவரும், காரியப்பொருள், காரணப்பொருள் இவற்றைவிட மேம்பட்டவருமான இறைவனை இடைவிடாத முயற்சியுள்ளவன் பேராயிரத்தால் புகழ்ந்து பாட எல்லாவித துக்கங்களையும் கடந்துவிடுவான். அழிவும் மாறுபாடும் அற்று நீங்காதிருக்கும் அவரையே தினமும் பக்தியுடன் வழிபட்டும் தியானித்தும் துதித்தும் வணங்கியும் அவரைக் குறித்து வேள்வி புரிந்தும் வருபவன் எல்லா துக்கங்களையும் கடந்துவிடுவான். பிரும்மனுக்கும் அந்தணனுக்கும் வேதத்திற்கும் தவத்திற்கும் இதம் தருபவரும் எல்லா அற நெறிகளையும் உணர்ந்தவரும் மக்களின் புகழை வளர்ப்பவரும் உலகின் நாதனும் எல்லாப் பொருள்களுக்கும் மேலாகப் பெரிதாகச் சிறந்து விளங்கும் உண்மையான பொருளும், எல்லாப் பொருள்களின் இருக்கைக்கும் தோற்றுவாயுமானவரை தினமும் துதிப்பவன் எல்லா துக்கங்களையும் கடந்துவிடுவான் (10-13).

*'ஸர்வதுக்காதிகோ பவேத்' 'எல்லா துக்கங்களையும் கடந்துவிடுவான்' என்று பன்னிரண்டாவது சுலோகத்திலுள்ள பகுதி மற்ற மூன்று சுலோகங்களுடனும் இணைகிறது.*

ஆழ்ந்த அறிவும் நெறி தவருத வாழ்க்கை முறையும் ஸத்தியத்திலிருந்து சிறிதும் வழுவாத நேர்மையும் கொண்டவர் பீஷ்மர் — பயங்கரமானவர். அவரது இயற்பெயர் தேவ விரதர். காரணப் பெயர் பீஷ்மர். மெய்ப்பொருள் எந்நிலையிலிருந்தாலும் அதனைக் காண்கின்ற பேராற்றல் படைத்தவர். மனத்தையோ உடலையோ கெடுப்பவை எதுவாயினும் அவை அவரிடம் அணுகா. கண்ணனது எளிமை அவரது ஸத்ய திருஷ்டியை மறைத்ததில்லை. ராஜஸூய யாகத்தில் கண்ணன் வரவேற்பாளராக இருந்து, வந்திருந்தவர்களின் பாதங்களை அலம்புகிற பொறுப்பை மனமுவந்து தானே வலிய ஏற்ருர். எளியவனுக்கு எளியவனாகத் தன்னைக் கண்ணன் காட்டிக்கொண்டபோதும் யாக முடிவில் முதல் மரியாதை யாருக்கு என்ற கேள்வி எழும்போது கண்ணனைக் காட்டியவர் பீஷ்மரே. ஸத்யத்தைக் கடைபிடித்ததன் பயனாக, ஸத்யமான பரம்பொருளைக் காண்பது அவருக்கு எளிதாயிற்று. பரம்பொருளை உணர்ந்தவன் எல்லாமறிந்தவன் —ஸர்வஜ்ஞன் ஆகிருன். அப்படி ஸர்வஜ்ஞரான பீஷ்மர் தர்மபுத்திரரது கேள்விகளுக்கு விடை அளிக்கிருர். கடைசிக் கேள்விக்கு முதலில் விடை தருகிருர். தர்ம புத்திரர் எதனை ஜபித்தால் ஸம்ஸாரதுக்கம் அகலும் என்று கேட்டார். दुः-खं ஞான-கர்ம இந்திரியங்களையும் மனத்தையும் கிலேசப்படுத்துவது துக்கம். (खं—பொறிகள், கர்மமேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள், மனம் என்ற பதினொன்று. ख—என்பது வெளி-துவாரம். இந்தப் பதினொரு வெளிகள் வழியே ஜீவன் வெளிச் சென்று ஸுக துக்கங்களைப் பெறுகிருன்). பிறப்பும் இறப்பும் துக்க வரிசைகளின் முன் எல்லையும் பின் எல்லையுமாகும். அதனுட்பட்டவையே எல்லா துக்கங்களும். இவை அனைத்தையும் கடக்க ஒரே உபாயம் பின் கூறவிருக்கும் ஸஹஸ்ர நாமத்தால் துதிப்பதொன்றே. (ஸ்துவந் நாமஸஹஸ்ரேண)

யார் இப்படித் துதிப்பதற்குத் தகுதி உள்ளவர்? ''புருஷ: ஸததோத்தித:'' என்பது விடை. ஆணோ, பெண்ணோ, தனக்கு எது நன்மை என்பதை உணர்ந்து அதற்கு வழி யாது என அறிந்து திட்டமிட்டுச் செயல் புரிந்து லட்சியத்தை அடைபவர் **புருஷன்.** அவரது செயல் பௌருஷம். மன உறுதியும் லட்சிய நோக்கும் செயல் திறனும் கொண்டு செயல்படும் ஜீவன் புருஷன். (புருஷார்த்தம் என்பது இத்தகைய புருஷன் நாடும் பொருளாகும். பெண்களுக்கும் அறம் பொருள் இன்பம் வீடு எல்லாம் விரும்பக் கூடியவைதானே? அதனால் புருஷன் என்ருல் ஆண் மட்டும் எனக்

கொள்வதில்லை) புருஷனாக இருப்பதுடன் எப்போதும் முயன்று கொண்டும் இருக்கவேண்டும்: (ஸததோத்தித:) "**உத்தாதவ்யம் ஜாக்ருதவ்யம் யோக்தவ்யம் பூதிகர்மஸு. பவிஷ்யதீத்யேவ மன: க்ருத்வா ஸததமவ்யதை:**" என்ற சான்றோர் உபதேசப்படி கடும் முயற்சியும் விழிப்பும் நற்பணிகளில் ஈடுபாடும், முயற்சி திருவினை ஆக்கும் என்ற நம்பிக்கையும் தளர்ச்சியின்மையும் கொண்டவனே புருஷன். அவன் துக்கத்தைக் கடப்பான்.

ஸஹஸ்ரநாமத்தால் யாரைத் துதிப்பது? விஷ்ணும் என்பது விடை. பரம்பொருளான விஷ்ணுவை, இன்னார் இப்பெயர் உள்ளவர் எனக் குறிப்பிட முடிவதில்லை. இன்ன வடிவில் இருப்பவர், இந்த இடத்தில் இருப்பவர். இந்த நேரத்தில் இருப்பவர் என அடையாளம் காட்ட முடிவதில்லை. இந்தப் பொருளாய், இன்ன வடிவில் இந்த இடத்தில் இருப்பவர் என்று அடையாளம் காட்ட முடியுமானால் மற்ற வடிவில் மற்ற பொருளாக மற்ற இடத்தில் இருக்கமாட்டார் என்றாகும். இப்படி முடிவு காட்ட முடியாத அவர் **அநந்தர்**. (நா. 659, 886) இது எப்படி இயலும்? அவர் எங்கும் பரவி நிற்பவர், **விஷ்ணு** (நா. 2, 258, 650) அப்படிப் பரவி நிற்பதால் மற்றவைகளால் பாதிக்கப் பெறுபவரும் அல்ல. கணத்திற்குக் கணம் தேய்வுறும் காரிய நிலையிலுள்ள உலகம், இதற்குக் காரணமாயுள்ள மூல ப்ரகிருதி வரை உள்ள மூல தத்துவங்கள் இவ்விரண்டுமாயிருந்து கொண்டே இவற்றிற்கு மேம்பட்டவராயும் இருப்பவர்-**புருஷோத்தமர்**. (நா. 24) நமக்கும் அவருக்கும் என்ன தொடர்பு? சராசரம் அடங்கிய இந்த உலகிற்கு அவர் உடையவர்; அவர் ஒருவரே இதற்கு எஜமானர் — ஸ்வாமி, அவர் இஷ்டப்படி இதனை இயக்குபவர். **ஜகத் ப்ரபு**. (நா. 4,290) உலகைத் தன் விருப்பப்படி இயக்குபவர்கள் இந்திரன் சூர்யன் எனப் பலர் உளரே? இவர்கள் தேவர்கள். உலகை இயக்குகிற வல்லமை படைத்தவர் தாம். இவர்களுக்கும் இச்சக்தியை அளித்து இவர்களையும் இயக்குபவர் அவர் - **தேவ தேவர்**. (நா. 492) அவரைப் பேராயிரம் கொண்டு புகழ்ந்து பாடத் துக்கத்தைக் கடப்பான். துக்கத்திற்கப்பால் எல்லையற்ற சாந்தமான ஆனந்தத்தில் ஆழ்ந்து ஆனந்தமாகவே இருப்பான். இதனால் பீஷ்மர் தர்மபுத்திரரது 6வது கேள்விக்கு விடை தந்து விட்டார்.

எப்போதும் பேராயிரம் கொண்டு துதி செய்வதற்கு இன்றியமையாதது அவரிடம் கொண்டுள்ள பக்தி. பக்தியைக்

கொண்டுதான் அவரை வழிபட இயலும். அவர் அழியாதவர்: நம்மை விட்டகலாதவர். அவ்யயர் (நா. 19) அவரை வெளிப்படையாகத் தினமும் வழிபடலாம். நித்யம் அர்ச்சயந். மனத்தில் இடைவிடாமல் நினைந்துருகி அமிருத வெள்ளம் போல் இனிக்கும் அவரை நினைவிற்கொண்டு வழிபடலாம். த்யாயந். இவ்விரு வகை வழிபாட்டிற்கும் துணைபுரியக் கூடியது ஸ்துதி -நமஸ்காரம் என இரண்டு. மனத்தில் நிறைந்துள்ள இறைவனை நாத்தழதழக்க வாயாரப் பாடுவதும், மனமடங்கத் தானென்ற நினை வடங்க உடலடங்க வணங்குவதும். இவற்றை எப்போதும் செய்துகொண்டு வரலாம். ஸ்துவந் நமஸ்யன். தனக்காக வேள்வி புரிபவன் - யஜமாந: தனக்காகப் பிறரைக்கொண்டு வேள்விபோல் இவ்வழிபாட்டை நடத்தி அதன் மூலம் தான் வழிபடுகிறவனும் யஜமாந: இப்படி மனத்தால் தியானித்தும் வாக்கால் துதித்தும் உடலால் வணங்கியும் தம்மிடம் உள்ளவைகளைத் தியாகம் செய்து வேள்வி புரிந்தும் வழிபடுவதே மங்களம் பெறுவதற்கு ஏற்றது என்று நான்காவது கேள்விக்கு விடை தருகிறார் பீஷ்மர்.

யாரைத் துதித்து மங்களம் பெறலாம் என்ற மூன்றாவது கேள்விக்கு பீஷ்மர் விடை தருகிறார். துதிக்கப் பெறுபவர் நாம் துதிக்கும்போதெல்லாம் அங்கிருப்பவராக இருத்தல் அவசியம். பிறந்து இருந்து வளர்ந்து வளர்ச்சி நின்று மாறித் தேய்ந்து மறை பவரே உலகில் உள்ள அனைவரும். அதற்குக் காரணம் அவர்கள் முன் இல்லாமல் இருந்து பின் ஒரு நாள் தோன்றுவதே. தோன்றியது அனைத்தும் மறையும். தோற்றத்திற்கும் மறைவிற்கும் இடையே பல பரிணாமங்கள். இறைவன் தோற்றமும் மறைவுமில்லாதவர், அதனால் பரிணாமம் அடையாதவர், காலத்திற்கு உட்படாதவர், அநாதிநிதநர், (நா. 42), எங்கும் நிரம்பி நிற்பவர் தேசத்திற்கு உட்படாதவர். விஷ்ணு. தோன்றியதனைத்தும் பொறிகளுக்குப் புலனாகுபவை. அதனால் லோகம், அனைத்து லோகங்களுக்கும் தலைவர்கள் ஆதிகாரிக புருஷர்களான தேவர்கள், அவர்கள் மூலம் ஜகந் நியமனம் செய்பவர் (ப. 6) ஸர்வலோக மஹேச்வரர். (நா. 739, 750). அந்த உலக ஆட்சியைப் பிறரைக்கொண்டு பார்வையிடாமல் தனக்கு இயல்பான ஸர்வஜ்ஞ சக்தி கொண்டு தாமே நேரிடையாகப் பார்ப்பவர், கண்காணிப்பவர், அதனால் நமது நிலை நன்கு அறிந்தவர் லோகாத்த்யக்ஷர், (நா. 133), அவரைத் தினமும் துதிப்பதால் எல்லா துக்கங்களையும் கடந்துவிடுவான். துக்கங்களைக்

கடப்பதே மங்களத்தை அடைவது தான். துக்கமற்ற நிலேயே மங்களம் தான்.

துதிக்கபடுபவரைப் பற்றி மேலும் விளக்குகிறுர் — மங்களத்தைப் பெறுவதற்கு உள்ள ஒரே உபாயம் மங்களத்தைத் துதிப்பதுதான். 'ப்ரும்ம தத் மங்களம் பரம்' பரம்பொருளான அதுவே உயர்ந்த மங்களம். அந்தப் பரம்பொருளிடமிருந்து இந்த உலகைப் பலவாகத் தோன்றச் செய்த பிரும்மா, அவர் உலகமேம்பாட்டிற்காக வகுத்தத் தவ முறைகள், அவற்றை உபதேசிக்கும் வேதங்கள், அவற்றைப் பின்பற்றி முறை வழுவாமல் தவமியற்றுகிற அந்தணன் இவர்களும் பிரும்மமே. (ப. 51) அதனுல் இவர் மங்களமே. அனைவருக்கும் இறைவனே துணையாக நின்று இதம் புரிகிறுர். அதனுல் ப்ரும்மண்யர். (நா. 661) அவர் வழிபாட்டு முறைகள் அனைத்தையும் உணர்ந்தவர். ஸர்வ தர்மஜ்ஞர் (நா. 404) தானே சக்தியாக எல்லாவற்றிலும் உட்புகுந்து உலகம் இத்தனை சிறப்பும் பெருமையும் பெற உதவுபவர். லோகாநாம் கீர்த்திவர்த்தநர்... புகழுக்குடையவன் மறைந்து விட்டாலும் புகழ் மறையாது வளரச் செய்பவர். எல்லாவற்றிற்கும் தன்னையே நாடும்படி உலகிற்கு உணர்த்தி நாடுபவற்றை எல்லாம் அளிப்பவர் லோகநாதர். (நா. 734) பெரிதிற்கும் பெரிதாயும் மற்றதெல்லாவற்றிற்கும் இருக்கையைத் தரும் உண்மை இருப்பாகவும் இருப்பவர். பெரியவரானபடியால் நமது சிறுமை உணராதவர், எளிதில் மகிழ்பவர். மஹத் பூதம். (நா. 805) தோன்றும் பொருளனைத்திற்கும் வாழ்க்கைத் தொடரை அமைத்துக் கொடுப்பவர் ஸர்வபூத பவோத்பவர். (நா. 9) இவரைத் துதித்து மங்களம் பெறலாம். (10-13)

एष मे सर्वधर्माणां धर्मोऽधिकतमो मतः ।
यद्भक्त्या पुण्डरीकाक्षं स्तवैरर्चेन्नरः सदा ॥ १४ ॥

ஏஷ மே ஸர்வதர்மாணும் தர்மோ (அ)திகதமோ மத:
யத் பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்ச்சேந் நர: ஸதா. ॥ 14 ॥

**பக்தியுடன் புண்டரிகாக்ஷனைத் துதிகள் மூலம் மனிதன் எப்போதும் வழிபடுவதே எல்லாத் தர்மங்களிலும் மிகச் சிறந்த தர்மம் என்பது என் கருத்து (14)**

இதைச் செய், அதைச் செய் என்று வேதமும் ஏனைய அற நூல்களும், பெரியோர்களும் கூறும் தர்மங்கள் பலப்பல.

பாவனம். அப்யுதயம் நிச்ரேயஸம் என்று பலவகைப்பட்டவை அவற்றில் பகவானை அவரது குணங்களைப் பாடுவதன்மூலம் வழிபடுவது மிகச் சிறந்தது. அவர் புண்டரீகாக்ஷர். *(நா. 111)* எப்போதும் அன்பால் மலர்ந்து திருவுள்ளத்தின் மகிழ்ச்சியை வெளிக்காட்டுகிற தாமரை போன்ற அழகிய கண்கள் உள்ளவர். நமது இதயமாகிய தாமரையிலேயே நோக்குள்ளவர். அதனுள் உறைபவர். நம் இதயத்தில் பக்திஎனும் அன்பால் ஏற்படும் மலர்ச்சியை உணர்பவர். அதனுல் பக்தி ததும்புகிற துதி என்பதே சிறந்த வழிபாடாகிறது. நமது இதயக்கோயிலில் குடிகொண்டுள்ள இறைவனுக்கு வெளிப் படையான வழிபாடு தேவையில்லை. துதி என்பது சிறந்த எளிய ஸாதனம். *(ப. 15)* தங்களுக்குப் பிடித்த வழிபாட்டு முறை எது என்ற ஐந்தாவது கேள்விக்கு இது விடையாகிறது. *(14)*

परमं यो महत्तेजः परमं यो महत्तपः।
परमं यो महद्ब्रह्म परमं यः परायणम्॥ १५॥

पवित्राणां पवित्रं यो मङ्गलानां च मङ्गलम्।
दैवतं देवतानां च भूतानां योऽव्ययः पिता॥ १६॥

यतः सर्वाणि भूतानि भवन्त्यादियुगागमे।
यस्मिंश्च प्रलयं यान्ति पुनरेव युगक्षये॥ १७॥

तस्य लोकप्रधानस्य जगन्नाथस्य भूपते।
विष्णोर्नामसहस्रं मे शृणु पापभयापहम्॥ १८॥

பரமம் யோ மஹத் தேஜ: பரமம் யோ மஹத் தப:.
பரமம் யோ மஹத் ப்ரம்ஹ பரமம் ய: பராயணம்.॥ 15॥

பவித்ராணும் பவித்ரம் யோ மங்களாநாம் ச மங்களம்.
தைவதம் தேவதாநாம் ச பூதாநாம் யோ (அ)வ்யய: பிதா॥ 16॥

யத: ஸர்வாணி பூதாநி பவந்த்யாதியுகாகமே.
யஸ்மிம்ஶ்ச ப்ரளயம் யாந்தி புநரேவ யுகக்ஷயே॥ 17॥

தஸ்ய லோகப்ரதாநஸ்ய ஜகந்நாதஸ்ய பூபதே
விஷ்ணோர் நாமஸஹஸ்ரம் மே ஶ்ருணு பாபபயாபஹம்॥ 18॥

அரசே! எவர் மிகச் சிறந்த பேரொளியோ, எவர் மிகச் சிறந்த பேராளுமையோ, எவர் பெரிதிலும் பெரிதான பிரும்மமோ, எவர் மிகச் சிறந்த நிலேயோ, எவர் தூயவைகளுக்கும் தூயவரோ, மங்களங்களுக்கும் மங்களமோ, தேவதைகளுக்கும் தேவரோ, எவர் உயிரினம் அனைத்திற்கும் அவர்களை விட்டகலாத தந்தையோ, படைப்பு தொடங்கிய யுக ஆரம்பத்தில் எவரிடமிருந்து உயிரினம் அனைத்தும் உண்டாகின்றனவோ, மறுபடி யுக முடிவில் எவரிடம் ஒடுங்குகின்றனவோ அத்தகைய உலகிற்கு இன்றியமையாதவரும் உலகின் நாதருமான விஷ்ணுவின் பேராயிரத்தை - பாபத்தின் பயத்தைப் போக்கவல்ல பேராயிரத்தை என்னிடமிருந்து கேட்பாய் (15-18).

*நான்கு சுலோகங்களும் ஒரே வாக்கியத் தொடராக அமைந்துள்ளன. இவற்றில் முதல் இரண்டு கேள்விகளுக்குள்ள விடையைப் பீஷ்மர் தருகிறார். அடைய வேண்டிய சிறந்த நிலே எது? என்பது இரண்டாம் கேள்வி. உலகின் தலேவரான விஷ்ணுவே என்பது விடை. எதனுள் மற்றதெல்லாம் அடங்குகின்றனவோ, எதனது உதவியின்றி மற்றவை வாழாதோ, எதனது ஆணை மற்றதைக் கட்டுப்படுத்துமோ அது பெரிது. விஷ்ணு அப்படிப் பெரிதானவர்.*

*உலகெல்லாவற்றையும் ஒளியால் விளக்குபவையான ஒளி மண்டலங்கள் பல உண்டு. நாம் அறிந்தவை ஸூர்யனும் சந்திரனும். சந்திரன் ஸூரியனிடமிருந்து ஒளி பெறுகிறான். சந்திரனைவிட ஸூர்யன் பெரியவன். நாம் காணும் சூரியனைப்போல் பல ஸூர்ய மண்டலங்கள் இருப்பதாக அறிஞர்கள் கூறுகிறார்கள். சந்திரனுக்கு ஸூர்யன் ஒளி தருவதுபோல் எல்லா ஸூர்ய மண்டலங்களுக்கும் ஒளி தருபவர் ஒருவர் இருக்கக்கூடுமே? அவர் யார்? அந்தப் பரம்பொருள் பேரொளி, அந்த ஒளியிடமிருந்து ஒளியூட்டப்பெற்ற ஸூர்யன் உலகை ஒளிமயமாக்குகிறான்.* 'யேந ஸூர்யஸ் தபதி தேஜஸேத்த:' *என்று வேதம் அந்தப் பேரொளியை நமக்கு அறிமுகப் படுத்துகிறது. சூரியனோ, சந்திரனோ நக்ஷத்திரங்கள் முதலியனவோ அந்தப் பேரொளியின் எதிரில் இருப்பதே தெரியாமல் மங்கி நிற்கும்.* 'ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்' *அதன் ஒளியை அகத்தில் கொண்டே இவை வெளியில் ஒளி மண்டலங்களாகத் திகழ்கின்றன. அந்தப் பேரொளியே பரம்பொருள்.* பரமம் யோ மஹத்தேஜ: *(நா. 673).*

நாம் வாழ்கிற உலகையும் அதற்கு அப்பால் உள்ளதையும் பலர் ஆளுகின்றனர். அவர்களது ஆளுமைக்கு உட்பட்டே அனைத்தும் இயங்குகின்றன. இந்த ஈசுவரத் தன்மை அல்லது ஆளுமை பெற்றவர் அனைவரும் எவருக்கு அடங்கி நிற்கின்றனரோ அவரே பேராளுமை பெற்றவர். மஹேச்வரன் (மஹா ஈச்வரன்) பேராண்டவன், ஆண்டவன் என்று இவரைக் குறிப்பிடுகிறோம். அரசன் நாட்டை ஆளுவதைப்போல் வாயுவும் சூர்யனும் அக்னியும் இந்திரனும் யமனும் ஏனைய ஆதிகாரிக தேவதைகளும் தம் தம் அதிகாரவரம்பிற்கு உட்பட்டு இவ்வுலகையே ஆள்கின்றனர். அவர்களும் அந்தப் பரம்பொருளிடம் உள்ள பயத்தால் அவரிடம் அடங்கி நிற்பவர்களாகத் தம் தமது செயல்களில் ஒழுங்காக ஈடுபடுகின்றனர். **"பீஷா (அ)ஸ்மாத் வாத: பவதே. பீஷோதேதி ஸூர்ய:, பீஷா (அ)ஸ்மாதக்நிஶ்சேந்த்ரஶ்ச ம்ருத்யுர் தாவதி பஞ்சம இதி"** என்று தைத்திரீய உபநிடதம் இந்த ஈசுவரத் தன்மையை விளக்குகிறது. பரம்பொருளின் ஈசுவரத் தன்மை - தபஸ் சக்தி - பேராளுமை எந்தக் கட்டிற்கும் அடங்காதது. **'பரமம் யோ மஹத் தப:'** (நா. 122)

ஆகாயத்தினுள் இந்த உலகங்கள் அனைத்தும் அடங்கி நிற்கின்றன. ஆகாயம் மஹத்தானது. அந்த ஆகாயமும் அதன் காரணமான அந்த பிரும்மத்தினுள் அடங்கும். பிரும்மம் பெரிதிலும் பெரிது. மஹத். பெரிதாகப் பெரிதாக அதனை முழுவதும் கண்டறிய இயலாது. ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் ஆனந்தம் என்றெல்லாம் அடைமொழி கொடுத்து அதனை வேதம் ஒருவாறு விளக்குகிறது. எங்கும் நீக்கமற நிரம்பியிருப்பது, தன்னை உணர்ந்தவரையும் அவ்வாறு பருக்கச் செய்வது. **பரமம் யோ மஹத் ப்ரும்ஹ.**

பாதுகாப்பும் அமைதியும் தருகிற இடத்தை நாடிச் செல்வது இயற்கை. அத்தகைய இடத்தைத் தேடி அடைந்த பிறகு அங்கு இருக்க முடியாமல் மறுபடி முன் துன்புற்ற இடத்திற்கே வரநேருமானல் அது பெரும் துன்பம். துன்பத்தின் நிழலே படாததும், பாதுகாப்பும் அமைதியும் தருவதும், சென்றடைந்த பிறகு திரும்பத் துன்பச் சூழலுக்குள் திருப்பிவிடாததுமான ஓரிடம் இருக்குமாயின் அது எது என்பதுதான் தர்மபுத்திரரின் இரண்டாவது கேள்வி: அதற்கு விடையாகவே பேரொளியும் பேராண்மையும் பெரிதிலும் பெரிதுமான பிரும்மமே அத்தகைய இடமெனப் பீஷ்மர் விடை தருகிறார்.

அவர் பரமமான பராயணம் - மிகச் சிறந்த மேலான அடைய வேண்டிய இடம் - நிலே. பிரும்மமே பராயணம் என உபநிடதம் முதலியவை சுட்டிக் காட்டுகின்றன. (ப. 57) அதன் ஆளுமையை மீறி எவரும் வாழ முடியாது. அதன் ஆணைக்கு உட்பட்டே எல்லாம் இயங்குகின்றன. அதனை உணர்ந்ததும் அறியாமையால் ஏற்பட்ட சிடுக்குகளும் சிக்கல்களும் தாமே அகன்றுவிடுகின்றன; ஐயங்கள் நீங்கித் தெளிவு ஏற்படுகிறது; முன் வினைகள் வலிவிழக்கின்றன. ஆனந்தமே உருவான வீடுபேறு கிட்டுகின்றது. அதனை உணர்ந்தவன் எதற்கும் பயப்படமாட்டான். அதனுள் உணர்வால் புகுந்தவனுக்கு மீண்டும் பிறப்பில்லை. அதனை உணர்ந்ததும் அதுவேயாகிவிடுகிறான். அதனால் அதைத் தவிர வேறு அடைய வேண்டிய இடம்- நிலே - பேறு கிடையாது. அதுவே பர-அயனம் - பராயணம். பரமம் ய: பராயணம். (15)

தர்மபுத்திரர் கெட்ட செயல்களின் பின் விளைவுகளைப் பற்றியே அதிக அளவில் பயப்படுகிறார். கெட்ட செயல் புரிந்ததும் அதன் உடன் வரக்கூடிய விளைவான துன்பத்தை அனுபவிக்க நேர்கிறது. துன்பத்தைத் தருவதுடன் அது நிற்பதில்லை. மறுபடி கெட்ட செயல்கள் புரியும் வெறியாக உள் மனத்தில் அது பதிந்து துர்வாஸனையாகி அவ்வப்போது தலைதூக்கி மறுபடி கெட்ட செயல் புரியத் தூண்டுகிறது. அதுவும் உள்ளேயுள்ள துர்வாஸனைக்கு வலிவு ஊட்டுகிறது. இதனைத்தான் பாபம் என்பர். ஒருக்கால் கெட்ட செயல்களைத் தவிர்க்க முடிந்தாலும் உள்ளத்தின் அடித்தளத்திலுள்ள கெட்டவாஸனையை எளிதில் போக்க முடியாது. இதற்கான உபாயம் — 1. கெட்ட வாஸனைக்கு எதிரான நல் வாஸனைகளை உட்புகுத்தலாம். 2. கெட்ட வாஸனை தன் வலிவைக் காட்ட முடியாத அளவில் நல்வாஸனைகளை அதிகமாக்கிக் கொள்ளலாம். 3. கெட்ட வாஸனை அகலுமாறு மனத்தையும் உடலையும் தானே வருத்திக்கொண்டு கழுவாய் தேடலாம். இவற்றைப் பாவனம் - பவித்ரம் - பாபம் போக்கும் செயல்கள் - தூய்மை தரும் செயல்கள் என்பர். காவிரி கங்கை முதலிய நதிகளில் அவற்றின் புனிதத் தன்மையை உணர்ந்து தன் பாபம் நீங்கக் கோரி நீராடுதல், திவ்ய க்ஷேத்திரங்களில் சென்று வசித்தல் முதலியவை இத்தகையப் பவித்ரச் செயல்களாகும். காவிரி முதலிய ஆறுகளும் திவ்ய க்ஷேத்திரங்களும் புனிதமாக - பாபம் நீக்குபவையாக ஆனதற்கு இறைவன் அவற்றுள் நிறைந்திருப்பதே காரணம். இறைவன் தூயவர், அவரே எல்லாவற்றிற்கும் தூய்மையைத் தருபவர். தூய்மை

உள்ளவற்றிலும் தூய்மை தருபவனவற்றிலும் உள்ள தூய்மை இறைவனிடமிருந்து பெற்றதே. அவரை நினைப்பதும் திவ்ய மங்கள விக்ரஹங்களைக் காண்பதும், பாடுவதும், பூஜிப்பதும், தியானம் செய்வதும், வணங்குவதும், பாப வாஸனைகளை அகற்றும்; தூய்மை தரும். **பவித்ராணும் பவித்ரம் ய:** (நா, 62, 118, 811) (ப. 57)

எவரைத் துதித்தும் வழிபட்டும் மங்களம் பெறலாம் என்று 3-4வது கேள்விகள். சுபம் - மங்களமானது: சுகமானது 'பிரும்ம தந் மங்களம் விது:, பரம்பொருளே பெரும் மங்களம், மங்களமானவைகளாக பூ, அக்ஷதை, தயிர், பசு, ஸுமங்கலி, மஞ்சள், நெல்பொறி, கண்ணாடி என்று சிலவற்றைக் கொண்டாடுகிறோம். அவற்றிலுள்ள மங்களத் தன்மை இறைவனிடமிருந்து வந்தது. மங்களப் பொருள்களுக்கெல்லாம் மங்களத்தன்மை அளிப்பவர், அந்த மங்களமானவர் இறைவனே. **மங்களாநாம் ச மங்களம்.**

இறைவன் மங்களத்தை விளையாட்டாக நிகழ்த்துவார். அவர் தேவர்களுக்கெல்லாம் தேவர். எல்லையில்லாத விளையாட்டு, வெற்றியில் நாட்டம், ஒளிமிக்கதாக விளங்குதல், ஆனந்தப்படுதல், பெருமிதத்துடனிருத்தல், அழகுடன் துலங்குதல், எங்கும் தடையின்றிச் செல்லுதல் என்றுள்ள தெய்வத் தன்மைகள் அனைத்தும் தேவ தேவரான இவரிடமிருந்து பெற்றவையே. இவரையே தேவர்களும் முக்கிய வழிபாட்டிற்கும் துதிக்கும் உரியவராகக் கொண்டாடுவர். **தைவதம் தேவதாநாம் ச** (நா. 42) (ப. 56)

தேவர்களுக்கும் தேவரான அவரிடம் மனிதன் எப்படி நெருங்குவது? உயிரினம், அனைத்திற்கும் அவரே தந்தை. உலகியலில் பிறக்கின்ற ஒவ்வொரு ஜீவனுக்கும் பாதுகாப்பும் வளர்ச்சியும் அமைத்துக் கொடுப்பவன் (பாதி) பிதா - தந்தை. அந்தத் தந்தை ஜீவன் வளர்ச்சி பெறுதிருக்கும்போதே பாதுகாப்பு பெறுதிருக்கும்போதே மறைந்துவிடக்கூடும். வாழ்நாள் முழுவதும் கூட இருப்பார் என்று கூறுவதற்கில்லை. இறைவனாகிய தந்தை எந்நேரமும் நீங்காதவர், அழியாதவர். அதனால் எப்போதும் அணைத்துக் காப்பவர். **பூதாநாம் யோ அவ்யய: பிதா.** (நா. 13, 969)

தந்தையாகிக் கருணையுடன் அணைத்துக் காப்பது ஏன்? பகவான், பிரும்மாவைத் தோற்றுவித்து அவர் மூலம் முன்னர்

தன்னுள் ஒடுங்கியிருந்த உலகை மீண்டும் தோன்றச் செய்தார். இதுவரை பிரிந்து காரண நிலையிலிருந்த பூத ஸூக்ஷ்மங்களும் குணங்களும் கூடி உயிரினங்களாயின. அதுவே ஆதியுக ஆகமம், அதுவரை காரண நிலையிலிருந்த அவை அவரிடமே அடங்கியிருந்தன. அவரிடமிருந்து யுகத்தொடக்கத்தில் வெளியாயின. **யத: ஸர்வாணி பூதாநி பவந்தி ஆதியுகாகமே.** காலம் பல வரைகளைத் தாண்டி உலகம் மறையும் நாள் வந்தது. உலகம் காரணப் பொருளாக மாறி அவரிடமே ஒடுங்கிற்று. **யஸ்மிந் ச ப்ரளயம் யாந்தி புந: ஏவ யுகக்ஷயே.** அவரிடம் இருந்து தோன்றி அவரிடம் மறைந்தவை, நடுவில் அவரிடமிருந்து விலகினவா? அவர்தான் அகலாதவராயிற்றே. (அவ்யய:) அதனால் ஒவ்வோர் அணுவிலும் நிறைந்த அவரையே தனது அதிஷ்டானப் பொருளாகக்கொண்டு பலவாறாக விளங்கின. அதனால் இடையிலும் அவரிடமே இருந்தன. (16-17)

உலகின் தோற்றமும் நடுவில் இருப்பும் மறைவும் இவரிடமே. இவரே தந்தையாகிக் காப்பவர். இவரே மங்களம், இவரே தூய்மைப்படுத்துபவர். இவரே அடைய வேண்டிய பேரிடம், இவரே பரம்பொருள், இவரே ஆண்டவன், இவரே பேரொளி, அதனால் இவரே உலகின் ஒரே தெய்வம். **தஸ்ய லோகப்ரதாநஸ்ய.** இவரையே உலகம் அண்டி நிற்கிறது. **ஜகந்நாதஸ்ய.** அந்த எங்கும் எப்போதும் நிறைந்த விஷ்ணுவின் பேராயிரத்தைக் கூறுகிறேன், கேட்பாய் என்று முதல் கேள்விக்கு விடை அளித்தார் பீஷ்மர்.

பரம்பொருள் என்பது, தான் தன்னுடையது என்ற குறிப்பில்லாதது - அதிலிருந்தும் வேறுபட்ட பொருளின்மையால், மற்றொன்றின் உடைமையாகப் பரம்பொருள் ஆக முடியாது. அதற்கும் வேறு உடைமைகள் இல்லை. குணச் சிறப்போ செயல் சிறப்போ ஜாதிச் சிறப்போ காட்டி வேறுபடுத்த முடியாது. நம் ஒவ்வொருவருக்கும் நம்மைத் தனித்தவராகக் காட்டிக்கொள்ள பிறரிட்டதாகவோ நாமே இட்டுக் கொண்டதாகவோ உள்ள பெயர்கள் உண்டு. பெயருக்கும் பெயர்ச்சொல்லின் பொருளுக்கும் தொடர்பின்றி நம்மேல் ஏறி உட்கார்ந்திருக்கிற பெயர்கள் இவை. (ரூடி - இடுகுறிப்பெயர்). அப்படிப் பரதத்வத்திற்குப் பெயரிட யாரும் இல்லை. தனக்குப் பெயரிட்டுத் தனித்துக் காட்டிக்கொள்ள அவருக்குத் தேவையுமில்லை ஆனால் தானே லீலையால் நம்மிடம் உள்ள கருணை காரணமாகப் பல வடிவங்களை ஏற்றும், பல லீலைகளைப் புரிந்தும்,வடிவிற்கும்

*செயலுக்கும் பொருந்துமாறு பொருளுள்ள பல பெயர்களைக் கௌணமான பெயர்களை அவர் ஏற்றுள்ளார். லீலையால் ஏற்ற வடிவங்களாலோ பெயர்களாலோ அவரது பரதத்வ நிலையில் யாதொரு வேறுபாடுமில்லை. அனைத்துப் பெயர்களும் வடிவங்களும் லீலைகளும் அவரிடம் விரோதமின்றி நன்கு பொருந்துகின்றன. அவரே எல்லாமாதலால் எந்த எழுத்தும் சொல்லும் வடிவமும் செயலும் அவரையே குறிப்பிடுகின்றன. (18)*

**यानि नामानि गौणानि विख्यातानि महात्मनः।**
**ऋषिभिः परिगीतानि तानि वक्ष्यामि भूतये॥ १९॥**

**யாநி நாமாநி கௌணாநி விக்க்யாதாநி மஹாத்மந:**
**ருஷிபி: பரிகீதாநி தாநி வக்ஷ்யாமி பூதயே. 19**

அந்தப் பெருமானின் பெயர்கள் குணச் சிறப்பு கொண்டு ஏற்பட்டவை. உலகில் வழக்கில் உள்ளவை. முற்றும் உணர்ந்த முனிவர்களால் உணர்ந்து பாடப் பெற்றவை. நலம் பெற அவற்றைக் கூறுவேன். (19)

*ஆத்மாவானவர் எங்கும் நிறைந்தவர். எல்லாவற்றிற்கும் ஆதாரம், எல்லாவற்றின் உட்புகுந்து ஜீவனுகி விஷய அனுபவம் பெறுபவர், அவர் மஹாத்மா. அவரது பெயர்கள், அவர் லீலையால் ஏற்ற வடிவங்களின் நிற அழகு, சொல்லழகு, செயலழகு முதலிய குணச் சிறப்புகளை வெளிப்படுத்துபவை —* **கௌணாநி.** *அவை லீலைகளால் கவரப்பட்ட மக்களின் வழக்கிலே தொடர்ந்து வருபவை -* **விக்க்யாதாநி.** *ருஷிகள் தத்துவங்களை ஆராய்வதிலேயே ஈடுபட்டவர்கள். நுட்பமறிந்தவர்கள். (ப. 49) பரம ரஹஸ்யமாயிருந்த தெய்விக சக்திமிக்கச் சொல்லமைப்புக்களை - மந்திரங்களைக் கண்டு உணர்ந்தவர்கள். மனித இனத்தின் மேம்பாட்டிலேயே கருத்துள்ள ஆப்தர்கள். அவர்கள் தாம் உணர்ந்த ரஹஸ்யமான பகவந் நாமங்களைச் சுவைத்து ஆனந்த மேலீட்டால் உரக்கப் பாடிப் புகழ்ந்து அவற்றைப் பலரறியச் செய்தவர்கள். அவர்கள் தேர்ந்தெடுத்துப் பாடிய சக்திமிக்க நாமங்கள்,* **ருஷிபி: பரிகீதாநி.** *அவற்றைச் சொல்லச் சொல்ல எல்லா நலன்களும் தானே கிட்டும், உமக்கும் அது கிட்டட்டும் என்றே சொல்கிறேன்.* **வக்ஷ்யாமி பூதயே.** *அவரே எல்லா நலன்களுமாவார். அவரே எல்லா நலன்களையும் அருள்பவர், (நா. 599, 630). (19)*

ஆயிரம் பெயர்கள். இதுவரை பீஷ்மரின் முன்னுரை. இனி ஆயிரம் நாமங்கள் தொடர்கின்றன. சிவன், ஸ்கந்தன், ஆதித்யன், சந்திரன் முதலிய வேறு தேவதைகளுக்குரிய நாமங்கள் இவற்றினுள் அடங்குகின்றன. எல்லாம் அந்தப் பரம்பொருளே யாதலால் தனித்தனி தேவதையைக் குறிப்பிடுவதாக இங்குகொள்ளத்தகாது. விஷ்ணு: அநந்த: அஜ: முதலிய சில சொற்கள் அதே உருவில் 2-3 தடவை கூறப்படுகின்றன. அவை பல பொருள்கள் உள்ளவையாதலால் பொருள்கொள்ளும் முறையை இடத்திற்கு இடம் வேறுபடுத்திக் கொள்ள முடிமாகையால் தனித் தனி நாமங்களே. 'ஸ்ரீபதி:' 'மாதவ:' முதலிய ஒரே பொருளுள்ளவையும், வேறு சொல்லமைப்பு கொண்டவையுமான சில நாமங்கள் உண்டு. சொற்கள் வெவ்வேறாக இருப்பதாலே அவை தனித்தவை எனக் கொள்ளத்தகும். அவையெல்லாம் பற்பல நிலைகளை விளக்குபவையாயினும் அவை ஒரே தேவதையான விஷ்ணு பரமாத்மாவையே குறிப்பிடுகின்றன. ஆக இந்த ஆயிரம் நாமங்களும் அவருடையதே.

## நாமாவளியின் பாராயண முறை

நாமங்களின் வரிசை - நாமாவளி. பரம் அயநம் - சிறந்த வழி, ஒரே வழி. அப்படிச் சிறந்த வழி என நம்பி அந்த வழியையே கடைபிடித்தல் பாராயணமாகும். அதனால் (பார அயனம் - கரை ஏறுதல்) கடைத்தேறலாம். இந்த நாமபாராயணத்திற்கு இரண்டு வழிகள் உண்டு. 1. நியாஸத்துடன் கூடியது, 2. நியாஸமில்லாதது. ஸ்தோத்திரத்தை மந்திரமாகக் குருமுகமாக உபதேசம் பெற்றவர் நியாஸங்களுடன் செய்வர். ஸ்தோத்திரமாக உபதேசம் பெற்றவர் நியாஸமின்றி குரு, சந்தஸ், தேவதை, பீஜம், சக்தி, ஹ்ருதயம், விநியோகம் என்ற ஏழு விஷயங்களைப் பெயரளவில் சொல்வர்.

நியாஸம் என்பது - மந்திரத்தின் தேவதையையும் அதன் அங்க தேவதைகளையும் மந்திரஜபம் செய்பவன் தன் உடலின் ஒவ்வொரு பகுதியிலும் இருப்பதாக பாவனை செய்து, அந்தப் பகுதிகளைத் தொட்டு, இந்தப் பூதவுடலும் ஸூக்ஷ்ம சரீரமான பொறிகள் மனம் முதலியதும் அந்த தேவதையாகவே மாறிவிட்டதாகக் கருதித் தெய்வ சக்தியைத் தன்னுள் ஏற்படுத்திக்கொள்வதாகும். நியாஸம் - பதிப்பித்தல், நிலைக்கும்படி வைத்தல்.

*மனனத்தால் ஸாதகனைக் காப்பவை மந்திரங்களாகும். குரு உபதேசித்த தத்துவத்தை அடிக்கடி ஆழ்ந்து சிந்தித்தலும், சிந்தனையின்போது ஏற்படும் ஐயங்களையும் விபரீதக் கருத்துக்களையும் யுக்திகளால் நீக்கித் தத்துவத்தை ஐயந்திரிபின்றி உணர்ந்து, தாரையாக அதே சிந்தனையில் நீடித்திருத்தலும் மனன மாகும். மனனத்தால் காப்பது, (மநநாத் த்ராயதே) மந்த்ரம் (ப. 15) மந்திரங்கள் பலவகை. ஓர் அக்ஷரம் உள்ளவை பிண்டம். இரண்டு அக்ஷரங்கள் உள்ளவை கர்த்தரீ. மூன்று முதல் ஒன்பதுவரை அக்ஷரங்கள் கொண்டது பீஜம். 10-20 அக்ஷரங்கள் கொண்டது மந்திரம். 20-க்கும் மேற்பட்ட அக்ஷரங்கொண்டது மாலா மந்திரம். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் மாலா மந்திரமாகும். மந்திரங்களின் மாலை. மாலையில் பல ரத்தினங்கள் வரிசையாக அமைந்துள்ளன. மாலையிலுள்ள ஒவ்வொரு மணியும் ஒவ்வொரு அக்ஷரமும் ரத்தினமாகும். பாராயணம் செய்பவர்களின விருப்பத்தைத் தரவல்லது. இந்த மாலாமந்திரத்தை நியாஸங்களின்றி நியாஸ தேவதைகளை மட்டும் நினைவில் கொள்வது என்ற முறைக்காக அமைந்த சுலோகங்கள் இவை.*

ऋषिर्नाम्नां सहस्रस्य[1] वेदव्यासो महामुनिः ।
छन्दोऽनुष्टुप् तथा देवो भगवान् देवकीसुतः ॥ २० ॥

अमृतांशूद्भवो बीजं शक्तिर्देवकिनन्दनः ।
त्रिसामा हृदयं तस्य शान्त्यर्थे विनियुज्यते ॥ २१ ॥

विष्णुं जिष्णुं महाविष्णुं प्रभविष्णुं महेश्वरम् ।
अनेकरूपं दैत्यान्तं[2] नमामि पुरुषोत्तमम् ॥ २२ ॥

[1]ருஷிர் நாம்நாம் ஸஹஸ்ரஸ்ய வேதவ்யாஸோ மஹாமுநி:
சந்தோ (அ)னுஷ்டுப் ததா தேவோ பகவான் தேவகீ ஸுத: 20

அம்ருதாம்ஶூத்பவோ பீஜம் ஶக்திர் தேவகி நந்தந:
த்ரிஸாமா ஹ்ருதயம் தஸ்ய ஶாந்த்யர்த்தே விநியுஜ்யதே. 21

விஷ்ணும் ஜிஷ்ணும் மஹாவிஷ்ணும் ப்ரபவிஷ்ணும் மஹேஶ்வரம்.
[2]அநேகரூபம் தைத்யாந்தம் நமாமி புருஷோத்தமம். 22

1. विष्णोर्नामसहस्रस्य *விஷ்ணோர்நாம ஸஹஸ்ரஸ்ய (பா) பொருளில் மாற்றமில்லை.*

2. अनेकरूप दैत्यान्तं *அநேகருபதைத்யாந்தம். (பா) பலவடிவங்களில் வந்த அசுரர்களை மாய்த்தவர்.*

இந்தப் பேராயிரத்திற்கும் வேதவியாஸ மஹா முனியானவர் ருஷி. அனுஷ்டுப் என்பது சந்தஸ். தேவகியின் குமாரன் தேவதை. அம்ருதாம்சூத்பவ: என்ற நாமம் பீஜம். தேவகீநந்தன: என்ற நாமம் சக்தி. த்ரிஸாமா எனும் நாமம் ஹ்ருதயம். அமைதிபெறும் பொருட்டு (இந்தப் பாராயணம்) பயன்படுத்தப்படுகின்றது. எங்கும் நிரம்பியவரும், வெல்வதையே வழக்கமாகக் கொண்டவரும், எல்லாம் வல்லவரும், பெருந் தேவரும், பல வடிவுகளுள்ளவரும், அசுரர்களுக்கு முடிவைத் தருபவரும், புருஷோத்தமருமான மஹாவிஷ்ணுவை வணங்குகிறேன் (20-22).

*ருஷி - மந்திரங்களை முதலில் கண்டுபிடித்தவர். மந்திரங்கள் அனாதி. அவைகளைக் கண்டறிந்து அவைகளின் சக்தியை அனுபவத்தால் உணர்ந்து உலக நன்மைக்காக வெளியிட்டவர். அவர் வேதவியாஸர் என்ற பெரும் முனிவர். சந்தஸ் என்பது சொல்லமைப்பு. அதுவும் தெய்விக சக்தி மிக்கதே. இந்த ஸஹஸ்ர நாமம் அனுஷ்டுப் எனும் சந்தஸில் அமைந்தது. 32 அக்ஷரங்கள் கொண்ட அமைப்பு இது. நான்கு பாதங்கள், ஒவ்வொரு பாதத்திலும் எட்டு அக்ஷரங்கள். இந்த ஸ்தோத்திரத்தால் துதிக்கப்படுபவர் தேவதை. அவர் மஹாவிஷ்ணு ஆயினும் இங்கு பீஷ்மர் உபதேசிக்கும்போது பக்கத்தில் அமர்ந்து அதனைப் பயனுள்ளதாக்க அருள்புரிந்துவரும் பகவான் கண்ணனே தேவதையாகக் கொள்ளப்படுகிறார்.*

*மந்திரம் என்பது மரம் போன்று பலன்தரும் விரிந்த சக்தி வடிவம். இதன் விதையாக இதன் சூட்சும சக்தி அனைத்தையும் தன்னுள் அடக்கிவைத்துள்ள சொல்வடிவம் - பீஜம் எனப்படும். அம்ருதாம்சூத்பவ: என்று 283-வது நாமம் பீஜமாகிறது. தேவகீ நந்தந: என்ற 989-வது நாமம் அந்த பீஜத்தில் அடங்கியுள்ள சக்தியாகிறது. அந்த சக்தி முக்கியமாக உலவுமிடம் ஹ்ருதயம். அது த்ரிஸாமா எனும் 574-வது நாமம். (சில மந்திரமுறைகளில் ஹ்ருதயம் என்பதற்குப் பதிலாக கீலகம் என்ற நியாஸ அமைப்பு உண்டு. தேவையின்றி வேறு இடத்தில் வீணே அந்த சக்தி பரவாமல் அதனைக் கட்ட உதவும் முளை, அதனை உள்ளே வைத்துப் பூட்டும் பூட்டு கீலகமாகும்.)*

*எதற்காக இந்த ஜபத்தைச் செய்கிறோம் என்ற குறிக்கோள் விநியோகம். இந்த ஸஹஸ்ர நாமத்தின் தேவதையைப் பின் வருமாறு உருவகப்படுத்திக்கொண்டு தியானம் செய்கிறோம். அந்த தேவதை ஸ்ரீ மஹாவிஷ்ணு. அவர் அநேக ரூபர்-*

விச்வரூபர். எல்லா வடிவங்களிலும், தோன்றும் பொருள்கள் அனைத்தின் வடிவிலும் தோன்றுபவர். இதுதான் அவர் வடிவம் என அறுதியிட்டுக் கூற முடியாது. எல்லா வடிவங்களிலும் தோன்றுவது எங்கும் நிரம்பியுள்ள விஷ்ணுவிற்கு எளிது. அவர் வெற்றிவீரராகவே எப்போதும் இருப்பவர். எல்லாம் வல்லவர். தேவதேவர். தீயசக்திகளை அழிப்பவர். இவரே துதிக்கு உரியவர். அவரை வணங்குகிறோம்.

இந்த மூன்று சுலோகங்களை மட்டும் கூறி 'விச்வம் விஷ்ணுர் வஷட்கார:' எனத் தொடங்கலாம். இது லகுநியாஸம். இந்த மூன்று சுலோகங்களும் மஹாபாரதத்தில் இல்லாதவை. ஸம்பிரதாயத்தில் வந்தவை. (ஸம்பிரதாயம் என்பது உபதேச முறையில் ஒருவர் மனமுவந்து அளித்ததை வாழையடி வழியாக அந்தப் பரம்பரையினர் வழுவாமல் பின்பற்றி வருவதாகும்)

லகுநியாஸத்தைவிட விரிவான நியாஸமுறை உண்டு. இதனையும் நியாஸ முறைப்படி அந்த அந்த அங்கங்களைத் தொடாமல் வாயால் கூறுவதுடன் நிற்பது வழக்கம். பகவானின் நாமங்களே இந்த நியாஸங்களுக்கு உரிய மந்திரங்களாகின்றன.

பொதுவாக மந்திர ஜபத்துக்குரிய நியாஸ முறைகளில் 28 அங்கங்கள் - ருஷிநியாஸம், சந்தஸ் நியாஸம், தேவதா நியாஸம், பீஜ நியாஸம், சக்தி நியாஸம், கீலக நியாஸம், விநியோக நியாஸம், கர நியாஸம் (ஆறு), அங்க நியாஸம் (ஆறு,) திக்பந்தம், தியானம், தத்துவ பஞ்சபூஜை (ஐந்து), திக்விமோகம், ஸமர்ப்பணம் என. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் இந்த மந்திர ஜபமுறை பூர்ணமாகக் கையாளப்படுவதில்லை. பொதுமுறைப்படி அதனை அமைத்துச் சொல்லும் முறை பின்னர் தரப்பட்டுள்ளது. இன்று வழக்கிலுள்ள முறை லகு நியாஸத்தைக் காட்டிலும் வேறுபட்டது. அது பின்வருமாறு:

अस्य श्रीविष्णुसहस्रनामस्तोत्र महामन्त्रस्य, श्रीवेदव्यासो भगवान् ऋषिः। अनुष्टुप् छन्दः। श्रीमहाविष्णुः परमात्मा श्रीमान्नारायणो देवता। अमृतांशूद्भवो भानुः इति बीजम्। देवकीनन्दनः स्रष्टेति शक्तिः। उद्भवः क्षोभणो देवः इति परमो मन्त्रः। शङ्खभृन्नन्दकी चक्रीति कीलकम्। शार्ङ्गधन्वा गदाधर इत्यस्त्रम्। रथाङ्गपाणिरक्षोभ्य इति नेत्रम्। त्रिसामा सामगः सामेति कवचम्।

आनन्दं परब्रह्मेति योनिः। ऋतुः सुदर्शनः काल इति दिग्बन्धः। श्रीविश्वरूपः इति ध्यानम्। [1]श्रीमहाविष्णुप्रीत्यर्थे सहस्रनामजपे विनियोगः। (२३)

அஸ்ய ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாம ஸ்தோத்ர மஹா மந்த்ரஸ்ய, ஸ்ரீ வேதவ்யாஸோ பகவான் ருஷி:. அனுஷ்டுப் சந்த:. ஸ்ரீ மஹாவிஷ்ணு: பரமாத்மா ஸ்ரீமாந் நாராயணோ தேவதா. அம்ருதாம்ஶூத்பவோ பானுரிதி பீஜம். தேவகீநந்தந: ஸ்ரஷ்டேதி ஶக்தி:. உத்பவ: க்ஷோபணோ தேவ: இதி பரமோ மந்த்ர:. ஶங்கப்ருந்நந்தகீ சக்ரீதி கீலகம். ஶார்ங்கதந்வா கதாதர: இத்யஸ்த்ரம். ரதாங்கபாணிரக்ஷோப்ய: இதி நேத்ரம். த்ரிஸாமா ஸாமக: ஸாமேதி கவசம். ஆநந்தம் பரப்ரம்ஹேதி யோநி:. ருதுஸ்ஸுதர்ஶந: கால: இதி திக்பந்த:. ஸ்ரீ விஶ்வரூப இதி த்யானம் [1]ஸ்ரீமஹாவிஷ்ணு ப்ரீத்யர்த்தே ஸஹஸ்ர நாம ஜபே விநியோக: (23)

இந்த விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் என்ற மஹா மந்திரத்திற்கு பகவான் ஸ்ரீ வேத வியாஸர் ருஷி. அனுஷ்டுப் எனும் சந்தஸ், மஹாவிஷ்ணுவாகிய பரம்பொருள் ஸ்ரீமந் நாராயணன் தேவதை. அம்ருதாம்ஶூத்பவ: பானு: என்ற நாமங்கள் பீஜம், தேவகீநந்தந: ஸ்ரஷ்டா என்ற நாமங்கள் சக்தி, உத்பவ: க்ஷோபண: தேவ: என்ற நாமங்கள் பரமமான மந்திரம். சங்கப்ருத் நந்தகீ சக்ரீ என்ற நாமங்கள் கீலகம், சார்ங்கதன்வா கதாதர: என்பது அஸ்திரம். ரதாங்கபாணி: அக்ஷோப்ய: என்ற நாமங்கள் நேத்திரம். த்ரிஸாமா ஸாமக: ஸாம என்பது கவசம். ஆனந்தம் பரப்ரம்ஹ என்பது யோநி. ருது: ஸுதர்சன: கால: என்று திக்பந்தம். ஸ்ரீவிச்வரூப: என்று தியானம். ஸ்ரீ மஹாவிஷ்ணுவிற்கு பிரியமாகும் பொருட்டு இந்த ஸஹஸ்ரநாம ஜபம் செய்வதே பயன். (ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் கைங்கரியமாக அமையும் ஸஹஸ்ரநாம ஜபம் செய்வதே பயன்)

*மந்திரம், ருஷி, சந்தஸ், தேவதை, பீஜம், சக்தி. கீலகம், விநியோகம் இவை விளக்கப்பட்டுள்ளன (ப. 77) மந்திரம் என்பதே ஹ்ருதயம். மந்திர சக்திக்கெதிராக வெளியிலுள்ள கெட்ட எண்ண அலைகள் நம்மை விட்டகலும்படி பாதுகாப்பு தருவது அஸ்திரம். மந்திர சக்தியால் நமது இரு கண்களையும் கண்களுக்கிடையே புருவ மத்தியில் அமைந்துள்ள ஆஜ்ஞா சக்கிரத்தையும் துலக்கி தேவதா சக்தியை உணரத்*

1. श्रीमहाविष्णुकैंकर्यरूपे *ஸ்ரீ மஹா விஷ்ணு கைங்கர்ய ரூபே(பா)*

தக்கவைகளாக்குவது நேத்திரம். தெய்வீக சக்திக்கெதிராக வெளியிலுள்ள பூத சக்திகள் நம்மைத் தாக்காதவாறு மந்திர சக்தியால் பூத உடலுக்குப் பாதுகாப்பளிப்பது கவசம். இந்த மந்திர சக்தியின் தோற்றுவாயான குண்டலினீ சக்தியின் மூலமான மூலாதாரம் யோநி:. நாம் ஜபம் செய்யும் வரை நம்முள் சேர்ந்துகொண்டிருக்கும் மந்திர சக்தி சிதறுதிருக்குமாறும் நம்மை விட்டகலாமல் இருக்குமாறும் நம்மைச் சுற்றிப் பாதுகாப்பளிப்பது திக்பந்தம். ஜபம் முடிந்தவுடன் இதுவரை இப்படிப் பாதுகாத்த தேவதா சக்திகளுக்கு விடையளிப்பது திக்விமோகம். (23)

ध्यानम्—

क्षीरोदन्वत्प्रदेशे शुचिमणिविलसत्सैकते मौक्तिकानां
मालाक्लृप्तासनस्थः स्फटिकमणिनिभैर्मौक्तिकैर्मण्डिताङ्गः।

शुभ्रैरभ्रैरदभ्रैरुपरिविरचितैर् मुक्तपीयूषवर्षैः
आनन्दी नः पुनीयादरिनलिनगदाशङ्खपाणिर् मुकुन्दः ॥ २४ ॥

த்யாணம்—

க்ஷீரோதந்வத்ப்ரதேஶே ஶுசிமணிவிலஸத்ஸைகதே
மௌக்திகாநாம்
மாலாக்லுப்தாஸநஸ்த்த: ஸ்ப்படிகமணிநிபைர்
மௌக்திகைர் மண்டிதாங்க:
ஶுப்ப்ரைரப்ப்ரைரதப்ப்ரைருபரிவிரசிதைர்
முக்தபீயூஷவர்ஷை:
ஆநந்தீ ந: புநீயாதரிநளி நகதாஶங்க்கபாணிர்
முகுந்த: ॥ 24 ॥

தூய ஒளியுள்ள ரத்தினங்கள்போன்று அழகுற்ற மணல்பரப்புள்ள திருப்பாற்கடலில் முத்துமாலைகளாலான ஆஸனத்தில் அமர்ந்தவரும், ஸ்படிகமணி போன்ற முத்துக்களாலான அணிகளால் அலங்கரிக்கப் பெற்ற திருமேனி உள்ளவரும், தனது திவ்ய ஆஸனத்தின் மேற்பாகமாக அமைந்துள்ள அமுதமழை சொரிந்து வெளுத்துள்ள தூய மேகங்களால் ஆனந்திப்பவரும், சக்கிரம், தாமரைப்பூ, கதை, இவைகளைக் கையில் கொண்டவருமான முகுந்தன் நம்மைத் தூயவராக ஆக்குவாராக.

சுத்த ஸத்துவ குணம் பரப்பும் சூழலிடையே அமர்ந்துள்ள பகவானை இதனால் தியானம் செய்கிறோம். அமுதத்தின் உற்பத்தித் தலமான திருப்பாற்கடல். பால் ஒன்றைத் தவிர வேறொன்றும் காணப்படாத இடம். அதன் கரையில் ஒளிமிக்கதும் ஒளி மயமானதுமான ரத்னக் கற்களாலான மணற்பரப்பு. திருப்பாற்கடலின் அமுத நீரையே சுமந்து சென்று வானில் நின்று அமுத மழையாகப் பொழிந்து செய்ய வேண்டியதைச் செய்த மனக்களிப்பால் வெளுத்து வானில் நிற்கிற வெண்மேகம் பகவானின் ஆஸனத்தின் மேல் மேற்கட்டியாக - விதானமாக அமைந்துள்ள பாங்கு. இதனிடையே கடலின் வெண்ணிற அலைகளின் மேல் வெண்முத்துச் சரங்களால் அமைந்த திவ்ய ஆஸனம். அதில் அமர்ந்துள்ள பகவான் ஆனந்தமே வடிவானவர். முத்தாலான அணிகள் அவரது திருமேனியை அலங்கரிக்கின்றன. ஒவ்வொரு முத்தும் ஸ்படிக மணி போல் முற்றிப் பழுத்துச் சாயலற்று ஒளிவிடுபவை. மனஸ்தத்துவமான சக்கிரத்தையும் அஹங்கார தத்துவமான சங்கத்தையும் புத்தி தத்துவமான கதையையும் ஆனந்த தத்துவமான தாமரையையும் கைகளில் ஏந்தி எப்போதும் பாதுகாப்பளிக்கச் சித்தமாயிருக்கும் திருக்கோலம். முக்திப்பேறு அளிக்கவெனவே ஏற்ற இந்த முகுந்தனது திருக்கோலம் நமது அகக்கண்களின் முன் தோன்றி நம் மனத்தைத் தூய்மைப்படுத்தி அதனைத் தன் நித்ய வாஸஸ்தானமாக இறைவன் ஆக்கிக்கொள்ளவிருப்பதைத் தியானத்தின் மூலம் உணர்ந்து அந்த ஆனந்த வெள்ளம் நம்முள் பாய்வதை உணர்வோம். திருப்பாற்கடல், ரத்தினங்கள், முத்துச்சரங்கள், ஆனந்தியாயும் முகுந்தனாயும் உள்ள பகவான் என ஒவ்வொன்றும் ஸ்ரீ விஷ்ணுவாகிய பரதத்துவத்தின் பூர்ணத் தன்மையை உணர்த்து பவை. அந்தப் பூர்ணரே நம் உள்ளமெங்கும் நிறைந்திருப்பவராகத் தியானிப்போம்.

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தால் துதிக்கப் பெறுகிற தேவதையான மஹாவிஷ்ணுவின் தியானம் செய்வதற்கான வடிவை 'விஷ்ணும் ஜிஷ்ணும்' என்று தொடங்கும் 22வது சுலோகத்தில் சுருக்கமாக உருவகப்படுத்தியுள்ளார்கள். இதனை விரிவாக 'க்ஷீரோதன்வத்ப்ரதேசே' என்ற சுலோகத்திலிருந்து தொடங்கி 8 சுலோகங்களில் உருவகப்படுத்துகிறார்கள். விஷ்ணுவிற்கே உரித்தான கார்மேக வண்ணத்து மேனி. பீதாம்பரம், சேஷசயனம் முதலிய நிறங்களின் சாயை சிறிதுமின்றி ஸர்வ சுக்லமெனும்படியான ஓர் வடிவம் தியானத்திற்காகக் கொள்ளப்பெறுகிறது. ஸ்ரீமத் பாகவதத்தில் ருஷபயோகி சரித்திரத்தில் (5, 3, 20) 'சுக்லயா தநுவா அவததார' என்ற குறிப்பு உண்டு. 'சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம்'

*என்ற சுலோகத்தால் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை தியானிப்பவர்களும் வெண்ணிற ஆடை உடுத்தியவராக, சந்திரனது நிறம் கொண்டவராகத் தியானிப்பர். இந்த சுத்த ஸத்துவமூர்த்தியே மாயையால் லோக ஸ்ருஷ்டி ஸங்கல்பத்துடன் பலவாகத் தோன்றுகிற விச்வரூபராக விராட் - ஹிரண்யகர்ப்ப - ஈச்வர ஸ்வரூபம் எடுத்ததை இனி உருவகப்படுத்தித் தருகிறார்கள், இதுவே விச்வம் என்ற முதல் நாமத்தால் விளக்கப்பெறுகிற வடிவம்.*

भूः पादौ यस्य नाभिर्वियदसुरनिलश्चन्द्रसूर्यौ च नेत्रे
कर्णावाशाः शिरो द्यौर्मुखमपि दहनो यस्य [1]वास्तेयमब्धिः।
अन्तस्स्थं यस्य विश्वं सुरनरखगगोभोगिगन्धर्वदैत्यैः
चित्रं रंरम्यते तं त्रिभुवनवपुषं विष्णुमीशं नमामि॥ २५ ॥
ओं नमो भगवते वासुदेवाय।

பூ: பாதௌ யஸ்ய நாபிர்வியதஸுரநிலச்
சந்த்ர ஸூர்யௌ ச நேத்ரே
கர்ணாவாசாஸ் சிரோ த்யௌர்,
முகமபி தஹநோ யஸ்ய [1]வாஸ்தேயமப்த்தி:
அந்தஸ்ஸ்த்தம் யஸ்ய விச்வம்
ஸுரநர கககோபோகி கந்தர்வதைத்யை:
சித்ரம் ரம்ரம்யதே தம் த்ரிபுவநவபுஷம்
விஷ்ணுமீசம் நமாமி.
ஓம் நமோ பகவதே வாஸுதேவாய

எவருக்கு பூமி இருகால்களோ, ஆகாசம் தொப்புள் பகுதியோ, வாயு பிராணவாயுவோ, சந்திரனும் ஸூர்யனும் இரு கண்களோ, திக்குகள் காதுகளோ, வானுலகம் தலையோ, அக்னி வாயோ, கடல் சிறுநீரகமோ (சிறு நீரோ) எவருடைய உடலினுள் அமைந்த இவ்வுலகம் தேவர்கள், மனிதர்கள், ஆகாயத்தில் செல்பவை, கால்நடைகள், பாம்பு முதலிய ஊர்வன, கந்தர்வர்கள், அஸுரர்கள் இவர்களால் விசித்திரமாகப் பலவாறுகத் தோன்றி இன்பமாக அனுபவிக்கப் பெறுகிறதோ, மூவுலகையும் வடிவாகக்கொண்ட அந்த எங்கும் நிரம்பிய ஆண்டவனை வணங்குகிறேன். பகவான் வாஸுதேவனுக்கு வணக்கம். (25)

---

1. वासोऽयमब्धिः, वास्तव्यमब्धिः வாஸோ(அ)யமப்த்தி: வாஸ்தவ்யமப்த்தி: (பா) *வாஸ்தவ்யம் அல்லது வாஸோ(அ)யம் என்ற பாடத்தின்படி கடல் இருப்பிடமோ என்று பொருள். வாஸ்தேயம் - வஸ்தி - சிறு நீர்ப்பை. அதில் உள்ளது வாஸ்தேயம் - சிறுநீர், கடல் நீரனைத்தும் சிறுநீர் என்று பொருள்கொள்ளத்தகும்.*

*நாம் உலகை பூமி ஆகாயம் அதன் மேலுள்ள பகுதி (பூலோகம், த்யுலோகம், ஸ்வர்கலோகம், - பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம்) என்று மூன்று பகுதிகளாகக் காண்கிறோம். இதற்கு மேலும் கீழும் உலகமைப்பு உண்டு. இந்த மூவுலகமும் ஆண்டவன் வாமனனாகத் தோன்றித் திரிவிக்ரமனாக வளர்ந்த நிலையில் அவரது இரு காலடிகளில் அடங்கியதாகப் புராணம் கூறும். அவரது முழு வடிவில் கால் பங்கே இந்த உலகமைப்பு என புருஷஸூக்தம் கூறும்.* 'த்ரிபாதஸ்யாம்ருதம் திவி. த்ரிபாதூர்த்த்வம் உதைத் புருஷ: பாதோஸ்யேஹாபவாத்புந:' *என முக்கால் பங்கு வடிவமைப்பிற்குட்படாதது. கால் பங்கே விராட் வடிவில் மூவுலகமாக - பதினான்கு உலகங்களாகக் காட்சியளிக்கிறதென்பர். அதற்குள்தான் தேவரும் அஸுரரும் மனிதரும் விலங்குகளும் என் உலகம் என் உலகம் எனப் பகுத்துக்கொண்டு அதனதனிடத்தில் உல்லாஸமாக வாழ்கின்றனர்.* (சித்ரம் ரம்ரம்யதே). *அவருள் அடங்கியது விச்வம்.* (அந்தஸ்ஸ்தம் யஸ்ய விச்வம்) *அவரே மூவுலகையும் தன் வடிவமாகக் கொண்டவர். மூவுலகமும் தனித்தனியாக வடிவமைப்பு பெறச் செய்தவர். எல்லாம் வல்லவராகையாலும்* (ஈசம்) *எல்லாவற்றிலும் இருப்பவராகையாலும்* (விஷ்ணும்) *உலகமாகி, உலகினுள் நுழைந்து பரவி, உலகை விளையாடச் செய்து மகிழ்கிறார். அதனால் அவர் வாஸுதேவர். (நா. 332, 695) அந்த பகவான் வாஸுதேவருக்கு நமஸ்காரங்கள். இந்த சுலோகம் ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் சீடரான ஸ்ரீ தோடகாசாரியர் எழுதிய ச்ருதிஸாரஸமுத்த்தரணம் என்ற நூலின் கடைசி சுலோகமாகும். 12 அக்ஷரங்கள் கொண்ட ஓம் நமோ பகவதே வாஸுதேவாய என்ற சொல்லமைப்பு - மந்திரமாகும். மிகச் சிறப்பு வாய்ந்தது.*

*பகவானைத் துதிக்கவோ வணங்கவோ தகுதி யாருக்கு உண்டு? இந்தக் கேள்விக்கு விடையாக யம - யம தூத ஸம்வாதப் பகுதியை விளக்கி ஸ்ரீ சங்கர பகவத் பாதர்* "ஹிம்ஸாதி ரஹிதேந விஷ்ணோ: ஸ்துதி நமஸ்காராதி கர்த்தவ்யம்" *ஹிம்சை முதலிய கெட்ட எண்ணங்கள் இல்லாதவனே விஷ்ணுவைத் துதிக்கவும் வணங்கவும் முடியும் என முடிவைத் தெரிவிக்கிறார், விச்வம் என்ற முதல் நாமத்தின் உரையில்*

**देवा मनुष्याः पशवः पक्षिवृक्षसरीसृपाः ।**
**रूपमेतदनन्तस्य विष्णोः भिन्नमिव स्थितम् ॥**

एतद्विजानता सर्वं जगत्स्थावरजङ्गमम् ।
द्रष्टव्यमात्मवद् विष्णुः यतोऽयं विश्वरूपधृक् ॥

(விஷ்ணு புராணம் 1-19-, 47, 48)

உலகமாக உள்ளதனைத்தையும் அவரது வடிவின் ஒரு பகுதியாகத் தியானத்தில் கொணவர்தற்கு, உலகனைத்தையும் பகவானுகப் பார்த்து உணர்ந்து அநுபவிக்க முடிந்தவனுல்தான் இயலும். உலகில் உள்ளதனைத்தையும் பகவானுகப் பார்க்கத் தெரிந்தவன் சத்துரு, மித்ரன், வேண்டாதது, வேண்டியது என்ற பாகுபாடெல்லாம் மறைய, அன்பின் அலை சுற்றிலும் பரவிப்பாய இறையமுதத்தில் ஆழ்ந்து நிற்பான். அதற்கு இந்த தியான முறை வழிகாட்டும்.

விராட் வடிவில் உலகத்தைத் தோன்றச் செய்த இறைவன் உலகம் தானியங்கியாக இயங்குவதற்கு இன்றியமையாத சட்ட திட்டங்களை வகுத்து அதனதன் அதிகார வரம்பிற்குள் இயங்குவதைக் கண்காணிக்க ரக்ஷணம் என்ற பொறுப்பைத் தன்னிடம் வைத்துக் கொண்டு அதற்காகப் பல வடிவங்களை ஏற்கிருர். அதற்கென மூல வடிவமான ஸ்ரீவிஷ்ணு திவ்ய மங்கள ஸ்வரூபத்துடன் விளங்குவதைப் பின்வரும் நான்கு சுலோகங்கள் விளக்குகின்றன.

शान्ताकारं भुजगशयनं पद्मनाभं सुरेशम्
विश्वाधारं[1] गगनसदृशं मेघवर्णं शुभाङ्गम् ।
लक्ष्मीकान्तं कमलनयनं [2]योगिहृद्ध्यानगम्यम्
वन्दे विष्णुं भवभयहरं सर्वलोकैकनाथम् ॥ २६ ॥

ஶாந்தாகாரம் புஜகஶயநம் பத்மநாபம் ஸுரேஶம்
விஶ்வாதாரம்[1] ககநஸத்ருஶம் மேகவர்ணம் ஶுபாங்கம்.
லக்ஷ்மீகாந்தம் கமலநயநம் யோகிஹ்ருத்த்யான கம்யம்[2]
வந்தே விஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைகநாதம் ॥ 26 ॥

சாந்த வடிவினரும் பாம்பைப் பள்ளியணையாகக் கொண்டவரும் தாமரையை ஒத்த கொப்பூழையுடையவரும் தேவர்களின் ஈசனும், உலகின் ஆதாரமும். ஆகாயம் போன்றவரும், மேகநிறம் கொண்டவரும், சுப லக்ஷணங்கள் அமைந்த அங்கங்கள்

1. विश्वाकारं விச்வாகாரம் (பா) உலகேவடிவான
2. योगिभिर्ध्यानगम्यं யோகிபிர்த்த்யானகம்யம் (பா).

**உள்ளவரும், லக்ஷ்மீ தேவிக்கு இனியவரும், தாமரைக் கண்ணரும், யோகிகளின் ஹ்ருதயத்தில் அவர்களது தியானத்தால் உணரத்தக்கவரும், ஸம்ஸார பயத்தை நீக்குபவரும், எல்லா உலகிற்கும் தனி நாயகராக விளங்குபவருமான விஷ்ணுவை வணங்குகிறேன்.**

*ஸ்ரீமஹாவிஷ்ணு என்று குறிப்பிட்டதும் நாம் மனத்தில் காண்கிற வடிவத்தை இந்த சுலோகம் காட்டுகிறது. ஸகுணமான வடிவில் நிர்குண ஸ்வரூபம் புலப்படுவதை 'ககந ஸத்ருசம்'. 'மேகவர்ணம்' என்ற இரு விசேஷணங்கள் விளக்குகின்றன. ஆகாயம் என ஒன்று உள்ளது, அதனுள் நாம் இருக்கிறோம். அது இல்லையேல் நாம் இருப்பதற்கில்லை. இத்தனை உணர்ந்திருந்தும் ஆகாயத்தைக் கண்டதில்லை. நீலமான ஆகாயம் எனும்போதே ஆகாயத்திற்கும் நீலநிறத்திற்கும் ஒரு தொடர்பும் இல்லை என்பதையும் அறிவோம். அதனை நெருங்க நெருங்க அது தொடுவானமாக விளையாடி விலகிப் போகும். உண்மையில் அது விலகுவதுமில்லை. நெருங்குவதுமில்லை. இறைவன் ஆகாயத்திற்கு ஒப்பானவர். அவர் ஒருவர் உள்ளார். அவருள் நாம் இருக்கிறோம். அவரால் நாம் வாழ்கிறோம். எனினும் அவரைச் சுட்டிக் காட்ட இயலாது. ஆகாயத்திற்கு ஒப்பானவர் அவர்; அவருக்கொப்பானது ஆகாயம். அவர் இத்தகையவர் என்று குறிப்பிடும்போதே இந்தத் தகைமைக்கு அப்பாற்பட்டவர் என்றும் நாம் உணர்கிறோம். அவரை நெருங்க நெருங்க அவர் நெருங்க முடியாத தூரத்தில் இருப்பதாகத் தோன்றும். அவர் அருகிலுமில்லை, தூரத்திலும் இல்லை. அதுபோல் மேகத்தின் நிறம் கொண்டவர் என்போம். மேகத்தில் காண்கின்ற நீல நிறம் அது அமைந்துள்ள வானத்துடையதுமல்ல, மேகமாக உருக்கொண்ட நீருடையதுமல்ல. நீல நிறம் எங்கிருந்து வந்தது? காணப்படுகிறதே! என்றால், ஆம் காணப்படுகிறது. அது எதனுடையது? மேகத்திற்கு வடிவம் உண்டா? மேகத்தின் வடிவமைப்பு நிலைத்ததா? இல்லை. இறைவனின் மேனிவண்ணமும் அந்த வடிவ இறுக்கமும் மேகத்தினுடையதைப் போலத்தான். வடிவற்றவர் வடிவுடன் காணப்படுகிற நேர்த்தி அத்தகையது. மேகம் ஜலத்தாலானது. ஜலத்தைத் தவிர வேறொன்றுமில்லை. ஆனால் ஜலமாகத் தெரியாமல் மேகமாகத் தெரிகிறது. அறிவாளி ஜலத்தைக் காண்கிறான். விஷ்ணு உலகமாகத் தெரிகிறார். அறிவாளி உலகை விஷ்ணுவாகக் காண்கிறான். மேகத்திற்கு ஈடு அவரே. அவருக்கு*

ஈடு மேகமே. சாந்தம் என்பது பரம்பொருள். உடல் மனம் இவற்ருல் கலக்கமுருத நிலே, ஆத்மாவைத் தனித்து உணர்ந்து ஆத்மாவாகிய நிலே. அதுவே சாந்தம். அதுவே ஆனந்தம். ஆத்மானந்தம் உள்ளே பரவி வெளியிலும் அப்படியே தோன்றுகிறது - சாந்தாகாரம். பாம்பைப் படுக்கையாகக் கொண்டவர் - புஜகசயனம். ஆயிரக்கணக்கான முகம் கொண்ட ஆதிசேஷனே அந்தப் பாம்பு. எண்ணற்ற தலேகளே உருவகப்படுத்திக்கொள்ள முடியாதாகையால் ஐந்து தலே நாகமாக சித்திரிக்கப்படும். கண் காது முதலிய நமது பொறிகளே அந்த ஐந்து தலேகளும் குறிப்பிடும். பாம்பின் வெளிநோக்கும் நீட்டிய நாக்கும் நமது வெளி நாட்டத்தைக் காட்டும். ஒரு நிலேயில் இல்லாமல் தோளால் ஊர்ந்து செல்வது - புஜகம். அது நமது மனமாகும். செல்வதற்குக் கால்கள் என்ற அமைப்பு இல்லாதபோதும் எப்படியேனும் ஊர்ந்தாவது செல்வது - மனத்தின் பிடிவாதத்தைக் காட்டும். பாம்பின் நோக்கைத் தன்பால் திருப்பி, அதன் நாக்கின் செவ்வொளியைத் தன் மீது படரச் செய்து, வழுவழுப்பாயிருப்பதால் பிடிப்பில்லாத அதன் உடலமைப்பில் படுக்கை சுகத்தை அனுபவித்து வருவது போல், பகவான் நம் மனத்தை ஆட்கொண்டு, பொறிகளேத் தன்பால் ஈர்த்து, அவை தனக்கு அடங்கி ஒரே நிலேயில் இருக்குமாறு செய்துகொள்கிருர். விச்வமூர்த்தி என்று முன் சுலோகத்தில் தியானத்தில் வந்த இறைவன் உலகைத் தன்னிடமிருந்து தோற்றுவிக்க, விசுவாதாரமான தாமரையைத் தொப்புளிலிருந்து வெளிப்படுத்துகிருர். பத்மநாபம். அதிலிருந்து விசுவ வடிவில் வெளியாகிருர். விச்வாகாரம். அந்த அழகிய வடிவில் பளிச்செனத் தெரிகிருள் லக்ஷ்மீதேவி. சுபாங்கம். அவளால் பகவான் மிகவும் அழகுடையவராகிருர். லக்ஷ்மீகாந்தம். (26)

मेघश्यामं पीतकौशेयवासं श्रीवत्साङ्कं कौस्तुभोद्भासिताङ्गम् ।
पुण्योपेतं पुण्डरीकायताक्षं विष्णुं वन्दे सर्वलोकैकनाथम् ॥ २७ ॥

மேகஶ்யாமம் பீதகௌஶேயவாஸம்
ஸ்ரீவத்ஸாங்கம் கௌஸ்து போத்பாஸிதாங்கம்.
புண்யோபேதம் புண்டரீகாயதாக்ஷம்
விஷ்ணும் வந்தே ஸர்வலோகைகநாதம் 27.

மேகம் போன்று கருநீல நிறமுள்ளவரும் செம்மஞ்சள் நிறமுள்ள பட்டாடை உடுத்தியவரும் ஸ்ரீவத்ஸம் எனும் மறுவைச் சிறப்படையாளமாகக் கொண்டவரும் கௌஸ்துபம் எனும்

மணியால் ஒளிபெற்ற மார்பகமுள்ளவரும் புண்ணியத்தால் அருகில் நெருங்கப் பெறுபவரும் தாமரை போன்று அலர்ந்து விரிந்த கண்களுள்ளவரும் எல்லா உலகங்களுக்கும் ஒப்பற்ற தலைவருமான விஷ்ணுவை வணங்குகிறேன்.

*மனத்தை ஈர்க்கின்ற அழகு - ச்யாமம். (ச்யாயதே மநோ யஸ்மிந்) மேகத்தில் கருப்பு என்ற நிறம் தோன்றாமல் அழகு மட்டும் தோன்றுகிறது. ராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரங்களில் அவரது கருநிறம் தோன்றாமல் அழகு மட்டும் தோன்றுகிறது. கருநிறமும் அழகாகத் தோன்றுகிறது. அதனால் அந்த அழகான ஆனால் கருப்பான மேனிக்கு மேகம் உவமைப் பொருளாகிறது. அவர் எல்லோர் அருகிலும் உள்ளார். ஆனால் புண்யச் செயலால் புண்ணியம் புரிந்தவர் மட்டும் அவரை அணுக முடியும்.* (27)

नमः समस्तभूतानां आदिभूताय भूभृते।
अनेकरूपरूपाय विष्णवे प्रभविष्णवे॥ २८ ॥

நமஸ் ஸமஸ்தபூதாநாம் ஆதிபூதாய பூப்ப்ருதே.
அநேகரூபரூபாய விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே. 28

எல்லப் பொருள்களுக்கும் மூலப்பொருளாக, தான் படைத்த பூமியைத் தாங்குபவராக, பல வகைப்பட்ட வடிவங்கள் உள்ளவராக, எல்லாம் வல்லவராக விளங்கும் விஷ்ணுவிற்கு நமஸ்காரம். (28)

सशङ्खचक्रं सकिरीटकुण्डलं
सपीतवस्त्रं सरसीरुहेक्षणम्।
सहारवक्षस्स्थलशोभिकौस्तुभं
नमामि विष्णुं शिरसा चतुर्भुजम्॥ २९ ॥

ஸஶங்க்கசக்ரம் ஸகிரீடகுண்டலம்
ஸபீதவஸ்த்ரம் ஸரஸீருஹேக்ஷணம்.
ஸஹாரவக்ஷஸ்ஸ்தலஶோபிகௌஸ்துபம்
நமாமி விஷ்ணும் ஶிரஸா சதுர்புஜம். 29.

சங்கு சக்கிரம் உள்ளவரும் கிரீடம் குண்டலம் உள்ளவரும் செம்மஞ்சள் நிறத்தாடை உள்ளவரும் தாமரைக் கண்ணரும் மாலையுடன் கூடிய மார்பகத்தில் அழகுடன் விளங்கும் கௌஸ்துபமுள்ளவரும் நான்கு கைகளுள்ளவருமான விஷ்ணுவைத் தலையால் வணங்குகிறேன். (29)

*'சாந்தாகாரம்' எனத் தொடங்கி மூன்று சுலோகங்களால் ஸ்ரீமந் நாராயணனைத் தியானத்திற்கு ஏற்ற மூர்த்தியாக விளக்கிய பிறகு, அந்த ஸ்ரீமந் நாராயணனே ஸ்ரீகிருஷ்ணனாக அவதரித்துள்ளார் என்று தெளிந்து வணங்க இரு சுலோகங்களால் தியானத்திற்கு ஏற்ற விபவ வடிவில் கிருஷ்ண மூர்த்தியாக அவரை விளக்குகிறார்கள்.*

छायायां पारिजातस्य हेमसिंहासनोपरि।
आसीनमंबुदश्याममायताक्षमलङ्कृतम्॥ ३० ॥

चन्द्राननं चतुर्बाहुं श्रीवत्साङ्कितवक्षसम्।
रुक्मिणीसत्यभामाभ्यां सहितं कृष्णमाश्रये॥ ३१ ॥

ச்சாயாயாம் பாரிஜாதஸ்ய ஹேமஸிம்ஹாஸநோபரி.
ஆஸீநமம்புதஶ்யாமம் ஆயதாக்ஷமலங்க்ருதம் 30.

சந்த்ராநநம் சதுர்பாஹும் ஸ்ரீவத்ஸாங்கிதவக்ஷஸம்.
ருக்மிணீஸத்யபாமாப்யாம் ஸஹிதம் க்ருஷ்ணமாஶ்ரயே.31

பாரிஜாத மரத்தின் நிழலில் தங்கச் சிங்காதனத்தின் மேல் அமர்ந்தவரும் மேகத்தைப்போல் கருநீல நிறமுடையவரும் நீண்டு விரிந்த கண்களுள்ளவரும் அணிகள் பூண்டவரும் சந்திரனைப் போன்று அழகிய முகமுள்ளவரும் நான்கு கைகள் உள்ளவரும் ஸ்ரீவத்ஸத்தால் அடையாளமிடப்பட்ட மார்பகமுள்ளவரும் ருக்மிணியுடனும் ஸத்யபாமையுடனும் கூடியவருமான கிருஷ்ணனைச் சரணமடைகிறேன். (30-31)

*இதுவரை விஷ்ணும் ஜிஷ்ணும் எனத் தொடங்கி தியான வடிவங்கள் தரப்பட்டுள்ளன. மனம் ஒன்றையே பற்றி நிற்காது. ஒன்றைவிட்டு மற்றொன்றைப் பற்றும். ருசி துரிதமாக மாறும். திரும்பத் திரும்ப முன் பற்றியதையே பற்றி நிற்கும்படி ஒரே பொருளைப் பல வடிவங்களில் தந்து வேறுபட்ட பொருளாக உணர்த்தி அதில் ஈடுபடச் செய்யவே இந்த யுக்தி. இதே நோக்கில்தான் ஆயிரம் நாமங்கள் அமைப்பும். ஒரு நாமத்தில் மனம் நிலைக்குமானால் அதுவே போதுமானது. அப்படி ஒரு நாமத்தில் மனம் நிலைக்கச் செய்யவே ஆயிரம் நாமங்கள்.*

## விரிவான ந்யாஸ முறை

अस्य श्रीविष्णोर्दिव्यसहस्रनामस्तोत्रमहामन्त्रस्य, श्रीवेदव्यासो भगवानृषिः, अनुष्टुप्छन्दः, श्रीमहाविष्णुः परमात्मा श्रीमान्नारायणो देवता। अमृतांशूद्भवो भानुरिति बीजं, देवकीनन्दनः स्रष्टेति शक्तिः, शङ्खभृन्नन्दकी चक्रीति कीलकं, महाविष्णुप्रीत्यर्थे नामपारायणे विनियोगः।

அஸ்ய ஸ்ரீ விஷ்ணோர் திவ்ய ஸஹஸ்ர நாம ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய, ஸ்ரீவேத வ்யாஸோ பகவான் ருஷி:, அனுஷ்டுப் சந்த:, ஸ்ரீமஹாவிஷ்ணு: பரமாத்மா ஸ்ரீமான் நாராயணோ தேவதா.

அம்ருதாம்ஶூத்ப்வோ பானுரிதி பீஜம். தேவகீநந்தநஸ் ஸ்ரஷ்டேதி ஶக்தி: ஶங்கப்ருந் நந்தகீ சக்ரீதி கீலகம். மஹாவிஷ்ணு ப்ரீத்யர்த்தே நாம பாராயணே விநியோக:[1]

करन्यासः- *கர ந்யாஸம்*

विश्वं विष्णुर्वषट्कार इति अंगुष्ठाभ्यां नमः।
अमृतांशूद्भवो भानुरिति तर्जनीभ्यां नमः।
ब्रह्मण्यो ब्रह्मकृद्ब्रह्मेति मध्यमाभ्यां नमः।
सुवर्णबिन्दुरक्षोभ्य इत्यनामिकाभ्यां नमः।
निमिषोऽनिमिषः स्रग्वीति कनिष्ठिकाभ्यां नमः।
रथाङ्गपाणिरक्षोभ्य इति करतलकरपृष्ठाभ्यां नमः।

விச்வம் விஷ்ணுர் வஷட்கார இதி அங்குஷ்ட்டாப்ப்யாம் நம:
அம்ருதாம்ஶூத்பவோ பானுரிதி தர்ஜநீப்ப்யாம் நம:
ப்ரம்ஹண்யோ: ப்ரம்ஹக்ருத் ப்ரம்ஹேதி மந்தத்யமாப்ப்யாம் நம:
ஸுவர்ணபிந்து ரக்ஷோப்ய இதி அநாமிகாப்ப்யாம் நம:

1. *ந்யாஸங்கள் உடலின் ஒவ்வொரு பகுதியிலும் தேவதையின் சக்தியை நிலைக்கச் செய்பவை. அதற்கென சில முத்திரைகள் உண்டு. அவை பின்வருமாறு—*
*அஸ்ய × ஸ்தோத்ரஸ்ய - கூப்பிய கையுடன்.*
*ருஷி: - வலது கையால் தலையைத் தொடுவது. குருவைத் தலையால் வணங்குகிறோம்.*
*சந்தஸ் - உதட்டின் வெளியே வலது கையால் தொடுவது.*
*தேவதா - இதயத்தைத் தொடுவது.*
*விநியோக: - இருகை கூப்பி.*

நிமிஷோऽநிமிஷஸ் ஸ்ரக்வீதி கநிஷ்ட்டிகாப்ப்யாம் நம:
ரதாங்கபாணி ரக்ஷோப்ப்ய இதி கரதலகரப்ருஷ்ட்டாப்ப்யாம் நம:

अङ्गन्यासः- அங்கந்யாஸம்

सुव्रतः सुमुखः सूक्ष्म इति ज्ञानाय हृदयाय नमः।
सहस्रमूर्धा विश्वात्मेति ऐश्वर्याय शिरसे स्वाहा।
सहस्रार्चिस्सप्तजिह्व इति शक्त्यै शिखायै वषट्।
त्रिसामा सामगस्सामेति बलाय कवचाय हुम्।
रथाङ्गपाणिरक्षोभ्य इति तेजसे नेत्रत्रयाय वौषट्।
शार्ङ्गधन्वा गदाधर इति वीर्याय अस्त्राय फट्।

ஸுவ்ரதஸ் ஸுமுகஸ் ஸூக்ஷ்ம: இதி ஜ்ஞாநாய ஹ்ருதயாய நம:.
ஸஹஸ்ரமூர்த்தா விஸ்வாத்மேதி ஐஸ்வர்யாய ஸிரஸே ஸ்வாஹா:.
ஸஹஸ்ரார்ச்சிஸ்ஸப்தஜிஹ்வ இதி ஸக்த்யை சிகாயை வஷட்.
த்ரிஸாமாஸாமகஸ்ஸாமேதி பலாய கவசாய ஹும்.
ரதாங்கபாணிரக்ஷோப்ய இதி தேஜஸே நேத்ரத்ரயாய வௌஷட்
ஸார்ங்க தந்வா கதாதர இதி வீர்யாய அஸ்த்ராய ப்பட்

दिग्बन्धः திக்பந்தம்

ऋतुः सुदर्शनः काल इति (भूर्भुवस्सुवरोम् इति) दिग्बन्धः।

*கரந்யாஸம் - கைகளில் உள்ள விரல்களும் உள்ளங்கையும் புறங்கையும் தூய்மை பெற. அங்குஷ்ட்டம் - கட்டை விரல். தர்ஜநீ - சுட்டு விரல், மத்த்யமா - நடு விரல், அநாமிகா - மோதிர விரல், கனிஷ்ட்டிகா - சுண்டு விரல், கரதலம் - உள்ளங்கை, கரப்ருஷ்ட்டம் - புறங்கை. அங்குஷ்ட்டாப்யாம் நம: என இரு கை கட்டை விரல்களையும் சுட்டு விரல்களின் நுனியால் அடியிலிருந்து மேல் வரை தடவுவது. கட்டை விரலால் தர்ஜநீப்ப்யாம் நம: என சுட்டு விரல்களையும், மத்த்யமாப்ப்யாம் நம: என நடு விரல்களையும், அநாமிகாப்ப்யாம் நம: என மோதிர விரல்களையும், கநிஷ்டிகாப்ப்யாம் நம: என சுண்டு விரல்களையும் தடவ வேண்டும். கரதலகரப்ருஷ்ட்டாப்யாம் நம: என இரு கைகளின் உள் - வெளிப்புறங்களை ஒன்றால் ஒன்றை தடவிவிட வேண்டும்.*

ருதுஸ்ஸுதர்ஶந: கால இதி (பூர்ப்புவஸ்ஸுவரோமிதி) திக்பந்த் த:

ध्यानम् த்யானம்

क्षीरोदन्वत्प्रदेशे + कृष्णमाश्रये।

க்ஷீரோதந்வத் + க்ருஷ்ணமாஶ்ரயே (பக்கம் 79-87)

पञ्च पूजाः பஞ்ச பூஜை

लं पृथिव्यात्मने विष्णवे पृथिव्यात्मकं गन्धं समर्पयामि।
हं आकाशात्मने विष्णवे आकाशात्मकं पुष्पं समर्पयामि॥

यं वाय्वात्मने विष्णवे वाय्वात्मकं धूपं आघ्रापयामि।
रं अग्न्यात्मने विष्णवे अग्न्यात्मकं दीपं दर्शयामि।
वं अमृतात्मने विष्णवे अमृतात्मकं महानिवेदनं निवेदयामि॥

லம் ப்ருதிவ்யாத்மநே விஷ்ணவே ப்ருதிவ்யாத்மகம் கந்தம் ஸமர்பயாமி. ஹம் ஆகாஶாத்மநே விஷ்ணவே ஆகாசாத்மகம் புஷ்பம் ஸமர்பயாமி. யம் வாய்வாத்மநே விஷ்ணவே வாய்வாத்மகம் தூபம் ஆக்ராபயாமி. ரம் அக்ந்யாத்மநே விஷ்ணவே அக்ந்யாத்மகம் தீபம் தர்சயாமி. வம் அம்ருதாத்மநே விஷ்ணவே அம்ருதாத்மகம் மஹாநிவேதநம் நிவேதயாமி

*அங்கநியாஸம் - ஹ்ருதயாய நம: என வலது மோதிர நடு - சுட்டு விரல்களின் நுனியால் இதயத்தைத் தொடுவது. சிரஸேஸ்வாஹா என வலது நடு மோதிர விரல்களின் நுனியால் தலையைத் தொடுவது; சிகாயை வஷட் என வலது கட்டை விரலால் சிகை முடிச்சை அல்லது பின்னம் தலையைத் தொடுவது; கவசாயஹும் என இடது கை விரல்கள் ஐந்தால் வலது தோளையும் வலது கை ஐந்து விரல்களால் இடது தோளையும் ஒரே சமயத்தில் தொடுவது. (கைகள் இரண்டும் மார்பில் ஒன்றன் மீது ஒன்றாகக் குறுக்கே பதிந்திருக்கும்). நேத்ரத்ரயாய வௌஷட் என வலது நடு விரல்-மோதிரந் சுட்டு விரல்களின் நுனியால் புருவ நடுவிலும் கண்களிலும் தொடுதல். (நடு விரலும் சுட்டு விரலும் கண்களிலும், மோதிர விரல் நெற்றி நடுவேயும் பதியும்). அஸ்திராயப்பட் என தலையைச் சுற்றி வலமிருந்து இடமாக வலது கட்டை விரலையும் சுட்டு விரலையும் சேர்த்துச் சொடுக்கிக் கொண்டே சுழற்றிப்பின் இடது உள்ளங்கையை வலது சுட்டு விரலாலும் நடு விரலாலும் ஓசை வருமாறு தட்டுவது.*

*பூர்ப்புவஸ் ஸுவரோம் என நம் உடலைச் சுற்றி வலக்கையால் வலமாகச் சுற்றுவது திக்பந்தம் - கெட்ட எண்ண அலைகள் பாதிக்காதபடி ஒரு மந்திரக்கட்டு. தியானம் - இரு கைகளைக் கூப்பி இதயத்தில் வைத்து.[1]*

*நாம பாராயணம் செய்து முடித்த பின் நியாஸம் செய்து திக்விமோகம்.*

ऋतुः सुदर्शनः कालः इति (भूर्भुवस्सुवरोमिति) दिग्विमोकः।

ருதுஸ் ஸுதர்ஶந: கால இதி (பூர்புவஸ்ஸுவரோமிதி) திக் விமோக:

*பஞ்ச பூஜை செய்த பின் ஸமர்பணம்*

गुह्यातिगुह्यगोप्ता त्वं गृहाणात्मकृतं स्तवम्।
सिद्धिर्भवतु देवेश त्वत्प्रसादान्मयि स्थिरा॥

குஹ்யாதிகுஹ்யகோப்தா த்வம் க்ருஹாணாத்மக்ருதம் ஸ்தவம்.
ஸித்த்திர் பவது தேவேச த்வத் ப்ரஸாதாந் மயி ஸ்த்திரா

---

*பஞ்ச பூஜை-கந்தம் ஸமர்பயாமி என கட்டை விரல்களால் சுண்டு விரல்களையும், புஷ்பம் ஸமர்பயாமி என கண்டு விரலால் கட்டை விரல்களையும் தூபமாக்க்ராபயாமி எனக் கட்டை விரல்களால் கட்டு விரல்களையும், தீபம் தர்சயாமி எனக் கட்டை விரல்களால் நடுவிரல்களையும், மஹாநிவேதநம் நிவேதயாமி எனக் கட்டை விரல்களால் மோதிர விரல்களையும் தடவுவது.*

*திக்விமோகம் - முன் செய்த திக்பந்தன மந்திரக்கட்டைக்களைவது. வலக்கையால் இடமாகச் சுற்றிக் களைவது.*

*ஸமர்ப்பணம் - வலது உள்ளங்கையில் பூ, அக்ஷதை, சந்தனம், ஜலம் இவற்றை ஏந்தி ஈசனின் வலக்கைகளில் ஸமர்ப்பிப்பதான பாவனையுடன் பூமியிலிட வேண்டும்.*

# विष्णोः सहस्रं नामानि

# விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள்

विश्वं विष्णुर्वषट्कारो भूतभव्यभवत्प्रभुः ।
भूतकृद् भूतभृद् भावो भूतात्मा भूतभावनः ॥ ३२ ॥

விஶ்வம் விஷ்ணுர் வஷட்காரோ பூதபவ்யபவத்ப்ரபு:
பூதக்ருத் பூதப்ப்ருத் பாவோ பூதாத்மா பூதபாவந:. 32

1 விச்வம் – அனைத்தும் தாமாயிருப்பவர். பூர்ணர்.

*கிமேகம் தைவதம்? எது ஒரே தேவதை? என்ற கேள்விக்கு, எவரிடமிருந்து படைப்பின் தொடக்கத்தில் எல்லாம் தோன்றினவோ, எவரால் இருக்கின்றனவோ, எவரிடம் லயிக்கின்றனவோ அவரே தேவதை என ''யத: ஸர்வாணி பூதாநி' என்று தொடங்கி விடை அளிக்கப்பெற்றது. (ப. 65) அந்த ஒரே தெய்வம் 'விச்வம்' என முதல் நாமம் விளக்குகிறது. விச்வம் - உலகம் விச்வம் - அனைத்தும். எவ்வாறு அவரிடமிருந்து உலகம் தோன்றியது? இதனை ஸ்ரீமத் பாகவதம் விளக்குகிறது.*

गुणव्यतिकराकारो निर्विशेषोऽप्रतिष्ठितः ।
पुरुषस्तदुपादानं आत्मानं लीलयाऽसृजत् ॥
विश्वं वै ब्रह्मतन्मात्रं संस्थितं विष्णुमायया ।
ईश्वरेण परिच्छिन्नं कालेनाव्यक्तमूर्तिना ॥
यथेदानीं तथाऽग्रे च पश्चादप्येतदीदृशम् ॥ (३-१०, ११-१३)

*''பரம்பொருளான பிரும்மம் சிறப்பாகக் குறிப்பிடக் கூடியது எதுவும் இல்லாதது. (நிர்விசேஷ:) ஆதியும் அந்தமுமற்றது. தனித்த நிலைகள் அற்றது. (அப்ரதிஷ்டித:) அது தன்னையே விளையாட்டாக இந்த உலகமாக ஆக்கிக்கொண்டது.[1] உலகமாக ஆக இரண்டு நிமித்த காரணங்கள் 1. காலம். 2. குணம். ஒரு நிமிஷத்தில் 10 லக்ஷத்தில் ஒரு பங்கான த்ருடியில் தொடங்கிய காலத்தின் சலனம் பிரும்மாவின் ஆயுள் வரையான பரம் வரை விரிந்தது. அவ்யக்த மூர்த்தியாகச் சலனமற்றிருந்த இந்தக் காலம்*

---

1. ब्रह्मैवेदं विश्वम् । (मुण्ड २.२.११), विश्वमेवेदं (तै.आ. १०-१३).

இறைவனின் மாயையால் சலனமுற்றது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களும் மூலப்ரகிருதியில் அவ்யக்த நிலையில் இருந்தபோது வேற்றுமை ஒன்றும் காண முடியாதிருந்தது. இவற்றில் இறைவனது லீலை அல்லது ஸங்கல்பம் ஒரு சலனத்தை ஏற்படுத்த ஏற்றத்தாழ்வு உண்டானது. அதனால் வடிவமைப்பு புலப்பட்டது. (குண வ்யதிகராகார:) இந்த இரண்டு நிமித்த காரணங்களின் உதவியால் பரம்பொருள் பலவாகி எல்லாமாகி உலகம் ஆனது. இதற்கு முன்னரும் இவ்வாறு கணக்கில்லாத தடவைகளில் இவ்வுலகம் தோன்றி இருந்து மறைந்துள்ளது. இப்போது தோன்றவிருக்கும் உலகமும் இறைவனது மாயையால் பிரும்மத்திடம் முன் லயமானதே. (ஸம்ஸ்த்திதம் விஷ்ணுமாயயா). இறைவனிடம் லயித்த உலகம் லயநிலையில் பிரும்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதாகத் தனித்து இருக்கவில்லை. பிரும்மமாகவே இருந்தது. (பிரும்மதன்மாத்ரம்).

''பிரும்மம் தானாகவே இருந்த உலகைத் தன்னையே மூலப்பொருளாகக்கொண்டு தனது மாயையால் ஜனித்த காலத்தாலும் குணத்தாலும் பலவாறாகத் தோன்றச் செய்தது. எல்லாம் விசுவமானது. அதனால் விசுவம் பிரும்மமே. காரண நிலையில் அது பிரும்மம். காரிய நிலையில் அது விச்வம். இந்த விச்வம் பிரளயத்திற்கு முன்னும் பிரளய நிலையிலும் பின்னர் ஸ்ருஷ்டிக்கு முன்னும் ஸ்ருஷ்டி நிலையிலும் பின்னர் பிரளயமடைந்து பரப்பிரும்மாகும் நிலையிலும் ஒரே விதமாகத்தான் இருந்தது. இருக்கிறது. இருக்கப்போகிறது. (ஏதத் ஈத்ருசம்)'' இது ஸ்ரீமத் பாகவதம் தரும் விளக்கம்.

விச்வம் என்ற சொல் இரண்டு பொருள்களில் வரும். 1. எல்லாம் 2. உலகம்.

1 விச்வம் - எல்லாம். உலகம் பிரும்மமே. ''பிரும்மம் தான் படைத்த பொருள் அனைத்திலும் தானே உட்புகுந்தது [1]''. தங்கம் மோதிரமாகிறது. தங்கமானது மூலப்பொருள் - காரணம். மோதிரம் தங்கத்தாலானது. அது தங்கத்தின் காரியம். மோதிரமாகும்போது கார்யமான மோதிரத்தில் காரணமான தங்கம் ஒவ்வொரு அணுவிலும் பிரவேசித்துள்ளது. அதுபோல் கார்யமான உலகில் காரணமான பிரும்மம் (பரம்பொருள்) ஒவ்வொரு அணுவிலும் பிரவேசித்துள்ளது. அதனால் அது

1. तत्सृष्ट्वा । तदेवानुप्राविशत् । (तै.उ. २.६)

விச்வம். மோதிரத்திலுள்ள எல்லாமும் தங்கம்தான். தங்கத்தைத் தவிர வேறில்லை. அதுபோல் உலகில் உள்ள எல்லாமும் பிரும்மம்தான். பிரும்மத்தைத் தவிர வேறில்லை. அதனால் அது விச்வம். (விசதி ஸ்வகார்யம் காரணரூபேண விச்வம்).

2. விச்வம் - உலகம். மோதிரம் அழிபடும்போது மூலப்பொருளான தங்கத்தில் லயிக்கிறது. தன் தனித் தன்மையை இழக்கிறது. அதுபோல் உலகம் பிரளயத்தில் தன் மூலகாரணமான பரம்பொருளில் லயிப்பதால் விச்வம்[1] (விசதி காரணம்). தனித்த தோற்றமுள்ள பிரும்மா முதலானோரும் பரம்பொருளே, அவர்களும் பரம்பொருளிடமிருந்து தோன்றியவர்கள். அதிலேயே லயமடையவிருப்பவர்கள். இந்த உலகில் உள்ள தனைத்தும் பரம்பொருளே. அதிலிருந்தும் வேறுபட்டவர்களல்ல என்று குறிப்பிடவே ஸூர்யன் சந்திரன் பிரும்மா முதலானவர்களுக்குள்ள தனிப்பட்ட சிறப்புப் பெயர்களாலும் அந்தப்பிரும்மமே (பரம்பொருளே) இந்த ஸ்தோத்திரத்தில் துதிக்கப்பெறுகிறது. அந்தப் பெயர்களுக்கு முன்னோடியாக ஆரம்பத்தில் உலகைக் குறிப்பிடும் விச்வம் எனும் சொல்லால் அது குறிப்பிடப்பெறுகிறது.

பரம்பொருளைக் காட்டிலும் இந்த உலகம் உண்மையில் வேறுபட்டதல்ல. அதிலிருந்து தோன்றி அது இருப்பதால் இருந்து அதிலேயே மறையும் ஒன்று, அதனைக் காட்டிலும் வேறுபட்டிருக்க முடியாதல்லவா! அதனால் பிரும்மம் விச்வம் என்றே கூறப்பெறுகிறது. ஸ்ருஷ்டி காலத்தில் தான் படைத்த உலகினுள் பிரும்மம் நுழைகிறது. பிரளய காலத்தில் தன்னைப் படைத்த பிரும்மத்தில் உலகம் லயமடைய நுழைகிறது. ஆக இரண்டும் நுழையும் தன்மை படைத்திருப்பதால் விச்வம்-(விசதி).

''தஸ்ய வாசக: ப்ரணவ:.'' இறைவனைச் சொல்லால் குறிப்பிடுவது ஓங்காரம் எனும் பிரணவம். பரம்பொருளும் அதன் விரிவாகிய பிரபஞ்சமும் ஓங்காரமே. பிரும்மம் விச்வமாக, காரிய நிலையில் முதலில் தோன்றிய ஆகாசதன்மாத்திரமான ஒலியே. அதன் முதல் விளக்கமான ஓம் எனும் பிரணவம். அதனால்தான் பிரும்மத்திற்கு விளக்கம் தருகின்ற வேதத்தை ஓதத் தொடங்குகையில் ஓங்காரம் இடம் பெறுகின்றது. வேதம்

---

1. यत्प्रयन्त्यभिसंविशन्ति । (तै.उ. ३.१).

ஓதும்போது நடுவில் வெறும்பேச்சு வேறு உலகாயதமான சொல் நுழைந்துவிட்டால் மறுபடி பிரும்மத்திடம் திரும்ப, ஓங்காரம் உச்சரிக்கப்படுகின்றது. ஓங்காரத்தில் தொடங்கி ஓங்காரத்தில் முடிப்பதால் வேதம் பிரும்மம். அந்த ஓங்காரம் உலகத்தில் பேசப்படுகிற சொற்கள் அனைத்திலும் பரவி நிற்கிறது. உலகமாக விரியவிருக்கும் பரம்பொருளின் முதல் தோற்றம் ஒலி. அதிலிருந்தும் மற்ற எல்லாமும். ஆகவே பிரணவமும் விச்வம்[1]

எல்லாமாயிருப்பவர் இறைவனே. அப்படி உணர்வதால் எங்கும் அவரைக் கண்டு தன்னைப் போலவே மற்ற உயிர்களையும் கருதும் பழக்கம் ஏற்படும். பாப எண்ணமோ பேச்சோ பாபச் செயலோ ஏற்படாது. பிறருக்கு ஹிம்ஸை ஏற்படாதவாறு வாழ்க்கையை அமைத்துக்கொண்டவனே விச்வமான இறைவனை உணரத் தகுந்தவன்.எல்லாம் அச்யுதனே என்று உணர்ந்தவனுக்கு யம பயம் இல்லை. செய்வதும் கொடுப்பதும் வாங்குவதும் மற்ற செயல்கள் அனைத்தும் இறைவனது நெருக்க உணர்ச்சி இருந்தால் சிரத்தையுடன் செய்யப்படும். எல்லாம் ஈசுவரார்ப்பணமாக (ஓம் தத்ஸத் - ப்ரம்ஹார்ப்பணமஸ்து) செய்யப்படும். சிறுகச் சிறுக 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்' எல்லாம் விஷ்ணு மயம் என்ற பாவனை வலுத்துத் தன்னிடமே விஷ்ணு வசிப்பதை உணர்வான். எண்ணத்தாலும் சொல்லாலும் செயலாலும் விஷ்ணுவிடம் ஈடுபட்டுத் தனது ஆத்மாவே விஷ்ணு என்ற தியானம் செய்வான். அவருக்கே ஸ்தோத்திரமும் நமஸ்காரமும் அர்ப்பணமாகும். விஷ்ணுநிந்தை உள்ள இடத்தில் அவனால் இருக்க முடியாது. கணநேரம் கூட விஷ்ணுவின் தொடர்பின்றி வாழமுடியாது. 'ர' என்று சொன்னவுடனே திகிலுடன் மாரீசன் ராமனை நினைக்கத் தொடங்குவானும். அதுபோல் இறைவனின் பெயர் கேட்கப்படும்போதே இவனது மனம் இறைவனிடத்தில் ஈடுபட்டிருக்கும். இதுதான் விச்வம் என்ற நாமத் தியானத்தால் கிடைக்கின்ற நன்மையாகும்.

இயற்கையாக எல்லையற்ற திவ்ய மங்கள குணங்கள், திவ்ய மங்கள வடிவம், திவ்ய மங்களமான அருட்செயல்களால் விளங்குகிற பெருமை, இவை விஷ்ணுவிடம் அமைந்துள்ளன. இவற்றால் ஸ்வயம் பரிபூர்ணர், அளவற்ற பெரு விபூதிகளைக் கொண்டவர். அதனால் விஷ்ணு விசுவம் எனப்படுகிறார். இந்த பூர்ணத்தன்மையை விளக்கவே மற்ற நாமங்கள்.

1. ओमिति ब्रह्म । ओमितीदं सर्वम् । (तै.उ. १.८)

'எல்லாம்' என்ற பொருளில் வரும் விச்வம் எனும் சொல் பிரதி பெயர்ச்சொல் (ஸர்வநாமசப்தம்) ஆகும். அதனுல் ''நம:'' சேர்த்துச் சொல்லும்போது விச்வஸ்மை நம: என்று ஸர்வ நாம - 4ம் வேற்றுமை விகுதி சேர்த்து வரும். வேறு பொருள்களில் அது பெயர்ச் சொல்லே. அதனுல் விச்வாய நம: என்று வரும். 'எல்லாம்' என்ற பொருளே முக்கிய மானது என்பதால் ஸர்வ நாம சப்தமாக விச்வஸ்மை நம: என்றே சொல்வது வழக்கத்தி லிருக்கிறது. இது பெயரே, பிரதிப்பெயர் அல்ல என்பதால் விச்வாய நம: என்பவரும் உண்டு. இது போன்று ஸர்வ: (நா. 25) ஏக: (725) நைக: (726) கிம் (729) யத் (730) தத் (731) என்ற நாமங்களை ஸர்வ நாமங்களாகக் கொண்டு ஸர்வஸ்மை, ஏகஸ்மை, நைகஸ்மை, கஸ்மை, யஸ்மை, தஸ்மை எனச்சொல்வது வழக்கம். இவை ஸர்வ நாமமல்ல என்பவர் ஸர்வாய, ஏகாய, ‍நைகாய, யதே, ததே என்பர்.

விஷ்ணுஸஹஸ்ரநாமம் என்ற பெயரிருந்தாலும் முதலில் விச்வம் எனக் கூறப்பட்டுள்ளது. விஷ்ணுர் விச்வம் வஷட்கார: என சுலோகம் அமைத்துவிடலாம். எனினும் பீஷ்மர் முதலில் விஷ்ணு என்ற சொல்லைக் குறிப்பிடாமல் விச்வம் என்பதைக் குறிப்பிடுவதில் ஒரு தனிப் பொருள் உண்டு. எல்லாமானவர் என்பதே இங்கு முக்கியமாக விளக்கப்படுகிறது. எப்படி எல்லாமானுர் என்பதை விளக்கவே விஷ்ணு: என்ற சொல். அதனுல் அதற்கு இரண்டாம் இடம் கிட்டியுள்ளது. சிவபெருமானுக்கு வழக்கில் விச்வநாதர் என்றபெயருண்டு. விச்வம் என்றே குறுக்கிச் சொல்வதுண்டு. விச்வம் என்ற நாமத்தை மேலும் விளக்கவந்தவை (நா. 51, 88, 117, 149, 238, 239, 425, முதலியவை. (1)

2. விஷ்ணு: - உள்ளும் வெளியும் பரவியிருப்பவர். எங்கும் நிறைந்திருப்பவர்.

காரணமாய் காரியத்தில் பிரவேசித்த பிரும்மம் ஓரிடத்தில் தங்காமல் விச்வம் முழுவதும் பரவி நின்றது. (விஷ் - வ்யாப்தி - பரவி நிற்பது). தேசம் காலம் வஸ்து இவற்றுல் அடங்காமல் நிற்பது வியாப்தியாகும். விச்வத்தின் உள்ளும் புறமும் நீக்கமற வியாபித்திருத்தலால் அவர் விஷ்ணு[1]

1. अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः । (तै.आ. १०.१३)

*தன்னால் படைக்கப் பெற்றதனைத்திலும் தன் சக்தியைச் செலுத்தி ஸ்திரப்படுத்தியதாலும் அவர் விஷ்ணு. (விச்—ப்ரவேசம் - நுழைத்தல்) ஒவ்வொரு மன்வந்தரத்திலும், தனித் தனியாக மனு, மனு புத்திரர்கள், தேவர்கள், இந்திரன், ஏழு ரிஷிகள் என்று ஐந்தின் அமைப்பு ஒன்று உலக ஆட்சிக்காக இறைவனால் படைக்கப்படுகின்றது. லோக ரக்ஷணத்திற்காக அமைந்த இந்த ஐந்திலும் விஷ்ணுவின் சக்தி உட்சென்று, ஆட்படுத்தி உலக ஆட்சிக்குரிய சக்தியைத் தருகிறது. இப்படித் தமது விபூதிகளாகத் தோன்றியவற்றுள் சக்தியாக உட்புகுந்தவர். அதனால் விஷ்ணு:. (நா. 258. 657)*

*தன்னால் படைக்கப் பெற்றதனைத்திலும் அவர் நுழைந்திருப்பது, அவை அவை அதன் அதன் இடத்தில் நிலைத்திருப்பதற்காகவே. பூமியும் வான மண்டலமும் ஒன்றோடொன்று மோதாமல் இருக்கின்றன. ''கேநேமே வித்ருதே உபே''. ''இந்த வானையும் பூமியையும் அவை ஒன்றுடன் ஒன்று மோதிக் கொள்ளாமல் அதனதன் இடத்தில் தாங்குபவர் யார்?'' என்று கேட்டு ''விஷ்ணுநா வித்ருதே பூமீ. இதி வத்ஸஸ்ய வேதநா'' ''விஷ்ணுதான் தன் சக்தியைச் செலுத்தித் தாங்குகிறார். இப்படி வத்ஸர் என்பவர் கண்டறிந்துள்ளார்'' என்று தைத்திரீயாரண்யகம் விடை தருகிறது. (1-8) அப்படி விஷ்ணு வியாபித்திருப்பதால்தான் அவை காந்தியுடன் விளங்குகின்றன. ஈர்ப்பு (தாரண) சக்தியாக நின்று அதனதன் வட்டத்தில் அவை அவை சுழலும்படி பூமி முதலியவற்றைத் தாங்குவதற்காகவே எல்லாவற்றிலும் வியாபித்துள்ளவர் விஷ்ணு.*

*அதிதியின் பன்னிரண்டாவது பிள்ளையாக, இந்திரனின் தம்பியாகப் பிறந்தவர். விஷ்ணு என்று அந்த அவதாரத்தில் பெயர். குள்ளமான உடலமைப்பு கொண்டவரானபடியால் வாமனர். உலகளந்த பெருமானதலால் த்ரிவிக்ரமர். (நா. 39)* (2)

१. सर्वे देवाः संविशन्तीति विष्णुः । (अथर्वशिखा) अथ कस्मादुच्यते महाविष्णुमिति, यस्मात्स्वमहिम्ना सर्वान् लोकान् सर्वान्देवान्सर्वानात्मनः सर्वाणि भूतानि व्याप्नोति व्यापयति, स्नेहो यथा पललपिण्डं शान्तमूलं ओतप्रोतं अनुव्याप्तं व्यतिषक्तो व्याप्यते व्यापयते । तस्मादुच्यते महाविष्णुमिति । (नृसिंहपूर्वतापिनी २-१०)

3. வஷட்கார:- வஷட்காரமாயிருப்பவர். வசப்படுத்துபவர்.

*தேவதைகளைக் குறித்து ஹவிஸ்ஸை அக்னியில் ஹோமம் செய்யும்போது ஸ்வாஹா வஷட் என்ற மந்திர சக்தி மிக்க இரு சொற்கள் சொல்லப்படுகின்றன. ஸ்வாஹா வஷட் என்ற சொற்களைக் கேட்டவுடனேயே தேவதை மகிழ்ச்சியடைகிறது. ஆஹுதியைப் பெறுவதற்குத் தேவர்களை அழைப்பதற்கேற்ற இனிய சொற்கள் இவை. ''எனது பொருளாக இதுவரை இருந்ததை எனது என்ற அபிமானத்தை விட்டு தேவதையினுடையதாக ஆக்கிவிடுகிறேன், இனி அது அவரது வசத்தில் அவர் விருப்பப்படி பயன்படுத்தப்படட்டும்'' என்ற பாவனையுடன் தேவதையின் வசத்தில் அதனை ஒப்புவிப்பதே வஷட்காரம். இந்த மந்திர சக்தியும் தெய்விக சக்தியும் மிக்க சொல்லாக இருப்பவராதலால் வஷட்கார:. எந்த தேவதையைக் குறித்து வஷட் எனச் சொல்லி ஹோமம் செய்யப்பட்டாலும் அதனை ஏற்பவர் யஜ்ஞரூபியான பகவானே. அவரே அந்தந்த தேவதை வடிவில் பலனைத் தருகிறார். அதனால் இவரை உத்தேசித்தே 'வஷட்' என்று கூறப்படுவதால் பகவானே வஷட்கார: (நா. 971, 982)*

*''பகவத் ஸங்கல்பத்தால் ஸ்ருஷ்டி தொடங்கியது. விராட் வடிவிலிருந்து அவரது பொறிகளாகவும் மனமாகவும் அக்னி இந்திரன் முதலான தேவர்கள் தோன்றினார்கள். படைப்பு பற்பல சக்திகளின் பரஸ்பரக் கூட்டுச் செயலால் 'தானியங்கி' யாகவேண்டும். இந்தக் கூட்டுச் செயல் சரியாக நிறைவேறுவதற்கெனவே யஜ்ஞம் என்ற வேள்வியமைப்பை ஏற்ற ஸாதனமாகத் தேவர்கள் கண்டனர். அதற்குரிய ஸாதனங்கள் அப்போது படைக்கப்பெறாமையால் மனத்தால் அதனை முதலில் செய்தனர்.'' (புருஷஸூக்தம்). தேவர்களின் தேவதாசக்தி வேள்வியால் ஊட்டம் பெறுகிறது. படைக்கப்பட்ட உயிரினம் தான் விரும்பியதைத் தேவர்களின் அருளால் பெறுகிறது. தேவர்கள் வேள்வியால் மகிழ்ந்து அருள்புரிகிறார்கள். இப்படித் தேவர்களுக்கும் உயிரினங்களுக்குமிடையே பாலம் போல் வேள்வி அமைகிறது. தேவர்களை ஹவிர்பாகம் பெறுவதன் பொருட்டு உயிரினத்திற்கு வசப்பட்டவர்களாகவும், உயிரினத்தைத் தன் தேவை நிறைவின் பொருட்டுத் தேவர்களின் வசப்பட்டவர்களாகவும் ஆக்கி ஒன்றுக்கொன்று உதவும்*

*அமைப்பை யஜ்ஞரூபியான பகவான் ஏற்படுத்தி யுள்ளாராகையால் அவர் வஷட்கார: வசப்படுத்துகிற யாகவடிவினர்.*[1]

*யாகதேவதைகளில் ஒருவர் வஷட்காரர். அந்த தேவதை வடிவில் இருப்பவர். பகவான் பிறர் வசப்படுபவர் அல்ல. தாம் வியாபித்து உள்ளதனைத்தையும் தன் வசப்படுத்தித் தனது விருப்பப்படி நடப்பனவாகச் செய்து கொண்டவர். அதனால் வஷட்கார:* *(3)*

4. பூத – பவ்ய – பவத் – ப்ரபு: – கடந்தது, வரவிருப்பது, நிகழ்வது இவற்றிற்கு பிரபு.

*நேற்றிருந்தது கடந்தது. காலம் அதனை ஜீர்ணித்து விட்டது. இன்று நிகழ்வது காலத்தின் உட்பட்டுக்கொண்டிருக்கிறது. நாளை வரவிருப்பது காலத்திற்கு உட்படவிருக்கிறது. கடந்தது இன்றில்லை, நாளை இருக்கப் போவதில்லை. நிகழ்வது நேற்றில்லை. நாளை இருக்கப் போவதில்லை. வரவிருப்பது நேற்றுமில்லை, இன்று மில்லை. இவை காலத்திற்கு உட்பட்டவை. பகவானின் இருக்கை (ஸத்தா) நித்யமானதாகையால் அவர் எப்போதுமிருப்பவர். அவரே கடந்ததற்கும் நிகழ்வதற்கும் வருவதற்கும் பிரபுவாக இருக்க முடியும். அவர் முப்பரிமாணமுள்ள காலவரைக்கும் அப்பாற்பட்டவர். பூதபவ்ய பவத் ப்ரபு:*[2] *(நா. 290)* *(4)*

5. பூதக்ருத் – தோன்றியதனைத்தையும் படைத்தவர், அவ்வாறே சிதைத்தவர்.

*படைப்பினால் உருக்கொண்டவை அனைத்தும் பூதங்கள். அவை தனித் தனியாக உருக்கொள்வதும் தனித் தனியாகத் தோன்றுவதும் அவைகளின் இருக்கைக்கு அடையாளம். அப்படி இருக்கை கொண்டவை பூதங்கள். ரஜோகுணத்தை ஏற்று பிரும்மாவாகிப் பூதங்களாகிற உலகைப் பகவான் படைக்கிறார் என்று புராணங்கள் கூறும். (பூதாநி கரோதி)*[1] *அவ்வாறே தமோகுணத்தை ஏற்று ருத்திர*

---

1. देवान् भावयतानेन ते देवा भावयन्तु वः ।
   परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ (गीता. ३.११)
2. ईशानं भूतभव्यस्य न ततो विजुगुप्सते ॥
   (कठो. २-५, बृ.आ. ४,४,१५).
3. स विश्वकृत् स हि सर्वस्य कर्ता । (बृ.आ. ४,४,१३)

வடிவில் இந்த பூதங்களைச் சிதைத்து உருவில்லாமல் செய்கிறார். (பூதானி க்ருந்ததி க்ருணோதி). தன்னிச்சைப்படியே இந்தப் படைப்பை நடத்துகிறார். அதனால் ஸ்ருஷ்டியில் அவர் ஸ்வதந்திரர். அவ்வாறே ஸம்ஹாரத்திலும். ஒரு பொருளைப் படைப்பது என்பதே முன்னிருந்த பொருள்நிலை அழிந்துவிடும்போதுதான் நேர்கிறது. அரிசியானது சாதமாகும்போது அரிசி அழிந்தது. சாதமானது உடலில் சேர்ந்ததும் உடல் தாதுக்களானது, சாதம் அழிந்தது. அதனால் ஸம்ஹாரமும் ஸ்ருஷ்டியும் அடுத்தடுத்து நேர்ந்தே பரிணாமம் ஏற்படுகிறது. அதனை இரு பொருள் கொண்ட இந்த நாமமே விளக்குகிறது. (5)

6. பூதப்ருத் - தோன்றியதனைத்தையும் தாங்குபவர்.

தோன்றியதனைத்தையும் அவை லயமடையும்வரை பூமியைப் போல் தாங்குபவர். அரசனைப் போல் காப்பவர். தாயைப் போல் போஷிப்பவர். (பூதானி பிபர்தி). பகவான் ஸத்வகுணத்தை ஏற்று விஷ்ணு வடிவினராகி உலகை ரக்ஷிக்கிறார் என்று புராணம் கூறும். சக்கிரத்தின் வட்டங்களைத் தாங்குகிற குடம் (அச்சு) சக்கிரத்தைச் சிதைவுறாமல் காப்பதைப்போல் பகவான் எல்லாவற்றின் பொறுப்பையும் தான் சுமந்து காப்பாற்றுபவர்[1] (யோக க்ஷேமம் வஹாம்யஹம் - கீதை - 9-22) உலகை வராஹமூர்த்தியாக ஆதிசேஷராக ஆதிகூர்மராக ஆதாரசக்தியாகத் தாங்குபவர். (6)

7. பாவ:- எல்லாவற்றின் இருக்கையாகவும், இருக்கும் பொருளாகவும் இருப்பவர்.

தானிருப்பது வெளிப்படையாகத் தெரியும்பொருட்டு பகவான் தந்த விளக்கமே இந்த பிரபஞ்சம். அவரது இருக்கை இந்த பிரபஞ்ச வடிவில் உணரப்படுகிறது. பிரபஞ்சத்தை ஒதுக்கித் தனித்தும் அவருக்கு இருக்கை (ஸத்தா) உண்டு. இந்த தனித்த இருக்கையை ஸந்மாத்திரம் என்பர். உலகமாகத் தோன்றினார் என்றவுடன் தோற்றத்தைத் தொடர்கின்ற வளர்ச்சி தேய்வு மறைவுபோன்ற நிலை மாற்றங்கள் இவருக்கு இல்லை. ஸத்தா என்ற ஒரே நிலை மட்டும் உண்டு.[2] அதனால் எப்போதும் இருப்பவர்.

1. विश्वं बिभर्ति भुवनस्य नाभिः । [तै.आ. १०,१)
2. अस्तीत्येवोपलब्धव्यः । [कठ. उ.६.१३]

எல்லாவற்றின் ஸத்தையாகவும் இருப்பவர். (ஸத் இருப்பது. அதன் தன்மை ஸத்தா) மூலப்பொருள் ஒன்றாக இருந்தாலும் அந்தந்தப் பொருளை அந்தந்தப் பொருளாகவே தனித்து இருக்கும்படி செய்பவர். (நா. 478, 701)

விசேஷத் தோற்றங்களுடன் காண்பவர். அவை விபூதிகள் எனப்படும். மயிலானது தோகையால் அழகுபெறுவது போல் அந்த விசேஷத் தோற்றங்களால் பகவானுக்குத் தனித் தோற்றம் அமைகிறது. (7)

8. பூதாத்மா - எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பவர்.

பொருள் அனைத்திலும் அந்தர்யாமியாயிருப்பவர். எல்லாமானார். அவற்றில் , உள்ளும் புறமும் நீக்கமற நிறைந்திருந்தார், பலவாகப் பிரிந்தார், தேவதாசக்திகளாகவும் மற்றவையாகவும் ஆனார். இவற்றின் இடையே ஒன்றோடொன்றை இணைக்கும் வேள்வியானார். காலத்தால் கடந்தது நிகழ்வது வரப்போவது என்ற நிலையைத் தோற்றுவித்தார். பொருள்களாகப் படைத்தார். காப்பாற்றினார். அவை மாற்றுருப் பெற அவற்றை அழித்தார். எல்லாவற்றிலும் உள்ள இருக்கையாகவும் தனித்தும் இருந்து தனது இருக்கையை வெளிப்படுத்தினார். எல்லாவற்றினுள்ளும் ஆத்மாவாக இருந்து அவற்றைச் செயல்படச் செய்தார். இவ்வாறு விசுவம் என்று தொடங்கி 'பூதாத்மா' வரை உள்ள 8 பெயர்கள் ஸ்ருஷ்டியின் விளக்கத்தை தருகின்றன.

ஸ்ருஷ்டி முறை - இது பற்றிச் சிறிது அதிக விளக்கம் தேவை. உபநிடதங்களிலுள்ளவற்றைப் புராணங்கள் வரிசைப்படுத்தி விளக்குகின்றன. புராணங்களில் காண்பவையையே ச்ருதி யுக்திகளால் தர்சனங்கள் நிரூபிக்கின்றன. கபிலரின் ஸாங்க்யம், பதஞ்சலியின் யோகம், கௌதமரின் நியாயம், கணாதரின் வைசேஷிகம், ஜைமினியின் மீமாம்ஸை, வியாஸரின் வேதாந்தம் என்ற ஆறு தர்சனங்கள் ஈசுவரனையும் உலகையும் ஆராய்ந்து தத்துவ நிலையில் கண்டறிந்து விளக்கம் தந்தன. இவற்றின் நிருபணங்களில் பல்வேறு யுக்திகளைக் கையாண்டுவெவ்வேறு கோணங்களில் ஆராய்கையில் ஆங்காங்கு கருத்து வேற்றுமைகள் பல காணப்படும். எனினும் அவற்றில் காண்கிற ஸ்ருஷ்டி பற்றிய பொதுவான கருத்து பற்றி இங்கு சிறிது தெரிந்துகொள்ளலாம். ஸ்ரீமத் பாகவதத்தில் கபிலாசார்யர் தன் தாயான தேவஹூதிக்கு

உபதேசித்ததை ஒட்டி இந்த நிரூபணம் அமைகிறது. (பாகவதம் 3-26)

''உலகம் புதிதாகப் படைக்கப்பெறவில்லை. முன் படைக்கப்பட்டு வாழ்ந்து ஈசனிடம் லயித்த உலகமே புதிதுபோல் மறுபடி படைக்கப்பெறுகிறது. அதனால் உலகம் அநாதி. உலகமாய் இருந்ததனைத்தும் லயத்தின்போது அதனதன் மூலப்பொருள்களில் சென்று அடங்கின. அந்த மூலப்பொருள்களும் தம் தம் மூலப்பொருள்களில் அடங்கின. எல்லாவற்றின் மூலப்பொருளான மூல-ப்ரக்ருதியும் ஈச்வரரிடம் அடங்கிற்று. படைப்பிற்கும் ரக்ஷணத்திற்கும் லயத்திற்கும் பயன்பட்ட ஈசுவரரின் சக்தியான மாயையும் அவருள் அடங்கிற்று. அவருக்கு அறிவிருந்தும் அறிவால் உணரத்தக்க வெளிப்பொருள் இல்லாததால் அறிவது, அறியப்படும் பொருள், அறிபவர் என்ற திரிபுடி தேவைப்படாத நிலை. பேரிருக்கையாக, பேரொளியாக, பேரறிவாக, பேரானந்தமாக இருந்த நிலை. ஒவ்வொரு உயிரினமும் தான் புரிந்த செயல்களின் பின் விளைவாகத் தனித்திருக்கும் வினைப்பயன், (ஜீவாத்ருஷ்டம் - கர்ம), எப்போதும் மாறுபட்டுக்கொண்டே இருக்கின்ற இயற்கை நிலை (ஸ்வபாவம்), ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்களை நேரத்திற்கேற்றபடி அமைத்து மாறுபாட்டிற்கு உதவுகிற காலம் என்ற மூன்றும் மாயையினுள் அடங்கிவிட்டன. ஜீவாத்ருஷ்டம், ஸ்வபாவம், காலம் என்ற மூன்றும் படைப்பிற்கு உதவும் தத்துவங்கள். அவைகளும் அடங்கின நிலையில் பிரகிருதி தனித்திராத நிலையில் நிர்குணமாக, அஸங்கமாக, வெளிநோக்கில்லாத (ப்ரத்யக்தாம), ஸ்வயம் ப்ரகாசமாக, விபுவாக, ஸ்வதந்த்ரனாக, ஈசன் இருந்த பரப்பிரும்ம நிலை - பரமபுருஷ நிலை. அறிவால் உணரப் பெறுகின்ற வெளிப்பொருள் இல்லாத நிலை.

வெளிப்பொருளைக் காண்கிற ஸங்கல்பம் அவருள் எழுந்தது. அவருள் அடங்கியிருந்த மாயை எனும் சக்தி வெளிப்பட்டு ஸங்கல்பத்தால் செயல்பட்டது. பிரளயகாலத்தில் உள்ளடங்கியிருந்த காலம், ஜீவாத்ருஷ்டம், ஸ்வபாவம் இவை இயக்கம் பெறாமல் அமைந்திருந்தது மாறி, மூலப் பிரகிருதி இயங்கிற்று. ஈசன், தன்னை அந்தர்யாமி, ஜீவன் என்று இரு கூறுகளாக்கிக்கொண்டார். மாயையின் சக்தியால் உலகைப்படைக்கின்ற ஈச்வரன் - அந்தர்யாமி. மாயையால் கட்டுண்டு பிரகிருதிக்குள் அடங்கியவன் ஜீவன். ஈசுவரனுக்கு

மாயை அடங்கி நடக்கும். மாயைக்கு ஜீவன் அடங்கி நடப்பான். காலம், அத்ருஷ்டம், ஸ்வபாவம் என்ற மூன்றும் ஆட்டுவித்தபடி ஜீவன் ஆடுவான். ஈசுவரன் இவற்றைக்கொண்டு உள்ளே அந்தர்யாமியாக நின்றும் வெளியே காலவடிவிலும் உலகை ஆட்டுவிப்பான். இந்த ஆட்சியில் பிரகிருதி 24 நிலைகளை அடைகிறது. அத்தகைய நிலைகளை அடைந்தவற்றைத் தத்துவங்கள் என்பர்.

**மூலதத்துவங்கள்** - மூலப் பிருகிருதியானது ஸம நிலையில் உள்ள ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்கள் உள்ளது. காலக் கடிகாரம் இயங்கத் தொடங்கவில்லை. அதனால் மூலப்ரகிருதியில் ஒரு மாற்றமும் விளக்கம் பெறவில்லை. இது முதல் தத்துவமான **அவ்யக்தம்**. இதுதான் உலகின் விதை நிலை. அதனைக் காலம் இயக்கிற்று. ஜீவாத்ருஷ்டம் செயல்பட்டது. ப்ரக்ருதி மாறத் தொடங்கியது. அந்த முதல் அசைவு கண்டதும் பரமபுருஷன் தனது சித்சக்தியை உட்செலுத்தினார். பிரகிருதி சூலுற்றது. ஒளி மயமான ஒரு பெரும் பொருள் தோன்றிற்று. தங்கம்போல் ஒளியிட்டதால் **ஹிரண்மயகோசம்** எனவும், வடிவில் முட்டைபோல் இருந்ததால் **அண்டகோசம்** எனவும் உருவில் பெரிதிற்கும் பெரிதாய் இருந்ததால் **மஹத்** எனவும் பெயர் பெற்றது. இது ஸ்ருஷ்டியில் இரண்டாவது படி. இது உலகின் விதை முளைவிட்டுள்ள நிலையாகும்.

பிரகிருதியில் மேலும் மாறுதல் ஏற்பட்டது. பிரளய காலத்தை ஒட்டி எல்லாவற்றையும் மறைத்திருந்த தமஸ் எனும் மறைப்பு அப்போது விலகிற்று. சுத்த ஸத்துவகுணம் நிரம்பிய பேரொளியாக சாந்தமாக அது விளங்கியது. ஆதி பௌதிக நிலையில் இது **மஹத் தத்துவம்**. ஆத்யாத்மிக நிலையில் இது **சித்த தத்துவம்**. சித்தம் பேரறிவாகும். மாசற்ற தெளிவு அமைதி இவை இதன் சிறப்புகள். காண்பது முகப்பது முதலிய சிற்றறிவுகளாகப் பிரிபடாத நிலை. எல்லா சிற்றறிவுகளுக்கும் மூலமான ஊற்றுக்கண், இதுவே பேரறிவு.

மஹத் தத்துவம் ஈச ஸங்கல்பத்தால் மேலும் விரிவு அடைந்தது. இறைவனின் கிரியா சக்தி அதனுட் புகுந்தது. **அஹங்காரம்** என்ற பிரிவினைத்தத்துவம் தோன்றியது. ஆதி பௌதிக நிலையில் இது அஹங்கார தத்துவம். ஆத்யாத்மிக நிலையில் பஞ்சபூதங்கள் மனம் பொறிகள் புத்தி இவற்றின் தோற்றுவாய். அஹங்காரத்திலும் கிரியாசக்தி செயல்பட அதுவும் மூன்றாகியது. 1. **ஸாத்விகம்**. (வைகாரிகம் என்றும் இதற்குப்

பெயர் உண்டு) 2. தைஜஸம்; (ராஜஸம் என்றும் பெயருண்டு.) 3. தாமஸம் (பூதாதி) என. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களும் , தன் ஸமநிலையையும் கூட்டுச் சேராமையையும் இழந்து ஏற்றத்தாழ்வுடன் ஒன்றோடொன்று கலந்தன. கூட்டில் அதிக அளவில் சேர்ந்ததற்கு மற்ற இரண்டும் துணையாகச் செயல்பட்டன. ஸத்வ குணம் அதிகமானது ஸாத்விகம், ரஜோ குணம் அதிகமானது ராஜஸம், தமோ குணம் அதிகமானது தாமஸம். இந்த குணங்களின் ஏற்றத்தாழ்வு காரணமாகப் பிரிவினை துரிதமாக விரிவாக நிகழத் தொடங்கியது. செயலாற்றுபவன், செயலுக்கு உதவுபவை, செயல் என்ற திரிபுடி வெளிப்பட்டது.

ஸாத்விகம் என்ற அஹங்காரப் பிரிவிலிருந்து மனம் எனும் தத்துவம் தோன்றிற்று. பொருளில் நாட்டம் (ஸங்கல்பம்) பொருளைப் பற்றிப் பலவாறு கல்பனை செய்வது, (விகல்பம்) பொருளைப் பெறும் ஆசை, (ராகம்) இவை இதன் சிறப்புகள்.

ராஜஸ அஹங்காரத்திலிருந்து புத்தி தத்துவம் தோன்றியது. பொறிகளால் ஏற்படும் உணர்வாகிய சிற்றறிவே இதன் சிறப்பு. காதால் ஒரு ஒலி கேட்டதும் சித்தம் அதனை கிரஹிக்க முற்படுகிறது. இந்த ஒலியைக் கேட்கிறேன் என்ற புத்தியும், இந்தப் பொருள் நல்லது, நல்லதல்ல, கேட்க விரும்புகிறேன், கேட்க விரும்ப வில்லை என்று மனமும், இதனை நான் கேட்கிறேன் என அஹங்காரமும் உணர்த்துகின்றன. புத்தி கெட்ட நிலையில் இதுவா அதுவா என்ற ஐயம், சங்கு மஞ்சள் நிறமுடையது என்பது போன்ற தவறான அறிவு, சிப்பியில் வெள்ளி என்பது போன்ற பிரமை, ஒன்றும் புலப்படாத தூக்கம் இவை ஏற்படுகின்றன. புத்தியின் நல்ல நிலையில் சரியான பொருளைச் சரியாக உணர்ந்துகொள்வதும், நினைவும் ஏற்படுகின்றன. ராஜஸ அஹங்காரம் மேலும் விரிவுபட்டுப் புத்திக்குச் செய்தி அளிக்கின்ற கண் காது மூக்கு நாக்கு தோல் என்ற ஐந்து ஞானேந்திரியங்களும் கால் கை வாய் குதம் குறி என்ற ஐந்து கர்மேந்திரியங்களும் தோன்றின. பிராணனாக இயங்கும் கிரியா சக்தியும் புத்தியாக இயங்கும் ஞான சக்தியும் இவற்றின் மூலம் வெளிப்பட்டன.

தாமஸமான அஹங்காரத்திலிருந்து சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என்ற ஐந்து ஜட உலக மூல தத்துவங்களும்

அவற்றையே தன் வடிவாகக்கொண்ட ஆகாசம் வாயு அக்னி ஜலம் பிருதிவீ என்ற ஸூக்ஷ்ம பூதங்களும் தோன்றின.

அஹங்காரம் மனம் புத்தி பொறிகள் பஞ்ச பூதங்கள் இவைகளைத் தனித் தனியாகப் படைத்த ஈசுவரன், படைப்பிற்காகக் காலம் ஜீவாத்ருஷ்டம் ஸ்வபாவம் இவற்றைத் துணைகொண்டு இவற்றில் தான் நுழைந்து ஒன்றோடொன்று கலக்கச் செய்து எண்ணற்ற தலை கை கால் முதலிய வடிவமைப்புகளுடன் விராட் என்ற ஸமஷ்டி உயிரினத்தைத் தோற்றுவித்தார். மனம் புத்தி பொறிகள் இவை தனித் தனியாக இயங்க அவற்றுள் தேவதா சக்தியாக நுழைந்தார். மனத்தில் சந்திரன். புத்தியில் பிரும்மா, அஹங்காரத்தில் ருத்திரன், வாக்கில் அக்னி, கைகளில் இந்திரன், கால்களில் விஷ்ணு, குதத்தில் ம்ருத்யு, குறியில் வருணன், காதுகளில் திக்தேவதை, தோலில் ஓஷதிகள், கண்களில் அக்னி, நாக்கில் அச்வினீ தேவதைகள், மூக்கில் வாயு என அந்த தேவதா சக்திகள் உட்புகுந்தும் விராட் வடிவில் இயக்கம் ஏற்படவில்லை. அதில் தானே ஜீவனாக க்ஷேத்திரஜ்ஞனாக, ஆத்மாவாக சித்தத்தை தன் அதிஷ்டானமாகக் கொண்டு உட்புகுந்தார். உடன் அந்த ஸமஷ்டி சரீரம் செயல்பட்டது. வினைக்கேற்ப அதனைப் பல உயிரினங்களாக ஆக்கினார். ஒவ்வொன்றிலும் தானே ஆத்மாவாக நிஸ்ஸங்கனாக. அழிவற்றவனாக, ஒளிமயனாக, ஆனந்தமயனாக இருந்து ஆட்டிவைக்கிறார்.'' கபிலரின் விளக்கம் இது.

இவரையே பூத - ஆத்மா என ஒவ்வொரு உயிரினத்திலும் உள்ள ஆத்மாவாக விஷ்ணுஸஹஸ்ர நாமம் குறிப்பிட்டுள்ளது.[1] உலகமே அவரது உடல். உலகமாகிய உடலுக்குள் உறையும் ஆத்மா அவர். (8)

**9. பூதபாவந:- தோன்றியதனைத்தையும் வாழச் செய்பவர்.**

நிலைத்த இருக்கை, பேரறிவு, பேராநந்தம் என்ற தமது இயல்புகளில் ஒரு கதிர்த் துளியை ஜீவனுக்கு அளித்து அவனை

1. एष ते आत्मा अन्तर्याम्यमृतः । [बृ.आ. ३,५,४,७] एक एव हि भूतात्मा भूते भूते व्यवस्थितः । [अमृतबिन्दूप-१२] एको वशी सर्वभूतान्तरात्मा एकं रूपं बहुधा यः करोति । [कठ २-५-१२] विश्वात्मानं परायणं । (तै.आ. १०.१३.१)

வாழவைக்கிறார். உயிரினத்தைப் பல்கிப் பெருகும்படி செய்கிறார். அனைத்தின் தனித் தனியான இருக்கையும் பெருக்கமும் வாழ்வும் அவரிடம் அடங்கியுள்ளன. (ஜகந்நியாமகனான பகவானின் சிறப்புகளை இந்த ஒன்பது நாமங்கள் விளக்குகின்றன) (9)

पूतात्मा परमात्मा च मुक्तानां परमा गतिः ।
अव्ययः पुरुषः साक्षी क्षेत्रज्ञोऽक्षर एव च ॥ ३३ ॥

பூதாத்மா பரமாத்மா ச முக்தாநாம் பரமா கதி:.
அவ்யய: புருஷ: ஸாக்ஷீ க்ஷேத்ரஜ்ஞோऽக்ஷர ஏவ ச. ॥ 33 ॥

10. பூதாத்மா - தூய ஆத்மா.

புறத்தூய்மை மற்றொன்றின் கலப்பால் கெடும். அவர் ஒருவரே; மற்றொன்றில்லை. அவரிடம் எதுவும் ஒட்டாது. அவரும் எதிலும் ஒட்டிக்கொள்வதில்லை. உடலுள்ளவரையில் உட்புறத்தூய்மை கெடும். அவருக்கு உடல்பந்தமில்லை. என்றேனும் உடலுடன் தோன்றினாலும் அவ்வுடல் அவரது இச்சையால் ஏற்றுக் கொண்டது; அதில் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்களின் சாயை விழக்கூடும். ஆனால் அது ஸ்படிகலிங்கத்தின் மேல் செம்பரத்தம்பூ வைத்தால் லிங்கத்தில் சிவப்பு காணுமாப்போல், அவருடன் ஒட்டாத குணச்சாயைதான்.[1] உயிரினத்திற்கு உடல் பிராரப்ததால் அமைந்தது. அந்த உடல் அந்த உயிரின் விருப்பு வெறுப்பிற்கு உட்பட்டதல்ல. குணச்சேர்க்கை முன்பிறப்புவாஸனையால் அமைந்தது. அதுவும் தவிர்க்க முடியாதது. அதனால் உயிரினத்திடம் காண்கிற தூய்மை செயற்கையானதும் தாற்காலிகமானதுமாகும். ஈசனிடம் தூய்மை இயற்கையில் அமைந்தது. படைப்பு, காப்பு, மறைப்பு என்ற முத்தொழில்களில் ஈடுபட்டவராயினும் அவரிடம் அத்தொழில் களால் ஏற்படும் பாதிப்பு ஒன்றும் ஏற்படுவதில்லை. பூதம் (पूत) இயற்கையாகத் தானே சுத்தமானது. இறைவன் தானே சுத்தமானவர். சுத்தமே வடிவானவர். (10)

11. பரமாத்மா - எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட ஆத்மா

காரியமான உலகமும் அதன் காரணமான மூலப்ரக்ருதியும் எவரிடமிருந்து தோன்றினவோ அவர் பரம:. தான் விரும்பிய

1. साक्षी चेता केवलो निर्गुणश्च । (श्वेताश्वतर ६.११) स एव वा एष शुद्धः शून्यः शान्तः । (मैत्रायणी २.४)

பொருளை அடைகின்றவரும் (ஆப்நோதி) அதனைத் தன்னுடைய தாக்கிக்கொள்கின்றவரும் (ஆதத்தே) அதனை அனுபவிக்கின்றவரும் (அத்தி) எப்போதும் அழிவற்று இருக்கின்றவரும் (அஸ்தி) ஆத்மா. அந்த ஆத்மாவானவர் ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று சரீரங்களிலும் அபிமானியாக விளங்கும்போது ஜீவாத்மா என்று கட்டுக்கு அடங்கியவராகிறார். இத்தகைய கட்டுக்கு உட்படாதவர் பரம - ஆத்மா.[1] கட்டுக்கு உட்படாமைக்குக் காரணம் (1) அவர் நித்யர், காலத்திற்கு உட்படாதவர். (2) அவர் சுத்தர், ஆசை முதலிய அழுக்குகள் அற்றவர். (3) அவர் புத்தர், தானே தன்னை விளக்கிக்கொள்ளக்கூடிய பேரொளியும், பேரறிவும், பேரானந்தமுமாயிருப்பவர். (4) அவர் முக்தர், எல்லாக் கட்டுகளுக்கும் காரணமான அவித்யை என்ற அறியாமைக் கட்டில்லாதவர். (5) அவர் ஸ்வபாவர். தன்னிருக்கையைத் தன் வசத்தில் கொண்டவர். நாமிருக்கப் பலவற்றை நாம் எதிர்பார்ப்போம். காற்றிருந்தால்தான் சுவாஸிக்க முடியும். இப்படிப் பல நமது இருக்கைக்குத் தேவைப்படும். அவரது இருக்கை அவரது வசமாயுள்ளது. அதனால் ஸ்வபாவர். முக்குணங்களால் ஏற்படுகின்ற இத்தகைய எந்தக் கட்டுப்பாடுமற்றவரானதால் அவர் பரம - ஆத்மா.

இந்த உடலுக்கு ஜீவனாக நான் ஆத்மா என்பது போல் தனக்கெனத் தனி ஆத்மா ஒன்றைக் கொண்டிராதவர். எல்லா வற்றிற்கும் ஆத்மா, ஆட்டிப்படைப்பவர்களிலே மேலானவர், ஸர்வேச்வரர், தமக்குத் தாமே ஈச்வரர். (11)

12. முக்தாநாம் பரமா கதி: - முக்தி பெற்றவர்களுக்குச் சிறந்த கதியாயிருப்பவர்.

கதி:- அடையவேண்டிய இடம். எதனை அடைந்தால் அடையவேண்டியதனைத்தையும் பெறமுடியுமோ, எதனை அடைந்த பிறகு இன்னம் பெறவேண்டியதென ஒன்றிராதோ, எதனை அடைந்த பிறகு பெற்றதை நழுவவிட்டுத் துன்புற வாய்ப்பிரா தபடி, பெற்றது நம்மைவிட்டகலா திருக்குமோ அது பரமா - கதி:.

---

1. स यथा सोम्य वयांसि वासोवृक्षं संप्रतिष्ठन्ते एवं ह वै तत्सर्वं पर आत्मनि संप्रतिष्ठते । [प्रश्न. ४,७] विज्ञानात्मा पुरुषः स परेऽक्षरे आत्मनि संप्रतिष्ठते । [प्रश्न ४-९] एवं विदित्वा परमात्मरूपं - प्रयाति शुद्धं परमात्मरूपम् [कैवल्य २,२३].

*நாம் விரும்பி அடைய இலக்காக இருப்பவை கதி:. நாம் அடைய விரும்பியது அனைத்தும் அந்த விருப்பத்தின் எல்லையாக இருப்பதில்லை. ஒன்றை அடைந்ததும், அது போதாமலோ, அது திருப்தி தராமலோ, அதை அடைந்த காரணத்தாலேயோ மற்றொன்றை நாடச் செய்யும். அப்படி நாட்டம் வளர்ந்துகொண்டே போகும். நாட்டம் ஆசையுள்ளவரை தான். ஆசை அவித்யை உள்ளவரை ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கும். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று சரீரங்களும் என்னுடையவை நான் என்ற அபிமானமே அவித்யை. இந்த அவித்யை என்ற கட்டு நீங்கியவர்கள், பற்றற்றவர்கள், முக்தர்கள். அவித்யையால் ஏற்பட்ட ஆசை கோபம் வெறுப்பு கலக்கம் முதலியவை அவர்களிடமில்லை. அதனால் தெளிவானவர்கள். அவர்கள் விரும்பி நாடும் மேலான தேவதை - முக்தாநாம் பரமா கதி:. இவரை அடைந்த பிறகு அவர்கள் வேறொன்றையும் நாடாதிருப்பதால், மற்றொன்றைப் பெறுவதற்கெனப் பிறப்பிறப்புகளுக்கு உட்படுவதில்லை.*[1]

*எல்லாவற்றிற்கும் மேலாக முக்தர்கள் முடிவாகச் சேரும் இடமாயிருப்பவர். தம்மையடைந்தவர் தம்மை விட்டகலாமல் இருக்கச் செய்பவர். முக்திக்குச் சாதனமாகக்கொண்ட உபாஸனங்களில் உள்ள ஏற்றத் தாழ்வால் ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்ற முக்தி நிலைகள் அமைகின்றன. அபவர்க்கம் என வர்க்கப் பிரிவற்ற மேலான முக்தி நிலையும் உண்டு. இவற்றில் எந்நிலையை அடைபவரும் தான் அடையவேண்டிய தேவதையாக - இடமாகக் கருதப்படுவர் - முக்தா நாம் பரமா கதி: (முக்தாநாம் பரமாயை கதயே நம:) (12)*

13. அவ்யய: - அழிவும் மாறுபாடுமற்றவர், நீங்காதவர்.

*வ்யயம் - நீக்கம், குறைவு, அழிவு. நம்மை விட்டு அகலுவதால் பொருள் செலவாகிறது. நம்மிடம் அதன் அளவு குறைகிறது, பின் அழிகிறது. அதனை வியயம் என்கிறோம். நம்மிடம் முன் இல்லாதிருந்து இப்போது கூடுவதை ஆயம் என்கிறோம். செலவானது நம் வரை அழிவடைந்ததே. பண்டமாற்றாக மாறியிருந்தால் மாறுபாட்டிற்கு உட்பட்டது. அழிவும், மாறுபாடும், நீக்கமும், தோன்றிய பொருள்*

1. सा काष्ठा सा परा गतिः (कठ. २.३.११) यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि स्थिताः । अथ मर्त्योऽमृतो भवति । (कठ. २.३.१४).

அனைத்திற்கும் இயற்கையானதே. மூப்பு என்ற மாறுபாடு, மரணம் என்ற அழிவு இரண்டுமற்றவரானதால் அஜரர், அமரர், அதனால் அவ்யயர். எங்கும் நீக்கமற நிறைந்தவரானதால் அகலாதவர். (ந வ்யேதி)[1] (நா. 30) தன்னை அடைந்தவர்களைத் தன்னை விட்டகலாமல் இருக்கச் செய்பவர்; அவர்களைத் திரும்பப் பிறப்புச் சுழலில் உட்படுத்தாதவர். (13)

14. புருஷ: - புரத்தில் இருப்பவர். எதற்கும் முன்னிருந்தவர். நிறைவுறக் கொடுப்பவர்.

ஒன்பது வாயில்கள் கொண்ட இவ்வுடல் புரம். இதனுள் ஆத்மாவாக அந்தர்யாமியாக உறைபவர்[2] (புரே சேதே) ''நானே எல்லாவற்றிற்கும் முன் இருந்தவன், அதனால் புருஷன்'' என வேத வாயிலாக எல்லாவற்றிற்கும் முன் இருந்தவர் எனத் தம்மை அறிமுகப்படுத்திக்கொண்டவர்[3] (பூர்வம் ஆஸ).

புரு - பெரும்பொருள். சிறந்த பொருள். உருவமடைந்த பொருள். அத்தகைய பெரிய சிறந்த பொருள்கள் அனைத்தையும் தனது விபூதிகளாக உலகிற்குக் காட்டி அவற்றுள் இருப்பவர்.[4]. விபூதி - பெருமை விளக்கம் பெறுமிடம் (புருஷு ஸீததி) பெரும்பலன்களைத் தருபவர். அவரைக் காணும் பேரானந்தமே பெரும்பலன். (புரூணி ஸநோதி) நிறையத் தருபவர்.[5] (புரு ஸநோதி) தன் அருளால் முக்தி பெற்றவர்களுக்கு, அடைய வேண்டிய பெரும்பலனாகத் தன்னையே வழங்குபவர்.

பெரும் உலகங்களையும் பிரளயத்தின்போது உருவிழக்கச் செய்பவர். (புரூணி ஸ்யதி). எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர். (பூரயதி ஸீததி ச). (நா. 406) (14)

15. ஸாக்ஷீ - எல்லாவற்றையும் நேரிடையாக உணர்பவர்.

நடுவில் வேறொன்றும் குறுக்கிடாதபடி, உள்ளதை உள்ளபடி

---

1. अजरोऽमरोऽव्ययः (बृहदारण्य. ६.४.१५) अशब्दमस्पर्शमरूपमव्ययं (कठ. १.३.१५), 2. स वा एष सूक्ष्मोऽग्राह्योऽदृश्यः पुरुषसंज्ञकः (मैत्रायणी २.५) अव्यक्तात् पुरुषः परः । (कठ. १.३.११), 3. पूर्वमेवाहमिहासमिति । तत्पुरुषस्य पुरुषत्वम् । [तै.आ. १.१३], 4. नृषद्वरसत् (कठ. २.२.२), 5. एष उ एव वामनीः (छान्दोग्य ४,१५,३)

பார்ப்பவராகையால் ஸாக்ஷீ. (ஸாக்ஷாத் பச்யதி)[1] உயிரினத்தின் உணர்வுகள் அனைத்தும் பொறிகளால் உணரப் பெறுபவை. பொறிகளின் குறைகள் உணர்வில் குறைவை ஏற்படுத்தும். பேரறிவே வடிவாயுள்ள பரமன் பொறிகள் மூலம் பார்ப்பதில்லை. ஸாக்ஷாத்தாக நேரிடையாக அறிவால் பார்க்கிறார். அதனால் அதில் குறைகள் ஏற்பட வாய்ப்பில்லை. பார்ப்பதில் குறையின்றி, உள்ளதை உள்ளபடி பார்த்து, விருப்பு வெறுப்பிற்கு உட்படாமல் பார்த்ததைப் பார்த்தபடி சொல்பவனையே சாட்சியாகக் கொள்வது உலகியல்பு.

தன் அருளால் முக்திப்பேறு பெற்றவர்களைத் தாமும் நேரில் கண்டு மகிழ்பவர். *(15)*

16. க்ஷேத்ரஜ்ஞ:- க்ஷேத்திரத்தை அறிந்தவர்.

ஸாக்ஷியாக இருப்பவர் க்ஷேத்திரஜ்ஞனாகவும் இருக்கிறார். உலகை விளையாட்டாகப் படைக்க முற்பட்ட ஈச்வரன் தன்னையே மூலப்பொருளாகக் கொண்டார். மூலப்பொருள் (பிரகிருதி) இரு கூறுகியது. பரா (மேலானது), அபரா (தாழ்ந்தது) என. 'ஜீவேந ஆத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி' ஜீவனாக உள்நுழைந்து பெயரும் வடிவும் விரிவடையச் செய்வேன் என்ற ஸங்கல்பப்படி விராட் வடிவில் உட்புகுந்த ஆத்மா (நா. 8-11) பரா எனப்படும் மஹத் அஹங்காரம் என்ற தத்துவங்களின் விரிவமைப்பாகிய உடல் பொறி மனம் புத்தி அஹங்காரம் முதலியவை அபரா எனப் படும். (கீதை 7, 4-5) பரா என்பதை ஜீவன் க்ஷேத்ரஜ்ஞன் எனவும். அபரா என்பதை சரீரம் க்ஷேத்ரம் என்றும் கூறுவர். (கீதை 13, 1-2)[2]

க்ஷேத்திரம் - விதையைப் பயிராக்கத் தகுதிபெறப் பண்பட்ட பூமி, வயல்; அனாதிகாலமாய் வழிபாடு முதலியவற்றால் தெய்விகம் மிக்கதாய் செய்யப்பட்ட புண்ய ஸ்தலம். வயலாகிய இந்த உடலில் முன் வினையை விதையாக விதைத்துத் தற்போது செய்யும் வினைகளாகிய கர்மங்களை நீராக்கி வார்த்து உரிய காலத்தில் ஸுக துக்க அனுபவமாகிய அறுவடையைச் செய்கிறோம். தரிசுபூமியை இறைவனது கோயிலாக்கிப்

---

1. साक्षी चेता केवलो निर्गुणश्च । (ब्रह्मोपनिषत्) समस्तसाक्षिं सदसद्विहीनं प्रयाति शुद्धं परमात्मरूपं । [कैवल्य २४], 2. यश्चेतनमात्रः प्रतिपूरुषं क्षेत्रज्ञः संकल्पाध्यवसायाभिमानलिङ्गः (मैत्रायणी-२.५)

புனிதமாகச் காத்து வழிபாடு முதலியவற்றால் அதில் தெய்விகத் தன்மையை ஏற்றியதும் தரிசு நிலம் கூட க்ஷேத்திரமாகிறது. அதுபோன்று இந்த உடலும் தெய்விகத் தன்மைக்கு இருப்பிடமானவுடன் நடமாடும் கோயிலாக க்ஷேத்திரமாக ஆகிறது. உடலைத் தான் என்றும் தன்னுடையதென்றும் உணர்ந்து உடலிடத்தில் அபிமானம் கொண்ட ஜீவன் - க்ஷேத்திரஜ்ஞன். வயலையே தானாகத் தனதாகப் பார்த்துச் சுற்றி வரும் விவசாயி போன்றவன்.

மற்றொருவருடையதிலிருந்தும் தன் பூமியைப் பிரித்து காட்டி விதைப்பதற்கு ஏற்றபடி சீர்திருத்திப் பண்படுத்தப்பட்டுப் பாதுகாப்பாக வரப்பும் வேலியும் அமைந்துள்ள இடம் வயல். பூமி எல்லாம் வயல் அல்ல. பண்படுத்தப்படாத திடலும் வயலல்ல. அதுபோன்று இந்த உடல் வினைப்பயனை அனுபவிப்பதற்கேற்பப் பண்படுத்தப்பட்டது. அதற்குள்ள ஸாதனங்கள் (பொறிகள் - அந்தக்கரணம் முதலியன) அமைந்தது. விவசாயி தனது வரை உணர்ந்து நிலத்தின் பண்பை உணர்ந்து எப்படி விவசாயம் புரிவானோ அதுபோன்று ஜீவனாகிய இந்த விவசாயியும் "இந்த ஸ்தூல ஸூக்ஷ்ம உடலைக்கொண்டு அதன் காரணமான வாஸனை எனும் வாசியை உணர்ந்து நியதிக்கு உட்பட்டு 'ஆற்றக்கூடிய செயல் இவ்வளவே" என்று நிதானித்து உணர்ந்தவன். தரிசு நிலமாகக் கிடைத்ததைப் புண்ய க்ஷேத்திரமாக ஆக்குபவன்போல் இதனை நடமாடும் கோயிலாக மாற்ற வழி தெரிந்தவன். அந்த க்ஷேத்ரஜ்ஞ வடிவில் ஒவ்வோர் உயிரினுள்ளும் உட்புகுந்துள்ள ஆத்மாவாக இருப்பவர்.' க்ஷேத்திரங்கள் கோடிக்கணக்கானவை. ஆனால் அதில் கோயில் கொண்டுள்ள இறைவன் ஒருவரே. அதுபோன்று உடலமைப்பு கணக்கற்றதாயினும் அவற்றினுள் உறையும் ஆத்மா ஒருவரே. உடலமைப்பின் காரணமாக வேறுபட்டது போன்ற தோற்றமளிக்கும் பெயர்கள் பல பெற்றவர். முக்தர்கள் அடையுமிடம் க்ஷேத்திரம் - பரமபதம். முக்தர்கள் தனது பரமான நிலையை அனுபவிப்பதற்கென அமைந்துள்ள இடம். அந்த க்ஷேத்திரத்தை அறிந்தவரும் அதனை முக்தர்களுக்குக் காட்டுபவரும் பகவான். (16)

17. அக்ஷர: - தேய்வுறுதவர்.

தோன்றி மாறுபட்டுத் தேய்வது க்ஷரம். மணல்குன்று காற்றில் சரிந்து மறைவதுபோல், புதுப்பானையிலிட்ட நீர் கசிந்து காய்ந்து

*மறைவதுபோல், தேய்வு புலப்படாதவாறு காலத்தால் தேய்வது க்ஷரம். இந்த உடல் பல பரிணமங்களை அடைந்து தேய்ந்து மறைவதால் க்ஷரம். ஆனல் அதனுள் வியாபித்துள்ள ஜீவன் உருமாறுவதோ தேய்வதோ இல்லை. அதனல் அக்ஷரன். உலகம் க்ஷரம். பரம்பொருள் அக்ஷரம். அழிவற்றவர்.*

*எழுத்தை அக்ஷரம் என்கிறோம். அ என்ற எழுத்து அக்ஷரம். ஆனல் அ சேர்ந்த சொல் க்ஷரம், சொல்லின் பொருள் க்ஷரமானதால் சொல்லும் க்ஷரமாகிவிடுகிறது. அ என்ற எழுத்தும் அதன் பொருளும் நித்தியமானவை. எழுத்து சிதைவதில்லை. உருமாறுவதில்லை. அதனல் அது அக்ஷரம். க்ஷேத்ரஜ்ஞனை ஜீவன் அக்ஷரன். அக்ஷரரான பரமாத்மாவே தனித் தனி ஜீவனகக் காணப்பட்டாலும் அவர் அக்ஷரரே[1]. க்ஷேத்திரஜ்ஞோ அக்ஷர ஏவச என்றதில் ஏவச என்ற சொல் க்ஷேத்திரஜ்ஞ நிலையிலும் அவர் அக்ஷரரே என்ற பொருள் தரும். அக்ஷரமும் அவரே என்பதால் க்ஷரமும் அவரே என்றும் பொருள் கூறலாம். (நா.381)*

*சுவைக்கச் சுவைக்கக் குறைவுறாதபடி எல்லையற்ற இனிய குணனுபவத்தை அளித்து அந்த அனுபவம் முடிவு பெறாமல் வளர்ந்து கொண்டிருக்கச் செய்பவர். (17)*

**योगो योगविदां नेता प्रधानपुरुषेश्वरः ।**
**नारसिंहवपुः श्रीमान् केशवः पुरुषोत्तमः ३४ ॥**

**யோகோ யோகவிதாம் நேதா ப்ரதாந புருஷேச்வர:.**
**நாரஸிம்ஹவபு: ஸ்ரீமான் கேசவ: புருஷோத்தம: 34.**

**18 யோக: - யோகமாயும் யோகத்தால் பெறப்படுபவராயும் உள்ளவர்.**

*துன்பம் தரவல்லதைத் தவிர்ப்பதும் இன்பம் தருவதாக அதனை ஆக்கிக் கொள்வதும் யோகம்.[1]* **"து:க்க ஸம்யோக வியோகோ யோக:"** *(கீதை) பொருளின் மதிப்பறிந்து - உள்ளதை உள்ளபடி*

---

1. परमेवाक्षरं प्रतिपद्यते स यो ह वैतदच्छायमशरीरमलोहितं शुभमक्षरं वेदयते यस्तु सोम्य स सर्वज्ञः सर्वो भवति । [प्रश्न. ४.१] एतद्वै तदक्षरं गार्गि । [बृहदा. ३.८.८].

அறிந்து அதனை வாழ்க்கைக்குப் பயன்படுவதாக ஆக்கிக் கொள்வது யோகம். வைரத்தைக் கல் என்றோ, கல்லை வைரம் என்றோ மதிப்பிடாமல் உண்மையான மதிப்பீடு யோகம். பயன்படாதவற்றையும் பயன்தருமாறு அமைப்பது யோகம்[2]. "யோக: கர்மஸு கௌசலம்:" (கீதை) வெற்றியும் தோல்வியும் பாதிக்காமல் இன்பத்தால் மதர்த்தும் துன்பத்தால் நலிந்தும் விடாமல் சமநிலையில் நின்று பலனைக் கருதாமல் கருத்தூன்றிக் கர்மமே கண்ணாகிச் செயல்படுவது யோகம்[3]. "ஸமத்வம் யோக:" (கீதை) பிரிந்திருப்பதைச் சேர்த்து வைப்பது யோகம். ஒன்றாக இருந்ததை நடுவில் வந்த போலித் தடுப்பு பிரித்திருக்குமாயின் உண்மை நிலை அறிந்து திறத்துடன் செயல்பட்டு அத்தடுப்பை அகற்றினால் அவை இயற்கையாக எளிதில் கூடிவிடும். மனமும் பொறிகளும் அறிவை மயக்கி 'வாஸுதேவ: ஸர்வம்' எல்லாம் அவரே என்ற உண்மை நிலையை மறைத்தன. வெவ்வேறாக சத்ருமித்ரர்களாக விருப்பு - வெறுப்புகளுக்கு ஆட்படுவையாகப் பார்க்கச் செய்தன. மனத்தையும் பொறிகளையும் முன் விளக்கிய யோகப் பயிற்சிகளால் கட்டுப்படுத்தியதில். யமம் முதலிய எட்டங்கங்கள் கொண்ட யோகம் அனுபவத்தில் கூடியது. அதனால் பொறிகளை மனத்தால் அடக்கி மனத்தைப் புத்தியால் அடக்கியதும் ஆத்மாவைப் பலவாகப் பார்த்த பேத நோக்கு அகன்றது. ஜீவாத்ம - பரமாத்ம ஐக்ய பாவனை நிலைத்தது. இந்த ஐக்ய பாவனையைத் தொடர்ந்துணர்கிற ஸமாதி நிலையாகிய யோகம் கூடிற்று. அந்த பாவனையால் ஏற்பட்ட அத்விதீயப் பிரும்மானுபவம் கூடிற்று. இப்படி ஸாதனமாகிய யோகப் பயிற்சிகளும் அதனால் கிட்டிய அத்வைதப் பிரும்மானந்தானுபவமுமான யோகமாய் இருப்பவர் பகவான் விஷ்ணுவே. அத்தகைய முக்திக்கு வேறொன்றையும் புறச்சாதனமாக எதிர்பாராத அந்தரங்க ஸாதனம் அவரது பேரருளே. அவர்தான் முக்தியைத் தருபவர். முக்திக்கு உபாயமாய் இருப்பவர்.

எந்தப் பணியும் செயலளவில் ஒன்றுதான். அதனை உயர்ந்த நோக்குடன் செய்யும்போது சிறந்த பலனைத் தருகிறது. அதுவே யோகம். (1) கையிலிருந்த அரிசி மாவு தரையில் சிந்தியது. எறும்புகள் அதனைச் சாப்பிட்டன (2) எறும்புகளுக்கு உணவளிக்கும் எண்ணத்துடன் எறும்பு வளைகளில் மாவைப் போட்டோம். எறும்புகள் சாப்பிட்டன. (3) எறும்பும் அந்தப் பரம்பொருளான வாஸுதேவனே என்ற பாவனையுடன்

எறும்புகளுக்கு நிவேதனமாக மாவைப் போட்டோம். எறும்புகள் சாப்பிட்டன. இந்த மூன்றிலும் அரிசி மாவு செலவானதும் எறும்புகள் சாப்பிட்டதும் விளைந்தன. விளைவுகள் ஒரே விதம். முதல் முறையில் சிந்தின அரிசி மாவு பற்றிச் சிறிதும் சிந்தனையில்லை. அது வீணானதால் புறக்கணிக்கப்பட்டது. இரண்டாவதில் பூதஸௌஹ்ருதம் என்கிற பரிவு மனத்தை நெகிழ வைத்தது. எறும்பு உண்டதில் ஒரு மகிழ்ச்சி. மூன்றாவதில் பக்தி கலந்த படைப்பு. மனத்தூய்மையால் எறும்பில் இறைவனைக் கண்ட செயல் திறம். இதுதான் யோகம். இச்செயலைப் பெரும்பயன் தரவல்ல தாக்கிய செயல் நேர்த்தி. பரிவால் ஏற்பட்ட நெகிழ்ச்சியும், பக்தியால் இறைவனைக் கண்டதும் அவரருளால் பெறப் பட்டவை. இந்த கூடாததைக் கூட்டி வைத்த யோகமாயிருப்பவர். எறும்புக்கு மட்டும் உணவாக இருந்ததை ஸர்வ பூதாத்மாவின் உணவாக்கிய யோகமாயிருப்பவர் *(18)*

19. யோகவிதாம் நேதா - யோகம் அறிந்தவர்களை அழைத்துச் செல்பவர்.

யோகம் - செயல் திறத்திலிருந்து ஜீவாத்ம - பரமாத்ம ஐக்கியம் வரை உள்ள பயிற்சி முறைகள். (நா -18) அதுபற்றி அறிந்தவர்களையும் அதுபற்றிய தத்துவ விளக்கத்தில் ஈடுபட்டவர்களையும், ஐக்கிய பாவனை பெற்றவர்களையும் வழிகாட்டி அழைத்துச் செல்பவர். அஸதோ மா ஸத்கமய என்ற நம் வேண்டுகோளை ஏற்று நம்மை அழைத்துச் செல்பவர் (ப.4) ஆத்ம ஸாதனையில் தீவிரமாக ஈடுபட்டவனுக்குத் தேசிகனாக, வழிகாட்டியாக, குருவாக முன் வந்து ஸாதனையைத் தீவிரப்படுத்தி ஆத்ம தத்துவத்தை உணரும்படி செய்பவர் **(தேசிகரூபேண தர்சிதாப்யுதயாம்)** அப்படி ஞானியாகி இகபர சிந்தனையின்றி ஆத்ம ஸாதனையிலுள்ளவனின் யோக க்ஷேமங்களை நிர்வகிப்பவர் **(தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம்** - கீதை 9- 22) (நா .850) முக்திக்கு நேரிடையான உபாயமாகாத வேறு வழிகளில் வந்தவர்களையும் பரிவுடன் முக்தியை அடையச் செய்பவர். *(19)*

20. ப்ரதாந புருஷேஶ்வர:- பிரகிருதிக்கும் ஜீவனுக்கும் ஈச்வரன்

*பகவத் ஸங்கல்பத்தால் மாயை, அவரிடமிருந்து வெளிப்பட்டு இந்த உலகின் மூல தத்துவமாகிய பிரகிருதி வடிவடைந்து அதனுள் ஆத்மாவை ஜீவனுக்கி உட்புகச் செய்தது. பிரகிருதி இயற்கையின் மூல தத்துவம். அதனுல் பிரதானம். ஆகாசம் முதலியவற்றைத் தன்னுள் தாங்கி நிற்பதால் அது பிரதானம். (வியதாதி கார்யம் அஸ்மிந் ப்ரதீயதே) பிராணன் முதலியவற்றிற்கு முன் உடலினுள் செல்வதால் ஜீவன் புருஷன். (புரதி - அக்ரே கச்சதி) அந்த பிரகிருதிக்கும் ஜீவனுக்கும் ஈச்வரர் - அவற்றை ஆட்கொண்டவர், மாயையையும் மாயையால் கட்டுண்ட ஜீவர்களேயும் தன் விருப்பப்படி ஆட்டுவிப்பவர்[1]*

*உயிரிரனத்தைச் சார்ந்ததனைத்தும் புருஷன் ப்ரகிருதி என்ற இரு அமைப்புகள் கொண்டவை. புருஷன் தாமரை இலே மேல் உள்ள நீர் போல் பற்றற்றவன். அவன் அருகில் இருப்பதால் செயல் படுவது பிரகிருதி. பிரகிருதி தான் செய்ததனைத்தையும் புருஷன் செய்ததாக உலகிற்குப் புலப்படுத்துகிறது. உலகம் புருஷனின் செயலாகவே அனைத்தையும் உணர்கிறது. ஜீவன் பற்றற்றவன். ஸ்தூல - ஸூக்ஷ்ம உடலாக அமைந்த பிரகிருதி செயல்படும்போது ஜீவன் செயல்படுவதாக ஆகிக் கட்டுப்படுகிறுன். இந்த இரண்டையும் இப்படிக் கட்டுப்படுவதாக ஆக்குவதும், கட்டிலிருந்து விலக்குவதும் அவர் செயலே. (20)*

21. நாரஸிம்ஹவபு:- நரஸிம்ஹவடிவினர்.

*மாயையைத் தன் வசத்தில் கொண்ட பகவான் பொருந்தாததைத் தன்னிடத்தில் பொருத்திக் காட்ட எடுத்த வடிவம் நரஸிம்ஹர். இருகால்பிராணிகளிடையே மனிதனும் நான்கு கால் பிராணிகளிடையே சிங்கமும் வீர்யத்தாலும் பெருமையாலும் உயர்ந்தவை. மனிதன் சிங்கம் இவை இரண்டின் வடிவமைப்பும் ஒருங்கே காணும்படி தோன்றியவர்[2].*

---

1. प्रधानक्षेत्रज्ञपतिर्गुणेशः । [श्वेताश्वतर ६.१६]
2. अथ कस्मादुच्यते नृसिंहमिति । यस्मात्सर्वेषां भूतानां ना वीर्यतमः श्रेष्ठतमश्च, सिंहो वीर्यतमः श्रेष्ठतमश्च, तस्मान्नृसिंह आसीत्परमेश्वरो जगद्धितं वा एतद्रूपं यदक्षरं भवति । मृगो न भीमः कुचरो गरिष्ठाः । (नृसिंहपूर्वतापिनी २.१३)

அடியார்களின் நலனை முன்னிட்டுப் பொருந்தாத வடிவமைப்பாயினும் அதனைக் கொள்ளத் தயங்காதவர். மீனாக ஆமையாகப் பன்றியாக எடுத்த தோற்றங்களைப் போல் நரசிங்கத் தோற்றத்தில் சிறப்பு அதிகம். எல்லா அங்கங்களிலும் முக்கியமானது தலை. எல்லா அறிவாளியான உயிரினத்திலும் மனிதன் சிறந்தவன். அவனது அறிவின் கேந்திரம் தலை. வலிவுமிக்கவைகளில் சிங்கம் சிறந்தது. அதன் வலிவு அதன் கால் நகங்களிலும் உடலிலும் உள்ளது. மனித உடல்பெறும் நுண்ணுணர்ச்சியைச் சிங்க மூளை உணராது. சிங்க மூளை இடும் உத்தரவை மனித உடலால் நிறைவேற்ற இயலாது. மனிதத் தலையும் சிங்க உடலும் கொண்டு நிகழ்த்த வேண்டிய இரணியகசிபு வதத்தைச் சிங்க முகமும் மனித உடலும் கொண்டு நிகழ்த்தியது ஆச்சரியமானது. அறிவின் கேந்திரமாகத் தலைக்குத் தனி முக்கியத்துவமில்லை என்பதை இப்படியே ஹயக்கிரீவரிடமும் விநாயகரிடமும் காணலாம். பேரறிவே வடிவாக நிற்கும் இறைவனுக்கு அறிவின் கேந்திரம் என்ற ஒரு இடம் கற்பிப்பது அவசியமில்லை அல்லவா? எதனாலும் எதனையும் ஸாதிக்கவல்ல பகவானின் தனிச் சிறப்பை நாரஸிம்ஹவபு: என்ற நாமம் தொடங்கி ஸர்வப்ரஹரணாயுத: என்ற கடைசி நாமம் வரை ஒவ்வொரு நாமமும் விளக்குகின்றது.

சிங்கத்தையும் சிங்கத்தால் நேர்ந்த கோரக் காட்சியையும் கண்டவன் திகிலடைந்து கதறுவான். சிறுவன் பிரஹ்லாதன் ஆனந்தம் மேலிடப் பகவானைப் பார்த்து நிற்கிறான். இதுவும் பொருந்தாததொன்று. வடிவுடன் தோன்றுவது எதுவும் இடத்தால் கட்டுப்படும். இங்கு இருப்பது அங்கு இராது. இங்கும் அங்கும் நிறைந்திருக்கும்படி வடிவுடன் இருப்பவர் என்று ''தூணிலும் இருப்பார், துரும்பிலும் இருப்பார்'' எனப் பிரஹ்லாதன் குறிப்பிட்ட ஒவ்வோர் அணுவிலும் இருப்பவராகத் தன்னைக் காட்டிக்கொண்டதும் விந்தையே. உயிருள்ள தாயிடமிருந்து தோன்றிய சிசு உயிருள்ளதாக இருக்கும். ஜடமான கம்பத்திலிருந்து தோன்றியவர் சேதனமாக இருப்பது விந்தை. இப்படி மாயையால் பொருந்தாததைப் பொருத்திக் காட்டுபவர் நாரஸிம்ஹவபு:. பயங்கரமான தோற்றத்தைக் கண்டு பிரஹ்லாதன் பயப்படாமல் அன்புடன் அணுகும்படி செய்தது அந்தக்கோரச் சிங்க வடிவில் இருந்த பேரழகு என்பதை அடுத்த நாமம் காட்டும். வ்யூஹநிலையிலும் காட்சிதருபவர். (ப 25) (21)

22. ஸ்ரீமான் - லக்ஷ்மீ தேவியை எப்போதும் தன்னிடம் கொண்டவர்.

*எல்லாச்செல்வங்களுக்கும் ஈசுவரியான லக்ஷ்மி தேவி பகவானின் திருமார்பை விட்டு என்றும் அகலாதவள். நித்யமாக அவரிடம் பொருந்தியிருப்பவள். அத்தகைய அழகிய தாம்பத்தியச் சிறப்பு உலகின் ஆதி தம்பதிகளிடம் மட்டுமே காணத் தக்கது.*

*ஸ்ரீ: - திவ்ய மங்கள ஸௌந்தர்யம். மனித உடலும் சிங்க முகமும் கொண்டு சேராச் சேர்க்கையைக் காட்டித் தோன்றிய வடிவிலும் திவ்ய மங்கள ஸௌந்தர்யச் சேர்க்கை இருந்ததை நாரஸிம்ஹவபு: என்ற நாமத்தை ஓட்டி வரும் இந்நாமம் குறிப்பிடுகிறது.*

*சிறப்பைக் காட்டித் தன்னைப் புகலிடமாகக் காட்டிப் புகலடைந்தவர்களைக் காக்கின்றவள் ஸ்ரீயான லக்ஷ்மி. படைப்பு காப்பு லயம் என்ற மூன்று தொழிலிலும் பகவானுக்குத் துணை நிற்கும் சக்திகளான ஸரஸ்வதி லக்ஷ்மீ ருத்ராணி என்ற மூவரும் தேவியின் அம்சங்களே. புத்தி சக்தி, நான்கு புருஷார்த்தங்கள், செல்வம், பெருமை, அழகு, அணி, கல்வி இவையனைத்தும் ஸ்ரீயின் சிறப்புகள். இந்தச் சிறப்புகளைத் தருகின்ற தேவியைத் தன்னிடம் நித்தியமாக தன்னை விட்டு அகலாதவளாக இருக்கச் செய்பவரானதால் ஸ்ரீமான். (நா. 178, 220, 613) (22)*

23. கேசவ: - அழகிய கேசங்களைக் கொண்டவர்.

*நர்சிங்க வடிவில் அவரது பிடரி மிக அழகானது. பகவானின் கேசங்களின் அழகை 'சிகீ கநக மாலயா' என மாரீசனும் 'காகபக்ஷதரம் வீரம்' என விச்வாமித்ரரும் ஸ்ரீராமரிடம் கண்டனர். 'குடிலகுந்தலம் கோமலானனம்' என கோபிகள் கிருஷ்ணனிடம் கண்டனர். பகவானின் திவ்ய மங்கள வடிவமைப்பிற்கேற்ற கேசங்கள் - அபிரூபா: கேசா: (ச. பா.) கறுத்துச் சுருண்டு சேர்ந்து உடல்வனப்பிற்கேற்ப இணங்கி இருக்கிற அழகிய கேசங்கள் உள்ளவர்.*

*க: - பிரும்மா, அ: - விஷ்ணு, ஈச: - பரமசிவன், இம்மூன்று வடிவங்களையும் தம் வசத்தில் கொண்டவர், தன்னிஷ்டப்படி அந்தந்த வடிவில் தோன்றுபவர். (க - அ - ஈச - வ:) 12 வ்யூஹ நிலைகளில் முதல் தோற்றம். (ப 25) கேசி எனும் அஸுரனைக்*

கண்ணன் கொன்றதால் கேசவன் என்ற பெயர் என விஷ்ணு புராணம் கூறும். கேசவன் எனும் நாமம் க்லேசத்தைப் போக்கும் என உலக வழக்கு. கேசவ: க்லேசநாசந: (நா. 648) (23)

24. புருஷோத்தம: - புருஷர்களுள் சிறந்தவர்.

தான் அடைய விரும்பியதை நன்மை தீமை உணர்ந்து திட்டமிட்டுச் செயலாற்றி அடைபவன் புருஷனாகிய ஜீவன். (ஆண் பெண் என்ற வேற்றுமை இங்கு இல்லை). மன உறுதியும் லட்சியநோக்கும் செயல் திறனும் கொண்டவன். (சு-10). அவர்களுள் சிறந்தவர். எதனையும் ஸாதிக்க வல்லவர்.

ஆண்களில் சிறந்தவர். பரம்பொருளின் ஆணழகு ராமனிடமும் கண்ணனிடமும் பெண்ணழகு லலிதையிடமும் காண்பதாகப் புராணம் கூறும். வ்யூஹாவதாரத்தில் ஒருவர்.

புருஷன் என இரண்டு வேறுபட்ட கூறுகளைக் குறிப்பிடுவர். முதலாமவன் தேய்ந்து மறையும் ஸ்தூல உடல் மட்டுமே தான் என எண்ணுபவன். இவன் க்ஷரபுருஷன். உடல் மறைந்ததும் தானும் மறைந்துவிடுவதாக நினைப்பான். இது வெளியே தோன்றுகிற அன்னமய கோசமான ஜட உலகமாகிய கூறு. இது உண்டாக்கப் பெறுவதால் கார்யம். மற்றொன்று இந்த ஜட உலகின் மூல தத்துவமாகிய மூலப்பிரகிருதி - மாயை. வாஸனைகளுக்கும் வினைகளுக்கும் மூல ஸ்தானம். உலகின் காரணமானது. அது அக்ஷரம். இந்தக் காரியமான உலகத்தையும் காரணமான மாயையையும் காட்டிலும் வேறுபட்ட பரமாத்மா. அன்னமய - பிராணமய - மனோமய - விஞ்ஞானமய - ஆனந்தமய கோசங்களுக்கு வெளிப்பட்டவர் அவரே புருஷோத்தமன் (கீதை 15,16-18).

புருஷர்கள் சேதனரானதால், அறிவாளிகள். ஜடர்கள் அல்ல. அவர்களை மூன்றாகப் பிரிக்கலாம் (1) பந்தத்திலிருந்து விடுபடாத பாமரர்கள் (2) முக்தியடைந்தவர்கள் (3) முக்தி பெற்றவர்களில் பரம ஸம நிலை பெற்ற நித்யஸூரிகளான அநந்தர், கருடர், விஷ்வக்ஸேனர் முதலானோர். இவர்களனைவருக்கும் தலைவர். உலகை வியாபித்துத் தாங்கியுள்ளமையால் தனிச் சிறப்பு பெற்றவர். இந்த புருஷர்களைவிடச் சிறந்தவர். (24)

सर्वः शर्वः शिवः स्थाणुर्भूतादिर्निधिरव्ययः ।
सम्भवो भावनो भर्ता प्रभवः प्रभुरीश्वरः ॥ ३५ ॥

ஸர்வஶ் ஶர்வஶ் ஶிவஸ் ஸ்தாணுர் பூதாதிர் நிதிரவ்யய:.
ஸம்பவோ பாவநோ பர்த்தா ப்ரபவ: ப்ரபுரீச்வர: 35.

25 ஸர்வ: - எல்லாமாயிருப்பவர்.

*மூலகாரணமாயும் அதன் விளைவுகளாயும் உள்ள எல்லாவற்றிற்கும் தோற்றமும் மறைவும் தருவதாலும் எல்லாவற்றிற்கும் மூல காரணமானதாலும் ஸர்வ:*[1] இதன் நான்காம் வேற்றுமை ஒருமை ஸர்வஸ்மை என வரும்.

*ஸர்வதி - கச்சதி - ஜாநாதி என்றவாறு எல்லாவற்றையும் எப்போதும் அறிவதாலும் எல்லாவற்றிலும் நுழைவதாலும் ஸர்வ:, ஸர்வாய* என்று இதன் 4ம் வேற்றுமை ஒருமை.

*எதனையும் தனக்கு உதவியாக எதிர்பார்க்காமல் எதனையும் புறக்கணிக்காமல் எல்லாமாயிருந்து எல்லாவற்றையும் தானே பொறுப்பேற்று நிர்வகிப்பவர். அவருக்குச் செய்யும் ஆராதனம் அனைத்தின் ஆராதனமாகும். துரௌபதியிடம் பெற்ற ஒரு பருக்கை அளவு உணவு உலகினர் அனைவரின் வயிற்றையும் நிரப்பியது. அப்படி எல்லாமாயிருப்பவர். (25)*

26. சர்வ:- எல்லாவற்றையும் தன்னுள் ஒடுக்குபவர்.

*இது சிவனுக்குள்ள பெயர். ஸம்ஹார காலத்தில் ருத்திரனாகி எல்லாவற்றையும் சிதைத்துத் தன்னுள் ஒடுக்குபவர் (ச்ருணாதி) உருவச் சிதைப்பே ஹிம்ஸையாகிக் குரூரமான செயலாகத் தோன்றும். புத்துருவைத் தருவதற்கு இது முன்னோடியான செயலானபடியால் ஹிதமானதே. உணவாகவிருக்கும் அரிசி உருச்சிதைவால் அன்னமாகிறது. அன்னமாக்க முன்னுருச் சிதைவு தேவை. இப்படிச் சிதைப்பவர்.*[2] *ஜீவர்களின் பாபங்களைச் சிதைப்பவர். சிவனது எட்டு சரீரங்களில் பூமியும் ஒன்று. பூமி மூர்த்தியாக இருப்பவர் சர்வர். (26)*

---

1. सर्वो वै रुद्रः । विश्वं भूतं भुवनं जातं जायमानं च यत् । सर्वो ह्येष रुद्रस्तस्मै रुद्राय नमो अस्तु । (तै.आ. १०.२४)
2. सर्वेभ्यः सर्वशर्वेभ्यो नमस्ते अस्तु रुद्ररूपेभ्यः । [तै.आ. १०.१९]

27. சிவ:- மங்களாமாயிருப்பவர்

*இதுவும் சிவனுக்குள்ள பெயர். சிவ வடிவில் உள்ளவர். (நா 600) மங்களமே வடிவானவர். வடிவாலும் பெயராலும் செயலாலும் மங்களமானவர். மங்களமான அநேக கல்யாண குணங்கள் உள்ளவர்; சாந்தி உள்ளவர்; ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்திருப்பது)* நித்யத்ருப்தி *(நித்தியமான நிறைவு)* அநாதிபோதம் (அறிவுச் சாதனங்களை எதிர்பாராத பேரறிவு) ஸ்வாதந்திரியம் (எதனையும் எதிர்பாராத பேராற்றல்) அலுப்த சக்தி *(எதனாலும் குன்றாத பேராற்றல்)* அநந்த சக்தி *(முடிவற்ற பேராற்றல்) என்ற ஆறு மங்கள குணங்கள் உள்ளவர். (நா 129) பேரறிவு, வைராக்கியம், பேராளுமை, தவம், சத்தியம், பொறுமை, உறுதி, படைப்புத்திறன், தன்னிலை உணர்வு, நீக்கமற நிறைந்திருப்பது என்ற பத்து அவ்யய (அவரை விட்டகலாத) மங்கள குணங்கள் பெற்றிருப்பவர். நிர்குணமாக சுத்தமாக இருப்பவர். அவரிடத்தில் எல்லாமடங்குமாகையால் சிவர். (சேதே அஸ்மிந் ஸர்வம்); இச்சாசக்தி வடிவினர் (வஷ்டி காமயதே); உலகின் நன்மையை விரும்புபவர் (வஷ்டி லோகஹிதம்); மங்களத்தைச் செய்பவர் (சிவம் கரோதி); பரம்பொருளிற்கு சிவ என்ற பெயர் இப்படி பலவகைகளில் பொருந்துகிறது. மங்களாநாம் ச மங்களம் (சு.16) சர்வ: சிவ: முதலிய நாமங்களால் பரம்பொருளே துதிக்கப் பெறுகிறார்.[1] (27)*

---

1. शेतेऽस्मिन् जगदीहते दिशाति च श्रेयः प्रजानामसौ
शान्तिं याति समस्तमङ्गलगुणग्रामैकसीमायते ।
इच्छाशक्तिमुपैति निर्मलतरश्चास्ते प्रकृत्येति च
व्याचष्टे शिवनाम यस्य विभवं तस्मै परस्मै नमः ॥

*(நீலகண்ட தீக்ஷிதரின் சிவதத்வ ரஹஸ்யம்)*

समेधयति यन्नित्यं सर्वार्थान् सर्वकर्मसु ।
शिवमिच्छन् मनुष्याणां तस्मादेष शिवः स्मृतः॥

*(மஹாபாரதம் துரோண பர்வம்-202)*

''शाश्वतं शिवमच्युतम्'' ''स ब्रह्म स शिवः'' । (तै.आ. १०.१३)

प्रपञ्चोपशमं शान्तं शिवमद्वैतं चतुर्थं मन्यन्ते । स आत्मा स विज्ञेयः । अव्यवहार्यः प्रपञ्चोपशमः शिवोऽद्वैतः । [माण्डूक्य ७.१२]

28. ஸ்தாணு: - ஸ்திரமாயிருப்பவர்

*ஸ்தாணு என்ற பெயரும் சிவனுக்குள்ளதே (தாணு - மால் - அயன் என மும்மூர்த்தி வடிவிலுள்ள இறைவனைக் குறிப்பிடுகின்றனர்) ஒரே நிலையில் இருப்பவர். மாற்றமில்லாதவர். நிலைத்த பலனை அருள்பவர். வேண்டியதைத் தருவதுடன் நில்லாமல் தொடர்ந்தும், தடைகளால் தடைபடாமல் குன்றாமல் குறையாமல் பிறரால் அபகரிக்கப் பெறாமலிருக்கும்படியும் அருள்பவர். தாம் அருள்புரிந்தது போதுமெனக் கொள்ளாமல் மேன்மேலும் அருள்பவர் (நா 120,427)*

*மேன்மேலும் வளர்ச்சியடைவதும் பின்னர் தேய்வுறுவதும் நின்று, நன்கு முதிர்ந்து, கிளை இலை போன்ற வளர்ச்சிச் சின்னங்கள் இல்லாத உலர்ந்த மரம் ஸ்தாணு எனப்படும். மழை வெயில் முதலியவற்றால் பாதிக்கப்படாத வெகு நாட்பட்ட வைரம் பாய்ந்த மரம் போன்று வளர்ச்சியும் தேய்வும் அடையாத ஸ்திரப்பட்ட தன்மையை இப்பெயர் வெளியிடுகிறது. வளர்ச்சி தேய்வு போன்றவையும் காலத்தாலும் தேசத்தாலும் ஏற்படும் மாறுபாடுகளும் அற்றவர்.*[1]

*பிரும்மாவின் மானஸப் படைப்பில் தோன்றிய பதினொரு ருத்திரர்களில் ஸ்தாணுவின் வடிவில் இருப்பவர். திரிபுராஸுர வதத்திற்காக முப்புரங்களும் கூடும் வேளையை எதிர்பார்த்து நின்ற நிலையிலும் ஜ்யோதிர் லிங்க வடிவில் அடிமுடி காணாது நின்ற நிலையிலும் எல்லாவற்றிற்கும் மூலமாக நின்ற நிலையிலும் பரமேச்வரனை ஸ்தாணு என்பர். அந்த சிவனாக இருப்பவர். (28)*

29. பூதாதி: - தோன்றுகிற பொருளனைத்திற்கும் முதற்காரணமாயிருப்பவர்.

*உற்பத்தியாகிப் பின் பொருள் எனக் கொள்ளப்படுபவை அனைத்தும் பூதம். இவற்றின் மூலப்பொருளும் இவற்றைத் தோன்றச் செய்தவரும் இவர். அனாதியான இந்த உலகிற்கும் ஆதியானவர். உயிரினம் அனைத்தாலும் ஆர்வத்துடன் இவரே*

---

1. वृक्ष इव स्तब्धो दिवि तिष्ठत्येकः । (श्वेताश्वतर-३.९) दहत्यूर्ध्वं स्थितो यश्च स्थाणुवत्ततुस्थितं च यत् । स्थिरलिंगं च यन्नित्यं तस्मात्स्थाणुरिति स्मृतः ॥ [भारते द्रोण २०२]

*அடைய வேண்டியவற்றுள் சிறந்தவர் என ஏற்றுக் கொள்ளப்படுபவர் (பூதை: ஸ்ப்ருஹணீயதமதயா ஆதீயதே)[1] (29)*

30. **நிதி: அவ்யய: - குறைவுறுத நிதி**

*உலகின் ஆதியாயிருப்பவரே லய காலத்தில் தன்னுள் அதனைக் காப்பவர். நிதி: - சிறந்த பொருள்களைப் பாதுகாப்புடன் இருக்கும்படி வைக்குமிடம். பூதங்களின் தோற்றுவாயாக மூலகாரணமாக இருக்கின்றவர் பகவான், உலகம் லயமடையும்போது அதன் பாதுகாப்புப் பெட்டகமாகி நின்று அனைத்தையும் ஏற்றுக் காக்கிறார்[2] அந்தப் பெட்டகமும் அதனுள் வைக்கப்படுபவையும் குறைவுறுவதில்லை. (நிதீயதே - நவ்யேதி) தோன்ற வேண்டிய வேளையில் தோன்றும்படி இவ்வுலகைத் தன்னுள் வைத்துக் காப்பவர்.*

*பாதுகாப்புப் பெட்டகத்தில் காப்பாற்றத்தக்கச் சிறந்த விலை மதிக்க இயலாத பொருளும் நிதியே. அப்படி ஆபத்து நிலையில் பயன்படுமாறு பாதுகாக்கப்பெறும் சிறந்த அழியாப் பொருளாயிருப்பவர். ஆழ்ந்த உள்ளத்தில் என்றும் நிலைத்து நிற்கும் செல்வமாக மறைந்திருப்பவர். அப்படி ஞானிகளால் உணரப் பெறுபவர். (30)*

31. **ஸம்பவ:- தன் விருப்பப்படி சிறப்புடன் தோன்றுபவர்.**

*எதற்கும் புலப்படாதவராக இருப்பவரே எல்லோரும் அநுபவிக்கும்படி அழகிய வடிவுடன் நன்றாகத் தொன்றுகிறார். சிறப்பான தோற்றம் ஸம்பவமாகும் 'ஸம்பவாமி யுகே யுகே' என துஷ்டர்களை அழிக்கவும் நல்லோர்களைக் காக்கவும் தர்மத்தை நிலை நிறுத்தவும் கருவறையில் தங்குதல் போன்ற வாதனைகளின்றி அழுகை முனகல் ஏற்படுத்தாதவாறு தன்னிச்சைப்படி அனைவரும் மகிழும்படி தோன்றுபவர்.*

*கோருபவரது நோக்கங்கள் நிறைவேறுவதற்கெனப் பல கால தேசங்களில் பலவிதத் தோற்றங்களில் வெளியானவர். மத்ஸ்ய - கூர்ம - வராஹாதி அவதாரங்களைக் கொண்டவர். (31)*

---

1. यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः । (मुण्डक १-१-६)
2. यत्प्रयन्त्यभिसंविशन्ति। (तै.उ. ३.१)

32. பாவன:- அநுபவத்திற்கேற்ற பலன்களை அளிப்பவர்

அவரது ஸம்பவத்தை எல்லோரும் மகிழ்ந்து அநுபவிக்கச் செய்பவர். அவனவனது வினைகளை வகுத்து அந்தந்தப் பிறவியில் அநுபவிக்கத் தக்கதைப் பிரித்துப் போகப் பொருளாக்கி அந்தந்த வினை பழுக்கும்போது உரிய வேளையில் உரித்தானவற்றை அனுபவிக்கச் செய்பவர். கர்மபலதாதாவான ஈச்வரனுயிருப்பவர். (ப 8) (அநுபாவயதி) துஷ்டர்களால் துன்புறுத்தப் பெற்றுத் தன்னைச் சரணடையும்போது வாழ்விப்பவர் (பாவயதி) (32)

33. பர்த்தா – உலகைத் தாங்குபவர்

இந்தப் பிரபஞ்சத்தின் ஆதாரமாகி நின்று தாங்குபவர். பரம்பொருளே உலகமானுர். ''நாம் பார்ப்பது மோதிரமாக; ஆனல் அது இருப்பது தங்கமாக'' நாம் பார்ப்பது பாம்பாக; அது இருப்பது கயிருக'' என்பதுபோல் நாம் அவரை உலகமாகக் காண்கிரேம். அவர் இருப்பது அவராக. மோதிரம் எனும் தோற்றத்தை அதன் அதிஷ்டானமாகித் தங்கம் தாங்கி நிற்பதுபோல் பாம்பெனும் தோற்றத்தை கயிறு தாங்கி நிற்பதுபோல் இறைவன் உலகெனும் தோற்றத்தைத் தாங்கி நிற்கிறுர். உலகைக் காப்பாற்றிப் போஷித்து வளர்த்து அதற்கு ஊட்டமளிப்பதாலும் அவரே பர்த்தா. அன்புடன் வாழ்நாள் முழுவதும் மனைவியைப் பாதுகாத்துத் தாங்கும் கணவன் போல் தாங்குபவர். (பிபர்தி) அடியார்களுக்குத் தன்னையே அளித்தும் காப்பாற்றுபவர். (33)

34. ப்ரபவ:- மூலப்பொருள்கள் தோன்றிய இடம்

உலகைப் பர்த்தாவாகத் தாங்கத் தேவையான சிறந்த பொருள்கள் தோன்றிய இடம் - ப்ரபவ:. மஹாபூதங்கள் என்ற ஆதியில் தோன்றிய உலகின் மூலப்பொருள்கள் இவரிடமிருந்தே தோன்றின. இவர் அவதாரங்கள் எடுக்கும்போதும் மிகச் சிறப்பாகக் குறிப்பிடும்படி தோன்றுவார். அதனுலும் சிறப்பான தோற்றம் உள்ளவர் - ப்ர - பவ:. அந்த அவதாரத் தோற்றத்தில் எதிலும் மாசு ஒட்டாதபடி, தன்னை அறிந்து அடைந்தவரது மாசையும் போக்கத் திவ்யமான பிறப்பு எடுத்தவர். (34)

35. ப்ரபு:- எல்லாம் வல்லவர்

திறமையுடன் எளிதில் நிறைவுறும்படி செயலாற்றுபவர். செயல் தன்னை மிஞ்சிப் போகாதபடி செயலை மிஞ்சி நிற்பவர் (நா. 299) தோற்றத்தில் மீனுகப் பன்றியாக மனிதனுக வந்தாலும் தேவர்களாலும் இயலாதவற்றைச் செய்கிற திறம் படைத்தவர். நாம் அனைவரும் அவரது உடைமைப் பொருள். நமது உடைமையாளராகி (ப்ரபவதி) நம் மீது ஆணை செலுத்துபவர்.[1] (35)

36. ஈச்வர: - எப்போதும் ஆளுமையுள்ளவர்.

அவர் ஆட்டுவித்தபடி அனைத்தும் ஆடும். இந்தப் பேராளுமை அவருக்கே இயல்பானது. ஒரு சாதன வலிவுமின்றி ஆள்பவர் - (ஈஷ்டே)[2] ஆண்டவன், ஆண்டான் எனப்படுபவர். பரம்பொருள் நிலையில் உணரப்பெருத அவரது நிகரற்ற ஈசுவரத் தன்மை ராமர் கிருஷ்ணர் முதலிய அவதார நிலைகளில் பெரிதும் உணரப்பெறும். "ஈச்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசே அர்ஜுந திஷ்டதி. ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா" என கீதையில் (18-61) கூறியுள்ளபடி இதயத்திலிருந்து நம்மைக் கட்டுபடுத்தும் அந்தர்யாமியாக உள்ளவர். (ப. 8) இதனைக் கொண்டு இதனை முடிக்கலாம் என்ற நியதியை மீறவும் இதனுல் இது ஆகாது என்றிருக்கும்போது ஆகும்படி செய்யவும் சுதந்திரம் உள்ளவர்.

சிவபெருமானுக்கே உரிய பெயர் இது எனக் காளிதாஸர் கூறுவார். "யஸ்மிந் ஈச்வர இத்யநந்ய விஷயச் சப்தோ யதார்த்தாக்ஷர:" (விக்மோர்வசீயம் 1-1) சிவனுக இருப்பவர். ( நா 74)

நிறமற்ற ஸூர்யனது ஒளியிலிருந்து ஏழு நிறங்கள் தோன்றுவதுபோல் குணமெனக் கருதமுடியாத சுத்த ஸத்வத்திலிருந்து ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்கள் தோன்றின. முக்குணங்களாகப் பிரிவதற்கு முன் இருந்த சுத்த

1. महान् प्रभुर्वै पुरुषः (श्वेताश्वतर ३.१२)

2. एष सर्वेश्वरः (बृहदारण्य ४-४.२२) ईशावास्यमिदं सर्वं (ईशावास्य.१) जुष्टं यदा पश्यन्त्यन्यमीशं । (मुण्डक ३.१.२) तमक्रतुः पश्यति वीतशोको धातुः प्रसादान्महिमानमीशम् (श्वेताश्वतर ३.२०) य ईशेऽस्य द्विपदश्चतुष्पदः (४.१३) तमीश्वराणां परमं महेश्वरम् (६.७)

*ஸத்வமே ஈச்வரன் என்ற தத்துவத்தின் ஸ்வரூபம். இவரை துரீயர், குணாதீதர் என்பர். பஞ்ச கிருத்தியங்களில் திரோதானம் எனும் நான்காவது கிருத்தியத்தைப் புரிகிற ஈசுவர வடிவிலுள்ளவர். 36 தத்துவங்களில் சிவனிலிருந்து தொடங்கி நான்காவதான தத்வமாயிருப்பவர்.*

*தனித்திருந்தால் மரம் (வ்யஷ்டி). மொத்தமாக இருந்தால் காடு (ஸமஷ்டி). ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்று மூன்று சரீரங்கள் உண்டு. ஒவ்வொன்றிற்கும் வ்யஷ்டியாகவும் ஸமஷ்டியாகவும் அபிமானம் கொள்பவர் தனித்தனியாக உள்ளனர். அவற்றில் வ்யஷ்டியான காரண சரீரத்தில் அபிமானம் கொள்பவர் ஜீவன். ஸமஷ்டிகாரண சரீர அபிமானி ஈச்வரன். அந்த ஈச்வர வடிவில் உள்ளவர்.*

*ஸம்ப்பவோ பாவநா பர்த்தா ப்ரபவ: ப்ரபு: ஈசுவர: என்ற இந்த ஆறு நாமங்களும் பகவானை ஸர்வதந்த்ர ஸ்வதந்திரராகக் காட்டுகின்றன. அவரது தோற்றமும் அவர் இச்சையால் நிகழ்கிறது. தோன்றும் சீரே சிறப்புள்ளது (ஸம்பவ:) அவரது தோற்றத்தின் முக்கிய நோக்கே உலகை வாழவைப்பதுதான். (பாவந:) வாழவைப்பது ஏழை - எளியவருக்கு உதவுவதுபோல் இல்லாமல் கணவன் மனைவியை அன்புடன் பேணிக்காப்பது போல் அமையும். (பர்த்தா) அப்படிக் காப்பதற்குத் தேவையான சாதனங்கள் அனைத்தும் அவரது வசத்திலுள்ளன. அவர் இஷ்டப்படி அவற்றைப் படைத்துக் கொள்வார். (ப்ரபவ:) ஸாதனங்கள் அனைத்தையும் தன்னிஷ்டப்படி பயன்படுத்த அவருக்கு உரிமை உண்டு. (ப்ரபு:) அவ்வுரிமையை நன்கு செயல் வடிவில் கொணரவும் தேவையானால் மாற்றியமைத்துக் கொள்ளவும் திறமையுள்ளவர். (ஈச்வர:) என்ற பீஷ்மரின் வரிசையமைப்பு வியக்கத்தக்கது. (36)*

**स्वयंभूश्शंभुरादित्यः पुष्कराक्षो महास्वनः ।**
**अनादिनिधनो धाता विधाता धातुरुत्तमः ॥ ३६ ॥**

**ஸ்வயம்பூஶ் ஶம்புராதித்ய: புஷ்கராக்ஷோ மஹாஸ்வந:.**
**அநாதிநிதநோ தாதா விதாதா தாதுருத்தம: 36**

37. ஸ்வயம்ப்பூ:- தானே ஆனவர்

*தானே தோன்றியவர். உலகைப் படைப்பதற்கோ காப்பதற்கோ அவர் எடுக்கும் தோற்றங்களுக்கு அவரது இச்சையே காரணம். (விபுபூஷு: உபாததே). அவரது லீலை அவ்வாறு பரிணாமங்களை ஏற்படுத்தியது. வேறு துணை ஒன்றும் எதிர்பாராமல் தோன்றுபவராகையால் ஸ்வயம் ப்பூ:[1] (ஸ்வயம் பவதி). எல்லாவற்றிற்கும் மேலிருப்பவர். தன் விருப்பப்படி செயல்படுபவராக இருப்பவர். பிரகிருதியைத் தன் வசப்படுத்தி தன் ஆணையை அதன்மேல் செலுத்துபவர்.*

*தசரதருக்கும் கோசலைக்கும் மகனாகப் பிறந்தபோதும் வஸுதேவருக்கும் தேவகிக்கும் மகனாகத் தோன்றியபோதும் அவர்களது குணச்சார்பின்றி தானே தானாகத் தோன்றியவர். அவரது ஸ்வஸ்வரூபத்தில் எந்தச் சூழ்நிலையிலும் மாறுபாடு காண்பதில்லை.*

*அழுதுகொண்டே பெறுவதும், பிறந்ததும் அழுவதும், உடல் அழுக்கில் ஊறி நிற்பதும், தாயுடம்போடு தொப்புள் கொடியால் பிணைக்கப்பட்டிருப்பதுமான இயற்கையாக உள்ள பிறப்பின் பாதிப்பு சிறிதும் காணாதபடி கண்ணன் தேவகியின் வயிற்றிலிருந்து திரையை அகற்றி வருவதுபோல் தோன்றுகிறார். தாய்க்கும் வேதனை இல்லை. பிறந்த குழந்தை 'சிரித்து அணிகள் பூண்டு வியக்கத்தக்கதாகத் தாய்க்கும் தந்தைக்கும் ஆறுதல் அளிக்கின்ற அற்புதம் நிகழ்கிறது. (தமத்புதம் பாலகம் அம்புஜேக்ஷணம்... பாகவதம் 10-3-9) கண்கள் மூடி இராமல் அன்றலர்ந்த தாமரைபோல் விரிந்து அழகாக இருக்கின்றன. இந்தப் பிறப்பு நேர்த்தி அவர் ஸ்வயம்பூவானதால்தான். நம் இதயத்தினுள் நமது அன்புக்குரியவராக நுழையும்போதும் வழிபாட்டை ஏற்றுக்கொள்ளும்போதும் இடத்தால் பாதிப்பு அவருக்கும் இல்லை. நமக்கும் இல்லை. அவருக்கும் பக்தனிடத்தில் பரிவு கலந்த மகிழ்ச்சி. நமக்கும் அவரிடத்தில் பக்தி கலந்த நெகிழ்ச்சி. இதுவும் ஸ்வயம்பூவானதால் தான் (நா. 986) (37)*

*ஏன் அப்படித் தோன்றுகிறார்? உலகிற்கு மங்களம் அளிக்கவே. மங்களம் அனைத்தும் அவரிடம் உள்ளன என்பதை அடுத்த நாமம் துலக்குகிறது.*

1. कविर्मनीषी परिभूः स्वयंभूः (ईशावास्ये)

38. சம்ப்பு:- மங்களமான இன்பத்தை அனுபவிக்கச் செய்பவர்.

*தன்னை அண்டியவர்களை இன்பம் நுகரும்படி செய்பவர். அவரே மங்களத்தின் தோற்றுவாய். மங்களத்தைச் செய்பவரும்கூட. (சம் பாவயதி உத்பாதயதி) தானே உண்டாக்கிய மங்களத்தை நமது அனுபவத்திற்கெனக் கொணர்ந்து நம்மிடம் தருவதுடன் நில்லாமல் நம்மை அனுபவிக்கச் செய்யும் பரிவுடன் உதவுபவர். (சம் அனுபாவயதி). அவரது அழகு, அவரது லோகஹிதமான ஸ்வபாவம் முதலியவற்றை உணரச் செய்து* ''ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம். *(ராமாயணம் 3-3-28) என மனத்தைத் தன்பால் ஈர்த்து ஸர்வ மங்களமான பகவதநுபவத்தைப் பெறச் செய்பவர். உலகின் நன்மைக்காகவே தோன்றுபவர். (சம்கரணாய பவதி) மங்களப் பொருள்களாகத் தோன்றுபவர்.*[1]

*சம்பு: என்ற நாமம் சிவபெருமானுடையதெனக் கோசங்கள் கூறும். சுத்த ஸத்வப் பிரதானமான ஈச்வர தத்துவம் இது. ''பிரும்ம தந் மங்களம் பரம்'' என்று பரம மங்களமான பிரும்மமாக இருப்பவர் (சம் பவதி, சம் ஸந் - ஸுகஸ்வரூப: ஸந், பவதி-ஸத்தாச்ரய: இதி சம்பு:)*

*அநாதியான ஸம்ஸார சக்கிரத்தில் சுழல்பவர்கள் அந்தச் சுழலிலிருந்து விடுபடுவதில் இந்தப் பிறவி பயன்படாதபோது மறுபடி முயன்று விடுதலை பெறுவதற்கென மறு பிறவியை வேண்டுவர். அப்போது இவ்வுடல் மறைய உதவித் தாற்காலிகமான ஓய்வு தருபவரானதால் ருத்திர வடிவில் உள்ள ஈசனை சம்பு: என்பர். இப்படி உடல் மறைவைத் தருவது அறுவை சிகித்ஸை நிபுணர் உடலை அறுத்துக் குணமாக்குவதுபோல் ஆகும். நன்மை தரும் நோக்கமே, அந்தப் பரிவே, இப்படி நடுவில் துன்பத்தைத் தரச் செய்தது.* (நிதாநஜ்ஞஸ்ய பிஷஜ: ருக்ணே ஹிம்ஸாம் ப்ரயுஞ்ஜத:. ந கிஞ்சிதஸ்தி நைர்க்க்ருண்யம் க்க்ருணைவாத்ர ப்ரயோஜிகா - *வாயவீய ஸம்ஹிதை) (38)*

*மங்களம் தருவதில் உள்ள பரிவால், தானே தனக்கென அமைத்துக்கொண்ட நியதியின்படி எடுக்கிற பல தோற்றங்களில் ஒன்றான ஸூர்யனாக அவரைக் காட்டுகிறது அடுத்த நாமம்.*

1. ध्येय: सर्वैश्वर्यसम्पन्न: सर्वेश्वर: शंभुराकाशमध्ये । [अथर्वशिखा]

39. ஆதித்ய: - அதிதியின் குமாரர்.

*பகவானுடைய லீலை உலகை உண்டாக்கியதும். விளக்கம் பெறுதிருந்ததனைத்தையும் (அவ்யக்தம்) விளங்கவைத்தது. அவ்விளக்கத்திற்காகப் படைக்கப்பட்ட ஒளிமண்டலம் ஸூர்யன். பகவானின் அம்சமாகக் கசியபருக்கு அதிதியிடம் பிறந்த ஸூர்யன் ஆதித்யர்.[1] அவரது வடிவில் உள்ளவரானதால் பகவான் ஆதித்யர். திதி என்பவள் குடும்பத்தில் கருத்து வேற்றுமையை உண்டாக்கிப் பிளப்பவள். (தோ - அவகண்டநே) அதிலிருந்தும் மாறுபட்டவளானதால் இவள் அதிதி. குடும்பத்தில் மாற்றுந்தாய் மனப்பான்மை கொள்ளாதிருப்பதுடன் சக்களத்தியின் பிள்ளையிடம் தன்வயிற்றுப் பிள்ளையைவிட அதிகமாக அன்பு செலுத்துபவளான கௌஸல்யைக்கு உதாரணமாக அதிதியைக் காட்டுகிறார் வால்மீகி.* **(யதா வரேண தேவாநாம் அதிதிர் வஜ்ரபாணிநா).** *அதிதியின் குமாரராகப் பிறந்த பன்னிருவர்களும் ஆதித்யரே. விவஸ்வான் (ஸூர்யன்) அர்யமா, பூஷா, த்வஷ்டா (நா.52) ஸவிதா (நா. 884, 969) பகன், தாதா (நா. 43, 951) விதாதா (நா. 44, 484) வருணன் (நா. 553) மித்திரன் இந்திரன் (நா. 268) வாமனர் (நா. 152) இவர்கள் அதிதியின் பிள்ளைகளானதால் ஆதித்யர்கள். இவர்களில் ஸூர்யனுக்கு ஆதித்யன் என்று சிறப்புப் பெயர். அதிதிபோல் ஸூர்யன் நல்லவனை வாழ வைப்பார். கெட்டவனையும் வாழவைப்பார். பாகுபாடு இல்லாதவர். கோடைகாலத்தில் பூமியில் உள்ள அழுக்குற்ற பகுதியையும் உயிரினத்தின் உடலிலுள்ள வலிவையும் தூயதாக்கித் தருவதற்காகச் சிறுகச் சிறுக உறிஞ்சி எடுத்துக்கொள்வதால் ஸூர்யன் ஆதித்யர். (ஆததாதி)[2]. அந்த அதிதியின் குமாரர்கள் பன்னிருவர் வடிவிலும் சிறப்பாக ஸூர்யனின் வடிவிலும், இருப்பவர். ஆதித்யர்களுக்குள்ளே தான் விஷ்ணு எனக் கீதையில் (10-21) கூறியபடி விஷ்ணு - உருக்ரமன் எனப் புகழப்பெறும் அதிதியின் பிள்ளையான வாமனர் இவரே.*

*ஆதித்யனின் மண்டலத்தின் நடுவே அதன் அந்தர்யாமியாக தியானம் செய்யப்பெறுபவரானதால் அவரே ஆதித்யர். கோயிலைக் கண்டதுமே இறைவனின் புறத்தோற்றத்தைக்கண்டு*

1. तदेवाग्निस्तदादित्यः। तदेव शुक्रं तद्ब्रह्म (श्वेताश्व ४.२.)

2. आदानादादित्यः [मैत्रायणी ५.७]

ஆனந்திப்பதுபோல் ஸூரியனைக் கண்டதுமே அவரது நடுவில் துலங்கும் இறைவனைக் கண்டானந்திப்பர்.[1].

இந்த பூமிக்கு அதிதி எனப் பெயர் உண்டு. எவ்வளவு பிளந்தாலும் பிளப்பை மூடிப் பொறுத்துக்கொள்பவள் பூமி தேவி. அவள் விஷ்ணுவின் பத்தினி. அவளைச் சேர்ந்தவரானதால் ஆதித்யர். ஒரே சூரியனே பலவிடங்களில் பல சூர்யர்களாகப் பிரதிபிம்பித்திருப்பதுபோல் பகவானும் எண்ணற்ற உடல்களில் புகுந்து எண்ணற்ற ஆத்மாக்களாகிவிட்டதாகத் தோன்று கிறபடியால் ஆதித்யனுக்கு ஒப்பானவர் என ஆதித்யர். (நா. 563, 564) *(39)*

பிறரை வாழ வைப்பதில் உள்ள அகமலர்ச்சியை முகமலர்ச்சி மூலம் காட்டுவதை அடுத்த நாமம் காட்டுகிறது.

**40. புஷ்கராக்ஷ:- தாமரை போன்ற கண்களுள்ளவர்.**

தாமரை இதழ் போன்று நீண்டு சிவந்து விரிந்து குளிர்ச்சி தரவல்ல இனிய நோக்குள்ள கண்களுடன் கூடியவர். தனது நோக்காலேயே புஷ்டியைத் தருபவர். (போஷயதீ பூதானி - புஷ்கரே - அக்ஷிணீ யஸ்ய) (நா. 556). *(40)*

**41. மஹா -ஸ்வந:- பெருமை பெற்ற குரலுடையவர்.**

இறைவன் அவதாரம் எடுக்கும்போது அந்த திவ்ய மங்கள வடிவிற்கு மேலும் பெருமை சேர்ப்பது அவரது புகழ் பெற்ற இனிய குரலே. மேகம் போன்று இனியதும் கம்பீரமுமான குரல். இறைவனது குரல் முதன் முதலில் ஒலித்தது மகத்தான வேத வடிவில். அதனைத் தொடர்ந்து வந்த பகவானது உபதேசங்கள் அனைத்தும் மகத்தானவையே. உலகில் உள்ள ஞான நூல்கள் அனைத்தும் இறைவனது மூச்சுக்காற்று (குரல்).[2] அந்த வேதங்களுக்கும் ஆதியான பிரணவம் எனும் ஓங்காரம் மஹாஸ்வநம் - மிகப் பெருமை பெற்ற ஒலி. அவ்வடிவில்

---

1. य आदित्ये तिष्ठन्नादित्यादन्तरः । यस्यादित्यः शरीरम् । (बृहदारण्य ३.७.९)

2. अस्य महतो भूतस्य निश्वसितमेतद्यदृग्वेदो यजुर्वेदः सामवेदोऽथर्वाङ्गिरसः इतिहासः पुराणं विद्या उपनिषदः श्लोकाः सूत्राण्यनुव्याख्यानानि व्याख्यानानि । (बृहदारण्यके २.४.१०)

*இருப்பவர். பிறரை வாழ வைப்பதில் அகமலர்ச்சியுடன் முக மலர்ச்சியையும் காட்டி(நா. 40)ப் பின் மகிழ்ச்சியால் நிறைந்த குரலுடன் பகவான் பேசுவதைப் பெருமைபெற்ற பெருங்குரலோன் என்று பொருள்படும் இந்த நாமம் காட்டுகிறது. (41)*

42. அநாதி - நிதந:- ஆதியும் அந்தமுமற்றவர்.

*பகவான் ஆதியும் அந்தமுமற்றவர்.*[1] *அவரது ஆதியையும் அந்தத்தையும் யாரும் கண்டதில்லை. அவரால் படைக்கப் பெற்ற உலகில், நடுவில் தோன்றி நடுவில் மறைபவரே அனைவரும். அவர்களால் உலகிற்கு மூலகாரணமாக உலகம் தோன்றுவதற்கு முன் உள்ளவரும், பின் உலகைத் தன்னுள் லயமடையச் செய்பவருமான பகவானை அறிய இயலாது. ஆதியும் அந்தமுமற்றவர் என ஊகித்தறியலாம். ஊகத்தால் அவருக்கும் ஆதியோ அந்தமோ இருப்பதாகக்கொண்டால் என்ன என்ற கேள்வி எழலாம். அந்த ஆதிக்கு ஆதி எது? எதில் லயம் அடையும்? என்று முடிவற்றதாக ஊஹம் சென்று கொண்டிருக்கும். பயனற்ற அந்த ஊஹத்தொடரைத் துண்டித்து அவரே ஆதியும் அந்தமும் எனக்கொள்வது மரபு. அந்த மரபிற்குப் பக்கபலம் தருவது* 'யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே' *(தைத்திரீய உபநிஷதம்) முதலிய உபநிடத வாக்கியங்கள் தருகின்ற உலகம் அவரிடம் தோன்றி அவரிடம் மறைவதற்கான விளக்கம். (சு. 17).*

*தோற்றத்திற்கும் மறைவிற்கும் (ஆதி - நிதநம்) இடையே வளர்வதும் தேய்வதும் காரணமாகப் பல நிலை மாற்றங்கள் ஏற்படுகின்றன. பூர்ணராக, நிறைவு துலங்கும் யௌவனம் ஒன்றையே பருவமாகக்கொண்ட திவ்ய மங்கள வடிவுடன் தோன்றுபவராகையால் தோற்றமும் மறைவும் இடையே நிகழும் நிலைமாற்றங்களும் அற்றவர்.*

நிதநம் - *யோக ஸாதனையில் இடையூறு. அவை ஆதி - கடபயாதிஸங்க்யை முறைப்படி (தி 8. ஆ 0) எண்பது. எண்பது வகைத் தடைகளும் அவரது வழிபாட்டிற்கான யோக ஸாதனையில்*

---

1. अनाद्यनन्तं महतः परं ध्रुवं (कठ ३.१५)
 अचिन्त्यायाप्रमेयाय अनादिनिधानाय चेति (मैत्रायणी ४.४)

தோன்றுதாகையால் அவர் அநாதி நிதனர். பத்து அந்தராயங்கள் ஆறு உபஸர்கங்கள் அறுபத்தி நான்கு சித்திகள் என அவை எண்பதாகும்.[1]

அந்தராயங்கள் - உபாஸனையானது முறைப்படி அமைய அதை நியமத்துடன் கையாள்வது அவசியம். அதுவும் ஒரு யோக ஸாதனையே. அதற்கு அந்தராயங்கள் (இடையூறுகள்) எட்டு. (1) ஆலஸ்யம் - உடலும் மனமும் தடித்துச் சிறிதும் ஊக்கமில்லா திருப்பது. (2) வ்யாதி - வினைப்பயனுகவோ நடைமுறைப் பிசகாலோ ஏற்படும் நோய். (3) ப்ரமாதம் - மனவடக்கத்திற்குரிய சாதனங்களைப் பெறுவதில் கவனக் குறைவு. (4) ஸம்சயம் - ஸாதனத்திலும் ஸாத்தியத்திலும் நிச்சயமின்மை. (5) அநவஸ்த்திதி - மனம் நிலைகொள்ளாமல் சஞ்சலப் படுவது. (6) அச்ரத்த்தா - மேலும் மேலும் பயிற்சிகள் பயனளித்துத் தெளிவு ஏற்பட்டு வரும்போதும் முன் வாஸனைக் குறுக்கீட்டால் ஸாதனங்க்ளில் பூர்ண ஈடுபாடின்மை. (7) ப்ராந்தி தர்சனம் - குரு. ஞானம், பகவான், ஆசாரம் இவைகளைப் பற்றிய தவறுன அறிவு. (8) துக்கம் - ஆத்த்யாத்மிக - ஆதிபௌதிக - ஆதிதைவிக துக்கமாகிய இயற்கையாக ஏற்படும் துன்பங்கள். இவை எட்டும் இடையூறுகள் - மனத்தின் திடமான நாட்டத்தைக் குலைப்பவை. வைராக்யத்தால் வெல்லத்தக்கவை. இவற்றை வென்றுல் மனம் பயிற்சியில் ஈடுபட்டுப் பல நிலைகளைப்பெறும். சுய அறிவும் புலனறிவும் கூராகும். இயற்கையாகப் பெற முடியாத பல உணர்வுகளை இதனுல் பெறலாம். அத்தகைய உணர்வுகளைப் பெற்றதும் அவையே சித்தி என ஏமாறக்கூடும். அப்படி ஏமாற்றமடைந்தால் அந்த சித்திகளே உபஸர்க்கங்களாக - இடையூருக அமைந்து தொடர்ந்து ஸாதனைகளில் ஈடுபடுவதைத் தடுத்துவிடும். இந்த சித்திகள் யோக சாதனை சரியாக அமைந்து உள்ளதா என்பதைச் சோதிக்கப் பயன்படுபவை. பெரு வழியிலுள்ள (மைல்)காதக் கற்கள் போல. மைல் கற்களோ பெரு வழியோ அடைய வேண்டிய இடமல்ல. இவற்றைப் பயன்படுத்திப் பயணத்தின் எல்லையை அடையவேண்டும்.

உபஸர்க்கங்கள் (தடை) ஆறு. (1) ப்ரதிபா. இது காறும் உணர்ந்திராத அளவில் ஸூக்ஷ்மமானதும் வெகு தூரத்தில்

1. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் 'அநாதிநிதநா' என்ற நாமம் (நா. 296) உண்டு. இதற்கு உரை ஆசிரியர் பாஸ்கர ராயர் விஷ்ணு புராணம் ஸாங்க்ய காரிகை இவற்றை ஆதாரமாகக் கொண்டு 80 வகை இடையூறுகளைக் குறிப்பிட்டுள்ளார். அவரது குறிப்புகளை ஒட்டி இந்த விளக்கம்.

இருப்பதும் வேறென்றால் மறைக்கப்பட்டதும் முன் என்றோ நடந்ததும் பின் என்றோ நடக்கவிருப்பதும் புலனாவது. எல்லாமும் எப்போதும் வரிசையாக உணரப்பெறுவது. (2) ச்ரவணா - இதுவரை கேட்டறியாத மிக ஸூக்ஷ்மமும் மிகப் பெரியதுமான ஒலி வடிவங்களைக் கேட்பது (3) ஸ்பர்சநா - மிக ஸூக்ஷ்மமான தொடு உணர்ச்சி. (4) தர்சநா - மனிதசக்திக்கப்பாற்பட்ட தேவர் முதலானோரின் வடிவங்களைக் காண்பது. (5) ஆஸ்வாதா - இது காறும் உணர்ந்திராத திவ்யச் சுவை உணர்ச்சி. (6) வார்த்தா - திவ்ய மண உணர்ச்சி. யோக ஸாதனையில் உள்ளவர் இந்த நிலைகளைப் பெற்றதும் அரியதொன்றைப் பெற்றுவிட்ட நிறைவுடன் மேலும் ஸாதனைகளில் ஈடுபடாமல் நின்று விடக் கூடும்.

இந்தத் தடைகளால் தடையுறாமல் மேல் ஸாதனைகளில் ஈடுபடுபவன் எட்டு பிரகிருதி சித்தி நிலைகளைப்[1] பெறுகிறான். ஒவ்வொரு பிரகிருதி ஸித்தியும் எட்டு அபூர்வமான சக்திகள் உடையது. அவை (8 × 8) அறுபத்தி நான்காகும். பிருதிவீ, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், மனம், அஹங்காரம், மஹத் என எட்டும் பிரகிருதி நிலைகள். இவைகளில் ஒவ்வொன்றையும் யோக வழியில் தாண்டிச் செல்வதே பிரகிருதி ஜயமாகும். பிரகிருதியை வசப்படுத்துபவனே பகவானை அடைய முடியும். ஆனால் பிரகிருதி ஜயத்தை அடைந்ததுமே எல்லாவற்றையும் பெற்றதாக நிறைவு ஏற்பட்டால், அவற்றால் பெறுகிற அறுபத்தி நான்கு சித்திகளில் ஏதேனும் ஒன்றையோ சிலவற்றையோ எல்லாவற்றையுமோ பெற்றதும் நிறைவு கண்டால், பகவதனுபவம் பெற முடியாமல் தடையுறுகிறான்.

(1) பிருதிவி தத்துவ சித்தியானது பிசாசத் தன்மை பெறுதலாகும். உடல் பருத்தல், இளைத்தல் (குறுகுதல்), இளமை, கிழத்தன்மை, யௌவனம், இனம் மாறுதல், உருவம் மாறுதல், உடலைத் தாங்கும் ஐந்து பூதங்களில் பிருதிவீ தத்துவம் மறைந்து மற்ற நான்குமே உடலைத் தாங்கி நிற்பது என்ற எட்டும் பிருதிவீ தத்துவத்தை வெல்வதால் கிட்டும் சித்திகள்.

(2) ஜல தத்துவ சித்தியானது ராக்ஷஸத் தன்மை பெறுதலாகும்: பூமியில் வசிப்பது போல் நீரினுள் வசிப்பது, நனையாமல் நீரிலிருந்து வெளிப்படுவது, கடலளவு நீரையும் பருகுவது,

1. இந்த ப்ரகிருதி சித்தி நிலைகளில் திருப்தி அடைவதையே பிரகிருதிதுஷ்டி என ஸாங்கிய காரிகை கூறும்.

நினைத்த இடத்தில் நீரைத் தோற்றுவிப்பது, சுவையற்றதையும் சுவையுள்ள தாக்குவது, நீரை நினைத்த வடிவில் உருட்டிப் பாத்திரமின்றிக் கையால் தாங்குவது, உடலில் புண் ஏற்படாமை, பிருதிவீ ஜல தத்துவங்களின்றி மற்ற மூன்று தத்துவங்களே உடலைத் தாங்கி நிற்பது ஆகிய இவை எட்டும் ஜல தத்துவத்தை வெல்வதால் ஏற்படுபவை.

(3) உடலிலிருந்து நெருப்பு உண்டாக்குவது, அந்த நெருப்பு அவரைச் சுடாதிருப்பது, இஷ்டப்படி எரிப்பதும் எரிக்கா திருப்பதும், நீரின் நடுவே நெருப்பைக் காப்பது, கையில் நெருப்பைக் கட்டுப் படுத்துதல், நினைத்தவுடன் உண்டாக்குவது, சாம்பலாக்கியதை மறுபடி உயிர்ப்பிப்பது, பிருதிவீ ஜலஅக்னி தத்துவக் கலப்பின்றி மற்ற இரு பூதங்களைக்கொண்டு உடலைத் தாங்குவது, இவை எட்டும் அக்னி தத்துவ ஜயத்தால் யக்ஷத் தன்மை பெறுதலாகும்.

(4) மனத்தைப் போல் தடையின்றி செல்லுதல், பிறர் உடலுக்குள் நுழைதல், மலை முதலிய பெரும் சுமையைத் தாங்குதல், உடலை லேசாக்குதல், உடலைப் பெரும் பாரமுள்ளதாக்குதல், கையால் காற்றைக் கட்டுப்படுத்துதல், விரல் நுனியின் அழுத்தத்தால் பூகம்பம் ஏற்படுத்தல், ஆகாசம் என்ற ஒரு பூதத்தைக்கொண்டே உடலைத் தாங்குதல். இவை எட்டும் வாயு தத்துவ ஜயத்தால் கந்தர்வத் தன்மை பெறுதலாகும்.

(5)நிழலின்மை, கண் முதலிய புலனுகாத பொறிகளைக் காணுதல், ஆகாயத்தில் செல்லுதல், எப்போதும் எல்லாப் பொறிகளால் உணரப்பெறும் பொருளைப் பொறிகளின்றியே உணர்தல், வெகுதூரத்தில் உள்ள ஒலி கேட்டல், எல்லா ஒலிகளையும் மனத்தில் பதித்துக்கொள்ளுதல், பஞ்சபூத ஸூக்ஷ்ம நிலைகளை உணர்தல், எல்லா உயிரினங்களையும் நேரே காணுதல் என்ற எட்டும் ஆகாச தத்துவ ஜயத்தால் இந்திரனின் பெருமை பெறுதலாகும்.

(6) விரும்பியதை அடைவது, விரும்பியபடி செல்லுதல், எங்கும் வெற்றி, எல்லா ரகசியங்களையும் அறிதல், விருப்பப்படி படைப்பது, எல்லாவற்றையும் வசப்படுத்துவது, எல்லாவற்றிலும் அன்பு கொள்வது, வாழ்க்கை நிலை (ஸம்ஸாரம்) உணர்தல் என்ற எட்டும் மனத் தத்துவ ஜயத்தால் சந்திரனது பெருமை பெறுதலாகும்.

*(7) பிளத்தல், அடித்தல், கட்டுவித்தல், வாழ்க்கை முறையை அமைத்துக் கொடுப்பது, வாழ்க்கையை மாற்றியமைப்பது, எல்லா உயிரினங்களேயும் தெளிவித்து அன்புபூணச் செய்தல், மரணத்தை வெல்வது, காலத்தை வெல்வது என்ற எட்டும் அஹங்கார தத்துவ ஜயத்தால் பிரஜாபதி நிலே பெறுவதாகும்.*

*8) காரணமின்றி படைத்தல், காத்தல், அழித்தல், உலகைக் கட்டுபடுத்தும் அதிகாரம், உலகின் போக்கைத் தொடங்கி வைப்பது, ஒன்றுக்கொன்று பொருந்தாதபடி செய்வது, தனித் தனியாகப் படைப்பது, வாழ்க்கைத் தொடரை ஏற்படுத்துவது என்ற எட்டும் மஹத்தத்துவத்தை வேல்வதால் பிரமனின் நிலே பெறுவதாகும்.*

*இவை அனைத்தும் ஸித்திகளேயாயினும் முடிவானவை அல்ல. இவற்ருல் தடையுருமல் மேல் சென்று பகவதனுபவம் பெறுவதே உயர்ந்த சித்தி. இந்த 80 தடைகளுமின்றி வழிபாட்டை அமைத்துக் கொடுப்பவர் - அநாதிநிதநநர். இந்த யோக சித்திக்கு இடையூருக உள்ள நிதனங்களே வதம் என்ற பெயரில் விஷ்ணு புராணம் குறிப்பிடுகிறது.* "உத்பதக்ராஹிணஸ்சைவ தே அஜ்ஞாநே ஜ்ஞாநமாநிந:. அஹங்க்ருதா அஹம்மாநா: அஷ்டாவிம்ஸத் வதாத்மகா:," (1-5-11) *என்று. பகவதனுபவத்திற்குத் தடையாயிருப்பவை இருபத்தெட்டு. இந்த இருபத்தெட்டு இடையூறுகளேப் பற்றிய குறிப்பு ஸாங்க்ய காரிகையில் (ச்லோ -49-51) காணப்படுகிறது. இந்த இடையூறுகள்* அசக்தி துஷ்டி *ஸித்தி என மூன்று வகைப்படும். அசக்தி 11 வகை, துஷ்டி 9 வகை ஸித்தி 8 வகை.*

அசக்தி - ஐந்து ஞானேந்திரியங்களும் ஐந்து *கர்மேந்திரியங்களும் தன் தன் சக்தியை இழந்து பொட்டை, ஊமை, செவிடு முதலிய குறைகளே அடைவதும் மனம் பேதலித்துப் பைத்தியம் பிடிப்பதும் பதினென்று. அசக்திகள் இந்திரிய சக்திக் குறைவால் யோக சாதனேயில் ஈடுபட முடியாமற் செய்பவை.*

துஷ்டி *என்பது மனநிலே. காரியம் முழுவதும் சித்திபெறுமுன்னரே நடுவிலேயே எல்லாம் கிடைத்து விட்டதுபோல் திருப்திப்படுவது துஷ்டியாகும். இது இலேயில் அன்னம் வைத்தவுடனேயே சாப்பிட்டது போன்ற திருப்தி ஏற்படுவது போலாகும். இதற்குப்பின் தொடர்ந்து முயல்வதற்கு*

*இது இடையூறு. இத்தகைய துஷ்டி 9 வகைப்படும் (1) பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், அஹங்காரம், மஹத், அவ்யக்தம் என்ற எட்டுவகைப்பட்ட பிரகிருதியிலிருந்தும் மீண்டு அதில் லயிக்காமல், விடுபட்டு, பிரகிருதிக்கு, அப்பாற்பட்ட இறைவனிடம் மனோலயம் ஏற்படுவதுதான் உபாஸனா யோகத்தின் முக்கிய நோக்கம், இந்த பிரகிருதியானது ஜடம். அதனைப் பற்றிக் கொள்ளும் இந்த யோகியின் மனமும் ஜடமாகிறது. ஸ்தூல உடலில் லயமடைந்ததைவிட அதன் மூலகாரணமான பிரகிருதியில் லயமடைவது சிறந்ததெனினும் இது வழியில் உள்ள (மைல்)காதக்கல் போலத்தானே தவிர அதுவே அடையவேண்டிய இடம் அல்ல. இன்னமும் வெகுதூரம் செல்லவேண்டும். இந்த ஜடத்தில் லயித்ததுமே அடைய வேண்டியதை அடைத்து விட்டதாக நிறைவுணர்ச்சி ஏற்பட்டால் அது ஸாதனையில் தடை ஏற்படுத்தும். இது* **பிரகிருதி துஷ்டி**[1] *(2) காஷாயம் முதலியவை தரிப்பது போன்ற வெளிவேஷத்தாலும் ஸந்யாஸியாகிவிட்டோம் என்ற பிரமையாலும் நிறைவு காண்பது* **உபாதான துஷ்டி** *(3) ''அதது அந்தந்த வேளையில் தான் நடக்கும். காலம் தானே கூட்டுவிக்கும் ஸாதனை எதற்கு?'' எனச் சோம்பியிருப்பது* **கால துஷ்டி** *(4) அவர் அருளிருந்தால் யோகம் கூடும். பகவான் அருள்வார் என்ற வாளாவிருப்பது* **பாக்ய துஷ்டி**. *இந்த நான்கும் மனத்தளவில் ஏற்படும் நிறைவு. (5-9) ''காதால் அவரைப் பற்றிக் கேட்க வேண்டும்'' கண்களால் அவர் திருவுருவைப் பார்க்கவேண்டும்'' என்றவாறு ஐந்து இந்திரியங்களையும் அவர்பால் லயிக்கச் செய்யும் முயற்சியின் இடையே ''என் காது பகவானைப் பற்றிக் கேட்கக் கொடுத்து வைக்காதது, அதற்கு விருப்பமில்லை. என்ன செய்வது'' என்றவாறு பொறிகளைக் குறை கூறி முயற்சியைக் குறைத்துக் கொள்வது* **இந்திரிய துஷ்டி**, *இது ஐந்து வகைப்படும். ஆக துஷ்டி ஒன்பது வகைப்படும்.*

**சித்தி** *எட்டுவகை. முயற்சியால் அடையக் கூடியவை கூடத் தானே தற்செயலாக ஏற்படக்கூடும். அவற்றையே அடைய வேண்டிய சித்தியாக நினைத்து ஏமார்ந்து மேற்கொண்டு முயற்சிகளைக் கைவிட்டுவிடக் கூடும். அத்தகைய சித்திகள் எட்டு. இவை சாதகனது பயிற்சி நிலையை உணரப் பயன்படுபவை.*

---

*1. இந்த ப்ரக்ருதி துஷ்டியையே அறுபத்து நான்காக லிங்க* **புராணம் விளக்குகிறது.**

இவையே சித்திகள் அல்ல. (1) உபதேசம் பெறுமலேயே பொருளை ஊகித்தறிவது **ஊஹ சித்தி** (2) தற்செயலாகக் கேட்ட ஒரு சொல்லால் (உபச்ருதி) பொருள் விளங்கப்பெறுவது **சப்த சித்தி** (3) குருவினிடமிருந்து உபதேசம் பெற்றதுமே சித்தியாவதும், அதனைப் பகுத்தறியத் தன் விவேகத்தைப் பயன்படுத்துவதும் **அத்யயனசித்தி** (4) பகவத் தத்துவ மறிந்தவனது நட்பு கூடி அதனுல் நிறைவுறுவது **ஸுஹ்ருத் ஸித்தி.** தான் விரும்பிய அற்பப் பொருள் கிடைத்ததால் கூடத் திருப்தியடைவதும் ஸித்தியே (5) பெரியோர்களது பணி விடைக்கான வாய்ப்பு **சுச்ரூஷாஸித்தி. (தான ஸித்தி)** (6-8) ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபெளதிகம் என்ற மூன்று துக்கங்களும் நீங்குவதால் ஏற்படும் நிறைவு **துக்கவிகாத துஷ்டி.** இப்படி 28 விதமான இடையூறுகள்.

இந்த இருபத்தெட்டு இடையூறுகளையும் அங்குசங்கள் என்ற பெயரிட்டு ஸாங்கிய காரிகை கூறும். யானையைக் கட்டுப் படுத்தும் துறட்டி போல் இவை ஸாதகனைக் கட்டுப்படுத்துபவை. இவைகள் குறுக்கிடாதவாறு தனது உபாஸனையை அமைத்தருளுபவர் அநாதிநிதநர். (42)

43. தாதா - தாங்குபவர்.

ஆதிசேஷன், கூர்மர், வராஹர். இப்படி ஆதார சக்தி மிக்கப் பல வடிவங்களை ஏற்று ஆதார சக்தியாகி உலகைத் தாங்குபவர். எல்லாவற்றின் விளை நிலமான மூலப்பிரகிருதியிடம் தன் அம்சத்தை பீஜமாகப் பொருத்தி அக்கருவை உலக வடிவாக்கி வெளிக்கொணர்ந்தவர். (கீதை 14-3) உலகை மறுபடி மறுபடி முன் இருந்தபடியே படைப்பவர்.[1] உலகைப் படைக்கும் பிரம்மாவாக இருப்பவர். அதிதியின் பிள்ளைகளாகிய ஆதித்யர்களில் ஒருவர் தாதா. (நா. 39) மனுவிற்கு உலக நிர்வாகத்தில் துணை நிற்பவர். இவர் காலத்தைக் கட்டுப்படுத்துபவர். இவருக்கு நான்கு மனைவிகள். குஹூ, ஸிநீவாலீ, ராகா, அனுமதி என. இவர்களும் காலத்தின் பகுதிகளான அமாவாஸ்யை, கிருஷ்ணபக்ஷ சதுர்தசி, பெளர்ணமி, சுக்லபக்ஷ சதுர்தசி இவற்றின் அபிமானி தேவதைகள். மாலை வேளை (ஸாயங்காலம்) அமாவாஸ்யை, காலை வேளை (பிராத: காலம்), பெளர்ணமி என்று இவருக்கு நான்கு குழந்தை. (நா. 44) ஸகோதரர். பிரும்மாவின் மானஸகள். விதாதா

1. धाता यथापूर्वमकल्पयत्। (पुरुषसूक्तम्)

புத்திரன் தாதா. அவருக்கு ஸகோதரர். விதாதா. (பாகவதம் 6-18-3), தாமரையில் வசிக்கும் லக்ஷ்மி ஸகோதரி (பாரதம் 1-66-51). திதியின் குமாரர்களான 49 மருத்துக்களில் தாதா ஒருவர். (அக்னி புராணம்) இந்த ஆதித்யர், பிரும்ம குமாரர், மருத்து வடிவில் இருப்பவர். (நா. 951) (43)

44. விதாதா - உலக நடைமுறை அமைப்பவர்.

பிரும்மாவைப் படைத்து அவருக்கு உலக நடைமுறைவழி நூலாகிய வேதத்தைக் கொடுத்து வினைப்பயனுக்கேற்றபடி உடல், பொறிகள், சூழ்நிலை, அனுபவம் முதலியவற்றை அமைத்து, உலகம் தானே இயங்குவதற்கேற்ற நடைமுறை வகுத்துக்கொடுத்தவர். மூலப்பிரக்ருதியிடம் பதித்த கருவை வளர்த்து உலகமாகத் தோன்றச் செய்தவர். தாதாவாகிய (நா. 43) ஆதிசேஷன் முதலானோரையும் தாங்குபவர்.

உலகைப் படைக்கும் பிரும்மதேவன் விதாதா. ஆதித்யர்களில் ஒருவர் விதாதா. (நா. 39) இவருக்கு மனைவி கிரியா. புரீஷ்யர்கள் என்ற ஐந்து அக்னிகள் இவரது குமாரர்கள். தாதா இவரது சகோதரர் (நா. 43), (பாகவதம் 6-18-3). பிரும்மாவின் மானஸ புத்திரர் விதாதா, அவரது சகோதரர் தாதா. தாமரையில் வசிக்கும் லக்ஷ்மி இவருடன் கூடத் தோன்றிய சகோதரி. (பாரதம் 1-66-51) பிரும்ம தேவன், பிரும்ம குமாரர், ஆதித்யர் வடிவில் உள்ளவர்[1] (நா. 484). (44)

45. தாது: உத்தம: - உலகைத்தாங்கும் சிறந்த மூலப் பொருள்.

தாது - தாங்கி நிற்பது. உடலிலுள்ள ரத்தம் எலும்பு முதலியவை உடலைத் தாங்குவதால் தாதுக்கள். உலகிற்கு மூலப்பொருளாகத் தாங்குவதால் ஐந்து பூதங்கள் தாதுக்கள். உலகைத் தாங்கும் இறைவன் தாது. மற்றவை இறைவனது அருளால் தாங்குகின்றன. இறைவன் தன் தனிச் சிறப்பால் தாங்குகிறார். அதனால் உத்தமரான தாது. இறைவன் ஜடமான உலகை சித்சக்திவடிவில் தாங்குகிறார். அவரது வடிவமான அந்த சித்சக்தி தான் தாதுக்களில் சிறந்தது. காரியமான உலகையும் அதற்கு மூல காரணமான பிரகிருதி, மஹத், அஹங்காரம். பூதங்கள் இவற்றையும் (அவற்றினுள் சித்தாக உட்புகுந்து) இயக்குவதால் இறைவன் உத்தம - தாது.

1. स नो बन्धुर्जनिता स विधाता । [तै.आ. १०.४]

வினையால் கட்டுப்பட்டவர்களான உலகினரைவிட, வினையால் கட்டுப்படாத பாபம் தீண்டாத தேவர்கள் உத் - மேம்பட்டவர்கள். அவர்களை விடச் சிறந்தவர், மேலானவர்களுக்கும் மேலானவர் தாது: உத்-தம:. தாதவே உத்தமாய நம:. தாதா - பிரும்மா. அவரைவிடச் சிறந்தவர். பிரும்மனின் படைப் பிற்குட்பட்டவர்களை விடச் சிறந்தவர் (தாது: உத்தமாய நம:) (45)

**अप्रमेयो हृषीकेशः पद्मनाभोऽमरप्रभुः ।**
**विश्वकर्मा मनुस्त्वष्टा स्थविष्ठः स्थविरो ध्रुवः ॥ ३७ ॥**

அப்ரமேயோ ஹ்ருஷீகேஶ: பத்மநாபோऽமரப்ரபு:.
விஶ்வகர்மா மனுஸ்த்வஷ்டா ஸ்தவிஷ்ட்டஸ் ஸ்த்தவிரோ த்த்ருவ: 37

46. அ - ப்ரமேய: - அளவையால் அறிய முடியாதவர்.

ஒரு பொருளின் உண்மை நிலையை உணர்வதற்குப் பல அளவைகள் உண்டு. ஒன்றால் இயலாத போதும், ஒன்றால் உணர்ந்ததை ஐயம் திரிபின்றி நிர்ணயம் செய்யவும் மற்றொன்று பயன்படும். இந்த அளவைகள் பிரமாணங்கள் எனப்படும். கண், காது முதலிய பொறிகளால் பெறக்கூடிய நேரிடைக் காட்சி முதலியவை பிரமாணங்களாகும். இதுவரை அறியாததொன்றை வேறொன்றால் பாதிப்புறாதபடி உணர்வது - ஸத்யமான அனுபவம் ப்ரமா. அது நான்கு வகைப்படும். ப்ரத்யக்ஷம், அனுமானம், உபமானம், சப்தம் என. நிறம், சுவை, மணம், ஒலி, தொடுகை முதலிய உணர்ச்சிகளால் வெளிப்பொருளைக் காண்கிறோம். நிறமுள்ளதைக் கண்களால் உணரலாம். ஒலிவடிவானதைக் காதுகளால் உணரலாம். நேரிடைப்பொருட்காட்சி (ப்ரத்யக்ஷம்)க்கு உட்படும் பொருளானது, நிறம், ஒலி முதலிய குணச் சிறப்புகள் உள்ளதாக இருத்தல் அவசியம். பகவான் நிறம் முதலிய குணச் சிறப்புகள் அற்றவர். அதனால் நேரிடைக் காட்சிக்கு உட்படாதவர். (ப்ரமாதும் ந யோக்ய:. - அப்ரமேய:) நேரிடையாகக் காணாததொன்றை அதனைக் காட்டும் குறியால் (லிங்கத்தால்) அனுமானித்து உணரலாம். நெருப்பை நேரில் காணாதவன் புகையைக் கண்டு நெருப்பினை அனுமானித்து உணர்கிறான். நெருப்பின்றிப் புகையாது. புகை எனும் குறி (லிங்கம்) நெருப்பைக் காட்டிக் கொடுக்கும். புகை ஒரு தவறாத அடையாளம். அத்தகைய குறியொன்றும் இறைவனை அடையாளம் காட்டுவதாக இல்லாததால் அனுமானித்து அவரை

உணரமுடியாது. இறைவனுக்கு இணையாக ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கதொரு உவமைப்பொருளின்மையால் உபமானத்தாலும் உணர முடியாது. வடிவமைப்புள்ள தொன்றையே உவமையால் காட்ட முடியும். இறைவன் வடிவற்றவர். அதனால் ஒப்புநோக்க முடியாதவர். பிரத்யக்ஷத்தால் முன் அனுபவம் பெற்ற பொருளைத்தான் அனுமானத்தால் உணர முடியும். புகையுடன் நெருப்பைக் கண்டவர்தான் இன்று புகையைக் கண்டதும் நெருப்பை உணர முடியும். அல்லது யாரேனும் அப்படி உணர்ந்திருந்து அவர் சொன்னால் அந்தச் சொல்லால் உணரலாம். இது சப்தம் எனும் பிரமாணம். இறைவனை நேரில் உணர்ந்தவர் - ஆப்தர் ஒருவர் கூறிய சொல்லாயின் அது ஏற்கத் தக்கது. அப்படிக் கண்டவர் ஒருவருமில்லை. வேதம் நம்பிக்கைக்குகந்த சப்தப்ரமாணமாயிற்றே! வேதத்தால் இறைவனை உணரலாமே என்றால், வேறொன்றால் அறியக் கூடியதொன்றை உணர்த்தத்தான் பிரமாணங்கள் தேவை. ஒருவன் தன்னை உணர்வதற்குக் கண் காது மூக்கு முதலியவற்றைத் தேடமாட்டான். அவன் அவனாகவே இருத்தலால் அவன் தன்னை அறிய வேறொரு ஸாதனத்தை எதிர்பார்ப்பதில்லை. பிரத்யக்ஷமே தேவையில்லை எனும்போது அனுமானமோ உபமானமோ சப்தமோ அவனுக்கு எதற்கு? இந்த பிரத்யக்ஷம் முதலிய ஸாதனங்களைப் பயன்படுத்துபவனும் அதனால் உணர்வு பெறுபவனும் அவன்தானே. அதுபோல் ஸ்ரீமன் நாராயணனே பிரமாணமெனும் உணர்விற்கு ஸாக்ஷியாகி அவற்றைக் காண்பவர். அவரே ப்ரகாசமாக - விளக்கமாக நின்று உணர்த்துபவர். வெளியிடைத் தோற்றங்களுக்குச் சாதனமான ஞானேந்திரியங்களுக்குப் புலனாகாதவர், பிரமாணங்களுக்குக் களமாகாதவர். அதனால் அவர் அப்ரமேயர் - புலனாகாதவர். புலனாவதற்கு உள்ள முறை பிரும்மனுக்கும் மனிதனுக்கும் ஒன்றே. அதனால் பிரம்மா முதலானோர் முயன்றும் அறியப் பெறாதவர். இது அது என்று அறிகிறோம். இதனால் அதனால் அறிகிறோம். இந்தகையது - அத்தகையது என்று அறிகிறோம். குறுகிய வட்டத்தில்பெறும் இந்தப் பொருளுணர்வு சிற்றறிவு. இந்த சிற்றறிவால் உணர முடியாதவர். உள்ளொளி தனி உணர்விற்கு அகப்படாதது. அதனால் அப்ரமேய: (நா. 102, 179, 248)[1]

(46)

1. अप्रमेयमनादि च यद् ज्ञात्वा मुच्यते बुधः । (अमृतबिन्दूप-९)

47. ஹ்ருஷீகேச: - புலனமைப்பை ஆள்பவர்.

*ஹ்ருஷீகா - மகிழ்வூட்டுபவை. கண் காது முதலிய பொறிகள். அவற்றின் உரிமையாளரும் அவற்றை ஆட்டுவிப்பவரும் ஜீவ வடிவிலுள்ள பகவான். அவரது வசத்தில் பொறிகள் அனைத்தும் இயங்குகின்றன. கண்களில் ஸூர்யனாக, மனத்தில் சந்திரனாக, நாக்கில் அச்வினி தேவதைகளாக - இப்படிப் பல தேவதைகளாக அமைந்து பகவான் அவற்றை இயக்கி வைப்பவர். (நா 8)*

*ஸூர்யன் சந்திரன் ஆகிய ஒளி மண்டலங்களிலிருந்து வரும் ஒளிக்கதிர்கள் அவரது விளக்கங்களே. அந்த ஒளிக்கதிர்களே உலகிற்கு அறிவூட்டுகின்றன. உலகை மகிழ்விக்கின்றன. தன்னை மறைத்து உலகை ஆழ்ந்த தூக்கத்தில் அமிழ்த்துகின்றன. பற்பல நற்பணிகளை நடக்கச் செய்கின்றன. அப்படி உலகை மகிழ்விக்கும் (ஹ்ருஷீ) ஒளிக்கதிர்களை(கேசா:)த் தன்னுடைமைப் பொருளாகக் கொண்டவர் பகவான்.[1] தாய் போன்று உயிரினம் அனைத்தையும் பரிவுடன் வருடி இன்பமூட்டித் தூங்கவைக்கவும், அப்படியே இதமாகத் தடவி விழிப்பூட்டவும், சந்திர சூர்ய கிரணங்களைச் சாதனமாக்கிக் கொள்பவர். மகிழ்ச்சி தரும் அழகிய கேசங்கள் கொண்டவர். (நா. 23, 648) வ்யூஹங்களில் பத்தாமவர் (ப. 23) (47)*

48. பத்மநாப: - தாமரையைத் தொப்புளில் கொண்டவர்.

*கருவில் சிசு தொப்புள்மூலம் தாயுடன் தொடர்பு கொள்கிறது. தாயிடமிருந்து தனக்குத் தேவையான ஊட்டத்தை அதன் மூலமாகப் பெறுகிறது. அப்படித் தாயுடன் பிணைந்திருந்தமையை அடையாளம் காட்டுவது தொப்புள். இது உலகில் காணும் காட்சி. இதற்கு மாறாகப் பகவான் தன் தொப்புளிலிருந்து ஒரு கொடியைத் தோற்றுவித்து அதன் காம்பில் ஒரு தாமரையைப் பொருத்தி, அந்தத் தாமரையைத் தன்னிடமிருந்து ஊட்டம்பெறச் செய்கிறார். உலகம் மூலப்பொருளாக இருந்த விராட் நிலையில், இயக்க மிகுதியால் நீண்ட வட்ட வடிவில் கூம்பிய தாமரை மலராகக் காட்சி தந்தது. அதுவே பகவானின் தொப்புளிலிருந்து கிளம்பிய கொடியில் காணும் தாமரை. காலத்தால் சுழன்று விரிவடையவிருக்கும் உலகம் அது.[2]. (நா. 196) வ்யூஹ மூர்த்திகளில் பதினோராமவர் இவர். (ப 25) (48)*

---

1. सूर्यरश्मिर्हरिकेशः पुरस्तात् । [तै.सं. ४.६.२], २. अजस्य नाभावध्येकमर्पितम् । [तै.सं. ४.६.२]

49. அமரப்ரபு:- தேவர்களின் பிரபு.

உலகைத் தோற்றுவித்ததும் அது தானியங்கியாகப் பலவாகப் பெருகப் பல தேவதைகளை உருவாக்கி அவர்களைத் தன் ஆணைக்கு உட்பட்டு இயங்க வைப்பவர். (நா.8) அவர்கள் எப்போதும் பணியாற்ற வேண்டியவர்களானதால் தேய்வு அழிவு போன்ற பரிணாமங்களை அடையாதபடி அழிவற்றவர்களாக, அமரர்களாகச் செய்தார். அவர்களை உரிமையுடன் ஆட்டிவைத்து அவர்கள் மூலம் உலகை ஆள்கிறார் (நா. 85, 286) (49)

விச்வகர்மா மநு: த்வஷ்டா என்று இனி வரும் நாமங்கள் உலகின் மூலப்பொருளைத் தாமரையாக்கித் தொப்புளில் தாங்கிய பகவான் சிற்பியாகி முன் வரைபடம் வரைந்து திட்டமிட்டுச் செதுக்கத் தக்கதைச் செதுக்கி வடிவமைப்பதை விளக்கும்.

50. விச்வகர்மா - உலகைச் செயலாகக்கொண்டவர்.

பலவாக ஆவேன் 'பஹுஸ்யாம்' - என்ற பரம் பொருளின் ஸங்கல்பம் மாயையின் செயலாகியது. உலகின் கரு தாமரை வடிவெடுத்தது. (பிரும்மத்தின் அண்டம் - பிரும்மாண்டம்) அது மஹத் அஹங்காரம் என்றவாறு பலவாக விரிவடைய பகவானின் ஸங்கல்பம் காரணமாயிற்று. விச்வமே அவரது பணி. விச்வம் அவரது பணியாலானது. எல்லாப் பணிகளும் அவருடையதே. தேவர்களின் சிற்பியான விச்வ கர்மா, காரணமாகாததைக் காரணமாக்கிப் படைப்பதில் வல்லவர். அர்ஜுனனை மகிழ்விக்கப் பாண்டவர்களது ராஜதானி இந்திர பிரஸ்த நகரைப் படைத்தவராகவும். திலோத்தமை என்ற அப்ஸரஸ் அழகியைப் படைத்தவராகவும் இந்திரன் யமன் வருணன் இவர்களது ராஜ ஸபையை நிர்மாணித்தவராகவும் பாரதம் கூறும். இப்படி அறிமுகமான விச்வகர்மா போன்றிருப்பவர்.[1]

பகவானே தனது விபூதியான விச்வகர்மாவின் வடிவில் தோன்றினார். தேவ குருவான பிருஹஸ்பதியின் தங்கை பிரும்ம வாதினி என்பவள் யோக மார்க்கத்தில் ஈடுபட்டவளாக உலகெங்கும் சுற்றி வந்தாள். எட்டு வசுக்களில் ஒருவரான பிரபாஸருக்கு மனைவியாகி யோக சக்திமிக்க விச்வ கர்மாவிற்குத் தாயானாள், விசுவ கர்மா சிறந்த சிற்பி, தச்சர், ஆபரணங்கள்,

1. स विश्वकृत्स हि सर्वस्य कर्ता । (बृ.आ. ४.४.१३) एष देवो विश्वकर्मा महात्मा । (श्वेताश्व ४.१०)

*விமானங்கள் என்று மனித இனம் நாடும் எல்லா ஸாதனங்களேயும் செயல் திறனுடன் செய்து பாராட்டப் பெற்றவர். (பாரதம் 1-66-27-29) இவரது குமாரர் நளன் என்ற வானர வீரர். ராமனுக்காக ஸேதுவைக் கட்டியவர். (50)*

**51. மநு:- மனுவானவர்.**

*மனனம் செய்பவர் மனு. செயலாக்கவிருப்பதை முதலில் மனத்தால் உருவகப்படுத்துவது மனனமாகும். ஆஞ்சநேயரிடம் இந்த மனனம் மிகவும் புகழ்பெற்றது. 'ஜகாம மநஸா ராமம். ஜகாம லங்காம் மநஸா' என்பார் வால்மீகி. உலகைப் படைக்க முற்பட்ட பகவான் மூலப்பொருளைத் தாமரையாகத் தோற்றுவித்ததும் தன்னையே ஆணுகவும் பெண்ணுகவும் இரு கூருக்கி, ஸ்வாயம்புவ மனு - சதரூபா என்ற ஆதிதம்பதி ஆனுர். உலகியலைத் திட்டமிட்டு முறை வகுத்து நடத்திக் காட்டினுர். அவரைத் தவிர வேறு ஒருவர் அப்போது மனனம் செய்பவராக இல்லையே![1] ஸ்வாயம்புவ மனுவைத் தொடர்ந்து இதுவரை 7 மனுக்கள் வந்துள்ளார்கள். இவர்கள் பகவானின் ஸங்கல்பத்தைச் செயல்வடிவாக்கப் பகவானுல் தோற்றுவிக்கப்பெற்றவர்கள். அந்த மனுவாக-மனுக்களில் ஒவ்வொருவருமாக இருப்பவர். மக்கள் தலைவராக, பிரஜாபதியாக இருப்பவர்.*

*மந்திரத்தை மனு என்பர். மந்திரம் தெய்வ சக்திமிக்க ஒலி வடிவிலுள்ளது. ஒரு பேரரசை முறைப்படி நடத்த மிக அவசியமான திட்டமிடுதலும் அரசியலும் மந்திரமே. அவ்வடிவில் இருப்பவர். (51)*

**52. த்வஷ்டா - செதுக்கி ஒடுக்குபவர்.**

*பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் மூலப்பொருள் நிலைக்கு மாற்றுவதற்காக அணுவணுவாகச் செதுக்கி உருவமைப்பைச் சிதைத்தவர். மஹத் என்ற மூலப்பொருளை உருவமைப்பிற்காகச் செதுக்கி அஹங்கார தத்துவமாக்கிப் பஞ்சபூதங்களாக, ஸ்தூலஸூக்ஷ்ம சரீரவடிவாக அமைத்தவர், பெயரும் வடிவமும் தந்தவர். செதுக்கச் செதுக்க உடலமைப்பு அழகுபெறும்.*

*பன்னிரு ஆதித்யர்களில் ஒருவர். (நா. 39) பிருஹஸ்பதிக்குப் பதிலாகச் சிறிது காலத்திற்குத் தேவர்களின் குருவாக இருந்த*

1. अमतो मन्ता। नान्योऽतोऽस्ति मन्ता । (बृ.आ. ३.७.२३) मतेर्मन्तारं मन्वीथाः (३.४.२) अमतं मन्तृ । नान्यदतोऽस्ति मन्तृ । (३.८.११)

*வேதப்புகழ்பெற்ற விச்வரூபருக்கும் இந்திரனின் எதிரியான விருத்திராஸுரனுக்கும் தந்தை. இவரும் ஒரு தேவச் சிற்பி. விச்வகர்மாவிற்கும் (நா. 50) த்வஷ்டா என்ற பெயருண்டு. (52)*

**53. ஸ்த்தவிஷ்ட்ட:- மிகப்பெரும் பொருளாயிருப்பவர்.**

*மூலப்பிரகிருதியிலிருந்து தோன்றிய மூலகாரணப்பொருள் மஹத் எனப்படும். அதுதான் ஸ்தூலம், அதைவிடப் பெரும்பொருள் பகவான் (அதிசயேந ஸ்த்தூல:— ஸ்த்தவிஷ்ட்ட:) 'பஹு ஸ்யாம்' பலவாக ஆவேன் என்ற ஸங்கல்பப்படி மிகப்பெரும் பொருளாகத் தன்னிடமிருந்து பல பெரும்பொருள்களைத் தோற்றுவிப்பவராக விராட்வடிவில் தோன்றியவர். (நா. 8,436) (53)*

**54. ஸ்த்தவிர: த்ருவ: - நிலைத்த முதியவர்.**

*மஹத்தாயிருந்த மூலப்பொருள் பலவாயிற்று. காலத்தால் குறுகித் தோன்றி வளர்ந்து தேய்ந்து காலமும் திசையுமறியா மூப்பினுக்குட்பட்டு மறையும் இயல்புடையவையான பல தோன்றின. அவற்றை அப்படி ஆக்கிய பகவான் முதியவர்களுக்கும் முதியவராக ஆனார். மூப்பினைத் தொடர்ந்து வரும் மறைவுக்கு உட்படாதவரானதால் அழியாத - நிலைத்த முதியவரானார். முன்னைப் பழம் பொருளுக்கும் முன்னவரானதால் ஸ்தவிர:. முதியவை அனைத்தும் அழியும்போது தான் அழியாதிருத்தலால் த்ருவ:. இரண்டு சொற்கள் சேர்ந்த ஒரு நாமம். ஸ்த்தவிராய த்ருவாய நம:*[1]

*ஸ்த்தவிர: த்ருவ: என்று தனித்தனியாக இரு நாமங்கள் என்று ஸ்ரீபட்டர். காலத்தால் மாறுபடாமல் எல்லாக் காலத்திலும் நிலைத்திருப்பவர். ஸ்ருஷ்டி முதலியவற்றிற்குக் காலத்தைப் பயன்படுத்திக்கொண்டாலும் காலத்தை மீறிச் செயலாற்றுபவர். காலத்தின் வசமாகாமையால் நிலைத்தவடிவம் கொண்டவர் - ஸ்தவிர:. தன்னைச் சுற்றி எல்லையற்ற மாறுபாடுகள் தோன்றிடும் நிலையிலும் தன் நிலையிலிருந்தும் வழுவாதவர் - த்ருவ:. இதன்படி ஸ்தவிராய நம:, த்ருவாய நம: என்று இரு அர்ச்சனைகள். (இதற்குப் பிறகு நாம எண்களில் தொடர்ந்து மாறுபாடு ஏற்படும்.) (54)*

1. त्वेषं ह्यस्य स्थविरस्य नाम। (ऋक्संहिता ७.१००,३)

अग्राह्यः शाश्वतः कृष्णो लोहिताक्षः प्रतर्दनः ।
प्रभूतस्त्रिककुब्धाम[1] पवित्रं मङ्गलं परम् ॥ ३८ ॥

அக்ராஹ்ய: ஶாஶ்வத: க்ருஷ்ணோ லோஹிதாக்ஷ: ப்ரதர்தந:
ப்ரபூதஸ் த்ரிககுப்த்தாம[1] பவித்ரம் மங்களம் பரம் 38

55. அக்ராஹ்ய:- பொறிகளுக்குப் பிடிபடாதவர்.

*ஞானேந்திரியங்களுக்குப் புலப்படாதிருப்பதை அப்ரமேய: என்ற நாமம் விளக்கிற்று. கர்மேந்திரியங்களுக்கு புலப்படா திருப்பதை இந்த நாமம் விளக்குகிறது. பேசியோ சென்றோ பற்றியோ அடைய முடியாதவர்.[2] குயவன் மண்ணைக் கையாள்வதுபோல் பகவானை மற்றொருவர் கையாள முடியாது. பிறரது பிடிக்ககப்படாதவர். (55)*

56. சாச்வத:- அடிக்கடி காணப்படுபவர்

*முக்காலுமிருப்பதால் சாசுவதமானவர். தொடர்ந்திருக்கும் ஒன்றைப் பொறிகளின் இயலாமையால் தொடர்ந்திருப்பதாகக் காணமுடியாது. ஆனால் அது அடிக்கடி புலப்படும். அது தொடர்ந்து நிலைத்திருப்பதை உணரமுடியும். அப்படிச் சாசுவதமானவர். தோற்றமும் மறைவும் இல்லாதவர்.[3] தொடர்ந்து உலகத்தின் இயக்கம் நடைபெறுவதால் ஓய்வின்றி எப்போதும் புலப்படுபவர். (நா. 120, 627) (56)*

57. க்ருஷ்ண:- ஸத்தாயும் ஆனந்தமாயும் இருப்பவர்.

*கிருஷ் - இருக்கை, ண - ஆனந்தம். பேரிருக்கையும் பேரானந்தமாயும் உள்ளவர். மண் குடமானது. மண்ணாகக் குடமாக மாறிக்கொண்ட இருந்தாலும் இருக்கை தொடர்ந்து உள்ளது. குடம் உடைந்து மண்ணானது. குடமாக இருக்கை மாறி மண்ணாக இருக்கை உள்ளது. இந்த இருக்கை பிரளயம் வரை தொடரும். பிறகும் பரமனிடம் அடங்கிப் பரமனாக இருக்கும். இந்த நித்திய ஸத் (இருக்கை) ஆகவும் நித்திய ஆனந்தமாகவும்*

---

1. त्रिककुद्धामा, त्रिककुब्धामा, त्रिककुद्धाम

*த்ரிககுத்தாமா, த்ரிககுப்தாமா, த்ரிககுத்தாம (பா)*

2. यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह । (तै.२.२.४)
यत्तदद्रेश्यमग्राह्यमगोत्रमवर्णं । (मुण्डक. १.१.६)

3. अजो नित्यः शाश्वतोऽयं पुराणः । (कठ. १.२.१८)

*இருப்பவர் அவரே. மனத்தை ஈர்க்கவல்ல கருநிறம் கொண்டவரானதால் க்ருஷ்ணர். தனது லீலைகளில் மகிழ்ந் திருப்பவர். (நா. 550) வ்யூஹநிலைகளில் உள்ளவர். (ப. 25) (57)*

58. லோஹிதாக்ஷ:— சிவந்த கண்களுள்ளவர்.

*உள்ளத்தில் ஆனந்த நிறைவை அல்லதுகோபத்தைக் காட்டுகிற வெளி அடையாளம் கண்கள் சிவப்பதாகும். சிவந்த கண்கள் உள்ளவர்.*[1] *(58)*

59. ப்ரதர்தந: - ஹிம்ஸிப்பவர்.

*பிரளய காலத்தில், தன்னிடம் ஒடுக்கிக்கொள்வதற்காக உருச்சிதைவு புரிபவரானதால் ஹிம்சிப்பவராகக் காணப் படுகிறார். தாம் வகுத்த அறவழிக்கெதிராகச் செல்பவரை ஹிம்ஸிப்பவர். இந்த நாமத்தை ஒட்டிக் கோபத்தால் சிவந்த கண்களுள்ளவராக லோஹிதாக்ஷ: என்ற முன் நாமம் பொருள் தரும். (59)*

60. ப்ரபூத: - நிறைந்தவர்.

*பேராளுமையும் எல்லாவற்றையும் அடக்கி ஆளும் உரிமையும் கொண்ட ப்ரபு ஆனதால் எல்லாச் சிறப்புகளும் நிறைந்தவர். ஞானம், ஐச்வர்யம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் என்ற ஆறு சிறப்புகள். ஞானம் - எல்லாமறிவது; ஐச்வர்யம் - தன்னிஷ்டப்படி ஆட்டிவைக்கும் பேராளுமை; சக்தி - பேராளுமைக்குரிய செயலாற்றல்; பலம் - அதற்கான துணைப்பொருள் நிறைவு; வீர்யம் - பிறரை எதிர்த்து நிற்கும் ஆற்றல்; தேஜஸ் - பிறர் எதிர்ப்பைத் தாங்கும் ஆற்றல்; பிறரை எதிர்க்கவிடாமல் செய்வது. (ஆனந்தகிரி கீதை உரை 1-1). இவைகளுக்கு பகம் என்ற பெயரும் உண்டு. (நா. 558) இவை பகவானிடம் எப்போதும் நிறைந்துள்ளன.*

*உலகை ஒடுக்கிக்கொண்ட பின்னரும் எல்லாம் நிறைந்தவராகக் காண்பவர். மிகப் பெருந் தோற்றம் கொண்டவர். வாமனராகிப் பின் உலகளாவ வளர்ந்த திரிவிக்ரமத் தோற்றம் கொண்டவர். (60)*

1. लोहिताक्षः सूर्यो विपश्चिन्मनसा पुनातु। (तै.आ.४.४२)

61. த்ரிககுப்த்தாம - மூன்று திசைகளிலும் ஒளியாக விளங்குபவர்

1. நிலத்தின் பரப்பினைக் கிழக்கு தெற்கு எனத் திசைகளால் அளப்பதுபோல், உயரத்தை மேல், நடு, கீழ் என மூன்றுகப் பிரித்து அளக்கிறோம். மேல் நடு கீழ் என மூன்றுக உள்ள திசைகளின் ஒளிவிளக்காக - ஆதாரமாக இருப்பவர். (தாம - பிரகாசம், ஆதாரம்.) திரிவிக்ரமத் தோற்றத்தில் மேலும் கீழும் நடுவிலும் விரிந்த தோற்றமுள்ளவர்.

பகவான் உலகமாக ஆனுர். பகவானின் கால்பங்கே உலகமாயிற்று. உலகமாக மாருத அம்சம் முக்கால் பங்கு.[1] (மூன்றுபாதங்கள்). அந்த முக்கால் பங்காகவும் ஒளியுடன் விளங்குபவர். ககுத் - ககுப் என்று இரு உச்சரிப்பு உண்டு. இரண்டிற்கும் பகுதி என்று பொருள். திரிபாத் விபூதி நாராயண உபநிடதம் இந்த உலகமாக மாருத முக்கால்பங்கைப் பற்றி மிக அழகான விளக்கம் தருகிறது. திரியுகீ நாராயணம் என்ற இமயமலேயிலுள்ள திவ்ய க்ஷேத்திரம் இப்பெருமையை விளக்குவதாகும். ஞானம் முதலிய ஆறு குணங்களும் மூன்று இரட்டைகளாகும். அவைகளின் இருப்பிடம். (நா. 60)

த்ரிககுத், தாம என்று இரு நாமங்களாகப் பிரிப்பதுண்டு. ககுத் திமிள், பூமியைத் தாங்க எடுத்த வராஹர் சிரஸில் மூன்று மேடுகள் இருந்தன. மூன்று மேடுகளுள்ளவரானதால் த்ரிககுத். தாம - ஒளிவடிவானவர். தாம என்பது நபும்ஸகலிங்கச் சொல்லாகும். த்ரிககுப்தாம என்று நபும்ஸகலிங்கமாகவும், த்ரிககப்தாமா த்ரிககுத்தாமா என புல்லிங்கச் சொல்லாகவும் கூறுவதுண்டு. பாடபேதங்களே ஒட்டி த்ரிகுப்தாம்நே நம: த்ரிககுத்தாம்நே நம: த்ரிககுதே நம: தாம்நே நம: (61)

62. பவித்ரம் - தூய்மையளிப்பவர்.

தூய்மையளிக்கும் கங்கை முதலியவற்றிற்கும் தூய்மை தருபவர். (சு.16) இவரது பெயரைக் கூறியும் இவரை நினைத்தும் பெரியோர் தூய்மையற்ற பொருளேத் தூய்மையுடையதாக ஆக்குகின்றனர். இந்தத் தூய்மையில் தொடர்ந்து தோய்ந்திருப்பவர்களும் தூய்மை தரும் நாமமும் மந்திரமும் அந்தப் பெயருடையானும் பவித்ரமே.[2] பவி - இந்திரனது

1. पादोऽस्य विश्वा भूतानि। त्रिपादस्यामृतं दिवि।(पुरुषसूक्तम्)

2. चरणं पवित्रं विततं पुराणम्। येन पूतस्तरति दुष्कृतानि। (तै. आ. १०, ११) पुष्करमहं पवित्रमहम् (अथर्वशिरः २)

வஜ்ரமும் அதனையொத்த கொடிய ஆயுதங்களும்; (இடியும் இடியையொத்த கொடிய ஆபத்தை விளைவிப்பவைகளும்) அவைகளிலிருந்தும் நம்மைக் காப்பவர். (62)

63. மங்களம் பரம் - மேலான மங்களமாயிருப்பவர்.

மங்களப் பொருள்களுக்கெல்லாம் மங்களநிலை தந்தவர் பவித்ராணாம் பவித்ரம் ய: மங்களாநாம் ச மங்களம் (சு. 16) என்ற பீஷ்மரின் முன்னுரையில் அமைந்த சிறப்புகள் இங்கும் பவித்ரம், மங்களம் பரம் என்ற தொடராக வந்துள்ளன. "அசுபாநி நிராசஷ்டே தநோதி சுபஸந்ததிம். ஸ்ம்ருதிமாத்ரேண யத் பும்ஸாம் ப்ருமஹ தத் மங்களம் விது:". நினைத்த அளவில் மங்களமல்லாததை விலக்கி மங்களத்தைத் தொடர்ந்திருக்கச் செய்வதால் அந்த பரம்பொருளே மேலான மங்களம்' என்று விஷ்ணு புராணம் கூறும். மேலான மங்களமாகவே இருப்பவர். தீக்குணங்களற்ற மங்களமான தோற்றமுள்ளவர். மங்களாய பரஸ்மை நம:, பரஸ்மை மங்களாய நம: (63)

ईशानः प्राणदः प्राणो ज्येष्ठः श्रेष्ठः प्रजापतिः ।
हिरण्यगर्भो भूगर्भो माधवो मधुसूदनः ॥ ३९ ॥

ஈசாந: ப்ராணத: ப்ராணோ ஜ்யேஷ்ட்ட: ச்ரேஷ்ட்ட: ப்ரஜாபதி:
ஹிரண்யகர்ப்போ பூகர்ப்போ மாதவோ மதுஸூதந: 39.

64. ஈசாந: - கட்டுப்படுத்துபவர்.

அனைவருக்கும் அவரவரது வினைக்கேற்ப உடலமைப்பையும் ஸாதனங்களையும் போகப்பொருளையும் சூழ்நிலையையும் அமைத்து அதன்படி வாழக் கட்டுப்படுத்துபவர். எல்லாவற்றையும் தன் விருப்பப்படி இயங்கச் செய்யும் சிறந்த வல்லமை படைத்தவர்.[1] (ஸர்வ சக்தர்) தன் ஆளுமையை எப்போதும் வெளிப்படுத்திக் கொண்டிருப்பவர். சிவபெருமானின் ஐந்து முகங்களில் ஒன்று ஈசானர். அவரது எட்டு மூர்த்திகளில் வாயுபூதத்தின்

1. ईशानो ज्योतिरव्ययः (३. १२) उतामृतत्वस्येशानः (३.१४) सर्वस्य प्रभुमीशानं (३.१७) तमीशानं वरदं देवमीड्यं (४.११) (श्वेताश्वतरे) अथ कस्मादुच्यते ईशानः? यः सर्वान् देवानीशते ईशनीभिः जननीभिश्च परमशक्तिभिः। (क्रियाज्ञानेच्छाशक्तिभिः) (अथर्वशिरः ४)

*வடிவிலுள்ளவர் ஈசானர். அவரது அம்சமாக வடகிழக்கின் திக்பாலகர் ஈசானர். இவர்களது வடிவிலுள்ளவர். (64)*

**65. ப்ராணத:- உயிரூட்டுபவர்.**

*ஜடமான உடலில் உயிரை ஊட்டி அதனை இயங்கச் செய்பவர். அந - சலனம் அசைவு. ப்ர - அந:- சிறப்பாக அசைவது. உயிருள்ளவையே அசையும். உயிர் உள்ளே இருப்பதன் அடையாளமே அசைவுதான். அசைவு அதிகமாக ஆக உயிர் வாழமுடியும். இந்த சிறந்த அசைவைத் தருபவர். அசைவைத் தருபவரே அசைவைத் துண்டிப்பவராகவும் ஆகிறார். (ப்ராணாந் த்யதி கண்டயதி) கண் காது முதலியவற்றின் உயிர்ப்பின் அடையாளமான செயல்களைத் துண்டிப்பவர். உயிர்ப்பின் அடையாளமான மூச்சு மட்டும் இருந்தால் போதாதே. கண் காது முதலியவை செயல்பட்டால் தான் பிராணன் விளக்கம் பெறும். அப்படிக் கண் காது முதலியவற்றைக் கூரானதாக்கிப் பிராணனை ஒளிபெறச் செய்பவர். (ப்ராணாந் தாயதி - சோதயதி). இந்திரியங்களாக விளக்கம் பெற்ற அஹங்கார தத்துவத்தை ஸம்ஹார காலத்தில் செடியிலிருந்து பூவைப் பறிப்பதுபோல் பறித்துத் தொடர்பகற்றுபவர். (ப்ராணாந் தாதி லுநாதி) தன்னை அண்டியவர்களுக்குத் தன்னை எப்போதும் கண்டனுபவிக்கும் வலிவைத் தருபவர்.[2] (நா. 321, 408) (65)*

**66. ப்ராண:- உயிராயிருப்பவர்.**

*உலகில் ஜீவனாக ஆத்மா நுழைந்த பிறகே விராட் வடிவம் செயல்புரியத் தொடங்கியது. (நா. 8) அதனால் பரமாத்மாவே ப்ராணன். அவர் க்ஷேத்திரஜ்ஞனாக ஜீவனாக உட்புகுந்த பிறகே அசைவு ஏற்பட்டமையால் க்ஷேத்ரஜ்ஞனான ஜீவனே ப்ராணன். அவரே உயிருக்கும் உயிர்.[1] அவரால் உயிர்ப்பிக்கப் பெற்ற உயிரும், பிராண வாயுவும், உயிர்ப்பின் அடையாளங்களும், உயிர்ப்பும், அதனைத் தரும் உயிரும், உயிராகி உலகை வாழ வைப்பவரும் அவரே. (நா. 320, 407). (66)*

1. को ह्येवान्यात् कः प्राण्यात्। यदेष आनन्दो न स्यात्। [तै.उ.२.७]

2. यद्वाचो ह वाचं स उ प्राणस्य प्राणः। (केन. १.२) यदिदं किञ्च जगत्सर्वं प्राण एजति निःसृतम् (कठ २. ६. २)

67. ஜ்யேஷ்ட்ட:- முதியவர்களுக்கும் முதியவர்.

தோன்றும் பொருள் அனைத்திற்கும் முன்னிருந்த வராகையால், பிரும்மா முதலிய முதலில் தோன்றிய முதியவர்களுக்கும் அவர் முதியவர். அவருக்கும் மூத்தவர் ஒருவர் இல்லை. பிரும்மா மற்றவரைக்காட்டிலும் முதியவர் ஆனதால் ஜ்யாயாந் வ்ருத்ததர:. அவரைவிட மூத்தவரானதால், எல்லோரையும் விட மூத்தவரானதால் நாராயணன் ஜ்யேஷ்ட்ட:- வ்ருத்ததம:. மூலகாரணமானதால் காரியமான பிரும்மா முதலானவர்க்கும் முன்னிருப்பவர். உடலில் உயிராக முன் நுழைந்தவராகையாலும் அவரே முதியவர்.[1] வயதாலோ தோற்றத்தாலோ ஏற்படக் கூடிய முதுமை பகவானிடத்தில் தோன்ருது. முதிய அடியார்களாலும் முழுவதும் கண்டறியப்பெருத பெருமை கொண்டவரானதால் ஜ்யேஷ்ட்ட:. முக்கியமானவர். (67)

68. ச்ரேஷ்ட்ட:- மிகச் சிறந்தவர்.

மிகச்சிறந்தவர் எனப் பாராட்டப்பெறுகிற ப்ரசஸ்யரைவிடச் சிறந்தவர் - ப்ரசஸ்யதம:- ச்ரேஷ்ட்ட:. ஜீவனுகி உயிருட்டியதே அவரிடமுள்ள பெருஞ் சிறப்பு. ஜ்யேஷ்ட்ட: ச்ரேஷ்ட்ட: என்ற இரு நாமங்களும் ப்ராண: என்பதைத் தொடர்ந்து அமைந்திருப்பது உபநிடதக் கருத்தை ஒட்டியதாகும். காற்ருக நின்று உயிருடன் இருக்கச் செய்வது பிராணவாயு. அதனைவிடக் காற்று வடிவில் இராத ஜீவனே (பரம்பொருளே) சிறந்த உயிர்.[2] அதனுல் காற்று வடிவில் உள்ள பிராண வாயுவையும் மற்ற பிராண சக்திகளையும்விட ஜீவனுகிய உயிரைச் சிறந்த உயிராக உபநிடதமும் விஷ்ணுஸஹஸ்ரநாமமும் போற்றுகின்றன.

கண் காது முதலிய பொறிகள் விளக்கப் பெறுவது உயிரால். அந்த உயிர் விளக்கம் பெறுவது கருவினுள் திருவாக ஜீவன் நுழைந்தமையால். அந்த ஜீவனது முழு வடிவமான பரமாத்மா உயிர்களுக்கும் உயிராக, முதியவருக்கும் முதியவராக, பெருமை பெற்றவருக்கும் பெரியவராக இருப்பதை ப்ராண: ஜ்யேஷ்ட்ட: ச்ரேஷ்ட்ட: என்ற நாமத் தொடர் விளக்குகின்றது. அதனுல் எல்லோராலும் மிகச் சிறந்தவர் என பாராட்டப் பெறுகிருர். (68)

1. प्राणो वाव ज्येष्ठश्च श्रेष्ठश्च। (बृ. आ. ६.१.१) ज्येष्ठोऽहं श्रेष्ठोऽहं (अथर्वशिर: २)
2. आनीदवातं स्वधया तदेकम्। तस्माद्धान्यं न पर: किञ्चनास। (तैत्ति. ब्र. २. ७. ९)

69. ப்ரஜாபதி: பெருமக்கள் தலைவர்.

ஸ்ருஷ்டி தொடங்கியதும் முன்னணியில் மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், க்ரது, ப்ருகு, வஸிஷ்டர், தக்ஷர், நாரதர், தர்மர், கர்த்தமர், ஸ்வாயம்புவமனு - சதரூபா எனும் தம்பதி முதலானவர்களைப் பிரும்மா தோற்றுவித்தார். இவர்கள் மூலமே உலகம் விரிவடையத் தொடங்கியது. இவர்களே மூல புருஷர்கள். வாழ்ந்து மடியும் சாதாரண மக்களினத்தவராக இல்லாமல், இவர்கள் சிறப்பு மிக்க பிறப்புள்ளவர்கள். (ப்ர-ஜா: ப்ரகர்ஷேண ஜாயந்தே). இவர்களுக்கெல்லாம் தலைவராக, தமது முக்கிய நோக்கமான படைப்பு விரிவடைவதில் அவர்களைப் பயன்படுத்துபவராக பகவான் இருந்தார். ப்ரஜா-பதி:. (நா. 197)

முக்கியப் பிரஜைகளாக இருந்த தக்ஷர், மரீசி முதலானோர், அவர்களது வழித்தோன்றலாக வந்த மக்கள் கூட்டத்தைக் கட்டிக் காத்து வழிகாட்டி நன்னெறியில் கொண்டுவந்த தலைவர்களாக விளங்கியதால் பிரஜாபதிகள். அவர்கள் வடிவில் உள்ளவர்.

பிறந்து மடியும் இனத்தைச் சாராமல் அமிருத நிலையில் வாழப் பிறந்தவர்களாக இறைவனை நாதனைப் பெற்ற பெருமக்களான பக்தர்களுக்கு ஸ்வாமியாக தலைவராக இருப்பவர். (69)

70. ஹிரண்ய கர்ப்ப:- ஒளிமிக்க அண்டத்தின் கருவில் இருப்பவர்.

பத்மநாபராக (நா. 48) விளங்கிய பகவானின் தொப்புளில் தோன்றிய தாமரை, ஆயிரம் சூரியனின் ஒளி பெற்றதாக இருந்ததால் ஹிரண்யம் - தங்கம் போன்று தக தக என்று ஒளி பெற்றிருந்தது. அதன் கருவில் தோன்றியவர் பிரும்மா.[1] படைப்பின் தொடக்கத்தில் விராட்டைத் தொடர்ந்து வெளியானவர் பிரும்மா. அவரது வடிவில் இருப்பவர். பொன்மயமான பிரும்மாண்டத்தினுள் ஆத்மாவாக இருப்பவர்.

குறைகளும் கேடுமற்ற நித்தியமான ஸத்வமயமான பொன்னுலகு பரமபதம். அதில் நித்யவாஸம் புரிபவர். (நா. 411) (70)

1. हिरण्यगर्भं पश्यत जायमानं [तै. आ. १०. १२] हिरण्यगर्भः समवर्तताग्रे । [तै. सं. ४. १. ८]

71. பூகர்ப்ப: - பூமியைக் கருவில் கொண்டவர்.

*தம்மால் படைக்கப் பெற்ற உயிரினம் அனைத்தும் வாழ்வதற்கு இருப்பிடமாகத் தோற்றுவித்த பூமியைக் கரு போல் தம்மிடம் வைத்துக் காப்பவர். பிரும்மத்தின் அம்சங்களான ஸத் சித் ஆனந்தம் என்பதில் ஸத்தா எனும் ஸதம்சத்தின் கருவில் உலகின் இருக்கையை அமைத்துத் தந்தவர். (நா. 478,701). பூமி பகவானின் பத்தினி. அவளை வராஹராக இருந்து தாங்குபவர். (71)*

72. மாதவ:- லக்ஷ்மியின் கணவர்.

*மா - லக்ஷ்மி. அவளது தவ:- கணவர். மா என்ற வினைச்சொல் தன்னுள் அடக்கிக்கொள்வது. அளவிடுவது. பிரித்துப் பகிர்ந்து கொடுப்பது எனப் பொருள் கொண்டது, உலகைக் கருவாகத் தன்னுள் அடக்கிக்கொள்வதால் தாயாகியவள் மா எனும் பரமனின் சக்தி. மா - அளவிடும் கருவி. அளவிடும் கருவி, அளக்கப்பெறும் பொருளின் முன்னும் பின்னும் நின்று அளக்கப்பெறுவது முழுவதையும் அளக்கும். அதனால் அது அளக்கப்பெறுவதைவிடப் பெரிது. லக்ஷ்மீதேவி உலகைப் படைக்கு முன்னரும் மறைந்த பின்னரும் உலகம் இருக்கும் நிலையிலும் தொடர்ந்து நின்று அவை அவற்றை அளவில் அடக்கி அடையாளம் காட்டுபவள். மா-செல்வத்தின் தேவதை. செல்வமாகி நின்று அததனை அதனதனிடத்தில் நிலைக்கவைப்பது-பகிர்ந்து கொடுக்கும் சக்தியான லக்ஷ்மியின் செயலாகும். அதனால் அவள் மா, அவளுக்குக் கணவர். லக்ஷ்மியின் விபூதிகளான உலகை வாழவைக்கும் சக்திகளனைத்தின் உரிமையாளர். கேசவர் முதலிய 12 வ்யூஹ நாமங்களில் மூன்றாமவர். (ப. 25)*

*மா என்பது சித்தவ்ருத்தி. கண் முதலியபொறிகளால் உணர்ந்த பொருள் மனத்தைக் கட்டுப்படுத்திவிடுகிறது. அதனால் மனம் அந்தப் பொருள் வடிவை அடைகிறது. இப்படி மனம் பல பொருள்களின் வடிவைப் பெறுவதால் ஒருநிலைப்படுவதில்லை. அதனைக் கட்டுப்படுத்தவும் விஷய பந்தம் ஏற்படாதிருக்கவும் மூன்று முறைகள் - மௌனம், தியானம், யோகம் என. பொறிகளை விஷய உணர்விற்குச் செல்லாதபடி அடக்குதல் மௌனமாகும். அப்போது நூலறிவால் உணர்ந்த பரதத்துவத்தை மனம் நின்று யோசிக்கும். அப்படிக் கருத்தால் உணர்ந்த விஷயத்தில் மனம் பதிவது தியானமாகும். இந்த மனப் பதிவு நிலைத்திருப்பது*

*யோகமாகும். (யோக: சித்தவ்ருத்தி நிரோத:) இவற்ருல் விஷய நாட்டத்தைத் தவிர்க்கச் செய்பவர். (மாம் சித்தவ்ருத்திம் தவதி தூரீகரோதி) (நா. 167, 735) (72)*

73. மதுஸூதந:- மதுவெனும் அசுரனை மாய்த்தவர்.

*பிரளயகாலத்தில் பகவான் தன்னிடம் உலகை ஒடுக்கிய பிறகு யோக நித்திரையில் ஆழ்ந்திருந்தார். பிரும்மாவும் தாமரையினுள் செயலற்றிருந்தார். பிரளய காலம் முற்றுப்பெறுகிற நிலையில் தாமரையின் அடியில் இருந்த தாமரை இலையின்மேல் பகவான் தனது காது அழுக்குடன் கலந்த இரு ஜலத்துளிகளைத் தெளித்தார். விழித்துக்கொண்ட பிரும்மா சுற்றிப் பிராண வாயுவைத் தூண்டினர். ஜலத்துளிகள் இறுகி வடிவு பெற்றன. தமோகுணம் தான் முதலில் படைக்கப்பட்டது. தமோ குணமும் காது அழுக்கும் கலந்த ஜலத்துளிகள் பெற்ற இரு வடிவங்களில் ஒன்று மிருதுவாக இருந்தது. அது மது எனும் அசுரனுயிற்று. மற்றொன்று கடினமானது. அது கைடபன் எனும் அசுரனுயிற்று. இரண்டும் தாமரையிலையிலிருந்து குதித்து விளையாடிக்கொண்டே வளர்ச்சிபெற்றன. பிரும்மா உலகைப் படைக்கத் தொடங்கினர். முதலில் ஒலி வெளியாயிற்று. ஒலி வடிவில் இருந்த வேதங்கள் வெளியாயின. அவற்றை மதுவும் கைடபனும் திருடி ஒளித்து வைத்துவிட்டனர். ஹயக்ரீவராக அவதாரம் எடுத்த பகவான் வேதங்களைத் திரும்பக் கொண்டுவந்தார். மதுவும் கைடபனும் மறுபடி கோபம் கொண்டு பிரும்மா உட்கார்ந்திருந்த தாமரைக் கொடியை ஆட்டினர். பிரும்மா பயந்தார். பகவான் யோக நித்திரையிலிருந்து எழுந்து தமோ குணம் மிக்க அந்த அசுரர்கள் அழிய வழிவகுத்தார். என்ன வரம் வேண்டுமென்று அவர்களைக் கேட்டார். அவர்கள் உனக்கு என்ன வரம் வேண்டும் என்று திமிர் பிடித்துக் கேட்டனர். பகவான் உங்கள் அழிவே நாம் கோரும் வரம் என்ருர். ஆடையால் மூடப்பெருத ஆகாயத்தில் எங்களைக் கொல்லலாம் என்றனர். தொடை மீதிருந்த ஆடையை விலக்கி அதன் மேல் வைத்து அவர்களைப் பகவான் அழித்தார். பூ: பாதௌ யஸ்ய நாபிர்வியத் (சு. 25) என்ற விராட்வடிவ விளக்கத்தின்படி பகவானின் கால்களில் பூமியும் தொப்புளில் ஆகாயமும் அடங்கிவிடுகின்றன கால்களுக்கு மேல் இடுப்புவரை ஆகாயப்பகுதி. தொடை மீதுள்ள ஆடையை அகற்றியதும் தொடை ஆடையால் மூடப்பெருத ஆகாயமாகி விட்டது. அதன் மேல் வைத்து அழித்துவிட்டார். நடவாதென மது நினைத்ததை*

பகவான் நடத்திவிட்டார். அதுவே மதுஸூதனலீலே. தமோ குணத்தின் முழுவடிவமான மதுவும் கைடபனும் அழிந்ததும் படைப்பு நல்லமுறையில் தொடங்கியது. (பாரதம் - ஸபா -33 வன. 12, 203, சாந்தி -207, 347) (மதுகைடபர்களைப் பற்றிப் பல வரலாறுகள் உண்டு. பாரதத்திலுள்ள வரலாறு இங்கு தரப்பட்டுள்ளது,

நமது பொறிகளே பகவத்ஸேவையில் ஈடுபடாதவரை அசுரர்களே. அடியார்களின் பொறிகளைத் தனது திவ்ய குணங்களால் வசப்படுத்தி அவற்றின் விஷய ஈர்ப்பு சக்தியை மாய்த்தவர். வ்யூஹங்களில் ஆறுமவர். (ப. 25) (73)

**ईश्वरो विक्रमी धन्वी मेधावी विक्रमः क्रमः ।**
**अनुत्तमो दुराधर्षः कृतज्ञः कृतिरात्मवान् ॥ ४० ॥**

**ஈஶ்வரோ விக்ரமீ தந்வீ மேதாவீ விக்ரம: க்ரம:.**
**அநுத்தமோ துராதர்ஷ: க்ருதஜ்ஞ: க்ருதிராத்மவாந் 40.**

74. ஈஶ்வர:- எல்லா சக்திகளும் உள்ளவர்.

எல்லாம் வல்ல இறைவன் எல்லாவற்றையும் கட்டுப் படுத்துபவராக 'ஈசாந' என்ற நாமத்தில் அறிமுகமாகித் தொடர்ந்து படைப்பின் பல நிகழ்ச்சிகளில் தான் இன்றியமையாத் துணையாகி நின்றார். தமது திட்டங்களும் செயல்களும் ஸத்யமாகி, எல்லாவற்றையும் தன் வசத்தினுட்படுத்திக்கொண்டவர். (நா. 36) (74)

75. விக்ரம:- எதிர்ப்பு சக்தி உள்ளவர்.

தான் நினைத்ததைத் தடையின்றி நடத்துபவர். தடையை மீறிச் செல்லும் சக்தி உள்ளவர். ஸங்கல்பமே செயலாகி விடுவதால் தடைபடாத செயல் முறை உள்ளவர். (75)

76. தந்வீ - வில்லாளி.

புகழ் பெற்ற சார்ங்கம் என்ற வில்லுள்ளவர். ஆயுதங்களில் வில் சிறந்தது. வில்லை ஆயுதமாகக் கொண்டவர்களில் ராமனாகச் சிறந்தவர். (கீதை. 10.31) (நா. 181, 857, 996) (76)

77. மேதாவீ - மேதை உள்ளவர்.

ஆழ்ந்ததும் பரந்ததுமான எந்த விஷயத்தையும் ஏற்கவல்ல — மேதை அமைந்தவர் மேதாவீ. ஆழ்ந்த கருத்துள்ள பெரு நூல்களைப் படித்தும் படித்ததை மறந்துவிடாமல் நினைவில் வைத்தும் தக்க தருணத்தில் நூலறிவைப் பயன்படுத்துகிற அறிவாளியே மேதாவீ. ஈச்வரனுக, விக்ரமியாக தந்வியாக இருப்பது மேதாவியாயிருத்தலால். (77)

78. விக்ரம:- உலகை அளந்தவர்.

விச்வமாக எல்லாமாகி நிற்பவரானதாலும், விஷ்ணுவாக எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவரானதாலும் ஈச்வரனுக எல்லாம்வல்லவரானதாலும் இவருக்கு எல்லாமே உட்படுகின்றன. இதன் ஒரு நிரூபணமாக அமைந்தது மூன்றடிகளால் உலகை அளந்தது.[1] வி - பட்சியாகிய கருடன்: அவரால் உலகெங்கும் சுற்றி வருபவர். (78)

79 க்ரம: - நடக்கச் செய்பவர்.

கால்களால் நடக்கிறோம். நடக்கும் சக்தியை விஷ்ணு அருள்கிறார். "ப்ரஜநநே ப்ரம்ஹா திஷ்டது. பாதயோர் விஷ்ணுஸ்திஷ்டது" என்று நியாஸ விதியில் பிரார்த்தனை. **மநஸீந்தும் திச: ச்ரோத்ரே க்ராந்தே விஷ்ணும் பலே ஹரம். வாச்யக்நிம் மித்ரமுத்ஸர்கே ப்ரஜநே ச ப்ரஜாபதிம். நிவேசயேத்.** (மனுஸ்மிருதி 12-123) கால்களின் வலிவாகி நின்று நடக்கச் செய்பவர். அசையாதிருந்ததை அசையச் செய்தவர். உயிரினம் தனது தேவைகளை நிறைத்துக் கொள்ள அசைவு (நடை முதலானவை) அவசியம். அதனை அருள்பவர் (நா. 65) அசையும் பொருளாயிருப்பவர். ஒன்றன் பின் ஒன்றாக நடக்கிற செயல் வரிசையும் கிரமமாகும். பகலுக்குப் பின் இரவு, இரவுக்குப் பின் பகல் என்று வருவது கிரமம். அந்த கிரமமாக இருப்பவர்.

உலகளாவி நின்ற பெருமானைவிடப் பருத்தவர் இருக்க முடியாது. க்ரமி என்ற வினைச்சொல் தடையின்மை, உற்சாகம், பருமன் என்ற பொருளில் வரும். தடையின்றி உற்சாகத்துடன் உலகளாவிப் பருத்து நிற்பவர் பெருமான். (79)

---

1. विचक्रमाणस्त्रेधोरुगायः। यस्योरुषु त्रिषु विक्रमणेषु। अधिक्षियन्ति भुवनानि विश्वा। विचक्रमे पृथिवीमेष एताम्। विचक्रमे शतर्चसं महित्वा। (विष्णुसूक्तम्)

80. அநுத்தம: - மிக்கார் இல்லாதவர்.

பகவானைவிடச் சிறந்தவர் எந்த வகையிலும் எவரும் எங்குமில்லை. (அவித்யமாந: உத்தம: யஸ்மாத்.) ''அவருக்கு இணையானவரும் மிக்காருமில்லை.''[1]

'ந நுத்தா மா யஸ்ய'. - அநுத்தம:. மா என்பது செல்வம் புத்தி சக்தி முதலியவை, (நா. 72) நன்முயற்சியாலும் தெய்வ அருளாலும் கிடைக்கும் விபவங்கள். பிறர் உதவியாலும் பிறபொருள்சேர்க்கையாலும் ஏற்பட்டவை செயற்கையானவை. (நுத்தா - பரப்ரேரிதா). இயற்கையாகச் செல்வம் சக்தி புத்தி முதலானவற்றைப் பெருதவர் பிறரது உதவியால் அல்லது பிற பொருள் சேர்க்கையால் இவற்றைப் பெறுவர். பகவானிடமுள்ள விபவம் எதுவும் பிறர் உதவியால் பிற பொருள் சேர்க்கையால் பெறப்பட்டதல்ல. இந்த விபவம் அல்லது சீர் பகவானைக்காட்டிலும் வேறுபட்டிருந்தால் பகவான் அதனைச் சென்றடைவதோ, பகவானைச் சீர் சென்றடைவதோ நேரும். செல்வமும் சக்தியும் புத்தியும் ஏனைய சீர்களும் ஸ்வபாவமாகவும் ஸ்வரூபமாகவும் கொண்டமையால் பகவான் ''சென்றடையச் சீருடையான்'' - அநுத்தம:. (80)

81. துராதர்ஷ: - முற்றுகையிட முடியாதவர்.

பலவந்தமாக நெருக்கிச் செயலிழக்கச் செய்தலால் பெரு வீரனையும் மடக்கிவிடக் கூடும். இறைவனை அப்படி இக்கட்டில் மாட்டிவிட இயலாது. அவரது எதிர்ப்பையும் எளிதில் தாங்க இயலாது. கடலைப்போல் ஆழங் காணவோ, கலக்கவோ முடியாது. (81)

82. க்ருதஜ்ஞ:- செய்ததை அறிந்தவர்.

மனிதன் செய்யும் நற்செயலையும் தீச்செயலையும் அவற்றின் பின் ஏற்படக்கூடிய விளைவுகளையும் அறிந்தவர். விதியாக நின்று புண்ய பாபச் செயல்களுக்கேற்ற பலனளிக்கவே கிருதஜ்ஞராக இருக்கிறார். சிறிதளவு செய்ததையும் பெரிதாக மதிப்பவர். அதனால் இலையையும் பூவையும் பழத்தையும்

---

1. न तत्समश्चाप्यधिकश्च दृश्यते। (श्वेताश्व ६.८) यस्मात्परं नापरमस्ति किञ्चित्। (तै.आ. १०. १२)

நீரையும் ஈச்வரார்பணமாக அளித்தால் முக்தி ஈறான பலனை அதற்காக வழங்குகிறார். துரௌபதி தன் ஆடையை இழந்து கொண்டிருக்கும் நிலையில் கோவிந்த என்று கதறினாள். "அவள் கதறுமளவிற்குத் தாமதித்துவிட்டேனே" என்று கண்ணன் வேதனைப்படுகிறார். "கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம். ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந் நாபஸர்பதி". (பாரதம் - உத்யோகம் 5-22) அந்த அளவில் தன்னிடம் வைத்துள்ள பிரியத்தைச் சிறிதாயினும் பெரிதாகப் பாராட்டுபவர்.

ஒருவன் நல்லதையும் கெட்டதையும் செய்திருக்கக் கூடும். அன்பால் கட்டுப்பட்டுக் கெட்டதை மறந்து நல்லதை மட்டும் உணர்ந்து நினைவிற்கொள்பவனும் க்ருதஜ்ஞனே. இறைவன் பக்தன் புரிந்த நல்லதை மட்டும் உணர்வார். அதனால் க்ருதஜ்ஞர். மிகக் கொடிய தீவினை புரிபவனும் இறைவனிடம் பூர்ணமான நம்பிக்கையுடன் பக்தி கொண்டிருந்தால் அவனும் கரையேறிவிடுவான். அவன் தனது தீவினைப் பயனாகத் துன்புறும்போதும் இறைவனையே நம்பி இருப்பான். இந்த பக்தியே அவனைத் தீவினைச் சூழலிலிருந்து அகற்றி மேன்மையடையச் செய்யும். அடியார்களின் சரித்திரத்தில் இது நிகழ்வதைக் காணலாம், அதன் காரணம் பகவான் க்ருதஜ்ஞனாக இருப்பதுதான். (க்ருதம் ஜாநாதி - நது துஷ்க்ருதம்). கெட்டதும் அவருக்குத் தெரியும். ஆனால் நல்லதை மட்டும் நினைவிற்கொள்வார். (நா. 532) (82)

83. க்ருதி:- நன்முயற்சியாயிருப்பவர்.

இறைவனருளால் விரும்புகிறான். (இச்சதி) விரும்பியதை அடைய திட்டமிடுகிறான். (ஸங்கல்பயதி) திட்டமிட்டதைச் செயல்வடிவில் மாற்ற முயல்கிறான். (யததே) முயற்சியால் வெற்றி அடைகிறான். (ஸாதயதி), இந்த ஸித்திக்கு முன்னோடியான நன் முயற்சியும் முயற்சியால் அமைந்த நற்செயலும் க்ருதி ஆகும். எல்லாம் அவரேயானதால் இச்சையில் தொடங்கி ஸித்திவரை உள்ளது அனைத்தும் இறைவடிவமே; 'அவனருளால் அவன்தாள் வணங்கி' என்பர். அவரை அணுகத் தேவையான செயல் முறை முழுவதையும் அருளி அதன் சித்தியாயும் இருப்பவர். (83)

84. ஆத்மவான் – தன் நிலையில் நிலைத்திருப்பவர்.

பகவானுக்கு அவரே ஆதாரம். மற்றதனால் பாதிப் படையாதபடி, வேறு ஆதாரத்தின் எதிர்பார்வையின்றித் தன் பெருமையாலேயே தனது பேரியல்பில் நிலைத்திருப்பவர்.[1]

ஜீவனுக்கு உடல் உடைமைப் பொருளாவதைப்போல் பரமனுக்கு ஜீவன் உடலாக உடைமைப் பொருளாகிறான். அப்படி ஜீவாத்மாக்களை தன் உடைமைப் பொருளாக ஆக்கிகொண்டவர். புண்யாத்மாக்களான அடியார்களைத் தன் உடைமைப்பொருளாக ஆக்கிக் கொண்டவர்.

வேறொன்றால் பாதிப்படையாமல். வேறு ஸாதன உதவியை எதிர்பாராமல் தன் விருப்பப்படி செயல்படுபவர். அதனால் ஆத்மவான் - தன்னைத் தன் வசத்தில் கொண்டவர். பூதனையை மாய்க்கும்போது வேறொன்றையும் எதிர்பாராமல் அவள் அளித்த பாலை உண்டே அவளை மாய்த்தவர், ஸ்வதந்திரமாக இயங்குபவர். ராமனைப் பற்றிய வால்மீகியின் கேள்வில் ஆத்மவான் என்பதும் ஒன்று. (84)

सुरेशः शरणं शर्म विश्वरेताः प्रजाभवः।
अहः संवत्सरो व्यालः प्रत्ययः सर्वदर्शनः॥ ४१ ॥

ஸுரேஶஶ் ஶரணம் ஶர்ம விஶ்வரேதா; ப்ரஜாபவ:
அஹஸ்ஸம்வத்ஸரோ வ்யாள: ப்ரத்யய: ஸர்வதர்ஶந: 41.

85. ஸுரேச:- தேவர்களின் அதிபர்.

ஸுரர் நல்லதை அளிப்பவர். (ஸு சோபனம் ராதி ததாதி). இறைவன் உலகைப் படைக்கும்போது உலகம் தானியங்கியாகச் செயல்படப் பல தேவதைகளைப் படைத்து இந்த உலகிற்கும் தேவதைகளுக்கும் ஒருவருக்கொருவர் உதவிக்கொள்கின்ற பிணைப்பையும் வேள்வி முதலியவற்றால் ஏற்படுத்தி உயிரினம் நன்கு வாழ வழி செய்தார். "தேவாந் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ:. பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப்ஸ்யத" (கீதை. 3-11) (நா. 49, 286). உயிரினத்திற்கு நன்மை புரியவே தோன்றிய அந்த தேவதைகளைத் தன் விருப்பப்படி ஆள்கின்ற பேராளுமை

1. स भगवः कस्मिन् प्रतिष्ठित इति। स्वे महिम्नि। (छान्दोग्य ७. २४)

*படைத்தவர். எல்லா தேவர்களுக்கும் தலைவர். பிரும்மா இந்திரன் முதலானோர் அவருக்கு அடங்கியே தம் தம் அதிகாரத்திலுள்ள பணிகளில் ஈடுபடுகின்றனர். (85)*

**86. சரணம் - காப்பாற்றுபவர்.**

*ஆபத்திலிருந்து காப்பாற்றுபவர். பகவானை நால்வர் சிந்திப்பர். (1) கடும் ஆபத்தில் சிக்கிக்கொண்டவர். (2) பரந்த இவ்வுலகின் மூலம் எது என்ற ஆராயப் புகுந்தவர். (3) கிடைக்காததும் தன் விருப்பத்திற்கு உரியதுமான பொருளை நாடுபவர். (4) பகவானை நன்கு அறிந்தவர் என.* **"சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோ அர்ஜுந. ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப"** *(கீதை 7-16) கடும் ஆபத்தில் சிக்கிக்கொண்டவரே இவர்களில் பெரும்பாலானவர். எத்தகைய ஆபத்திலிருந்தும் மீட்கும் சக்தி பகவான் ஒருவருக்கே உண்டு. பாதுகாப்பகமாக அடைய வேண்டிய இல்லமானவர். (சரணம் க்ருஹ ரக்ஷித்ரோ:- அமரம்) (86)*

**87. சர்ம - ஆனந்தம்.**

*தன்னை அண்டியவருக்கு ஹிதமான ஸுகமாகி உள்ளத்தில் நின்று மகிழ்விப்பவர். தாற்காலிகமான சுகம் போலாகிப் பின் துன்பம் விளைவிப்பதாக இல்லாமல் ஆனந்தத்தின் பூர்ணவடிவான நிலைத்த பிரும்மானந்தமாக இருப்பவர். (87)*

**88. விச்வரேதா: - உலகின் மூலக்கரு.**

*உயிரினம் தோன்ற அதன் மூலமான விதையும் (ரேதஸ்-கரு) விதை முளைத்து வெளியாகத் தக்கச் சூழ்நிலையை அமைத்துத் தரும் கருவகமும் (யோநி) தேவை. இறைவனே விதையும் கருவகமுமாக உள்ளதை விச்வரேதா: (நா. 88) விச்வ யோநி: (நா. 117-149) என்ற நாமங்கள் விளக்குகின்றன. (88)*

**89. ப்ரஜாபவ: - உயிரினத்தை உண்டாக்கியவர்.**

*விச்வத்தின் கருவகமாகி அதில் தன்னையே கருவாக உட்பதித்துக்கொண்ட பகவான் அக்கருவிலிருந்தும் பிரும்மா முதல் புல் பூண்டு வரை உள்ள விச்வமான உயிரினம் தோன்றச் செய்தார்.* **"மம யோநிர் மஹத் ப்ரம்ஹ தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம். ஸம்பவ: ஸர்வபூதாநாம் ததோ பவதி பாரத."** *என்ற கீதை (14-3)*

சுலோகத்தின் விளக்கமாக விச்வரேதா: ப்ரஜாபவ: என்ற இரு நாமங்களும் அமைந்துள்ளன. நன்மக்களை (ப்ரகர்ஷேண ஜாயந்தே)த் தோன்றச் செய்தவர். கரு ஒன்றேயாயினும் அதிலிருந்து தோன்றியவை தனித்தனியாக இயங்கத்தக்க உடல் உள்ளம் முதலியவைகளைத் தனித் தனியே தந்து நாம ரூபங்கள் அளித்துப் பலவாகத் தோன்றச் செய்தவர். முதலில் தரக்குறைவான பொருளை உற்பத்தி செய்து பிறகு தேர்ச்சிபெற்று சிறந்த பொருளை உற்பத்தி செய்வது உலகியல்பு. இறைவன் முதலில் பிரும்மா, ஸனகர் முதலிய, பெருமக்களை உலகின் முன் மாதிரியாகத் தோன்ற வைத்தவர். (ப்ர-ஜா-பவ:- ப்ரகர்ஷேண ஜாதாநாம் பவ: உத்பத்தி: யஸ்மாத்). (89)

90. அஹ:- பகல் ஒளியாயிருப்பவர்.

ஸ்ருஷ்டியின் மூல தத்துவங்களில் ஒன்று காலம். உலகைக் கட்டுப்படுத்தும் சக்தியும் எப்போதும் சலனமும் கொண்டது. அந்த சலனம் உயிரினத்தின் வாழ்வை வரையறுத்துக் கொடுக்கும். உற்பத்தியும் வளர்ச்சியும் மறைவும் மாறி மாறி ஏற்பட இந்தக் காலம் உதவுகிறது. அந்தக் கால அளவைகளில் பகலும் ஒன்று. சூரிய ஒளி பகலின் அடையாளம். அந்த ஒளி காலஸ்வரூபமான பகவானின் வடிவம். தம்மைப் பற்றியவன் தாழ்வுறுதபடி காப்பாற்றுபவர். பகல் ஒளி இருட்டைப் போக்குவதுபோல் அறியாமையை நீக்குபவர். (90)

91. ஸம்வத்ஸர:- ஆண்டாயிருப்பவர்.

பகல் இரவு வாரம் பக்ஷம் மாஸம் ருது என்று காலத்தை வரையறுத்து வரும்போது வருஷம் என்ற வரையுடன் காலசக்கிரம் முழுமை பெறுகிறது. பகல் முதலிய காலவரைகள் இதில் பங்கிடப்பெற்றுப் பொருந்துகின்றன. கால ஸ்வரூபியான பகவானின்[1] சக்கிர வடிவிலுள்ள முழுமையை ஸம்வத்ஸரம் காட்டுகின்றது. அறிவாளிகளைக் கடைத்தேற்ற அறிவு வடிவில் அவர்களுடன் எப்போதும் இருப்பவர். (91)

92. வ்யால:- பிடியில் அகப்படாதவர்.

சிங்கம், புலி, மதம்பிடித்த யானை முதலிய கொடிய விலங்குகளும் கொடிய விஷமுள்ள பாம்புகளும் துஷ்டர்களும்

1. संवत्सरो वै प्रजापतिः । (प्रश्न १. ९)

'வ்யால' என்ற சொல்லால் குறிப்பிடப்படுவர். எதிர்பாராதபடி தாக்கிக் கொடிய விபத்தைத் தரவல்லதனைத்தும் இதன் உட்படும். பெரும் அளவில் (விசேஷண ஆலதி வ்யாப்நோதி) வியாபித்து எதிர்பாராத வகையில் தாக்கக் கூடியது, மதம் பிடித்த யானைபோல் எளிதில் பிடித்து வசப்படுத்த முடியாதது காலம். கால வடிவில் உள்ள பகவான் எளிதில் பிடிக்குள் அகப்படாதவர். பிறரைத் தன் பிடிக்குள் அகப்படும்படி செய்பவர். (விசேஷேண ஆலாதி-ஆததாதி). (92)

93. ப்ரத்யய: - அறிவாயிருப்பவர்.

மேலெழுந்த வாரியாக இல்லாமல் ஆழ்ந்ததும் நம்பக் கூடியதுமான அறிவு ப்ரத்யய:. பரம்பொருளை உணர்த்தும் அறிவே உண்மை அறிவு. பூர்ணமான அந்த அறிவே பரம்பொருள்.[1] ப்ரத்யய:- நம்பிக்கை, எதிர்பார்வை. தம்மை உணர்ந்தவர்களின் நம்பிக்கையாக இருப்பவர். நம்பிக்கைக்கு உரியவர். (93)

94. ஸர்வதர்சந:- எல்லாற்றையும் கண்களாகக் கொண்டவர்.

உலகமே தானாகி நின்ற ஸர்வாத்மாவான பகவானுக்கு எல்லாருடைய கண்களுமே அவரது கண்களாகிவிடுகின்றன.[1] நம் கண்களைக் கொண்டே அவர் பார்ப்பார். கண்களால்தான் பார்க்கமுடியும் என்று உயிரினத்திற்கு ஒரு நியமம் உண்டு. இறைவன் எதனையும் கொண்டு பார்ப்பார். அதனால் எல்லாமே அவரது கண்களாகிவிடுகின்றன.

அனைவரும் கண்டுகளிக்கும்படி தன்னைத்தானே விளக்கிக்கொள்ளும் அருளாளர். இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டவராகையால் பலவகைகளிலும் உணரக்கூடிய வடிவமைப்புள்ளவர். எல்லாவற்றையும் காட்டி அவற்றில் தன்னையும் காட்டிக் கொள்பவர். (94)

अजः सर्वेश्वरः सिद्धः सिद्धिः सर्वादिरच्युतः।
वृषाकपिरमेयात्मा सर्वयोगविनिस्सृतः॥ ४२ ॥

1. प्रज्ञानं ब्रह्म (ऐतरेय ३. ३)

2. ''विश्वतश्चक्षुरुत विश्वतोमुखः'' (तै. आ. १०. १)
''विश्वाक्षं विश्वशंभुवम्। (तै. आ. १०. १३)

அஜஸ் ஸர்வேஶ்வரஸ் ஸித்தஸ் ஸித்திஸ் ஸர்வாதிரச்யுத:
வ்ருஷாகபிரமேயாத்மா ஸர்வயோக விநிஸ்ஸ்ருத: 42

95. அஜ:- பிறவாதவர்.

*முன் ஒருநாள் இல்லாதிருந்து பிறகு தோன்றுபவன் பிறந்தவனாகிறான். எப்போதும் உள்ள பகவான் பிறப்பில்லாதவர்.[2] (நா. 204-521) பிறப்பு முதலிய மாறுபாடுகளுக்கு உட்படாதவர். அஜ: - அகற்றுபவர். தம்மைச் சரணடைந்தவர் தம்மை அடைவதற்கு இடையூறாக உள்ள அறியாமை எனும் இருளை அகற்றுபவர். (95)*

96. ஸர்வேச்வர:- அனைவருக்கும் ஈச்வரர்.

*ஆளுமை உள்ளவர் அனைவரும் ஈச்வரரே. பிரும்மா இந்திரன் முதலானோர் வரம்பிற்குட்பட்ட ஈச்வரத்தன்மை உள்ளவர். இவர்களுக்குள்ள ஈசுவரத்தன்மை தவச்செயலால் பெற்றதானதால் அச்செயலுக்கேற்ப அமைந்துள்ளது. அந்த ஈச்வரத்தன்மையை அவர்களுக்கு வழங்கியவரும், அவர்கள் அனைவருக்கும் ஈச்வரராயிருப்பவரும் பகவானே (ஈஷ்டே). வரம்பிற்குட்படாத பேராளுமை பெற்றவர் - ஸர்வேச்வர:.[1] தகுதியுடனோ தகுதியில்லாமலோ தன்னை வந்தடைபவர் அனைவரையும் தன் பேராளுமையால் ஆட்கொள்பவர். (நா. 36, 74) (96)*

97. ஸித்த:- எப்போதும் உள்ளவர்.

*காரணமின்றி ஒன்று ஏற்படாது. காரணத்திலிருந்து தோன்றியதனைத்தும் செயற்கையாக ஏற்பட்டவை. முன் இல்லா திருந்து பின் தோன்றியவை. அதனால் அநித்யமானவை. பகவானை யாரும் உண்டாக்கவில்லை. அவர் தானே பகவானாக இருக்கிறார். வேறு காரண எதிர்பார்வையின்றி தானே ஸித்தமானவர். அதனால் நித்யர். உபாயங்களைக்கொண்டு தேடவேண்டியிராமல் புதையல்போல் முன்னமே அமைந்திருப்பவர். தானே பிரசித்தி பெற்றவர்.[3] (97)*

---

1. न जातो न जनिष्यते। (ऋक्संहिता १.८१.५) अजो नित्यः शाश्वतोऽयं पुराणः। (कठ १.२.२८) स वा एष महानज आत्मा (बृहदार ४. ४. २२)
2. एष सर्वेश्वरः (बृ. आ. ४. ४. २२)
3. आत्मैव सिद्धोऽद्वितीयः (९. २) सदेव पुरस्तात् सिद्धं हि ब्रह्म। (९.९) सिद्धं (स्वत एव) ह्यसिद्धं (साधनान्तरेण) (९.९) (नृसिंहोत्तरतापिन्यां)

98. ஸித்தி:- நிலைத்த பலனாக இருப்பவர்.

*செயல் காரணமாகச் செயலுக்குப் பின் விளைவது பலன். அந்தப் பலனை அடைவது ஸித்தி. அதற்கு ஸாதகனும் ஸாதனமும் செயலும் தேவைப்படும். இவற்றை எதிர்பார்க்காதது ஞானமாகிய பலன். விரும்பத்தக்கவற்றில் மிகப் பெரிது அந்த ஞானம். அது ஆத்மானந்தமே. பேரறிவானவரும் விரும்பத்தக்கவற்றில் ஈடானதும் மிக்கதுமற்ற ஸச்சிதானந்த ரூபியுமான பகவானே ஸித்தி. தானே ஸித்தமான ஆத்மானந்தத்தைப் பெறுவதே மிகச் சிறந்த ஸித்தி. அதனை நாடுவதே மேலான புருஷார்த்தம். அந்த ஸித்தியைப் பெற்ற பிறகு வேறொன்றைப்பெற நாட்டம் ஏற்படாது. அத்தகைய பேரறிவும் முக்தியும் வடிவான ஸித்தியாயிருப்பவர் அவரே. எந்த உபாயத்தாலும் அடைய வேண்டியவர் அவரே. (இது பெண்பாலாக அமைந்த சொல்) (98)*

99. ஸர்வாதி:- எல்லாவற்றிற்கும் முன்னிருப்பவர்.

*காரியத்தைவிடக் காரணம் முன் இருக்கும். எல்லாவற்றிற்கும் மூலகாரணமான பிரகிருதிக்கும் மூலமானவரானதால் ஸர்வாதி:. தோன்றியதனைத்திற்கும் முன் இருந்தவர். நெருப்பிலுள்ள சூட்டிற்கும் நீரிலுள்ள குளிர்ச்சிக்கும் மூலகாரணமான சூடாகவும் குளிர்ச்சியாயும் இருப்பவர். உலகில் உள்ள தனைத்திற்கும் காரணம் காரியம் என்ற இரு நிலைகள் உண்டு. அவர் ஒருவரே காரணமாக மட்டுமிருப்பவர். எல்லா நற்பயன்களுக்கும் தோற்றுவாய்[1]. (99)*

100. அச்யுத:- தன்னிலையிலிருந்து நழுவாதவர்.

*ஸத் சித் ஆனந்தம் என்பது பகவானின் ஸ்வயநிலை. உலகைப் படைப்பதும் காப்பதும் தன்னுள் ஒடுக்கிக்கொள்வதும் அவரது தனிச் சிறப்பு பெற்ற பெருமை. நெருப்பானது சூடு என்ற தன் நிலையிலிருந்தும் பிரகாசம் என்ற பெருமையிலிருந்தும் எப்படி நழுவுவதில்லையோ அப்படி அவரது ஸ்வய நிலையிலிருந்தும் பெருமையிலிருந்தும் பகவான் நழுவாதவர்.[2] (நா. 318, 552) வ்யூஹநிலையிலும் உள்ளவர். (ப. 29)*

---

1. *இத்துடன் பட்டர் உரைப்படி 100 நாமங்கள்.*

2. शाश्वतं शिवमच्युतम् । (तै. आ. १०. १३)

*தன்னை அண்டியவர்களை விட்டு அவர் நீங்குவது இல்லை. தன்னை அடைந்தவர்களைத் தனது பெருநிலையிலிருந்து நழுவவிடாமல் நிலை தவறாமல் பாதுகாப்பவர். நிலை மாறுபாடு உள்ளவர்களுக்கே நிலை தவறும். அச்யுதர் எப்போதும் நிலைமாறுபடாதவர். (100)*

101. வ்ருஷாகபி:- தர்ம - வராஹ வடிவில் இருப்பவர்.

*தர்மம் தாங்கும் பண்புடையது. அறநெறியைப் பாதுகாப்பவரது விருப்பமனைத்தையும் மேகம் போல் பொழியக்கூடியது. அதனால் அது வ்ருஷா (வர்ஷதி பலம்). பகவான் தர்மமாகி நின்று விரும்பியதைப் பொழிகிறார். உலகைப் படைக்கத் தொடங்கியதும் நீரின் மேல் வைக்கப்பெற்ற பூமி ஆதாரமில்லாமையால் நீரில் அமிழ்ந்துவிட்டது பகவான் வராஹ வடிவில் தோன்றி ஆதார சக்தியால் பூமியைத் தாங்கினார். (காத் ஜலாத் பூமிம் பாதி). அதனால் அவர் கபி:. விரும்பியதைத்தருகிற வராஹமாக இருப்பதால் அவர் வ்ருஷாகபி:. அததனை அதனதன் வடிவில் நிலைத்திருக்கும்படி தாங்கும் வராஹ வடிவில் இருப்பவர்.*

*நல்ல உடல் வலிவும் ஆண்மையும் உள்ள எருது வ்ருஷ:. அதனை வாகனமாகக்கொண்ட சிவபெருமான் வ்ருஷாகபி:, (கபி - சலநே, ஊர்தி). அக்கினியையும் இந்திரனையும் வ்ருஷாகபி: என்பர். இவர்கள் வடிவில் உள்ளவர். (101)*

102. அமேயாத்மா - அளவிட முடியாத வடிவுள்ளவர்.

*பொறிகள் அளக்க உதவுகின்ற உருவம் மணம் முதலியவை பகவானிடம் இல்லாமையால் பொறிகளால் அவரை அளக்க முடியவில்லை. காலம் தேசம் பொருள் இவற்றின் அளவுக்குள் அடக்க முடியாதவர். அவரது ஆற்றலும் அருள்புரியும் பாங்கும் அளவிற்கு உட்படாதவை (நா. 46, 179) (102)*

103. ஸர்வயோக விநிஸ்ஸ்ருத:- எல்லாப் பிணைப்புகளிலிருந்தும் விடுபட்டவர்.

*யோக:- பிணைப்பு. பொருளில் வைத்துள்ள பற்றே மனிதனைப் பிணைக்கிறது. பொருள் தொடர்பில்லாதவராகையால் இறைவன் எல்லாப் பிணைப்புகளிலிருந்தும் விடுபட்டவர்.*

*யோக:- செயல் முறை. இறைவனை அடையப் பல முறைகளைப் பல சாஸ்திரங்கள் வகுத்துள்ளன. அனுபவத்தில் சில முறைகள் தேர்ந்தவை. அவை அனைத்தும் ஏதோ ஒரு வகையில் உபாயமாகிப் பகவானிடம் நம்மைக்கொண்டு சேர்ப்பவை. (யோக:) அம்முறைகளால் வெளிப்பட்டவர், அறியப்பட்டவர். (103)*

वसुर्वसुमनाः सत्यः समात्माऽसंमितः[१] समः ।
अमोघः पुण्डरीकाक्षो वृषकर्मा वृषाकृतिः ॥ ४३ ॥

வஸுர் வஸுமநாஸ் ஸத்யஸ் ஸமாத்மா (அ) ஸம்மித:[1] ஸம:
அமோக: புண்டரீகாக்ஷோ வ்ருஷகர்மா வ்ருஷாக்ருதி: 43

104. வஸு: - எல்லாவற்றிலும் உறைபவர்.

*உலகமனைத்தும் அவரிடம் உறைந்துள்ளன. அவை அனைத்திலும் அவரும் உறைந்துள்ளார். யோகியின் உள்ளம். ஸூர்ய மண்டலம் முதலியவற்றில் வெளிப்படுபவராக அங்கு தங்கியிருப்பவர். தம்மை அண்டியவர்களிடத்தில் தானே விரும்பிவசிப்பவர்.*

*வஸுக்கள் எட்டு. ஆபர், துருவர், ஸோமர், தர்மர், அநிலர், அநலர், ப்ரத்யூஷர், ப்ரபாஸர் என எட்டு வஸுக்கள் விஷ்ணு புராணத்திலும் (1-15-210) தரர், த்ருவர், ஸோமர், ஸாவித்ரர், (அஹர்) அநிலர், அநலர், ப்ரத்யூஷர், ப்ரபாஸர் என எட்டு வஸுக்கள் பாரதத்திலும் (ஆதி. 67-18. அனு 255-17) துரோணர், ப்ராணர், த்ருவர், அர்க்கர், அக்நி, தோஷர், வஸு, விபாவஸு என ஸ்ரீமத் பாகவதத்திலும்(6.6.11)ஆபர், தரர், துருவர். ஸோமர், அநிலர், அநலர், ப்ரத்யூஷர், ப்ரபாஸர் என ஹரிவம்சத்திலும் பெயரளவில் வேற்றுமை காணப்படுகின்றது. இவ்வெண்மரில் அநலர், (அக்னி) என்ற பெயர் கொண்ட வஸு தன் விபூதி என கீதையில் கண்ணன் குறிப்பிடுகிறார். (10-23)* (வஸூநாம் பாவகச்'ச' சாஸ்மி) *இந்த எட்டு வஸுக்களாயும் அக்னி எனும் வஸுவாயுமிருப்பவர். (104)*

105. வஸுமநா: - சிறந்த மனமுள்ளவர்.

*வஸு-செல்வும், செல்வம் போல் சிறந்ததும் பெருமதிப்புக்குரியதுமான பொருள். சிறந்த பெருமதிப்புக்குரிய*

1. समात्मा संमितः *ஸமாத்மா ஸம்மித: (பா)*

மனம் உள்ளவர். மனத்தின் சிறப்பும் மதிப்பும் மனம் விருப்பு வெறுப்புகளால் பாதிப்படையா திருப்பதால் ஏற்படும். அளவற்ற செல்வம் படைத்தவனைப் போல் அழியா திவ்ய விபூதிகளுக்கேற்ப மிகவும் விரிந்த மனமுடையவர். ஆனந்தமாகவே மாறியுள்ள மனம் படைத்தவர்.[1] தம்மை அண்டியிருப்பவர்களைப் புதையல் போல் கருதிக் கவனிப்பவர். (105)

106. ஸத்ய:- உண்மையானவர்.

முக்காலத்திலும் உண்மையாக இருப்பது ஸத்யம்.[2] கால தேசங்களால் பாதிப்புறாதது, நிலை மாறாதது, பேரறிவாயிருப்பது, தோற்றமும் முடிவுமற்றது, எங்கும் நீக்கமற நிரம்பியிருப்பது, ஸத்தியமான பொருள் வடிவுள்ளதாகக் காணப்பெறுவது ஸத். புலப்படாதது த்யத். இவ்விரண்டும் அந்த ஸத்தியமான பரம்பொருளே.[3] தானே படைத்த ஜடமும் புலப்படாத ஜீவனும் அவரே. அதனால் ஸத்த்ய:.[4] ஸத் - பிராணன். த் - அதற்கு உணவு. ய:. - உலகிற்கு உயிரான ஸூர்யன்: இம்மூன்று வடிவிலுமிருந்து வாழவைப்பவர் ஸத்த்ய:. (நா. 212-869).

ஸத் - நல்லவர், அறநெறி வழுவாது நடப்பவர், அத்தகைய நல்லோர்களுக்கு ஹிதம் செய்வதில் நாட்டமுள்ளவர். ஸத்ஸு ஹித: - ஸத்ய:. நல்லோர் ஏதேனும் தவறிழைத்திருந்தாலும் பொறுத்துக்கொள்பவர். (106)

107. ஸமாத்மா - சமநிலை பெற்ற மனம் உள்ளவர்.

விருப்பு, வெறுப்பு முதலிய எண்ணக்கோணல்களுக்கு இடம் கொடுப்பவன், பிறர் தன்னிடம் நடந்துகொள்வதற்கேற்பவும், தனது விருப்பு வெறுப்புகளுக்கேற்பவும் நடப்பதால் ஸமமாக இருக்க முடிவதில்லை. அந்த எண்ணக் கோணல்களுக்கு இடம் அளிக்காதவராதலால் நேர்மையுள்ள மனம் உள்ளவர். எல்லா உயிரினங்களிடத்திலும் ஒரே நோக்குள்ளவர். எல்லாவற்றின் ஒரே ஆத்மாவாக இருப்பதால் வேற்றுமை காணாதவர். சரீரம் குணம்

1. सत्यात्मप्राणारामं मन आनन्दम्। (तै. उ. १. ६. ४)
2. सत्यं ज्ञानमनन्तं ब्रह्म। (तै. उ. २. १)
3. सच्च त्यच्चाभवत्। (तै. उ. २. ६)
4. सत् इति प्राणाः, ति इति अन्नं, यं इति असावादित्यः। (ऐ.उ.१.५.३)

முதலானவற்றால் ஏற்றத்தாழ்விருப்பினும் அஸங்கரான (பற்றற்றவரான) படியால் வேறுபாடு காணாதவர்.[1] (107)

108. அஸம்மித:- அளவிடப்படாதவர்.

எடைக்கல், கோல், படி, கடிகாரம் முதலியவற்றாலான அளவை முறை இவரிடம் பயன் பெறாது. இவர் எந்த அளவைக்கும் உட்படாதவர். எத்துடனும் ஒப்பிட முடியாதவர். அளவைக்கும் ஒப்புநோக்கிற்கும் உட்படுவது இடத்தாலும் காலத்தாலும் குறுகியதாக இருக்கும். இவர் எங்கும் நிறைந்தவர். அளவிற்கு உட்பட்டதையே நமது பொறிகள் காட்டும். அளவிட முடியாத ஒன்றைப் பொறிகள் புலப்படுத்தமாட்டா. அதனால் பொறிகளுக்குப் புலப்படாதவர்.

ஸம்மித: என்றும் பாடம் உண்டு. அவர் தோற்றுவித்த எல்லாப் பொருள்களும் அவரது இருக்கையை உணர்த்துவதால் அவர் ஸம்மித:- உணரப் பெறுபவர். தசரதர், வசுதேவர். அதிதி முதலியவர்களால் தம் தமது கைகளுக்குள் அகப்பட்டவர் போல் என் பிள்ளை என் பிள்ளை என அடையாளம் காட்டப்பட்டவர். அதே போல் எல்லோருடைய சரீரத்திலும் ஆத்மாவாகத் துலங்கினாலும் தசரதன், வஸுதேவர், தேவகீ, அதிதி முதலானோரைத் தன் பெற்றோராக விளக்கி அவர்களது குமாரராக அந்த அளவிற்குட்படுவதில் மகிழ்ச்சியுறுபவர். நம் விருப்பப்படி உலகில் பலவற்றைத் தேர்ந்தெடுக்க வாய்ப்பிருந்தபோதிலும் நாமாகப் பெற்றோரைத் தேர்ந்தெடுக்கமுடியாது. ஆனால் இறைவன் இந்த நியதிக்குட்பட்டவரல்ல. அதனால் ராவணனைக் கொல்ல மனிதனாக வர நினைக்கும்போது தசரதரைத் தனக்குத் தக்க தகப்பனாகத் தேர்ந்தெடுக்கிறார். "பிதரம் ரோசயாமாஸ ததா தசரதம் ந்ருபம்" (ராமாயணம் 1-15-32). கருணையால், அப்படி ஒரு தகப்பனுக்குப் பிள்ளையாகத் தானே விரும்பித் தன்னை அளவில் அடக்கிக்கொண்டவர். (108)

109. ஸம:- மாறுபாடில்லாதவர்.

பரிணாமம் என்பது இயற்கையின் முதல் அடையாளம். பிறந்தவன் மறைவதற்குமுன் அடைகிற பரிணாமங்கள் எண்ணற்றவை. கணத்திற்குக் கணம் ஏற்படுகிற இப்பரிணாமங்களே

1. सम आत्मेति विद्यात्। (कौषीतकी उपनिषत् ३. ९)

தோற்றத்திற்கும் மறைவிற்கும் காரணமாகின்றன. பரிணாமம் ஒரே சீராக இருக்க அனுமதியாது. இறைவன் எக்காலமும் ஒரே சீரானவர். பரிணாமங்களுக்கு உட்படாதவர். பரிணாமத்தைத் தொடங்கி வைக்கும் பிரகிருதிக்கு அப்பாற்பட்டவர். இயற்கை ஏற்படுத்தும் பரிணாமங்கள் பொதுவாக ஆறு வகைப்படும். (1) தோற்றம். (2) இருக்கை, (3) வளர்ச்சி, (4) வளர்ச்சித் தேக்கம், (5) தேய்வு, (6) மறைவு என. இந்த மாறுபாடுகளற்றவராதலால் ஸம:. தன்னுடன் பழகியவர் பழகாதவர் என்ற பாகுபாடின்றி எல்லோரையும் ஒரே சீராக மதிப்பவர். மா - லக்ஷ்மீ தேவி. அவருடன் கூடியவராதலால் ஸம:. சிவபெருமான் ஸோமர். இவர் ஸமர். (109)

110. அமோக:- வீணுக்காதவர்.

அவருக்காகச் செய்யப்பெறுகிற வழிபாடும். துதியும் அவரது நினைவும் அவரது தர்சனமும் பூர்ண பலனைத் தருபவை. எதுவும் வீணாவதில்லை. அவரைக் குறிப்பிட்டுச் செய்த செயல் எதுவாயினும் அதனை அவர் வீணாக ஆக்கியதில்லை. அவரது செயல்களோ சொல்லோ எண்ணமோ வீணானதில்லை.[1] (நா. 154) (110)

111. புண்டரீகாக்ஷ: - தாமரையை இருப்பிடமாகக் கொண்டவர்.

பகவானது இருப்பிடம் - புண்டரீகம். பக்தியுள்ள இதயம் இறைவனின் கோயில். அதனைத் தாமரையாக தனக்கு உவந்த இருப்பிடமாக ஏற்று அதில் நிரம்பியிருப்பவர். (ஹ்ருதய புண்டரீகம் அக்ஷ்ணோதி வ்யாப்நோதி). பக்தனது இதயம் கண்ணாடி போன்று தெள்ளத் தெளிந்தது. அதனை இருப்பிடமாகக் கொண்ட பகவானும் அதனால் தெளிவாக உணரப்படுகிறார்.[2]

---

1. अमोघं बत मे क्षान्तं पुरुषे पुष्करेक्षणे। येयमिक्ष्वाकुराज्यश्रीः पुत्र त्वां संश्रयिष्यति। (रामायण २. ४. ४१)

2. यत्पुण्डरीकं पुरमध्यसंस्थं - तस्मिन्यदन्तस्तदुपासितव्यम्। (तै. आ. १०. १०) अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्म दहरोऽस्मिन्नन्तराकाशः, तस्मिन्यदन्तस्तदन्वेष्टव्यम्। (छान्दोग्य ८.१)
तस्य यथा कप्यासं पुण्डरीकं एवमक्षिणी। (छन्दोग्य १. ६)

*புண்டரீகம் - தாமரை. தாமரை போன்ற கண்களை உடையவர். குளிர்ச்சி, அழகு, ஈர்ப்பு, பரிவு, நெகிழ்ச்சி முதலிய சிறப்புகள் அந்தக் கண்களில் தெரிகின்றன. புண்டரீகம் - வைகுண்டம். வைகுண்டத்திலுள்ளவர்களுக்குப் புலப்படுபவர். வைகுண்டவாசிகளின் கண்ணுயிருப்பவர்.புண்டரீ கமான திவ்ய க்ஷேத்திரங்களனைத்திலும் எங்கும் (புல் பூண்டு முதலியவற்றிலும் கூட) வியாபித்து நிற்பவர். (ப. 63) (111)*

112. வ்ருஷ கர்மா - அறச்செயல்களுள்ளவர்.

*அறநெறியைப் பின்பற்றுபவனுக்கு அறமே விருப்பங்களை நிறைவாகக் கொடுக்கும். விரும்பியதனைத்தையும் மழை போல் பொழியும். அதனுல் வ்ருஷ:- தர்மம் (நா. 101) உலகிற்கு வழிகாட்டியான பகவான் அறவழியிலுள்ள செயல்களையே தன் செயல்களாக்கிக் கொண்டுள்ளார். அவர் பெறவேண்டியது எதுவுமில்லை எனினும் தர்மத்தால் தான் நன்மைகளைப் பெற்று வருவதாக வாழ்ந்து காட்டுகிருர்.* "யத்யதாசரதி ச்ரேஷ்ட: தத்ததேவேதரோ ஜந:. வர்த்த ஏவேஹ கர்மணி". *(கீதை. 3-21, 22) (112)*

113. வ்ருஷாக்ருதி: - அறப்பாதுகாப்பிற்காகத் தோன்றியவர்.

*தர்மோ ரக்ஷதி ரக்ஷித:- தர்மம் காப்பாற்றப்படும் போது, எல்லோரையும் அது காப்பாற்றுகின்றது. பகவான் தர்ம ரக்ஷணம்* என்ற *நோக்குடன் அவதாரம்* எடுத்து *அதனுல் தான் சிறப்புற்றதாகக் காட்டுகிருர்.* "தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி" *(கீதை. 4-8) பகவான் உயர்ந்த* குரு. *தர்மமே வடிவானவர்.*

*வ்ருஷ:-* எருது. *தர்ம* தேவதையான விஷ்ணுவே *சிவபெருமானின் வாஹனமாக விருஷப வடிவெடுத்தார். வ்ருஷாக்ருதி:. வாகனத்தில் ஏறியவரை வாகனம் அடையாளம் காட்டும். மயிலைக் கண்டதும் மேலுள்ளவர் முருகனெனவும், கருடனைக் கண்டதும் மேலுள்ளவர் நாராயணன் எனவும் பாமரன் புரிந்துகொள்கிருன். அதுபோல் சிவபெருமானை அடையாளம் காட்டுவதற்காக விருஷபமாகத் தோன்றியவர். மனம் நிறைவு காணுமளவிற்கு இனிய தோற்றம் உள்ளவர். (113)*

रुद्रो बहुशिरा बभ्रुर्विश्वयोनिः शुचिश्रवाः ।
अमृतः शाश्वतस्थाणुर्वरारोहो महातपाः ॥ ४४ ॥

ருத்ரோ பஹுஶிரா பப்ப்ருர் விஶ்வயோநிஶ் ஶுசிஶ்ரவா:
அம்ருதஶ் ஶாஶ்வதஸ்தாணுர் வராரோஹோ மஹாதபா: 44

114. ருத்ர:- ருத்திரராயிருப்பவர்.

*ருத்ர:- அழவைப்பவர் (ரோதயதி) பிறப்பிலும் இறப்பிலும் அழுகை உண்டு. பிரளயமடையும்போது உலகமே அழும். பிரளயத்தை ஏற்படுத்துபவர் ருத்திரர் வடிவிலுள்ள பகவான். படைப்பிற்கு பிரும்மா, ரக்ஷணத்திற்கு விஷ்ணு, பிரளயத்திற்கு ருத்திரர் என பகவான் எடுக்கும் மூன்று தோற்றங்கள் உண்டு.* **''கல்பாந்தே ருத்ரரூபீ ஜநார்த்தன:''** *(விஷ்ணு புராணம். 1-2-63) அழுகையைத் தருபவர். (ருதம் ராதி). பிரளய காலத்தில் செயல் புரிபவர் நாராயணனின் வ்யூஹ நிலையிலுள்ள ஸங்கர்ஷணராவார். பிரளயகாலத்திய ஸூர்யனுகி அவர் உலகை வரளச் செய்து பிரளயாக்னியால் எரித்து பிரளய வாயுவால் சிதற அடித்து லயம் செய்கிறுர் எனப் புராணம் கூறும். இவரே ருத்திரர் என்று ருத்ர மந்திர ந்யாஸம் கூறுகிறது.* ''ஸங்கர்ஷணஸ்வரூப: யோ அஸௌ ஆதித்ய: பரம புருஷ: ஸ ஏஷ ருத்ரோ தேவதா'' *என.*

*உலகின் பரிணுமமனைத்தும். ருத்திரரின் செயல். நெல்லானது அரிசியாயிற்று. நெல் அழிந்தது. அரிசி அழிந்து அன்னமானது. அன்னமழிந்து உடலாக மாறிற்று. பால் தயிராயிற்று. தயிர் வெண்ணெய் நெய் என மாறிற்று. அததற்குமுன் நிலை அழிந்தே இந்த மாற்றம் ஏற்பட்டது. மாற்றத்திற்கு முன் நிலை அழிவு. அது பரிணுமத்திற்கு அவசியத் தேவை. அழிவை விரும்பாதவனும் அழிந்துதான் யுவனுகிறுன். முதுமை பெறுகிறுன். அப்பொழுதெல்லாம் அழாதவன், விபரமறியாதிருப்பதால் உடல் மறைவில் அழுகிறுன். விபரமறிந்தவன் புது உடை மாற்றியதுபோல் மகிழ்கிறுன். அழுகையைக் தந்த ருத்திரரே ஞானத்தைத் தந்து (ரும் த்ராவயதி. ரு: துக்கம்) துன்பத்தை விரட்டியடிக்கிறுர். துக்கத்திற்குக் காரணமான வாஸனையையும் புண்ய பாபங்களின் பிணைப்பையும் அகற்றி மறுபடி பிறப்பில்லாமல் ஆக்குகிறுர். (ரும் து:க்கஹேதும் வித்ராவயதி). தவறு செய்பவரை அழவைத்து விரட்டுகிறுர். (ரோதயதி த்ராவயதி ச).*

*பிரும்மா உலகைப் படைக்கத் தொடங்கியதும் முதலில் ஞானிகளுள் சிறந்த ஸநகர், ஸநந்தநர், ஸநாதநர், ஸநத்குமாரர் என்ற நால்வர் தோன்றினர். அவர்கள் பற்றற்றவர்களானதால் பிரும்மாவின் படைப்புச் செயலில் உதவ முடியவில்லை. பிரும்மா அதனைத் தனக்கேற்றபட்ட அவமானமாகக் கருதி வெகுண்டார். கோபத்தை அடக்க முயன்றும் முடியாதிருந்த நிலையில் கோபத்தால் நெறிக்கப்பட்ட அவரது புருவத்திலிருந்தும் அவரது ஆத்திரம் வெளிப்பட்டுக். குழந்தை வடிவில் தோன்றியது. தனக்கு தனிப்பட்ட இடமும் பெயரும் வேண்டுமென்று அது சலுகையுடன் பலமாக அழுதது. அதன் அழுகையைத் தணித்து பிரும்மா இடமும் பெயரும் அளித்தார். அழுததால் ருத்திரர் என்ற பெயரிட்டார்.* "யதரோதீ: ஸுரச்ரேஷ்ட ஸோத்வேக இவ பாலக:, ததஸ் த்வாம் அபிதாஸ்யந்தி நாம்நா ருத்ர இதி ப்ரஜா:". *(பாகவதம் 3-11) அப்படி அழுத ருத்திரராக இருப்பவர்*[1]

*சிவபெருமானுக்கு எட்டு வடிவங்கள். பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், ஸூர்யன், சந்திரன், வேள்விபுரிபவர், என. அவற்றில் அக்னி வடிவில் இருப்பவருக்கு ருத்திரன் என்ற பெயர். தாபத்தைத் தருவதால் அவர் அழவைக்கிறார். வேதத்தில் ருத்ர ப்ரச்னத்தில்* "அஸௌ யஸ் தாம்ரோ அருண உத பப்ரு:" *என்ற மந்திரம் ஆகாயத்தில் உதித்து வெளியாகிக் கொண்டிருக்கின்ற ஸூர்யனை ருத்திரர் என அடையாளம் காட்டுகின்றது. ஆரோக்கியமளிக்கும் ஸூர்யன், காலத்தைக்காட்டும் ஸூர்யன் ருத்திரராவார்.* "ஸூர்யாத்மா பகவான் தேவ: ஸர்வ தேவ விபூதித:. ருத்ர இத்யுச்யதே தேவைர் பகவான் முக்தி புக்தித:". *என லிங்க புராணம். நோயை விரட்டுவதால் சூர்யன் ருத்ரராகிறார். (ருஜம் த்ராவயதி). வேதத்தில் 300 நமஸ்காரங்களால் வணங்க யஜுர் வேதத்தில் ஒரு ப்ரச்னம் முழுவதுமே ருத்ரனின் துதியாக அமைந்துள்ளது. சதருத்திரம் என்ற ஸாமவேதப் பகுதியும் பிரசித்தி பெற்றது. அவற்றால் விளக்கப் பெறுபவர்.*[2] *மனிதனின் ஆயுட்காலம் 116 ஆண்டுகள். இதில் முதல் 24 ஆண்டுகளை வஸுக்களும், பின் 44 ஆண்டுகளை ருத்திரர்களும் அதனைத்தொடர்ந்து வரும் 48 ஆண்டுகளை ஆதித்யர்களும் ஆண்டு*

---

1. सोऽरोदीत् यदरोदीत् तद्रुद्रस्य रुद्रत्वं। (काठके)
2. रुत् वैदिकः शब्दः, तं द्रवति प्राप्नोति, वेदप्रतिपाद्य इत्यर्थः। (तै. आ. १०. १२. सायणभाष्यम्)

ப்ராணசக்தியில் பரவி நிற்கிறார்கள். பிராண சக்தியில் பரவி நிற்கும் ருத்திரர்கள் அழவைக்கிறார்கள் என்று சாந்தோக்ய உபநிடதம் கூறும்.[1] இடியாகப் பேரொலியைக் கிளப்பிக்கொண்டு மேகத்தினிடையே ஓடும் ஈச்வர சக்தியே ருத்ரர் என நிருக்தம் கூறும். (ரௌதி)[2].

வேதத்தைப் பிரும்மனுக்கு படைப்பின் தொடக்கத்தில் அருள்பவர்.[3] (ருதம் சப்தம் வேதாத்மானம் ப்ரும்மணே ராதி ததாதி). துக்கங்களிலிருந்தும் காப்பாற்றுபவர்.[4] பரம் பொருள் தான் பலவாக ஸங்கல்பம் கொண்டதும் உலகைக் காப்பதற்கான ஆதிகாரிக தேவதைகளைப் படைத்தது. தேவர்களுக்கு இந்திரர், நீர் வாழ்பவைகளுக்கு வருணர், அந்தணர்களுக்கு ஸோமர், கால்நடைகளுக்கு ருத்திரர், இடிமின்னல் முதலியவற்றிற்கு பர்ஜன்யர், பித்ருகளுக்கு யமர், நோய் முதலானவற்றிற்கு ம்ருத்யு, ஒளிகளுக்கு ஈசாநர் என தேவர்களில் க்ஷத்திரியப் பண்புமிக்கவர்களைத் தோற்றுவித்தது. அதில் ருத்திரராக இருப்பவர்.[5] பிராண சக்தியைத் தாங்கும் ஏழு தேவதைகளில் ஒருவர். கண்களில் உயிர் தேங்கியுள்ளது. கண்களில் வெண்படலத்தில் காணும் மயிரிழை போன்ற சிவப்புக் கோடுகளில் ருத்திரராக இருப்பவர்.[6]

கண்களில் நீர் கசிவது (ரோதனம்) மகிழ்ச்சியிலும் உண்டு. பகவானின் குணங்களைக் கேட்கும்போதும், பாடும்போதும்,

---

1. प्राणा वाव रुद्रा एते हीदं सर्वं रोदयन्ति। (छान्दोग्य ३. १६)

2. रुद्रो रौतीति सतो रोरूयमाणो द्रवतीति वा, रोदयतेर्वा। यदरुदत्तद्रुद्रस्य रुद्रत्वं। (निरुक्ते १०. ७. ५)

3. यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै। (श्वेताश्व ६. १८)

4. इन्द्रस्त्वं प्राण तेजसा रुद्रोऽसि परिरक्षिता। (प्रश्न २. ९)

5. ब्रह्म वा इदमग्र आसीदेकमेव, तदेकं सन्न व्यभवत्तत् श्रेयो रूपमत्यसृजत क्षत्रं यान्येतानि देवत्रा क्षत्राणि इन्द्रो वरुणः सोमो रुद्रः पर्जन्यो यमो मृत्युरीशान इति। (बृ. आ. १. ४. ११) रुद्र पशूनां पते। (काठक २. २८)

6. इमा अक्षन् लोहिन्यो राजयस्ताभिरेनं रुद्रोऽन्वायत्तः। (बृहदा २. २. २)

நினைக்கும்போதும் கண்ணீர் மல்கிக் கசிவது இயற்கை. பகவானின் குணங்களைக் கேட்ட பின்னரும் கண்ணீர் மல்கிக் கசியா திருப்பின் அந்த இதயம் கருங்கல்லே என்கிறார் சௌநகர். "ததச்மஸாரம் ஹ்ருதயம் பதேதம் யத் க்ருஹ்யமாணைர் ஹரிநாமதேயை:. ந விக்ரியேத, அத யதா விகாரோ நேத்ரே ஜலம் காத்ரருஹேஷு ஹர்ஷ:" (பாகவதம்: 3-3-24) அப்படி ஆனந்தக் கண்ணீர் மல்கச் செய்பவர். (114)

115. பஹுசிரா:- எண்ணற்ற தலைகள் உள்ளவர்.

நான் பலவாக ஆவேன் என்ற பகவானின் ஸங்கல்பம் செயலுருவமடைந்ததும் எண்ணற்ற சரீர உறுப்புகள் தோன்றின. கருவில் முதலில் தலையே வெளிப்படும். விராட் சரீர அமைப்பில் முதலில் தோன்றியது எண்ணற்ற (ஆயிரக்கணக்கான) தலைகளின் குவியல்.[1] பிறகு ஆயிரக்கணக்கான கண்கள், ஆயிரக் கணக்கான கால்கள் தோன்றின. (நா. 224, 226, 227) ஆதிசேஷனது வடிவில் அவர் பல தலைகளைக் கொண்டவர். (115)

116. பப்ப்ரு:- தாங்குபவர்.

உலகைத் தாங்கிப் போஷிப்பவர். ஆதார சக்தியாக, ஆதி கூர்மராக, ஆதி வராஹராக, அஷ்டதிக் கஜங்களாக, ஆதி சேஷனாக உலகை அதனதன் நிலையில் நிலைக்கும்படி தாங்குபவர். உதித்துக்கொண்டிருக்கும் ஸூர்யனாகிய ருத்திரரே உலகைத் தாங்குபவர் என ஸ்ரீருத்ர ப்ரச்னம் கூறுகிறது.[2] (116)

117. விஶ்வயோநி:- உலகத்தை உருவடையச் செய்தவர்.

யோநி: - கருவகம் (யௌதி ஸம்யோஜயதி) வினைப்பயனாகப் பிறவி பெறவிருக்கும் ஸூக்ஷ்ம சரீரம் தந்தையின் சுக்லம் வழியே தாயின் கருவறைக்குள் செல்கிறது. அங்கு அதற்கான ஸ்தூல சரீரத்தின் கரு காத்துக்கொண்டிருக்கிறது. ஸ்தூல சரீரத்தை ஸூக்ஷ்ம சரீரத்துடன் சேர்த்துக் கருவாக உருவாக்குமிடம் யோநி. அதுபோல் பிரகிருதியிடம் தன் அம்சத்தைப் பதித்து உலகமாக்கும் யோநியாக பகவான் திகழ்கிறார். (நா. 88). உலகில் தனித் தனியாக விளங்குபவை எல்லாவற்றையும் ஒன்றையொன்று எதிர்பார்க்கச்

1. सहस्रशीर्षा पुरुषः। सहस्राक्षः सहस्रपात्। (तै. आ. ३. १२)
2. असौ यस्ताम्रो अरुण उत बभ्रुः सुमङ्गलः। (श्रीरुद्रप्रश्ने)

செய்து பிணைப்பை ஏற்படுத்தியவர்.[1]. யோநி: - மூலகாரணம். உலகின் உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருப்பவர். (குடத்திற்கு மண் உபாதான காரணம், குயவன் நிமித்த காரணம்). யோநி: - சேர்த்து வைப்பவர். அடியார்கள் தானே பகவானுடன் சேர முடியாது. அவரது திருவருள் ஒன்றே அவருடன் அடியார்களைச் சேர்த்து வைக்கும். கருணையால் அடியார்கள் அனைவரையும் தம்முடன் சேரச் செய்பவர். (117)

118. ஶுசிஶ்ரவா: - தூய புகழுள்ளவர்.

புகழில் தூய்மையுள்ளவர். தூய்மையே வடிவான பகவானின் நாமங்கள் மற்றவைகளையும் தூய்மைப்படுத்தவல்லவை. (சு. 16) தூய அடியார்களின் சொல்லைக் கேட்பவர். (118)

119. அம்ருத: - மரணமற்றவர்.

எந்தப் பொருளும் பரிணாமங்களுக்குட்படும். மறைவெனும் வடிவுமாற்றத்திற்கு முன்னோடியான மரணம் இறுதியான பரிணாமமாகும். எவ்வகைப் பரிணாமத்திற்கும் உட்படாத பகவான் மரணமெனும் பரிணாமமுமற்றவர்.[2] தேவர்களின் உணவாகிய அமுதம் போல் எலும்புவரை இனிப்பவர், ஆராவமுதன் எனப் புகழ் பெற்றவர். அம்ருத:. தன்னை அண்டியவர்கள் அழியாதபடி பாதுகாப்பவர், தனது சேவையில் அடங்காத ஆர்வத்தை அளிப்பவர்.

அம்ருதம் தேவர்களின் உணவு. தெவிட்டாதது. அதனை விட்டு மற்றொன்றை நாடாமல் தன்னிடத்திலேயே திருப்தியும் அடங்கா ஆர்வமும் தருவது. அப்படி அம்ருதம் போல், வேறொன்றில் நாட்டம் ஏற்படாதபடி ஈர்த்து, பக்தனைத் திருப்தியுறச் செய்பவர். (119)

120. ஶாச்வதஸ்த்தாணு: - நிலைத்தவர் - பரிணாமமற்றவர்.

சாச்வத: - (நா. 56) ஸ்தாணு: (நா. 28) என்ற இருநாமங்களும்

1. यश्च स्वभावं पचति विश्वयोनिः। (श्वेताश्व ५. ५) यो योनिमधितिष्ठत्येको विश्वानि रूपाणि योनीश्च सर्वाः। (५.२)
एष योनिः सर्वस्य (नृसिंहपूर्वतापनी ४. ६)
2. तदेव शुक्रं तद्ब्रह्म तदेवामृतमुच्यते। (कठ २. २. ८) अजरोऽमरोऽव्ययः। (बृ. आ. ६. ४.१५)

*இணைந்த நாமம் இது. ஆதியும் அந்தமுமற்றவர் - சாச்வத:. வளர்ச்சியும் தேய்வுமற்றவர் - ஸ்தாணு:. (120)*

121. வராரோஹ: - உயர்ந்த ஏற்றமுள்ளவர்.

*அழகிய இடை அல்லது மடி உள்ளவர். அழகியமணை - ஆதிசேஷனாகிய பர்யங்கம் உள்ளவர். சிசுவிற்குத் தாயின் மடியே மிகவும் பிரியமானது. சிசுவின் நோக்கில் அதுவே அழகானது. பக்தனுக்குப் பகவானின் அணைப்பைப் பெறும் மடியே மிக அழகானது. நரஸிம்ஹர் போன்ற க்ரூர வடிவில் கூட பிரஹ்லாதன் முதலிய பக்தர்கள் அழகானதெனக் கண்ட மடி உள்ளவர்.*

*தன்னையடைய சிறந்த வழி உள்ளவர். அந்த வழியில் கிரமாக அமைந்த ஏற்றமிருக்கும். ஏறியவர் தடுமாறி அல்லது வழுக்கி விழாதபடி பாதுகாப்பு இருக்கும். பல பிறவிகளிலும் தொடர்கின்ற ஏற்றமானாலும் முன்னிருந்ததைவிட ஏற்றம் கூடுதலாகவே அமையும். அவ்வழியே மேல் ஏறியவர் திரும்பக் கீழே வர மாட்டார். ஸ்வர்க்கம் முதலிய போகங்கள் நல்வினைப் பயனாக ஏற்படுவதால் நல்வினையுள்ள மட்டுமே அனுபவத்திலிருக்கும். பின்னர் மனிதப்பிறவிக்குத் திரும்பநேரும். அபவர்க்கம் என்ற மோக்ஷத்தில் மறுபடி திரும்பும் நிலை ஏற்படாது.[1] அதனால் அது சிறந்த ஏற்றமாகிறது. பக்தவத்ஸலனான பகவானின் வழிபாட்டால் கிரமமாக பிரும்ம நிலைவரையுள்ள ஏற்றம் எளிதில் கிட்டுகின்றது. (ப. 7-8) (121)*

122. மஹாதபா: - சிறந்த ஐச்வர்யமுள்ளவர்.

*பல அவதாரங்களால் மக்களைக் காப்பதற்காகப் பெரிதும் உழைத்தவர். பிறரை ஆட்படுத்தும் பேராளுமை தபஸ் ஆகும். (சு. 15) மஹத் முதலியவற்றைப் படைப்பதற்கான பெரும் ஸங்கல்பமும் செயலும் பகவானின் தபஸ் ஆகும். உலகைத் தன் விருப்பப்படி ஆள்வதற்கான வரையற்ற ஆளுமை, கொடும் அசுரர் போன்றவரையும் நொடியில் வெல்லும் பேராண்மை, இவையனைத்தும் கொண்டவர். பேராற்றலுக்கு உதவும் பேரறிவு (சுத்த ஜ்ஞானம்) கொண்டவர்.[2] (122)*

---

1. न च पुनरावर्तते। न च पुनरावर्तते। (छान्दोग्य ८. १५. १)
2. यस्य ज्ञानमयं तपः। (मुण्डक १. १. ९)

सर्वगः सर्वविद्भानुः विष्वक्सेनो जनार्दनः ।
वेदो वेदविदव्यङ्गो वेदांगो वेदवित्कविः ॥ ४५ ॥

ஸர்வகஸ் ஸர்வவித்ப்பானு: விஷ்வக்ஸேநோ ஜநார்த்தந:
வேதோ வேதவிதவ்யங்கோ வேதாங்கோ வேதவித் கவி: 45

123. ஸர்வக: - எதனையும் சென்றடைபவர்.

*தோன்றியதனைத்தின் காரணப் பொருளாகையால், எல்லாவற்றிலும் தொடர்ந்து நிறைந்து இருப்பவர். தான் பலவாக ஆனதன் காரணமாக ஒவ்வொன்றிலும் ஆத்மாவாக உட்புகுந்திருப்பவர். தனது வலிவால் எல்லாவற்றையும் தாங்கி நிற்பவர். ஸம்ஹார காலத்தில் ஸங்கர்ஷணராகத் தன்னுள் ஒடுக்கிக்கொண்டவை அனைத்தும் தன்னை அடையும்படி செய்பவர்.[1] (123)*

124. ஸர்வவித்-பானு: - எல்லாம் அறிந்து ஒளிர்பவர்.

*பலவாகப் பிரிந்த ஒவ்வொன்றையும் அறிந்தவர். எல்லாம் அறிந்தவர். (ஸர்வவித்) எல்லாமறிந்தவராகையால் எங்கும் செல்ல முடியும். எதனையும் அடையவும் முடியும். (ஸர்வவித்.) அவர் ஸத்ய ஸங்கல்பர். அதனால் ஸங்கல்பம் செய்ததனைத்தையும் எளிதில் படைத்துத் தன்னுடையதாகப் பெறுகிறார். அப்படிப் படைப்பு முதலியவைகளில் ஈடுபடும்போது களைத்து ஒளி குன்றாமல் - தன் ஒளியால் ஸூர்யன் முதலியவற்றிற்கும் ஒளி வழங்குபவராக ஒளிர்பவர். (நா. 284, 333). ஸர்வவித்தாயும் பானுவாயும் இருப்பவர்.[2] ஸர்வவித்பானு: ஒரே நாமம். (ஸர்வவித்பாநவே நம:) தன்னைத்தானே விளக்கிக்கொள்பவராகி (பானு): தன்னிடம் தானே தோற்றுவித்துள்ள உலகனைத்தையும் அறிந்தவராகவும் ஆகிறார். (நா. 799)*

*ஸர்வவித் - பானு: - எனத் தனித்து இரு நாமங்களாகக் கொள்வதும் உண்டு. (ஸர்வவிதே நம:, பாநவே நம:)*

1. ते सर्वगं सर्वतः प्राप्य धीराः। (मुण्डके ३. २. ५) नित्यं विभु सर्वगतं सुसूक्ष्मं। (मुण्डक १. १. ६) स्वमहिम्ना सर्वतो गच्छति। (नृसिंहपूर्व २. १२)
2. यः सर्वज्ञः सर्ववित् यस्य ज्ञानमयं तपः। (मुण्डक १. १. ९)
तमेव भान्तमनु भाति सर्वं। (मुण्डक २. २. १०)

*ஸங்கர்ஷணராகி எல்லாவற்றையும் தம்மை அடையச் செய்தவர். மறுபடி பிரத்யும்னராகி எல்லாவற்றையும் தனித் தனியே படைத்து அனைத்தையும் தமதாக்கிக் கொண்டு தன் ஐச்வர்யத்தையும் (ஸர்வவித்) அவற்றால் தான் பாதிப் புறாமலிருந்து தன் வீர்யத்தையும் காட்டுபவர். (பானு:) (124)*

125. விஷ்வக்ஸேந: – நாற்புறமும் எதிரிப் படைகளை விரட்டுபவர்.

*பகவான் போராட முற்பட்டதுமே எதிரிகளின் படைகள் நடுங்கி ஓடுகின்றன. அதனால் அவர் விஷ்வக்ஸேநர். பகவானது ஸேநாபதியான விஷ்வக்ஸேநரின் வடிவில் உள்ளவர். (சு. 2) விஷ்வக் - சூழ்ந்திருப்பது, நாற்புறமும் இருப்பது, இந: - தலைவர்; (இநேந ஸஹவர்த்தந்தே - ஸேநா: - விஷ்வஞ்ச: அஸ்ய) தன்னைச் சூழ்ந்துள்ளதனைத்திற்கும் தலைவராகி எல்லாவற்றையும் காப்பவர். அநிருத்தர் என்ற வடிவில் பகவான் உலகைக் காக்கிறார். தலைவனுகையால் கட்டுப்படுத்துகிறார். பிறர் கட்டுப்பாட்டிற்கு உட்படுவதில்லை. (அ - நிருத்த:) (125)*

126. ஜநார்த்தந: – கெட்டவரைத் துன்புறுத்துபவர்.

*நெறி தவறியவர்களைத் துன்புறுத்தி அடக்கியும் உலக நெறியில் பயன்படாதவர்களை மாய்த்தும் கெட்ட வினைப்பயனை அனுபவிப்பதற்காக நரகத்திற்கு அனுப்பியும் வதைப்பவர். அதில் இவருக்குப் பிறர் உதவி தேவையில்லை. (ஜநாந் அர்த்தயதி ஹிநஸ்தி)உலகைத் தன்னுள் அடக்கிக்கொள்ள எடுத்த வடிவம் இது. வர்க்கல க்ஷேத்திரத்தில் (கேரளம்) உலகை நீராக்கி ஆசமனம் செய்கின்ற கோலத்தில் உள்ளவர். நல்வழிப்பட்ட மக்களால் நல்லதைக் கோரி யாசிக்கப் பெறுபவர் - ஜநை: அர்த்த்யதே - யாச்யதே.) நல்லதைக்கோரிப் பெறுவதற்கு அணுகத்தக்கவர் இவரைத் தவிர வேறு இல்லை. வ்யூஹ நிலையிலும் உள்ளவர். (ப. 25) (126)*

127. வேத: – வேதம்.

*தத்துவத்தை விளக்குவது வேதம். (வேதயதி) அந்த வேதத்தின் வடிவில் இருப்பவர்.[1] வேதம் அவரது மூச்சுக்காற்றானதாகையால் அவரைக் காட்டிலும் வேறுபடாதது. இறைவன் தன்னை உணர்த்தத்*

1. स एव नित्यकूटस्थः स एव वेदपुरुष इति विदुषो मन्यन्ते। (परमहंसोपनिषत्)

*தானே வேதமானுர். வேதத்தின் மூலம் தனது உண்மை நிலேயை விளக்கினுர். வேத: - (வேதயதி) ஜ்ஞானம் - பேரறிவு வடிவினர். படிப்பாலோ மேதையாலோ உணர இயலாத ஆத்ம ஸ்வரூபத்தை, அதனே மறைத்துள்ள அறியாமையெனும் இருட்டைப் பரிவுடன் ஞான ஒளி விளக்கால் துலக்கிப் புறத்தில் காண இயலாததை அகத்தில் வெளிப்படுத்தி உணர வைப்பவர்.* ''தேஷாமேவாநுகம்பார்த்தம் அஹமஜ்ஞானஜம் தம:. நாசயாம்யாத்ம பாவஸ்த்த: ஞான தீபேந பாஸ்வதா'' *(கீதை. 10-11).* *(127)*

128. வேதவித் - வேதத்தை அறிந்தவர்.

*முறைப்படி வேதத்தையும், வேதப் பொருளேயும் உணர்ந்தவர் பகவான் ஒருவரே. வேதம் அவரது மூச்சுக்காற்று. பிறர் அறியாவண்ணம் வெளியிற் சென்று திரும்பும் அதன் பாங்கை மூச்சை விடுபவரே உணரலாம். அவர் பரிவுடன் நமக்கு உணர்த்த நாம் அதனே அறிகிறோம். ''வேதத்தின் எல்லேயாகிய அதன் உட்பொருளே விளக்குபவரும் அதனே முழுவதும் அறிந்தவரும் அவர் ஒருவரே''[1] (நா. 131) வேதத்தை முழுவதும் அறிந்தமையால் தான் வியாஸர் வேதத்தை வகுத்து அருளினுர். வியாஸர் முதலான மகரிஷிகளின் வடிவில் உள்ளவர்.* *(128)*

129. அவ்யங்க: - குறைபாடற்றவர்.

*அங்கக்குறைவு - வ்யங்கம். அங்கக் குறைவற்றவர். நிறைந்தவர். ஞானம், ஐச்வர்யம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் என்ற ஆறு குணங்களும் நிறைந்தவர். (நா. 60, 558) வடிவழகும் பேராற்றலும் பேரறிவும் குறைபாடின்றி நிறைந்து காண்பவர்.*

*வேதமே பகவானின் வடிவம். அந்த வேதத்திற்கு ஆறு அங்கங்கள். சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என. அவை குறைபாடின்றி பூர்ணமாயிருப்பதால் வேதம் குறைபாடற்றது. அந்த பூர்ணமான வேத வடிவில் உள்ளவர்.*

*வ்யங்க: - வ்யக்தி: - விளக்கம். உருவம் முதலியவை இல்லாமையால் இன்னுர் இன்னதென விளக்கம் பெருதிருப்பவர்.[1] அவ்யக்தோ (அ)யம்'. (கீதை. 2-15)*

1. वेदान्तकृद्वेदविदविदेव चाहम्। (कैवल्य २२, गीता १५,१५)
2. अचिन्त्यमव्यक्तमनन्तरूपम्। (कैवल्य ६)

*இறைவனது சக்திகள் ஆறு*[1] *(1) ஸர்வஜ்ஞதா எல்லாமறிந்தவராய் இருப்பது. (2) த்ருப்தி: - நிறைவுற்றிருப்பது. (3) அநாதி போத: - பிறரிடமிருந்தும் பிற பொருள் மூலமும் பெறாத ஸ்வதந்திரமான பேரறிவு. (4) ஸ்வதந்த்ரதா - பிறரால் பாதிப்புறாமல் தன் விருப்பப்படி செய்யவும் செய்யாதிருக்கவும் மாற்றிச் செய்யவும் திறமை. (5) நித்யம் அலுப்த சக்தி: - என்றும் எந்தச் செயலிலும் குன்றாதபேராற்றல். (6) அநந்ததா - முடிவின்மை, இந்த சக்திகள் பகவானின் அங்கங்கள். பூர்ணமான இந்த அங்கங்களுடன் கூடியவர். (நா. 27) (129)*

130. **வேதாங்க: - வேதத்தை அங்கமாகக்கொண்டவர்.**

*படைப்பின் தொடக்கத்தில் உண்டான பூமி நீரில் கனத்தால் ஆழ்ந்தபோது பிரும்மாவின் மூக்கிலிருந்து வெளியான யஜ்ஞவராஹ மூர்த்தி வேதத்தையே உடலாகக்கொண்டவர்.* (வேதவிதாந மூர்த்தி: த்ரயீம் தநும் ஸ்வாம் பரிதுந்வதே நம:. த்ரயீமயம் ரூபமிதம் ச ஸௌகரம்". *(பாகவதம் 3-13) சப்தவடிவானவர். அவரது உடலமைப்பு வேதங்கள் முதலிய நன்னூல்களாலானது.* ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநி ச. **சப்தமூர்த்திதரஸ்யைதத் வபுர் விஷ்ணோர்** மஹாத்மந:. *(விஷ்ணு புராணம் 1-22)* பகவானது *யஜ்ஞவராஹ வடிவில் நான்கு கால்களும் நான்கு வேதங்களாயின.* **வேதபாதோ** யூபதம்ஷ்ட்ர: - *(ஹரிவம்சம் 1-41-29). (130)*

131. **வேதவித் - வேதப்பொருளை ஆராய்பவர்.**

*வேதத்தின் பொருளைக் குழப்பமின்றி அறிவதற்கான பிராதிசாக்கியம் சிக்ஷை முதலிய அங்கங்களின் மூலம் ஸ்வரம் எழுத்து முதலியவற்றிற்குப் பழுது ஏற்படாதவாறு பாதுகாத்தும், வியாஸர், ஜைமினி முதலிய மாமுனிவர் வடிவில் தோன்றிப் பொருள் கூறும் முறை நிர்ணயித்தும் வேதப்பொருளை உணர்த்தியவர். (நா. 128, 771) வேதத்தின் பொருளான தர்மத்தைத் தானும் கடைப்பிடித்துப் பிறரை அவ்வழிப்படுத்தியவர். (131)*

132. **கவி: - பரந்த ஆழ்ந்த நோக்கு உள்ளவர்.**

*எல்லாமறிந்தவன், மேலெழுந்தவாரியாக உணராமல் பரந்த*

---

1. सर्वज्ञता तृप्तिरनादिबोधः स्वतन्त्रता नित्यमलुप्तशक्तिः।
अनन्तता चेति विभोर्विधिज्ञाः षडाहुरङ्गानि महेश्वरस्य॥ (वायुपु १२. ३३)

*ஆழ்ந்த நோக்குடன் பார்ப்பவன் சிறந்த கவி. (கவி:. க்ராந்த தர்சீ - ஸர்வத்ருக்). பொறிகளால் உணரமுடியாதவற்றையும் அகக்கண்ணால் பார்க்கிற கவிகளுக்குள்ளே சிறந்தவர்.*[1] *(132)*

लोकाध्यक्षः सुराध्यक्षो धर्माध्यक्षः कृताकृतः ।
चतुरात्मा चतुर्व्यूहश्चतुर्दंष्ट्रश्चतुर्भुजः ॥ ४६ ॥

**லோகாத்த்யக்ஷஸ் ஸுராத்த்யக்ஷோ தர்மாத்த்யக்ஷ: க்ருதாக்ருத:.**
**சதுராத்மா சதுர்வ்யூஹஸ் சதுர்தம்ஷ்ட்ரஸ் சதுர்புஜ: 46**

**133. லோகாத்த்யக்ஷ: - உலகைக் கண்காணிப்பவர்.**

*அத்த்யக்ஷ: - வரவு - செலவு, சேமிக்க வேண்டியதைச் சேமித்து சேமித்துள்ளதைக் காப்பாற்றுவது (யோக - க்ஷேமம்) இவற்றைப் பொறுப்புடன் கண்காணிப்பவர். ''யோகக்ஷேமம் வஹாம்யஹம்'' என்று உலகைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பகவான் பலர் மூலம் இந்தப் பொறுப்புகளை நிர்வகிக்கிறார். உலகம் தேவர்கள் தர்மம் என்று மூன்று துறைகளில் இப்பொறுப்பு (அதிகாரம்) பிரிக்கப்பட்டுள்ளது. மூன்றையும் தனித் தனியே சில அதிகார புருஷர்களிடம் ஒப்படைத்துத் தானே மூன்று பொறுப்புகளையும் கண்காணிப்பதை லோகாத்த்யக்ஷ: ஸுராத்த்யக்ஷ: தர்மாத்த்யக்ஷ: என்ற மூன்று நாமங்கள் விளக்குகின்றன. ஆழ்ந்தும் பரந்தும் நோக்கிக் கண்காணிக்கின்ற பகவானது மேம்பார்வையில் உலகம், தேவர்கள், தர்மம் என்ற மூன்று துறைகளும் இயங்குகின்றன. உலகின் சீரான வளர்ச்சி முதலான பரிணாமங்களுக்கு உதவுகின்ற காற்று மழை வெயில் முதலிய இயற்கைவேகங்களை மக்களின் வாழ்க்கையை ஒட்டி அமைப்பதும், இயற்கைவேகங்களைப் பயன்படுத்திக்கொண்டு அறவழியில் மக்களை வாழச் செய்வதும், அறவழியில் நேரும் இடையூறுகளைக் களைவதும் தனது பணியாகக் கொண்டவர். (133)*

**134. ஸுராத்த்யக்ஷ: - தேவர்களைக் கண்காணிப்பவர்.**

*நன்மை புரிவதையே தன் பணியெனக்கொண்டவர்கள் ஸுரர்கள் - தேவர்கள் (நா. 85) மழை இடி மின்னல் காற்றுவெயில் முதலிய இயற்கை வேகங்களைப் பொறுப்புடன் கட்டுப்படுத்தி*

1. कविर्मनीषी परिभूः स्वयंभूः (ईशावास्य) तदेव ब्रह्म परमं कवीनां (तै. आ. १०. १) कविं पुराणमनुशासितारं। (गी ८.९)

அயராமல் மக்களின் வாழ்க்கைக்கு உதவுபவர்கள் - இந்திரன் ஸூர்யன் சந்திரன் அக்னி முதலானோர். இவர்களது பணியையும் மேம்பார்வையிட்டுக் கண்காணிப்பவர். பிருந்தாவனத்தில் கோபர்கள் இந்திர யாகத்தை நிறுத்திக் கோவர்த்தனத்தையும் பசுக்களையும் வழிபட்டபோது தன்னை அவமதித்ததாகக் கருதி கோகுலத்தையே பிரளய காலத்தில் மட்டும் செயல்படும் மழையால் இந்திரன் அழிக்க முற்பட்டபோது, இந்திரனது செருக்கு தானே தணியும்படி கோவர்த்தனத்தைக் குடையாக்கிக் எப்பகுதியையும் பாதிக்காதபடி செய்தவர். நன்மை புரிவதையே பணியாகக்கொண்ட தேவரும் செருக்குண்டு தவறிழைக்கையில் கண்காணித்துத் திருத்தும் அருளாளர். தேவர்களுக்கு நன்மை புரிவதற்காக அடிக்கடி தோன்றுபவர். (134)

**135. தர்மாத்த்யக்ஷ: - தர்மத்தைக் கண்காணிப்பவர்.**

தேவர்களுக்கும் உலகிற்கும் உள்ள தொடர்பு தர்மத்தின் மூலமாக நடைபெறுகிறது. (நா. 3) இந்திரன் பக்ஷபாத மின்றி மழை பொழியச் செய்கிறார். அந்த மழையால் ஒருவன் நன்மை அடைகிறான். மற்றவன் துன்புறுகிறான். இது அவரவது வினைப்பயனாக உள்ள தர்மம் அதர்மம் என்பதால் ஏற்படுகிறது. மக்கள் செய்யும் நன்மை தீமைகளுக்கேற்ற வினைத்தொடர்பைத் தர்மாத்தியக்ஷராகக் கண்காணித்து அததற்கேற்ற பலனைத் தருகிறார்.[1] தனி மனிதனின் வினைப்பயனைப் பற்றிச் சிந்தியாமல் தர்மத்தை ஒட்டி தேவர்கள் மழை வெய்யில் முதலியவற்றை ஒழுங்காக அளிக்கின்றனர். தேவர்களின் பொறுப்பில் மட்டும் உலகை விட்டுவிடாமல் தேவர்களும் வினைப்பயனும் ஒன்றோடொன்று முரண்படாதவாறு பகவான் உலகைக் கண்காணிக்கிறார். புறத்தோற்றத்திற்கு உட்பட்ட ஜடமாகிய ஸ்தூல சரீரம் - லோகம்; பொறிகளும் அந்தக் கரணமுமான ஸூக்ஷ்ம சரீரம் தேவர்கள். அவித்யைக்கு ஆட்பட்ட வாஸநாமய மான காரணசரீரம் தர்மாதர்மமயமானது. இந்த மூன்றையும் கண்காணிப்பவர் என்பதை இந்த மூன்று நாமங்களும் விளக்குகின்றன. (135)

**136. க்ருதாக்ருத: - செயற்கையாகவும் இயற்கையாகவும் உள்ளவர்.**

க்ருதம் - செயலால் விளைந்தது. (கார்யம்) அக்ருதம் - செயலால்

1. कर्माध्यक्षः सर्वभूताधिवासः (ब्रह्मोपनिषत्)

விளையாதது. இயற்கையாகவே உள்ளது. (காரணம்) முன் கூறிய லோகாத்த்யக்ஷர் முதலான பொறுப்புகளைக் காரண வடிவில் இருந்தும் காரிய வடிவில் இருந்தும் செய்கிறார். பகவானுக்கு நித்யமான வடிவமும் (அக்ருதம்) தோன்றி மறையும் வடிவமும் (க்ருதம்) உண்டு. உலகிற்கு உதவுவதற்கென க்ருதமான வடிவிலும் அக்ருதமான வடிவிலும் தோன்றிச் செயல்படுவதுண்டு. அவரைக் குறித்துச் செய்யும் தர்மங்களில் தாற்காலிக நன்மை புரிபவைகளும் (க்ருதம்) நித்யமான மேன்மை தருபவைகளும் (அக்ருதம்) உண்டு. இவ்விரு தர்ம வடிவிலும் இருப்பவர். (136)

**137. சதுராத்மா – நான்கு வடிவங்கள் உள்ளவர்.**

ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று பணிகளிலும் தன்னை நான்கு வகையில் பிரித்துக் கொண்டு பகவான் செயல்படுகிறார். ஸ்ருஷ்டி எனும் பணியில் பிரும்மா தக்ஷர் முதலிய பிரஜாபதிகள் (நா. 69) காலம் மக்கள் என்ற நான்கு சிறப்புத் தோற்றங்கள் (விபூதிகள்). ஸ்திதிப் பணியில் விஷ்ணு ஸ்வாயம்புவர் முதலிய மனுக்கள் காலம் மக்கள் என நான்கும் ஸம்ஹாரப்பணியில் ருத்திரர் யமன் முதலானோர் காலம் மக்கள் என நான்கும் இறைவனது விபூதிகளாகும். இப்படி ஸ்ருஷ்டி முதலியதில் ஒவ்வொன்றிலும் தனித் தனியாக நான்கு விபூதிகள் கொண்டவர் (விஷ்ணு புராணம் 1-22 31-33, பாகவதம் 2-8-39).

மரம் தனியாக உள்ளது - வ்யஷ்டி. பல மரங்களின் கூட்டான தோற்றம் காடு - ஸமஷ்டி. இதுபோல் தனி உடலில் உள்ள ஆத்மாவான ஜீவன் - வ்யஷ்டி. எல்லா உடல்களிலுமுள்ள ஆத்மா ஈச்வரன் ஸமஷ்டி. ஜீவனும் ஈச்வரனும் மூன்று வகைப்படுவார்கள். ஸ்தூல சரீரத்தில் அபிமானமுள்ள ஜீவன் **விச்வன்,** ஈச்வரன் **விராட்.** விச்வனும் விராட்டும் சேர்ந்தவர் ஓதா (ओता) இதுபோல் ஸூக்ஷ்ம சரீரத்தில் அபிமானமுள்ள ஜீவன் **தைஜஸன்.** ஈச்வரன் **ஸூத்ரன்:** (सूत्रः) இரண்டின் தொகை **அனுஜ்ஞாதா.** காரண சரீரத்தில் அபிமானமுள்ள ஜீவன் **ப்ராஜ்ஞர்,** ஈச்வரன், **ஈச்வரர்.** இரண்டின் தொகை **அநுஜ்ஞைகரஸர்.** இந்த மூன்று நிலைகளையும் தாண்டி பிரும்மஞானத்தால் உணரப்பெறுகிற ஆத்மா, **துரீயர்** (நான்காமவர்), பரமாத்மா அவிகல்பர் எனப்படுபவர். இவரிடம் வ்யஷ்டி ஸமஷ்டி என்ற வேற்றுமை கல்பனை இல்லை. இந்த நான்காமவரான பரமாத்மாவிடம் மற்ற மூன்றும் அத்த்யாஸத்தால் ஏற்றிவைக்கப்பெற்று ஞானத்தால்

அபவாதமடைந்து மறைகின்றன என நிருஸிம்ஹ உத்தரதாபினீ உபநிஷதம் விளக்குகின்றது. அப்படி ஓதா அனுஜ்ஞாதா அனுஜ்ஞைகரஸர், அவிகல்பர் என்ற நான்கு வடிவங்கள் கொண்ட ஆத்மாவாயிருப்பவர்.[1] முழு விளக்கம் இந்த உபநிடதத்தின் உபநிஷத்ப்ரம்ஹேந்திரரின் உரையில் காணலாம் (நா.769). பிரும்மா விஷ்ணு ருத்திரர் பரம்பொருள் என்ற நான்கு தியான வடிவம் கொண்டவர். (137)

**138. சதுர்வ்யூஹ: - தன்னை நான்காகப் பகுத்துக் கொண்டவர்.**

வாஸுதேவர், ஸங்கர்ஷணர், அநிருத்தர், பிரத்யும்நர் என பகவானுக்கு நான்கு வ்யூஹ நிலைகள். வ்யூஹம் என்பது ஒரு குறிப்பிட்ட செயலையொட்டி அச்செயலுக்கு ஏற்ற வடிவைக் கொள்வதாகும், படைப்பின் பொருட்டு ஏற்ற வடிவம் ப்ரத்யும்நர். காப்பிற்காக அநிருத்தர். ஸம்ஹாரத்திற்காக ஸங்கர்ஷணர். இம்மூன்றின் தலைவர் வாஸுதேவர். (ப. 29).

ஆசை எனும் நெருப்பைத் தூண்டி வலிவூட்டிப் படைப்பை நிகழ்த்துபவர் ப்ரத்யும்னர் ஆவார். பகவானின் ஆறு குணங்களில் ஐச்வர்யமும் வீர்யமும் இவரிடம் அதிகம். புத்தி தத்துவத்தின் தேவதையாவார். எதனாலும் தடைபடுத்த முடியாத செயலாற்றல் உள்ள அநிருத்தர் காப்பிற்கான வ்யூஹாவதாரம். ஆறு குணங்களில் சக்தியும் தேஜஸும் இவரிடம் அதிகம். மனஸ் தத்துவத்தின் தேவதையாவார். எல்லாவற்றையும் இழுத்துச் சுருக்கி மூல தத்துவத்தில் லயம் செய்பவர் ஸங்கர்ஷணர். பகவானின் ஆறு குணங்களில் ஞானமும் பலமும் இவரிடம் அதிகம். அஹங்காரர தத்துவத்தின் தேவதை. வாஸுதேவர் ஆறு குணங்களும் கொண்டு பேரறிவின் தேவதையாக விளங்கும் பரம்பொருள். (நா.558).

பகவான் உலகைப் படைக்க ஸங்கல்பம் கொண்டார். தச்சன் உளி கொண்டு செதுக்கிப் பொருளை உற்பத்தி செய்வதுபோல் செயலால் நிகழாமல் ஸங்கல்பத்தால் (ஆழ்ந்த விருப்பத்தால்) படைப்பு தொடங்கியது. இந்த ஸங்கல்பமே காமன் (மன்மதன் ப்ரத்யும்னர்) என்ற வடிவம் பெற்றுள்ளது. இவரை விஷ்ணுவின் குமாரர் என்பார். ஆனால் விஷ்ணுவிற்கு லக்ஷ்மீயிடம்

1. अथ तुरीयश्चतुरात्मा तुरीयावसितत्वात् एकैकस्य ओतानुज्ञात्रनुज्ञाविकल्पैः। (नृसिंहोत्तरतापनी १. ११)

தோன்றியவரல்ல. ஸங்கல்பத்தால் தோன்றியபடியால் மநஸிஜ:என்ற பெயர். குழந்தை பிறந்ததும் வாழ்வேன் என்ற ஆசையால் அழுகிறது. அந்த அழுகை உணவைப் பெறச் செய்கிறது. பிறக்கிறபோது ஏற்பட்ட ஆசையே வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும் செயலையும் பிணைக்கிறது. இறந்ததும் இந்த ஆசையே வாஸனையாக ஸூக்ஷ்ம சரீரத்துடன் வெளிப்பட்டு மறு உடல் பெற்று வாழ்வைத் தொடங்குகிறது. இந்த ஆசையே பகவானின் ஸ்வரூபம். இது மிகவும் வலிவுடையது. ப்ர - த்யும்ந: - வலிவு மிக்கவர். உலகம் தானியங்கியாக நடக்க இந்த பிரத்யும்நர் என்ற மூல தத்துவம் படைப்புத் தொழிலில் ஈடுபடுகிறது. (நா - 297, 640)

வாழ்வின் ஓட்டத்தில் சீரான வேகம் பெறக் கட்டுப்பாடு தேவை. இந்தக் கட்டுப்பாடு வாழ்வை நிலைக்கச் செய்யும். கட்டுப்படுத்தும் சக்தி கட்டுப்படுபவனால் தடையுறாமல் இருப்பது அவசியம். காப்புத் தொழிலை மேற்கொண்ட இறைவன் எடுத்த வடிவம் அநிருத்தர் (தடைபெறாதவர்). ஆசையை வரைக்குள் அடக்கித் திடப்படுத்தினால்தான் ஆசை நல்ல பலனைத் தருவதாக அமையும். இந்த அநிருத்த தத்துவம் சக்தியும் தேஜஸும் மிக்கது. செயலாற்றலும் அடக்க முடியாத திறமையும் கொண்டது. காப்பு எனும் பணியை ஏற்ற பகவானின் வ்யூஹம் இது. (நா. 185, 638)

எல்லாவற்றையும் அவ்வப்போதும் நிரந்தமாகவும் செயலிழக்கச் செய்து ஒடுக்குவதும் ஒரு முக்கியப் பணி. ஞானமும் பலமும் மிக்க ஸங்கர்ஷணர் (தானிருக்குமிடத்திற்கு வலிவுடன் இழுப்பவர்) இந்த ஸம்ஹாரப் பணியை ஏற்கிறார் (நா. 552)

இம்மூன்று பணிகளிலும் ஸாக்ஷியாக இவற்றிற்கு அப்பாற்பட்டவராக எல்லாமாக எல்லாவற்றிலும் துலங்குபவராக இருப்பவர் வாஸுதேவர். (நா. 332, 695, 709) (138)

139. சதுர்தம்ஷ்ட்ர: - நான்கு தெற்றுப் பற்களை உடையவர்.

தெற்றுப் பற்கள் நான்கும் தெரியும்படி நரஸிம்மராக இருப்பவர். கொம்பையும் தம்ஷ்ட்ரா எனக் கொள்வர். யஜ்ஞமூர்த்தியான பகவானுக்கு நான்கு கொம்புகள் என வேதம்

கூறும்.[1] பரவாஸுதேவ வடிவில் மஹா புருஷ லக்ஷணமான அழகிய தெற்றுப் பற்கள் உள்ளவர். (139)

140. சதுர்புஜ: - நான்கு கைகள் உள்ளவர்.

நான்கு திக்குளிலும் பரந்துள்ள உலகைக் காக்கவும் நான்கு புருஷார்த்தங்களேயும் தனித் தனியே அளிக்கவும் சங்கம் சக்கிரம் கதை பத்மம் என்ற நான்கை ஏந்தவும் நான்கு கைகள். ஸத்வம், ரஜஸ், தமஸ், அஹங்காரம் என்ற நான்கு தத்வங்களே நான்கு கைகளாகக் கொண்டவர்.[2] (140)

भ्राजिष्णुर्भोजनं भोक्ता सहिष्णुर्जगदादिजः ।
अनघो विजयो जेता विश्वयोनिः पुनर्वसुः ॥ ४७ ॥

ப்ராஜிஷ்ணுர் போஜநம் போக்தா ஸஹிஷ்ணுர் ஜகதாதிஜ:
அநகோ விஜயோ ஜேதா விஶ்வயோநி: புநர்வஸு: 47.

141. ப்ராஜிஷ்ணு: - எப்போதும் ஒளிப்பிழம்பாய் இருப்பவர்.

ஒளியானது ஒளியால் துலங்கும் பொருளுடன் சேர்ந்தே காட்சி தருகிறது. ஒளியால் துலங்கும் இடம் பெருகப் பெருக ஒளி சிதறும், குன்றும். பொருள் கலப்பற்ற ஒளி பேரொளி, அது சிதருது, குன்ருது. பொருட்காட்சி இல்லாத நிலையில் உணரப் பெறுவது. ஆயிரம் சூரியர்களுக்கொப்பான ஒளிப்பிழம்பு. "திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபத் உத்திதா. யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ் தஸ்ய மஹாத்மந:" (கீதா. 11-12). நான்கு கைகள் உள்ளவர், நான்கு வகைப்பட்டவர் எனக் குறிப்பிடப் பெற்ற இறைவன் புலப்படாமைக்குக் காரணம் பேரொளி வடிவில் இருப்பது தான். ஆனுல் தன்னே வழிபட்டவருக்கு ஒளியுடனுள்ள வடிவில் காட்சி தருபவர்.[1] (141)

142. போஜனம் - போகப்பொருளானவர்.

பகவான் ஒவ்வொரு ஜீவனுக்கும் வாழ்வதற்கு நான்கு ஸாதனங்களேத் தந்திருக்கிருர். (1) வாழ்வதற்கு ஆதாரமாயுள்ள

1. चत्वारि शृङ्गास्त्रयो अस्य पादाः— तै. आ. १०. १०. २
2. सत्वं रजस्तम इति अहङ्कारश्चतुर्भुजः। (गोपालोत्तरतापिनी ५५)
3. प्रकाशः प्रकाशेभ्यः। (अथर्वशिखा २) भारूपः सत्यसंकल्पः (छान्दोग्ये ३. २४) तमेव भान्तमनुभाति सर्वम्। (कठ ५. २५)

*உடல் (தநு) (2) அதனை இயங்க வைத்து வாழ்வை அடைகின்ற அகச்சாதனங்களான பொறிகளும் மனமும் (கரணம்) (3) புறச்சாதனங்களான போகப்பொருள்கள் - உணவு வீடு மனைவி உலகம் முதலியவை (புவனம்) (4) இவற்றைத் துய்க்கிற இயல்பு (போகம்) என. இவைகளின் கூட்டே வாழ்வு. அனுபவிக்கத்தக்க பொருளாக உலகை அமைத்துத் தருகிற மாயை போஜனமாகும். உலகில் உள்ள பொருள்களில் இவை எனது அனுபவத்திற்கு உகந்தவை; இவை எனக்கு வேண்டியவை'' என்ற எண்ணத்தை இந்த மாயையே தோற்றுவித்தது. அந்த மாயை வடிவிலிருந்து கொண்டு உலகைப் போகப்பொருளாக்கித் தந்தவரும், உலகமாகிப் போகப்பொருளாக ஆனவரும் மாயையைத் தாண்டிய பக்தர்களால் இனிது அனுபவிக்கப் பெறுபவரும் அவரே.[1] (142)*

143. போக்தா - அனுபவிப்பவர்.

*மாயைக்கு ஆட்பட்டு உலகைப் போகப் பொருளாக மதித்து அதனைத் தான் சுவைக்க முடியும் என்ற அஹங்காரத்துடன் துய்த்து ஆனந்தப்படுகின்ற போக்தாவான ஜீவனாக இருப்பவர்.[1]*

*தனது பக்தர்கள் பக்தியுடன் தனக்கு அர்ப்பணம் செய்தவற்றை வேறு தகுதி பார்க்காமல் அமிருதத்தைத் தந்ததுபோல் திருப்தியுடன் ஏற்பவர்.* ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்நாமி ப்ரயதாத்மந:. *(கீதை. 9-26) வேள்வி தவம் முதலியவற்றை முறையுடன் செய்யும்போது அங்கு அர்ப்பணம் செய்பவற்றை ஏற்பவர். (143)*

144. ஸஹிஷ்ணு: - பொறுமையை இயல்பாகக்கொண்டவர்.

*பிறர் தனக்கு இழைக்கும் கொடுமையைப் பொறுமையுடன் தாங்குவதும், கொடுமை செய்பவர்களுக்கு ஆட்படாமலும் அதனால் சிதைவுறாமலும் எதிர்த்து நிற்பதும் ஸஹனமாகும்.*

---

1. त्रिषु धामसु यद्भोज्यं भोक्ता यश्च प्रकीर्तितः।
   वेदैतदुभयं यस्तु स भुञ्जानो न लिप्यते॥ (माण्डूक्य-आगम ५)
   भोक्तेति भोक्तृविदो भोज्यमिति तद्विदः। (माण्डूक्यवैतथ्य २२)
2. तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति। (मुण्डके ३. १. १) ऋतं पिबन्तौ सुकृतस्य लोके। (कठ ३. २) य इमं मध्वदं वेद। (कठ ४. ५) *முன் நாமத்தின் அடிக்குறிப்பும் இங்கு பொருந்தும்.*

*இதனைப் பழக்கமாக இயல்பாகக் கொண்டவர் - ஸஹிஷ்ணு:. ஹிரண்யாக்ஷன் முதலிய கொடிய அரக்கர்களை எதிர்த்து நின்றவர். தனக்கும் தன்னடியார்களுக்கும் அறியாமையாலோ ஆணவத்தாலோ கேடுவிளைவித்தவர்களையும் மன்னித்துப் பொறுத்துக்கொண்டவர். அடியார்களிடத்திலும் இந்தப் பொறுமை அமைவது அவர் அருளால் தான்.*[2] *(144)*

145. ஜகதாதிஜ: - உலகின் முன் தோன்றியவர்.

*உலகப் படைப்பிற்கான ஸங்கல்பத்தின் விளைவாக உலகின் முன்னதாக ஹிரண்யகர்ப்பராக ஆனவர். (நா. 70-947) உலகின் படைப்பு முதலியதற்கான பொறுப்பை ஏற்பவர்களாக உலகிற்கு முன் தோன்றிய பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற திரிமூர்த்திகளாக, திரிமூர்த்திகளில் விஷ்ணுவாக இருப்பவர். (145)*

146. அநக: - பாபமற்றவர்.

*அகம் - பாபம், பாபம் புரியத்தூண்டுகின்ற தீய எண்ணம். பாபமில்லாதவர், பாபத்தைச் செய்யாதவர், தீய எண்ணமில்லாதவர், அவரது செய்கைகளுக்குப் பின் வினைத்தொடர்பில்லாமையால் பாபவினைத்தொடர்பில்லாதவர்.*[2] *பாபம் வாஸனையாக அமையாதவர். உடலபிமானமுள்ளவனையே பாபம் தீண்டும். பாபவினை தொடரும். அது வாஸனையாக அமையும். பகவான் உடலபிமானமில்லாதவர். (நா. 831). (146)*

147. விஜய: - வெற்றியுடன் திகழ்பவர்.

*பாபத்தீண்டல் இல்லாமையால் கீழ்மை நேராததால் எப்போதும் வெற்றியுடன் துலங்குபவர். ஞானம் வைராக்கியம் முதலிய ஆறு குணங்களால் உலகிற்கு மேம்பட்டவர். மக்கள் பெறும் வெற்றி அனைத்தும் அவரே. பற்பல பொறுப்புகளில் ஈடுபடுத்தப்பட்ட தேவர்களைத் தனது பெருமையால் அடக்கி வெற்றி கொள்பவர்.*[3] *(147)*

---

1. अप्रक्षितं वसु बिभर्षि हस्तयोरपाल्हं सहस्तन्वि श्रुतो दधे। (ऐतरेय २. ६)
2. अपहतपाप्म अभयं रूपं अनन्वागतं पापेन (बृ. आ. ४. ३. २१) आत्मा अपहतपाप्मा विजरः (छान्दोग्य ८.१.७) अपहतपाप्मा ह्येष ब्रह्मलोकः । (छान्दोग्य ८. ४) स पर्यगात् — शुद्धमपापविद्धम् (ईश १३) न पुण्यपापे मम (कैवल्य २२)
3. ब्रह्म ह देवेभ्यो विजिग्ये। (केन ३. १)

148. ஜேதா - பெருமையால் மேம்பட்டவர்.

*மற்றவற்றை வெற்றிகொள்பவரானதால் இவரே தனது மேன்மையைக் காட்டி நிற்கிறார். இவரது விருப்பமே நிறைவேறும். (148)*

149. விச்வயோநி: - உலகை இருப்பிடமாகக்கொண்டவர்.

*யோநி: - இருப்பிடம், வெளிப்படும் இடம். உலகைத் தன் இருப்பிடமாயும் வெளிப்படுமிடமாயும் கொண்டவர்: காரிய நிலையிலுள்ள விச்வமும் காரண(யோநி)நிலையிலுள்ள பரம்பொருளுமாக இருப்பவர். பிரும்ம ருத்ராதிகளைக்கொண்டு நடத்தப்பெறுகிற உலகிற்குக் காரணமாயிருப்பவர். (நா. 117) (149)*

150. புநர்வஸு: - மீண்டும் மீண்டும் உடலில் வசிப்பவர்.

*ஜீவனாக, க்ஷேத்திரஜ்ஞனாக, உடலின் உள் உறைவதில் விருப்பம் கொண்டவராகத் திரும்பத் திரும்ப இவ்வுடலைக் கூடாக நாடி வசிக்க வருகிறார். ஞானம் ஏற்பட்டு அஹங்காரம் மறையும் வரை இந்த வாஸம் அடிக்கடி தொடர்ந்து ஏற்படுகிறது. பிரும்மா முதலிய அனைவரிடமும் அந்தர்யாமியாக அடிக்கடி தன்னிருப்பைக் காட்டிக் கொள்பவர். (நா. 104) (150)*

उपेन्द्रो वामनः प्रांशुरमोघः शुचिरूर्जितः ।
अतीन्द्रः संग्रहः सर्गो धृतात्मा नियमो यमः ॥ ४८ ॥

**உபேந்த்ரோ வாமந: ப்ராம்ஶுரமோகஶ் ஶுசிரூர்ஜித:**
**அதீந்த்ரஸ் ஸங்க்ரஹஸ் ஸர்கோ த்ருதாத்மா நியமோ யம:. 48**

151. உபேந்த்ர: - இந்திரனுக்குத் துணை நின்றவர்.

*இந்திரனுக்குத் துணை நிற்பதற்கென இந்திரனது தம்பியானவர். பலி என்ற பிரஹ்லாதனின் பேரன் சுக்கிரரின் ஆலோசனைப்படி அசுவமேத யாகங்கள் புரிந்து அன்றிருந்த இந்திரனை வெற்றிகொண்டு தான் அப் பதவியில் அமர்ந்தார். தேவ மாதா அதிதி தன் புதல்வன் இந்திரன் திரும்பித் தேவ அரசு பெறப் பகவானை வேண்டினாள். தேவ முறைப்படி பலியிடமிருந்து அரசைப் பறிப்பதற்கு வழியில்லை. இந்திரனது தம்பியாக அதிதிக்கும் கசியபருக்கும் புதல்வனாகத் தோன்றி பலியின் வேள்விச் சாலையில் பலியிடம் மூன்றடி மண் கேட்டு உலகளந்து*

அதிதியின் குமாரரான விஷ்ணு இந்திரனுக்கு அரசை மீட்டுத் துணை நின்றார். (உபகத: இந்த்ரம்) (நா. 39) கோகுலத்தில் இந்திரயாகத்தை நிறுத்தியதற்காக பிரளய மழை பெய்வித்த இந்திரனது செருக்கடக்கி இந்திரனுக்கு மேம்பட்டவராகத் தன்னைக் காட்டிக் கொண்டவர். (இந்திரஸ்ய உபரி இந்த்ர:) அப்படிக் காப்பாற்றப்பட்ட பசுக்களால் இந்திரனை விட நீர் மேலானவர் எனப் பாராட்டப் பெற்றவர். (நா. 134) வ்யூஹநிலையிலும் உள்ளவர். (ப. 25) (151)

152. வாமந: - குள்ள வடிவினர்.

அதிதியின் பன்னிரண்டாவது குமாரராக தோன்றியவர். வடிவால் குள்ளமானவர். பலியின் செறுக்கைக் கக்கச் செய்து வெளிப்படுத்தியவர். (வாமயதி த்யாஜயதி மதம் பலிம்) (நா. 39) **"தர்சநீயம் மநோரமம் ரூபாநுரூபாவயவம்"** (பாகவதம் 8-18-26) என சுகர் கூறியபடி மிகவும் அழகுள்ளவர். (வநநீய:) பொறிகள் தம்மை மறந்து அவரிடம் ஈடுபடும்படி செய்பவர். யாசகனுயினும் வேண்டியதை வாரி வழங்குகிற வள்ளலாக வழிபடத்தக்கவர். (ஸம்பஜநீய:)[1] புண்ணியத்திற்கேற்றவாறு விரும்பிய புண்ய பலனைத் தருபவர்.[2] வ்யூஹங்களில் எட்டாமவர். (ப. 25) (152)

153. ப்ராம்சு: - நெடிதுயர்ந்தவர்.

மூவுலகையும் தாவி அளப்பதற்காக நெடியவராக வளர்ந்தவர். இரு காலடிகளுக்குள் மூவுலகையும் அடங்கும்படி செய்தவர்.[3] "பூ: பாதௌ யஸ்ய நாபி:" என்ற சுலோகத்தில் (சு. 25) இவரது நெடிதுயர்ந்த தோற்றம் விளக்கப்பெறுகிறது. அம்சு:-ஒளி. சிறந்த ஒளியுள்ளவர். உள்ளத்தில் சிறந்த ஒளியாகத் துலங்கித் தன்னை விளக்கிக்கொள்பவர். (153)

154. அமோக: - செயல் வீணுகாதவர்.

இறைவனது செயல் முறை எவ்ழியிலும் வீணுவதில்லை. பலியிடமிருந்து மூன்றடி மண்ணுகை மூவுலகையே யாசித்துப்

1. मध्ये वामनमासीनं विश्वे देवा उपासते। (कठ ५. ३)
2. एष उ एव वामनी: एष सर्वाणि वामानि नयति। (छान्दोग्य ४. २५)
3. येनावृतं खं च दिवं महीश्च। (तै. आ. १०. १)

பெற்றது, இந்திரனுக்குப் பயன்பட்டது. மூன்றாவது அடிக்குரிய மண்ணைத் தராத காரணத்தைக் காட்டிப் பலியைக் கட்டியது, பலியின் செருக்கை அடக்கவும் சிறந்த பக்தனாக அவனை ஏற்கவும் பயன்பட்டது. பலியைப் பாதாளத்திற்கு அனுப்பி அவனது வாயிற் காப்பவராகத் தன்னை ஆக்கிக்கொண்டதும் அடுத்த இந்திர பதவிக்குள்ள உரிமையை பலிக்கு அருளியதும் பலியின் நித்தியமான மேன்மைக்கு இடமளித்தது என அந்த வாமன அவதாரத்திலும் ஏனைய இதரத் தோற்றங்களிலும் பகவானது செயல் முறை எதுவும் வீணானதில்லை. *(நா. 110)* *(154)*

155. ஶுசி: - தூயவர்

*தனது செயல் முறைகளால் தனது தூய்மைக்குக் குறைவு நேராதபடி நடந்துகொள்பவர். இந்திரனுக்கு அரசை மீட்டுக் கொடுத்ததால் தேவபக்ஷபாதி எனும்போதே பலியின் வீட்டுக் காவற்காரராகத் தன்னைக்காட்டி இந்திரனை விடப் பல மடங்கு பலி நன்மை பெற்றுள்ளதையும் காட்டுகிறார். எந்த உதவிக்கும் கைம்மாறு எதிர்பாராததால் தூய்மையைப் பாதுகாக்கிறார். அவரது நினைவும் வழிபாடும் பெயர்களும் தூய்மை தருபவை. (நா. 251)* *(155)*

156. ஊர்ஜித: - வலிவால் நிலைத்து நிற்பவர்.

பலம் என்பது இறைவனின் ஆறு குணங்களில் ஒன்று. எதிர்க்க முடியாத மிகுந்த வலிவு பெற்றவர். (நா. 137) எவ்விதமான எதிர்ப்பையும் நிலைத்து நின்று தாங்குபவர். பல அரக்கர்களுடன் போரிடும்போது இந்த வலிவு காணப்பெறுகிறது. பலியின் வேள்விச் சாலையில் பலியை வருண பாசத்தால் கட்டியதைக்கண்ட... அசுரர்கள் எதிர்த்த போது நிலைத்து நின்றவர். *(156)*

157. அதீந்த்ர: - இந்திரனைவிட மேலானவர்.

இந்திரனுக்குத் தம்பியாகப் பிறந்தாலும் இந்திரனுக்குத் துணை நிற்பவராக உபேந்திரராக நியமிக்கப் பெற்ற நிலையிலும். இந்திரனைக்காட்டிலும் மேம்பட்டவர். *(நா. 151)* *(157)*

158. ஸங்க்ரஹ: - அடக்கி ஒடுக்குபவர்.

எல்லாவற்றையும் பிடிக்குள் அடக்கிக்கொள்பவர்

*(ஸங்க்ருண்ஹாதி). பிரளய காலத்தில் விரிவடைந்த உலகை மூலப்ரகிருதிக்குள் அடங்குமாறு சுருக்கிவிடுபவர். மிகுந்த பரந்த செல்வாக்குள்ள எதிரியையும் தன் பிடிக்குள் அடக்குபவர். அப்படி அடக்குவது அடக்கப்பட்டவரின் மேன்மைக்காகவே. பலியை அவ்வாறு அடக்கியவர். அடியார்களின் அன்பிற்கு அடங்குபவர். (158)*

159. ஸர்க்க: - படைக்கப் பெற்றவர்.

*தம்முள் அடக்கியதை உரிய காலத்தில் படைப்பால் வெளியிடுபவர். அப்படி வெளியிட்ட உலகின் மூலகாரணமானதால் உலகமாக இருப்பவர். (ஸ்ருஜதி - ஸ்ருஜ்யதே அநேந). பிரும்மா முதலிய படைப்பிற்கு உதவுகிற நான்கு வடிவங்களில் இருப்பவர். (நா. 137) தனது கட்டிற்குள் வசப்பட்டவரைச் சிறிது விட்டுப் பிடிப்பவர்கூட. அது அவர்கள் தானே கட்டுக்கடங்கி நிற்க உதவும். எளிதில் தன்னை அடையும்படி தன்னை அடியார்களிடம் ஒப்படைப்பவர் (நிஸ்ருஜதி). (159)*

160. த்ருதாத்மா - நிலைத்து நிற்பவர்.

*மாறுபாடுகள் நிகழாவண்ணம், எந்த நிலையிலும் ஒரே சீராக உறுதியுடன் இருப்பது த்ருதியாகும். பிறப்பு - இறப்பு என்ற மாறுபாடுகளோ, விருப்பு வெறுப்பு முதலியவற்றின் பாதிப்போ இல்லாமல் ஒரே நிலையில் நிலைத்து எல்லாவற்றையும் கட்டுப்படுத்துபவர், தன் நிலைகுலைந்து தவறிவிடக்கூடாதாகையால், நிலைத்து நிற்பவர். தன் அம ''ார்களையும் தனது வலிவை அளித்து அறநெறியில் நிலைத்து நிற் சய்பவர். (160)*

161. நியம: - கட்டுப்படுத்துபவர்.

*அவரவரது பொறுப்பை அவரவர் ஒழுங்காகப் பேணிச் செயலாற்றும்படி நியமங்களை ஏற்படுத்தி மக்களைக் கட்டுப்படுத்துபவர். பலியை ஸத்யவாக்கிற்கு உட்படும்படி செய்தவர். (நா. 865) உலகியலை ஈச்வரனாக நின்று கட்டுப்படுத்துகிறார்.[1] (ப. 6) யோகத்தின் அங்கங்களில் நியமமாக இருப்பவர். (161)*

1. अभिमन्ता जीवो नियन्तेश्वरः। (नृसिंहोत्तरतापनीये ९.७)

162. யம: - உள்ளிருந்து தூண்டுபவர்.

*உயிரினமனைத்தையும் உள்ளிருந்து தூண்டித் தன் தனது செயல்களில் ஈடுபடும்படி செய்யும் அந்தர்யாமியாயிருப்பவர்.*[1] 'ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா.' *(கீதா. 18-61) (நா. 866) யமம் என்ற யோகாங்கமானவர். உள்ளும் புறமும் கட்டுப்பாட்டிற்குள் அடங்குமாறு செய்து தன் நிலை தவறாமல் காப்பாற்றுபவர் என்பதை த்ருதாத்மா நியம: யம: என்ற நாமத் தொகுப்பு உணர்த்துகிறது. (162)*

वेद्यो वैद्यः सदायोगी वीरहा माधवो मधुः ।
अतीन्द्रियो महामायो महोत्साहो महाबलः ॥ ४९ ॥

வேத்யோ வைத்யஸ் ஸதாயோகீ வீரஹா மாதவோ மது:
அதீந்த்ரியோ மஹாமாயோ மஹோத்ஸாஹோ மஹாபல: 49

163. வேத்ய: - உணரப்பட வேண்டியவர்.

*இம்மையிலும் மறுமையிலும் மேன்மையை விரும்புபவர்கள் மேன்மைக்கான வழி எது, மேன்மை எது என்பதனை உணரவேண்டும். இதில் குழப்பமின்றி மேன்மைக்கான வழியாகவும் அடைய வேண்டிய இடமாகவும் உணரத்தக்கவர். உணர முனைந்தவருக்கு எளிதில் உணர்வில் புலப்படுபவர்*[2] *(163)*

164. வைத்ய: - அறிவாளி.

*அறியத்தக்கதனைத்தையும் அறிந்தவர் வைத்ய:. வித்யாஸ்தானங்கள் எனப் புகழ் பெற்ற அறிவுத்துறைகள் (சு. 8) அனைத்தையும் அறிந்தவர்.*[3] *தன்னை உணர்ந்தவனின் துன்பத்தை (நோயை)க் களைவதற்கான வழியும் அறிந்தவர். (நா. 579) (164)*

165. ஸதாயோகீ - எப்போதும் தன்னிலையில் இருப்பவர்.

*தன்னிலையில் கூடியிருத்தல் - தன்னிலை விட்டுப் பிரியாதிருத்தல் யோகமாகும். (நா. 17) ஈசன் தன் தன்மைகளாகிய*

1. यः सर्वाणि भूतान्यन्तरो यमयति। (बृ. आ. ३. ७. १५)
2. वेदैरनेकैरहमेव वेद्यः। (कैवल्य २२) वेदैश्च सर्वैरहमेव वेद्यः। (गीता १५. १५)
3. ईश्वरः सर्वविद्यानां। (तै. आ. १०. २१)

கல்யாண குணங்களிலிருந்தும் ஸத் சித் ஆனந்தம் என்ற நிலையிலிருந்தும் விலகாதவர். யோகசாதனையால் மனநிலையை ஆத்ம தத்துவத்தில் நிறுத்திவைப்பவன் யோகி. பகவானே எப்போதும் இயற்கையாகத் தன் நிலையில் இருப்பவர். சஞ்சலத்திற்கு உட்படுத்துகின்றதனைத்தும் இவரை பாதிப்பதில்லை. பேரறிவு வடிவினராதலால் இந்த யோகம் தானே அமைகிறது. எப்போதும் தனது சக்திகளைப் பயன்படுத்த வல்லவர். எப்போதும் விழிப்புடன் இருப்பவர். நாம் தூங்கும் போதும் விழித்திருக்கின்ற அந்தர்யாமியாயிருப்பவர்.[1] (165)

166. வீரஹா - வீரர்களை அழிப்பவர்.

தன்னறிவை ஒருமுகப்படுத்திக் குறிப்பிட்ட செயலில் முனையச் செய்பவர்கள் வீரர்கள். இது சிறந்த செயல் திறமையைக் கொடுக்கும். ஆனால் இந்தத் திறமையைக் கெட்ட வழியில் பயன்படுத்துகின்ற அரக்க குணம் படைத்தவர்களை வீரர்களாயினும் ஈசன் அழித்துவிடுவார். ஈசனை அறிய உதவாததும் ஈசனை அறியத் தடையாயிருப்பதுமான அறிவு எவ்வளவு கூரானதாயினும் தவிர்க்கத் தக்கதே. அத்தகைய அறிவு வேடம் பூண்ட அறியாமையை அழித்து அகற்றுபவர். அரக்கர்களையும் அறியாமையையும் அழிப்பது தர்மவரம்பைக் காப்பாற்றுவதற்காகவே. (166)

167. மாதவ: - பிரும்ம வித்யைக்கு நாயகர்.

மா - ஸ்ரீ: - "ருசோ யஜூம்ஷி ஸாமானி. ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்" வேதங்களே நல்லோர்களின் அழிவற்ற செல்வம். பேரறிவாகிய பரம்பொருளைப் பற்றிய அறிவைத் தருவதால் அவை வேதங்கள். பரம்பொருளைப் பற்றிய அறிவு பிரும்ம வித்யை. அதனால் உணர்த்தப்பெறும் நாயகர். மௌனம் தியானம் யோகம் என்ற மூன்றால் உணரப்பெறுபவர். (நா. 72, 735) (167)

168. மது: - தேனைப்போல் இனியவர்.

சக்கையும் வெகுட்டலுமின்றி ஒவ்வொரு அணுவிலும் இதமான இன்பம் தரும் இனிப்புடையது தேன். அதுபோல் இனியவர். அறிவாளிகளுக்கு இனியவர்.[2] எதிரிக்கும் இனியவர்.

---

1. य एष सुप्तेषु जागर्ति। (कठ ५. ८)
2. असौ वा आदित्यो देवमधु अयमात्मा सर्वेषां भूतानां मधु... (छा ३.१.१) (बृ. आ. २. ५. १४. १९)

எதிரிகள் கூட இறைவனின் கைகளால் அழிபடுவதைப் பெரும் பேருக இனியதாக மதிப்பர். ஸூர்யனைத் தேவர்கள் பருகுகிற தேனாக உபாசிக்கிற மது வித்யையால் உணரப்பெறுபவர். (168)

169. அதீந்த்ரிய: - பொறிகளுக்கு அப்பாற்பட்டவர்.

உருவமைப்பும் நிறமும் குணமும் உள்ளவைகளே கண் முதலிய பொறிகளுக்குப் புலப்படும். உருவம் முதலியவை அற்ற ஈசன் புலனுணர்ச்சிக்ககப்படாதவர். புலனுக்கப்பாற்பட்ட உள்ளுணர்வால் உணரப்பெறுபவர்.[1] (169)

170. மஹாமாய: - பெருமாயையுள்ளவர்.

உண்மை நிலை அறியமுடியாதபடி மயக்குவது மாயை. இருப்பதை இல்லாததாக, இல்லாததை இருப்பதாக, ஒன்ருக இருப்பதை வேருென்ருக, பொருந்தாததைப் பொருந்துவதாகக் காட்டுவது மாயை. இந்த மாயையை ஸித்தி செய்து அதன் மூலம் மயக்கி வசப்படுத்துகிற சிறந்த மாயாவிகளை மயக்கும் மஹா மாயையைக்கொண்டவர்.[2] ஒன்றை மறைக்க மறைக்க அதனைக் காணும் ஆவல் அதிகமாகும். பக்தனின் ஆர்வத்தைத் தூண்டத் தன்னைப் பெரிதும் மறைத்துக்கொள்பவர். (170)

171. மஹோத்ஸாஹ: - பெரும் உற்சாகமுள்ளவர்.

பகவானது உற்சாகம் அளவு கடந்தது. தனக்கெனச் செயல் ஒன்றுமில்லாத ஈசன் உலகின் படைப்பிலும் காப்பிலும் லயத்திலும் பெரும் உற்சாகத்துடன் முனைந்துள்ளவர். தனக்கு மிக்காரில்லாதவரானதால் தன்னிச்சைப்படி செயலாற்றுவதில் உற்சாகம் கரைகடந்துள்ளது. (171)

---

1. इन्द्रियेभ्यः परा ह्यर्था... अव्यक्तात्पुरुषः परः। अशब्दमस्पर्शमरूपमव्ययं तथारसं नित्यमगन्धवच्च यत्। (कठ १.३.१०.११.१५)

2. विद्यात् मायिनं तु महेश्वरम्। (श्वेताश्वतर ४. १०) अतिमोहकरी माया मम (शरभ २४) मम माया दुरत्यया (गीता ७. १४) एतदेव ब्रह्मापि सर्वज्ञं महामायं महाविभूति। (नृसिंहोत्तरतापिनी ५. ३) तत्सङ्कल्पानुसारिणी विविधा अनन्ता महामायाशक्तिः सुसेविता अनन्तमहामायाजालजननमन्दिरा महाविष्णोः क्रीडाशरीररूपिणी। (त्रिपाद्विभूति ४. १३)

172. மஹாபல: - பெரும்பலமுள்ளவர்.

*பிறர் உதவியின்றி செயல்படுகிற வலிவுமிக்கவர். வலிவுமிக்க இரண்யகசிபு, ராவணன் முதலானோரை விட வலிவு மிக்கவர். ராவணன் பாதாளத்தை ஜயிக்க பலி வசிக்கிற ஸுதலம் சென்றான். பலியின் அரண்மனை வாயிற்காப்பாளராக நின்ற பகவான் மறைந்துவிட்டார். ராவணன் பலியின் வீட்டு வாசலில் கிடந்த வளையம் ஒன்றை நகர்த்த முற்பட்டான். அது பலியின் முன்னோரான இரண்யகசிபுவின் குண்டலம். நிருஸிம்ஹரின் கையறைதலால் காது கிழிந்து தெறித்து விழுந்தது. ராவணனின் இரு கைகளும் வளையத்தினடியில் மாட்டிக் கொண்டன. பகவான் நாராயணன் தோன்றிக் காலால் ராவணனை உதைத்தெறிந்தார். பல்லாயிரம் காதங்கள் தாண்டி ராவணன் விழுந்தான். (பாகவதம். 5-24-27, ராமாயணம் உத்தரகாண்டம்). இரண்யகசிபு, ராவணன் முதலிய வலிவுமிக்கவர்களை விட வலிவுள்ளவர்.*

*தேவாசுரப் போரில் தேவர்கள் வெற்றி பெற்றுச் செருக்கடைந்து நின்றபோது, பரம்பொருள் யக்ஷ வடிவில் தோன்றி எதனையும் எரிக்கவல்ல அக்னியைத் தான் போட்ட புல்லைக்கூட எரிக்க முடியாதவாறு செய்தும், எல்லாவற்றையும் விண்ணில் பறக்கவிடும் சக்தி படைத்த வாயுவைப் புல்லை நகர்த்த முடியாதபடி செய்தும், இந்திரனுக்கு உமாதேவி நேராகக் காட்டியும் எல்லோருடைய பலத்திற்கும் மூல பலமாயுள்ளது பரம்பொருளே என (கேநோபநிஷத்தில் 3, 4) உணர்த்தப் பெற்றபடி வலிவுமிக்க தேவர்களை விட வலிவுமிக்கவர். (172)*

महाबुद्धिर्महावीर्यो महाशक्तिर्महाद्युतिः ।
अनिर्देश्यवपुः श्रीमानमेयात्मा महाद्रिधृक्[1] ॥ ५० ॥

மஹாபுத்திர் மஹாவீர்யோ மஹாஶக்திர் மஹாத்யுதி:
அநிர்தேஶ்யவபுஶ் ஸ்ரீமாநமேயாத்மா மஹாத்ரித்ருக்.[1] 50

1. महाद्रिधृत् *மஹாத்ரித்ருத் (பா).*

173. மஹாபுத்தி: - பெரும் புத்தியுடையவர்.

*அந்த:கரணங்கள் எனப்பெறுபவை நான்கு. மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என. இது இருந்தால் நல்லது, இதனைப் பெறலாம் என்ற எண்ணம் ஸங்கல்பம். செயலாற்றுமுன் இதனைப் பெற்றால் 'நல்லதா கெட்டதா' என்று சஞ்சலப்பட்டுப் பல முனைகளில் சிந்திப்பது விகல்பம். ஸங்கல்பமும் விகல்பமும் மனத்தின் செயல். மனப்போக்கை ஏற்று ஆராய்ந்து 'இது நல்லதே, ஏற்போம்' என்றோ; 'இது கெட்டது, தவிர்ப்போம்' என்றோ நிச்சயிப்பது புத்தியின் செயல். முன் ஏற்பட்ட எண்ணப் பதிவுகளிலிருந்தும் குறிப்பெடுத்து முன் அனுபவத்தைப் புத்திக்குப் படம் காட்டுவது சித்தம். 'நான் செய்வேன், என்னால் முடியும்' என்ற ஜீவனின் தன்மானம் முன் நின்று செயல் துறையில் இறங்குவது அஹங்காரம்.* **(மநோ புத்திரஹங்கார: சித்தம் கரணம் ஆந்தரம், ஸம்சயோ நிச்சயோ கர்வ: ஸ்மரணம் விஷயா: அமீ''** *இவற்றில் புத்தியே அதிகம் உதவக் கூடியது. புத்திசாலிகளுக்குள் சிறந்தவர். எல்லோரது புத்திக்கும் புத்திசக்தியாயிருப்பவர். புத்தியை அல்பமான விஷயத்தில் ஈடுபடுத்தினால் அல்ப புத்தியாகிறது. பெரும்விஷயத்தில் ஈடுபடுத்த மஹா புத்தியாகிறது. பகவான் மிகப்பெரிதான உலகத்தின் படைப்பிலும் காப்பிலும் ஈடுபடுத்துவதால் மஹா புத்தியாகிறது. (நா. 769)*

*பேரறிவு பெற்றவர். இவ்வறிவிற்குப் பொறிகளின் உதவி தேவையில்லை. அந்தக்கரணத்தின் (மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் ஆகியவற்றின்) பரிசீலனைக்கு இது உட்படாதது. இறைவனிடம் இயற்கையாகவே அமைந்தது. கல்வி கேள்விகளால் ஏற்பட்டதல்ல. ஸர்வஜ்ஞர் என்ற பெருமையைத் தரும் பேரறிவுபெற்றவர். (173)*

174. மஹாவீர்ய: - பெரும் வீர்யமுடையவர்.

*எதனையும் எதிர்த்து நின்று விரும்பியபடி செயலாற்றுகிற திறமை வீர்யம் எனப்படும். அப்படி முதன் முதலாக ஆற்றிய செயல், மூல ப்ரகிருதியை மகத் எனும் தத்துவமாக ஆக்கி உலகின் தோற்றத்தைத் தொடங்கி வைத்ததாகும். மாயையே பகவானது மிகச் சிறந்த வீர்யம். படைத்தவன் யார் எனபதையே மறைக்கும் மஹாமாயை அது. மாயையால் உலகம் தொடங்கிற்று. உலகத்தைத் தோற்றுவித்த பெருவீர்யமுள்ளவர் (நா. 60)*

*தனது நெருக்கம் காரணமாகவே பல மாறுதல்களை ஏற்படுத்துவதும் தான் அதனால் பாதிப்புறாமல் இருப்பதும் மனம் கலங்காதிருப்பதும் இந்திரியப் போக்கைக் கட்டுப்படுத்துவதும் வீர்யமாகும். இதனைப் பெருமளவில் பெற்றவர் பகவான். (174)*

175. மஹா சக்தி: - பெரும் சக்தி படைத்தவர்.

*நினைத்துப்பார்க்க முடியாதவாறு, பொருத்த வொண்ணாததைப் பொருத்திச் செயல் வடிவில் வந்த பிறகே ஊகிக்கப் பெறும் செயல் திறமை சக்தியாகும். தன்னில் சிறு பங்கால் மாபெரும் உலகை உண்டாக்கியதும், சிலந்தி போன்று தன்னிடமிருந்தே உலகைத் தனிப் பொருளாகப் படைத்து அதில் தங்கிப் பின் தன்னுள்ளே மறைத்துக்கொள்வதும் அவரது பெரும் சக்தியின் விளக்கங்கள். (175)*

176. மஹாத்யுதி: - பேரொளி பெற்றவர்.

*பிற விளக்க ஸாதனங்களின்றி தன்னைத் தானே விளங்கச் செய்கிற பேரொளி த்யுதியாகும். உள்ளும் புறமும் வேறுகலப்பின்றி பரவி நிற்கும் ஒளியே வடிவானவர்.[1] இந்தப் பேரொளி உள்ளும் புறமுமுள்ள இருளனைத்தையும் நினைத்தவுடன் அழித்துவிடும். ஸூர்யன் முதலிய ஒளி மண்டலங்களின் ஒளி இதன் சிறு அம்சமே.*

*மஹா என்ற அடைமொழியுடன் 47 நாமங்கள் உள்ளன. அவற்றில் மஹோத்ஸாஹ: மஹாபல: மஹாபுத்தி: மஹாவீர்ய: மஹாசக்தி: மஹாத்யுதி: என்று தொடர்ந்து வரும் இந்த ஆறு நாமங்களும் முறையே ஐச்வர்யம், பலம், ஞானம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்ற ஆறு குணங்களும் மற்றவர்களிடம் காண முடியாதபடி அளவிடமுடியாத பெருமளவில் பகவானிடம் உள்ளதைக் குறிப்பிடுகின்றன. இந்த ஆறு குணங்களின் கூட்டு சக்தியே மாயை. அவரிடம் அதுவும் மிகப் பெரிது. (மஹாமாய:) என்று பகவானின் குணங்களை ஒருங்கே ஏழு நாமங்கள் விளக்குகின்றன. (176)*

177. அநிர்தேச்யவபு: - குறிப்பிட இயலா வடிவினர்.

இது இத்தகையது எனப் பிறர்க்குச் சுட்டிக்காட்டமுடியாதபடி, உள்ளுணர்வால் மட்டும் உணரத்தக்க வடிவம் கொண்டவர்.

1. स्वयं ज्योतिः (बृ. उ. ४. ३. ९. १४) ज्योतिषां ज्योतिः। (मुण्डक २. २. ९)

*அழகும், செயலும், சக்தியும் பெருமையும் அளவுகடந்திருப்பதால் சிற்றறிவால் உணர முடியாதவர். உவமையாலோ அனுமானத் தாலோ உணர்த்த முடியாதவர். பொறிக்காட்சிக்கு வடிவம் உட்படாதாகையால் பிரத்யக்ஷ அனுபவத்திலும் வராதவர். (நா. 656) (177)*

**178. ஸ்ரீமான் - மாபெரும் பெருமை பெற்றவர்.**

*ஸ்ரீ: - பேராளுமை, பெருமை. அதிசயிக்கத்தக்கவாறும். வேறிடத்தில் காண முடியாதவாறும், அளவிட முடியாதவாறும் உள்ள பெருமையுள்ளவர். தனிச் சிறப்புடன் காணும் திவ்விய அணி வகை பூண்டு காந்திமிக்கவர். (நா. 22, 220, 613) (178)*

**179. அமேயாத்மா - அளவிற்குட்படாத அறிவுள்ளவர்.**

*ஆத்மா - அறிவு. கடல் போல் ஆழ்ந்த பரந்த அறிவுள்ளவர். (நா. 46, 102, 248). பகவானது எண்ணம், செயல் திட்டம், அதனை நிறைவேற்றுவதற்கான திறமை இவை எதையும் அளவிடமுடியாது. (179)*

**180. மஹாத்ரித்த்ருக் - பெரு மலையைத் தாங்கக் கூடியவர்.**

*இந்திரன் பிரளய காலத்தில் மேகங்களைக்கொண்டு கோகுலத்தை அழிக்க முற்பட்டபோது கண்ணன் விளையாட்டாகக் கோவர்த்தனத்தைப் பெயர்த்துக் குடையாகப் பிடித்தார். கோவத்தனம் சிறுமலை. பிரளயமழையைத் தாங்குமாறு அதனைப் பெருமலை (மஹாத்ரி)யாக்கினார். தேவர்கள் அமிருதத்திற்காகத் திருப்பாற்கடலைக் கடைய மத்தாகப் பயன்டுபடுத்தப்பட்ட மந்தர மலை கடல் நீரில் ஆழ்ந்த போது ஆமை வடிவில் அடியில் சென்று தாங்கினார். மந்தரமலை கடையும் போது நொருங்கிச் சிதறியதும் அதற்கு வலியூட்டி அதனையும் பெருமலை (மஹாத்ரி) யாக்கினார், அமேயாத்மாவாக இருப்பதால், (நா. 180) பிறரது அறிவிற்கும், ஊகத்திற்கும், எட்டாதவாறு அவரால் பெரு மலையைத் தாங்க முடிந்தது. மஹாத்ரித்த்ருக் - என்ற பாடத்தில் (மஹாத்ரயே த்த்ருஷ்ணோதி) பெருமலையைத் தாங்கக் கூடியவர். மஹாத்ரித்த்ருஷே நம:. மஹாத்ரித்த்ருத் - மஹாத்ரித்த்ருதே நம: (மஹாத்ரிம் தரதி) - பெரு மலையைத் தாங்குபவர். (180)*

**महेष्वासो महीभर्ता श्रीनिवासः सतां गतिः ।**

**अनिरुद्धः सुरानन्दो गोविन्दो गोविदां पतिः ॥ ५१ ॥**

மஹேஷ்வாஸோ மஹீபர்த்தா ஸ்ரீநிவாஸ: ஸதாம் கதி:
அநிருத்தஸ் ஸுராநந்தோ கோவிந்தோ கோவிதாம் பதி: 51

181. மஹேஷ்வாஸ: - பெரிய வில்லாளி.

*சார்ங்கம் என்ற பெரு வில் திவ்ய சக்தி படைத்தது. கண்வர் தவம் செய்தபோது அவர் மேல் புற்று மூடி மேல் மூங்கில் முளைத்தது. தவத்திற்குப் பலனளிக்க வந்த பிரும்மா அந்த மூங்கிலை மூன்று வில்களாக ஆக்கினார். பிநாகத்தைச் சிவபெருமானிடமும், சார்ங்கத்தை நாராயணனிடமும், காண்டீவத்தை வருணனிடமும் தந்தார். (பாரத - அனுசாஸன 141) அந்தப் பெரு வில்லான சார்ங்கத்தை நாணேற்றி அம்பைச் செலுத்துபவர். இறைவனின் பெருஞ்செயல்களில் இதுவும் ஒன்று. வில்லாளிகளில் சிறந்த ஸ்ரீராமனாக தனது விற்போர்த் திறனைக் காட்டியவர். (நா. 71, 76, 857, 996) (181)*

182. மஹீபர்த்தா - பூமியைத் தாங்குபவர்.

*கடலில் ஆழ்ந்துவிட்ட பூமியை வராஹமூர்த்தியாக நின்று தாங்கியவர். இந்த விரிந்த உலகம் (மஹீ) மணல் குன்று போல் சிதறாமல் ஆதார சக்தியாக நின்று அதன் வடிவில் நிலைத்து நிற்கும்படி தாங்குபவர். உலகில் வாழும் உயிரினத்தை வாழ்வளித்துக் காப்பாற்றுபவர். (நா. 235, 317, 369, 751) (182)*

183. ஸ்ரீநிவாஸ: - லக்ஷ்மீதேவியின் இருப்பிடமானவர்.

*லக்ஷ்மீ நிம்மதியுடன் வாழுமிடமாகத் தன்மார்பை ஆக்கிக்கொண்டவர். திருப்பாற்கடலிலிருந்து வெளிப்பட்ட தேவி திருமார்பின் அழகால் ஈர்க்கப்பெற்றவளாக அதில் அமர்ந்தவள், இமைப்பொழுதும் அங்கிருந்து அகலுவதில்லை. (நா. 602, 607) (183)*

184. ஸதாம் கதி: - நல்லோர்கள் அடையுமிடம்.

*நல்லதை அறிந்து அதனை நல்ல முறையில் கடைபிடிப்பவர்கள் ஸத்புருஷர்கள். வேதநெறிப்படி நடப்பவர்கள். அவர்கள் வாழ்க்கைப் பயனாகச் சென்றடைய விரும்புவது பகவானின் திருவடிகளே. தன்னை வழிபடுபவரிடம் பரிவுடன் தன்னை அடைய வழிகாட்டித் தன்னை காட்டுபவர். இறைவனை உணர்ந்தவர் அவரைத் தவிர வேறொன்றை விரும்புவதில்லை. (நா. 450, 699) (184)*

185. அநிருத்த: - தடையுறுதவர்.

*பகவான் ராமன், கிருஷ்ணன் என்று பல வடிவங்கள் எடுத்து அவதாரப் பணிகளை நிறைவேற்றும்போது அவரை எவரும் தடுத்து நிறுத்த முடிந்ததில்லை. அப்படித் தடையுறுத சக்தி உள்ளவர். எல்லையற்ற செயலாற்றல் உள்ளவர். (நா. 138, 638) (185)*

186. ஸுராநந்த: - தேவர்களை மகிழ்விப்பவர்.

*நற்செயலில் நாட்டமுள்ள தேவர்களிடம் பகவானுக்கு அளவுகடந்த பிரியம். நல்லதைத் தருவதில் நாட்டம் கொண்ட தேவர்களுக்கு அம்ருதம் பகிர்ந்து மகிழ்வித்தவர். (186)*

187. கோவிந்த: - பூமியை அடைந்தவர்.

*படைப்பின் தொடக்கத்தில் சென்ற இடமறியாதபடி கடலில் ஆழ்ந்து மறைந்துவிட்ட பூமியை வராஹமூர்த்தியாகச் சென்றடைந்தவர். (காம் அவிந்தத்) தேவர்களின் துதிக்குரலுக்கு அகப்படுபவர். வேதமோதுதலால் அடையக் கூடியவர். கிருஷ்ண ராம ! எனப் பக்தியுடன் பெயரிட்டுக் கூப்பிடுதலால் அடையக்கூடியவர். (நா. 539) அவர்கள் கூப்பிடும் தூரத்தில் இருப்பவர். கோவர்த்தனம் தாங்கிப் பசுக்களைக் காப்பாற்றியதும் எமக்கு நீரே இந்திரன் எனப் பசுக்களால் முடிசூட்டப்பட்டவர். (கவாம் இந்திர:) (நா. 138, 151) (187)*

188. கோவிதாம் பதி: - வேதமறிந்தவர்களின் தலைவர்.

*வேதத்தைத் தன் உடமைப் பொருளாகக் கொண்டவர்களைக் காப்பாற்றுபவர். வேதமறிந்த ஞானிகளின் ஞானயஜ்ஞத்தால் மகிழ்ந்து அவர்களை நல்வழி அடையும்படி செய்பவர். (188)*

मरीचिर्दमनो हंसस्सुपर्णो भुजगोत्तमः ।
हिरण्यनाभस्सुतपाः पद्मनाभः प्रजापतिः ॥ ५२ ॥

மரீசிர் தமநோ ஹம்ஸஸ் ஸுபர்ணோ புஜகோத்தம:
ஹிரண்யநாபஸ்ஸுதபா: பத்மநாப: ப்ரஜாபதி: 52

189. மரீசி: - ஒளிக்கதிராயிருப்பவர்.

*ஒளியின் கேந்திரத்திலிருந்து புறப்பட்டு விளக்க வேண்டியதைச் சென்றடையும் ஒளியானது கதிர் வடிவில் இருக்கும். மரீசி: - ஒளிக்கதிர், ஒளிவட்டம். சூடும் வெளிச்சமும்*

அதன் சிறப்பு. கதிரில் கதிரின் வடிவை விட சூடும் வெளிச்சமுமே அதிகம். ஒளி மிக்கவர்களிடத்திலுள்ள ஒளி வட்டமாகவும். தேஜஸ் மிக்கவர்களிடத்தில் தேஜஸ்ஸாகவும் இருப்பவர். மரீசி என்ற மஹரிஷியாயிருப்பவர். (189)

190. தமந: - அடக்கி ஆள்பவர்.

தன் நிலே தவறி தனது கடமை மறந்து பிழை செய்பவர்களைத் திருத்தி அடக்குபவர்; குற்றம் புரிபவர்களை அரசன், யமன் முதலியவர்கள் வடிவில் தண்டிப்பவர்.[1] தன் ஒளி பரப்பி ஸம்ஸார தாபத்தை சமனம் செய்பவர். (190)

191. ஹம்ஸ: - பரமாத்மா.

'அஹம் ஸ:' 'ஸோ (அ) ஹம்' என்று நான் அவரே, அவரே நான் என்ற பாவனை ஜீவனையும் பரம்பொருளையும் ஒன்றுபடுத்தும். இந்த பாவனை திடப்பட்டு உணர்வளவில் மெய்ப் பொருளாகும்போது ஸம்ஸாரத் துன்பம் அழிந்துவிடுகிறது. ஸம்ஸார பயத்தை நீக்குகின்ற ஸோஹம் - ஹம்ஸ: என்ற பாவனையால் உணரப்பெறுகிற பரமாத்மா - ஹம்ஸ:.[2]

ஹம்ஸ: - அன்னபட்சி, தூய்மைக்கும், வெண்மைக்கும், மென்மைக்கும் உதாரணம். பாலும் நீரும் கலந்து கொடுத்தாலும் பாலைப் பருகும், நீரை விட்டுவிடும் என்பர். எத்தனை கலப்பிருந்தாலும் தூய பொருளை மட்டும் ஏற்பவர்கள், தூய சொல், தூயச் செயல், தூய எண்ணம் கொண்டவர்கள் பற்றற்ற துறவிகள், தூய்மைமிக்க ஞானிகள், ஹம்ஸர்கள் எனப்படுவார்கள். இவர்கள் வடிவில் இருப்பவர்.

எல்லா உடல்களிலும் உட்புகுந்து பிரகாசிக்கும் பரமாத்மா. அழகாக நடப்பவர், அழகாகச் சிரிப்பவர். பகவானுக்கு ஹம்ஸர் என்ற அவதாரம் உண்டு. (191)

192. ஸுபர்ண: - அழகிய சிறகுள்ளவர்.

அழகிய சிறகுகளுடன் கூடிய இரு பட்சிகள் என ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் குறிப்பிடுவர்.[3] பேரின்பம்,

1. सर्वभूतदमनाय नमः। (तै. आ. १० १८)
2. हंसश्शुचिषत् (कठ २. २. २)
3. द्वा सुपर्णा सयुजा सखाया। (श्वेताश्व ४. ६ मुण्ड ३. १. १)

*பேரறிவு என்ற இரு சிறகுகள் உள்ள அழகிய பட்சியாகக் குறிப்பிடப் பெறுகிறவர். அழகிய சிறகுகள் உள்ள கருடர். ''ஸுபர்ணோ(அ)ஹம் பதத்ரிணாம்'' (பாகவதம். 11-16-15) அழகிய சிறகுள்ள ஹம்ஸராக அவதரித்தவர். (நா. 855)* *(192)*

193. புஜகோத்தம: - பாம்புகளில் சிறந்தவர்.

*கால்களின்றித் தோள்களால் வளைந்து ஊர்ந்து செல்பவை புஜகா: - பாம்புகள். (புஜேந கச்சந்தி) (புஜ - வக்ரகதி) அவைகளில் சிறந்த ஆதிசேஷனாக இருப்பவர். புஜகமான ஆதிசேஷனின் (உத்தம:) மேல் இருப்பவர்.* *(193)*

194. ஹிரண்ய நாப: - அழகிய தொப்புளுள்ளவர்.

*பகவானுடைய தொப்புள் தங்கத்தைப் போன்று அழகியது. உலகப் படைப்பின் தொடக்கத்தில் உண்டான தங்கமயமான தாமரை வடிவிலிருந்த அண்டகோசத்தைத் தொப்புளில் கொண்டவர். (நா. 70)* *(194)*

195. ஸுதபா: - நல்ல தவமுள்ளவர்.

*பதரிகாச்ரமத்தில் தவமியற்றும் முறையைக் காட்டுவதற்கென நர நாராயணர்கள் வடிவில் சிறந்த தவமியற்றுபவர். மனமும் பொறிகளும் வெளிநாட்டமின்றி உள் நோக்குடன் ஒருமுனைப்பட்டு அடங்கி இருக்கும் நிலை அந்தத் தவம்.* *(195)*

196. பத்மநாப: - தாமரையை ஒத்த தொப்புளுள்ளவர்.

*தாமரையின் உட்புறம்போல் சிவந்ததும் ஆழ்ந்ததும் வட்டவடிவிலிருப்பதுமான நாபி உள்ளவர். இதயமாகிய தாமரையின் நாபியில் (நடுவில்) உள்ளவர். (நா. 48-346)* *(196)*

197. ப்ரஜாபதி: - நன்மக்களைக் காப்பவர்.

*பிரும்மாவையும் மற்ற மேன்மக்களையும் தந்தையாக இருந்து காப்பவர். (நா. 69)* *(197)*

**अमृत्युस्सर्वदृक् सिंहः सन्धाता सन्धिमान् स्थिरः ।**
**अजो दुर्मर्षणः शास्ता विश्रुतात्मा सुरारिहा ॥ ९३ ॥**

**அம்ருத்யுஸ் ஸர்வத்ருக் ஸிம்ஹஸ் ஸந்த்தாதா ஸந்த்திமான் ஸ்த்திர:.**
**அஜோ துர்மர்ஷணஶ் ஶாஸ்தா விஶ்ருதாத்மா ஸுராரிஹா. 53**

**198. அம்ருத்யு: - அழிவற்றவர்.[1]**

*பிறப்பற்றவர் அழிவற்றவராகிறார். மிருத்யு - மரணம், அதனைத் தருகின்ற யமன், இரண்டும் அவரிடம் நெருங்காது. அவர் மிருத்யுவிற்கு ம்ருத்யு. இவரைக் கண்டதும் மிருத்யு பயந்து ஓடுவான்.[2] (198)*

**199. ஸர்வத்ருக் - எல்லாவற்றையும் காண்பவர்.**

*செய்ததையும் செய்யவிருப்பதையும் செய்து கொண்டு இருப்பதையும் அறிபவர். இயற்கையாக அவரிடம் அமைந்த பேரறிவு இதற்கு உதவுகிறது. தனது கட்டளைகளை ஏற்று நல்வழியில் செல்பவரையும் செல்லாதவரையும் கண்காணிப்பவர். (நா. 94, 451)[3] (199)*

**200. ஸிம்ஹ: - ஹிம்ஸிப்பவர்.**

*தனது நினைவைப் பாபத்தை அழிக்கும் ஸாதனமாகக்கொண்டு பாபத்தை அழிப்பவர். அசுரர்களாகிய மான்களைக் கொல்கின்ற சிங்கமாயிருப்பவர்.[4] (நா. 488) (200)*

**201. ஸந்த்தாதா - சேர்த்து வைப்பவர்.**

*முன் செயலால் விளைந்த வினை, செயலுருவில் அழிந்தது. அதனது பயனாக வந்த துன்ப அனுபவத்தைப் பின்னர் பிறக்கவிருக்கின்ற உடலுடன் பொருத்தி அதனைப் பயன் பெறச் செய்பவர். அப்படிப் பாப பலனை அனுபவிக்கும் போது மறுபடி பாபச் செயலைச் செய்யத் தூண்டுவதும் புண்ய பலனை*

---

1. *பட்டர் உரைப்படி இந்த நாமத்துடன் இரண்டாவது சதகம் முற்றிற்று.*
2. मृत्युमृत्युं नमाम्यहम् (नृसिंहपूर्वतापिनी २.६) मृत्युर्धावति पञ्चमः। (तै. उ. २. ८)
3. स्वमहिम्ना सर्वान् लोकान् सर्वानात्मनः सर्वाणि भूतानि स्वयमनिन्द्रियोऽपि सर्वतः पश्यति। (नृसिंहपूर्व २. १२) सर्वस्य द्रष्टा ततः सर्वस्मादन्यो विलक्षणः। (नृसिंहोत्तर २. २)
4. सिंहोऽसौ परमेश्वरः। (नृसिंहोत्तर ४. ४.)

அனுபவிக்கும்போது மறுபடி புண்யச் செயலைச் செய்யத் தூண்டுவதும் அவரே.[1] சிங்கம் போல் எதிரியைக் குதறி அழிப்பவராயினும் தனது அன்புக்குகந்த அடியார்களை இணைத்துக்கொள்பவர். (201)

202. ஸந்த்திமான் - வினை பொருந்துவதை ஏற்பவர்.

முன் வினை தன்னை வந்தடைந்ததும் ஜீவனுக அதை ஏற்று அனுபவிப்பவர்[2] அதற்கெனத் தனக்கு அளிக்கப் பெற்ற உடல், பொறிகள், மனம், அனுபவிக்கத்தக்க போகப்பொருள்கள், அவற்றை அனுபவிக்கும் வாய்ப்பு இவற்றின் இணைப்பைப் பெற்றவர். ஸந்தி: - இணைப்பு. அன்புடைய அடியார்களிடம் ஏற்படுத்திக்கொண்ட இணைப்பை என்றுமிருப்பதாக ஆக்கிக்கொண்டவர். (202)

203. ஸ்த்திர: - என்றும் ஒரே நிலையில் உள்ளவர்.

தோன்றுதல், இருத்தல், வளர்தல், மாறுபடுதல், குறைதல், மறைதல் என்ற ஆறு மாறுபாடுகளும் இன்றி நித்யராக என்றும் ஒரே நிலையில் இருப்பவர்.

அடியார்களிடம் ஏற்பட்ட ஒட்டுதலை வேறு காரணம் கொண்டு மாற்ருமல், அடியார்கள் பின்னர் தன்னிடம் அபசாரம் செய்தாலும் அதனுல் மாற்றிக்கொள்ளாமல், என்றும் அன்பினுல் ஏற்பட்ட இணைப்பில் நிலைத்திருப்பவர். (203)

204. அஜ: - என்றும் அசைந்து கொண்டிருப்பவர்.

(அஜதி - செல்கிருன், சென்றடைகிருன். பொருளை விட்டெறிகிருன்.) பக்தர்களைச் சென்றடைவதற்காக அவர்கள் இருக்குமிடத்திற்குச் செல்பவர். அவர்களுக்கோ தனக்கோ துன்பம் தருபவர்களை நோக்கிக் கையில் கிடைத்ததை ஆயுதமாகக் கருதி விட்டெறிபவர். பிறப்பில்லாதவர். இயற்கை நியதியை ஒட்டி பிறக்காதவர். தன் தோற்றத்திற்கெனத் தனி வழியைக் கையாள்பவர்.[3] கர்ம பலனைக் கொடுப்பதற்கும் கொடுத்ததை

1. एष ह्येवैनं साधु कर्म कारयति, तं यमेभ्यो लोकेभ्य उन्निनीषते। एष उ एवैनमसाधुकर्म कारयति तं यमेभ्यो लोकेभ्यो नुनुत्सते। (कौषीतकी ३. ८)
2. अन्नादो वसुदानः (बृ. अ. ४. ४. २४)
3. स वा एष महानजः (बृ ४. ४. २४)

அனுபவிப்பதற்கும் எப்போதும் கர்மபலதாதாவாகவும் ஜீவனாகவும் சுறு சுறுப்பாக இயங்கிக்கொண்டிருப்பவர். (நா. 95, 521) (204)

205. துர்மர்ஷண: - அடக்கவோ, தாங்கவோ இயலாதவர்.

அவரை எதிர்த்து அடக்கவோ, அவரது எதிர்ப்பைத் தாங்கவோ, துச்சமென ஒதுக்கிவிடவோ முடியாத. பெரும் வலிவும் திடமும் உள்ளவர். (205)

206. ஶாஸ்தா - தன் ஆணைக்கு அடங்கச் செய்பவர்.

வேதம், ஸ்மிருதி முதலியவற்றால் நேர்வழி காட்டி அதில் நடக்கச் செய்பவர். நல்வழிப்படுத்துபவர். நேரான வழியைக் காட்டின பின்னரும் அந்த வழியில் செல்லாதவர்களை வலிய அடக்கி வழிபடுத்துபவர். 'கவிம் புராணம் அனுசாஸிதாரம்'. (கீதை. 8-9) ஒவ்வொருவரைப் பற்றியும் நன்கறிபவரானதால், அவரவருக்கேற்ற வழியைக் காட்டுபவர். தர்மசாஸ்தாவாக இருப்பவர். (206)

207. விஶ்ருதாத்மா - சிறப்பாக அறிமுகமானவர்.

பல வடிவங்கள் பல குணங்கள் பெற்றதாகப் பரம் பொருளைப்பற்றிப் பலவாறு கூறப்பட்டிருந்தும், இவற்றிற்கு மாறுபட்டு ஸத்ய - ஞான - ஆனந்த வடிவினராக ஒரே ஆத்மாவாகச் சிறப்பாக உபநிடதங்களில் அறிமுகப்படுத்தப்பட்டவர். 'நான் மனிதன்' நான் ஆண் பெண், நான் படித்தவன், என ஆத்மாவுடன் தொடர்பற்ற பலவற்றை ஆத்மாவுடன் இணைத்துப் பார்க்கின்ற அறியாமை தொன்று தொட்டிருந்தும் கூட, மஹான்களின் ஸங்கத்தால் உபநிடத உபதேசங்களால் உடல் முதலியவற்றுடன் யாதொரு ஸம்பந்தமும் இராத சுத்த ஆத்மாவாக அறிந்துகொள்ளப் பெற்றவர். ஆத்மாவைப் பற்றி நன்கு அறிந்து நேரிடையாக உணர்ந்துள்ள ஆத்மஞானியின் வடிவில் உள்ளவர். (விசேஷேண ச்ருத: ஜ்ஞாத: ஆத்மா யேந) "ஜ்ஞானீ த்வாத்மைவ மே மதம்" (கீதை 7-18). ஜீவனைக்காட்டிலும் வேறுபட்டவராக ஸர்வஜ்ஞர் ஸர்வசக்தர், ஸர்வநியந்தா என்றவாறு அறிமுகப்படுத்தப்பெற்ற ஈசுவரனாக இருப்பவர். புராண இதிஹாஸங்களில் பலவாறு புகழ்ந்து பாராட்டப் பெற்றவர். (207)

208. ஸுராரிஹா – தேவர்களின் எதிரிகளை அழிப்பவர்.

*தேவர்களின் எதிரிகள் தீய பணிகளில் ஈடுபடுபவர். தெய்வத் தன்மைக்கு எதிரிகள் - ஹிரண்யகசிபு முதலியவர்கள். அறவழிப் பாதுகாப்பிற்காக அந்தத் தீயவர்களை அழிப்பவர். (208)*

गुरुर्गुरुतमो धाम सत्यः सत्यपराक्रमः।
निमिषोऽनिमिषः स्रग्वी वाचस्पतिरुदारधीः॥ ५४॥

குருர் குருதமோ தாம ஸத்யஸ் ஸத்யபராக்ரம:
நிமிஷோऽநிமிஷஸ் ஸ்ரக்வீ வாசஸ்பதிருதாரதீ: 54

209. குரு: - உபதேசிப்பவர்.

*அறிந்தது கையளவு, அறியாதது உலகளவு. பிறந்ததிலிருந்து சிசுவிற்குத் தாய் ஒவ்வொன்றையும் அறிமுகப்படுத்துகிறாள். அவள் மூலம் அறிந்ததைத் தந்தை மேலும் விளக்கி அறிவூட்டுகிறார். அறிவு என்பது மேலேறிச் செல்லும் பாதை. தாயையும் தந்தையையும் தொடர்ந்து வருகின்ற குரு தாயும் தந்தையும் உணர்த்தியவற்றைப் பாகுபடுத்தி உண்மை நிலையைக் காட்டுகிறார். இம்மூவரையும் குரு எனக் கூறும் தர்ம நூல்கள் ஞான தாதாவான ஆசாரியனை உயர்ந்த குருவாகக் கூறுகின்றன.* "ஆசார்யஶ் ஶ்ரேஷ்ட்டோ குரூணாம்". *ஆனால் தாயை மிக்க குருவில்லை.* "மாதா இதி ஏகே மாதா இதி ஏகே" *என மேலும் விளக்கம் தருகிறது கௌதமரின் தர்ம நூல். (க்ருணாதி உபதிசதி) கல்வியைப் போதிப்பவர் வடிவில் உள்ளவர். (க்ருணாதி நிகிரதி அஜ்ஞானம்) அறியாமையை விழுங்கிவிடுபவர். - போக்குபவர்.*[1]

*அறிவால் கனத்தவர். நாம் அறியாததொன்றை விளக்கும்படி அவரைக் கோரும்போது அவரும் அதனை அறியாதவராகவோ, அதில் ஐயப்பாடு உள்ளவராகவோ இல்லாமல் அறிவால் கனத்து நமது ஐயப்பாடுகளையும் விபரீத ஞானத்தையும் போக்கி நல்வழிப்படுத்துபவர். சிஷ்யனின் அறியாமையால் அசைக்க இயலாத கல்வி கனம் உள்ளவர். அவரவரது வணக்கத்திற்குரியவர். உயர்ந்த குருவான விஷயத்தை*

1. गुरुः क इति। गुरुः साक्षादादिनारायणः। (त्रिपाद्विभूतिमहानारायणोपनिषत् ८. १५)

உணர்ந்தவர். அந்த குருவடிவில் உள்ளவர். குரு - தந்தை. எல்லோருக்கும் தந்தையாயிருப்பவர். பூதாநாம் யோ அவ்யய: பிதா. (சு. 16) (209)

210. குருதம: - மிகச் சிறந்த குரு.

வேதங்களை நான்கு முகங்களாலும் உபதேசிக்கின்ற பிரும்மா ஆதி குரு. உபவேதங்கள் வேதாங்கங்கள் முதலியவற்றை அவரே முதலில் உபதேச முறையில் சிஷ்யர்களுக்கு வழங்கினுர். "ப்ரும்ஹா ஸ்ம்ருத்வா ஆயுஷோ வேதம் ப்ரஜாபதிம் அஜிக்ரஹத்". (அஷ்டாங்கஹ்ருதயம் ஸூத்ர 1-2) ப்ரம்ஹணு ஹி யதாப்ரோக்தம் ஆயுர்வேதம் ப்ரஜாபதி: - ஜக்ராஹ" (சரகஸம்ஹிதை ஸூத்ர. 1-4) என ஆயுர்வேதக் கல்வித் துறை பிரும்மாவிடமிருந்து தொடங்குகிறது. இப்படி எல்லாக் கல்வித் துறைகளும் பிரும்மாவிடமிருந்தே தொடங்குகின்றன. அந்த பிரும்மாவிற்கும் வேதங்களை முன் தந்து வழி காட்டியவரானதால் நாராயணன் குருக்களில் மிகச்சிறந்த குருவாகிருர்.[1] வேதாந்தத்துறையின் ஆதி குருவாக அவரே வணங்கப் பெறுகிருர். "நாராயணம் பத்மபுவம் வஸிஷ்ட்டம் சக்திம் ச தத்புத்ரபராசரம் ச, வ்யாஸம் சுகம் கௌடபதம் மஹாந்தம் கோவிந்த யோகீந்த்ரமதாஸ்ய சிஷ்யம். ஸ்ரீ சங்கராசார்யம்" என. நாராயணன், பிரும்மா, வஸிஷ்டர், சக்தி பராசரர், வ்யாஸர், சுகர், கௌடபாதர், கோவிந்தபகவத்பாதர், ஸ்ரீ சங்கராசாரியர் என்று குருபரம்பரை செல்கிறது. விசிஷ்டாத்வைதத் துறையிலும் நாராயணனே ஆதிகுரு.

கல்வித்துறைகளில் பலவற்றைப் போதிக்கின்ற குருக்களை விடப் பன்மடங்கு சிறந்தவர் ஆத்ம தத்துவத்தை உணரச் செய்கின்ற குரு. அந்த மிகச் சிறந்த குருவாக கீதையை உபதேசித்த கண்ணன் முதலிய வடிவில் உள்ளவர்.

குரு:, குருதம:, என்ற இரு சொற்களையும் ஒரே நாமமாக ஸ்ரீ பட்டர் கொள்கிருர். எல்லாவித்யைகளையும் பிரும்மா முதலானவர்க்கு உபதேசித்த ஆசாரியர்களுக்கும் ஆசார்யர். (210)

211. தாம - ஜோதியாயிருப்பவர்.

தாம - பேரொளி, உறைவிடம். திரி, எண்ணெய், தீபம் போன்ற ஸாதனங்களை எதிர்பாராமல் தானுக எல்லாவற்றையும்

1. यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै। (श्वेताश्वतर ६. २८)

*விளக்குகின்ற உள்ளத்தில் உள்ள ஆத்ம ஜோதியாயிருப்பவர்.*[1] *எல்லா விருப்பங்களுக்கும் உறைவிடமானவர்.*[2] *எல்லா ஆசைகளின் எல்லை, பரமாத்மா. பரமாத்மானுபவம் ஏற்பட்டதும் இதுகாறும் இருந்த மற்ற எல்லா ஆசைகளும் ஆசையாகவே இல்லாமல் மறைந்து விடுகின்றன. சராசரங்கள் அனைத்தையும் ஆதாரமாக நின்று தாங்குபவர். பிரளய காலத்தில் ஒடுங்கிய உலகின் வித்துக்களுக்கு ஆதாரம்.* *(211)*

212. **ஸத்ய: - ஸத்தியமான சொல்லானவர்.**

*உண்மையான சொல்லே சிறந்த அறச்செயல். அது இறை வடிவம்.*[3] ஸத்தியமாகத் தோன்றும் இவ்வுலகத்திற்கு வியவஹார *காலத்தில் ஸத்தியத் தன்மையளிப்பவர். (106, 869) பிரளய காலத்தில் தன்னை அண்டிய ஸத்புருஷர்களான மனு முதலானவர்க்கு இதமளித்தவர். ஸத்ஸ⁻ஹித:* *(212)*

213. **ஸத்ய பராக்ரம: - வீணாகாதபடி தாக்குபவர்.**

*எதிரிகளைத் தாக்குகையில் தன் எதிர்ப்புச் செயல் வீணாகாதபடி எதிரிகளை மாய்த்தவர். நல்லோர்களுக்கு இதமான வீரச்செயல் கொண்டவர்.* *(213)*

214. **நிமிஷ: - மூடிய கண்கள் உள்ளவர்.**

*பிரளய காலத்தில் தனது மாயையாகிய திவ்யத் தன்மையுள்ள யோக நித்திரையில் கண்களை மூடிக்கொண்டு தனது வாஸு⁻தேவனாகிய பரம்பொருள் நிலையைத் தியானம் செய்துகொண்டு இருப்பவர்.* **'ஆத்ம மாயாமயீம் திவ்யாம் யோக நித்ராம் ஸமாஸ்த்தித:. ஆத்மாநம் வாஸு⁻தேவாக்ய்யம் சிந்தயந் மதுஸூதந:.** *(விஷ்ணு புராணம். 6-4-6). நல்லோர்களுக்கு எதிரானவர்களை நோக்காதவர். யோக மாயையின் சக்தியால்*

---

1. तस्यैष आत्मा विशते ब्रह्म धाम। स एवैतत्परमं ब्रह्म। (मुण्डके ३. २. १-४) नारायणपरो ज्योतिः (तै. आ. १०. १३) यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम। (गी. १५. ६)
2. अस्मिन् कामाः समाहिताः। (छान्दोग्य ८. १)
3. तस्मात्सत्यं परमं वदन्ति। (तै. आ. १०. ७९) तद्यत्तदेतया वाचा अभिव्याह्रियते सत्यमिति। (कौषीतकी १. ३) प्राणा वै सत्यं, तेषामेव सत्यम्। (बृ. आ. २. १. २०)

*உலகைத் தாங்குவதற்குக் கண்கள் முதலிய பொறிகளைப் பயன்படுத்தாதவர். காலப்பிரிவான நிமிட மாயிருப்பவர் (214)*

215. அநிமிஷ: - கண்களை மூடாதவர்.

*நல்லோரை - உலகைக் காப்பதில் கருத்துடன் எப்போதும் விழித்திருப்பவர். பிரளய காலத்தில் தன்னுள் ஒடுங்கியதனைத்தையும் விதைவடிவில் காப்பதற்காக ஓடத்திலிட்டுப் பிரளயக் கடலில் நீந்துகின்ற இமைப்பாது காப்பற்ற கண்களுள்ள மீன் வடிவில் இருந்த மத்ஸ்ய மூர்த்தி. தேவர்களும் இமைப்பதில்லை. அந்த தேவர்கள் வடிவில் இருப்பவர். மற்றவர்கள் ஒடுங்கி அடங்கியப் பிரளய வேளையில் தான் மட்டும் அடங்காமல் விழித்திருப்பவர்.[1] நிமிடம் போன்ற காலப்பிரிவற்றவர். (215)*

216. ஸ்ரக்வீ - அழகிய மாலையுள்ளவர்.

*பகவானது கழுத்தின் அணியாக விளங்கும் மாலை வைஜயந்தி எனப்பெறும். ஐந்து பூக்களாலானது. ஸூக்ஷ்ம பூத நிலையிலுள்ள ஐந்து பூததந்மாத்திரங்களையே பூக்களாக்கிக் கழுத்தில் எப்போதும் சிறப்பாக அணிந்துள்ளார்.* "பஞ்சஸ்வரூபா யா மாலா வைஜயந்தீ கதாப்ருத:. ஸா பூதஹேதுஸங்காதா பூதமாலா ச வை த்விஜ *(விஷ்ணு புராணம். 1-22-72) உலகை ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களாக்கி அதனை மாலையாகக் கழுத்திலணிந்த மத்ஸ்ய மூர்த்தியாக இருப்பவர். (216)*

217. வாசஸ்பதி: உதாரதீ: - பேரறிவாளரான கல்விப் பாதுகாப்பாளர்.

*சொல்லை வீணாக்காமல் காப்பவரே சிறந்த பேச்சாளர். அவரே தான் பெற்ற கல்வியை நல்ல முறையில் பயன்படுத்துபவர். இதற்குத் தகுதி பெறுவதற்கு அறியவேண்டியதனைத்தையும் அறிந்திருத்தல் அவசியம். கடந்ததையும் நிகழவிருப்பதையும் அறிந்து ஸர்வஜ்ஞனாக இருப்பவர். தான் அறிந்ததைப் பிறர்க்குப் போதிக்கும் வள்ளல் மனம் படைத்தவர். உதாரதீ:. சிறந்த பேச்சாளராக சொல் அளந்து பேசும் திறமையால் தான் கற்றதைக் காப்பவர். பேசும் சக்தியை அருள்பவர்.[2] வாசஸ்பதி: உதாரதீ:*

1. य एष सुप्तेषु जागर्ति (कठ ५. ८)
2. न वाचं विजिज्ञासीत, वक्तारं विद्यात्। (कौषीतकी ३. ८)

*என்ற இரு சொற்களும் சேர்ந்து ஒரே நாமம். வாசஸ்பதயே உதாரதியே நம:.*

*வாசஸ்பதி:, உதாரதீ: என்று ஸ்ரீ பட்டர் உரைப்படி இரு நாமங்கள். மத்ஸ்யாவதாரத்தில் ஸத்யவ்ரதருக்கு ஸ்ருஷ்டிதத்துவத்தை உபதேசித்து வேதப்பொருளை உணர்த்தியவர், வேதவாக்கைக் காத்தவர் - வாசஸ்பதி: வாசஸ்பதயே நம:. எல்லோரது அறிவுக்கும் புகலிடமான பேரறிவாளர் உதாரதீ:. உதாரதியே நம: (217)*

अग्रणीर्ग्रामणीः श्रीमान्न्यायो नेता समीरणः ।
सहस्रमूर्धा विश्वात्मा सहस्राक्षः सहस्रपात् ॥ ५५ ॥

அக்ரணீர் க்ராமணீஃ ஸ்ரீமான் ந்யாயோ நேதா ஸமீரண:
ஸஹஸ்ரமூர்த்தா விஶ்வாத்மா ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத் 55

218. அக்ரணீ: - மேலான நிலைக்கு அழைத்துச் செல்பவர்.

*துக்கக் கலப்பற்றதும் பரமானந்த நிலையுமான மேலான அவரது பரமபதத்தை கருணையால் தானே முன்நின்று அடையச் செய்பவர்.* ஸர்வேஷாமக்ரணீர் விஷ்ணு: *(பாரதமோக்ஷ தர்மம்) (218)*

219. க்ராமணீ: - உயிர்த்தொகுதியை வழிப்படுத்துபவர்.

*க்ராம: - தொகுப்பு இனம், கூட்டம். உயிரினத்தை இனவாரியாகப் பிரியச் செய்து அவர்களது தலைவனாகத் தானாகிக் கட்டுப்படுத்தி நல்வழிப்படுத்துபவர். ஒரு கூட்டத்தைக் கட்டுப்படுத்துகின்ற சக்தி ஈச்வராம்சம் பெற்றவனுக்கே கிட்டும்.* 'யத் யத் விபூதிமத் ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா. தத்ததேவ அவகச்ச த்வம் மம தேஜோம்ச ஸம்பவம்' *கீதை. 10-41) நித்திய ஸித்தர்களை வழிகாட்டி அழைத்து செல்பவர். (219)*

220. ஸ்ரீமான் - சிறந்த காந்தியுள்ளவர்.

*எங்கும் காண முடியாத சிறப்புடைய காந்தி - திருமேனி ஒளி கொண்டவர். (நா. 22, 178, 613) வெளிப்படையாகத் துலங்கும் பெருமையுள்ளவர். (220)*

221. ந்யாய: - பகுத்தறிவாலான யுக்தியாயிருப்பவர்.

*முன்னின்று பெருங்கூட்டத்தை அழைத்துச் செல்வதற்குள்ள தகுதி மக்களின் நன்மையைப் பிரமாணங்களுடன் பகுத்தறிந்து யுக்தியுடன் மனத்திற்படும்படி உரைப்பவனுக்கே உண்டு. யுக்தியுடனுற்றும் உரை - எதிர்வாதத்தால் அசைக்க முடியாத உரை, பகவானின் அம்சமே. தன்னைச் சார்ந்தவர்கள் நிலை தவருதபடி நியாய நிலையாக அவர்களின் உள்ளத்தில் நிற்பவர். (221)*

222. நேதா - உலகை நடத்திச் செல்பவர்.

*பிறந்ததிலிருந்து மறையும் வரை வினை காரணமாகத் தன்னிச்சைப்படி எதனையும் நடத்திக்கொள்ள முடியாத உயிரினத்தை - ஒன்ருெடொன்று பிணையும்படி செய்து உலகமாகிய பெரும் யந்திரமாக்கி அதனை ஓட்டுவிப்பவர். நல்லோர்களைப் பிறவிக் கடல் தாண்டச் செய்பவர். நியாயமாக நின்று முன்னேக்கி அழைத்துச் செல்பவர். (222)*

223. ஸமீரண: - உந்தி எழச் செய்பவர்.

*பல்வேறு அசைவுகளால் வாழ்வு உருப்பெறுகிறது. அந்த அசைவுகளைப் பிராணவாயு உந்தி எழச் செய்கிறது. இயக்கங்கள் அனைத்தையும் தூண்டி எழச் செய்யும் பிராணவாயுவாயிருப்பவர்.*[1]

*மத்ஸ்யாவதாரத்தில் உலகின் விதையை ஓடத்தில் வைத்து வாயுவாகி அந்த ஓடத்தைச் செலுத்தியவர். நேதாவாக முன்னின்று அழைத்துச் செல்பவரே ஒதுங்கிப் பின் நின்று தூண்டி மக்களைத் தானே முன்னேறச் செய்கிருர் (ஸமீரயதி - ப்ரேரயதி) உலகம் தானியங்கியாக இந்தத் தூண்டுதல் இன்றியமையாதது. பிராணசக்தியாக சுவாஸ வாயுவாக வாயுவாக இருந்து உடலின் இயக்கங்களைத் தூண்டுபவர். (223)*

224. ஸஹஸ்ர மூர்த்தா - ஆயிரக்கணக்கான தலைகள் உள்ளவர்.

*விராட் வடிவில் தன்னைப் பலவாக ஆக்கிக்கொண்ட இறைவன் பல்வேறு உயிரினங்களாகப் பிரிந்தபோது அவரிடம்*

1. पृथगात्मानं प्रेरितारं च मत्वा। (श्वेताश्वतर १. ६)

ஆயிரக்கணக்கான உயிரினங்களின் உறுப்புகள் காணப்பெற்றன. அவற்றில் ஞானக்கிரியாசக்திகளின் இருப்பிடமான தலைகளும், கண்களும், கால்களும் சிறப்புடன் தோன்றின. அவைகளை ஸஹஸ்ர மூர்த்தா, ஸஹஸ்ராக்ஷ:, ஸஹஸ்ரபாத் என்ற நாமங்கள் விளக்குகின்றன. சிசு தோன்றும்போது கருவில் முதலில் தோன்றுவதும் தாயின் வயிற்றிலிருந்து முதலில் வெளியாவதும் தலை. அதனால் அதனை முதலில் குறிப்பிடுகின்றனர்.[1] (224)

225. விச்வாத்மா - எல்லா உயிரினத்திற்கும் ஆத்மா.

தாவரம், ஜங்கமம் எனப் பிரிந்த எல்லா உயிரினத்திற்கும் ஆத்மாவாக, உலகம் எனப் பலவாகத் தோன்றுவதனைத்திற்கும் நிலைக்களனாகத் தோன்றுபவர்.[2] (225)

226. ஸஹஸ்ராக்ஷ: - ஆயிரக்கணக்கான கண்களுள்ளவர்.

விராட்புருஷனின் வடிவில் ஆயிரக்கணக்கான உயிரினங்களின் கண்களுடன் கூடியவர்.[3] உலகையே உடலாகக் கொண்ட அவருக்கு உலகில் உள்ள அனைவரின் கண்களும் கண்களாகின்றன. (226)

227. ஸஹஸ்ரபாத் - ஆயிரக்கணக்கான கால்களுள்ளவர்.

விராட் புருஷனின் வடிவில் ஆயிரக்கணக்கான உயிரினங்களின் கால்களுடன் கூடியவர். (227)

आवर्तनो निवृत्तात्मा संवृतस्संप्रमर्दनः ।
अहस्संवर्तको वह्निरनिलो धरणीधरः ॥ ५६ ॥

ஆவர்தநோ நிவ்ருத்தாத்மா ஸம்வ்ருதஸ் ஸம்ப்ரமர்த்தந:
அஹஸ் ஸம்வர்தகோ வஹ்நிரநிலோ தரணீதர: 56

1. सहस्रशीर्षा पुरुषः। सहस्राक्षः सहस्रपात्। सर्वाननशिरोग्रीवः। सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम्। (श्वेताश्वतर ३.११.१४. १६) सहस्रशीर्षं देवम्। (तै. आ. १०. १३)
2. विश्वात्मानं परायणम्। (तै. आ. १०. १३)
3. विश्वतश्चक्षुरुत विश्वतोमुखो विश्वतोबाहुरुत विश्वतस्पात्। (तै. आ. १०. १) नमो अस्तु नीलग्रीवाय सहस्राक्षाय मीढुषे। (श्रीरुद्राध्यायः)

**228. ஆவர்தந: - வாழ்வின் சக்கிரத்தைச் சுழலச் செய்பவர்.**

*வாழ்வின் ஒருநொடிப்பொழுதும் ஒருநிலையில் நீடித்திருப்பதில்லை. வினை, ஸத்வம் முதலிய முக்குணங்கள்,இயற்கை என்ற சக்திகள், பிறப்பு - இறப்பு - இரவு - பகல், சுகம் - துக்கம் என்றவாறு மேலும் கீழுமாக வாழ்வைச் சுழற்றுகின்றன. அந்த சக்திகள் வடிவில் வாழ்வுச் சக்கிரத்தைச் சுழலச் செய்வதையே தனது உரிய தொழிலாகக் கொண்டவர். உலகின் முளையாகி, பூமி, கிரஹங்கள் முதலியவற்றைத்தன்னைச் சுற்றிவரும்படி செய்த விஷ்ணுபதமானவர். (228)*

**229. நிவ்ருத்தாத்மா - வாழ்வுச்சுழலில் சிக்காதவர்.**

*வாழ்வுச் சுழலில் உயிரினமனைத்தையும் சிக்கவைத்துக் கட்டுப்படுத்துகின்ற பகவான் தான் அதில் கட்டுபடாதவராக அதற்கு வெளியில் நிற்கிறார். சேற்றில் சிக்காதவனே சேற்றில் சிக்கியவனை மீட்கவோ சிக்கவைக்கவோ முடியும்.*

*பகவானின் பூர்ண ஸ்வரூபத்தில் கால்பங்கான விராட் வடிவைக் கடந்த முக்கால் வடிவம் கொண்டவர். (நா. 61,) (229)*

230. ஸம்வ்ருத: - மறைக்கப் பெற்றவர்.

*சுழலில் சிக்க வைத்தவன் யார் எனப் புலப்படாதபடி மறைந்திருப்பவர். விராட் வடிவில் மறைந்திருப்பவர். வினை முக்குணங்கள் இயற்கை முதலியவற்றின் மூலம் நேரிடையாக உணரமுடியாதபடி சூரியனை மேகம் மறைப்பதுபோல் அவித்யையால் மறைக்கப்பெற்றவர். மேகத்தின் மறைப்பால் ஒளிகுன்றாத சூரியன் போல் அவித்யை மறைப்பால் ஒளி குன்றாதவர்[1] (230)*

**231. ஸம்ப்ரமர்த்தந: - நன்கு உருவைச் சிதைப்பவர்.**

*வாழ்வுச் சுழலில் ஒருபுறம் புதுப்புது உருவைத் தந்து வாழ்வின் பல நிலைகளை உணரச் செய்ததுபோல், இயற்கை, காலன், ருத்திரன் என்ற பல வடிவங்கள் மூலம் உருத்தெரியாதபடி சிதைப்பவர். தன்னையே சரணடைந்து தன்னை உணரமுற்பட்டவர்களின் அவித்யையையும் உருக்குலைத்து மறைப்பை அகற்றுபவர்.*

---

1. तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं (कठ २. १२)

அழிப்பதற்குப் பல வழி முறைகளைப் பகவான் அமைத்திருக்கிறார். உண்ணும் உணவும் காற்றும் மழையும் ருத்திரனின் பாணங்கள் என வேதம் கூறும்[1] மக்களைக் காப்பாற்ற வந்த உணவும் காற்றும் மழையுமே அழிப்பவைகளாகவும் ஆகின்றன. அழிக்கின்ற நிலையில் அவை பயங்கரத் தோற்றங்களைப் பெறுவதால் அவை ருத்திர கணங்களின் ஆயுதங்கள். அப்படிப் பல வகைகளில் நசுக்கி அழிப்பவர். (231)

232. அஹஸ் ஸம்வர்தக: - பகலைத் திரும்பத் திரும்ப வரச் செய்பவர்.

பகலை நன்கு தொடங்கச் செய்து நற்பொழுதைத் தோற்றுவிப்பவர். தனது ஆணையின் அடிப்படையில் ஸூர்யன் பூமண்டலத்தின் சுழற்சிக்கேற்பப் பகலையும் இரவையும் இடைவிடாது மாறி மாறித் தருகிறார்.[2] நொடி முதலிய அனைத்துக் காலவரைகளும் கால புருஷனை இறைவனிடமிருந்து தோன்றியவையே. பகலும் இரவுமாக மாறி மாறி வந்து ஆயுள் குறையச் செய்வது பகவானின் அழிப்புத் தொழில் முறை. (232)

233. வந்ஹி: - சுமந்து கொடுப்பவர்.

உலகை சுமப்பவர் - வந்ஹி:. அக்கினியிலிட்ட ஆஹுதிப் பொருளை மந்திரத்தால் குறிப்பிடப்பட்ட தேவதை வரை சுமந்து செல்கிற (வஹதி) அக்னி பகவான் வந்ஹி:. உலகியல் எளிதில் நிறைவேற வேள்விகளில் அர்ப்பணம் செய்யப்பட்டதைச் சுமப்பதையும் தனது பணியாக்கிக் கொண்டவர்.[3] காலவரையாகச் சுழன்று உயிரினத்திடம் சேர வேண்டியதைச் சேர்த்துப் பிரிக்கவேண்டியதைப் பிரித்து எடுத்துச் செல்பவர். சூட்டால் சேர்க்கவும் பிரிக்கவும் உதவுகிற நெருப்பாக இருப்பவர். (233)

234. அநில: - பூமியை ஆதாரமாகக் கொள்ளாதவர்.

பூமி முதலியவை உலகில் தோன்றியவைகளுக்கு ஆதாரமாயுள்ளன. பூமி தோன்றிய பிறகு தோன்றியவற்றிற்குப் பூமி ஆதாரமாகலாம். அநாதியாக தோற்றம் என்ற ஒரு நிலை

1. येषामन्नं वातो वर्षमिषवः (श्रीरुद्रप्रश्ने)
2. भीषोदेति सूर्यः। (तै. आ. २. ८) तत्सूर्यस्तदु चन्द्रमाः। सर्वे निमेषा जज्ञिरे विद्युतः पुरुषादधि। कला मुहूर्ताः काष्ठाश्चाहोरात्राणि सर्वशः। (तै. आ. १०. १)
3. देवेभ्यो हव्यं वह नः प्रजानन्। (तै. ब्रा. २. ५८)

இல்லாத முதல்வனுக்கு பூமி முதலியவை ஆதாரமாகா. இலா - பூமி (அவித்யமாநா இலா ஆச்ரயதயா) பூமி முதலிய ஆதாரமற்றவர்.

வாக்கு முதலிய கர்மேந்திரியங்கள் பிராணனில் அடங்குகின்றன. அந்த பிராணன் முதலிய வாயுக்கள் (அந) பகவானிடம் ஒடுங்குகின்றன. பிராணவாயு தன்னுள் எல்லாவற்றையும் ஒடுக்கிக் கொள்வது போல் வாயு முதலியவற்றையும் தன்னுள் ஒடுக்கிக்கொள்கிற பகவான் வாயு (அநில) போன்றவர். வாயு தூய்மையற்றதுடன் கலந்தாலும் தான் ஒட்டாதிருப்பதால் தூய்மை கெடுவதில்லை. அது போல் பரமாத்மாவும் ஒட்டா திருப்பதால் கெடுவது இல்லை (ந நிலாதி ஆதத்தே புண்யம் பாபம் வா).

சிசுவான ஆஞ்ஜநேயர் ஸூர்யனைப் பழமாகக் கருதிப் பிடிக்கச் சென்றபோது இந்திரனின் வஜ்ரத்தால் அடிபட்டு விழுந்தார். வாயு கோபத்தால் ஒளிந்துகொண்டார். உலகம் ஸ்தம்பித்தது. பிரும்மா வாயுவை ஸமாதானப்படுத்தி ஆஞ்ஜநேயரையும் உயிர்ப்பித்து எந்நிலையிலும் ஒளிந்துகொள்ள முடியாதவாறு வாயுவை நியமனம் செய்தார். (அநில: ந நிலீயதே) பகவானும் எந்நிலையிலும் ஒளிந்துகொள்ளமுடியாது. இவர் ஒளிவதற்கேற்ற இடமில்லை.[1] அழிவில்லாதவர், (ந நிலீயதே நச்யதி) மறைவில்லாதவர், மாயையற்றவர், வாழ வைப்பவர், (அநயதி) (நா. 812)

கூட்டின் மூலம் பிரிக்கவும் சேர்க்கவும் உதவுகின்ற நெருப்பிற்கு உற்ற துணை காற்று. நெருப்பின் மூலம் நடக்கின்ற வஹனம் (அசைவு) வாயுவால் நிகழ்கின்றது. வஹ்நியாயிருப்பவரே வாயுவாகவுமிருக்கிறார்.[2] (234)

235. **தரணீதர: - பூமியைத் தாங்குபவர்.**

உயிரினமனைத்தையும் தாங்குவதால் பூமி - தரணீ. அதனையும் சிதையாமலும் நலிவுறாமலும் ஆதிசேஷர் முதலிய வடிவில் தாங்குபவர், பூமியை ஆதாரமாகக்கொள்ளாதவர் (நா. 234) பூமிக்கு ஆதாரமாகிறார்.[3] (நா. 182, 238, 317, 369, 751). (235)

1. अनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दते। (तैत्तिरीय २. ७)
2. तदेवाग्निस्तद्वायुः (तै. आ. १०)
3. धरणी लोकधारिणी। उद्धृतासि वराहेण। (तै. आ. १०. ८)

सुप्रसादः प्रसन्नात्मा विश्वधृ[1]ग्विश्वभुग्विभुः ।
सत्कर्ता सत्कृत[2]स्साधुर्जह्नुर्नारायणो नरः ॥ ५७ ॥

ஸுப்ரஸாத: ப்ரஸந்நாத்மா விச்வத்த்ருக்[1] விச்வபுக் விபு:
ஸத்கர்தா ஸத்க்ருதஸ்[2]ஸாதுர் ஜந்ஹுர் நாராயணோ நர: 57

236. ஸுப்ரஸாத: - நல்லருள் புரிபவர்.

*ப்ரஸாத: - அருள், கனிவு, பரிவு, தெளிவு, நிம்மதி. வேறொரு எதிர்பார்த்தலின்றி நன்மையை அருள்பவர். விருப்பு - வெறுப்புகளால் கலங்காமல் நன்கு தெளிந்தவர். தன்னைத் துன்புறுத்த விழைந்தவரும், தவறிழைத்த ஈரம்கூடக் காயாதவருமான சிசுபாலன் முதலானோருக்கும் தன் பதமளித்துக் காத்தவர். இந்த விருப்பு வெறுப்பற்று அருள் புரியும் மாண்பை அடுத்த நாமம் விளக்குகிறது. (236)*

237. ப்ரஸன்னாத்மா - தெளிந்த மனமுள்ளவர்.

*விருப்பு, வெறுப்பு முதலியவற்றால் ரஜோகுணம் தமோகுணம், இவற்றின் பாதிப்பு மனத்தைக் கலக்கிக் குழப்பமடையச் செய்கிறது. அடையத் தக்கதனைத்தையும் இயற்கையில் பெற்றவர். (அவாப்த ஸமஸ்த காம:). ஆகையால் விருப்பு வெறுப்பு பாதிப்புமில்லை. அதனால் எப்போதும் தெளிந்த மனமுடையவர். பரிவு உள்ளவர். (237)*

238. விச்வத்த்ருக் - உலகை ஆளும் பிரபு.

*உலகையும் உலகை ஆள்பவர்களான பிரம்மாதியரையும் தனது ஞானம் ஐச்வர்யம் முதலிய சிறப்புகளால் அடக்கி ஆள்பவர். உலகை ஆளும் மனத்திட்பம் கொண்டவர். விச்வஸ்ருட் என ஸ்ரீ பட்டர் உரைப்படி எந்த எதிர்பார்த்தலுமின்றி லீலையாக உலகம் உய்வதற்காக உலகைப் படைத்தவர். (விச்வத்த்ருஷே நம: - விச்வஸ்ருஜே நம:) (238)*

239. விச்வபுக் - உலகை காப்பவர்.

*உலகைக் காப்பவரும் (விச்வம் புநக்தி) பிரளய காலத்தில் உலகைத் தன்னுள் ஒடுக்குவதற்காக உண்பவரும் (விச்வம் புங்க்தே) அவரே[3] (239)*

---

1. विश्वसृट् விச்வஸ்ருட் *(பா)* 2. सत्कृतिः *ஸத்க்ருதி: (பா)*
2. प्रभुः प्रीणाति विश्वभुक्। (तै.आ. १०. १२)

240. விபு: - பல சிறப்புத் தோற்றங்கள் உள்ளவர்.

*எங்கும் நீக்கமற நிரம்பி இருத்தலால் அவர் விபு.[1] விராட், ஹிரண்யகர்ப்பர் முதலிய சிறந்த வடிவங்களில் தோன்றுபவர். (நா. 320) இறைத்தன்மையைத் தானே வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்ற பல வடிவங்கள் (விபூதி) கொண்டவர் எனத் தன்னைக் கண்ணன் கீதையில் (அ. 10) விளக்குகிறார். (240)*

241. ஸத்கர்தா - பூஜிப்பவர்.

*உலக ரீதியை ஒட்டி வணங்கத்தக்க நன்மக்களை மதிப்பவர்.* 'பஹுஶ்ருதாநாம் வ்ருத்தாநாம் ப்ராம்ஹணாநாம் உபாஸிதா' *(ராமாயணம். 2-2-33) கல்வி கேள்வியறிவிற் சிறந்தவர்கள், மிக வயதானவர்கள், ஒழுக்கம் மிக்க அந்தணர்கள் இவர்களை ராமர் வழிபடுவார். அறிமுகமில்லாதவர்களையும் மதித்து விருந்தளிப்பதும் நல்லதல்லாததையும் நல்லதாக ஆக்குவதுமான ஸத்காரம் செய்பவர். (241)*

242. ஸத்க்ருத: - வழிபடப் பெற்றவர்.

*தம்மால் மதிக்க பெற்றவர்களாலும் பக்தியால் மதிக்கப் பெற்றவர். ராமர், கிருஷ்ணர் முதலிய அவதாரங்களில் உலக முறையை ஒட்டி வணங்கத்தக்கவர்களை பகவான் வணங்கும்போதே பகவானின் பெருமையை நன்கு உணர்ந்த பெரியோர்கள் பகவானைவிட வயதாலும் மற்ற நிலைகளாலும் தாம் பெரியோர்களாயிருப்பதைக் கருதாமல் பகவானை வணங்கி எழுவர். சிரத்தையுடன் தனக்குச் செய்யப் பெற்ற வழிபாடு மிக எளியதாயினும் அதனை முழுவதும் ஏற்று திருப்திப்படுபவர். ஸத்க்ருதாய நம:. ஸத்க்ருதி: என்ற பாடம் உண்டு. வழிபாடும் நற்செயலும் அவரே. ஸத்க்ருதயே நம:. (242)*

243. ஸாது: - நேர்மையுள்ளவர்.

*உலக முறையிலும் வேதம் முதலிய தர்ம நூல்கள் காட்டிய முறையிலும் ஒப்பப்பட்ட நேர்மையான வழியில் முனைந்து செல்பவர். அதனால் இடையூறின்றி தான் எடுத்த எல்லாப் பணிகளையும் நிறைவேற்றுபவர். (ஸாத்நோதி ஸாதயதி கார்யம்)*

1. महान्तं विभुमात्मानं (कठ २. २२) नित्यं विभुं (मुण्डके १. १. ६)

*(நா. 255) பாண்டவர் முதலானவர் கோரியபடி தூது, ரதம் ஓட்டுதல் முதலிய எத்தகைய பணிகளையும் முழு ஈடுபாட்டுடன் முயன்று நிறைவேற்றுபவர். (243)*

244. ஜந்ஹ: - மறைப்பவர்.

*பகீரதன் கங்கையைக் கொணரும்போது அதனை வழியில் மறைத்தமையால் புகழ் பெற்றவர் ஜந்ஹு என்ற முனிவர். அது போல் இந்த விரிந்த உலகைப் பிரளய காலத்தில் வெளித்தோன்றுதவாறு தன்னுள் ஒடுக்கி மறைப்பவர். (ஜநாந் - ந்ஹதே). தன்னை உணராதவர்களை விட்டுவிட்டுத் தன்னை உணர்ந்தவர்களைத் தனது பரம பதத்தில் சேர்ப்பவர். (ஜஹத் - நும்ச). பிறர் தனக்கிழைத்த தீங்கை மறைத்துக் காப்பாற்றுபவர். (244)*

245. நாராயண: - தன்னிடமிருந்து தோன்றியதையே தன் இருப்பிடமாகக் கொண்டவர்.

*நர: - ஆத்மா. அதிலிருந்து ஆகாசமும், ஆகாசத்திலிருந்து வாயுவும் இப்படி வரிசையாக ஒவ்வொரு தத்துவமாக விளக்கம் பெற்றபின் வெளியானதே இந்த காரிய வடிவில் உள்ள உலகம். அது நாரம் - நரனிடமிருந்து தோன்றியது. காரணமான பகவான் அந்த நாரத்தைத் தன் அயனம் - இருப்பிடமாகக்கொண்டு அதில் நிறைந்திருப்பவர்.[1] நரர்களான ஜீவர்கள் ஒடுங்குமிடம்.[2] நரன் எனப்படும் ஆத்மாவிடமிருந்து தோன்றிய ஆகாசம் முதலிய ஐந்து பூதங்களும் ஒன்றோடொன்று நன்கு கலந்து (பஞ்சீகரணம் அடைந்து) வெளித்தோற்றம் பெறுமுன்னர், தனித் தனியாக இருந்தன. அவை 'காரணோதகம்', 'அப்' எனப்படும். (ஆபோ நாரா: - மனு 1-10). அந்த மூல தத்துவங்களின் உட்புகுந்து அவற்றைத் தன்னிடமாக்கிக் கொண்டு படைப்பைத் தொடங்கியவர். விளங்கா மூலநிலையில் - அவ்யக்த நிலையில் இருந்த மூலப்பிரகிருதிக்கும் முற்பட்டவர் - "நாராயண: பரோ அவ்யக்தாத்." (பிரும்மாண்ட புரணம்) நாராயண என்ற நான்கு எழுத்துள்ள நாமம் ஸம்ஸாரமாகிய கோரமான விஷத் தீண்டலைப்*

1. यच्च किञ्चित् जगत्सर्वं दृश्यते श्रूयतेऽपि वा।
अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः॥ (तै. उ. ३. १)
2. यत्प्रयन्त्यभिसंविशन्ति। तद्ब्रह्म। (तै. उ. ३. १)

*போக்கவல்ல சிறந்த நாமம். பன்னிருவ்யூஹத் திருநாமங்களில் ஒன்று (ப. 29) நரன் - சரமும் அசரமுமாயுள்ள சரீரம் படைத்த இந்த உலகம். இந்த சராசர சரீரங்களின் உள்ளே எப்போதும் துலங்குபவர், பேரறிவொளியால் எல்லாவற்றையும் துலக்கும் ஜீவனுன ஆத்மாவானவர் நாரர். அவரைத் தன் இருப்பிடமாகக் கொண்ட அந்தர்யாமியான பரமாத்மா நாராயணர். ஸூர்ய மண்டலத்தின் நடுவில் காயத்ரீ மந்திர தேவதையாகத் தியானம் செய்யப் பெறுபவர்.* (த்த்யேய: ஸதா ஸவித்ருமண்டல மத்த்யவர்தீ நாராயண:) *பதரிகாசிரமத்தில் தவமிருக்கின்ற இரட்டையரில் ஒருவர். (245)*

246. நர: - வழி நடத்துபவர்.

*ஜீவனை நற்செயலில் ஊக்குவித்து நல்வினைப் பயனை அடையச் செய்பவர். (ந்ருணுதி - நயதி). நரர் நாராயணர் என இரு வடிவங்கள் கொண்டு பதரிகாசிரமத்தில் தவம் செய்து உலகிற்குக் கடுந்தவமுறையைப் போதிக்கின்ற இருவரில் ஒருவர். நாராயணர் கண்ணனுகவும், நரர் அர்ஜுனனுகவும் தோன்றினுர்கள். ஜீவாத்மாவாக, சராசர சரீரமாக இருப்பவர். (நா. 245) (246)*

असंख्येयोऽप्रमेयात्मा विशिष्टः शिष्टकृच्छुचिः ।
सिद्धार्थस्सिद्धसङ्कल्पः सिद्धिदस्सिद्धिसाधनः ॥ ५८ ॥

அஸங்க்க்யேயோऽப்ரமேயாத்மா விஶிஷ்டஶ் ஶிஷ்டக்ருத் ஶுசி:
ஸித்த்தார்த்தஸ் ஸித்த்தஸங்கல் பஸ்ஸித்த்திதஸ் ஸித்த்திஸாதந: 58

247. அஸங்க்க்யேய: - குறிப்பிடத்தக்கது எதுவுமில்லாதவர்.

*இன்னுரெனக் குறிப்பிடத் தேவைப்படுகின்ற பெயர், குணச்சிறப்பு, எண்ணிக்கை, வடிவமைப்பு முதலியவை இல்லாமையாலும் எண்ணிறந்த வடிவங்கள் கொண்டவரானதாலும் இன்னுர்தான் இவர் எனக்குறிப்பிட முடியாதவர். (247)*

248. அப்ரமேயாத்மா - மனத்தில் பதியாத வடிவம் கொண்டவர்.

*கண்கள் முதலியவை பார்க்கப்படுபவற்றின் உருவம் முதலியவற்றை மனத்தில் பதிக்கின்றன. இந்த மனப்பதிவே பொருளுணர்வைத் தருகிறது. வடிவமும், நிறமும், மணமும் ஏனைய சிறப்புகளும் அற்றவரானதால் கண்கள் முதலிய பொறிகளுக்குப் பொருளாகாதவர். பொறிகள் ஏற்காமையால்*

மனப்பதிவில் வராதவர். மனதால் உணரப் பெருதவர்[1] (நா. 46, 102, 179) (248)

249. விசிஷ்ட: - கட்டிற்குள் அகப்படாதவர்.

கட்டுப்பாட்டிற்கு உட்படுபவை - சிஷ்டம். உலகில் உள்ள அனைத்துப் பொருளும் சிஷ்டமே, அவற்றிற்கு மேம்பட்டவர்,[2] கட்டுப்பாட்டிற்கு உட்படாதவர். அவற்றைப் பார்க்கிலும் தனிச் சிறப்புள்ளவர். சிஷ்டர் - நல்ல ஒழுங்குடன் தனித் தன்மையுடன் வாழ்பவர். அவர்களில் தனிச் சிறப்பு பெற்ற விசிஷ்டர். (249)

250. சிஷ்டக்ருத் - கட்டுப்படுத்துபவர்.

சிஷ்டம் - கட்டளை, ஒழுங்கு முறைக்குள் கொணர்தல். அதனைச் செய்பவர் - நல்வழிப்படுத்துபவர். ஒழுங்கு முறையைத் தீவிரமாய் கடைபிடிக்கச்செய்து சிஷ்டர்களாக ஆக்குபவர். சிஷ்டர்களுக்கு அவரவர் நெறி தவருமல் தனித் தன்மையுடன் வாழ்கின்ற மன வலிவு தந்து காப்பாற்றுபவர். (250)

251. சுசி: - தூயவர்.

உள்ளம், உடல், செயல் அனைத்திலும் மாசிலாதவர். எப்போதும் தூய்மையுள்ளவர். தூய்மையுள்ளவராக இருப்பதால்தான் விசிஷ்டராகவும் சிஷ்டக்ருத்தாகவும் ஆக முடிகிறது என்பதை மூன்று நாமங்களும் விளக்குகின்றன. (251)

252. ஸித்தார்த்த: - வேண்டியது கை கூடியவர்.

தூயவரானதால் தடையின்றி விரும்பியதைப் பெறுபவர். அர்த்தம் - வேண்டப்பெறுவது, நல்வாழ்க்கைக்கு இன்றியமையாததாகி எப்படியாவது அடையத் தூண்டுவது. மனிதன் இந்த அர்த்தத்திற்குக் கட்டுப்பட்டவன். பகவானது விருப்பங்கள் எப்போதும் நிறைவேறியவை. நிறைவேற்ற வேண்டியவையல்ல. (அவாப்தஸமஸ்தகாம: - பூர்ணகாம:)[3] வேண்டத்தக்கவை அனைத்தும் முன்னதாகவே அமைந்திருப்பதால்

1. अप्रमेयमनाद्यं च (अमृतबिन्दु ९)
2. विश्वत: परमं नित्यं (तै. आ. १०. १३)
3. सत्यकाम: (छा. उ. ८. १. ५)

அவரால் வேண்டக் கூடியதும் ஒன்றுமில்லை. உணவில்லாதவன் உணவை விரும்பிப் பெற நினைப்பான். உண்டவனும், உணவை நிறையக் கையில் வைத்திருப்பவனும் உணவைத்தேடமாட்டான். *(252)*

253. ஸித்தஸங்கல்ப: - **எண்ணம் கூடியவர்.**

விரும்பியதொன்றை அடையத் திட்டமிடுவது ஸங்கல்பம், ஒழுங்கான திட்டம், (ஸம்யக் - கல்ப:) திட்டமிட்டதை முயற்சியால் பெறவேண்டும் பகவான் நினைத்தது நினைத்தவுடன் தானே நிறைவேறும். திட்டத்திற்கும் காரிய சித்திக்கும் இடையே இடைவெளி இருக்காது.[1] பகவானது வசத்தில் இல்லாத பொருளிருக்க முடியாது. ஹிரண்யகசிபு போன்ற வர வலிவு மிக்க கொடிய அசுரர்களை மாய்க்க இறைவனது ஸங்கல்பம் நொடியில் நிறைவேறியது. மற்றவரது திட்டம் அவரது வசத்தில் இல்லாத காலதேசவர்த்தமானங்களை ஒட்டி அமையவிருப்பதால் நிறைவேறுவது கடினம். பகவானுக்கு காலம் முதலியவைகளின் பாதிப்பு இல்லை. *(253)*

254. ஸித்தித: - **செயல் நிறைவை அளிப்பவர்.**

செயல் புரிபவர்களின் செயலாற்றலுக்கும் நேர்மைக்கும் தகுதிக்கும் ஏற்பப் பலனளித்துச் செயலை நிறைவுறச் செய்பவர். அணிமா முதலிய எட்டு சித்திகளை யோக முறையில் தேர்ந்தவர்களுக்கு அளிப்பவர். **அணிமா** - வடிவை அணுவாகச் சிறிதாக்கிக் கொள்வது. **மஹிமா** வடிவை மிகப்பெரியதாக்கிக் கொள்வது. **கரிமா** - உடலைக் கனக்கச் செய்வது. **லகிமா** உடலைத்துரும்பைப்போல் லேசாக்கிக்கொள்வது. **ப்ராப்தி:** எட்டாத இடத்தில் இருப்பதையும் பெறுவது. **ப்ராகாம்யம்** தடையுறுமல் விருப்பம் நிறைவடைவது. **ஈசித்வம்** பேராளுமை. **வசித்வம்** - பௌதிகப்பொருளனைத்தையும் தனது வசத்தில் கொள்வது. இவை அந்த எட்டு சித்திகள். *(254)*

255. ஸித்திஸாதந: - **செயல் நிறைவை முடித்துத் தருபவர்.**

வாழ்க்கையில் நாம் கோருபவை பல. வாழ்க்கைக்குரிய அன்றாடத் தேவை பற்றியோ வாழ்வின் முன்னேற்றத்திற்கான

1. सत्यसंकल्पः (छान्दोग्य ८. १. ५)

புலனடக்கம் பெறுவதுபற்றியோ ஆத்மஞானம் பெறுவது பற்றியோ திட்டமிட்டுச் செயல்புரிந்தாலும் முன்வினைகளால் தடை ஏற்பட்டுப் பலன் கிட்டாதபோது இறைவன் துணைநின்று அச்செயலைப் பயன் தரச்செய்கிறார். மனித யத்தனத்தில் கிட்டாத யோக சித்தி மோக்ஷ சித்தி முதலிய பெரும் பேறுகளைக் கிட்டச்செய்பவர். பகவானை உபாசிப்பதே பெரிய சித்தி. அதனை அருள்பவர்.

ஸித்தார்த்த: ஸித்த ஸங்கல்ப: ஸித்தித: ஸித்தி ஸாதந: என்று நாமத் தொடரே மந்திர சக்தி மிக்கது. நல்லது ஒன்றை நாடும்போதும் நாடியதை அடையத் திட்டமிட்டுப் பணி யாற்றும்போதும் இடையூறுகள் தோன்றாமல் தொடங்கிய பணி செவ்வனே பலனளிக்குமாறு நிறைவேறுவதற்கு இறையருள் பெற இந்தத் தொடரை ஜபம் செய்வது நல்லது. (255)

वृषाही वृषभो विष्णुः वृषपर्वा वृषोदरः ।
वर्धनो वर्धमानश्च विविक्तः श्रुतिसागरः ॥ ५९ ॥

வ்ருஷாஹீ வ்ருஷபோ விஷ்ணு: வ்ருஷபர்வா வ்ருஷோதர:
வர்த்தநோ வர்த்தமாநஶ்ச விவிக்தஶ் ஶ்ருதிஸாகர: 59

256. வ்ருஷாஹீ - தர்மமாகப் பிரகாசிப்பவர்.

வ்ருஷ: - தர்மம், அறச்செயலால் விளையும் புண்ணியம். அஹ: - ஒளிமிக்க பகல் நேரம். அறவழியைப் பின்பற்றுபவர்களுக்கு அறமே அவர்கள் விரும்பியதனைத்தையும் மழைபோல் பொழிந்து மகிழ்ச்சியூட்டுமானதால் தர்மத்தை வ்ருஷம் (வர்ஷதி) என்பர். பரமசிவனின் வாஹனமான எருது தர்மத்தின் வடிவம். அதனால் அவர் வ்ருஷ வாஹனர். தர்மமாகி விரும்பியதை வாரி வழங்குவதுடன், தர்மப் பற்றுள்ளவனைப் பகல் ஒளிபோல் பிரகாசப்படுத்துபவர், தர்மத்தால் பிரகாசிப்பவர். வேள்வி முதலிய அறப்பணிகளைப் புரிபவராக, அவற்றால் வழிபடப் பெறும் தேவதையாக விளங்குபவர்.

அவரை வழிபடும் நாளே எல்லா மங்களங்களையும் அளித்து ஒளியூட்டும் நன்னாள். அவரைக் காணும் நாளே மங்களமான நாள். மங்களத்தை வழங்குகின்ற நற்பகலைக் கொண்டவர்.

பூமியிலிருந்த நீர்ப்பகுதியே கதிரவனால் வானிற்கொண்டு செல்லப்பட்டு தூய மழையாக நம்மை வந்தடைகிறது. அதுபோல்

*நாம் செய்த அறப்பணிகள் அனைத்தும் பணிமுடிந்த உடனே மறைந்துவிட்டாலும் அதனால் விளைந்த நல்வினைத்தொடர் நமது கண்களுக்குப் புலப்படாமல் மறைந்திருந்து (அத்ருஷ்டம் - காணப் பெறாதது) மறுபடி நற்காலம் கூடும்போது சுகமும் மகிழ்ச்சியும் தருவதாக, செய்ததைவிடப் பன்மடங்கு விரிந்ததாக, நம்மை வந்தடைவதுடன் ஒளி தந்து நம்மை விளங்கச் செய்கிறது. அந்த தர்ம ஒளியைத் தனது வசத்தில் கொண்டவர். (256)*

257. வ்ருஷப: - அடியார்கள் விரும்பியதைப் பொழிபவர்.

*அடியார்கள் கோரியதனைத்தையும் மழைபோல் பொழிகிற வள்ளல். தர்ம வடிவில் பிரகாசிப்பவர். (வ்ருஷாத்மநா பாதி) எருது வடிவில் தியானிக்கப் பெறுகின்ற தர்மமாக இருப்பவர். வாழ்க்கைத் தாபத்தால் கருகியவர்களை வாழ்விக்கும் அமுத மழையாக இருப்பவர். அகார உகார மகாரங்களாகிய மூன்றால் இணைந்த ஒளிமிக்கப் பிரணவமாக இருப்பவர்.[1] (257)*

258. விஷ்ணு: - உலகை வியாபித்திருப்பவர்.

*அவனன்றி ஓரணுவும் அசையாது. 'விஷ்ணுர் விக்ரமணாத்' (பாரத. 4-70-13) மிகக் குள்ளமான வடிவிலிருந்து வளர்ந்து மூவுலகையும் இரு காலடிகளுக்குள் அடங்குமளவில் மிகப்பெரு தோற்றம் கொண்டவர். நாம் வாழும் பூமி, அதற்கு மேலும் கீழும் உள்ள உலகங்கள் என மூவுலகங்கள். இந்த மூவுலங்களையும் வியாபித்து நிற்பவர்.[2] (நா. 2) வ்யூஹங்களில் ஐந்தாமவர் (258)*

259. வ்ருஷபர்வா - தர்மமெனும் படிகளைக்கொண்டவர்.

*பெரு வடிவம் கொண்ட தம்மை அடையத் தர்மங்களையே - புண்ணியத்தையே படிகளாகப் பகவான் அமைந்துத் தந்து இருக்கிறார். படியமைப்பு சிரமமின்றி மேலேற உதவும். இடையே ஓய்வு தரும். சிரவணம் மனனம் நிதித்யாஸனம் என்ற ஞான மார்க்கத்திற்கான படிகள், பொதுதர்மங்களாகிய கர்ம மார்க்கத்திற்கான படிகள், சிரவணம் கீர்த்தனம் ஸ்மரணம் முதலிய பக்திமார்க்கத்திற்கான படிகள் அவரிடம் அழைத்துச் செல்பவை. பர்வ - கணு. வயலுக்கு வரப்பு போல் கணு குறிப்பிட்ட பகுதிக்கு அளிக்கபெறும் ஊட்டம் சிதறாதபடி*

---

1. त्रिधा बद्धो वृषभो रोरवीति। (तै. आ. १०. १२)
2. स ओतः प्रोतश्च विभुः प्रजासु। विवेश भूतानि चराचराणि। (तै. आ. १०. १)

பாதுகாக்கிறது. இரு கணுக்களுக்கு இடையே உள்ள கரும்பின் பகுதி மிகவும் சுவையுள்ளது. ஆனால் கணு சுவையற்றது. அதுபோல் சுவையற்றதுபோல் உள்ள தர்மச் செயல்களாகிய கணுக்களுக்கிடையே புண்ணியத்தால் அமைந்துள்ள சுவை மிக்க வாழ்வு உள்ளது. இப்படி தர்மமாகிய கணுக்களுள்ளவர். பர்வ - காலப்பகுதி. தர்மத்தால் கிட்டிய சுகத்தை வாழ்வின் பல பகுதிகளில் அனுபவிக்கச் செய்பவர். ஒரே சமயத்தில் வினைப்பயன் அனைத்தையும் அனுபவிக்காதபடி காலவரையமைத்துத் தருபவர். (259)

260. வ்ருஷோதர: - தர்மத்தை வயிறாகக்கொண்டவர்.

பகவானுடைய வயிறு மிகவும் விரிந்தது. லம்போதர: உலகைத் தாங்கும் தர்மமே பகவானது வயிறு. அதிலிருந்தும் புண்யத்தால் தோன்றுகின்ற தர்மப் பிரஜைகளான பிரும்மா முதலானோர் வெளி வந்தனர். அப்படித் தர்மப் பிரஜைகளைப் படைப்பதும் தாங்குவதுமான வயிறுள்ளவர். தர்மச் செயல்களால் எளிதில் நிரம்பித் திருப்தியடைகிற வயிறுள்ளவர் (சு. 25) (260)

261. வர்த்தந: - போஷித்துப் பெருகச் செய்பவர்.

பகவானுக்கெனச் செய்யப்பெறுகிற வழிபாடும் அளிக்கப்பெறுகிற இலை, பழம், நீர் முதலிய நிவேதனப் பொருளும் பன்மடங்கு பலனளிப்பவையாகப் பெருகும். குசேலரின் ஒரு படி அவல் குபேரனைவிடப் பல மடங்கு செல்வம் பெறச் செய்தது. இப்படி அணுவை மலையாகப் பெருகச் செய்து தன்னடியார்களைத் தாய்போல் பேணி வளர்ப்பவர். (261)

262. வர்த்தமாந: - விரிந்த உலகமாக வளர்பவர்.

தன்னடியார்களை வளர்ப்பதற்காகத் தானும் விரிந்த உலகமாக வளர்பவர். அவர்களை வளர்ப்பதாலேயே தானும் வளர்பவர். அடியாருக்கு எல்லாவற்றையும் தன்னையுமே அளித்தும் தனது பெருக்குக் குறையாமல் வளர்பவர். உலகைப் போஷித்து வளர்க்கின்ற வேகத்திற்கு ஈடான வேகத்தில் தானும் வளர்கிறார் என்பதை வர்த்தமானஶ்ச என்ற சகாரம் காட்டுகிறது. (262)

263. விவிக்த: - தனித்திருப்பவர்

பிரபஞ்ச வடிவில் பெரு வளர்ச்சி பெற்றிருந்தாலும் அதற்கும் அப்பால் தனித்து இருப்பவர். உண்மை நிலையில் மாயையின்

விரிவான பிரபஞ்சத்திலிருந்தும் விலகித் தனித்து நிற்பவர். உலகைத் தாண்டித் தனித்த சிறப்புள்ளவர்.[1] புத்தி முதலானவற்றால் அறிய முடியாதபடி அவைகளுக்கு அப்பாற்பட்டவர். (263)

264 ஶ்ருதிஸாகர: வேதங்களுக்குக் கடல் போல் தங்குமிடம்.

நதிகள் கடலைச் சென்றடைந்து அமைதியுறுவது போல், நதிகள் கடலை அடைவதையே தமது குறிக்கோளாகக் கொண்டிருப்பதுபோல், வேதங்கள் பகவானைச் சென்றடைகின்றன. வேதங்கள் பகவானை விளக்குவதையே தமது குறிக்கோளாக்கிப் பற்பல கிளைகளாகப் பிரிந்திருந்தும் ஒரே நோக்குடன் பகவானைச் சென்றடைகின்றன. வேதங்கள் பகவானின் மூச்சுக் காற்று. "யஸ்ய நிச்வஸிதம் வேதா:" (ஸாயணரின் வேதபாஷ்யம்) நதிகள் கடலில் அடங்குவதுபோல், பகவானின் மூச்சுக்காற்றான வேதம் அவரிடம் அடங்குகிறது. வேதமாகிய நதி முடிவுபெறும் கடல் போலானவர். வேதமாகிய கடல் தன்னைச் சூழத் தான் மறைந்திருப்பவர்[2]. (264)

सुभुजो दुर्धरो वाग्मी महेन्द्रो वसुदो वसुः ।
नैकरूपो बृहद्रूपः शिपिविष्टः प्रकाशनः ॥ ६० ॥

ஸுபுஜோ துர்த்தரோ வாக்மீ மஹேந்த்ரோ வஸுதோ வஸு:
நைகரூபோ ப்ருஹத்ரூப: ஶிபிவிஷ்ட: ப்ரகாஶந: 60.

265. ஸுபுஜ: - அழகிய கைகள் உள்ளவர்.

உலகனைத்தையும் தாங்குகின்ற அழகிய கைகள், உலகப் பாதுகாப்பை முன்னிட்டு சங்கு சக்கிரம் முதலிய ஆயுதங்களை எப்போதும் தாங்கி நிற்கின்றன. தன்னை அண்டிய அடியார்களின் துயர் தீர்ப்பதில் காலதாமதம் ஏற்பட்டுவிடுமோ என்று எப்போதும் உன்னிப்புடன் ஆயத்தமான நிலையில் பரிவுடன் இருப்பதே பகவானின் கைகளுக்கு அழகு. "பாது ப்ரணத ரக்ஷாயாம் விலம்பமஸஹந்நிவ. ஸதா பஞ்சாயுதீம் பிப்பரத் ஸ ந: ஸ்ரீரங்கநாயக:". (265)

1. अहं विजानामि विविक्तरूपः (कैवल्य २१)
2. सर्वे वेदा यत्पदमामनन्ति (कठ १. २. १५) तद्वेदगुह्योपनिषत्सु गूढं (श्वेताश्वतर ५. ६)

266. துர்த்தர: – வேறொன்றால் தாங்கமுடியாதவர்.

உலகனைத்தையும் எப்போதும் தாங்கி நிற்கின்ற கைகளுக்கு ஓய்வு தருவதற்கு வேறு தாங்கலை எதிர்பாராதவர். அவரது பணியில் எவரும் உதவவும் முடியாது. அத்தகைய மாபெரும் பணி அது. பிருதிவீ, ஜலம் முதலிய ஐந்து பூதங்கள் ஒன்றோடொன்று பிணைந்து ஒன்றுக்கொன்று உதவிக்கொண்டு மிகுந்த சிரமத்துடன் உலகை உருக்குலையாமல் தாங்குகின்றன. அவற்றையும் பகவான் வேறு உதவியின்றி தாங்குகிறார். அவரை வேறெதுவும் தாங்கமுடியாது.

யோகிகள் தியானம், தாரணை, ஸமாதி முதலிய மிகக்கடுமையான பயிற்சிகளால் மனத்தை அடக்கிப் பின் நிர்மலமான உள்ளத்தில் பகவானைத் தாங்குகின்றனர். அப்படி மிகவும் சிரமப்பட்டுத்தாங்கக் கூடியவர். பகவானது செயலாற்றல் கடும் வேகத்துடன் கூடியது. அதனை எதிர்க்கவோ தடைசெய்யவோ முயல்கிற பிற சக்திகள் மணல் அணைகள்போல் சிதறி உடைந்துவிடும். தாங்க முடியாத வேகமுள்ளவர். (266)

267. வாக்மீ– சிறந்த பேச்சுவன்மை உள்ளவர்.

அறிவுப் பொக்கிஷமான வேதங்கள் பகவானின் பேச்சாகும். போர் புரிய மறுத்து ஆயுதத்தைக் களைந்து களைத்து நிற்கும் அர்ஜுனனைப் பதினொரு அக்ஷௌஹிணியுள்ள மாபெரும் படையைத் தனித்து எதிர்த்து மாய்த்த வீரனாக்கிய பெருமை 700 சுலோகங்களாலான பகவானது பேருரையான கீதைக்கு உண்டு. சீதையைத் தேடுகிற பணியில் துணையற்றிருந்தபோது லக்ஷ்மணன் ஆஞ்சநேயருடன் முதன் முதலாகப் பேசிய பேச்சு கோடிக்கணக்கான வானரப் படையுடன் ஸுக்ரீவனைத் துணைவனாக ஆக்கியது. கேட்கக் கேட்க இனிக்கின்ற அழகிய பேச்சுள்ளவர். (267)

268. மஹேந்த்ர: – பெரும் ஈச்வரர்.

இந்திரன் கைகளில் இருந்துகொண்டு வலிவூட்டுகின்ற தேவதை. 'இந்த்ரோ மே பலே ச்ரித:.' உலகை ஆட்படுத்துகின்ற பலம் எனும் பெரு வலிவு பகவானின் ஆறு சிறப்புகளில் ஒன்று. (நா. 39. 558). அதனை உயிரினமனைத்திலும் வெளிப்படுத்துபவர் இந்திரன். அந்த இந்திரனுக்கும் வலிவூட்டுகின்றவர் பகவான் மஹா இந்திரர். இந்திரன் முதலிய வலிவுமிக்க தேவதைகளுக்கும்

ஈச்வரனுக இருப்பவர். யாவராலும் கொண்டாடப்பெறுகிற பரமேசுவரத்தன்மை படைத்தவர். (268)

269. வஸுத: - செல்வமளிப்பவர்.

வாழ வைக்கின்ற செல்வம், எங்கும் பரவிச் செல்வாக்குடன் உள்ள செல்வம், அழகிய சொல்வன்மைபோல் உடல் வலிவைப்போல் வாழ்விற்கு இன்றியமையாதது. அதனை வாரி வழங்குபவர். தன்னிடமுள்ள அளவற்ற செல்வத்தை அடியார்களுக்குத் தயங்காமல் தானே வழங்குபவர். வேண்டியதைத் தருவது தானமாகாது. பிறர் எதிர்பாராதபடி மனமுவந்து தானே தனக்கு நல்லதெனக் கருதி வழங்குவது தானம். அப்படித் தன்னிடமுள்ள ஐச்வர்யத்தை அடியார்கள் எதிர்பார்க்கு முன்னரே தானே வழங்குபவர்.[1] நம்மைச் சூழ்ந்து நம்மை விட்டு விலகாமல் இருப்பது வஸு - வினைப்பயன், வினைப்பயனுக்கேற்ப அவரவருக்குச் சுக துக்கங்களைத் தருபவர். (269)

270. வஸு: - செல்வம்.

வஸுதராயிருப்பதுடன் வாரிவழங்கப்பெறும் செல்வமாக நடந்துகொள்பவரும் அவரே. (வஸுவத் ஆசரதி). செல்வம் ஒருவனைச் சூழும்போது அவனுக்கு இயல்பாக இராத பெருமை - செயற்கையான பகட்டு அவனைச் சூழ்கிறது. அது மனிதனின் உண்மை நிலையை மறைக்கிறது. செல்வமாகி நின்று அவரவரது உண்மை நிலையை மறைப்பவர். தன்னையே மாயையால் மறைத்துக் கொள்பவர். (வஸ்தே - ஆச்சாதயதி). ஆகாயத்தில் (தனித்து மற்ற இடங்களில் இல்லாமல்) வசிப்பதால் வாயுவை வஸு என்பர். (வஸதி). அத்தகைய வாயுவாயிருப்பவர்.[2] வினைப்பயனுகச் சூழ்ந்து நின்று ஜீவனுக்குத் தன் நிலை உணர முடியாதபடி மறைப்பவர். எல்லாம் அவரே என்ற பாவனைகொண்ட அடியார்களின் செல்வம் அவரே. (270)

271. நைகரூப: - ஒரே வடிவில் இல்லாதவர்.

வஸுதரும் வஸுவுமானதற்கேற்ப ஒரே வடிவில் இருக்க இயலாமல் பல வடிவங்களைக் கொண்டவர். ஒருவர் செல்வமாகப்

1. अन्नादो वसुदानः। (बृहदारण्यक ६. ४. २४)
2. हंसः शुचिषद्वसुरन्तरिक्षसत्। (कठ २. २. २) (तै.अ.१०.४०)

*பெற விரும்புவதை மற்றொருவர் நாடாதிருக்கலாம். "இவர் தந்தால் ஏற்கலாம்; இவர் அளிப்பதை ஏற்க இயலாது" எனச் செல்வமளிப்பவர் பற்றியும் விருப்பு வெறுப்பு ஏற்படலாம், அதனாலும் தன்னிலே மறைப்பதற்கும் பல ரூபங்களை ஏற்கிறார். ஒவ்வொருவரது வாழ்க்கையிலும் சுக துக்கமளிப்பவராகக் குறுக்கிடுபவர் பலர். அவர்கள் அனைவரது வடிவிலும் இருப்பவர். இப்படிப் பல வடிவங்களில் பகவானே சுக துக்கங்களை உணர்த்துவதாக அறிவதால் வாழ்க்கையில் குறுக்கிடுபவரிடம் விருப்போ, வெறுப்போ இருக்காது. இது ஈச்வர சித்தம் என்று அமைதிகொள்ளச் செய்யும்[1] உருப்பெற்றதாகத் தோன்றும் அனைத்தும் அவரே. (நா. 717) (271)*

272. ப்ருஹத் ரூப: - பெரு வடிவமுள்ளவர்.

*உருப்பெற்றதாகத் தோன்றுகின்ற உலகைத் தாங்குவதற்கெனப் பெரிய உருவம் பெற்றவர். வராஹர், ஆதிசேஷர், கூர்மர் முதலான வடிவில் உள்ளவர்.* 'தஸ்யோபரி ஜலௌகஸ்ய மஹதீ நௌரிவ ஸ்திதா. விததத்வாத்து தேஹஸ்ய ந மஹீ யாதி ஸம்ப்லவம்'. *(விஷ்ணு புரணம். 1-4-46). வராஹ வடிவில் பூமியைத் தாங்கும்போது பகவானின் பெரிய உருவின் மேல் கடுகுபோல் அமைந்தபடியால் பூமி மறுபடி ஜலத்தில் மூழ்காதிருந்தது. திரிவிக்ரமத் தோற்றத்தில் ஆகாய இடைவெளி அனைத்திலும் பரவி நின்ற பெரு வடிவினர். (272)*

273. சிபிவிஷ்ட: - ஒளிக்கதிர்களில் தங்குபவர்.

*சிவபெருமானுக்கும் விஷ்ணுவிற்கும் பொதுவான பெயர் இது. இறைவனிடம் மனம் பதியாத மனிதனும், தேவனும் பசுவே. (கால் நடைப் பிராணியே). அருள் புரிந்து அவர்களது உள்ளத்தினுள் சென்றமர்பவர். சிபி - பசு, ஆடு முதலிய கால்நடைப் பிராணி. அவைகளில் வேள்வியாகப் பதிந்திருப்பவர். பகவான் யஜ்ஞராக அவைகளில்*

---

1. विश्वस्य स्रष्टारमनेकरूपं (श्वेताश्वतर ५.१३) इन्द्रो मायाभिः पुरुरूप ईयते। (बृहदारण्यक २.५.१९) ज्योतींषि विष्णुर्भुवनानि विष्णुः- वनानि विष्णुर्गिरयो दिशश्च। नद्यः समुद्राश्च स एव सर्वं यदस्ति यन्नास्ति च विप्रवर्य। (विष्णुपुराणे २. १२.३८)

*உறைபவரானதால் அவை வேள்விக்குரியவையாகின்றன.[1] சிபி: - ஒளிக்கதிர். குளிரைக் குடித்துப் போக்கு வதால் சிபி. அதில் உறை ந்துள்ளவர். காலையில் உதித்து ஓரிருநாழிகையளவில் காட்சி தரும் சூரியனின் இளங்கதிர்களால் சூழப்பெற்றவர்.[2] (273)*

274. ப்ரகாசந: - நன்கு விளங்கச் செய்பவர்.

*ஒளி மண்டலங்களிலிருந்து வெளியாகின்ற ஒளியாகி நின்று எல்லாப் பொருள்களையும் விளக்கி ஆத்மாக இருந்து உணர்த்துபவர். தனது ஈசுவரத்தன்மைமிக்க ஒளி வடிவை அர்ஜுனன் முதலானவருக்கு திவ்யத்தன்மை பெற்ற பார்வையளித்துக் காணச் செய்தவர்.[3] (274)*

**ओजस्तेजोद्युतिधरः प्रकाशात्मा प्रतापनः ।**
**ऋद्धः स्पष्टाक्षरो मन्त्रश्चन्द्रांशुर्भास्करद्युतिः ॥ ६१ ॥**

ஓஜஸ்தேஜோத்யுதிதர: ப்ரகாஶாத்மா ப்ரதாபந:
ருத்த: ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ரஶ் சந்த்ராம்ஶுர் பாஸ்கரத்யுதி:. 61.

275. ஓஜஸ்தேஜோ த்யுதிதர:- வலிவு திறமை ஒளி கொண்டவர்.

*தாயின் வயிற்றில் உருக்கொண்டவுடன் முதலில் பெற்ற உணவுச்சத்தாலும் கருவிலிருந்து வெளி வந்ததும் உட்கொண்ட உணவின் சத்தாலும் பெற்ற பிராணசக்தி, ரஸம், ரக்தம் முதலிய ஏழு தாதுக்களின் சாரமாக உள்ள பிராண சக்தி, ஓஜஸ் ஆகும். பிறரை எதிர்க்கும் திறமையும், பிறரால் எதிர்க்க முடியாமையும், வெளிப்படையாக உணர முடியாத கவர்ச்சியும்..வீரனின் ஏனைய சக்திகளும் தேஜஸ் ஆகும். எல்லாத் துறைகளிலும் தெளிந்த அறிவு த்யுதி ஆகும். (தேஜ: - புகழ், த்யுதி: - மேனி ஒளி.)*

---

1. यज्ञो वै विष्णुः पशवः शिपिः यज्ञ एव पशुषु प्रतितिष्ठति। (तै. सं. २. ५. ५) नमो गिरिशाय च शिपिविष्टाय च। (श्रीरुद्राध्याये) येषामीशे पशुपतिः पशूनां चतुष्पदामुत च द्विपदाम्। इमं पशुं पशुपते ते अद्य बध्नामि। (तै. सं. ३.१.४)
2. प्र तत्ते अद्य शिपिविष्ट नामार्यः शंसामि। किमित्ते विष्णो परिचक्ष्यं भूत्प्रयद्विवक्षे शिपिविष्टो अस्मि। (ऋ. सं. ७. १००. ५. ६) शिपयोऽत्र रश्मय उच्यन्ते। तैराविष्टो भवति। (सूर्यो मुहूर्तोदित शिपिसंज्ञैर्बालरश्मिभिः आविष्टो भवति तस्मात् शिपिविष्टः) निरुक्त ५.९.८)
3. सर्वेभ्योऽन्तः स्थानेभ्यो ध्येयेभ्यः प्रदीपवत्प्रकाशयतीति प्रकाशः प्रकाशेभ्यः सदोमित्यन्तः शरीरे विद्युद्वत् द्योतयति। (अथर्वशिखा २):

இம்மூன்றையும் எப்போதும் வெளிப்படும்படி தாங்கி நிற்பவர். ஓஜஸ்தேஜோ த்யுதிதராய நம:

ஓஜ:, தேஜ:, த்யுதிதர: என இதனை மூன்று தனி நாமங்களாகக் கொள்வதும் உண்டு. உள் வலிவாயுள்ளவர், எதிர்க்கும் திறமையாயுள்ளவர். ஞான ஒளியைத் தாங்குபவர். எனப் பொருள். ஓஜஸே நம:, தேஜஸே நம:, த்யுதிதராய நம:, 'பலம் பலவதாம் சாஹம்' 'தேஜஸ் தேஜஸ்விநாமஹம்'. *(கீதை. (7-10-12).*[1] *(275)*

276. ப்ரகாஶாத்மா - ஒளி மயமான வடிவுடையவர்.

பேரறிவே ஒளி. கதிரவன் முதலிய மற்ற ஒளிகள் விளங்காவிடத்திலும் அறிவே ஒளியாயிருந்து பொருளைத் துலக்குகின்றது. அந்தப் பேரறிவே ஆத்ம ஸ்வரூபம். பகவானின் ஒளியைக் கண்டு அறிவிலியும் அவரது மேன்மையை உணர்ந்துவிடுகிறான்.[1] *(276)*

277. ப்ரதாபந: - சுடுபவர்

ஒளியுடன் கூட இருப்பது சூடு. ப்ரளய வேளையில் அக்காலத்தின் பெருமையால் கடுமையடைந்த நெருப்பு, சூர்யன் முதலியவற்றால் உலகைச் சுட்டுப் பொசுக்குகின்ற ஸங்கர்ஷணர்; உலகம் வாழ்வதற்காக உதிக்கிற ஸூர்யன், சந்திரன் முதலிய ஒளி மண்டலங்களைக் கொண்டு தாபத்தை ஏற்படுத்துபவர். தன் பிரதாபத்தால் பகைவரை வாட்டி வதைப்பவர். *(277)*

278. ருத்த: - நிறைந்தவர்.

தர்மம், ஞானம் வைராக்கியம் முதலிய சிறப்புகள் நிறைந்தவர். பௌர்ணமி முதலிய வேளைகளில் கரைபுரளும் கடல்போல் எப்போதும் எல்லாச் சிறப்புகளும் நிறைந்து, 'இல்லை' 'போதாது' என்ற சொல்லுக்கிடமில்லாத நிறைவுள்ளவர். *(278)*

---

1. आत्मचैतन्यरूपं बलं (नृसिंहोत्तरतापनीये (३. १०) प्राणो ब्रह्मैव तेज एव (बृ. आ. ४. ४. ७) तेजोमयोऽमृतमयः पुरुषः। (२. ५. १) तेजसि तिष्ठन् तेजसोऽन्तरः। (३. ७. १४) आदित्यो वे तेज ओजो बलं... ब्रह्मैतत्। (तै. आ. १०. १५) बलमिति विद्युति। (तैत्तिरीये ३. १०)
2. चतुष्कलः पादो ब्रह्मणः प्रकाशवान्नाम। (छान्दोग्य ४. ५) प्रकाशः प्रकाशेभ्यः। (अथर्वशिखा २)

279. ஸ்பஷ்டாக்ஷர: - தெளிவான எழுத்து வடிவினர்.

*இறைவனது பெருமையை மிகத் தெளிவாக வெளிப்படுத்துகின்ற சொல் வடிவம் ஓங்காரமாகும்.* **'தஸ்ய வாசக: ப்ரணவ:** *(யோக ஸூத்திரம்) வடிவற்றவரை வேறு வகையில் உணர்த்த முடியாது. எளிதில் தெளிவாக உச்சரிக்கக் கூடிய அ,உ,ம் என்ற மூன்று எழுத்துக்கள் கொண்ட ஓங்காரவடிவிலுள்ளவர்.* ***(279)***

280. மந்த்ர: - மந்திர வடிவினர்

*மனனம் செய்யத்தக்கதும் மனனம் செய்பவரைக் காப்பாற்றக் கூடியதும் இறைவனின் பெருமையை உணர்த்துவதுமான மந்திரம் பகவானுடைய ஒலி வடிவமாகும். மந்திரங்கள் மூலம் தன்னைத் தியானம் செய்பவரைக் காப்பாற்றுபவர்.* ***(280)***

281. சந்த்ராம்ஶு: - நிலவொளியாயிருப்பவர்.

*சந்திரனின் ஒளி, இதம் தரும், களைப்பைப்போக்கும், எரிச்சலை அடக்கும். சந்திரனின் நிலவொளியில் இருப்பதுபோல் குளிர்ச்சி, ஸம்ஸாரதாப நீக்கம் மன மகிழ்ச்சி, களைப்பின்மை, அமைதி, செழிப்பு முதலிய மேன்மைகளைத் தருபவர்.* ***(281)***

282. பாஸ்கரத்யுதி: - ஸூர்ய ஒளி கொண்டவர்

*இருளை நீக்கி ஒளியூட்டுவதால் ஸூர்யன் பாஸ்கர:. அவரது ஒளியாக இருப்பவர். சூரியனது ஒளிக்கு ஒளியாக இருப்பவர், ஒரே சமயத்தில் தோன்றிய பல்லாயிரக் கணக்கான ஸூர்யர்களின் ஒளியை விடச் சிறந்த ஒளியுள்ளவர்,* **'யதாதித்யகதம் தேஜ: - வித்தி மாமகம்' 'திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபத் உத்திதா. யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ் தஸ்ய மஹாத்மந:** ***(15-12,11-11, கீதை)*** ***(282)***

**अमृतांशूद्भवो भानुः शशबिन्दुः सुरेश्वरः ।**
**औषधं जगतः सेतुः सत्यधर्मपराक्रमः ॥ ६२ ॥**

**அம்ருதாம்ஶூத்ப்பவோ பாநுஶ் ஶஶபிந்துஸ் ஸுரேஶ்வர:**
**ஒளஷதம் ஜகதஸ் ஸேதுஸ் ஸத்யதர்மபராக்ரம: 62**

283. அம்ருதாம்ஸூத்பவ: - சந்திரன் தோன்றுகிற இடம்

*உலகம் தோன்றும்போதே அதற்கு ஒளியூட்டுவதற்காகச் சந்திரனும் தோன்றினான். தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்தபோது சந்திரன் அதில் மூழ்கி அம்ருதம் தோய்ந்த ஒளிக்கதிர்கள் உள்ளவனாக வெளிப்பட்டான். திருப்பாற்கடலைக் கடைவதற்கும் அமிருதம் பெறுவதற்கும் உதவிய பகவான், சந்திரன் அமிருத கிரணனாக வெளியாவதற்கும் காரணமானார். முன்னரே குளிர்ச்சியும் மகிழ்ச்சியும் தருபவனாக சீத கிரணனாக இருந்த சந்திரன் பாற்கடலிலிருந்து வெளிப்பட்டதும் அமிருதகிரணனுமானான். அமிருத வடிவில் இருந்த பகவான் சந்திரன் அமிருதகிரணனாகத் தோன்றுவதற்கு உரிய இடமுமானார். சந்திரன் அவர் மனத்திலிருந்து உண்டானான் என வேதம் கூறும்[1] இறைவனின் மனம்போல் அவனும் குளிர்ந்தவன். (283)*

284. பானு: - ஒளியாக விளங்குபவர்..

*உலகில் பொருள்கள் அனைத்தும் ஒளியால் விளக்கம் பெறுகின்றன. பகவானோ தானே தன்னை விளக்கிக் கொள்பவர். ஒளியால் மற்றதை விளக்குகின்ற ஸூர்யன் முதலானோர் அவரை விளக்க இயலாது. அவராலேயே ஸூர்யன் முதலானோரும் விளக்கப்பெறுகின்றனர்[2]. (284)*

285. ஸஸபிந்து: - முயல் போன்ற புள்ளியுள்ளவர்.

*சந்திரனில் காணப்பெறுகின்ற கரும்புள்ளி போன்ற அடையாளம், களங்கம், மான், முயல் என்று பலவாறு காட்சி தரும். சந்திரன் தனக்கு மிகப் பெரியமான வளர்ப்புப் பிராணியாக முயலை வளர்க்கிறார். முயலைவளர்ப்பதுபோல் நமது உணவுப்பொருளின் சத்தாக நின்று நம்மைப் போஷிக்கிற சந்திரனாகத் தன்னைக் கண்ணன் கீதையில் அறிமுகப்படுத்திக் கொள்கிறார்.* "புஷ்ணாமி சௌஷதீஸ் ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக: (15.13)

*சிபிவிஷ்ட: - என்ற நாமம் தொடங்கி 10 நாமங்கள் ஒளி மயமான இறைவடிவம் ஸூர்யனாகவும் சந்திரனாகவும் விளங்குவதைக் குறிப்பிட்டன. நடுவில் உள்ள ஸ்பஷ்டாக்ஷர:*

1. चन्द्रमा मनसो जातः (पुरुषसूक्तं)
2. तमेव भान्तमनुभाति सर्वं, तस्य भासा सर्वमिदं विभाति। मुण्डके २. २. १०

என்ற நாமம் அவரது பிரணவமாகிற ஒலி வடிவையும் மந்திர: என்ற நாமம் வேதங்களையும் ஸூர்ய மண்டலத்தின் நடுவில் ஒளிக்கு ஒளியாய் விளங்கும் இறையொளியை விளக்கும் காயத்ரீ மந்திரத்தையும் குறிப்பிட்டது. இந்த ஸ்வரூபத்யானத்தால் கிடைக்கின்ற பயன் - நிறைவு என்பதை ருத்த: என்ற நாமம் விளக்குகிறது. (285)

286. ஸுரேச்வர : - தேவர்களின் ஈச்வரர்.

நேர்மையுள்ளவர்களும் நன்மைபுரிபவர்களுமான தேவர்களின் தலைவர். அவர்களை இன்னும் மேல் நிலைக்கு அழைத்துச் செல்பவர் (நா. 49, 85, 286). (286)

287. ஔஷதம் -மருந்து.

தீரக்கூடிய நோயை மருந்து தீர்க்கும். உடலில் உள்ள பிராண சக்தியைத் தூண்டி வளர்ப்பதால் (ஓஷம் திநோதி) ஓஷதி. பச்சிலை முதலியவைகளும் அவற்றாலான ஔஷதமும் நோயைத் தீர்க்கின்றன. ஔஷதத்தால் தீர்க்க முடியாதது ஸம்ஸார நோய் . தீராத நோயையும் தீர்த்து வைப்பான் அந்த கோவிந்தன். (287)

288. ஜகதஸ் ஸேது: - உலகின் வரம்பு.

உலகின் நடைமுறையில் குழப்பம் ஏற்படாதவாறு வரையறுத்து அவரவர்களை அவரவர் எல்லைக்குள் கட்டுப்படுத்துபவர். உலகினரைத் துன்பத்திலிருந்து மீட்டுக் கரையேற்றுபவர். அறநெறி வரைவகுத்து நன்மை தீமைகளைப் பிரித்து அததற்கேற்ற பலனை முறை நழுவாமல் அளிப்பவர்.[1] காலமோ தேவர்களோ எவரும் இந்த வரம்பை மீற முடியாது. (288)

289. ஸத்ய தர்ம பராக்ரம: - வீணாகாத நற்குணங்களையே திறமையாகக் கொண்டவர்.

பகவானுடைய அறிவோ விருப்பமோ செயலாற்றலோ முயற்சியோ எதுவும் உலகிற்குப் பயன்படாமல் வீணாவதில்லை.

1. एष सेतुर्विधरण एषां लोकानामसंभेदाय। (बृ. आ. ४. ४. २२) अथ य आत्मा स सेतुर्विधृतिः। एषां लोकानामसंभेदाय। नैनं सेतुमहोरात्रे तरतः। (छान्दोग्य ८. ४) यः सेतुरीजानानां (कठ १. ३. २)

*ராமனை ஸத்ய பராக்ரம: என்று குறிப்பிடுவார் வால்மீகி. அறிவு வீணாவது நிறைவேற முடியாததை விரும்புவதால். திறமை வீணாவது தன் சக்திக்கு மீறியதில் செயல்படுவதால். இந்தக் குறை பகவானிடம் ஏற்படாது. (நா. 213, 529) (289)*

**भूतभव्यभवन्नाथः पवनः पावनोऽनलः**
**कामहा कामकृत्कान्तः कामः कामप्रदः प्रभुः ॥ ६३ ॥**

**பூதபவ்யபவந்நாத: பவந: பாவநோ(அ)நல;**
**காமஹா காமக்ருத் காந்த: காம: காமப்ரத: ப்ரபு: 63.**

290. **பூதபவ்யபவந்நாத: - கடந்தது, வரவிருப்பது, நிகழ்வது இவற்றிற்காக அணுக வேண்டியவர்..**

*எல்லாவற்றிற்கும் தன்னையே நாடுகின்ற நிலையை ஏற்படுத்தி நாடவேண்டிய நிலையை உணர்த்தி நாடாதவரை வற்புறுத்தித் தன்னையே நாடச் செய்து, நாடுவதைத் தருகின்றவரும் தரவல்லவரும் நெறியில் கட்டுப்படுத்துபவரும் நாதர். பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்தோன்றி வாழ்கின்ற தேவர் முதலானோருக்கும் நாளை தோன்றுபவருக்கும் இன்று தோன்றியுள்ளவருக்கும் அவரே நாதர். (நாத்யதே - யாச்யதே - உபதபதி - ஆசாஸ்தே - ஈஷ்டே - சாஸ்தி) (நா.4) முக்காலங்களிலும் உள்ளவற்றிற்கும் ஈச்வரர்.[1] (290)*

291. **பவந: - தூயதாக்குபவர்.**

*(பவதே - புநாதி -சரதி) பவந: காற்று. எப்போதும் அசைந்துகொண்டே இருப்பதாலும் எதிலும் ஒட்டாததாலும் தூய்மைப் படுத்துவதில் காற்று நிகரற்றது. காற்று முதலிய தூய்மைப் படுத்துகின்ற பொருள் அனைத்தும் பகவானே (சு.16) தூயதாக்குபவர். எப்போதும் எங்கும் இயற்கையாகச் சோம்பலின்றி செல்பவர். (பவந: பவதாமஸ்மி (கீதை 10.31) (291)*

292. **பாவந: - அசையத் தூண்டுபவர்..**

*காற்றும் நெருப்பும் இந்திரனும் யமனும் அவரவர் பணியில் எப்போதும் முறைவழுவாதபடி ஈடுபடும்படி கெடியால் நெறிப்படுத்துபவர்.[2] எப்போதும் சலனத்தையே இயற்கையாகக்*

1. ईशानं भूतभव्यस्य न ततो विजुगुप्सते (कठ २. १. १२)
2. भीषास्माद्वातः पवते। (तै. उ. ३. २. ७)

கொண்ட வாயுவையும் அசையக் கட்டுப்படுத்துபவர். கங்கை முதலானவற்றில் தூய்மை தரும் சக்தியாக நின்று அவைகள் மூலம் தூய்மைப்படுத்துபவர். (நா. 62, 811) *(292)*

293. அநல: - பிராண சக்தியை ஏற்பவர்.

(அநம் சலனம் லாதி) உடலிலுள்ளப் பிராண சக்தியின் இயக்கத்தைத் தனதாக ஆக்கிக் கொண்டு ஜீவாத்ம வடிவில் துலங்குபவர். நல: மணம். மணமோ மற்ற குணச் சிறப்போ இல்லாத பரம்பொருள்[1] (ந அலம்: யஸ்ய - அநல: நெருப்பு) எத்தனை போட்டாலும் எதனைப் போட்டாலும் நெருப்பு எரித்து விடும். விறகு போடப்போட நெருப்பு வளரும். நெருப்பானவர். பகவானுக்கு நாம் அளிப்பது எத்தகையதாயினும் எந்த அளவிலிருந்தும் அவருக்கு நிறைவு தருவதாக ஆகாது. அவர் இயல்பால் நிறைவுள்ளவரானதால் பரிவால் அவற்றை ஏற்பார். அநுபவிக்க தெவிட்டாதவர். வாழச் செய்பவர். (நா.711) *(293)*

294. காமஹா - பற்றை நீக்குபவர்.

முக்தி அடைய விரும்புகின்ற அடியார்களின் உள்ளத்தில் உள்ள ஆசையாகிய கட்டை - ஸம்ஸாரப் பற்றை அகற்றுபவர் தனது அடியார்களைத் துன்புறுத்த முயலுகின்ற கொடியவர்களின் ஆசையையும் நிறைவேறுதபடி செய்பவர். தமது சிறப்புகளில் ஈடுபட்டவர்களுக்கு வேறு பொருளில் நாட்டம் ஏற்படாதபடி செய்பவர். *(294)*

295. காமக்ருத் - ஆசையை நிறைவேற்றுபவர்.

நல்லோர்களுக்கு நல் விஷயத்தில் ஏற்படும் ஆசையை நிறைவேற்றி வைப்பவர். மனத்தினுள் ஆசையை முளைக்க வைக்கின்ற தேவதையான மன்மதனைத் தோற்றுவித்தவர். கண்ணனாகத் தோன்றியபோது ருக்மணியிடம் பிரத்யும்னனைத் தோற்றுவித்தவர். அவரவர் விரும்பியபடி போகத்தையோ மோக்ஷத்தையோ அருள்பவர். *(295)*

---

1. अरसमगन्धं (बृ. आ. ३. ८. ८.) तथाऽरसं नित्यमगन्धवच्च यत् (कठ १. ३.

296. காந்த: - மிக அழகானவர்..

*நாடியதைப் பெற விரும்புபவர்கள் விருப்பம் நிறைவேற உறுதுணையாகச் சென்றடையப் பெறுபவர். தமது வடிவழகு, முதலிய சிறப்புகளால் யாவராலும் விரும்பப்படுபவர். (296)*

297. காம: - நல் விருப்பமானவர்..

*அடையக்கூடியதை அடையவேண்டும் என்ற விருப்பமாக உள்ளவர். தனது நன்னடத்தை, பரிவு, விரும்பியதை அளவின்றி வழங்கும் பெருமனம் முதலியவற்ருல் கவரப்பெற்ற அடியார்களின் ஒரே விருப்பமானவர். (297)*

298. காமப்ரத: - விருப்பத்தைத் தருபவர்..

*அடியார்கள் விரும்பியதை நன்கு நிறைவேற்றுபவர். தன்னையே கேட்டாலும் தருபவர். (298)*

299. ப்ரபு: - வல்லவர்..

*எல்லா விருப்பங்களையும் எப்போதும் நிறைவேற்றுவது அவரது இயல்பு. மிகவும் உயர்ந்தவர். எதனையும் சாதிக்கின்ற வல்லமை படைத்தவர். தன்னுடைய சிறப்புகளால் மனத்தைக்கவர்ந்து ஆட்படுத்திக்கொள்பவர்.[1] (299)*

**युगादिकृद्युगावर्तो नैकमायो महाशनः ।**
**अदृश्यो व्यक्तरूपश्च सहस्रजिदनन्तजित् ॥ ६४ ॥**

**யுகாதிக்ருத் யுகாவர்தோ நைகமாயோ மஹாஸந:**
**அத்ருஶ்யோ வ்யக்தரூபஶ் ச ஸஹஸ்ரஜிதநந்தஜித். 64**

300. யுகாதிக்ருத் - யுகம் முதலியவற்றைச் செய்பவர்..

*முடிவற்றுச் சுழல்கின்ற கால சக்கிரத்திற்குச் சிறு பிரிவுகளை ஏற்படுத்திப் பரிணமத்திற்கான பல மாறுபாடுகளைப் ஏற்படுத்துபவர். காலவரையில் மிகப் பெரிது கல்பம். இரண்டு ஆயிரம் சதுர் யுகங்கள் கொண்ட பிரும்மாவின் நாள் இது. இந்தக் கல்பம் எனும் காலவரை அதற்கு முன்னிருந்த கல்பத்தின் இறுதியில் இருந்த நிலையுடன் தொடர்பு கொண்டதே. முன்*

1. *ஸ்ரீ பட்டரின் உரைப்படி இத்துடன் 300 நாமங்கள்*

*வாழ்ந்த உயிரினங்களின் வினைப்பயனையும் வாஸனையையும் ஸூக்ஷ்ம சரீரத்தையும் காப்பாற்றி மறுபடி உயிரினங்களை முன்வினைக்கேற்ப உருக்கொள்ளச் செய்வதால் முன் தொடர்பைத் தருவதால் அது யுகம் - தொடர்புதருவது. பகலுக்கும் இரவுக்கும் அதனைத் தொடரும் பகலுக்கும் உள்ள தொடர்பே வாழ்வாகிறது. கல்பம் தொடங்கும்போதுள்ள மஹா யுகத்திலிருந்து நொடிக்கு நொடியுள்ள யுகம் வரை தொடரைத் தொடங்கிவைக்கிறார். சென்ற கல்பத்தின் இறுதியில் இத்துடன் உலகம் முடிந்துவிட்டது என்றிருந்த நினைவையகற்றி மறுபடி உலகம் தொடர்ந்து வாழ்கின்றது என்ற நினைவைத் தருகிறார். இந்தக் காலவரையறையான யுகத்தின் தொடக்கத்தையும், யுகம் வர்ஷம் ருது மாதம் தினம் பகல் இரவு நாழிகை நொடி முதலிய காலவரைகளையும் ஏற்படுத்தியவர். (நா. 422) இந்தக்கால வரையை காலகாலனாக முடிப்பவரும் கூட. (300)*

**301. யுகாவர்த: - யுகத்தைத் திருப்புகிறவர்..**

*காலசக்கிரத்தை யுகம் என்ற அளவுக்கடங்கினதாகக் தொடங்கி வைத்த பகவான் அந்த சக்கிரத்தைச் சுழல வைத்தார். காலசக்கிரம் சுழலும்போது தொடங்கியபோதிருந்த நிலை மறுபடி தோன்றியதும் மீண்டும் பகல், இரவு, கோடை, மழை, பனி என ஓயாமல் திரும்பத் திரும்பச் சுழல வைத்தார். அந்தந்த காலவரைக்கேற்றச் சிறப்பு நிலைகளையும் மாறி மாறி வரும்படி அமைத்தார். (301)*

**302. நைகமாய: - பல மாயைகள் உள்ளவர்..**

*நேற்று நடந்ததேதான் இன்றும் நடக்கிறது என்று உயிரினம் உணராமல் புதிது புதிதாகத் தோன்றுவதாக நினைத்து அந்த கால சக்கிரத்தில் அகப்படும்படி பல மாயைகளைப் புரிபவர். இந்த கால சக்கிரத்தில் தானும் அகப்பட்டவனே என்று நினைக்கச் செய்து உயிரினத்தால் இயலாததும் வரம்பு மீறியதுமான பல விந்தையான லீலைகளைப் புரிந்தவர். குழந்தையாகி வாயில் அண்டங்கள் அனைத்தையும் காண்பித்தது, ஏழு வயதுச் சிறுவன் மலையைக் குடையாக்கித் தாங்கியது, இளம்பிஞ்சு போன்ற மென்மையுள்ள உடல் வாகுடன் மல்லர்கள் போன்ற கொடிய அரக்கர்களை மாய்த்தது முதலியவை இந்த மாயையால் விளைவித்தவை.*

*பொருந்தாதெனக் கருதக் கூடியவைகளைத் தன்னிடம் பலவிதமாகப் பொருத்திக் காட்டுவதால் அவர் நைகமாய:[1] இயற்கையைத் தன் வசப்படுத்தி, மேகம் கூடுவதும் கலைவதும், கடலலை கரை தாண்டுவதும் அடங்குவதும், வாயுவின் சீற்றமும் மின்னலின் தாக்கும் மற்றும் பல அற்புதச் செயல்களும் அவரது மாயையின் விளைவே* **(302)**

**303. மஹாசந: - பெருந்தீனி கொள்பவர்.**

*மாயையால் உலகைப் படைத்து விரிவடையச் செய்த பகவான் கல்பங்களின் இறுதியில் உலகை விழுங்குகிறார். உலகை விழுங்கும் மகாதேவனுக்கு யமன் ஊறுகாய் என்றது கட உபநிடதம்.[2] பிரளயத்தில் எல்லாம் ஒடுங்கும்போது, தாற்காலிக ஒடுக்கத்தைச் செய்கிற யமனும் ஒடுங்கிவிடுகிறான். உணவு எப்படி சாப்பிடும் வரை தனியாக உணரப்பெற்றாலும் உண்ட பின் உண்டவனாகவே ஆகிவிடுகிறதோ, அதுபோல் பிரளயம் வரை தனித்திருந்த உலகம் லயமடைந்ததும் பரம்பொருளாகவே ஆகிவிடுகின்றது. உலகில் உள்ளதனைத்தையும் விச்வரூப வடிவில் கண்ணன் வயிற்றிலிருப்பதாக யசோதையும் அர்ஜுனனும் காண்கிறார்கள். மஹத் தத்துவம் வரையிலுள்ள மூலப் பொருள்களனைத்தையும் லயப்படுத்துவதால் பெருந்தீனி கொள்பவர்.* **(303)**

**304. அத்ருச்ய: - காணக் கூடாதவர்..**

*கண் முதலிய ஐந்து இந்திரியங்களும் மனமும் புத்தியும், பெயரும் வடிவமும் மற்ற சிறப்புகளும் கொண்ட வெளியில் உள்ள பொருளை உணர்த்துகின்றன. மனம் புத்தி பொறிகள் இவைகளுக்கு இறைவன் பொருளாவதில்லை. இது இப்படி எனக் கருத முடியாத அளவில் அறிவிற்கெட்டாத செயலுள்ளவர்.[3]* **(304)**

**305. வ்யக்தரூப: - புலப்படுகிற வடிவுள்ளவர்..**

*முன் நாமங்களில் ''மாயைகள் கொண்டவரானதால் மாயியான அவரைக் கண்டுகொள்ள இயலாது. மனம் முதலிய*

---

1. अस्मान्मायी सृजते विश्वं। विश्वान्मायिनं तु महेश्वरम्। (श्वेताश्व ४.९.१०)
2. यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः। मृत्युर्यस्योपसेचनम्। (कठ १.२.२४)
3. अद्रेश्यमग्राह्यमगोत्रं (मुण्डके १. २. ६) अदृश्यमव्यवहार्यमग्राह्यमलक्षणं.... शान्तं शिवमद्वैतं (माण्डूक्य १. ७)

வற்றிற்கு அப்பாற்பட்டவரானதால் புலப்படமாட்டார்'' என்பது விளக்கப்பெற்றது. பரம்பொருள் என்ற நிலையில் உணரப்படாதவராக இருந்தவரே, தனது லீலை என்ற ஒரே காரணம்கொண்டு இந்த பிரபஞ்ச வடிவில் புலப்படுகிறார். விராட் ஆகிய ஸ்தூல ஸமஷ்டியாக வடிவேற்கிறார். அதன்பின் விரிந்த இந்த உலகமாகக் காட்சி தருகிறார். அடியார்களிடம் பரிவு கொண்டு ராமர், கிருஷ்ணர் முதலிய திவ்ய மங்களத் தோற்றங்கள் மூலம் தானே தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறார். ஊனக் கண்ணுள்ளவர்களுக்கு அத்ருச்யராக இருப்பவரே ஞானக்கண்ணுள்ளவருக்கு வ்யக்த ரூபராகிறார் என்பதை வ்யக்தரூபச்ச என்ற சகாரம் உணர்த்துகிறது.

யோக முறைகளில் தேர்ந்து ஸமாதியில் அமர்ந்து உள் நோக்குபவர்களான யோகிகளின் உள்ளத்தில் தானே வடிவம் கொண்டு புலப்படுகிறார். (305)

306. ஸஹஸ்ரஜித் – ஆயிரக்கணக்கானவரை வெல்பவர்.

எதிரிகள் ஆயிரக்கணக்கில் பொருதினாலும் அவர்களைத் தனித்து நின்று வேறு துணையின்றி வெல்பவர். கல்பத்தின் இறுதியில் ஆயிரம் யுகங்கள் பிரும்மதேவனின் இரவு. அந்த இரவில் பிரும்மா உறங்கும்போது எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிவிடுகிறார். அப்போது இறைவன் தான் மாத்திரம் மிகுந்திருந்து யோக நித்திரையில் ஆழ்ந்து நிற்கிறார். (306)

307. அநந்தஜித் – எண்ணற்ற உயிரினத்தைக் கடந்து நிற்பவர்.

உயிரினங்களும் அவைகளின் செயல்களும் எண்ணற்றவை. பகவானின் எண்ண இயலாத சக்தி வெள்ளம் உயிரினங்களின் எண்ணற்ற சக்திகளையும் விஞ்சி, அவற்றின் எல்லை கடந்து நிற்கின்றது. எறும்பிற்குச் சாரி சாரியாகச் செல்வது, வெகு தூரத்திலுள்ள உணவையும் முகர்ந்துஉணர்வது போன்ற அதிசயிக்க தக்க செயல் உண்டு. இப்படி ஒவ்வொரு உயிரினத்திற்கும் ஒன்றல்லது பல அதிசயிக்கத் தக்க சக்திகள் இருக்கக்கூடும். பகவானிடம் இந்த சக்திகள் அனைத்தும் உள்ளன. அவரது பெருமையின் எல்லையை யாரும் காண முடியாது. (307)

इष्टोऽविशिष्टः[1] शिष्टेष्टः शिखण्डी नहुषो वृषः ।
क्रोधहा क्रोधकृत्कर्ता विश्वबाहुर्महीधरः ॥ ६५ ॥

இஷ்டோऽவிஶிஷ்[1]டஶ் ஶிஷ்டேஷ்டஶ்ஶிகண்டீ நஹுஷோ வ்ருஷ:
க்ரோதஹா க்ரோதக்ருத் கர்தா விச்வபாஹுர் மஹீதர: 65

308. இஷ்ட: - விரும்பப்படுபவர்..

அதிசயிக்கத்தக்க பெருமை கொண்டவராயினும் பரமானந்த வடிவினராதலால் எல்லோரும் அவரை அடைய விரும்புவர். மிகவும் பிரியமான பொருளே இஷ்டம் - விரும்பப்படுவதாக ஆகிறது. விரும்பத்தக்கவைகளில் மிகச் சிறந்தது 'நான்' ஆகிய ஆத்மாவே. அந்தப் பிரியமான ஆத்மாவாக இருப்பவர். நாம் மிகவும் விரும்பியவற்றையே தேவதைகளுக்கு வேள்விகளில் அர்ப்பணம் செய்கிறோம். 'யதந்ந: புருஷோ பவதி ததந்நாஸ் தஸ்ய தேவதா:' இப்படி மிகவும் விரும்பிய பொருளை வேள்விகளில் அளித்து வழிபடப்பெற்றவர். (இஜ்யதே). (308)

309. அவிசிஷ்ட: - தனித்திராதவர்..

பிரியமான பொருளனைத்தும் விரும்புபவனைக் காட்டிலும் வேறுபட்டிருக்கும். மனைவி, மகன், உணவு எனத் தன்னைக்காட்டிலும் வேறுபட்டதையே எவரும் விரும்புவர். ஆனால் அந்த விருப்பங்கள் எல்லாம் தனக்கு மகிழ்ச்சியூட்டவே. அதனால் அந்தத் 'தான்' தான் அதிகம் விரும்பப்படுவது. அந்த ஆத்மா தன்னைக் காட்டிலும் வேறுபடாதது. தனித்திராதது. அந்த தனித்திராத ஆத்மாவாக இருப்பவர். அந்தர்யாமியாக உள்ளிருந்து வழிகாட்டும் நிலையிலும் அவர் தனித்திராதவரே[2] (ப. 6-8) மிக்காரில்லாதவர்.

இஷ்ட: அவிசிஷ்ட: என்ற இரண்டும் ஸ்ரீ பட்டர் உரைப்படி ஒரே நாமம் அவிசிஷ்ட: இஷ்ட:. பிரளய காலத்தில் தனக்குள்ளேயே தங்கியுள்ளவர். அனைவராலும் வேற்றுமையின்றித் தாய் போல் விரும்பப் பெறுபவர். விசிஷ்ட: என்றும் பாடம். (நா. 249) எல்லோரையும்விடச் சிறந்தவர். (309)

1. विशिष्टः விசிஷ்ட: (பா)

2. नाल्पः साक्षी अविशेषः... अनन्तोऽभिन्नः (नृसिंह उ. ९. १३)

**310. சிஷ்டேஷ்ட: - பண்புள்ளவரால் விரும்பப்பெறுபவர்.**

*குருமுகமாக நல்வழியறிந்து குருவால் பண்படுத்தப் பெற்றவரும் ஆத்மஞானியும் தவறான வழியில் செல்லாதவரும் சிஷ்டர். இவரால் விரும்பப்பெறுபவர் பகவான். (சிஷ்டானும் இஷ்ட:) பகவானும் இந்த சிஷ்டரிடம் பிரியமுள்ளவர். (சிஷ்டா: இஷ்டா: யஸ்ய)* **"ப்ரியோஹி ஜ்ஞாநிநோ அத்யர்த்தம் அஹம், ஸ ச மம ப்ரிய:"** *(கீதை. 7-17) பகவானால் வகுக்கப் பெற்ற அறநெறியை மீறி நடப்பவன் ஈச்வர த்வேஷியாகிறான்.* **"ஆஜ்ஞாச்சேதீ மம த்வேஷீ"** *அப்படி ஆகாமல் அறநெறிப்படி நடப்பவன் ஈச்வரனுக்குப் பிரியனாகிறான். சிஷ்டர்களால் வழிபடப்பெற்றவர். ஞானி இவரையே சிறந்த புருஷார்த்தமென விரும்புவார்.* *(310)*

**311. சிகண்டீ - மயில்தோகையை அணிந்தவர்..**

*கண்ணனாகக் கோகுலத்தில் வசிக்கும்போது மயில் தோகையைச் சிகையணியாகக்கொள்ளவார். அவரது எளிமையையும் மயக்குகிற அழகையும் காட்டுவது இந்த மயில்தோகையணி. அவரது இணையற்ற அழகே அவருக்கு அணி. (தன் விருப்பப்படி மரணமடைகிற வரம்பெற்ற பீஷ்மர், போர்முனையில் சிகண்டியை அர்ஜுனன் தன் முன்நிறுத்தியதும் சிகண்டியுடன் போரிடுவதைவிட மரணம் மேல் என்ற முடிவற்குவந்ததும் தன்வச மிழந்த நிலையும் பீஷ்மருக்கு நினைவில் தற்போது வந்திருக்கும்)* *(311)*

**312. நஹுஷ: - கட்டுப்படுத்துபவர்..**

*கயிற்றால் பிணைப்பதுபோல் தன் மாயையால் எளிமையையும் அழகையும் காட்டி அனைத்தையும் கட்டுப்படுத்துபவர்.* *(312)*

**313. வ்ருஷ: - விரும்பியதைப் பொழிபவர்..**

*விரும்பியதை வாரி வழங்குகின்ற தர்ம வடிவினர். (நா. 113, 257) கோடை மழைபோல், மனத்திலும் உடலிலும் உள்ள தாபமனைத்தும் நீங்கச் செய்து மகிழ்விப்பவர்.* *(313)*

**314. க்ரோதஹா - கோபத்தை விலக்குபவர்..**

*கோபத்தை விலக்கியவரே இறைவனது உண்மை நிலையை அறிவார். காமமும், காமம் தடையுறுவதால் ஏற்படுகின்ற*

கோபமும் ரஜோகுணத்தால் ஏற்படுபவை. அறிவைச் சிதறச் செய்பவை. நல்லவர்களின் உள்ளத்தில் அமர்ந்து காமத்தை மாற்றிக் கோபத்திற்கு இடமளிக்காமல் அடக்கி நல்வழிப்படுத்துபவர். பகவானுக்கும் கோபம் வரும். "**ரோஷமாஹாரயத் தீவ்ரம்**" *(ராமாயணம், 3-30-19)*. "**க்ரோதஸ்ய வசமேயிவான்**" *(6-59-136)* எனக் கோபத்தைச் செயற்கையாக வரவழைப்பதும் உண்டு. அப்படிக் கோபத்தை உண்டாக்கிக்கொண்டதுபோல் கோபத்தை எளிதில் நொடிப்பொழுதில் அடக்கவும் அவரால்தான் இயலும். காமமும் குரோதமும் இயல்பாக அவருக்கு அமைந்தவையல்ல.

வினைக்கேற்றவாறு துன்பங்கள் ஏற்படும்போது அறியாமையால் அடியார்களும் பகவானிடம் கோபித்துக்கொள்வது உண்டு. வினைப்பயன் என்பதை உணர்த்தி அவர்களது கோபம் சமனமடையச் செய்வார். *(314)*

315. **க்ரோதக்ருத்கர்தா - கோபத்தை உண்டாக்குபவர்களைச் சிதைப்பவர்.**[1]

அறநெறிக்கு மாறுகச் செல்பவர்களுக்குத் தன் விருப்பத்திற்கு மாறுக நடக்கின்ற நல்லோர்களிடம் கோபம் எழும். அப்படி நல்லோர்களிடம் கோபப்பட்டுத் துன்புறுத்துபவர்களைச் சிதைப்பவர். அறநெறிக்கு மாறுகச் செல்பவர் இறைவனின் எதிரி. "**சுருதிஸ்ம்ருதீ மமைவாஜ்ஞா யஸ் தாம் உல்லங்க்ய கச்சதி ஆஜ்ஞாத்ரோஹீ மம த்வேஷீ**". க்ரோதக்ருத்கர்த்ரே நம:.

க்ரோதக்ருத் - கோபத்தை உண்டாக்குபவர். தர்மத்தை அழிக்க முற்பட்டவர்களை அடக்கப் பகவான் கோபத்தைத் தன்னிடம் செயற்கையாகத் தோற்றுவிப்பார். எல்லோருக்கும் பிரியமான ஆத்மாவாக அவரவர்களிடத்தில் இருக்கின்ற பகவானுக்கு எதிரி என ஒருவரும் இல்லை. தர்மத்தைக் குலைப்பவனை அடக்கக் கோபம்கொள்கிறுர். சாந்தமான மனமுள்ள முனிவருக்கும் கோபத்தை உண்டாக்கிச் சாபம் முதலியவற்றை அளிக்கச் செய்து அறநெறியைப் பாதுகாப்பதும் உண்டு. கர்ம பல தாதாவாக இருக்கின்ற ஈச்வரன் நல்லதே செய்தறியாத துஷ்டனுக்கு வினைப்பயனுகக் கோபம் முதலியவற்றை உண்டாக்குவதால்

1. एष ह्येवैनं साधु कर्म कारयति तं, यमेभ्यो लोकेभ्य उन्निनीषते। एष उ एवैनमसाधु कर्म कारयति तं, यमेभ्यो लोकेभ्यो नुनुत्सते। (कौषीतकी ३. ९)

தவறான பாதையில் சென்று அவர்கள் தானே அழியச் செய்வார். நல்லதையே செய்பவனுக்கு அமைதி அளித்து நல்வழி புலப்படச் செய்து மேன்மையடையச் செய்வார். (ப. 7,8) **"தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந். க்ஷிபாம்யஜஸ்ரமசுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு".** *(கீதா. 16-19)* க்ரோதக்ருதே நம:,

*கர்தா* - உலகைப் படைப்பவர். உலகையும் அதனை இயங்க வைக்கின்ற ஸூர்யன் சந்திரன் முதலானோரையும் படைத்தவர். *(கரோதி)*[1] தனது ஆணையை மீறி பகவானின் துவேஷியாக இருப்பதில் பெருமைகொள்ளும் அகரர்களை வெட்டி மாய்ப்பவர். *(க்ருந்ததி) (நா. 380) கர்த்ரே நம:.*

*க்ரோதக்ருத் கர்தா என இரு நாமங்களாகக்கொள்வதும் உண்டு. ஸ்ரீ சங்கரர் முதலில் க்ரோதக்ருத், கர்தா எனத் தனித் தனியாக உரை செய்து பின் இரண்டையும் சேர்த்து ஒரு நாமமாகக் கூறியுள்ளார். க்ரோதக்ருத்கர்தா என்று ஒரு நாமமாக சங்கர ஸம்பிரதாயத்தினர் கூறுவர். ஸ்ரீ பட்டர் தனித்தனி நாமமாகக்கொண்டுள்ளார். இங்கு முதலில் சேர்த்தும் பிறகு பிரித்தும் பொருள் தரப்பட்டுள்ளது.* *(315)*

316. விஸ்வபாஹு: உலகிற்குக் கை கொடுப்பவர்.

*உலகிற்காக, உலகைத் தாங்குவதற்காகப் ஆயிரக்கணக்கான கைகளை உடையவர். அடியார்கள் உதவிகோரும்போது எல்லா இடத்திலும் தன் கைகளை நீட்டிப் பிடித்துக்கொள்பவர்.*[2] *அறநெறிக்கெதிரானவர்களை மாய்த்து உலகிற்கு நன்மை தருகின்ற பலரது கைகளானவர். உலகையே கைகளாகக்கொண்டவர். அதனால் ஒருவருக்கொருவர் உதவவும் துன்புறுத்தவும் செய்து வினைப்பயனை அனுபவிக்கச் செய்பவர்.* *(316)*

317. மஹீதர: - பூமியைத் தாங்குபவர்..

*விரிந்து பெரிதாகத் தோன்றுவதாலும் பொறுமைக்கிட மாகிப் பெருமைக்குரியவளாதலாலும் பூமி 'மஹீ' ஆகிறாள். பூமியின்*

---

1. एतेषां पुरुषाणां यः कर्ता, यस्य वैतत्कर्म स वै वेदितव्यः। (कौषीतकी ४. १) यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषं (मुण्डके ३. १. ३) स विश्वकृत्स हि सर्वस्य कर्ता (बृ. आ. ४.४.१३)
2. विश्वतो बाहुरुत विश्वतस्पात्। (श्वेताश्व ३.३) विश्वतोहस्त उत विश्वतस्पात्। (तै.आ.१०.१)

நிலைகுலைவதற்கான காரணங்களை அகற்றியும், பூமிக்குப் பாரமாய் தாரண சக்திமிக்க அறநெறிக்கெதிராய் வாழ்பவர்களைக் களைந்து அகற்றியும் பூமியைத் தாங்குபவர். பூமியில் வாழும் மக்களின் வழிபாட்டையும் ஏற்பவர்[1]. (மஹீ - பூஜை, வழிபாடு) (நா. 182, 235, 317, 369, 751) (317)

अच्युतः प्रथितः प्राणः प्राणदो वासवानुजः ।
अपां निधिरधिष्ठानमप्रमत्तः प्रतिष्ठितः ॥ ६६ ॥

அச்யுத: ப்ரதித: ப்ராண: ப்ராணதோ வாஸவாநுஜ:
அபாம்நிதிரதிஷ்ட்டானமப்ரமத்த: ப்ரதிஷ்ட்டித: 66.

318. அச்யுத: - நிலை மாறுதவர்..

முன் மறைந்து பின் தோன்றுதல், (ஜாயதே) இருத்தல் (அஸ்தி) வளர்தல் (வர்த்ததே) மாறுபாடடைதல் (விபரிணமதே) தேய்தல் (அபக்ஷீயதே) மறைதல் (நச்யதி) என்று ஆறு நிலைகள் (பாவங்கள்) பொருளனைத்திற்கும் உண்டு. ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குச் செல்லும்போது முன்நிலையில் இருந்து நழுவுதல் (ச்யுதி) ஏற்படும். அவ்வாறின்றி நிலை மாறுதவர். (நா.100)

பிரும்மா முதலிய தேவர்களும் தேவ நிலையில் இருக்கும்போதே பகவானின் லீலையால் அல்லது காமம் முதலியதன் வசப்பட்டு நிலை தவறுவது உண்டு. காமம் முதலியதன் வசப்படுவதை இயல்பாகக்கொண்ட மனிதனாகத் தோன்றிய போதும் பகவான் தன் நிலை தவறியதில்லை.[2] (318)

319. ப்ரதித: - கீர்த்தி பெற்றவர்.

நிலை தவறுதவர் என அவர் பெயர் பெற்றவர். ஒருவனை நினைவு கூர்ந்து அவனைப் பற்றி வாயாரப் பெருமையுடன் கூறுவது ப்ரதா - கீர்த்தி. நல்லதையே நினைத்து நல்லதையே பேசி நல்லதையே செய்பவனுக்குத்தான் கீர்த்தி நிலைக்கும். படைப்பு, காப்பு, ஒடுக்குதல் என்ற செயல்களில் நிலைத்த கீர்த்தியைப் பெற்றவர்.[3] (319)

1. उद्धृतासि वराहेण कृष्णेन शतबाहुना। (तै. आ. १०. १)
2. शाश्वतं शिवमच्युतम्। (तै. आ. १०. १३)
3. तस्य नाम महद्यशः। (तै. आ. १०.१)

320. ப்ராண: - ஸூத்ராத்மா எனும் ப்ராணனுயிருப்பவர்..

சரீரம், ஜீவாத்மா, பரமாத்மா என மூன்று தத்துவங்கள். சரீரம் மூன்று வகை - ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என. ஸ்தூல பூதங்களாலான உடல் ஸ்தூல சரீரமாகும். இது பொறிகளால் உணரக்கூடியது. பத்து இந்திரியங்களும் மனமும் பிராணனும் ஸூக்ஷ்ம சரீரமாகும். இது அறிவாலும் செயலாலும் ஊகித்தறியக் கூடியது. மூன்ருவது முன் வினையாலான சரீரம் - காரண சரீரம் எனப்படுவது. ஜீவன் இதற்கு முன் பல பிறவிகளை எடுத்துள்ளான். அவற்றில் சேர்ந்த வினைகளில் பலவற்றைப் பல பிறவிகளில் அனுபவித்துவிட்டான். அப்படிப் பலன் கொடுத்துத் தீர்ந்தவை (புக்தம்) நீங்கிவிட்டன. அவை தவிர அனுபவித்துத் தீர்க்கவேண்டியதாக மீதி உள்ளவை ஸஞ்சிதமாகும். அவற்றில் தற்போது உள்ள பிறவியை அளித்து இப்பிறவியில் அனுபவித்துத் தீர்க்கவேண்டியவை பிராரப்தமாகும். இந்த பிராரப்த வினைகள் தமது அனுபவத்திற்கேற்ற ஸ்தூல ஸூக்ஷ்ம சரீர அமைப்பைத் தந்துள்ளன. அவ்வினைகள் வாஸனைகளாகி ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரத்தினுள் புகுந்த ஜீவனைச் சுற்றிச் சிறையெடுத்தது போன்று சூழ்ந்து நிற்கின்றன. இது காரணசரீரம்.

புரியும் செயல்கள் அனைத்தும் மனத்தில் ஆழ்ந்த தடத்தை ஏற்படுத்துகின்றன. அந்தத் தடத்தில் ஏற்பட்ட மனப்பதிவு எளிதில் அகலுவதில்லை. என்ருே ஒரு நாள் உணவளித்த மனிதனைக் கண்டதும் நாய் வாலாட்டுகிறது. இவன் உணவளிப்பவன் என்ற திடமான மனப்பதிவே இதற்குக் காரணம். இந்த மனப் பதிவே வாஸனையாகும். இதேபோல் பல பிறவிகளில் ''அழுதால் பால் கிடைக்கும். பால் வளர்ச்சியைத் தரும்'' என்ற மனப் பதிவே பிறந்ததும் குழந்தையை அழத்தூண்டித் தாயின் மார்பிலிருந்து பாலைச் சப்பிச் சாப்பிடச் செய்கிறது. இப்பிறவியில் குழந்தைக்கு இப்படிப் பழக்கம் ஏற்படவில்லை. முன் பிறவிகளில் உணர்வின் அடித்தளத்தில் ஏற்பட்ட வாஸனையே இப்பிறவியில் பால் குடிக்க வைத்தது. இந்த வாஸனையே ஜீவனைச் சூழ்ந்துள்ள மூன்ருவது சரீரம். இது மிக முக்கியமானது. காரண சரீரம் எனப்படுவது.

ஜீவன் இந்த மூன்று சரீரங்களிலிருந்தும் வேறுபட்டவன். ஆனுல் அனுபவத்தில் இந்த சரீரங்களையே 'தான்' 'தனது' என்று ஆழ்ந்து எண்ணுகிருன். தானுகவோ தனதாகவோ அல்லாததும் தன்னைக்காட்டிலும் வேறுபட்டதுமான ஒரு பொருளிடம் 'தான் 'தனது' என எளிதில் மாருத ஆழ்ந்த மதிப்பை வைப்பது

'அபிமானம்' ஆகும். ஜீவன் இந்த மூன்று சரீரங்களையே 'தான்' என நினைக்கிறான். தனது சரீரம் என அவற்றுடன் ஒட்டிக்கொள்கிறான். இந்த அபிமானமே இவனுக்குத் தளையாகி இவனைக் கட்டுகிறது. இதுவே ஸம்ஸார பந்தம், கட்டு. ஆத்மா ஒருவித பந்தமுமில்லாதவர். அவருக்குத் தன்னிலிருந்து முற்றிலும் வேறுபட்ட மூன்று சரீரங்களைத் தான் ஆகப் பாவித்துக்கொள்வதே பந்தமாகிறது. அதனால் ஜீவாத்மா கட்டுண்டவராகிறார்.

பரமாத்மா இந்த ஜீவாத்மாவிடம் பிரதிபலிக்கிறார். அவர் பிரதிபலிக்கும் இடம் மூன்று 1. இச்சா - ஞான சக்திவடிவமான ஜீவனின் அந்தக்கரணமான புத்தியிலும் மனத்திலும் பிரதிபலிக்கிறார். அப்போது அவருக்கு ஹிரண்ய கர்ப்பர் எனப் பெயர். அவர் அப்படி இருப்பதை ஜீவனின் மனமும் புத்தியுமே உபாதியாக நின்று மறைக்கின்றன. உபாதி என்பது சுய வடிவை மறைக்கின்ற பொருள். ஸ்படிக லிங்கம் நிறமற்றது. அதன்மேல் செம்பரத்தம்பூவை வைத்தவுடன் லிங்கம் சிவந்து காண்கிறது. பூவை அகற்றியதும் இயற்கையான நிறமின்மை காண்கிறது. பூவின் சேர்க்கையால் லிங்கத்தில் ஏற்பட்ட மாறுதல் நிலைக்கவில்லை. தான் சேர்ந்திருக்கும் வரைத் தன் சிவப்பு நிறத்தை லிங்கத்திடம் ஏற்றி வைத்த பூ (உப ஆததாதி) உபாதி. சேதனம் ஜடப்பொருளுடன் கூடியிருப்பதால் ஜடப்பொருளும் சேதனம் போல் தோன்றும். சேதனத்தையும் ஜடப்பொருளாக மதிப்பதால் சேதனமும் ஜடமாகத் தோன்றும். இது உண்மை நிலை அறியாமை எனும் உபாதியால் ஏற்படும் பிரமை. இப்படி மனமும் புத்தியும் உபாதியாக நின்று மறைப்பதால் ஹிரண்யகர்ப்பராகப் பரமாத்மா பிரதிபலிப்பதை நாம் உணர்வதில்லை. 2. நம் உடலை இயக்குகின்ற பிராணன் கிரியா சக்தி வடிவம். அதில் பரமாத்மா பிரதிபலிக்கிறார். அவர்தான் ஸூத்ராத்மா. பிராணனென்ற பிரமையால் அந்த ஸூத்ராத்மா இருப்பதை நாம் உணர்வதில்லை. 3) இந்த இச்சா - கிரியா - ஞான சக்தித் தொகுப்பில் பரமாத்மா பிரதிபலிக்க அவர் அந்தர்யாமியாகிறார். இங்கு பிராண சக்தியில் பிரதிபலிக்கும் ஸூத்ராத்மா எனும் பரமாத்மா ப்ராணர்.

ப்ராண: ப்ராணத: என்ற இரு நாமங்கள் மூன்று இடங்களில் சேர்ந்தே வருகின்றன. (நா. 65-66.320-321, 407-408) ப்ராணத: என்பது மட்டும் தனித்து 956வது நாமமாக வருகிறது. இவற்றிற்கு முன்பின் அமைந்துள்ள நாமங்களின் தொடர்பால் தனிப்பொருள் கிடைக்கின்றது. தன்னிலை மாற்றமில்லாத அச்யுதர் படைப்பு

முதலிய தனது சிறப்புப் பணிகளால் புகழ் பெற்றுத் தான் படைத்த பொருளில் ஸூத்ராத்மாவாகப் பிரதிபலித்து உயிரினத்தினுள் நின்று காப்பதை விளக்குவதாக இங்கு அமைந்துள்ள தொகுப்பு விளங்குகிறது.

பரமாத்மா ஸூத்ரமாகப் பிராணசக்தியில் பிரதிபலித்துப் பிராணமயகோசத்தை வலிவு பெறச்செய்து பிராணனாக உயிரின மனைத்தின் இயக்கத்திற்கும் காரணமாகிறார். ப்ராணயதி சேஷ்டயதி ஸூத்ராத்மநா - ப்ராண:[1] ரத்தின மணிகளாலான மாலையில் தனித்துள்ள மணிகளை ஒன்றாக்கி மாலையாகத் தரிக்கத் தகுதி அளித்தது மணிகளைக் கோர்த்துத் தாங்குகின்ற நூலாகும். நூல் அகன்றால் மணிகள் சிதறி உருக்குலைந்துவிடும். அதுபோல் ஸூத்ரமாக (ஸூத்ரம் - நூல்) பரமாத்மா பிராணசக்தியால் இயங்குகின்ற கிரியா சக்தி வடிவமான கர்மேந்திரியங்களையும் பிராணன் அபானன் முதலிய வாயுக்களையும் இயக்கி வைக்கிறார். இவர் அகன்றால் உயிர் மறைந்துவிட்டதென்கிறோம். காற்று அந்த உடலை விட்டு அகலவில்லை. ஆனால் அந்தக் காற்றால் ஏற்பட்ட இயக்கம் மறைந்துவிட்டது. ஸூத்ரமாக பிராண மணிகளைத் தாங்கிய பரமாத்மாவின் பிரதிபலிப்பு ஏற்கப்படாததே அதற்குக் காரணம். அதனால் ஸூத்ராத்மாவின் பிரதிபலிப்பே உயிர்ப்பிற்குக் காரணம். (320)

321 ப்ராணத: - உயிர்ப்பைத் தருபவர்.

தேவர்களும் அஸுரர்களும் மனிதர்களும் எந்த உயிரினமும் உயிர்த்திருப்பதைக் காட்டுகின்ற பிரா்ணசக்தியைத் தருபவரும் (ப்ராணான் ததாதி) தனது பிரதிபலிப்பை அகற்றி உயிரைத் துண்டிப்பவரும் (பிராணான் த்யதி) அவரே. தேவ சக்தியாகத் தர்மம் வாழ்வதற்குத் தேவர்களை அமரராக்குகிறார். அஸுர சக்தியான அதர்மம் நலிய அஸுரர்களை மாய்க்கிறார்.

தேவர்களுக்கு அமர நிலை தருவதற்காக நடத்திய பாற்கடல் கடைதலில் கூர்மராகத் தாங்கி பலம் தருபவராக வாசுகிக்கும் மலைக்கும் கடைபவர்களுக்கும் வலிவு ஊட்டி, விஷத்தைப் பிரித்துச் சிவபெருமானிடம் அதனை அடக்கி, அமிருதத்தைக் கொணர்ந்து தேவர்களுக்கு அளித்து நிலைத்த பிராணனைத் தந்து,

1. वायुर्वै गौतम तत्सूत्रं, वायुना वै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि सन्दृब्धानि भवन्ति। तस्माद्वै गौतमपुरुषं प्रेतमाहुः व्यस्रंसिषत अस्यांगानि इति। वायुना हि गौतम सूत्रेण सन्दृब्धानि भवन्ति। (बृहदार-३..७, २)

அசுரர்களை ஏமாற்றி அவர்களது பிராணனைத் துண்டாட அஜிதர் கூர்மர் தந்வந்தரி மோஹினி அம்ருதம் என்ற பல வடிவங்களை ஏற்றவர். பாற்கடலைக் கடைபவர்கள் களைத்து விஷத்தால் மயங்கி நின்றபோது பிராண சக்தியைக் கொடுத்தவர். (321)

322. வாஸவாநுஜ: - இந்திரனுக்கு உடன்பிறந்தவர்.

அமிருதத்தைத் தந்து நிலைத்த வாழ்வை அளித்த பின்னரும் தேவர்கள் திமிரால் தன்னிலை மறந்து பகவத் பிரசாதத்தை அவமதித்ததால் ஏற்பட்ட நிலைக் குலைவை அகற்ற இந்திரனின் தம்பியாகக் கசியபருக்கு அதிதியிடம் பிறந்து தம்பி என்ற உரிமையுடன் அண்ணனுக்காகப் பலியை ஏமாற்றி அரசை மீட்ட வாமனர். தேவர்களிடம் பிராண சக்தியை நிலைக்க வைப்பதற்காகப் புரிந்த திருவவதாரம் இது. தேவர்களின் அதிகாரங்களைக் காப்பாற்றித் தர உதவி - இந்திரனாக உபேந்த்ரனாக இருப்பவர். (நா. 151) (322)

323. அபாம் நிதி: - கடலாயிருப்பவர்.

பூமியிலுள்ள நீரோட்டங்கள் சென்றடையுமிடம் - நீர் அனைத்தும் தேங்குமிடம் கடலாகும். கடல் பகவானின் விபூதி எனக் கண்ணன் கூறுகிறார் 'ஸரஸாமஸ்மி ஸாகர: (கீதை9-4) திருப்பாற்கடலைக் கடையும்போது மலைக்கும் வாசுகிக்கும் வலிவூட்டியதுபோல் கடலையும் அதன் நிலையில் தாங்கினார். அதனால் அபாம் நிதி:[1] உலகிற்கு மூலகாரணமான காரணோதகமும் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்த இடம். (நா. 245) பலதரப்பட்ட நீரோட்டங்கள் கடலில் சேர்கின்றன. அவை கலந்ததும் தன்னிலை இழந்து கடல் நீராகவே ஆகிவிடுகின்றன. அதுபோல் பகவானிடம் - கலந்தவர் பகவானாவார். (323)

324. அதிஷ்டாநம் - ஆதாரமானவர்.

கடல் சூழ்ந்த பூமிக்கும் ஆதாரமானவர். உயிரினம் அனைத்தும் ஜடசேதனப் பொருள்களின் மூலகாரணமான பரம் பொருளையே ஆதாரமாகக் கொண்டுள்ளன. தோன்றுகின்ற பொருள் அனைத்திற்கும் உபாதாந காரணம். ஜலம் முதலியவற்றில் அவற்றின் அந்தர்யாமியாக இருப்பவர். (நா. 320) பாற்கடலில்

1. अप्सु तिष्ठन् अद्भ्योऽन्तरः यमापो न विदुः यस्यापः शरीरं योऽपोऽन्तरो यमयति, एष ते आत्माऽन्तर्याम्यमृतः । (बृहदार ३. ७. ३)

*கடையும் மத்தாகப் பயன்படுத்தப்பட்ட மந்தர மலை நீரில் ஆழ்ந்தபோது அதற்கு ஆதாரமாக ஆமை வடிவில் நின்று தாங்கியவர். (324)*

325. அப்ரமத்த: - மெத்தனமில்லாதவர்..

*கள்குடி முதலியதாலும் ஆணவ மிகுதியாலும் தன்னிலை உணராமல் செயல்படுவது மதம். அதனால் கவனக் குறைவும் உரியதை உரிய வேளையில் முறைப்படி செய்ய இயலாதபடி மெத்தனமும் ஏற்படும். இந்த மெத்தனம் - ஜாக்கிரதையின்மை - பின் விளைவை எதிர்பாராத மந்த நிலை - கவனக் குறைவு பிரமாதம் ஆகும். பிரமாதமடையாதவர் - அப்ரமத்த:, எப்போதும் விழிப்புடன் தயாராகயிருப்பவர். அவரவர் வினைக்கேற்பப் பலனைத்தருவதில் மிகவும் விழிப்புடனுள்ளவர். எல்லாமறிந்தவரானதால் காலம் தேசம் நிமித்த மறிந்து உரியதை உரிய வேளையில் அனுபவிக்கும்படி செய்பவர்.*

*திருப்பாற்கடலைக் கடையும்போதும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் விழிப்புடன் செயலாற்றி அமிருதத்தை உரியவர்களுக்கு அளிப்பதில் முழுக் கவனம் செலுத்தியவர். (325)*

326. ப்ரதிஷ்ட்டித: - நன்கு நிலைகொண்டவர்..

*பிறர்க்கு ஆதாரமாக இருப்பவன் தான் நிலைத்து நிற்கவேண்டும். ஆடுகின்ற ஆசனத்தில் நிற்பவன் ஆடுகின்ற மற்றொருவனைத் தாங்கி ஆடாமல் நிறுத்த முடியாது. பகவான் வலிவுள்ள நிலை (பிரதிஷ்டை) கொண்டவர். வேறொன்றை ஆதாரமாக் கொண்டவன் அந்த ஆதாரத்தின் நிலைக்கேற்பவே நிலைத்திருக்கமுடியும். பகவான் எல்லாவற்றிற்கும் நிலையான ஆதாரம். அவருக்கு வேறு ஆதாரமில்லை. அவரது பெருமையிலேயே - அவரது சுயசக்தியிலேயே - அவரிடமே அவர் நிலைத்திருப்பவர்.[1] (நா. 551) பெருமை என்பது சொத்து செல்வாக்கு முதலியவற்றால் ஏற்படுகிறது. இந்தப் பெருமை இரவலாகப் பெற்றது. பகவானது பெருமை மற்றவற்றால் கிட்டியதல்ல. அவரே அவரது பெருமை, அவரது ஆதாரம். (326)*

---

1. स भगवः कस्मिन् प्रतिष्ठित इति, स्वे महिम्नि, यदि वा न महिम्नीति। गो अश्वमिह महिमेत्याचक्षते। हस्तिहिरण्यं दासभार्यं क्षेत्राण्यायतनानीति। नाहमेवं ब्रवीमीति होवाच अन्यो ह्यन्यस्मिन् प्रतिष्ठितः इति। (छान्दोग्य ७. २४. १-२)

स्कन्दः स्कन्दधरो[1] धुर्यो वरदो वायुवाहनः ।
वासुदेवो बृहद्भानुरादिदेवः पुरन्दरः ॥ ६७ ॥

ஸ்கந்தஸ் ஸ்கந்ததரோ[1] துர்யோ வரதோ வாயுவாஹந:
வாஸுதேவோ ப்ருஹத்பாநுராதிதேவ: புரந்தர: 67.

327. ஸ்கந்த: - நெகிழ்பவர்.

*அமுதமாக நெகிழ்ந்து பக்தர்களைச் சென்றடைபவர். வெண்ணெய்போல் நெகிழ்ந்து பக்தரின் மனத்தில் இடம் விடாமல் நிரம்பி நிற்பவர். வாயுவாகி அசுரர்களை வற்ற வைத்து அழிப்பவர். நெகிழ்தலும் வற்ற வைப்பதும் நேர் எதிர்ச்செயல்கள். இறைவனிடம் அவை இரண்டுமே பொருந்துகின்றன.*

*ஸ்கந்த: - கந்தபெருமான், ஸனத்குமாரர். கந்த பெருமான் சிறந்த ஸேனைத் தலைவர் என்ற அளவில் பகவானின் விபூதி. "ஸேநாநீநாம் அஹம் ஸ்கந்த: (கீதை. 10-24) ஸநத் குமாரர் சிவபெருமானது வேண்டுகோளுக்கிணங்க ஸ்கந்தராக அவதரித்தார் என திரிபுரா ரஹஸ்யம் (மாஹாத்ம்ய கண்டம் அத். 37) கூறும்.[2]* *(327)*

328. ஸ்கந்ததர: - அறநெறியைப் பாதுகாப்பவர்..

*அதர்மத்திற்கெதிராகத் தர்ம மார்க்கத்தை ஸ்தாபிப்பதும், பின்பற்றுபவரில்லாததால் மங்கிய அறநெறியைத் தானே பின்பற்றி நல்ல நிலையில் கொண்டு வைப்பதும் பகவானின் செயல். கந்தனின் வடிவைத் தாங்குபவர். அடியார்களின் நிலைக்கேற்றவாறு நெகிழ்ந்த வடிவமேற்பவர். தாங்குபவர் ஸ்கந்த்த தர: - (स्कन्धः) பிரிவு, மனிதனின் தரத்திற்கேற்பத் தர்மத்திலும் பல பிரிவுகள் உண்டு. தர்ம மார்க்கத்தின் பல பிரிவுகளையும் தானே பின்பற்றி மற்றவர்களையும் பின்பற்றச் செய்பவர்.* *(328)*

---

1. स्कन्धधरः *ஸ்கந்த்ததர: (பா)*
2. तस्मै मृदितकषायाय तमसः पारं दर्शयति भगवान् सनत्कुमारः तं स्कन्द इत्याचक्षते ॥ (छान्दोग्य ७. २६)

329. துர்ய: - பொறுப்பை ஏற்பவர்..

எல்லா உயிர்களையும் படைத்துக் காக்கும் பொறுப்பை ஏற்றுள்ளவர். *(329)*

330. வரத: - சிறந்ததை அருள்பவர்.

*வர: - சிறந்தது, விரும்பப் பெறுவது, கோரியது. சிறந்ததையே மனம் நாடும். நாடியதையே கோருவர். அப்படிச் சிறந்த பொருளைக் கோரியபடி வழங்குபவர். வேள்விகளில் உதவிய ருத்விக்குகளுக்கு அளிக்கப்பெறும் தக்ஷிணை வரம் எனப் பெறும். யாகம் செய்வோனுகிப் பசு முதலியவற்றைத் தக்ஷிணையாக அளிப்பவர். காஞ்சியில் பிரும்மதேவனின் வேள்வியில் தோன்றிய வள்ளல் வரதராஜப் பெருமான்.[1] (330)*

331. வாயுவாஹந: - வாயுவை வீசும்படி செய்பவர்.

*ஆவஹர், ப்ரவஹர், ஸம்வஹர், உத்வஹர், விவஹர், பரிவஹ:, பராவஹர் என்று கசியபருக்குத் திதியிடம் பிறந்த ஏழுபிள்ளைகள். மருத்து எனப் பெயர். இவர்கள் வாயு மண்டலத்தின் தேவதைகளாகிக் காற்றின் அசைவுகளைக் கட்டுப்படுத்துகிறார்கள். பூமிக்கும் மேகத்திற்குமிடையே காற்றின் அசைவை ஆவஹர் கட்டுப்படுத்துகிறார். மேகத்திற்கும் சூர்யனுக்குமிடையே ப்ரவஹரும், சூர்யனுக்கும் சந்திரனுக்குமிடையே உத்வஹரும், சந்திரனுக்கும் நக்ஷத்திரக் கூட்டங்களுக்குமிடையே விவஹரும், கிரஹங்களுக்கும் ஸப்தர்ஷி மண்டலத்திற்குமிடையே பராவஹரும் பூமியைச்சுற்றிப் பரிவஹரும், இவை எல்லா வற்றையும் தொடர்புகொள்ள ஸம்வஹருமாக, காற்றின் அசைவைக் கட்டுப் படுத்துகின்றனர். இந்த வாயு அழுத்தத்தாலேயே இந்த மண்டலங்கள் ஒன்றோடொன்று மோதாமல் அதனதன் பாதையில் சுற்றிக்கொண்டு இருக்கின்றன. (வாயு அழுத்தத்திலுள்ள மாறுபாடுகளை வஹ என்ற வினைச்சொல்லுக்கு முன்னுள்ள உபஸர்க்கங்கள் குறிப்பிடுன்றன.) வாயுவின் அந்தர்யாமியாயிருந்து வாயுவைத் தூண்டுபவர்.[2]*

---

1. तमीशानं वरदं देवमीड्यं (श्वेताश्व ४. ११)
2. यो वायौ तिष्ठन्वायोरन्तरो यं वायुर्न वेद यस्य वायुः शरीरं यो वायुमन्तरो यमयति एष त आत्मान्तर्याम्यमृतः। (बृह ३. ७. ८)

*உலகிற்குப் பிராணனாக உள்ள வாயுவை அசையச் செய்பவர். கஜேந்திரனைக் காப்பாற்றக் கருடனின் வேகம் போதாமையால் கருடனை விட்டெழும்பிக் காற்றை வாகனமாகக்கொண்டு வந்தவர். வாயு வாஹனர். வாயுவை ஊர்தியாகக்கொண்டு கடலைத் தாண்டிய அனுமானும் வாயு வாஹனர். (331)*

**332. வாஸுதேவ: - வாஸுதேவர்.**

*எல்லாப் பொருள்களிலும் நிலை பெற்றிருப்பவர். (வஸதி) எங்கும் இருப்பவர். (வஸதி) எல்லாப் பொருள்களையும் தன்னிடத்தில் நிலைபெறச் செய்பவர். (வாஸயதி) எல்லாவற்றையும் மறைப்பவர். (வாஸயதி)[1] எல்லாமாயிருக்கிற தன்னை ஒருவரும் உணராதபடி தான் மறைந்திருந்து பல பல பொருள்களாகப் பார்க்கும்படி செய்பவர். தன் தன் வினைப்பயனுக்கேற்றவாறு அமைந்த உடல்களில் குடியிருக்கச் செய்பவர். (வாஸயதி). நிலைத்த இருக்கையற்ற ஆகாசம் முதலிய பூதங்களிடத்தில் தன் இருக்கையைப் பரவச் செய்து அவைகளுக்கு நிலைத்த தோற்றத்தை அளிப்பவர். தன்னைத் தாயாக ஆக்கிக்கொண்டு தன் மடிமேல் உலகமனைத்தையும் வைத்துப் பரிவுடன் அணைத்துப் பாதுகாப்பவர் (வாஸயதி) எல்லாவற்றினுள்ளும் அந்தர்யாமியாக வசிப்பவர். (வஸதி). சூரியன் தன் கதிர்களால் உலகமனைத்தையும் சூழ்வதுபோல் தன் பெருமையால் உலகைச் சூழ்ந்து நிற்பவர். (வாஸயதி). இப்படிப் பல பொருள்கள் கொண்டது வாஸுதேவ என்ற சொல்லிலுள்ள 'வாஸு' என்ற பகுதி.*

*படைப்பு முதலியவற்றில் எல்லையில்லாதபடி விளையாடுபவர். எதனையும் வெல்லும் எண்ணம் கொண்டவர், ஒளிமிக்கவராக விளங்குபவர், ஆனந்தப்படுபவர், பெருமிதத்துடனிருப்பவர், அழகுடன் துலங்குபவர், எங்கும் செல்லும் திறமையுள்ளவர், புகழப்படுபவர், விரும்பப்படுபவர், செயலாற்றுபவர், ஜீவனாக ஒவ்வொரு உடலிலும் இருந்து உலக விவஹாரங்களில் ஈடுபடுபவர். இப்படிப் பல பொருள்கள் கொண்டது 'தேவ' எனும் பகுதி. அப்படி வாஸுவாயும் தேவராயும் இருப்பவர்.[2] (நா. 695, 709) வாஸுதேவர் என்ற பரம்பொருள்.* **வாஸுதேவாக்ய்யம் பரம் ப்ருஹ்ம** *(சங்கரர்.)*

1. ईशावास्यमिदं सर्वं (ईश १)
2. नारायणाय विद्महे वासुदेवाय धीमहि। (तै. आ. १०. १)

*ஸங்கர்ஷணர் அநிருத்தர், பிரத்யும்னர் என்ற வ்யூஹ நிலையிலுள்ள மூவருக்கு மேம்பட்டவராயும் தலைவராயும் உள்ளவர். (332)*

333. ப்ருஹத்பாநு: - பேரொளி கொண்டவர்.

*சந்திரன் சூர்யன் முதலிய ஒளிமண்டலங்களை ஒளியிழக்கச் செய்கிற பேரொளி பெற்றவர். சூரியனிடமிருந்து சந்திரன் ஒளி பெறுகிறது. சூர்ய மண்டலங்கள் பல. அவை பேரொளியான இறைவனிடமிருந்து ஒளி பெறுகின்றன. உள்ளும் புறமும் விளக்குகிற பெரியவர்.[1] (333)*

334. ஆதிதேவ: - முதற்காரணமான தேவர்.

*உலகமனைத்திற்கும் மூலகாரணமானவர். தேவராயிருப்பவர். தேவ: - நிறைய வழங்குபவர், ஒளியால் மற்றதை விளக்கித் தானும் விளங்குபவர். வானில் வசிப்பவர்.[2] (நா. 332) (334)*

335. புரந்தர: - அசுர நகரங்களை அழித்தவர்.

*இந்திரனின் பெயர்களில் இது ஒன்று. அசுரர்களை எதிர்த்துப் போராடி அவர்களை மாய்த்துப் பின் அவர்களது இருப்பிடங்களையும் உருத்தெரியாமல் செய்தவர். ஆதிதைவிக பயங்களைப் போக்குபவர், ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று சரீரங்கள் புரம் எனப்படும். அந்த புரங்களைப் பாவனையால் அகற்றியதும் உள்ளிருக்கும் ஜீவன். (335)*

**अशोकस्तारणस्तारः शूरः शौरिर्जनेश्वरः ।**
**अनुकूलः शतावर्तः पद्मी पद्मनिभेक्षणः ॥ ६८ ॥**

**அஶோகஸ் தாரணஸ்தாரஶ் ஶூரஶ்ஶௌரிர்ஜநேஶ்வர:**
**அனுகூலஶ்ஶதாவர்த: பத்மீ பத்மநிபேக்ஷண: 68**

336. அசோக: - சோகமற்றவர்.

*திரும்பத் திரும்ப அலைபோல் மோதுகின்ற துக்கச் சுழல்கள் (ஊர்மி) ஆறு - சோகம், மோஹம், மூப்பு, மரணம், பசி, தாகம்*

1. न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः। तमेव भान्तमनु भाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति। (मुण्डके २. २. १०)
2. देवो दानाद्वा दीपनाद्वा द्योतनाद्वा द्युस्थानो भवति। (निरुक्तं ७. १५)

என. கிடைத்த சுகம் அல்லது சுகத்திற்கான பொருள் நிலைக்காவிடிலும், விரும்பியது கிடைக்காவிடினும், சோகம் ஏற்படும். துக்கம் தருவதைச் சுகம் தரக்கூடியதாக நினைத்து மயங்குவதும் சுகம் தருவதைச் சுகம் தராததாக நினைத்து மயங்குவதும் மோஹமாகும். சோகமும் மோஹமும் இரட்டை, பசியும் தாகமும் இரட்டை, மூப்பும் மரணமும் இரட்டை. இவை அலைபோல் சம நிலையிலிருந்து வெளிப் பாதிப்பால் எழுந்து தடம் மீறிப் பாய்ந்து தானே அடங்குவதும் பிறகு கிளர்ந்து எழுவதும் இயல்பு. எல்லாம் எப்போதும் நிறைந்துள்ளவரானதால் (நா.252-255) இந்த சோக உணர்ச்சிகள் அற்றவர்[1] ஆத்யாத்மிக பயங்களைப் போக்குபவர். (336)

**337. தாரண: - பயத்திலிருந்து மீட்பவர்.**

ஸம்ஸாரம் - வாழ்க்கைத் தொடர். திரும்பத் திரும்பப் பிறப்பதும் இறப்பதும் வினைகளைச் சேர்ப்பதும் தவிர்க்க முடியாதபடி ஜீவனைச் சங்கிலியாகப் பிணைத்துத் தொடர்வது. இதுவே பெரும் பயம். கடல் போன்று ஆழமுள்ளது. ஆழமும் பரப்பும் அறிய முடியாத இந்தக்கடலை மீகாமனாக இருந்து தாண்டச் செய்து கரை சேர்ப்பவர். இந்தத் தொடரில் சிக்காதபடி மீட்பவர். பகைவர் கள்வர், பிணி முதலிய ஆதிபௌதிக பயங்களிலிருந்தும் மீட்பவர்[2] (337)

**338. தார: - மீட்கும் ஓடம் போன்றவர்.**

ஸம்ஸாரக் கடலைத் தாண்டச் செய்யத் தன்னையே ஓடமாக்கிக் கொள்பவர். பயத்திலிருந்து மீட்டுக் கரை சேர்க்கின்ற பிரணவம் எனும் மஹாமந்திரமாயிருப்பவர். கஷ்டம் வரும்போது கரை சேர்வதற்கு இறைவனிடம் துணை கோர - அசோகஸ் தாரணஸ் - தார: என்ற மூன்று நாமங்கள் உதவும்[3] (338)

1. अशोकत्वादमोहत्वादनशनायत्वादपिपासत्वात्। (नृसिंहोत्तर ७)
तद्ब्रह्म तापत्रयातीतं षट्कोशविनिर्मुक्तं षडूर्मिवर्जितम्।
अशनायापिपासाशोकमोहजरामरणानीति षडूर्मयः। (मुद्गल ३)
2. सर्वेभ्यो दुःखभयेभ्यः सन्तारयतीति तारणात्तारः। (अथर्वशिखा २)
3. उच्चार्यमाण एव गर्भजन्मजरामरणसंसारमहाभयात्तारयति तस्मादुच्यते तारः। (अथर्वशिरः ४) नमस्ताराय (श्रीरुद्राध्यायः) अत्र हि जन्तोः प्राणेषूत्क्रममाणेषु रुद्रस्तारकं ब्रह्म व्याचष्टे, येनासावमृतीभूत्वा मोक्षी भवति। (जाबाल)

**339. ஶூர: - சூரர்.**

*எதிர்த்துப் பிறரை அடக்குபவர். எதனையும் தாங்கி எதிர்க்கிற திறமையுள்ளவர். (நா. 645) (339)*

**340. ஶௌரி: - வஸுதேவரின் பிள்ளை.**

*சூர குலத்தில் பிறந்தவரானதால் வஸுதேவர் சூரர். அவரது மகன் கண்ணன் சௌரி. யதுக்களில் சூரர் என்றொரு பிரிவு. அப்பிரிவில் வந்த வஸுதேவரின் தந்தையின் பெயரும் சூரர். சூரர் வழித் தோன்றலானதால் சௌரி:. (நா. 644) (340)*

**341. ஜநேஶ்வர: - மக்கள் தலைவர்.**

*உயிரினமனைத்திற்கும் அவரே தலைவர். அவர் ஆட்டுவித்தபடி அனைத்தும் வாழ்கின்றது. மக்களின் மனமறிந்து அவர்கள் வாழ வழிகாட்டும் தலைவர். வஸுதேவரின் பிள்ளையாகத் தோன்றியபோது முடிசூடா மன்னராகி துவாரகாதீசரானவர். (341)*

**342. அநுகூல: - அன்புடன் கரையேற்றுபவர்.**

*கூலம் - கரை - அநுகூலம் - கரையை நோக்கிச் செல்வது. ஆற்றின் பெரு வெள்ளத்தில் சிக்கித் தத்தளிப்பவனைக் கரையையொட்டி அழைத்து வந்து கரை சேர்ப்பவர் அனுகூலர். (கரையை ஒட்டி வருபவனையும் கரை சேர விடாதபடி நடு வெள்ளத்தில் தள்ளிவிடுபவர் ப்ரதிகூலர்). பகவான் எல்லோருக்கும் அனுகூலர். அந்தர்யாமியாக ஆத்மாவாக ஜீவனாக பிராணனாக அறிவாக எல்லாமாக இருப்பதால் அவரால் அனுகூலராக மட்டுமே இருக்க இயலும். தன்னால் தான் இயலும் என்ற அகந்தையின்றிப் பரிவுடன் அணைப்பவர். தன்னையண்டியவர்களும் வரம்பு மீறாதிருக்கும்படி அறநெறிக் கரையை ஒட்டி அழைத்துச் செல்பவர். உதவி கோரப்படாதபோதும் தானே வலியச் சென்று உதவுபவர். (342)*

**343. ஶதாவர்த்த: - பலமுறை திரும்பத் திரும்ப வருபவர்.**

*சிறந்த நண்பனாகி 'என் உதவி தேவையா?' என்று வலியத் திரும்பத் திரும்ப அணுகுபவர். அறப்பாதுகாப்பின் பொருட்டுத் திரும்பத் திரும்பப் பல அவதாரங்கள் எடுத்தவர். தனது அன்பர்களுக்கு எத்தனை உதவி செய்திருந்தும் திருப்தியுறாமல் திரும்பத் திரும்ப உதவ முன் நிற்பவர். தனது எண்ணற்ற*

*பெருமைகளை விளக்கி முழுமை பெறுமல் திரும்பத் திரும்ப வெளிப்பட்டுப் பெருமைகளை விளக்கிக்கொள்பவர்.* *(343)*

344. பத்மீ - தாமரையைக் கொண்டவர்.

*அனுகூலராக சதாவர்த்தராகத் தானிருப்பதை உணர்த்தவும் அன்புடன் வரவேற்கவும் அடையாளமாகத் தாமரையை விளையாட்டாகக் கையில் ஏந்தி நிற்பவர். ''இதரேண துநாநமப்ஜம்''. (பாகவதம். 10-23-22) பகவானின் நான்கு கரங்களில் சங்கு சக்கரம் கதை இவைகளுடன் தாமரையுமுண்டு. அந்தத் தாமரை தர்மம் ஞானம் வைராக்யம் ஐச்வர்யம் என்ற பகவானின் ஸத்வ மயமான ஆதாரத்தைக் குறிக்கும். ''அவ்யாக்ருத* மநந்தாக்யம் ஆஸனம் யததிஷ்டித:. தர்மஜ்ஞானாதிபிர்யுக்தம் ஸத்வம் பத்மமிஹோச்யதே''. *(பாகவதம் 12-11-13)* *(344)*

345. பத்மநிபேக்ஷண: - தாமரையொத்த கண்களுள்ளவர்.

*அன்பரை வரவேற்கின்ற பாங்கை அவரது இனிய முகம் காட்டுகிறது. அன்பும் புன்சிரிப்பும் பரிவும் துலங்கும் முகத்திற்குக் குளிர்ச்சியையும் ஈர்ப்பையும் இனிமையையும் அழகையும் காட்டுகின்ற தாமரையொத்த கண்கள் மேலும் அழகூட்டுகின்றன. களைப்பையும் வேதனையையும் அகற்றும் இனிய பார்வையுள்ளவர்.*

*பீஷ்மர் ஆபத்திற்கு உதவும் நண்பனுகப் பகவானைச் சித்தரித்துள்ள அனுகூல:. சதாவர்த: பத்மீ பத்மநிபேக்ஷண: என்ற நாமத் தொகுப்பு உதவி கோரி நிற்கிற நிலையில் எப்போதும் மனனம் செய்ய வேண்டிய மந்திரமாகும். (ப. 28)* *(345)*

पद्मनाभोऽरविन्दाक्षः पद्मगर्भः शरीरभृत्।
महर्द्धिर् ऋद्धो वृद्धात्मा महाक्षो गरुडध्वजः॥ ६९॥

பத்மநாபோऽரவிந்தாக்ஷ: பத்மகர்ப்பஶ் ஶரீரப்ருத்.
மஹர்த்திர் ருத்தோ வ்ருத்தாத்மா மஹாக்ஷோ கருடத்த்வஜ: 69

346. பத்மநாப: - தாமரையின் நடுவே உள்ளவர்.

*தாமரையின் நடுவே பிரும்மாவாக ஸரஸ்வதியாக இருப்பவர். பூமியாகிய தாமரையின் மொட்டுபோன்றுள்ள மேரு வின் மேல் வீற்றிருக்கின்ற பிரும்மதேவராயிருப்பவர். தாமரை*

*போன்ற அழகிய தொப்புளுடன் கூடியவர். (கீதா - சங்கரபாஷ்யம் 11-15) (நா. 48, 196) பூமியாகிற தாமரைக்குத் தொப்புள் போன்று கேந்திரஸ்தானமானவர்.*[1] *(346)*

**347. அரவிந்தாக்ஷ: - தாமரை போன்ற கண்களுள்ளவர்.**

*தாமரை போன்று அழகிய கண்கள் உள்ளவர். (நா. 40, 58, 111, 345, 556) (347)*

**348. பத்மகர்ப்ப: - இதயத் தாமரையினுள் உறைபவர்.**

*இதயமாகிய தாமரையின் நடுவே வீற்றிருப்பவராக வழிபடப்பெறுபவர்.*[2] *தன்னை உபாசிப்பவரின் மனத்தைத் தாமரையாக்கி ஆஸனமாக ஏற்று உள்ளே உறைபவர். (348)*

**349. சரீரப்ப்ருத் - உடலை வளர்ப்பவர்.**

*வினைக்கேற்ப உடலையளித்து உணவாகி அதனைப் போஷித்துப் பிராண சக்தியாகி இயக்கித் தாங்குபவர். தர்மப் பாதுகாப்பிற்காகவும் அதர்ம நலிவிற்காகவும் அவ்வப்போது மாயையால் பல வடிவங்களை ஏற்பவர். (349)*

**350. மஹர்த்தி: - பெருஞ்செல்வ நிறைவுள்ளவர்.**

*அவரவரது யோக க்ஷேமத்திற்குப் போதுமான செல்வமும் செல்வாக்கும் பெருமையும் ஸம்ருத்தி - செல்வநிறைவாகும். பகவான் பெருஞ்செல்வ நிறைவுள்ளவர். (350)*

**351. ருத்த: - பெரிதும் வளர்பவர்.**

*உலகமாக விரிந்து செல்வம் நிறைந்து எப்போதும் வளர்ச்சி பெறுபவர். தன் அடியார்கள் பெற்ற நிறைவால், தான் நிறைவு பெற்றதாக உணர்பவர். (நா. 278) (351)*

---

1. विश्वं बिभर्ति भुवनस्य नाभिः । (तै. आ. १०. १)

2. दहरं पुण्डरीकं वेश्म । दहरोऽस्मिन्नन्तराकाशः । तस्मिन्यदन्तस्तदन्वेष्टव्यं (छान्दोग्य ८. १. १) दह्रं विपापं परमेश्मभूतं यत्पुण्डरीकं पुमध्यसम्स्थम् । तत्रापि दह्रं गगनं विशोकस्तस्मिन्यदन्तस्तदुपासितव्यम् । (तै. आ. १०. १२)

352. வ்ருத்த்தாத்மா - முதியவர்.

*முதியவர்களான பிரும்மா முதலானுரைவிட மூத்தவர். பெற்றுள்ள பெருமைக்கும் செல்வத்திற்கும் ஏற்ப நெடிது வளர்ந்தவர். வளர்ச்சியின் முழு எல்லையில் இருப்பவர். (352)*

353. மஹாக்ஷ: - பெரியகண்களுள்ளவர்.

*விரிந்து அழகிய கண்களுள்ளவர். கண் காது முதலிய பொறிகள் பெரியனவாயும் சிறந்தனவாயும் அமைந்தவர். சிறந்த பெரிய ஊர்தியாகக் கருடனைக் கொண்டவர். (353)*

354. கருடத்த்வஜ: - கருடக் கொடியுள்ளவர்.

*கருடன் தாயின் விடுதலைக்காக அமிருதம் கொணர்ந்த போது நாராயணனிடம் அவருக்கு மேல் நிற்க வரம் கேட்கக் கொடியாக மேல் நிற்கவும் வாஹனமாக இருக்கவும் நாராயணன் வரம் தந்தார். (பாரதம். ஆதி. 33) அதன்படி கருடனை எப்போதும் அடையாளமாகத் தன் கொடியில் கொண்டவர். (354)*

**अतुलः शरभो भीमः समयज्ञो हविर्हरिः।**
**सर्वलक्षणलक्षण्यो लक्ष्मीवान् समितिञ्जयः ॥ ७० ॥**

**அதுலஶ் ஶரபோ பீம: ஸமயஜ்ஞோ ஹவிர்ஹரி::**
**ஸர்வலக்ஷண லக்ஷண்யோ லக்ஷ்மீவான் ஸமிதிஞ்ஜய: 70.**

355. அதுல: - உவமையில்லாதவர்.

*ஈடும் இணையுமற்றவர் ''தங்களுக்கு ஈடானவரே இல்லை. மிக்கார் யார் இருக்க முடியும்? ந த்வத் ஸமோஸ்தி அப்யதிக: குதோऽந்ய:'' (கீதை. 11-43)[1]'' (355)*

356. ஶரப: - சரீரத்தினுள் ஒளிர்பவர்.

*எளிதில் கலகலத்து நொருங்கும் இயல்புகொண்டமையால் உடல் சரம் எனப்படும்.[2] குறித்த இலட்சியத்தை நோக்கி எய்த அம்பும் சரம். இறைவனைக் காண்கின்ற நோக்குடன்*

---

1. न तस्य प्रतिमास्ति यस्य नाम महद्यशः। (श्वेताश्व ४. १९)
2. शरा जीवास्तदंगेषु भाति नित्यं हरिः स्वयं। ब्रह्मैव शरभः साक्षात्। (शरभोपनिषत् ३०)

செயல்பட்டால் இந்த உடல் சரம் (அம்பு) ஆகிறது. தானே அழிகின்ற இயல்புடையதொன்றை உயர்ந்த நோக்கிற்காகப் பயன்படுத்துகின்ற செயல் நேர்த்தியால் அந்த உடல் வலிவுறுகின்றது. உடலில் உறைந்து ஜீவனுகப் பரமாத்மாவாகத் துலங்குபவர். தர்ம வரம்பு மீறியவர்களை அழிப்பவர். இரண்ய கசிபுவை அழிக்க வந்த நரசிம்மரின் கோபவெறியை அடக்கச் சிங்கத்தை விடப் பன்மடங்கு பலமுள்ள சரபமாகத் தோன்றியவர். (356)

357. பீம: - பயப்படச் செய்பவர்.

ஆணையிடுவதிலும் அதை நிறைவேறச் செய்வதிலும் ஆணையை மீறுபவர்களைக் கண்டிப்பதிலும் கடுமையைக் காட்டுவதால் வாயு முதலிய தேவதைகள் இவரது கெடியைக் கண்டு நடுங்கித் தம் தம் பணிகளில் ஈடுபடுகின்றனர்[1] (நா. 948) சிவனது எட்டு வடிவங்களில் ஆகாசமுர்த்தியான பீமர் வடிவில் இருப்பவர். சரப: அபீம: என்று பிரிப்பது உண்டு. நன்னெறியைப் பின்பற்றுபவர்களைப் பயமற்றிருக்கச் செய்பவர்.[2] (357)

358. ஸமயஜ்ஞ: - நேரமறிந்தவர்.

படைப்பிற்கும் காப்பிற்கும் ஒடுக்கத்திற்கும் உரிய நேரமறிந்து செயல்படுபவர். பகவான் பேரரசர். அரசியலுக்கு ஆறு ஸமயஜ்ஞானம் தேவை. தன் சக்திகளில் பலவற்றை மறைக்கவும் வெளிப்படுத்தவும் உரிய நேரம் எது என்றறிதல் அவசியம். போர்த்தந்திரங்கள் ஸமயமெனப்படும். அது ஆறு வகை 1. சண்டை வீணெனத் தோன்றினுல் சமனுன அரசனுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளுதல் - ஸந்தி. 2. போர் அவசியமெனத் தோன்றினுல் போரிடுவது - விக்ரஹம். 3. போரிட எதிரியை நோக்கித் தானே செல்லுதல் - யாநம். 4. தானே முன்செல்லாமல்,

---

1. भयादेवाग्निस्तपति भयात्तपति सूर्यः । भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः । महद्भयं वज्रमुद्यतं। (कठ ६. ३)
एष एव भीषण एष एव भद्रः। अथ कस्मादुच्यते भीषणमिति, यस्माद्भीषणं यस्य रूपं दृष्ट्वा सर्वे लोकाः सर्वे देवाः सर्वाणि भूतानि भीत्या पलायन्ते, स्वयं यतः कुतश्च न बिभेति। (नृसिंह पूर्व २. ४)
2. भीषणमभीषणं (नृसिंहोत्तर ६. १) अभयं वै ब्रह्म (बृहदा ४.५.२४) नृसिंहोत्तर८. ३) तद्वा अस्यैतदतिच्छन्दा अपहतपाप्माभयं रूपम्। (बृ. आ. ४. ३. २०) एतदमृतमभयमेतद्ब्रह्म (छान्दोग्य ४. ३)

எதிரி தன்னை எதிர்த்து வரும்படி அமர்ந்திருத்தல் - ஆஸனம். எதிரிகளுக்கிடையே கிளர்ச்சி ஏற்படுத்தி ஒருவருக்கொருவரை மோதவிட்டு எதிரியின் வலிவைக் குறைத்தல் - த்வைதீபாவம். 6. எதிரி பலவானாயின் தக்க துணை நாடுதல் - ஸமாச்ரயம். இந்த ஆறு தந்திரங்களுக்கான சமயம் தெரிந்து செயல்படுபவர் என்பதைக் கண்ணன் பாண்டவ ஸஹாயராக இருந்து பாரதப்போர் நிகழ்த்திய முறையிலிருந்து காணலாம். பக்தர்களுக்குத் தான் உதவி புரியத்தக்க நேரத்தையும் தன்னையே தர வேண்டிய நேரத்தையும் அறிந்தவர். சரபர் வடிவில் உவமையற்ற பயங்கர வடிவில் தோன்றுவதற்கு நேரமறிந்தவர் என்பதை அதுலச் சரபோ பீம:. ஸமயஜ்ஞ: என்ற நான்கு நாமங்கள் குறிப்பிடுகின்றன.

ஸம - யஜ்ஞ:. எல்லா பிராணிகளிடத்திலும் தனது விருப்பு - வெறுப்புகளால் பாதிப்படையாமல் சம நோக்குடன் பழகுவது பகவானுக்குச் செய்யும் வேள்வி. ஸமத்வம் ஆராதநம் அச்யுதஸ்ய. (விஷ்ணு புராணம். 1-17-90) ஸமத்வ பாவனையையே ஆராதனமாகக்கொண்டவர். (358)

359. ஹவிர்ஹரி: - அவிர்பாகத்தை ஏற்பவர்.

வேள்விகளில் அக்னியில் அந்தந்த தேவதைகளுக்காக அர்ப்பணம் செய்யப்பெறுகிற அவிர்ப்பாகத்தை அந்தந்த தேவதைகள் வடிவிலும் யஜ்ஞமூர்த்தி வடிவிலும் ஏற்பவர்.

ஹவி: ஹரி: என இதனை இரு நாமங்களாகக்கொள்வதும் உண்டு. ஹவி: - வேள்வி புரிபவரால் அவிர்பாகம் அளித்து வழிபடப்பெறுபவர். ஸம்ஸாரப்பற்று விடுவதற்காகத் 'தனது, தான்' என்றிருப்பவைகளை அவிர்ப்பாகமாக்கச் செய்பவர். தேவர்கள் முதலில் செய்த வேள்வியில் விராட் புருஷனையே அவிஸ்ஸாகச் செய்தனர். அப்படி ஹவிஸானவர்.[1]

ஹரி: - நினைத்த நொடியிலேயே பாபத்தைப் போக்கி அறியாமையை விலக்கித் தனக்கும் நினைத்தவனுக்கும் இடையே உள்ள இடையூறுகளை விலக்குபவர். பற்றற்றவனை உடன் தன்னுடன் சேரும்படி செய்து அவனது தனித் தன்மையை அபஹரிப்பவர்.[2] பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத பசுமையின்

1. अबध्नन् पुरुषं पशुम्। (पुरुषसूक्ते)
2. विश्वं नारायणं हरिम् (तै. आ. १०. १३)

*நிறமான பச்சை நிறத்தவர். "ஹராம்யகம் ச ஹர்த்ரூணாம் ஹவிர்பாகம் க்ரதுஷ்வஹம், வர்ணச்ச மே ஹரித் வேதி தஸ்மாத் ஹரிரஹம் ஸ்ம்ருத:" (பாரத - சாந்தி. 34,93,39) ஸ்ரீ ஹரயே நம: என்று ஐந்தக்ஷரங்கள் கொண்ட மந்திரம். (நா. 650) இந்தப் பெயர் வேதமோதும் முன்னும் பின்னும் கூறப்படுவதாகும். ஹரி: ஓம் (359)*

360. ஸர்வலக்ஷண லக்ஷண்ய: - எல்லா அளவைகளாலும் குறிப்பிடப்பெறுபவர்.

*அறிவைத் தருபவையான அளவைகள் பல. அவை நன்கு அமைந்து நல்ல பூர்ண அறிவு ஏற்பட்டதும் உணர்வதற்குரியவர் (நா. 46) வடிவமைப்பில் அழகும் பெருமையும் கவர்ச்சியும் தருபவை லக்ஷணங்கள். அப்படிக் கருதக்கூடிய லக்ஷணங்கள் அனைத்தும் ஒருங்கே சேர்ந்து எப்படி அமையவேண்டுமென்று குறிப்பு பெறப் பகவானது லக்ஷணங்களை உற்றுநோக்குகின்றன. எல்லா லக்ஷணங்களாலும் லக்ஷணம் இதுதான் என்று முன் மாதிரியாக எடுத்துக்கொள்ளப்பெறுபவர். (360)*

361. லக்ஷ்மீவான் - லக்ஷ்மீயுடன் எப்போதும் கூடியவர்.

*லக்ஷணங்களால் தனித்துச் சிறப்பாக அடையாளம் காட்டக்கூடிய பெருமை தருபவள் லக்ஷ்மீ. அந்த லக்ஷ்மீ தேவி அவரது திருமார்பில் அவரை விட்டு என்றும் அகலாதவளாக அவரை அடையாளம் காட்டுவதால் நித்ய ஸ்ரீமான். (361)*

362. ஸமிதிஞ்ஜய: - பலர் கூடிப் பொருதுகையில் வெல்பவர்.

*வாதத்திற்கோ போரிடவோ கட்சி எதிர்கட்சி எனப் பிரிந்து ஒரே நோக்குடன் மோதவோ, பலர் ஒரே நோக்குடன் ஒருங்கே கூடுவது ஸமிதி. எத்தனை பெரிதாயினும் அதனை எளிதில் வெல்பவர். தந்தை போன்று எல்லோரையும் அணைத்துச் செல்பவராகையால் மக்கள் தனித்துக் கூடிக் கூடி ஸ்வதந்திரர்களாக நினைத்து ஒருவரோடொருவர் மோதுவதைக் கட்டுப்படுத்துபவர். (362)*

विक्षरो रोहितो मार्गो हेतुर्दामोदरः सहः ।
महीधरो महाभागो वेगवानमिताशनः ॥ ७१ ॥

விக்ஷரோ ரோஹிதோ மார்க்கோ ஹேதுர் தாமோதரஸ்ஸஹ:
மஹீதரோ மஹாபாகோ வேகவாநமிதாஶந: 71

363. விக்ஷர: - அழிவற்றவர்.

*சிறிது சிறிதாக உருக்குலைந்து மறையாதவர் நித்தியர். தன்னை நம்பியுள்ள அடியார்களிடம் வைத்த அன்பு சிறிதும் குறையாதவர். (நா. 17)* *(363)*

364. ரோஹித: - சிவந்தவர்.

*சென்ற கல்பத்தின் இறுதியில் கிருதமாலா என்ற நதியின் கரையில் ஸத்ய வ்ரதர் என்ற அரசர் உலகம் அழியக்கூடிய பிரளய வேளையை உணர்ந்தவராகக் காலைக்கடனை முடிக்க முற்பட்டார். அழிகிற உலகம் மீண்டும் எப்படித் தோன்றும்? எப்படி வளர்ந்து இப்படிப் பெரிதாகும்? என்று அவருக்குக் கவலை. ஸந்தியாவந்தனத்தில் அர்க்க்யம் கொடுக்கக் கைகளில் ஏந்திய நீரில் ஒரு மீன் குஞ்சுமிருந்தது. மீனுடன் இருந்ததால் அந்த நீர் அர்க்க்யம் கொடுக்கத் தக்கதல்ல என்ற சிந்தனையுடன் அதனைக் கீழேவிட நினைத்தார். மீன் தன்னைக் கீழே விடாதே என்றது. அதனைக் காப்பாற்றும் எண்ணத்துடன் கமண்டலத்தில் இட்டார். அது நொடியில் வளர்ந்து கடலும் போதாத நிலைக்கு வளர்ந்தது. அந்த மீன் இறைவனே என உணர்ந்தார். அழிகிற உலகம் எனக் கருதியது இப்படித்தான் நொடியில் வளர்ந்து பெரிதாகும் என்பதையும் உணர்ந்தார். இறைவனும் அவர் படைத்த உலகமும் அழியாதவை (விக்ஷர:) என்பதை உணர்த்த எடுத்த வடிவம் செம்மீன்-ரோஹித:. பிரளயகாலத்தில் மறுபடி படைக்கவிருக்கின்றவைகளைக் காப்பதற்காக ரக்ஷணத்திற்கான செந்நிறத்தை ஏற்றுக் காரண ஜலத்தில் நீந்துகிற மத்ஸ்யமூர்த்தி - தாமரை மலரின் உட்பகுதி போன்று செந்நிற முள்ளவர்.* *(364)*

365. மார்க: - தேடப்பெறுபவர்.

*மோக்ஷத்தை பேரின்பத்தை நாடுபவர் தேடிக்கொண்டிருக்கிற வழி அவரே. அந்த வழிமூலம் அடையப் பெறுபவர் அவரே. உபாயமும் இலக்கும் அவரே. உலகம் பிரளயத்தில் மறைந்தது. பின் அதன் படைப்பிற்கான வழி அவரே (நா. 397)* *(365)*

366. ஹேது: - காரணமானவர்.

*படைக்கவிருக்கும் உலகின் மூலகாரணமும் நிமித்த காரணமுமானவர்.*[1] *பக்தர்கள் கோரியதனைத்தும் நிறைவேறக் காரணமானவர். (366)*

367. தாமோதர: - வயிற்றில் கயிறு உள்ளவர்.

*படைக்கவிருக்கிற உலகம் அடங்கியுள்ள சரிந்த பெருவயிறு கொண்டவர், உலகின் வீடான (தாம) வயிறு உடையவர். பொறிகளை அடக்கிப்பெற்ற பேரறிவால் அறியப்படுபவர். எல்லாமடங்கிய வயிறு பெற்றவராயினும் அன்பு எனும் கயிற்றால் வயிற்றில் யசோதையால் கட்டப் பெற்றவர். நாராலான கயிறுகள் அனைத்தும் தன்னைக் கட்ட பயன்படாமல் இரண்டு விரலளவே குறைவதுபோல் காட்டித் தாயின் அன்பிற்கு மட்டும் கட்டுப்படுபவன் என்பதை உணர்த்தியவர். உலகை வயிற்றில் கொண்ட பெருமையையும் கயிற்றால் கட்டுண்ட எளிமையையும் ஒருங்கே காட்டும் திருநாமம் இது. தேவர்களுக்கு இன்பம் அளிப்பவர். வ்யூஹ நாமங்களில் பன்னிரண்டாவது. (ப. 29) (367)*

368. ஸஹ: - பொறுத்துக்கொள்பவர்.

*எல்லாவற்றையும் வெல்பவர், துன்பத்தைப் பொறுத்துக்கொள்பவர். உலகப் பாதுகாப்பிற்காக கடும் சுமையையும் ஏற்றுச் சுமப்பவர். (368)*

369. மஹீதர: - பூமியைச் சுமப்பவர்.

*மலைகளின் வடிவில் பூமியைச் சிதறாமல் திடப்படுத்தியவர். பூமியின் பொறுமையின் எல்லைக்கும் மீறித் துஷ்டர்கள் செயல்படும்போது அவர்களை அழித்துப் பூமியின் சுமையைக் குறைத்து பூமியை நல்ல நிலையில் தாங்குபவர். மிக விரிந்த எல்லையுள்ளதாக (மஹ - விஸ்தாரே) பூமியை விரிவடையச் செய்து தாங்குபவர். (நா. 182, 234, 235, 317, 369, 751, 756) (369)*

370. மஹாபாக: - பெரும் பகுதியைத் தனதாக்கிக் கொண்டவர்.

*தன்னிச்சைப்படி பெருவடிவம் கொண்டு படைத்த தனைத்தையும் தனதாக்கிக்கொண்டவர். இந்திரனுக்குப் படையல்*

1. किं कारणं ब्रह्म (श्वेताश्वतर १. १)

வைக்கக் கோபர்கள் முற்பட்டபோது "பசுக்களையும் கோபர்களையும் காப்பது கோவர்த்தன மலையே. அதற்கே படையல் அளியுங்கள்" என்று கண்ணன் கூறினார். அதை ஏற்ற கோபர்கள் கோவர்த்தன மலைக்குப் பலதரப்பட்ட உணவுப் பண்டங்களை மிகப் பெருமளவில் தயாரித்துப் படைத்தனர். கோவர்த்தனமலையே மனிதவடிவம் கொண்டதுபோல் அதன் கொடுமுடியில் கண்ணன் காட்சிதந்து படைத்ததை மனமுவந்து ஏற்றார் (விஷ்ணு புராணம் - பாகவதம்)

அவரது அவதாரங்களில் பலருக்கு அளவற்ற பாக்கியத்தை அளித்தும் குறையுறாத அவர் மஹாபாகர். ருக்மிணி ஸத்யபாமா முதலிய பல மனைவிகள் கோபிகைகள் இவர்கள் தாமே வலிய மனமுவந்து பெரும் பாக்யம் எனக் கருதி வரித்த வடிவழகுள்ளவர். அளிக்கின்ற ஒரு பருக்கை அன்னத்தையும் பல மடங்கு பெருக்கி உலகமனைத்திற்கும் போதுமானதாக்குகின்ற பெரிய உணவுப்பாகமாக ஏற்பவர். துரௌபதியின் பாத்திரத்திலிருந்த ஒரு பருக்கை அன்னம் உலகினர் அனைவரின் பசியையும் போக்கியது. (370)

371. வேகவான் - மிகுந்த வேகம் உள்ளவர்.

இடத்தைவிட்டசையாமல் மனத்தைவிடக் கடிதான வேகத்துடன் செல்பவர்.[1] மனித இயல்பிற்கு அப்பாற்பட்ட வேகத்துடன் செயலாற்றுபவர் என்பதை கிருஷ்ணாவதாரத்தில் ருக்மிணீ ஸ்வயம்வரத்திற்குச் சென்றது முதலான பல லீலைகளில் காணலாம். (371)

372. அமிதாசந: - அளவிலாது உண்பவர்.

ஸம்ஹார காலத்தில் உலகையே உண்பவர். (நா. 303) கோபர்களைக் காப்பாற்றக் காட்டுத் தீயையும் உண்டவர். அவனவனது ஜடராக்னியாகி உணவை ஜீர்ணிக்கின்ற ஜடராக்னி. **'அஹம் வைச்வாநரோ பூத்வா .... பசாம்யந்நம் சதுர்விதம்.** (கீதை 15-14) அவரால் ஜீர்ணிக்க முடியாததொன்றுமில்லை. (372)

**उद्भवः क्षोभणो देवः श्रीगर्भः परमेश्वरः ।**
**करणं कारणं कर्ता विकर्ता गहनो गुहः ॥ ७२ ॥**

1. अनेजदेकं मनसो जवीयः । (ईश ४)

**உத்ப்பவ: க்ஷோபணோ தேவ: ஸ்ரீகர்ப்ப: பரமேச்வர:**
**கரணம் காரணம் கர்தா விகர்தா கஹநோ குஹ:**

373. **உத்ப்பவ:** – **சிறந்த தோற்றுவாய்.**

*பிரபஞ்சத்தின் உற்பத்தியை இனிச் சில நாமங்கள் விளக்குகின்றன. விதையிலிருந்து வெடித்து முளை கிளம்புவதுபோல் பகவானாகிய விதையிலிருந்து இந்தப் பிரபஞ்சம் வேர் தண்டு கிளை இலை என்று விரிந்து வெளியாகிறது. அந்தப் பிரிவுகள் அனைத்தும் முன்னர் பகவானாகிய விதையினுள் அணுவளவில் அடங்கியிருந்தவையே. உலகமனைத்திற்கும் தோற்றுவாய் - உத்ப்பவ:. உலகனைத்தையும் தோன்றச்செய்த அவரிடம் உலகபந்தம் சிறிதும் ஏற்படுவதில்லை. (உத்கத: - பவாத்) கயிற்றில் கட்டுண்டவராக நாம் தியானிக்கும்போதே நம் கட்டை விலக்குபவர். (நா. 790) (373)*

374. **க்ஷோபண:** – **குமுறச் செய்பவர்.**

*படைப்பின் தொடக்கத்தில் மூலதத்துவங்கள் பிரிந்து சேர்ந்து விராட்புருஷனாகியும், தனி வடிவெடுத்து உலகமாக மாறா திருந்த நிலையில் அதனுட்புகுந்து அதிர்வு ஏற்படுத்திப் பரிணாமமற்ற ஜீவ தத்துவத்தையும் பரிணாமம் பெற்ற பிரகிருதி தத்துவத்தையும் இணைப்பதற்காக உட்குமுறல் ஏற்படுத்தி ஒன்றாகக்கலந்தவர். (நா. 8.11) பிரகிருதியும் புருஷனும் இணைய இயலாத இருதத்துவங்கள். எண்ணெயையும் நீரையும் குலுக்கிப் பால் போன்ற குழம்பாக ஆக்குவது போல் இவ்விரண்டையும் குலுக்கி ஒன்று சேர்த்தவர்.* **ப்ரதான புருஷௌ சாபி ப்ரவிச்யாத்மேச்சயா ஹரி:. க்ஷோபயாமாஸ ஸம்ப்ராப்தே ஸர்ககாலே வ்யாவ்யயௌ.** *(விஷ்ணு புராணம் 1-2-29) (374)*

375. **தேவ:** – **தேவர்.**

*தேவ: - படைப்பு முதலியவற்றில் விளையாடுபவர், தேவர்களின் எதிரிகளை வெல்பவர், உயிரினத்தின் உள்ளத்தில் அந்தர்யாமியாக ஜீவனாக நின்று செயலாற்றுபவர், ஆத்மாவாக பிரகாசிப்பவர், புகழப் பெறுபவர், எங்கும் தடையின்றி செல்பவர்.[1] (நா. 332-334) (ப. 52) ஜீவனாக உட்புகுந்து தானே*

1. एको देव: सर्वभूतेषु गूढ: (श्वेताश्व ६. ११) चक्षु: श्रोत्रं क उ देवो युनक्ति। (केन १. १)

*தன்னை விளக்கிக்கொண்டு இந்தத் தொகுப்பைச் சேதனனாக வெளியே காட்டுபவர்.*

*உடலில் உள்ள பிராண சக்தியும் க்ஷேத்ரஜ்ஞனுமான தேவன்.*[1] *(375)*

**376. ஸ்ரீகர்ப்ப: – பெருமையைக் கருவில் கொண்டவர்.**

*இந்த விரிந்த உலகமே அவரது பெருஞ்செல்வம், அவரது பெருமைக் களம். அதனைத் தன் அதீனமாக வயிற்றில் கொண்டவர். லக்ஷ்மீயை கருவகத்தில் சிசுவைப்போல் காப்பாற்றுபவர். (376)*

**377. பரமேஶ்வர: – மிகப் பெரிய ஈச்வரர்.**

*பிரும்மதேவன் முதலிய தேவர்களுக்குள்ள ஆளுமை வரம்பிற்குட்பட்டது. வரம்பற்றதும் மற்ற தேவர்களை ஆட்படுத்துவதுமான பேராளுமை பெற்றவர் - பரமேச்வர:. சிவபெருமானின் தனித்த சிறப்புப் பெயர்களில் ஒன்று. தன்னிச்சைப்படி வினைப்பயனை மாற்றவோ அழிக்கவோ சக்தி பெற்றவர். எல்லா உயிரினங்களிலும் பரவி நின்று சாட்சியாக நடப்பவைகள் அனைத்தையும் காண்பவர். அவற்றின் விருப்பு - வெறுப்பு, சுகம் - துக்கம் முதலிய துவந்துவங்களால் பாதிப்புறாமலிருப்பவர். இவற்றால் தன் ஆளுமை குன்றாமல் இவற்றிற்கு மேம்பட்ட ஆளுமையுடன் கூடியவர்.*[2] **ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேச்வரம். விநச்யத்ஸு அவிநச்யந்தம் ய: பச்யதி ஸ பச்யதி.** *(கீதை. 13-27)*

*லக்ஷ்மீ எல்லா சக்திகளைக்காட்டிலும் சிறந்தவள். பரா மா - பரமா. அவள் தானே சென்றடைந்து திருமார்பில் இடம் பெற்றுப் பகவானின் கடைக்கண்பார்வை செல்லவேண்டிய இடத்தைக் குறிப்பிடுபவளாக அவருக்கு ஆட்பட்டு அவரது ஸேவையில் ஈடுபட்டுள்ளாள். பரமாயா: ஈச்வர:. (377)*

**378. கரணம் – சிறந்த ஸாதனம்.**

*முக்கியமான காரணமும் இன்றியமையாத ஸாதனமும் கரணமாகும். மட்குடம் செய்ய மண் இன்றியமையாதது. அது*

1. आकाशो ह वा एष वा देवः- इत्यादि (प्रश्न २)
2. उमासहायं परमेश्वरं प्रभुं (कैवल्य ७)

*மட்குடம் செய்யக் கரணமாகின்றது. உலகத்தைப் படைக்க முற்பட்ட புகவான் தானே அதற்குக் கரணம் ஆனர். படைப்பிற்கு முன் பகவானிடம் ஒடுங்கிய உலகம் லயமடைந்த நிலையில் தனித்தில்லை. அவர் மட்டுமிருந்தார். அவரிடம் அடங்கியிருந்த காலமும் படைப்பு தொடங்கப்பெற வேண்டும் என்ற ஸங்கல்பமும் எழுந்தது. உடன் மாயை எனும் சக்தி தனித்து இயங்கியது. பகவானையே மூலகாரணமாக - கரணமாக ஆக்கி அந்த சக்தி படைக்கத் தொடங்கியது.[1] (நா. 8)*

*மனிதன் வாழ்வதற்கு வெளிக் கரணமாக கண் முதலிய ஐந்து ஞானேந்திரியங்களும் கால் முதலிய ஐந்து கர்மேந்திரியங்களும் உள் கரணமாக மனமும் புத்தியும் சித்தமும் அஹங்காரமும் பயன்படுகின்றன. இறைவனின் சக்தித்துளி பெற்ற கரணங்கள் வடிவில் உள்ளவர். (378)*

**379. காரணம் - துணைக்காரணமானவர்.**

*மட்குடம் செய்ய மண்ணைத் தவிர வேறு சில உபஸாதனங்களும் தேவைப்படுகின்றன. பானை வனையப் உதவுகின்ற சக்கிரம், அதனைச் சுழற்றுகின்ற தடி, மண்ணைத் தட்டி நெகிழ்த்தி உரிய வடிவமைப்பு பெறச் செய்கின்ற சட்டம், வெயில், சூளை முதலியவை. ஆனல் இவை இன்றியமையாதவை அல்ல. அதுபோல் படைப்பிற்கும் சில உபஸாதனங்கள் தேவைப்படும். உபாதான காரணம், நிமித்த காரணம் எனும் ஸ்வபாவம், காலம், குணம், முதலியவையும் இந்திரியங்களைச் செயலாற்றத் தூண்டுகின்ற தேவதா சக்தியுமாக இருப்பவர். (நா.8) (379)*

**380. கர்தா - செயலாற்றுபவர். படைப்பவர்.**

*மற்ற துணைச் சாதனங்களைக்கொண்டு, முக்ய சாதனத்தைத் தான் விரும்பியுள்ள உலக வடிவம் பெறும்படி அமைப்பவர்; பிரகிருதியைப் பிரபஞ்சவடிவடையச் செய்தவர். முக்கிய ஸாதனமும் துணைச் சாதனங்களும் இருந்தாலும் கர்த்தா இல்லையேல் செயலே நிகழாது. மண், சக்கிரம் முதலியவை இருந்தால் மட்டும் குடமாகாது. குயவனும் இன்றியமையாதவன். தான் ஸாதனமாகாமல் ஸாதனங்களைத் தனது விருப்பிற்குப் பயன்படுத்திக்கொண்டு செயல்நிறைவுபெறச் செய்பவன் கர்தா. அப்படி உலகிற்குக் கர்தாவானவர். (நா. 315) (380)*

1. स कारणं करणाधिपाधिपः (श्वेताश्व ६.९) तत्कारणं सांख्ययोगाधिगम्यं (श्वेताश्व ६.१३)

381. விகர்தா – விசித்திரமாகப் படைப்பவர்.

*தனது ஸங்கல்பத்தையே ஸாதனமாகக்கொண்ட பகவான் விசித்திரமான - யுக்திக்கு அப்பாற்பட்டதான - விந்தையான உலகத்தைப் படைத்தார். லீலையாக - விளையாட்டாகப் படைத்ததால் உலகம் விசித்திரமாயிற்று. அவர் படைத்தவற்றில் ஒன்றுபோல் மற்றொன்று இராது.*

*தனக்கென விருப்பு - வெறுப்புகளோ, இன்ப துன்பங்களோ இல்லாமையால் மாறுபாடு (விகாரம்) இல்லாதவராயினும், லீலையால் நட்பும் பரிவும் அன்பும் காட்டுபவராகிப் பிறரது சுக துக்கங்களால் பாதிப்புறுபவராக மாறுபவர். எதிர்பார்த்தலில்லாத (அவ்யாஜமான) அன்பின் பாதிப்பாதலால் குற்றமில்லை. (381)*

382. கஹந: – எளிதில் உணர முடியாதவர்.

*அவரது ஸகுணமான வடிவமோ அதன் செயலாற்றலோ செயலோ விளையாட்டோ எதனையும் எளிதில் அறியமுடியாது. சிறந்த அறிவாளியின் ஊகத்திற்கும் அவை அப்பாற்படுபவை. ஆழ்ந்திருப்பவை. அவரிடம் ஆழ்ந்து பதிந்துள்ள மனமுள்ளவர்களால் மட்டும் ஓரளவு அறியக்கூடியவை. கண்களும் கண்களால் காணப்படுவதும் காட்சியும் கண்களைக் காட்டிலும் வேறுபட்டுப் புலனுக்குட்படுவதும் உணரத்தக்கதாகும். புலனுக் கப்பாற்பட்டவராதலால் எளிதில் உணர முடியாதவர்.[1] (382)*

383. குஹ: – மறைந்திருப்பவர்.

*வெளியில் தெரியாதபடி தன்னைத் தானே மாயையால் மறைத்துக்கொண்டிருப்பவர்.[2] அவரை எப்படி அறியத்தகுமோ அப்படி அறிவிலிகள் அறிவதில்லை.* 'அவஜாநந்தி மாம் மூடா:- பரம்பாவமஜாநந்த: மம பூதமஹேச்வரம். *(கீதை. 9-11)* நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருத: *(கீதை. 7-25) அவரை அவரது விருப்பத்திற்கிசைய யோக மாயை மறைக்கிறாள். ஜீவன் தனது அறியாமையெனும் திரையால் மறைக்கப்பட்டுள்ளான். அதனால் அவர் குகையில் இருப்பவர்போல் மறைந்துள்ளார்.*

1. तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं गुहाहितं गह्वरेष्ठं पुराणम्। (कठ २. १२)
2. एष सर्वेषु भूतेषु गूढोत्मा न प्रकाशते। (कठ ३. १२)

தாய் கருவில் சிசுவை மறைத்து வளர்ப்பதுபோல் அடியார்களை வளர்ப்பவர். (க்ஷஹதி - ரக்ஷதி). (383)

व्यवसायो व्यवस्थानः सस्थानः स्थानदो ध्रुवः ।
परर्द्धिः परमस्पष्टस्तुष्टः पुष्टः शुभेक्षणः ॥ ७३ ॥

வ்யவஸாயோ வ்யவஸ்த்தாநஸ் ஸம்ஸ்த்தாநஸ் ஸ்த்தானதோ த்த்ருவ:
பரர்த்தி: பரமஸ்பஷ்டஸ் துஷ்ட: புஷ்டஶ்ஶுபேக்ஷண: 73

384. வ்யவஸாய: - உள்ளறிவானவர்.

எளிதில் அறிய முடியாமைக்குக் காரணம், அவர் உள்ளறிவாகப் பேரறிவாக இருப்பதே கேட்டல், முகத்தல், காண்டல், சுவை, தொடுகை முதலிய உணர்ச்சிகள் இந்த உள்ளறிவின் அலையால்தான் உணரப்படுகின்றன. சிற்றறிவுகளின் ஊற்றுக்கண்ணுன அந்த உள்ளறிவானது ஸம்வித் சித் ஜ்ஞானம் என்று பல பெயர்களால் குறிப்பிடப்பெறும். அத்தகைய உள்ளறிவானவர்.

நிச்சய அறிவு, சீரான செயல் முறை, தீர்மானமாக உணர்ந்தபடி நன்கமைந்த செயல்முறை இவையும் அவரே. கர்மயோகமாக அமையக்கூடியதும் ஈச்வரார்ப்பணம் என்ற திட எண்ணத்துடன் கடமையில் கருத்துடன் செயல் நேர்த்தியுடன் அமைந்ததுமான செயல் - வ்யவஸாயம். இதுவும் பகவானே.

ஆகாயத்தில் அமைந்துள்ள துருவ நட்சத்திரம் அங்குள்ள சக்கிரவடிவிலுள்ள ஒளி மண்டலத்தைத் தன்னுடன் கட்டுமுளைபோல் பிணைத்துக்கொண்டு அவற்றை நிலைக்க வைப்பதாக அமைந்துள்ளது. விஷ்ணு பதத்தில் அமைந்து ஒளி மண்டலங்களைக் கட்டும் முளையான இந்தத் துருவ நட்சத்திரமாக இருப்பவர்.[1] (384)

385. வ்யவஸ்த்தாந: - அததன் நிலையில் அததனை நிலைக்கச் செய்பவர்.

தேவர் மனிதர் என்றவாறு பல பிரிவுகளில் உலகத்தை அடக்கி அததற்குத் தனித்த நடைமுறைகளை வகுத்தளித்தவர். பல

1. तद्विष्णोः परमं पदमभिवदन्ति यत्र ह महा भागवतो ध्रुवः... सर्वेषां ज्योतिर्गणानां स्थाणुरिवावष्टंभ ईश्वरेण विहितः शश्वदवभासते। (भागवतं ५. २३. १)

பிரிவுகளுக்குட்பட்ட உலகம் ஒரே சீராக, ஒன்றுக்கொன்று உதவுவதாக, தொடர்ந்து வாழக்கூடியதாக இயங்குவதற்காகப் பல நெறிகளை ஏற்படுத்தியவர். கடுமையான நடவடிக்கைளின் பலத்தில் நடைமுறைகளைச் சீராக வகுத்துள்ளவர், ஒழுங்கான நடைமுறைகளின் மூலம் உலகை நிலைக்கச் செய்தவர். சலனமடையாமல் நிலைத்த செயல் முறை கொண்டவர்.

துருவ நட்சத்திரத்தில் கட்டுப்பட்டுச் சிதறாமல் ஒரே சீராகச் சுற்றி வரும் நட்சத்திர - கிரஹ மண்டலங்களால் காலப் பிரிவுகளை உண்டாக்கி உலகை நெறிப்படுத்துபவர். (385)

386. ஸம்ஸ்த்தாந: - நிலைபெறுமிடம்.

ஸம்ஸ்த்தா என்ற சொல் நிலைத்திருப்பது, இறுதி (மரணம்) என்று இரு பொருள்படும். உலகம் அனைத்தும் இவரிடம் சென்றடங்கி பிரளயமடைகின்றன. உலகம் சென்று ஒடுங்குமிடம் ஸம்ஸ்த்தாந:. உண்மையான இருப்பு அவரொருவருடையதே. அவரது இருப்பே உயிரினத்தின் இருப்பாகிறது. உலகில் காண்கின்ற பொருள் அனைத்தும் நிலைமாறிக்கொண்டும் பரிணாமமடைந்து கொண்டும் இருக்கின்றன. கதிர் நெல்லாயிற்று. நெல் அரிசியாயிற்று. அரிசியாயிருக்கும் நிலையில் கதிராகவும் நெல்லாகவும் இருந்த இருப்பு மறைந்துவிட்டது. இப்போது அரிசியாக உள்ள இருப்புதான் உண்டு. எந்நிலையிலும் 'இருப்பு' உண்டு. கதிர் நெல் அரிசி என்ற நிலைதான் மறைகின்றது. இந்த 'இருப்பு' பகவானின் அம்சம். எதுவுமே அழிவதில்லை. வேறு ஒன்றாக மாறி அது இருக்கிறது. கதிர், நெல், அரிசி, அன்னம், உடலில் தசை முதலியவை என்றவாறு பல மாறுபாடுகளுக் குட்பட்டாலும் தொடர்ந்து அந்த 'இருப்பு' உண்டு. அந்த இருப்பாயிருப்பவர் ஸம்ஸ்த்தாந:.

திருப்பாற்கடல், ஸூர்ய மண்டலம், யோகிகளின் இதயம், துருவமண்டலம் முதலிய சிறந்த இருப்பிடங்களைக் கொண்டவர். (386)

387. ஸ்த்தாநத: - உரிய இடமளிப்பவர்.

அவரவரது வினைப்பயனுக்கேற்ப வாழ்வின் நிலைகளை அமைத்துத் தருபவர். துருவன் முதலானவருக்கு உரிய உயர்ந்த ஸ்தானத்தை அளித்தவர். துருவ நக்ஷத்திரம் விஷ்ணுபதம் எனப் பெறும் மூலைபோன்ற சலனமற்ற இடம். அதில்

பிணைக்கப்பெற்றுள்ள கிரக நக்ஷத்திர மண்டலங்கள் ஒரே சீராகச் சுற்றிக் காலவரை ஏற்படுத்துகின்றன. கிரகம் முதலியவற்றின் சலனமே காலத்தின் அசைவு - பகல் இரவு நாள் மாதம் முதலிய காலப்போக்கு. அதனால் உற்பத்தியையும் மறைவையும் மக்கள் அணுகுகின்றனர். ஆனால் முளை போன்றிருக்கின்ற துருவ நட்சத்திரம் காலவசப் படுவதில்லை. அது சலனமற்றது. அப்படி நிலைத்த நிலையை துருவனுக்கு அளித்தவர் (387)

388. த்ருவ: - நிலைத்துள்ளவர்.

(த்த்ருவதி - ஸ்திரோ பவதி.) அழிவற்றவர், நிலைத்தவர், காலவசப்படாமையால் வயது முதலிய மாறுபாடுகளற்றவர். பிறந்ததனைத்தும் மறையும் என்ற நியதிப்படி மறையவேண்டிய துருவனைத் தனது அருளால் நிலைத்த நிலையில் அமரச் செய்து அழிவற்றவனாக, நிலைத்திருப்பவனாக, தன்னை ஒத்தவனாகப் பகவான் ஆக்கினார். அதனால் அந்த துருவனும் பகவானே. (நா. 384-388 நாமங்கள் துருவனுக்கும் பொருந்துபவை) (388)

389. பரர்த்தி: - சிறந்த விபூதி உள்ளவர்.

நிறைவும் பெருமையும் செல்வாக்கும் ஒருங்கிணைந்திருப்பது விபவம் - ருத்தி - விபூதி எனப்படும். பெருஞ்செல்வமும் மங்களமான குணங்களும் நிறைந்துள்ள நிலை அது. (நா. 350). சிலரிடம் சில பகவத் குணங்கள் நிரம்பியிருத்தலால் அவர்களைப் பகவானின் அம்சம் - விபூதி என்று கூறுவதுண்டு. விபூதியாக உலகில் விளங்குபவற்றில் சிலவற்றைப் பகவான் கீதையில் பத்தாவது அத்யாயத்தில் தொகுத்தளித்திருக்கிறார். ஒவ்வொன்றில் ஒவ்வொரு பெருமை துலங்குவதாலேயே அவை விபூதிகளாகின்றன. அத்தகைய விபூதிகள் அனைத்தும் ஒருங்கே சேர்ந்துள்ளவர், சிறந்த எல்லா விபூதிகளும் கொண்டவர். ஸ்ரீராமனாக, ஸ்ரீகிருஷ்ணனாக பகவான் அவதரித்தபோது தனது விபூதிகளில் சிறந்தவற்றை அந்த அவதாரங்களில் வெளிப்படுத்தினார்.

வால்மீகி முனிவருக்கு நாரதர் உபதேசித்தபோது, சிறந்து விளங்கும் விபூதிகள் அனைத்தும் ஸ்ரீராமனிடம் விளங்குவதாக நாரதர் கூறுகிறார். கடலின் கம்பீரத்தன்மை, இமவானின் தைர்யம், விஷ்ணுவின் வீர்யம், சந்திரனின் இனிய தோற்றம், பிரளய காலத்திய அக்னி தேவனின் கோபம், பூமியின் பொறுமை,

*குபேரனின் தியாகம், தர்ம தேவதையின் ஸத்தியம், என்றிவ்வா றெல்லாம் விபூதிகள் அமைந்தவர் ஸ்ரீராமன். (ராமாயணம். 1-1, 17-19) (389)*

390. பரமஸ்பஷ்ட: - நன்கு புலப்படுபவர்.

*பரம: - அதிக அழகுள்ளவர், மேம்பட்டவர், சிறந்தவர், ஸ்பஷ்ட: - நன்கு மறைவின்றி புலப்படுபவர். ஒன்றை நன்கு அறிய ஐயமின்மை அவசியம். பார்ப்பவன், அவனது கண்கள், பார்வை, பார்க்கப்படும் பொருளின் தோற்றம் இந்த நான்கின் தெளிவின்மையும், ஏதேனும் ஒன்றோ பலவோ மறைந் திருப்பதும் ஐயத்திற்குக் காரணமாகலாம். தெளிவாகப் புலப்படுபவர். பார்க்கப்படுவது வெளிப்பொருளாயின் மறைப்பிற்கு இடம் உண்டு.*

*ஸ்ரீராமாவதாரத்தில் வாலியின் பத்தினியான தாரை ஸ்ரீராமன் தேவன் என்பதை ஸ்பஷ்டமாக அறிந்துகொள்கிறுள்:* **"த்வமப்ரமேயச்ச துராஸதச்ச ... மனுஷ்ய தேஹாப்யுதயம் விஹாய திவ்யேந தேஹாப்யுதயேந யுக்த:"** *(ராமாயணம். 4. 24. 31-32). ராவணனின் மனைவியான மண்டோதரி "விஷ்ணுவே ராமன் என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது" என்கிறுள்.* **"வ்யக்தமேஷ மஹாயோகீ பரமாத்மா ஸநாதந: .... மானுஷம் ரூபமாஸ்த்தாய விஷ்ணுஸ் ஸத்ய பராக்ரம:.** *(ராமாணம். 6-111, 11-14). "ஸ்ரீராமன் ஸூர்யனுக்கு ஸூர்யன், தேவதைகளுக்குத் தேவதை, உயிரினத்திற்கு உயிரானவன்" என ஸுமித்ரை கௌஸல்யைக்கு ஆறுதலளிக்கிறுள்.* **"ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்யோ ஹ்யக்நேரக்நி: ப்ரபோ: ப்ரபு:.... தைவதம் தேவதாநாம் ச பூதாநாம் பூதஸத்தம:.** *("ராமாயணம். 2-44, 15-16).* **தைவதம் தேவதாநாம் ச பூதாநாம் யோ அவ்யய: பிதா** *என்ற பீஷ்ம வாக்கியத்துடன் (சு. 16) ஸுமித்திரையின் வாக்கியத்தைப் பொருத்திப் பார்க்கலாம், அப்படி யாவராலும் எளிதில் கண்டுகொள்ள முடிந்தவர். பரமஸ்பஷ்ட:. (390)*

391. துஷ்ட: - மகிழ்வுற்றவர்.

*இன்பத்தால் ஏற்படும் மகிழ்ச்சி - துஷ்டியாகும். பேரானந்தமே வடிவானவராதலால் எளிதில் எப்போதும் நிறைவு காண்கிறுர். ஸ்ரீராமனுகத் தோன்றியபோது, தனக்குத் தந்தை, தாய், தம்பிகள், குரு, மனைவி, ராஜ்யத்து மக்கள், நண்பர்கள், க்ஷத்திரிய தர்மம்,*

*மனிதப்பிறவி என்று கிடைத்த சூழ்நிலே அமைப்பில் பெருமையும் திருப்தியும் கொண்டவர். தான் பிறப்பதற்கு முன்னரே தசரதஂரைத் தந்தையாக எதிர்பார்ப்பதில் மகிழ்ந்தவர்.* **''பிதரம் ரோசயமாஸ ததா தசரதம் ந்ருபம்''.** *(1-15-32)* **''க்ஷாத்ரம் தர்மம் ஸ்வம் பஹு மந்யதே''.** *(2-1-16)* **''ஆத்மானம் மானுஷம் மந்யே''.** *(6-117-56)* **ப்ரியா து ஸீதா ராமஸ்ய தாரா: பித்ருக்ருதா இதி''.** *(1-77-43)* **த்விதீயம் மே அந்தராத்மானம் த்வாமியம் ஸ்ரீ: உபஸ்த்திதா.** *(2-6-43) என ஒவ்வொன்றிலும். ஸ்ரீராமன் மகிழ்ச்சியையும் நிறைவையும் அடைகிருர்.* *(391)*

**392. புஷ்ட: - பூர்ண வளர்ச்சி பெற்றவர்.**

*எல்லா ஆசைகளும் நிறைவேறியவராக எல்லா கல்யாண குணங்களும் பூர்ண முதிர்ச்சியுடன் நிறைந்தவராகக் காணப்படுபவர்.*

*பகவானிடம் உள்ள புஷ்டி மக்களிடமும் பாய்கிறது. ஸ்ரீராமனுகத் தோன்றி அரசாளும்போது மக்களும் ராமனே ஒத்து, நிறைவு பெற்றவர்களாக தர்ம நெறியில் செல்பவர்களாக மகிழ்ச்சி உள்ளவர்களாக ஆகி ராமனுகவே ஆகிவிட்டார்கள்.* **''ப்ரஹ்ருஷ்ட முதிதோ லோகஸ் துஷ்ட: புஷ்ட: ஸுதார்மிக:** *(1-1-90)* **ராமபூதம் ஜகதபூத்''** *(6. 125 102 ராமாயணம்)* *(392)*

**393. சுபேக்ஷண: மங்களமான கண்ணேக்குள்ளவர்.**

*பகவானது பார்வை நம் மேல் பட்டால் நமக்குச் சுபம். நம் பார்வை அவரது திவ்ய மங்கள விக்கிரகத்தில் பட்டால் நமக்குச் சுபம். அவரைப் பரம்பொருளாகவும் உலகமாகவும் உணர்ந்து காண்பவர் முக்தி வேண்டின் முக்தி கிட்டும். இன்பம் வேண்டின் அது கிட்டும். அந்த பரமாத்ம தர்சனம் ஐயங்கள் அனைத்தையும் போக்கி அறிவைத் தெளியச் செய்து, வாழ்க்கைச் சிக்கல்களை அகற்றி, வினைகளைப் பயனற்றதாக்கி, அனுதியான அறியாமையையும் போக்கிவிடும். அப்யுதயம் நிச்ரேயஸம் சுபம் என்று வாழ்வில் வேண்டத் தக்கவை அனைத்தும் (சு. 7) அவரைப் பரம்பொருளாகக் காண்பதால் எளிதில் கிட்டக்கூடியவை.*[1]

*அயோத்தி மக்களிடையே ஒரு பரவலான எண்ணம். ''வாழ்வில் பெற வேண்டிய சிறந்த லாபம் ஸ்ரீராம தர்சனம்.*

1. भिद्यते हृदयग्रन्थिः छिद्यन्ते सर्व संशयाः। क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे। (मुण्डके २.८)

ஸ்ரீராமன் நம்மைப் பார்க்கவேண்டும். அல்லது ஸ்ரீராமனை நாம் பார்க்கவேண்டும். இரு வகையிலும் ஸ்ரீராம தர்சனம் கிடைக்காதவன் வீணே வாழ்கிறான். அவனது உள்ளமே அவனை நிந்திக்கும்'' என. ''யஶ்ச ராமம் ந பஶ்யேத்து யஞ்ச ராமோ ந பஶ்யதி. நிந்திதஸ் ஸ பவேத் லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே. (ராமா. 2. 17. 14)

பகவான் உலகைப் படைக்கத் தொடங்கு முன், தனித்திருக்கின்ற தான் பலவாக ஆவேன், பலவாகப் பெருகுவேன் என்று ஸங்கல்பம் கொண்டார். அந்த ஸங்கல்பத்தை ஈக்ஷணம் என்பர். அது சுபமான ஸங்கல்பமாகி இந்த விரிந்த உலகமாக ஆவதற்கு உதவியது. அத்தகைய சுப ஈக்ஷணம் உள்ளவர்.[1] அசுபமானதையும் சுபமாகப் பார்ப்பவர். அசுபத்தையும் சுபமாகப் பார்க்கச் செய்பவர். நல்லதைத் தவறாக அறியாமல் நல்லதாகப் பார்க்கச் செய்பவர்.[2] (393)

रामो विरामो विरतो[3] मार्गो नेयो नयोऽनयः ।
वीरः शक्तिमतां श्रेष्ठो धर्मो धर्मविदुत्तमः ॥ ७४ ॥

ராமோ விராமோ விரதோ[3] மார்க்கோ நேயோ நயோऽநய:.
வீரஶ் ஶக்திமதாம் ஶ்ரேஷ்டோ தர்மோ தர்மவிதுத்தம:. 74

394. ராம: - இன்புறச் செய்பவர்.

பகவான் தன் இச்சையால் தசரதரின் குமாரராகத் தோன்றினார். அவருக்குக் குல குருவான வஸிஷ்டர் பரம்பொருளுக்குரித்தான 'ராம' என்ற பெயரைச் சூட்டினார். கௌஸல்யை தசரதர் தந்த வடிவில் வஸிஷ்டர் தந்த பெயரில் அந்தப் பரம்பொருள் விளங்கிற்று. யோகிகள் தனது கட்டுப்பட்ட மனத்தில் தியானத்தால் உணரப்பெற்ற பரம்பொருளின் எல்லையற்ற சித் - ஆனந்த வடிவில் ஈடுபட்டுத் தன்னை மறந்து லயித்துவிடுகிறார்கள்

1. तदैक्षत बहु स्यां प्रजायेयेति। (छान्दोग्य ६. २) स ईक्षत लोकान्नु सृजा इति। (ऐतरेय १. १. १) स ईक्षां चक्रे। (प्रश्ने ६. ३) सेयं देवतैक्षत हन्ताहमिमाः तिस्रो देवता अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि। (छान्दोग्य ६.३)
2. भद्रं पश्येमाक्षभिर्यजत्राः। (तै. आ. १०. १)
3. विरजः விரஜ: (பா)

என்பதால் (ரமயதி) ராம: என்று பரம்பொருளைக் குறிப்பிட்டனர்.[1] வடிவும் பெயருமற்ற பரம்பொருள் ஸாதகனின் மனநிலை தன்னிடம் பொருந்துவதற்காக வடிவேற்கிறது. மனதைக் கவர்கின்ற அழகிய வடிவேற்று இன்புறச் செய்பவர். எதிரிகளையும் கவரும் தோற்றமுள்ளவர். *(394)*

395. விராம: - ஓய்வுறும் இடம்.

இவரை நினைத்தும் கண்டும் இவருடன் எவ்வகையிலாவது தொடர்பு கொண்டும் மனம் நிலைக்கும்படி செய்ததும், வேறு எந்தப் பொருளையும் நாடாமல் இவரிடமே லயித்து மனம் ஓய்வு பெறுகிறது. இவரிடம் பதித்து லயித்த கண்களையோ மனத்தையோ மறுபடி வெளிக்கொணர எவராலும் இயலாது. "நஹி தஸ்மாத் மந: கஶ்சித் சக்ஷுஷீ வா நரோத்தமாத். நர: ஶக்நோத்யபாக்ரஷ்டும் அதிக்ராந்தே அபிராகவே". *(ராமாயணம். 2. 18. 13)*

ராவணன் முதலானோருக்கு வரமளித்த பிரும்மாவோ பிரும்மாவிடம் வரம் பெற்ற ராவணனோ எவரும் தன்னை மீற முடியாமல் அடக்குபவர். பகவானிடம் தனது யோக க்ஷேமப் பொறுப்புகளை ஒப்படைத்தவனது ஓய்வாக - அமைதியாக ஆனவர். *(395)*

396. விரத: - பற்றற்றவர்.

போகப் பொருள்களை நாடுவதில் பற்றற்றவர். எல்லாவற்றிலும் நிறைவுகொண்டதால் தனது சுகத்திற்கென எதனையும் எதிர்பார்க்காதால் அவருக்குப் பற்றில்லை. ஸ்ரீராமனைத் தோன்றும்போதும், அரசை ஏற்கும்போதும், தந்தையின் சொற்படி அரசை விட்டுக் காட்டுக்குச் சென்றபோதும் பாதிப்புறாதபடி தன் பற்றற்ற நிலையைக் காண்பித்தவர். விரஜ: என்ற பாடப்படியும் இதே பொருள் ரஜ: - ஆசை, விரஜ: என்பது நபும்ஸகலிங்கச் சொல்.[1] *(396)*

1. रमन्ते योगिनोऽनन्ते नित्यानन्दे चिदात्मनि । इति रामपदेनासौ परं ब्रह्माभिधीयते। चिन्मयस्याद्वितीयस्य निष्कलस्याशरीरिण: । उपासकानां कार्यार्थं ब्रह्मणो रूपकल्पना। (रामतापिनी १. १. ५. ६)
2. विरज: पर आकाशादज आत्मा (बृहदा ४. ४. २०) विरजं ब्रह्म निष्कलं । (मुण्डक २. ९)

**397. மார்க்க: - நல்வழி.**

*ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலைபெற்று ஆத்மானுபவம் பெறுவதற்கேற்ற வழியே வழிகளுள் சிறந்தது. அந்த நல்வழியாயிருப்பவர். முனிவர்களால் முக்தி பெறத் தேடப் பெறுபவர்.[2] ராமனுக மானைத்தேடித் தொடர்ந்தவர். (நா.365)*

*விரஜோமார்க: என்று ஒரே நாமமாகக்கொள்வது உண்டு. புழுதியற்ற வழி - தூய வழி அவர். (397)*

**398. நேய: - அழைத்துச் செல்லத்தக்கவர்.**

*தூய நல்வழி காட்டி நல்லறிவு பெறச் செய்து பரம் பொருளிடம் அழைத்துச் செல்லப்படும் ஜீவனும் அவரே. நல்லன்புபடைத்த நண்பர்களின் அன்பாணைக்கு உட்பட்டு நடப்பவர். விபீஷணரை ஏற்பது முதலானவற்றில் நண்பர்களது ஆலோசனையை ஏற்றவர். (398)*

**399. நய;- அழைத்துச் செல்பவர்.**

*ஜீவாத்மாவிற்கு நல்வழி காட்டித் தன் பரமபதத்தை அடைய அழைத்துச் செல்பவர். காட்டில் ராமனுக முனிவர்களுக்குப் பாதுகாப்பளித்தவர். பாண்டவர்களுக்குக் கண்ணனுக வழிகாட்டியவர். மார்க:. நேய: நய: என்ற மூன்று நாமங்கள் அழைத்துச் செல்லும் வழியும் அழைத்துச் செல்லப்படுபவரும் அழைத்துச் செல்பவரும் அவரே என்று விளக்குகின்றன.[1] (399)*

**400. அநய: - அழைத்துச் செல்லப்படாதவர்.**

*பரமேச்வரராக எல்லோரையும் ஆட்படுத்துபவரானதால் இவருக்கு வழிகாட்ட வேறொருவரில்லை. ஸ்ரீராமனுகத் தோன்றிய போது எதிரிகளால் அணுக முடியாதிருந்தவர். அய: - மங்களமான செயல். அவரை அடையப் பயன்படும் செயல் முறைமட்டுமே மங்களமானது. (400)*

**401. வீர: - வீரர்.**

*பிறர் எதிர்க்க முடியாதவாறு, பிறரால் வெல்லப்படாதவாறு எதிரிகள்*

1. एष पन्था ब्रह्मणा ह्यानुवित्तः (बृहदा ४.४.०) नान्यः पन्था विद्यतेऽयनाय। (तै. आ. ३.१३)

2. *பட்டர் உரைப்படி இது 400 வது நாமம்*

*தானே அடங்குமாறு தன் திறமையைக் காட்டுபவர்.[1] மஹாவீரர்களான ராவணன் முதலியவர்களைக் கனவிலும் நடுங்கச் செய்கிற போர்த்திறமை உள்ளவர். (நா. 643, 658). (401)*

**402. ஶக்திமதாம் ஶ்ரேஷ்ட்ட: - வலிவுமிக்கவர்களில் மிகச் சிறந்தவர்.**

*படைப்பு முதலியவற்றில் சக்திமிக்க பிரும்மா முதலிய தேவர்களைவிடச் சக்திமிக்கவர். தங்களால் ராவணனைக் கொல்ல இயலாமையை உணர்ந்து இந்திரன் முதலானோரால் சக்தி மிக்கவர் என சரணாக அடை ாப்பெற்றவர். (402)*

**403. தர்ம: - தர்மம்.**

*பல தோற்றங்களும் குணச்சிறப்புகளும் உள்ளவற்றை அதனதனை அதனதன் இயல்பால் வரம்பில் அடக்கிக் கட்டுப் படுத்தி உலக அமைப்பு சிதருதபடி தாங்குகின்ற (தாரணம் என்ற இயல்புள்ள) தர்மமே வடிவானவர்.[1] உலகமைப்பிற்கு முன்னும் பின்னும் உலகமைந்துள்ள நிலையிலும் தொடர்கிறபடியால் நித்யமான தாரணம் இது. அத்தகைய தாரணத்தால் தாங்கப்பெறுகின்ற உலகைக் காணலாம். அந்த தர்மத்தைக் காண இயலாது. அந்த தர்மமே வடிவெடுத்து ஸ்ரீராமனாகத் தோன்றினர்.* **"ராமோ விக்ரஹவான் தர்ம:"** *வேதம் ஸ்மிருதி ஆகமங்கள் முதலியவற்றில் கூறப்பட்ட வழிபாட்டு முறைகளால் (தர்மங்களால்) வழிபடப் பெற்றவர்.*

*தர்மம் - அறநெறி. அதனைக் காப்பாற்றுபவரை அது காப்பாற்றும். அதனை அழிப்பவரை அது அழிக்கும்.* **'தர்மோ ரக்ஷதி ரக்ஷித:. தர்ம ஏவ ஹதோ ஹந்தி'.** *செல்லும் பாதையை ஆபத்தற்ற நல்ல பாதை எனக் காட்டப் பாதையின் இருமருங்கிலும் எல்லைக்கற்கள் அமைந்திருக்கும். அவைகளின் இடையே செல்பவன் ஆபத்தற்ற நல்ல பாதையில் செல்கிறன். செல்லவேண்டிய இடத்தை அவன் சுகமாக அடைகிறன். இதுபோல் அறநெறியானது வாழ்க்கைப் பாதை*

1. अथ कस्मादुच्यते वीरमिति। यस्मात्स्वमहिम्ना सर्वान् लोकान्सर्वान् देवान्सर्वानात्मनः सर्वाणि भूतानि विरमति विरामयत्यजस्रं सृजति विसृजति वासयति, यतो वीरः कर्मण्यः सुदक्षो युक्तग्रावा जायते देवकामस्तस्मादुच्यते वीरमिति।
2. न हि सुविज्ञेयमणुरेष धर्मः। (कठ १. २०) अजातो ह्यमृतो धर्मः। सकृद्विभातो ह्येवैष धर्मो धातुस्वभावतः। (माण्डूक्यालात ६.८१)

ஆபத்தற்றிருப்பதையும் சுகமாயிருப்பதையும் உணர்த்துகின்ற எல்லைக்கற்கள்போல் உள்ளது. வாழ்க்கைப் பாதையையின் நிலை அறிய முடியாதபோது அறநெறி எல்லைக்கற்கள் சுகமான பாதையைக் காட்டுகின்றன. அவற்றைச் மீறிச் சென்றாலும் அவற்றிலேயே மோதினாலும் துன்பம் ஏற்படுகின்றது. எல்லைக்கல் வழியைக்காட்டுமே தவிர நம்மைத் வழியில் திருப்பிவிடாது. எல்லைக்கல் காட்டிய வழியில் செல்கின்ற பழக்கமே வாஸனையாக அமைந்தால், எல்லைக்கல்லே நம்மை திருப்புவதாக ஆகும். எல்லைக்கல் என்று உணராமலோ, அதனை மதிக்காமலோ இருப்பவருக்கு அது உதவுவதில்லை. அதில் மோதிக்கொள்ளும்போது அதுவும் சிதறி மோதிக்கொள்பவனையும் சிதறச் செய்யும். எல்லைக்கல்லைப் பாதையைப் பராமரிப்பவர் சீர் செய்துவிடுவார். மோதிக்கொண்டு சீரழிந்தவனை யாரும் சீராக்கமுடியாது. அறநெறியை இறைவன் சீரமைத்துவிடுவார். அறநெறியை மறந்தவனையும் உணராதவனையும் சீரழித்தவனையும் காப்பாற்ற யாருமில்லை. அறநெறியாக நின்று வழிபடுத்துபவர். (403)

404. தர்மவிதுத்தம: – தர்மமறிந்தவர்களில் மிகச் சிறந்தவர்.

தர்மம் பல பிரிவுகளுள்ளது. எல்லா தர்மப் பிரிவுகளையும் அறிந்தவராக ஒருவர் இருக்க முடியாது. ஆனால் வேதம் ஸ்மிருதி முதலியவற்றைக்கொண்டு தர்மப்பாதையைக் காட்டியவரும், அந்தப் பாதையை வகுத்தவரும் தர்மமே வடிவானவருமான பகவான் தர்மப் பிரிவுகள் அனைத்தையும் அறிந்துணர்ந்தவர். அவரறியாத தர்மத்தை அவர் தன் ஆணையாகப் பரப்பியிருக்க முடியாது. தர்மத்திற்கு மூல நூல்களான வேதம் ஸ்மிருதி முதலியவற்றைத் தனது ஆணையாகப் பிறப்பித்தவர். 'ச்ருதிஸ்மிருதீ மமைவாஜ்ஞே' (விஷ்ணுதர்மோத்தரம் 76. 31) அவற்றைப் பின்பற்றி நேர்மையுடன் வாழ்கின்ற மகான்களின் வடிவில் தோன்றி அவற்றைச் செயலுருவில் ஏற்கத்தக்கதாகவும் இம்மையிலும் மறுமையிலும் சிறந்த நன்மை பயப்பதாகவும் உலகிற்கு உணர்த்தியவர். இத்தகைய பல தர்ம வழி அறிந்த பெரியோர்களாகவும், அவர்களுக்குத் தலைவராகவும் இருப்பவர். நதிகள் கடலைச் சென்றடைவதுபோல், தர்மமறிந்த பெரியோர்கள் சென்றடைய வேண்டிய சிறந்த இடமாக உள்ளவர். (389 – 404 நாமங்கள் ஸ்ரீராமனை அறிமுகப்படு த்துபவை.) (404)

वैकुण्ठः पुरुषः प्राणः प्राणदः प्रणवः पृथुः ।
हिरण्यगर्भः शत्रुघ्नो व्याप्तो वायुरधोक्षजः ॥ ७५ ॥

வைகுண்ட்ட: புருஷ: ப்ராண: ப்ராணத: ப்ரணவ:[1] ப்ருது:
ஹிரண்யகர்ப்பஶ் ஶத்ருக்க்நோ வ்யாப்தோ வாயுரதோக்ஷஜ: 75

405. வைகுண்ட்ட : - தடுத்தாட்கொள்பவர்.

*குண்ட்டா - செயல் தடை, இடையூறு, அது அது தன் தன் போக்கில் வேகமாகச் செயல்படும்போது நடுவில் பலவிதமாக அந்தச் செயலைத் தடுத்துத் தன் வழிப்படுத்துபவர். (விகதா குண்ட்டா தஸ்யா: கர்தா). தேர் ஓடும்போது முட்டுக்கட்டை போட்டுத் தடை செய்வது தேர் நேராகச் செல்வதற்காகவே. தேரின் ஓடும் சக்தியைவிட முட்டைக்கட்டையின் தடை சக்தி பெரிது. அதுபோல் உலகப் பொது இயல்பைப் பாதுகாக்கத் தனித்துச் செல்பவைகளின் வேகத்தை பகவான் கட்டுப்படுத்துகிறார். அதனால் அவர் தடையுறுவதில்லை.[2] உலகைத் தொடங்கும்போது ஐந்து மஹாபூதங்களும் ஒன்றோடு ஒன்று இணையாமல் தன் தன் சக்தியைப் பெருக்கிக்கொண்டபோது, அவற்றை இணைத்து அவைகளின் தனித் தன்மையைக் கட்டுப் படுத்திப் பிரபஞ்சமாக உருவெடுக்கச் செய்தவர். பூமியை ஜலத்துடனும் வாயுவை ஆகாசத்துடனும் வாயுவை நெருப்புடனும் இணையச் செய்தவர்.* "மயா ஸம்ச்லேஷிதா பூமிர் அத்ப்பிர் வ்யோம ச வாயுநா. வாயுச்ச தேஜஸா ஸார்த்தம் வைகுண்ட்டத்வம் ததோ மம *(பாரதம் சாந்தி 352 15) பக்தர்கள் தம்மை அடைவதற்கு இடையூறாக உள்ளவற்றை விலக்கி அவர்களை எளிதில் தன்னை அடையச் செய்பவர். (விகதா குண்ட்டா யஸ்மாத்). தனது செயல் முறைகளிலும் முடங்கல் இல்லாதவர். ரைவதம் என்ற ஐந்தாவது மன்வந்தரத்தில் சுப்ப்ரர் என்பவருக்கும் அவரது மனைவி விகுண்ட்டா என்பவளுக்கும் குமாரராகப் பிறந்த பகவான் வைகுண்ட்டர். ரமா என்ற பெயருடன் லக்ஷ்மீ தேவி இவரது மனைவியானாள். ரமாதேவியின் கோரிக்கைக்கிணங்க, அவளது பிரியத்திற்காகத் தன் இருப்பிடமாகத் தனி உலகை வைகுண்டர் படைத்தார். வைகுண்டரின் உலகம் வைகுண்ட்ட*

1. प्रणमः ப்ரணம: என்ற பாடமுண்டு.
2. इन्द्रो वैकुण्ठोऽपराजिता सेनेति वा अहमेतदुपासे। स यो हैतमेवमुपास्ते जिष्णुर्हवा पराजिष्णुरन्यतस्त्यजाया भवति। (कौषीतकी ४. ७)

மாயிற்று. (விஷ்ணுபு. 3, 2, 41 பாகவதம். 8. 5, 4-5) அந்த வைகுண்டரும் வைகுந்தம் எனும் உலகமும் அவரே. ராமனாகத் தோன்றியபோது ராமனை முன்னிலையாக் கொண்டு ஒருவருக்கொருவர் துன்புறுத்திக்கொள்ளாமல் அன்பு பூண்டுவாழ்ந்தனர். அப்படி அவர்களை அன்புக்கெதிரான போக்கில் செல்லாமல் தடை செய்தவர். (405)

406. புருஷ: – பாபத்தைச் சுட்டெரித்தவர்.

எல்லாவற்றிற்கும் முன் நுழைந்திருப்பவர். உலகத்தைப் படைப்பதற்கு முன்னிருந்த பரம புருஷர். உயிரினத்தின் உடல் தோன்று முன் உட்புகுந்த ஜீவன். (புரா ஸீததி). காரியமான உலகத்தினுள் காரண வடிவில் நிறைந்து நின்று வடிவமைப்பை அமைத்துத் தந்தவர். அப்படி பல கூறுகளில் அமைந்த உலகத்தின் ஒவ்வொரு கூற்றிலும் உட்கிடப்பவர்.[1] (பூர்ஷு சேதே).

ஞான சக்தியும் கிரியா சக்தியும் இணைந்து உலகின் விஸ்தரிப்பில் ஈடுபட்ட ஈச்வர வடிவம் விராட் எனும் பிரஜாபதியாகும். அவரே முதலில் தோன்றியவர். முழு வடிவம் பெற்றமையால் புருஷர். அந்த பிரஜாபதி நிலைக்கு வரத் தடையாயிருந்த கெட்ட வினைகள் அனைத்தையும் சுட்டெரித்து உலகப் படைப்பைத் துரிதப்படுத்தினார். பாப வினைகளைச் சுட்டெரித்தமையால் அவர் புருஷ: (புரா ஔஷத்) இப்படி முன்வினைப்பயன்களைச் சுட்டெரிப்பவர் பிரஜாபதி ஆகிறார்.[2] (நா. 14, 24, 507) மக்களை அரவணைத்துக் காப்பவர். (406)

407. ப்ராண: – உயிராக இயங்குபவர்.

விராட் வடிவில் ஜீவனாக உட்புகுந்து பெயரும் வடிவும் பெற்று உயிராகி உடலை இயக்கித் தனித்தனி இயல்புகளைக் காட்டியவர்.[3] "சேஷ்டாம் கரோதி ச்வஸனஸ்வரூபீ". (விஷ்ணு புராணம்). (நா. 66, 320) (407)

1. स वा अयं पुरुषः सर्वासु पूर्षु पुरिशयः । (बृ. आ. २. ५. १८)
2. स यत्पूर्वोऽस्मात्सर्वस्मात्सर्वान्पाप्मन औषत्तस्मात्पुरुषः । ओषति ह वै स तं योऽस्मात्पूर्वो बुभूषति । (बृ. आ. १. ४. १)
3. मनोमयः प्राणशरीरो भारूपः (छान्दोग्य ३. १४) यद्वै प्राणिति स प्राणः । (छान्दोग्य १. ३)

408. ப்ராணத: - உயிரைத் தருபவர்.

*காலவடிவில் ஆட்டிப்படைக்கின்றவராகச் சரீரத்திற்கு உயிரூட்டுவதும் (ப்ராணான் ததாதி) உயிரைப் பிரிப்பதும் (ப்ராணான் த்யதி) மஹாகாலமான ப்ரளய காலத்தில் எல்லா உயிர்களையும் தன்னுள் ஒடுக்கிக்கொள்வதும் ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் திரும்ப உயிரூட்டுவதும் பகவான் ஆற்றுகின்ற லீலைகளில் சில.*

*காற்று வெளியில் பிராணனாக இருந்து உடலின் உட்புகுந்து உயிராகி உயிர்ப்பைத் தருபவர் அவரே. காற்று வெளியில் பிராண சக்தி இருந்தும் கூட, கூட இருப்பவர்கள் அதனைப்பெறும் போதும் கூட, மரிப்பவன் மட்டும் அதனைப் பெறாதபடி துண்டிப்பவர். தன்னைச் சேர்ந்தவர்களைக் காக்கத் தன் உயிரையும் கொடுப்பவர்.* "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்". *(ராமாயணம். 3,10,18) (நா. 65, 321, 956) (408)*

409. ப்ரணவ: - ஓங்காரம்.

*ஓங்காரம் இறைவனைத் துதிப்பதற்கேற்ற மந்திரச் சொல். அதனால் ஓங்காரம் பிரணவம் (ப்ரணௌதி).*[1] *இறைவனுக்கு அதுவே துதிச்சொல். நிர்குணமான பரம்பொருளையும் ஸகுணமான அத் தோற்றங்களையும் பிரணவம் குறிப்பிடும்.*[2] "தஸ்ய வாசக: ப்ரணவ:". *(யோகஸூத்ரம்). அதனால் அதுவும் துதிக்கு உரியது. (ப்ரணூயதே). பிரணவத்தைக் கூறி வேதம் ஓதுவதும் சடங்குகள் புரிவதும் முறை.*[3] *பரமாத்மாவைத் தியானம் செய்ய ஏற்றப் பிரதீகம் அது.*[4] *ஓம் என்று கூறும்போதே நமது பிராண சக்தி அனைத்தையும் பரமாத்மாவிடம் கொண்டு அது சேர்த்துவிடுகிறது.*[5] *(நா. 17, 957) அது பகவானின் விபூதி.* **'கிராமஸ்மி ஏகமக்ஷரம்.** *(கீதை. 10, 25)*

---

1. तस्मादोमिति प्रणौति।
2. परं चापरं च ब्रह्म यदोंकारः। (प्रश्न ५. २) प्रणवो ह्यपरं ब्रह्म प्रणवश्च परं स्मृतः। (माण्डूक्य आगम २६)
3. ओमिति सामानि गायन्ति। ओमिति ब्राह्मणः प्रवक्ष्यन्नाह ब्रह्मोपाप्रवानीति। (तैत्तिरीय १. ८)
4. ओमित्येव ध्यायथ ह्यात्मानं (मुण्डक २. २. ६)
5. प्राणान् सर्वान्परमात्मनि प्रणाययतीत्येतस्मात्प्रणवः। (अथर्वशिखा)

*மிகவும் புதியவர் (ப்ரகர்ஷேண நவ:)உ படைப்பின்போது முதலில் தோன்றிய புது ஒலி வடிவம். எப்போதும் புதிதாக உணரப்பெறுவது. தனிமையில் வெட்ட வெளியில் ஓ என்று ஒலியாக உணரப்பெறுவது. சிசு பிறந்ததும் முதல் மூச்சுக்காற்றுடன் நான் என்ற எண்ணத்தையும் உள் இழுத்துக்கொண்டது. அதன் வடிவம் 'ஸோஹம்'. அதில் மெய்யெழுத்தான உடலைப் பிரிக்க உயிரான ஓங்காரம் தோன்றும். புதிதாக நான் என்ற உணர்வைத் தந்த ஒலி அது.*

*மிகவும் புகழப் பெறுபவர். (ப்ரணூயதே). ப்ரணம: என்ற பாடத்தின்படி தன்னிடம் ஈடுபாடுள்ளவரால் வணங்கப் பெறுபவர். (409)*

410. ப்ருது: - பெரிதும் விரிந்துள்ளவர்.

*உகைமாக விரிந்து காண்பவர். ஸூக்ஷ்மான ஒலிவடிவு பெற்ற ஓங்காரமே எங்கும் பரவிப் பேரொலியாகி உலகமாகிப் பெரும் உருவில் காட்சி தந்தது. பெரியவர் எனப் புகழ் பெற்றவர். இந்த விரிந்த உலகைப் பண்படுத்தி வாழத் தக்கதாகத் தானிய வயல்கள், நகரம், கிராமம், ஆறு, குளம் என்றவாறு மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படுவதாக ஆக்கிப் பூமியில் இருந்த மலட்டுத்தன்மையை அகற்றிப் பூமியைத் தன் மகளாக(ப்ருதிவீ)ப் பெற்ற பிருது மகாராஜனுக அவதரித்தவர். இது பகவானின் ஒன்பதாவது அவதாரம். (பாகவதம் 1, 3. 14, 2. 7. 9, 4. 15. 18) (410)*

411. ஹிரண்ய கர்ப்ப: - ஹிரண்ய கர்ப்பர்.

*ஹிரண்ய கர்ப்பர், பகவானின் தொப்புளில் முளைத்த தாமரையிலிருந்து தோன்றியவர். (நா. 70, 320) ஹிரண்யகர்ப்பர் தோன்றிய ஹிரண்யம் எனும் வீர்யத்தைத் தன் கருவில் கொண்டவர்.*

*விழிப்பும் கனவும் தூக்கமும் வேறுபட்ட நிலைகள். இம்மூன்று நிலைகளிலும் ஜீவன் மூன்று விதமாகக் காட்சி அளிக்கிறன். விழிப்பில் ஜீவனுக்கு ஒரு பெயரும் உருவமுமுண்டு. ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று சரீரங்களிலும் தானென்ற அபிமானம் நிலைத்துள்ளது. இப்படி மூன்று தேகங்களிலும், தனித்து ஸ்தூல தேகத்திலும், அபிமான முள்ளவன் 'விச்வன்' எனும் ஜீவன். விழிப்பில் ஸ்தூல சரீரத்தில் கொண்டிருந்த அபிமானம் கனவில் விலகுகிறது. ஸூக்ஷ்ம சரீரம் மட்டும்*

அதுவே. கனவில் வேறு ஸ்தூல உடலையே அவன் பெறுவது உண்டு. இதே உடலில் இருந்தாலும் விழிப்பில் இயலாததைச் செய்கின்ற திறமை படைத்ததாக அது இருக்கும். ஸூக்ஷ்ம சரீராபிமானியான இந்த ஜீவன் 'தைஜஸன்'. நல்ல தூக்கத்தில் ஸ்தூல உடலிலும் ஸூக்ஷ்ம சரீரத்திலும் கூட அபிமானம் விலகிக் கட்டையாக ஒன்றுமறியாதவனாக ஆகிறான். இவன் காரண சரீரத்தில் மட்டும் அபிமானம் உள்ளவன். இவன் 'பிராஜ்ஞன்' என்ற ஜீவன்.

வியஷ்டியான ஜீவனைப்போல், ஸமஷ்டியான ஈச்வரனும் மூன்று வகைப்படுகிறார் (நா. 36) ஸ்தூல தேக ஸமஷ்டியில் அபிமானமுள்ள ஈச்வரன் 'வைச்வாநரர்'. ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டியில் அபிமானியான ஈச்வரன் ''ஹிரண்ய கர்ப்பர்''. இவரையே ஸூத்ராத்மா'. 'ப்ராணன்' என்பதுண்டு. காரண சரீர ஸமஷ்டியில் அபிமானியான ஈச்வரன் 'ஈச்வரன்' எனப்படுவார். ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டியில் அபிமானம் கொண்டவரும் பிராணமய - மனோமய - விஜ்ஞானமயகோசங்களை இயக்குபவருமான ஹிரண்ய கர்ப்பர் வடிவில் இருப்பவர்.[1] (நா. 320)

பூமியின் அடியில் மறைந்திருக்கின்ற பொற்புதையல்போல் இதய தேசத்தினுள் மறைந்திருப்பவர். தனக்குப் பிரியமான அடியார்களின் அழகிய மனத்தை ஆதாரமாக்கிக்கொண்டுத் தியானத்திற்கான வடிவில் அமர்ந்து ஆராவமுதனாக அனுபவிக்கப் பெறுபவர்.

தடையற்ற சக்தி படைத்த ''வைகுண்டர்'', தான் பரம புருஷனாக இருந்த நிலையிலிருந்து இறங்கி உயிரினத்தின் இதயத்தினுள் உறைபவனாக ஆக ஸங்கல்பித்தார். ஒன்பது வாயில்களும் வாயிற்காப்பவர்களும் கொண்ட வைகுண்டம் போல் உயிரினத்தையும் வைகுண்டமாக்கிப் 'புருஷனாக' வடிவெடுக்க இசைந்தார். ஜடமான பிரகிருதியினுள் முன் நுழைந்து புருஷன் ஆனார். பிரகிருதியை வெளியிலிருந்து இயக்குகின்ற 'பிராண' சக்தியாகி உள்ளே தொடர்பு தந்து பிரகிருதியைத் தானியங்கியாக இயக்கிப் ''ப்ராணத''ரானார். உலகம் பலவாக ஆகத் தொடங்கியது. அதன் முதல் விளக்கம்

1. हिरण्यगर्भः समवर्तताग्रे, स दाधार पृथिवीं द्यामुतेमां (तै. सं ४. १. ८) यो देवानां प्रथमं पुरस्तात्... हिरण्यगर्भं पश्यत जायमानं। (तै. आ. १०. १०)

ஆகாயம் எனும் பூதமாகும்.[1] அவ்யக்த நிலை மாறத்தொடங்கியதும் ஆகாயம் பேரொலியாக வெளிப்பட்டது. அந்தப் பேரொலி பிரணவமாகும். முதலில் தோன்றிய புதிய ஒலி. அந்தப் பேரொலி விளக்கத்தைத் தொடர்ந்து பிரகிருதி வாயு, அக்னி, ஜலம், பூமி என விரிந்தும், உருவம் பெற்றும், பருத்தும் காணப்பட்டது. அப்படி 'ப்ருது' வானார். இந்த ப்ருதுவே உயிரினம் வாழும் உலகின். தந்தை. பிருதுவின் பெண் பிருதிவீ - உயிரினம் வாழும் உலகம். ஸ்தூல வடிவமைப்பைத் தொடர்ந்து ஸூக்ஷ்ம உடலமைப்பைத் துவக்கி வைத்தவராக பிராணமய - மனோமய - விஜ்ஞானமய கோசங்களின் அமைப்பைத் தந்தவர் ஹிரண்ய கர்ப்பர். இவ்வாறு வைகுண்ட்ட: (நா. 405) தொடங்கி 'ஹிரண்ய கர்ப்ப:' ஈறாக படைப்பின் ரகசியத்தை நாமங்கள் விளக்குகின்றன. (411)

412. ஶத்ருக்க்ந: – எதிர்ப்பை அழிப்பவர்.

படைக்கப்பெற்ற உலகைக் காப்பது பரமனின் பொறுப்பு. காப்பது இரு வகை; (1) தன் நிலையில் நன்றாக நிலைக்கச் செய்வது, (2) இதற்கு இடையூறாக வருபவைகளை அகற்றுவது என. ஹிரண்ய கர்ப்பராக பிரகிருதியை இயக்குகின்ற பரமன் ஸூக்ஷ்ம சரீரத்தை இயக்குகின்ற தேவர்களாக உட்புகுந்தார். (நா. 8) அந்த தேவர்களின் எதிரிகளாக, அவர்களின் பணிகளில் இடையூறு செய்பவர்களான அசுரர்களை அழித்து அகற்றித் தேவர்களின் பணிகளில் உதவுகிறார்.

சத்துரு - அங்கம் அங்கமாகச் சிதைத்துத் துன்புறுத்தி அழிப்பவன். இறை வழிபாட்டிற்கு இடையூறாக நேர்கின்ற காமம், கோபம் முதலியவை அத்தகைய சத்ருக்கள். அந்த இயற்கை எதிரிகளை வைராக்யமும் விவேகமுமாக நின்று அடக்குகிறார். அடியார்கள் வழிபடுவதற்கு இயலாதபடி துன்புறுத்துபவர்களை மாய்ப்பவர்.

ஸ்ரீராமபிரானாகத் தோன்றும்போது தன்னைப் பரமன் நால்வராக்கிக்கொண்டார். அவர்களில் சத்ருக்நராக விளங்கியவர். 'சத்ருக்க்நோ நித்ய சத்ருக்க்ந:' (ராமாயணம். 2. 1. 1) என்று வால்மீகி அவரை அறிமுகப்படுத்துகிறார். வெளியில் எப்போதோ

1. तस्माद्वा एतस्मादात्मन आकाशस्सम्भूतः। आकाशाद्वायुः वायोरग्निः। अग्नेरापः। अद्भ्यः पृथिवी। (तै. उ. २. १)

*கண் முன் நின்று எதிர்த்துச் சிதைப்பவரை அடக்குவதைவிட உள்ளத்தில் எப்போதும் இணைபிரியாது நின்று, நண்பராகக் காட்சி தந்து, புலப்படாமலும் எதிர்பார்க்காதபோதும் தாக்கக்கூடிய காமம் கோபம் முதலிய நித்திய சத்துருக்களை வெல்பவர் சிறந்த வரல்லவா? (412)*

413. வ்யாப்த: - பரவியவர்.

*படைத்த உலகம் பகவானிடமிருந்து தோன்றியதாதலால் உலகின் முக்கிய காரணம் அவரே. காரணப் பொருளின்றி கார்யம் தோன்றாது. மட்குடத்தில் மண் பரவாத இடமில்லை. காரியமான உலகில் காரணமான பகவான் பரவாத இடமில்லை. உள்ளும் புறமும் பரவி ஆகாயம் போல் நீக்கமற நிறைந்திருப்பவர். மிகவும் பரிவுடன் அணைக்கின்ற ஆப்தரும் கூட. வேண்டியவர் வேண்டாதார் என்ற பாகுபாடின்றி அழகன் - அழகில்லாதவன், கிழவன் - யுவன் - சிறுவன், ஆண் - பெண், எதிரி - சேதனன் - ஜடம் என யாவற்றிலும் பரவி நிற்பவர். அவர்களிடத்தில் பெற்றோர் போல் அன்பு பூண்டவர்.*

*ஹிரண்ய கர்ப்பராக எல்லா தேவர்களை உட்புகுத்தியும் விராட் வடிவம் செயல்படாதிருந்த நிலையில் ஜீவனாக க்ஷேத்திரஜ்ஞனாக உட்புகுந்தவர்.[1] (நா. 8, 467) (413)*

414. வாயு: - மணக்கச் செய்பவர்.

*வாதி - கந்தம் கரோதி. நல்மணம் இயற்கையானது. அது பகவானது பெருமைகளில் ஒன்று.* **புண்யோ கந்த்த: ப்ருதிவ்யாம்ச.** *(கீதை. 7. 9) மணம் வாயுவால் பரவுகிறது. இறைவனது பிராண சக்தி (ஸூத்ராத்மா)யில் இருந்து தோன்றிய வாயு இனிய மணத்தைப் பரப்புகிறது[2] வினைப் பயன்களனைத்தையும் தாங்கி வாழ்வை வஸுக்கள் என்ற எண்மர் அமைத்துக் கொடுக்கின்றனர். அவர்களில் வாயு ஒருவர்.[3] வாயுவின் அர்ந்தர்யாமியாக நின்று வாயுவைத் தன் செயலில் ஈடுபடுத்துபவர். வாயு வடிவில்*

1. प्रभुर्व्याप्तस्सदोज्वलः । (नृसिंहोत्तर २. ११) एष हि व्याप्ततम आत्मैव । (नृसिंहोत्तर ५. १)
2. वायुरस्मै पुण्यं गन्धमावहति । (ऐतरेय १. ७)
3. वायुश्चान्तरिक्षं च... एते वसवः (बृ. ३. ९. ३)

உள் உறைபவர்.[1] இந்திரியங்களின் தேவதைகளான ஸூர்யன், சந்திரன் முதலிய தேவர்கள் ஸுஷுப்தியில் மறையும் போது எந்நிலையிலும் பிராண வாயுவாக மறையாதிருக்கின்றவர்.[2] சூரியனும், சந்திரனும், நீரும், நெருப்பும் மறையும்போது அவை சென்றடங்குகின்ற வாயுவாக இருப்பவர்.[3]

விஷ்ணுவின் பூமியைத் தாங்குகின்ற பலம் வாயுவென்ற அவரது விபூதியால் வெளியாகிறது[4] பிராணவாயு என்ற ஸூத்ராத்மா மூலம் நூலில் கோர்க்கப்பட்ட மணிபோல் இவ்வுலகம் தாங்கப்படுகிறது. வாயுவில்லையேல் நூலில் கோர்க்கப்படாத மணிகள்போல் உலகம் சிதறிவிடும்.[5]

*வாதி - கச்சதி. தானே பரிவுடன் அடியார்களை அணுகுபவர். அப்படி அடியார்களை அணுகும்போது சபரீ, குஹன், ஸுதீக்ஷ்ணர், பரத்வாஜர், ஸுக்ரீவன் என்று பல்வேறு நிலைகளில் உள்ளவர்களை எந்த வேறுபாடுமின்றி காற்றுபோல் ஸ்ரீராமன் சென்றடைவதை வால்மீகி பல இடங்களில் காட்டுகிறார். (414)*

415. **அதோக்ஷஜ: – சிறிதும் குறைவுறாதவர்.**

*பிறப்பிறப்பென்ற தளைக்குட்படும் கீழான வாழ்வை எப்போதும் அடையாதவர், பிறப்பிறப்பற்றவர், நித்யர்,* **'அதோ ந க்ஷீயதே ஜாது யஸ்மாத், தஸ்மாத் அதோக்ஷஜ:'** *(பாரதம். 4, 69, 10) எல்லோராலும் எப்போதும் அனுபவிக்கப் பெற்றும்*

---

1. यो वायौ तिष्ठन्वायोरन्तरो यं वायुर्न वेद यस्य वायुः शरीरं यो वायुमन्तरो यमयति, एष ते आत्मान्तर्याम्यमृतः। (बृ. आ. ३. ७. ७)
2. म्लोचन्ति ह्यन्या देवताः, न वायुः, सैषाऽनस्तमिता देवता वायुः। (बृ. आ. १. ५. २२)
3. वायुर्वाव सम्वर्गो यदा वा अग्निरुद्वायति, वायुमेवाप्येति, यदा सूर्योऽस्तमेति वायुमेवाप्येति, यदा चन्द्रोऽस्तमेति वायुमेवाप्येति, यदाप उच्छुष्यन्ति वायुमेवापि यन्ति वायुर्हि एवैतान्सर्वान्संवृक्ते (छान्दोग्यं ४. ३)
4. किं तद्विष्णोर्बलमाहुः। वाताद् विष्णो र्बलमाहुः। (तै. आ. १. ८. ३)
5. वायुर्वै गौतम तत्सूत्रं, वायुना वै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि सन्दृब्धानि भवन्ति (बृ. आ. ३. ७. २)

குறைவுறுதவர். ஸ்ரீராமனைப் பரசுராமர் 'அக்ஷய்யம் மதுஹந்தாரம் ஜாநாமி த்வாம்' எனத் துதிக்கிறார். (ராமா. 1, 76, 17) ஆகாயம் என்ற மேல் ஓடும், பூமியென்ற கீழ் ஓடும் கொண்ட தங்கமயமான அண்டத்தினுள் விராட் வடிவில் தோன்றியவர். கண் முதலியவற்றிற்குப் புலனாகாதவர். (அத: - ஜ்ஞாத்ருத்வாபாவாத்ஹீநம் அக்ஷஜம் ஜ்ஞானம் யஸ்ய). எங்கும் வியாபித்திருந்தும் வாயு வடிவில் தோன்றியும் புலப்படாதவர் என்பது அவரது பெருமை. வ்யூஹாவதாரத்தில் ஒருவர். (ப. 25) (415)

ऋतुः सुदर्शनः कालः परमेष्ठी परिग्रहः ।
उग्रः संवत्सरो दक्षो विश्रामो विश्वदक्षिणः ॥ ७६ ॥

ருதுஸ் ஸுதர்ஶந: கால: பரமேஷ்ட்டீ பரிக்ரஹ:
உக்ரஸ் ஸம்வத்ஸரோ தக்ஷோ விஶ்ராமோ விஶ்வதக்ஷிண: 76

416. ருது: - ருது எனும் காலவரையாக இருப்பவர்.

புதிதாக வருவது போல். சுழன்று திரும்பத் திரும்ப வருவது ருது. இது கால சக்கிரத்தின் இயல்பு. இயற்கையிலும் ஜீவனிடத்திலும் காலம் பல மாறுதல்களைத் தோற்றுவிக்கிறது. இருமாதங்கள் கொண்ட கால வரை ருது (பருவம்) எனப்படும். வஸந்தம், க்ரீஷ்மம், வர்ஷா, சரத், ஹேமந்தம், சிசிரம் (இளவேனில், முதுவேனில், மழை, பின் மழை, பனி, பின் பனி) என இது ஆறு பிரிவுகள் உள்ளது. முன் பருவம் பின் பருவத்தை உந்தித் தள்ள, அதனை அதன் பின் வருகின்ற பருவம் உந்தித் தள்ளச் சிறிதும் இடைவெளியின்றி, வேகத்துடன் காலச் சக்கிரம் சுழல்கிறது.[1] எப்போதும் பருவமாகச் சுழன்று வருகின்ற கால வடிவில் உள்ளவர். (416)

417. ஸுதர்ஶந: - மங்கள நோக்குள்ளவர்.

கால சக்கிரச் சுழலில் அகப்படுவதால் பிறப்பிறப்புகளுக்கு உட்பட நேர்வதைத் தவிர்க்க உதவுவது ஆத்மஞானமாகும். அதுவே உயர்நோக்கு. பகவானைக் கண்டாலும், அவரால் காணப் பெற்றாலும் இந்தப் பேரறிவு கிட்டும். (ஸு சோபனம் தர்சனம் ஜ்ஞானம் யஸ்ய) (நா. 393)

1. ऋतुः ऋतुना नुद्यमानः (तै. आ. १. ३. ६)

மிக்க அழகிய மங்களமான கண்ணேக்குள்ளவர். அடியார்களால் ஸுகமாகப் பார்க்கப்பெறுபவர். ருதுவாகத் தொடர்ந்து மாறுபடுகின்ற காலவரை மிக அழகிய தோற்றங்களுடன் காணப் பெறுவதால் இனிய தோற்றமுள்ள காலவரையாக இருப்பவர்.

எப்போதும் சுழன்று கொண்டிருக்கின்றதும் பேரொளியும் அளவற்ற சக்தியும் படைத்ததுமான ஸுதர்சனம் என்ற சக்கிரத்தின் தேவதையாக இருப்பவர். ஆறு ஆரக்கால்கள் நடுவே உள்ள அச்சு வட்டத்தில் பதிக்கப்பெற்றுள்ளதாகச் சக்கிர வடிவில் அமைந்தது இந்த ஆயுதம். காலம் ஆறு ருதுக்கள் கொண்ட வட்டமாகச் சுழலுவது போல் இதுவும் சுழலுகிறது என்பதைக்காட்ட ருது: என்ற நாமத்தைத் தொடர்ந்து ஸுதர்சன: என்ற நாமம் அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.[1] (417)

418. கால: - அளவிடுபவர்.

அளவைக் கருவிகளில் காலம் பிழையாத சிறந்த கருவி. ஒரே சீராகச் சுற்றி வருவது (ருது:). வரையற்ற மஹாகாலத்திலிருந்து நொடித்துளி வரை உள்ள கால வரைகள் அனைத்தும் இறைவனது வடிவமே. இடையன் மாடுகளை விரட்டி ஓட்டிச் செல்வதுபோல் காலம் உயிரினத்தை விரட்டிச் சென்று வரையறைக்குட்படுத்துகிறது. கால: கலயதாமஹம்: (கீதை. 10, 30) காலம் ஒரு நொடி குறைவதுமில்லை, கூடுவதுமில்லை. சேராததைச் சேர்த்து வைக்கிறது. சுக துக்கங்களோடு பொருத்தி வைக்கிறது. முடிவை நோக்கி விரட்டிக்கொண்டே இருக்கிறது. அந்தக் கால வடிவில் உள்ளவர்.[2]

ஈச்வரத்தன்மைகள் ஆறு. (நா. 27, 129) இவற்றிற்கு மாறுபட்ட ஆறு தத்துவங்களான வித்யை, ராகம், அவித்யை, நியதி, கலா, காலம் என்பவை ஜீவனிடத்தில் உள்ளன. ஈச்வரன் எல்லாமறிந்தவர் - ஸர்வஜ்ஞர். இதற்கு மாறாக ஜீவன் வித்யை எனும் தத்துவத்தால் கட்டுப்பட்டுக் குறிப்பிட்ட அறிவுத் துறை அறிவுள்ளவன். எல்லாமறிந்தவனல்ல. எல்லாம் நிறைந்த த்ருப்தி

1. षडरं वा एतत्सुदर्शनं महाचक्रं तस्मात् षडरं भवति, षट्पत्रं चक्रं भवति, षड्वा ऋतवः, ऋतुभिः संमितं भवति, (नृसिंह पूर्व ५. २)
2. कालो हि नाम भगवान् स्वयम्भूरनादिमध्यनिधनः । स सूक्ष्मामपि कलां न लीयते इति कालः । सङ्कलयति कालयति वा भूतानीति कालः । (सुश्रुत सूत्र ६. ३)

*என்ற தன்மை படைத்த ஈச்வரனுக்கு மாறாக ராகம் என்ற தத்துவத்தால் கட்டுப்பட்ட ஜீவன் வெவ்வேறு பொருளில் நாட்டம்கொண்டு திருப்தியுறாதவனாகிறான். எல்லையற்ற பேரறிவு வடிவினரான அநாதிபோதரான ஈச்வரனுக்கு மாறாக அவித்யை எனும் தத்துவத்தால் கட்டுப்பட்ட ஜீவன். ஈச்வரனுக்கும் தனக்கும் உள்ள தொடர்பின் அறியாமையால் குறுகிவிடுகிறான். என்றும் எச்செயலிலும் தன்னிஷ்டப்படிச் செயலாற்றும் ஸ்வதந்திரனான ஈச்வரனுக்கு மாறாக, நியதி என்ற தலைவிதிக்குப்பட்ட ஜீவன் தன்னிச்சைப்படி செயலாற்ற முடியாமல் குறுகிவிடுகிறான். எதிலும் குன்றாத சக்தி நித்யம் அலுப்த சக்தி படைத்த ஈச்வரனுக்கு மாறாக ஜீவன் கலா எனும் ஏதேனும் ஒரு செயலில் தனித்திறமை எனும் கட்டிற்குள்ளாகிறான். முடிவற்றவனாக - அநந்தனாக விளங்கும் ஈசுவரனுக்கு மாறாகக் காலம் என்ற முடிவிற்கு அழைத்துச் செல்லும் தத்துவத்திற்கு அடங்கிப் பரிணாமங்களை அடைகிறான். இப்படி ஜீவனைக் கட்டுப்படுத்தும் ஆறு மாயா தத்துவங்களாகவும் காலம் எனும் தத்துவமாயுமிருப்பவர் பகவான்.* *(418)*

419. பரமேஷ்டீ - உயர்ந்த இடத்தில் இருப்பவர்.

*எல்லாவற்றிற்கும் மேலான பரமபதம் பகவானின் தனிச் சிறப்பு பெற்ற தன்னிலை. அதில் நிலைத்திருப்பவர். அவ்வப்போது அவதாரங்களாகப் பல தோற்றங்களில் தன்னிலை விட்டுக் கீழ் இறங்கி வந்தாலும் மறுபடி மேலான தன்னிலையிலேயே அமர்ந்திருப்பார்.*[1]

*பரம்பொருள் தானே ஆசாரிய வடிவம் எடுத்த முதல் உருவம் - பரமேஷ்டீ. இவருக்கு மேல் பரம்பொருள் மட்டுமே.*[2] *பிரும்மா, சிவபெருமான், ஸ்ரீமன் நாராயணன், தக்ஷிணாமூர்த்தி என ஆதி குரு வடிவில் தியானிக்கப்பெறுகிற மூர்த்திகள், அவரவரது குரு பரம்பரையில் ஆதியாயிருப்பவர், குருவிற்குக் குருவிற்குக் குரு. இவர்களைப் பரமேஷ்டி என்பர். இவர்கள் வடிவிலிருப்பவர்.* *(419)*

420. பரிக்ரஹ: - எங்கும் காணப்பெறுபவர்.

*சரணடைய விரும்புபவர்களுக்கு எங்கும் எளிதில்*

1. य एष आदित्ये पुरुषः स परमेष्ठी ब्रह्मात्मा । (तै. १०. ७९)
2. सनगः परमेष्ठिनः, परमेष्ठी ब्रह्मणः, ब्रह्म स्वयंभु, (बृ. आ. २. ६. ३.)

*அகப்படுபவர். பழம், இலை, நீர் எனப் பக்தியுடன் எதனையோ அளித்து எளிதில் ஈர்க்கப்பெறுபவர். பக்தன் எங்கு எவ்விதமாக தியானம் செய்கிறானோ அங்கு அவ்வடிவில் காணப்பெறுபவர். தத்துவமறிந்த பெரியோர்களால் எங்கும் பரவியிருப்பவராக, விஷ்ணுவாக தியானிக்கப் பெறுபவர். தன்னை அண்டி நிற்பவர் யாராயினும் அவர்களைத் தனக்கு உற்றாராக ஏற்பவர். (420)*

421. **உக்ர: - பயமுறுத்துகின்றவர்.**

*ஆணைகளின் மூலம் நாட்டை ஆள்பவர்கள் கடின சித்தமுள்ளவராக, ஆணையை மீறுபவர்களிடம் கடுமையுடன் நடப்பவர்களாக, ஆணையை மீற முடியாதவாறு அச்சுறுத்தி அந்த அச்சத்தால் அவரவர் தம் தம் பணிகளில் தாமே ஈடுபடச் செய்பவர்களாக இருத்தல் அவசியமாகிறது.[1] தானே நடந்துகாட்டிய பிறகும் அறநெறிப்பாதையில் செல்லவிரும்பாத துஷ்டர்களைக் கட்டுப்படுத்தக் கல்கி முதலிய தோற்றங்களில் வருபவர். நரசிம்மர் வடிவில் பயங்கரத் தோற்றமுள்ளவர்.*

*சிவபெருமானின் பெயர்களில் ஒன்று. பிரளயத்திற்கு முன் அக்கினி, சூர்யன், வாயு முதலானோரிடம் கடுமையைப் புகுத்தி உலகை பிரளயத்திற்கேற்றதாக மாற்ற உக்கிரத் தோற்றம் கொண்ட ருத்திரராக இருப்பவர். சிவபெருமானின் எட்டு வடிவங்களில் வாயுவில் காணப்பெறுகின்ற மூர்த்தி உக்ரர் எனப்படுபவர். உலகின் அசைவை வாயுவின் மூலம் நடத்துபவர். உச்யதி - உபரி வர்ததே. மேலான இடத்தில் இருப்பவர். விச்வாதிக: என்று உலகைக் கடந்து நிற்பவர். (421)*

422. **ஸம்வத்ஸர: - உயிரினமனைத்தும் வசிக்கும் இடம்.**

*உயிரினமனைத்தும் வசிக்குமிடமாக அனைத்திற்கும் ஆதாரமாக இருப்பவர். ஸங்கர்ஷணர் வடிவில் உலகைத் தன்னிடம் ஒடுக்கிக்கொள்வதற்காக அனந்தனின் மேல் அமர்ந்து காத்திருப்பவர். (நா. 91)*

*ஸௌர - சாந்திர மானங்களின்படி ஸம்வத்ஸரம், பரிவத்ஸரம், இதாவத்ஸரம், இத்வத்ஸரம், வத்ஸரம் என ஐந்து*

---

1. नम उग्राय च भीमाय च । (श्रीरुद्रप्रश्ने) एष एवोग्र एष वीरः । (नृसिंहोत्तर ४. ४) उग्रः खलु वा एष मृगरूपत्वात् । (अव्यक्त २) यस्मात्स्वमहिम्ना सर्वाँल्लोकान् सर्वान्देवान्सर्वानात्मनः सर्वाणि भूतानि उद्गृह्णाति । (नृसिंहपूर्व २. ८)

ஆண்டுகள் சேர்ந்த ஒரு அமைப்பு யுகம் எனப்படும்.[1] தினம், ருது,அயனம், மாஸம், யுகம் என்று ஐந்து அங்கங்கள் கொண்டது கால சக்கிரம். சாந்திரமானப்படி சித்திரை மாதத்திய சுக்லபக்ஷப் பிரதமையன்றே சூர்யன் மேஷ ராசியில் நுழைந்தால் ஸௌர சாந்திரமானங்களின் ஆண்டு ஒரே நாளில் தொடங்கும். இது ஐந்து ஆண்டுகளுக்கொரு முறை வரும். இது ஸம்வத்ஸரம் எனப்படும். இது தொடங்கி 5 ஆண்டுகள் முடிவதற்குள் சாந்திரமானப்படி ஒரு மலமாஸம் கூடும். ஸம்வத்ஸரத்திற்கு அடுத்த ஆண்டு பரிவத்ஸரம், அதனை அடுத்து இதாவத்ஸரம், இத்வத்ஸரம் வத்ஸரம் எனத் தொடர்ந்து ஆறும் ஆண்டில் மறுபடியும் ஸம்வத்ஸரம் வரும். இப்படி யுகம் என்ற காலவரையைத் தொடங்கும் ஆண்டான (யுகாதி) ஸம்வத்ஸரமாயிருப்பவர். காலவரையாக உயிரினத்தின் வாழ்க்கையில் ஒவ்வொரு நொடியிலும் பங்குகொண்டு கூட இருப்பவர். *(422)*

423. தக்ஷ: - சுறுசுறுப்புடன் இயங்குபவர்.

படைப்பு முதலியவற்றில் திறமையும் சுறுசுறுப்பும் செயல் நேர்த்தியும் கொண்டவர். தவறிழைப்பவர்களைத் தண்டிப்பதில் சுறுசுறுப்புள்ளவர். (நா. 917) *(423)*

424. விஶ்ராம: - ஓய்வளிப்பவர்.

காலவரை வடிவில் இயங்கும் பகவான் பகலுக்குப் பின் இரவையும், வாழ்விற்குப் பின் மரணத்தையும், தாபத்திற்குப்பின் நிழலையும், குளிருக்குப்பின் நெருப்பையும் தந்து மாற்று நிலை ஏற்படுத்தி முன்னிலை தந்த துன்பத்தை நீக்கி ஓய்வளிக்கிறார். பசி, தாகம், சோகம், கலக்கம், மூப்பு, மரணம் என்ற ஆறு வகை அலைகளால் அழிக்கப்பெற்று வாடியுள்ளவர்களுக்குப் பிறப்பிறப்பற்ற அமிருத நிலையை உணர்த்தி அதனைப் பெறச் செய்து ஓய்வளிக்கிறார். வினைப்பயனால் கடும் துன்பம் பெற்றவர், தம்மை நினைத்தபோது, அந்த நினைவையே கவசமாக்கித் தந்து துன்பத்தை உணராமல் செய்து ஓய்வு தருகிறார். (நா. 395) *(424)*

1. सम्वत्सरः परिवत्सरः इदावत्सरः इद्वत्सरः वत्सर इत्येवं पञ्चवत्सराः। ते पञ्च युगमिति सम्ज्ञां लभन्ते। (सुश्रुतसूत्र ६. ९)

पञ्चसम्वत्सरमययुगाध्यक्ष प्रजापतिम्। दिनर्त्वयनमासाङ्गं प्रणम्य शिरसा शुचिः। (ऋग्वेदज्योतिष १)

425. விஶ்வதக்ஷிண: - எல்லாம் வல்லவர்.

*படைப்பிலும், காப்பிலும், ஒடுக்கத்திலும் நேர்கின்ற பணிகள் எல்லாவற்றையும் வல்லமையுடன் சிறப்பாக நிறைவேற்றுபவர். வல்லமை பெற்றவர்கள் அனைவரிலும் சிறந்தவர். மிகக் கொடூரமான தவறிழைத்தவனிடமும் வேறுபாடின்றி பரிவுடன் பழகுபவர். (425)*

**विस्तारः स्थावरस्थाणुः प्रमाणं बीजमव्ययम् ।**
**अर्थोऽनर्थो महाकोशो महाभोगो महाधनः ॥ ७७ ॥**

விஸ்தார: ஸ்த்தாவரஸ்த்தாணு: ப்ரமாணம் பீஜமவ்யயம்.
அர்த்தோ<sup>s</sup>நர்த்தோ மஹாகோஶோ மஹாபோகோ மஹாதந: 77

426. விஸ்தார: - விரிவடையுமிடம்.

*உலகமனைத்தும் பரவலாகக் கொள்ளுமளவில் உலகம் விரியுமளவிற்குத் தானும் விரிவடைபவர். வேதத்தின் பெருமையையும், அறநெறியையும் உலகெங்கும் பரவச் செய்பவர். (426)*

427. ஸ்தாவரஸ்தாணு: - நிலைத்தவை நிலைக்குமிடம்.

*படைப்பு தொடங்கி ஒடுக்கம் வரை ஐந்து பூததத்துவங்களும் மற்றவையும் மூலப்பொருளாகத் தொடர்ந்திருக்க வேண்டியவை. அதனால் அவை ஸ்தாவர: - பிரளயம் வரை நிலைத் திருக்க வேண்டியவை. அப்படி அவற்றிற்கு நிலைத்திருக்கும் தகுதி தருபவர். அப்படி நிலைத்த பிருதிவீ முதலிய ஐந்து பூதங்களும் அவரிடம் நிலைத்திருக்கின்றன. நிலைமாறுபாடற்ற ஸ்தாணுவிடம் (நா. 28, 120) காண்பதால் அவை ஸ்தாவரங்கள். உலகத்தை நிலைமாறுபாடற்றதாகச் செய்பவரும், தானும் மாறுபாடு அற்றவராக இருப்பவரும் பகவானே. தாவரங்கள் (ஸ்தாவரங்கள்) எனப்படும் மரம் செடி கொடி முதலியவை மனிதனைவிட நிலைப்பு மிக்கவை. சிறு கொடியும் செடியும் காற்றையும் மழையையும் தாங்குமளவு மனிதனால் தாங்க முடியாது. இனத்தால் தாழ்ந்தவையாயினும் நிலைப்பால் உயர்ந்த தாவரங்களாக இருப்பவர் அவரே. நிலைத்த அறநெறியில் நிலைத்திருப்பவர். (427)*

428. ப்ரமாணம் - உள்ளறிவானவர்.

உலகமனைத்தையும் கண், காது முதலியவற்றால் கண்டு ஹிதம், அஹிதம் என உணர்ந்து செயல்பட உதவுகிற உள்ளறிவு பிரமாணமாகும். அந்த உள்ளறிவாயிருப்பவர். இது ஹிதம், இது அஹிதமெனத் தீர்மானிப்பவர்.[1] *(428)*

429. பீஜம் அவ்யயம் - கேடுறாத விதையாயிருப்பவர்.

பெரிய ஆலமரத்திறகு ஒரு எள்ளவுள்ள விதை. விதை உருவில் சிறியதாயினும் மரத்தின் தோற்றத்திற்கு மாறுபட்ட தாயினும் அந்த விதைதான் அத்தகைய பெரு மரத்திற்கு வித்தாகக் காரணமாக உள்ளது. பகவான் இந்த உலகிற்கு வித்தானவர். வித்துகள் அனைத்தும் மரமாக முளைப்பதில்லை. சில கேடுற்று முளைக்கும் தகுதியை இழக்கின்றன. பகவான் எந்நிலையிலும் கேடுறாத விதையாயிருப்பவர். பீஜம், அவ்யயம் என இரு சொல்லாலான நாமம் இது. பீஜாய அவ்யயாய நம:. (நா. 13) நிதானம் பீஜமவ்யயம் *(கீதை 9, 18)* *(429)*

430. அர்த்த: - வேண்டப்பெறுபவர்.

இது இனியது, இது வேண்டும் என்று நாட்டத்துடன் வேண்டப்பெறுவது அர்த்த:. சுகம் தருவதால் வேண்டப்பெறுகின்றது. அப்படி வேண்டப்பெறுகின்ற சுகம் தரும் பொருள்கள் எல்லாமும் எல்லோருக்கும் எப்போதும் சுகம் தராது. சுகம் தரும் பொருள் என நாடப்பட்டதே சுகம் தராமல் கஷ்டம் தருவதாக ஆவது உண்டு. எப்போதும் எவருக்கும் எந்நிலையிலும் சுகமாயிருப்பதாக வேண்டப்பெறுபவர் பகவானே. உலகில் உள்ள சுகம் தரும் பொருளனைத்தும் ஆனந்தமயமான பகவானின் சிறு சிறுதுளி எனப்படும் அம்சங்களே[2] அப்படிப் பேரானந்தமாக நாடப்பெறுபவர். ஞானிக்குப் பகவானை அடைவதே வாழ்வின் பெரும் லக்ஷ்யம். அந்த லட்சியமாக புருஷார்த்தமாக இருப்பவர். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களாக இருப்பவர். தர்ம விரோதமாகாததும் தர்மத்திற்குப் பயன்படுவதுமான பொருளாயிருப்பவர். இன்பம் தரும் பொருளாயிருப்பவர். *(430)*

1. मानत्वान्मुक्तत्वात् (नृसिंहोत्तर ७. २)
2. एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति। (बृ. आ. ४. ३. ३२)

431. அநர்த்த: - வேண்டுவதில்லாதவர்.

*தான் விரும்பியதை எப்போதும் பெற்று நிறைவுற்ற வரானதால் அவர் தனக்கென எதையும் வேண்டுவதில்லை. அவரே எல்லாமானதால் அவரால் அடையத்தக்கதொன்று இருப்பதற்கு இல்லை. அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களை அவர் நாடாதவர். ஒருவன் நாடுவதை மற்றவன் நாடுவதில்லை. இன்று நாடுவதை நாளை நாடுவதில்லை. நாடப்பெறாத பொருளாயிருப்பவரும் அவரே. (431)*

432. மஹாகோஶ: - பெருமறைப்புள்ளவர்.

*உள்ளிருக்கிற ஆத்மாவை அன்ன மயம், பிராண மயம், மனோ மயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் என்ற ஐந்து கோசங்கள் கத்தியை உறை மறைப்பதுபோல் மறைக்கின்றன. ஆத்மாவையே மறைப்பதால் அவை பெரிய கோசங்கள். ஞானியைத் தவிர மற்றவர்களுக்கு அவை கோசமாகப் புலப்படுவதில்லை; அவையே ஆத்மாவாகக் காட்சி தருகின்றன. அதனாலும் அவை மஹா கோசங்கள். ஞானி அவற்றைக் கோசமென்று அறிவதால் அவற்றினுள் கிடக்கும் ஆத்ம தத்துவத்தை அறிய முற்படுகிறார். அதனால் ஆத்மாவை அறியப் பயன்படுவதால் அவை மஹா கோசங்கள். அத்தகைய மறைப்புகளைக் கொண்டவர். எப்போதும் யாவருக்கும் வாரி வழங்கியும் குறைவுறாத சங்கநிதி, பத்மநிதி முதலிய பெருத்த செல்வ கோசங்கள் உள்ளவர். நாடப்பெறும் பொருள்களையும் நாடப்பெறாத பொருள்களையும் காப்பிடமாக ஒருங்கே வைத்திருப்பவர். (432)*

433. மஹாபோக: - பெருத்தபோகம் பெற்றவர்.

*பகவான் பேரின்பமே வடிவானவர். நாடியதும், நாடப்பெறாததுமான பொருள்களால் மனிதன் அடைய விரும்புவது போகமே - இன்பச் சுவைப்பே. மனிதனால் பேரின்பமாக பகவான் நாடப்பெறுபவர். தர்மவிரோதமில்லாமல் பொருளால் அடையப்பெறுவகிற காம (இன்பச்சுவை) மாக இருப்பவர்.* 'தர்மாவிருத்தோ பூதேஷு காமோ அஸ்மி'. *(கீதை. 7. 11)*

*பேரின்பம் பகவானின் ஸ்வரூபம். குறைவுள்ளதிலிருந்து சுகம் கிட்டாது. குறையுணர்ச்சியே துன்பம் தரும். மனிதன் பெறும் இன்பத்தைவிட தேவர்களின் இன்பம் பெரிதென மனிதன் தேவ*

சுகத்தை நாடுகிறான். தேவர்களை விட இந்திரனும், பிரும்மாவும் அதிக அளவில் சுகம் பெறுவர். இந்தப் பேரின்பங்கள் அனைத்தும் பகவானிடமுள்ள இன்பத்தின் சிறு துளியே. அந்தத் பேரானந்தத்தைப் பற்றற்ற ஆத்மஞானி பெற்று அதில் மூழ்கித் தான் தனது என்ற உணர்ச்சி இழந்து பேரானந்தமே ஆகிறான். அந்தப் பேரானந்த அனுபவமுள்ளவர். பேரானந்த அனுபவமாயிருப்பவர்.[1] (433)

434. மஹாதந: - பெருஞ்செல்வமுள்ளவர்.

பெருத்த கோசத்தில் வைக்கவும், பெரிய போகங்களை அனுபவிக்கவும் பெருஞ்செல்வம் படைத்தவர். (434)

**अनिर्विण्णः स्थविष्ठोऽभू[1] र्धर्मयूपो महामखः ।**
**नक्षत्रनेमिर्नक्षत्री क्षमः क्षामः समीहनः ॥ ७८ ॥**

அநிர்விண்ணஸ் ஸ்த்தவிஷ்ட்டோऽபூர்[2] தர்மயூபோ மஹாமக:
நக்ஷத்ரநேமிர் நக்ஷத்ரீ க்ஷம: க்ஷாமஸ் ஸமீஹந: 78

435. அநிர்விண்ண: - அலுப்பற்றவர்.

பெருஞ்செல்வமும் அதனால் பெறத்தக்க பெரும் போகமும் வருங்காலத்திற்கு உதவும் சேமிப்பும் (நா. 434, 433, 432) பெற்றிருப்பதால், திரும்பத் திரும்ப உலகைப் படைப்பதும், காப்பதும், ஒடுக்குவதுமான பணிச்சுழலில் மாட்டிக்கொண்டதால் ஏற்படக்கூடிய அலுப்பும் வெறுப்பும் இல்லாதவர். பலவிதமாக உதவியும் சீர்திருந்தாத மனிதனிடத்தில் வெறுப்பில்லாதவர். (435)

436. ஸ்த்தவிஷ்ட்ட: - மிகப்பெரு வடிவமுள்ளவர்.

உலக இயக்கத்திற்காக விராட் வடிவில் மிகப் பெரிய சரீரத்தைத் தாங்குபவர்.[3] அதிலிருந்து பிராணன், மனம்,

1. यो भूमा तत्सुखम्, नाल्पे सुखमस्ति। भूमैव सुखम्। (छान्दोग्य ७. २३. १) स एको ब्रह्मण आनन्दः। श्रोत्रियस्य कामहतस्य। (तैत्तिरीय २. ८) एषोऽस्य परम आनन्दः, एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति। (बृ. आ.४.३. ३२)
2. स्थविष्ठो भूर्धर्म ஸ்த்தவிஷ்ட்டோ பூர் என்று பாடம் உண்டு
3. यथा सुदीप्तात्पावकाद्विस्फुलिंगाः सहस्रशः प्रभवन्ते सरूपाः। तथाऽक्षराद्विविधाः सौम्य भावाः प्रजायन्ते तत्र चैवापियन्ति॥
एतस्माज्जायते प्राणो मनस्सर्वेन्द्रियाणि च। खं वायुर्ज्योतिरापः पृथिवी विश्वस्य धारिणी। अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ दिशः श्रोत्रे वाग्विवृताश्च वेदाः। वायुः प्राणो हृदयं विश्वमस्य पद्भ्यां पृथिवी ह्येष सर्वभूतान्तरात्मा। (मुण्डक २. १. ३. ४)

*பொறிகள், ஸ்தூல உடலாக அமைகின்ற பஞ்ச பூதங்கள் பிரிந்தன. பெரு நெருப்பில் இருந்து தெறித்துவிழும் கனல் துண்டுகள்போல் அவை சிதறித் தனித் தனி வடிவம் பெற்றன. அப்படித் தோன்றியவற்றில் பேருருக்கொண்டவை சில விராட் புருஷனின் அங்கங்களாகத் தோற்றமளிக்கின்றன. நெருப்புப் பிழம்பாகக் காட்சி அளிக்கிற வானமே அவர் தலை, சந்திரனும் ஸூர்யனும் கண்கள், நாற்புறமும் உள்ள திசைகள் காதுகள், விரிந்த வேதங்கள் வாய்கள். வாயு - பிராணன். இந்த உலகமே இதயம், (இதயத்திலிருந்து வெளிக்கிளம்பி எங்கும் சுற்றித் திரும்ப இதயத்தினுள் அடங்கும் இரத்தம்போல் உலகம் இதயத்திலிருந்து தோன்றி விராட் வடிவில் எங்கும் சுற்றித் திரும்ப இதயத்தினுள் அடங்குகிறது). உறுதியாக நிற்கும் பூமியே கால்கள், அவரே எல்லோருக்கும் உள்ளே உறைந்துள்ள ஆத்மா* '**விசேஷஸ்தஸ்ய தேஹோ(அ)யம் ஸ்த்தவிஷ்ட்டச்ச ஸ்த்தவீயஸாம், யத்ரேதம் த்ருச்யதே விச்வம் பூதம் பவ்யம் பவச்ச யத்.**' *(பாகவதம் 2, 1, 24) என்று தொடர்ந்து* '**இயாநஸாவீச்வர விக்ரஹஸ்ய யஸ் ஸந்திவேச: கதிதோ மயா தே** *(2, 1, 38) என விவரிக்கப் பெற்றுள்ளது.*

*வானில் காணும் நக்ஷத்திர மண்டலம் பெரும் முதலை போல் காணப்பெறும். அதனுள் ஸூர்யன் முதலிய கிரஹங்களும் அச்விநீ முதலிய நக்ஷத்திரங்களும். தேவர்களும் கால், தலை முதலிய அங்கங்களாகத் தோன்றும். இது சிம்சுமாரம் எனும் பகவானின் வானளாவிய பெரும் தோற்றம். (பாகவதம் 5, 24 48) அந்த சிசு (சிம்சு) மாரமெனும் பெரும் வடிவமுள்ளவர்.*[1] *எல்லாம் நிறைந்தவரானதால் குறைவற்ற மேலான வாழ்வு வாழ்ந்து மேல் ஸ்தூலமாக மிதப்பவர். (436)*

437. அபூ: - **தோன்ருதவர்.**

*பிறப்பில்லாதவர். மறுபடி விதவிதமாகத் தோன்றத் தேவையிராதபடி விராட் வடிவில் எல்லாமாக இருப்பதால் புதிதாகத் தோன்ருதவர். பூ: என்ற பாடம் உண்டு. பலவிதமான*

---

1. यस्मै नमस्तच्छिरो धर्मो मूर्धानं ब्रह्मोत्तरा हनुर्यज्ञोऽधरा विष्णुर्हृदयं संवत्सरः प्रजननमश्विनौ पूर्वपादावत्रिर्मध्यं मित्रावरुणावपरपादावग्निः पुच्छस्य प्रथमं काण्डं तत इन्द्रस्ततः प्रजापतिरभयं चतुर्थं स वा एष दिव्यः शाकरः शिशुमारः । (तै. आ. २. १९)

*தோற்றம் பெறவிருக்கும் உலகின் தோற்றுவாய். சிம்சுமார வடிவிலுள்ள விஷ்ணுபதமாக இருந்து எல்லாவற்றிற்கும் பூமியாக ஆதாரமாயிருப்பவர்.* *(437)*

438. தர்மயூப: – தர்மமாகிய முளையாயிருப்பவர்.

*தான் தர்மமாக - உலகத்தை தாங்குபவராக இருந்து கொண்டு கட்டும் முளை போன்றாகி, அதில் உலகைப் பிணைத்துக்கொண்டவர். அவரை வழிபடுவதற்குகந்த செயல் முறைகளாகிய தர்மங்கள் அனைத்தும் அவரிடமே பிணைபட்டு உள்ளன. சிசுமார உடலில் தர்மம் தலையாகப் பிணைக்கப் பெற்றுள்ளதென வேதம் கூறும்.*[1] *அவரது வடிவில் தர்மத்திற்குத் தலையாய இடம் உண்டு.* *(438)*

439. மஹாமக: – பெரும் வேள்விகளுள்ளவர்.

*அவரைக் குறித்துச் செய்யப்பெறுகிற வேள்விகள் அனைத்தும் சிறப்பால் பெரிதாகின்றன. வேள்விகளில் சிறந்தவை அவரைக் குறித்தே செய்யப் பெறுவதால் முக்தி ஈறான பயன்களைத் தருவதால் அவை பெரு வேள்விகள். தர்மத்தைத் தலையாகப் பெற்று எல்லா தேவதைகளின் வடிவில் உள்ள தன்னை ஆராதிக்கச் சிறிதொரு பணியையும் பெரிய வேள்வியாக்குபவர்.* *(439)*

440. நக்ஷத்ரநேமி: – நக்ஷத்திர சக்கிரத்தினிடையே அச்சாக விளங்குபவர்.

*வானில் சுற்றிவருகின்ற கிரஹ - நக்ஷத்திரக்குவியல் ஒரு ஒளிச்சக்கிர வடிவில் உள்ளது. (ஜ்யோதிச்சக்ரம்) அந்தச் சக்கிரத்தின் நடுவே சுழற்சிக்குப் பிடிப்பாக உள்ள அச்சு துருவன். அவரது இதயத்திலுள்ளவர் பகவான்.* 'தாராமயம் பகவத: சிசுமாராக்ருதி ப்ரபோ:. திவி ரூபம் ஹரேர் யத்து தஸ்ய புச்சே ஸ்திதோ த்ருவ:. ஸைஷ ப்ப்ரமந் ப்ப்ராமயதி சந்த்ரஸூர்யாதிகான் க்ரஹான். ப்ப்ரமந்தமநு தம் யாந்தி நக்ஷத்திராணி ச சக்ரவத் ... நாராயணோ அயநம் தாம்நாம் தஸ்யாதார: ஸ்வயம் ஹ்ருதி. *(விஷ்ணு 2, 9, 1-4)* *அந்த சக்கிரத்தைச் சுழலச் செய்து ஆதாரமாகத் தாங்கி அதன் இதயமாக ஒளியுடன் விளங்குபவர்.*[2] *(440)*

1. तच्छिरो धर्मः। (तै. आ. २. १९)
2. विष्णुर्हृदयं (तै. आ. २. १९)

441. நக்ஷத்ரீ - சந்திரனாக இருப்பவர்.

*நக்ஷத்திரமண்டலங்களின் நாயகனான சந்திரனாக இருப்பவர். சந்திரன் விஷ்ணுவின் பெருமை துலங்குமிடங்களில் ஒன்று (விபூதி)* "நக்ஷத்ராணாம் அஹம் ஶஶீ" *(கீதை 1021) நக்ஷத்திரமண்டலங்களின் நாயகர்.* நாராயணோ அயநம் தாம்நாம்". *(விஷ்ணு. 2, 9, 4) (441)*

442. க்ஷம: - திறமையுள்ளவர்.

*எவ்வகைப்பட்ட பணியாயினும் அதனைத் திறம்பட ஆயாசமின்றி நிறைவேற்றுபவர், அப்படி நிறைவேற்றுவதில் பொறுமையும், பொறுப்பும் உள்ளவர். பூமியைப் போன்று பொறுமை உள்ளவர்.* 'க்ஷமயா ப்ருதிவீஸம:' *(ராமாயணம் 1. 1. 18)* நக்ஷத்திர *மண்டலச் சுழற்சியை ப்ரவஹம் என்ற வாயுவின் வடிவிலிருந்து தாங்குபவர். (நா. 331) (442)*

443. க்ஷாம: - தன்னிடம் நிலைத்திருப்பவர்.

*பூமி நக்ஷத்திர மண்டலம் என்ற நிலைத்த தோற்றம் உள்ளவைகள் அனைத்தையும் நிலைகெடச் செய்து தன்னுள் அடக்குபவர். தானே தனது விளக்கமாகித் தன் பெருமையில் நிலைத்திருப்பவர். இடையிடையே ஏற்படுகின்ற பிரளயங்களில் சிசுமார வடிவில் துருவனும் துருவனுக்கு அருகே உள்ள நான்கு நட்சத்திரங்களும் நீங்கலாக மற்றவை மறைந்துவிடத் தான்மட்டும் அந்த மீதமுள்ள நட்சத்திரங்கள் வடிவில் குறுகி நிற்பவர். (443)*

444. ஸமீஹந: - நன்கு முயலுபவர்.

*பிரளயத்திற்குப் பின் நல்விருப்பத்துடன் மறுபடிப் படைப்பிற்கான முயற்சிகளில் ஈடுபடுபவர். முதலில் தோற்றுவித்த மனு பிரஜாபதிகள் முதலானோரைப் படைப்பிற்கான பணிகளில் உற்சாகப்படுத்தி ஓய்வின்றி செயல்படச் செய்பவர். (444)*

यज्ञ इज्यो महेज्यश्च क्रतुः सत्रं सतां गतिः ।
सर्वदर्शी विमुक्तात्मा[1] सर्वज्ञो ज्ञानमुत्तमम् ॥ ७९ ॥

1. निवृत्तात्मा *நிவ்ருத்தாத்மா (பா)*

**யஜ்ஞ இஜ்யோ மஹேஜ்யஶ்ச க்ரதுஸ் ஸத்ரம் ஸதாம் கதி:**
**ஸர்வதர்ஶீ விமுக்தாத்மா ஸர்வஜ்ஞோ ஜ்ஞானமுத்தமம். 79**

445. **யஜ்ஞ: - வேள்வி வடிவினர்.**

*வேள்விகள் அனைத்தும் விஷ்ணுவே.[1] தேவதைகளுக்குத் திருப்தி அளித்து அவர்கள் உலகிற்குத் தேவையான மழை, வெயில், காற்று முதலிய இயற்கை உதவிகளைத் தரச் செய்வதற்கான பரஸ்பர அன்பை வளர்க்கும் பணிகளே வேள்விகள். (நா. 3) இறைவனே வேள்விகளின் வடிவில் தேவதைகளுக்குத் திருப்தி அளிப்பவர்.* **(445)**

446. **இஜ்ய: - வேள்விகளால் வழிபடத்தக்கவர்.**

*உலகை வாழ வைப்பதிலேயே மகிழ்ச்சியுறுகிற தேவர்களைத் தன் பிரதிநிதிகளாக உலகை வாழ வைக்கவே உருவாக்கி வேள்வியில் பெறும் ஹவிர்பாகத்தை அந்த தேவர்களின் வடிவிலிருந்து அவரே ஏற்று, வேள்விக்கான பலனைத் தருகிறார்.* **(446)**

447. **மஹேஜ்ய: - வழிபடத்தக்கவர்களில் பெரியவர்.**

*வேள்விகளால் வழிபடத்தக்கவர்களில் அக்னி நமக்கு மிக நெருங்கியவர். விஷ்ணு எல்லா தேவதைகளுக்கும் அப்பாற்பட்டவர்.[2] வழிபடத்தக்கவர்களில் மிகப் பெரியவராக இருப்பவர். இஜ்யனாக இருப்பதுடன் மஹேஜ்யனாகவும் இருப்பதால் (மஹேஜ்யஶ்ச) ஏற்றத்தாழ்விற்கு இடம் இல்லை.* **(447)**

448. **க்ரது: - க்ரது எனும் யாக வடிவினர்.**

*வேள்விகளில் பல வகைகள் உண்டு. ஒரு குறிப்பிட்ட பலனை முன்னிட்டு ஒருவன் தனது பொருள் முதலியவற்றால் குறிப்பிட்ட காலவரைக்குள் முடியும்படி செய்யப்படுகிற வேள்வி க்ரது. அதில் யூபம் எனும் பசுவைக் கட்டும் தூண் உண்டு. வேள்வி புரிபவனின் அழுத்தமுள்ள குறிக்கோளும் அதனைப்பெற வேள்வி உதவுவது பற்றிய அசையாத நம்பிக்கையும் அதற்கான நன்முயற்சியும் முக்கியம். இந்தச் செயல் முறையே க்ரது*

1. यज्ञो वै विष्णुः । (तै. सं. २. ५. ५) विष्णुर्यज्ञः (तै. आ. ५. ५. १)
2. अग्निरवमो देवतानां विष्णुः परमः । (तै. सं. ५. ५. १) विष्णुमुखा वै देवाः । (तै.सं.१.७.५.५.२.११)

எனப்பெறும். க்ரது திடமானதாயிருந்தால் இம்மையிலோ மறுமையிலோ விரும்பியதை அவன் பெறுவான்.[1] 'ருசேரதிசய: காம்யே விஷயே க்ரதுரிஷ்யதே'. திடமான குறிக்கோளுடன் திடநம்பிக்கையுடன் நன்கு பணி புரிவது க்ரது. அப்படி புரிந்த வேள்வியாகவும் நற்பணியாகவுமிருப்பவர்.

ஔபாஸனம் முதலிய மஹாயஜ்ஞங்கள், அஷ்டகை, பார்வணம், சிராத்தம், ச்ராவணீ, ஆக்ரஹாயணீ, சைத்ரீ, ஆச்வயுஜீ என்ற ஏழு பாகயஜ்ஞங்கள், அக்னியாதானம், அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஸௌத்ராமணி என்ற ஏழு ஹவிர்யஜ்ஞங்கள், அக்னிஷ்டோமம், அத்யக்நிஷ்டோமம், உக்த்யம், ஷோடசீ, வாஜபேயம், அதிராத்ரம், ஆப்தோர்யாமம் என்ற ஏழு ஸோம யாகங்கள். இவை யஜ்ஞங்கள் (வேள்விகள்) பகவானின் வடிவங்கள். (448)

**449. ஸத்ரம் - ஸத்ரயாக வடிவினர்.**

பலர் சேர்ந்து கூடித் தனித்த பலனென்றையும் கருதாமல் லோக க்ஷேமத்திற்கெனவே காலவரையின்றித் தொடர்ந்து செய்யப்பெறுவது ஸத்ர யாகம். சுயநல நோக்கின்றி லோக க்ஷேமம் என்ற ஒரே நோக்குடைய பலர் கூட்டுறவில் நடைபெறுவது இதன் தனிச் சிறப்பு. பதினேழு பேர்களுக்குக் குறையாமலிருப்பது அவசியம். பாகவதம் முதலிய புராணங்கள் இந்த ஸத்ர யாகங்களில்தான் வெளியாயின. நல்லோர்களைக் கெடுதியிலிருந்து பாதுகாப்பது ஸத்ரம். (நல்லோர்கள் பலர் உணவுபெற உணவுச் சாலைகளை அமைத்து வழிப்போக்கருக்கு உணவளிக்கும் அமைப்பும் ஸத்ரம் (சத்திரம்) எனப்படும்) நல்லோர்கள் கூடி நன்மை பெறச் செய்யும் நற்பணியாகிய ஸத்திரமா யிருப்பவர். (449)

**450. ஸதாம் கதி: - நல்லோர்களின் போக்கிடம்**

நல்மனதுடன் நற்பணிபுரிகிற நல்லோர்கள் சென்று அடையவேண்டிய முடிவிடம் பகவானே. இவரை அடைவதே விடுதலை. பற்றற்றவர் நாடுமிடம். (450)

---

1. अथ खलु क्रतुमय: पुरुषो यथाक्रतुरस्मिन् लोके पुरुषो भवति, तथेत: प्रेत्य भवति स क्रतुं कुर्वीत। (छान्दोग्य ३. १४)

451. ஸர்வதர்சீ - எல்லாவற்றையும் காண்பவர்.

*செய்யத்தக்கதைச் செய்தது, கிருதம். செய்யத்தகாததைச் செய்தது அகிருதம். செய்யதக்கதைச் செய்யாததும் அக்ருதம். அனைத்தையும் தனது இயல்பான பேரறிவால் உணர்ந்தவர். (நா. 94, 199, 453, 572, 815)* *(451)*

452. விமுக்தாத்மா - விடுபட்டவர்.

*இயற்கையாகப் பிறப்புடன் தொடர்ந்து மறு பிறப்பு வரை வாழ்க்கையில் ஒட்டிக்கொண்டுள்ள அவித்யை ஆசை வாஸனை முதலியவற்றிலிருந்தும் விடுபடுவதே சிறந்த முக்தி - விமுக்தி. அப்படி விடுபட்ட ஆத்ம ஸ்வரூபியாக உள்ளவர். உயிருள்ளபோது தொடர்கிற பிராரப்த வினையின் பயனாக ஏற்பட்ட பந்தங்களிலிருந்தும் விடுபட்டவராகி, அந்த உடலை விட்டு உயிர் பிரியும்போது இனிப் பின் பிறவிகளில் அனுபவிக்க வேண்டியதாயுள்ள ஸஞ்சித வினைகளும் தானே விலகும்படி ஞானத்தால் எல்லா கர்மபந்தங்களையும் விலக்கிக்கொண்டவரான ஜீவன் முக்தர் வடிவில் உள்ளவர்.*[1] *வினைப்பயனை அனுபவிப்பவர்களின் நிந்தைக்கும் துதிக்கும் அப்பாற்பட்டவர், அவற்றால் பாதிப்படையாதவர்.*

*நிவ்ருத்தாத்மா என்று பட்டர் உரைப்படி, வைராக்யத்தின் எல்லையை வெளிப்படுத்துகின்ற நரர் நாராயணர் முதலானோர் வடிவில் உள்ளவர். (நா. 597)* *(452)*

453. ஸர்வஜ்ஞ: - எல்லாமாயுள்ள ஆத்மா.

*எல்லாமாயிருப்பவராக (ஸர்வ:-நா. 25) தானே தன்னை ஸர்வஜ்ஞனை ஆத்மா என உணர்ந்த (ஜ்ஞ:) ஞானி.*[2] *(453)*

454. ஜ்ஞாநம் உத்தமம் - சிறந்த அறிவு.

*பொறிகளால் கிடைக்கின்ற அறிவு சிற்றறிவு. அதில் காட்சி என்ற சிற்றறிவை பார்ப்பவனின் மனநிலை, கண்களின் பார்வை,*

---

1. विमुक्तश्च विमुच्यते (कठ २. २. १)
2. इदं सर्वं यदयमात्मा। (बृहदा ६.५.७) यः सर्वज्ञः सर्ववित्। (मुण्डके १.१.९.२.२.७) स सर्वज्ञः सर्वो भवति। (प्रश्न ४. १०) एष सर्वेश्वर एष सर्वज्ञः। (माण्डूक्य ६) स विश्वकृद्विश्वविदात्मयोनिः ज्ञः कालकालो गुणी सर्वविद्यः। (श्वेताश्व २.६.२.१६)

வெளிச்சத்தின் ஏற்றத்தாழ்வு, பொருளின் நிலை இவை அனைத்தும் பாதிக்கும். சிலவற்றை மாத்திரம் அறிந்து பலவற்றை அறியாதது சிற்றறிவு. பார்க்கத்தக்க பொருள் பெரியதாயின் பார்க்கும் கருவி அதனைக் காண முடியாதபடி சிறிதாயிருப்பதால் அது குறையறிவு. இப்படிப் பல கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுப் பெறுகின்ற சிற்றறிவின் மூல காரணம் - உள்ளிருக்கும் ஆத்மாவாகிய பேரறிவு. இந்த அறிவு பொறிகளால் ஏற்படுவதல்ல. ஆத்மாவின் ஸ்வரூபமானதால் அழிவற்றது. எந்த வகையிலும் கட்டுப்படாதது. எல்லா அறிவுகளுக்கும் அறிவாக இருப்பது. அந்த உத்தம அறிவாக இருப்பவர்.[1] உத்தமம் ஞானம் என இரு சொற்கள் கொண்ட நாமம். உத்தமாய ஜ்ஞாநாயநம:, ஜ்ஞாநாய உத்தமாய நம:.

பகவானைப் பற்றிய அறிவே பேரறிவாகும். அந்த அறிவைத் தரக்கூடிய நூல்களால் பெற்ற ஞானமாயிருப்பவர். *(454)*

सुव्रतः सुमुखः सूक्ष्मः सुघोषः सुखदः सुहृत्।
मनोहरो जितक्रोधो वीरबाहुर्विदारणः ॥ ८० ॥

ஸுவ்ரதஸ் ஸுமுகஸ் ஸூக்ஷ்மஸ் ஸுகோஷஸ் ஸுகதஸ் ஸுஹ்ருத்
மனோஹரோ ஜிதக்ரோதோ வீரபாஹுர் விதாரண: 80

455. ஸுவ்ரத: - நல்விரதம் பூண்டவர்.

இதனை இப்படி முடிப்பேன் என்று நியமம் பூண்டு அதன் நெறி தவறாமல் நடப்பதும் ஸத்யம், அஹிம்ஸை முதலியவைகளை வாழ்நாள் முழுவதும் கடைபிடிப்பதும் சுயநலமின்றிப் பிறர் நலனைப் பாதுகாப்பதும் விரதம். ஸ்ரீராமனுகத் தோன்றியபோது 'எனது விரதம்' எனக் கூறிச் செவ்வனே நடத்திக் காட்டிய விரதம் சரணாகத ரக்ஷணமாகும். ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே, அபயம் ஸர்வதா தஸ்மை (ஸர்வபூதேப்ய:) ததாம்யேதத் வ்ரதம் மம *(ராமா. 6, 18, 33)* அத்தகைய நல்விரதம் பூண்டவர். *(455)*

1. सत्यं ज्ञानमनन्तं ब्रह्म। (तै. उ. २. १)

456. ஸுமுக: – அழகிய முகமுள்ளவர்.

*விரதமாக ஒன்றைக் கொண்ட பிறகு அது பழக்கமாகிவிடுவதால் கஷ்டம் தருவதில்லை. ஆனால் அது சுகம் தருவதாகுமா என்பது சந்தேகமே. கடுமையான விரதம் பூண்ட நிலையிலும் களைப்புறாததும், கண்களுக்கு இனிய தாமரை மலர் போன்று அழகுள்ளதுமான முகம் உள்ளவர் பகவான். கைகேயி கேட்ட வரத்திற்காகக் காட்டிற்குப் புறப்படும்போது, அரண்மனையில் அவருக்குப் பட்டம் கட்டுவதற்கான மங்கள திரவியங்களின் அமைப்பு, உண்மை நிலை உணராத மக்களின் எதிர்பார்வை, உண்மை உணர்ந்த லக்ஷ்மணனின் கோபாவேசம், இவற்றால் பாதிப்புறாமல் பட்டம் சூட்டப்பெறுவதைவிட காட்டிற்குச் செல்வதே தனக்கு மிகவும் உவப்பானதாக மனத்தளவில் முன்னதாக ஏற்றுப் பின் அதை ஒப்புக்கொண்டு வெளி வருகின்ற ராமன் மனத்தளவிலோ, மெய்யளவிலோ வேதனையின்றித் தெளிந்த முகத்துடன் இருந்தார் என்று வால்மீகி குறிப்பிடுவது ஸுமுக: என்ற நாமத்தை நன்கு விளக்கும். (ராமாயணம் 2, 19, 30-33).*

*நல்ல ஆரம்பத்தைத் தருபவர். நற்பணிகளைத் தொடங்கு முன் அப்பணிகளுக்கு இடையூறாகக் குறுக்கிடக் கூடிய பாபங்களை விலக்க எளிய உபாயமாயுள்ளது ராம நாமம். ஸ்ரீராம ராம ராம எனக் கூறித் தொடங்கப் பெற்ற நற்பணி நன்கு நிறைவுறும். அப்படி சோபனமான தொடக்கத்தைத் தரும் பெயர் பெற்றவர். ஸுமுகர் என்ற சிறப்புப் பெயர் பெற்ற கணபதி வடிவில் இருப்பவர்.* **ஆரம்பா: சோபநா யேந யஸ்ய சோபநமாநநம். ஸ ஏவ ஸுமுகஸ் தஸ்மை ஸுமுகாய நமோ நம:.** *(பாஸ்கர ராயரின் கணபதி ஸஹஸ்ர நாம பாஷ்யம். 14).*

*தியானத்தில் எளிதில் அமரக்கூடிய அழகிய முகமண்டலமுள்ளவர். நல்வித்யைகளை உபதேசிக்கும் குதிரை முகமுள்ள ஹயக்கிரீவராயிருப்பவர். பிரும்மா முதலானவருக்கு நல்வித்யைகளை உபதேசிக்கின்ற முகமுள்ளவர்.[1] (456)*

457. ஸூக்ஷ்ம: – நுண்ணிய வடிவுள்ளவர்.

*கண், காது முதலியவற்றால் உணர முடியாததும் மனத்தால் எண்ண முடியாததுமான ஸ்வரூபம் உள்ளவர். ஆகாயமே*

1. यो वै वेदांश्च प्रहिणोति तस्मै। (श्वेताश्व ६. १८)

புலப்படாதது. ஆகாயத்தினுள் அந்தர்யாமியாக இருப்பதால் மிக மிக நுண்ணியவர். புலப்படாதவர். ஸமாதி நிலையில் அறியக்கூடியவர். பிரணவமாக இருப்பவர்.[1] (457)

458. ஸுகோஷ: - மங்களமான பேரொலி படைத்தவர்.

அவரது வாக்குகளில் நிகரற்றவை வேதங்கள். மங்களம் தருகின்ற சொல்லமைப்பும் ஸ்வர அமைப்பும் இனிய ஒலியுமுள்ள வேதங்களால் பாடப் பெற்றவர். கோஷ: என்பது வயிற்றின் அடியிலிருந்து கிளம்பிய நாதத்தை எழுத்தொலி வடிவாக வெளிக்கொணர்கிற முயற்சியாகும். நீருண்ட மேகம் போன்று ஆழ்ந்த இனிய கோஷத்துடன் பேசுபவர். (நா. 41) (458)

459. ஸுகத: - இன்பம் தருபவர்.

பேரானந்தத்தைத் தருபவர். பொறிகள் இதமெனக்கருதுகின்ற இன்பம் ஸுகமாகும். நன்டைதையுள்ளவர்களது விரதத்தைப் பாராட்டிப் புகழ்ந்து பகவான் அவர்களுக்கு ஸுகம் தருகிறார். நன்னடத்தை இல்லாதவர்களிடம் கடுமையாக நடந்து கொண்டு அவர்களின் ஸுகத் தொடர்பைத் துண்டிக்கிறார். (ஸுகம் ததாதி - த்யதி). ஸுகத்தைத் தருவதோ துண்டிப்பதோ நமது வினைப்பயனையொட்டியதாகும். பகவான் சுய விருப்பு - வெறுப்பற்றவர். நல்லோர்களான தேவர்களுக்கு ஸுகம் தரும் அம்ருதம் முதலியவற்றை வழங்கியவர். (459)

460. ஸுஹ்ருத் - நல்லிதயம் கொண்டவர்.

ஒருவித எதிர்பார்த்தலுமின்றி அன்பு நிறைந்த இதயத்துடன் நன்மை புரிவதையே இயல்பாகக்கொண்ட நண்பன் ஸுஹ்ருத் ஆவான். பகவான் ஒருவரே அத்தகைய நண்பர். வேதம் முதலியவற்றின் மூலம் அப்யுதயம், நிச்ரேயஸம், பாவனம் முதலிய நில் வழிகளைப் போதித்த நண்பர். (ப. 51) (460)

---

1. सर्वगतं सुसूक्ष्मं (मुण्डक १. १. ६) सूक्ष्मं सौम्यं पुरुषम् । यस्मादुच्चार्यमाण एव तत्सूक्ष्मो भूत्वा शरीराण्यधितिष्ठति सर्वाणि चांगान्यभिमृशति तस्मादुच्यते सूक्ष्मं (अथर्वशिरः ३) सूक्ष्मात्सूक्ष्मतरं नित्यं (कैवल्य ११) सूक्ष्मातिसूक्ष्मः कलिलस्य मध्ये । (श्वेताश्वतर ४. १४) सूक्ष्माच्च तत्सूक्ष्मतरं विभाति । (मुण्डक ३. ७)

461. மநோஹர: - மனத்தை ஈர்ப்பவர்.

*நல்ல நண்பராக ஒருவித பிரதி உபகாரத்தையும் எதிர்பாராமல் நன்மைபுரிபவரானதால் மனத்தை அன்பால் கவர்பவர். ஈடிணையற்ற பரம ஆனந்த வடிவினராதலால் புறப்பொருளை நாடாதபடி அடியார் மனத்தைத் தன்பால் ஈர்த்து வசப்படுத்துபவர். தேவர்களுக்கு அமிருதம் வழங்கும்போது, அமிருதம் பருகத் தகாத அஸுரர்களை மோஹினி வடிவில் மயக்கியவர். (461)*

462. ஜிதக்ரோத: - மனக்கொதிப்பை வென்றவர்.

*மனத்தில் அடங்கிச் சொல்லிலும் செயலிலும் வெளிவராத கோபம் 'மந்யு' எனப்படும். கண் சிவந்து முகக்குறிகளால் உணரப்பெறுவது கோபமெனப்படும். பேச்சும் சொல்லும் கோபத்தை உமிழும் அளவிற்குப் பதட்டம், புருவ நெரிசல், உடல் ஆட்டம், கடுஞ்சொல், கடுஞ்செயல் கொண்ட மனக்கொதிப்பு குரோதமாகும். இம் மூன்று நிலைகளில் வரும் கோபத்தையும அடக்கி வைத்திருப்பவர். கோபத்தைத் தன் வசப்படுத்தி வேண்டியபோது வெளிப்படுத்துவது ஸ்ரீராமனின் குணச்சிறப்பு. 'க்ரோத மாஹாரயத் தீவ்ரம்' (ராமாயணம். 3, 24, 33) என்று இதனை வால்மீகி அனுபவிக்கிறார். தான் துன்புறும் போது, கோபமே வராதவரல்ல. கோபத்தைத் தன் வசப்படுத்தியவர். தனது அன்பர்கள் துன்புறும்போது கோபம் அவரை வசப்படுத்தியதுமுண்டு. ராவணனுடனான முதல் போரில் ராமனைத் தன்தோளில் சுமந்த ஆஞ்சநேயரை ராவணன் நெற்றியிலடித்தபோது 'கோபஸ்ய வசம் ஏயிவான்' - கோபத்தின் வசம் சென்றார் என்கிறார் வால்மீகி, ஆஞ்சநேயரிடம் இருந்த அன்பு ஸ்ரீராமரை நெகிழ்த்திக் கோபவசப்படுத்திவிட்டது. (462)*

463. வீரபாஹு: - நன்கு செயல்படுகிற கைகளுள்ளவர்.

*குறிப்பிட்ட செயலில் குறிப்பிட்ட முறையில் பின் நோக்கின்றி முனைவுடன் ஈடுபடுபவன் வீரன். பகவானது நான்குகைகளும் தனித்தனி ஆயுதம் ஏந்தித் தனித்தனியே வீரத்துடன் ஒரே சமயத்தில் செயல்படுபவை. வீரத்திற்கு அணியாகத் தோள்வளை போன்ற அழகிய அணிகள் பூண்டு தான் முந்தி முந்தி என முற்றுகையிடும் கைகளுள்ளவர். வீரபாஹு என்ற கந்த பெருமானின் சேனாதிபதியாக உள்ளவர். (463)*

464. விதாரண: - பிளப்பவர்.

*தர்மவிரோதிகளை உருத்தெரியாமல் பிளந்து மாய்ப்பவர். தர்மவழி நடப்பவர்களின் பயத்தையும் பிளந்து களைபவர்.* *(464)*

**स्वापनः स्ववशो व्यापी नैकात्मा नैककर्मकृत्।**
**वत्सरो वत्सलो वत्सी रत्नगर्भो धनेश्वरः ॥ ८१ ॥**

**ஸ்வாபநஸ் ஸ்வவஶோ வ்யாபீ நைகாத்மா நைககர்மக்ருத்**
**வத்ஸரோ வத்ஸலோ வத்ஸீ ரத்னகர்ப்போ தநேச்வர: 81**

465. ஸ்வாபந: - தூங்கச் செய்பவர்.

*யோக மாயை பகவானை மறைத்துள்ளது. அதனால் பகவானை வெளிப்படையாக அறிய முடிவதில்லை.* **'நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத:'** *(கீதை. 7, 25) எதிரில் இருப்பதை ஒருவன் அறியவில்லையெனில் அவன் தூங்குகிறான் என்று கொள்ளலாம். தன்னைப்பற்றி முழு அறிவும் ஏற்படாதபடி மாயையால் தன்னை மறைத்து ஜீவனைத் தூங்கவைப்பவர். வினைப்பயனாக உரியதை உரிய நேரத்தில் செய்ய முடியாதபடி அறிவை மறைப்பவர்.*

*அமிருதத்தை அசுரர்களுக்குப் பங்கிடாமல் அழகிய புன்சிரிப்பும் இனியநோக்கும் ஆட்டமும் காட்டி மயக்கியவர்.* *(465)*

466. ஸ்வவஶ: - தன் வசத்திலிருப்பவர்.

*தனது பணிகளில் பிறரது உதவியை எதிர்பாராமல் செயலாற்றுபவர். எல்லா சாதனங்களையும் தன் வசத்தில் பெற்றவர். தன்னிச்சைப்படி படைப்பு முதலியவைகளில் ஈடுபடுபவர். (பிறரது உதவியை எதிர்பார்ப்பவரால் தன்னிச்சைப்படி செயலாற்ற முடியாது.)* *(466)*

467. வ்யாபீ - பரவியிருப்பவர்.

*ஆகாயம் போன்று எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர். ஒரே சமயத்தில் பல உருவங்களில் பல இடங்களில் இருந்து கொண்டு செயலாற்றுபவர்.*[1] *(நா. 413)* *(467)*

1. आकाशवत्सर्वगतः। नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मम्। (मुण्डके १.१.६) अव्यक्तात्तु परः पुरुषो व्यापकः (कठ २,३.८) सर्वान् लोकान्व्याप्नोति व्यापयतीति व्यापनाद्व्यापी महादेवः। (अथर्वशिखा २)

468. நைகாத்மா - பல உருவங்களில் இருப்பவர்.

படைக்கவும் காக்கவும் ஒடுக்கவும் இப்படிப் பலபணிகள் புரியவும் பல வடிவங்களில் இருப்பவர்.[1] (நா. 137) திருப்பாற்கடலைக் கடையும்போது, அஜிதர், கூர்மர், தந்வந்தரி, மோஹினீ என்று பல வடிவங்களில் தோன்றி அமிருதமளிக்கும் பணியை நிறைவேற்றியவர். (468)

469. நைக கர்மக்ருத் - பல பணிகள் புரிபவர்.

பூமிக்கு ஆதாரமாக அக்னியாக ஸூர்யனாக சந்திரனாக மற்றும் பல நிலைகளிலிருந்து பல பணிகளைப் புரிந்து உலகைக் காப்பவர். அமிருதத்தைக் கடைவது, மலையைத் தாங்குவது, தேவர்கள் அசுரர்கள் வாஸுகி மந்தரமலை இவர்களுக்குச் சக்தி தருவது, அமிருதத்தைக் கொணர்வது, அதனைப் பங்கிடுவது என்று பல பணிகளில் ஈடுபட்டவர். (469)

470. வத்ஸர: - தங்குமிடம்.

உலகமனைத்தும் தங்குமிடம். அவரவரது தகுதிக்கு ஏற்ப தர்மங்களை வகுத்து வழிகாட்ட அந்தர்யாமியாக உள்ளிருப்பவர். ஆண்டு என்ற காலவரையாயிருப்பவர். (நா. 91, 422) (470)

471. வத்ஸல: - அன்புள்ளவர்.

கடைசியில் ஈன்ற கன்றிடம் தாய்ப்பசு காட்டுகிற அன்புபோல் பக்தர்களிடம் அன்பு காட்டுபவர். தன்னைச் சரணம் அடைந்தவர்களிடமும் பரிவுடையவர். (471)

472. வத்ஸீ - கன்றுகளைக் காப்பவர்.

ஆயர்பாடியில் தன்வசம் ஒப்படைக்கப்பெற்ற கன்றுக் குட்டிகளைக் காத்தவர். உலகின் தந்தையாகி உயிரினமனைத்தையும் தன் குழந்தைகளாகக் கருதிப் பேணுபவர். (472)

473. ரத்ந கர்ப்ப: - ரத்னங்களைக் கருவகத்தில் கொண்டவர்.

முத்து முதலிய ரத்னங்களைக் கடல் தனக்குள் மறைத்துக் காக்கிறது. பூமியில் உள்ள கனிகள் ரத்னங்களைக் காக்கின்றன. பாம்பு தன் படத்தில் மாணிக்கத்தையும் மூங்கில் தன் கணுக்களில்

1. विश्वस्य स्रष्टारमनेकरूपं (श्वेताश्व ५. १३)

முத்தையும் காக்கிறது. இப்படி கருவகத்தில் கருவைக் காப்பதுபோல் ரத்னங்களையும் ரத்தினம் போன்ற நன் மக்களையும் காப்பவர். செல்வம் வேண்டி நிற்பவர்களுக்கு அளிப்பதற்கெனச் செல்வத்தைக் காப்பவர். (473)

474. தநேச்வர: - குபேரனுயிருப்பவர்.

உலகச் செல்வமனைத்திற்கும் அதிபர் குபேரன் என்ற வடதிசைநாயகர். குபேரன் பகவானின் விபூதி. 'வித்தேச: யக்ஷ ரக்ஷஸாம்'. (கீதை. 10, 23) அவர் வடிவில் இருப்பவர். செல்வத்தைத் தன் விருப்பப்படி வழங்குகிற ஆளுமையுள்ளவர். (474)

धर्मगुब्धर्मकृद्धर्मी सदसत्क्षरमक्षरम्[1] ।
अविज्ञाता सहस्रांशुर्विधाता कृतलक्षणः ॥ ८२ ॥

தர்மகுப் தர்மக்ருத் தர்மீ ஸதஸத் க்ஷரமக்ஷரம்[1]
அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶுர் விதாதா க்ருதலக்ஷண: 82

475. தர்மகுப் - தர்மத்தை நிலைநிறுத்தியவர்.

தர்மம் நலியும்போது தோன்றி தர்மத்தைத் தன்னிலையில் வைப்பவர். 'தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே'. (கீதை. 4-8) அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் ஒன்றுக் கொன்று உதவுவதாக்கி, பொருளும் இன்பமும் அறத்திற்குப் பயன்படச் செய்து அறத்தைக் காப்பவர். அந்த தர்மத்தின் தாரண சக்தி கொண்டு உலகைக் காப்பவர். (475)

476. தர்மக்ருத். - அறவழி நடப்பவர்.

அந்தந்த தோற்றத்திற்குரிய அற முறைகளைப் பின் பற்றித் தன் கடமைகளைச் செய்பவர். தர்மமும் அதர்மமும் பகவான் இடத்தில் பாதிப்பு ஏற்படுத்துவதில்லை. அவை வினைப்பயனாக உடல் பந்தத்தைப் பெற்றுள்ள ஜீவனைப் பாதிப்பவை. வினைக்கட்டு தளர்வதற்காக ஜீவன் தர்மாதர்மக் கட்டளைகளுக்கு உட்பட்டு நடக்கிறான். ஜீவனை நல்வழிப்படுத்த ஏற்படுத்திய கட்டுப்பாடு தர்மமாகும். பகவானுக்கு வினையோ, வினை தீர்க்கப் பிறப்போ இல்லை. அதனால் வினை தீர்க்கத் தர்ம முறைகளை பின்பற்ற

1. सदक्षरमसत्क्षरम् ஸதக்ஷரமஸத் க்ஷரம் (பா)

வேண்டியதில்லை. எனினும் அவதார காலத்தில் மக்களை அற நெறியில் பழக்குவதும் அவரது லட்சியமாகிறது. 'மர்த்யாவதாரஸ் த்விஹ மர்த்ய சிக்ஷணம்'. (பாகவதம். 5-19-5) அதற்கான தர்ம வழிப்பட்ட கடமைகளை ஆற்றுகிறார். அதனால் அவருக்குப் பலனில்லை. எனினும் அவரை முன் உதாரணமாகக்கொள்பவர், கடமை வழுவாதிருக்க அவர் அறநெறியைப் பின்பற்றுவது அவசியமாகிறது. 'நமே பார்த்தாஸ்தி கர்தவ்யம், த்ரிஷு லோகேஷு கிஞ்சந. நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்த ஏவேஹ கர்மணி. உத்ஸீதேயுரிமே லோகா: ந குர்யாம் கர்ம சேதஹம்'. (கீதை. 3, 22, 24) (476)

477. தர்மீ - தர்மத்திற்கு உடையவர்.

தர்மத்தைத் தன் உடைமைப் பொருளாகத் தாங்குபவர் தர்மத்தைத் தானும் செய்து பிறரையும் அதன் வழிப்படுத்தித் தர்மத்தைத் தாங்குகிறார். எல்லாவற்றையும் தர்மத்தின் மூலமே காப்பாற்ற முடிகிறது என்பதால் தர்மத்தைத் தன்னிடம் கொண்டவர். (477)

478. ஸத் - நிலைத்த இருக்கை கொண்டவர்.

ஸத் அஸத் என்று பொருள் இரு வகை. ஸத் - இருக்கும் பொருள். இதுவும் இரண்டு வகை. பாரமார்த்திக ஸத் - வ்யாவஹாரிக ஸத் என. முக்காலத்திலும் உண்மையாக உள்ள பொருள் - பாரமார்த்திக ஸத்தாகும். அது பரம்பொருள் ஒன்றே. தோன்றும் காலத்தில் மட்டும் உலகியல் ரீதியில் இருப்பது - குறிப்பிட்ட காலவரையில் உண்மையாக இருப்பது - வ்யாவஹாரிக ஸத்தாகும். இந்த உலகம் அத்தகையது. தோன்றி மறைவதால் இது முக்காலத்திலும் ஸத் அல்ல. அதனால் அஸத். உலகம் அந்த ஸத்திடம் தோன்றி அந்த ஸத்தினுள் ஒடுங்குவதால் பரம்பொருள் ஒன்றே நித்ய ஸத். அந்த நித்ய ஸத்தாக இருப்பவர்.[1]

உருவமுள்ள பொருள் ஸத். (உருப்பெறாத ஸூக்ஷ்ம பூதங்கள் தனித் தனியாக இருப்பது த்யத்.) அந்த ஸத்தாக இருப்பவர்.[2] ஸதே நம: (478)

1. सदेव सोम्येदं (छा ६. २. १)
2. सच्च त्यच्चाभवत्। (तैत्तिरीय २. ६)

**479. அஸத் – ஸத்தாக இல்லாதவர்.**

*மாயையால் ஏற்ற உலகின் வடிவில் அவர் அஸத். முக்காலத்திலும் இல்லாததும் ஒரே நிலையில் இல்லாமல் மாறிக் கொண்டிருப்பதும் குறிப்பிட்ட வடிவில் குறிப்பிட்ட காலத்தில் மட்டுமே உள்ளதும் அஸத். பரம்பொருள் ஸத்தானால் அதனிடமிருந்து தோன்றிய உலகமும் ஸத்தானதாகத்தானே இருக்க வேண்டும்? காரணம் ஸத், காரியம் அஸத் என்பது எங்ஙனம்? என்று ஐயம் எழும். உலகை உலகமாகப் பார்க்கும்போது அது அஸத். உலகைப் பகவானாகப் பார்க்கும்போது அது ஸத். அந்நிலையில் உலகிற்கு அழிவில்லை. பகவானை உலகில் ஒருவராகக் காணும்போது அவர் அஸத். பகவானைப் பகவானாகக் காணும்போது ஸத். உலகம் உலகமாகத் தோன்றும் போது, தோன்றியது மறையுமானதால், அது அஸத். ஒருவன் தன்னை 'பிரும்மம்', என்று உணரும்போது பரம்பொருளிடமுள்ள ஸத் என்ற நிலை அவனிடம் பரவி அவனும் ஸத் ஆகிறான், இன்னார் இன்ன இடத்தைச் சேர்ந்தவன் எனும்போது ஸத்தாக இல்லை. அந்தக் காலத்தில் அந்த இடத்தில் இல்லை என்றவாறு பல 'இல்லை' கள் அவனைக் குறுக்கிவிடுவதால் அஸத்தாக ஆகிறான். அதுபோல் பகவான் ஸத் ஆக பரம்பொருளாகவும் இருக்கிறார். உலகமாக அஸத்தாகவும இருக்கிறார். இவ்விரு நிலைகளும் ஒன்றால் மற்றொன்று பாதிக்கப்பெறுவதில்லை. நித்தியராயினும் உலகவடிவில் பெயர் உரு என்ற அளவில் ஏற்பட்ட நிலையாமையால் அஸத் ஆனவர்.*[1]

*(479)*

**480. க்ஷரம் – தேயும் பொருளானவர்.**

*தோன்றி மாறுபட்டு அழிவது க்ஷரம். எல்லா உயிர் இனங்களும் க்ஷரமானவை. வளர்ச்சியும் மாறுபாடும் தேய்வும் சிறுகச் சிறுக நேர்ந்து, எப்போது எப்படி நேர்ந்தது? என்று முழுதும் உணரப்பெறாமல் மணல் குன்று காற்றால் சரிவதுபோல் காலத்தால் சீர்குலைவது அனைத்தும் க்ஷரமாகும்.* **'க்ஷர: ஸர்வாணி பூதாநி'.** *(கீதை. 15, 16) க்ஷராய நம:* *(480)*

---

1. असद्वा इदमग्र आसीत् । (तै. २. ७) वाचारंभणं विकारो नामधेयम् । (छान्दोग्य ६. ४. १)

481. அக்ஷரம் - மாறுபாடடையாதவர்.

*க்ஷரநிலை அடையாதது அக்ஷரம். (நா. 480) க்ஷரமாகிய காரிய நிலையில் உள்ள இந்த உலகத்தைத் தோற்றுவித்த, காரணநிலையில் உள்ள மாயை அக்ஷரம். கணக்கற்ற எல்லா ஜீவர்களின் பற்பல பிறவிகளை அளிக்கக் கூடிய வினை விதைகள், வாஸனைகள் எனும் மனப்பதிப்புகள் இவைகளின் இருப்பிடமான நிலை அக்ஷரம். கூடஸ்தன் என்று சிலர் இதைக் குறிப்பிடுவர். கூடம்-குவியல், ஜீவராசிகளாக மாறவிருக்கும் காரணநிலை. கூடம்-தோற்றத்தில் ஒரு விதமாவும் உண்மையில் வேறுவிதமாகவும் இருந்து ஏமாற்றுவது. உலகமாக மாறவிருக்கும் மூலப்பொருள்குவியல் அத்தகையது. அந்த அக்ஷரமாயுமிருப்பவர். கூடம்-பட்டறைக்கல். தான் மாறுமலும் சிதையாமலும் மற்றவற்றின் மாறுதலுக்கும் சிதைவிற்கும் காரணமாவது. பட்டறைக்கல் மேல்வைத்து அடிபடுகிற தங்கத்தில் மாற்றம் உண்டு. கல்லில் மாற்றமில்லை. அத்ததைய கூடத்தின் நிலையில் அந்த அக்ஷரமாயும் உள்ளவர். அக்ஷராய நம:[1].*

ஸதக்ஷரம் அஸத் க்ஷரம் என்ற பாடமுண்டு. ஸத் அக்ஷரம் என்று ஒரு நாமம். அஸத் க்ஷரம் என்றொரு நாமம். ஸத், ஸதக்ஷரம், அஸத், அஸத் க்ஷரம் என்றும் பிரிப்பதுண்டு. ஸத்-தோற்றமும் மறைவுமின்றி எக்காலும் நித்யமானவர். மங்களமான நற்குணங்கள் பொருந்தியவர். ஸத் என்ற தர்மத்திற்கு ஆதாரமாய் இருப்பவர் அக்ஷரம் - எக்காலும் எவ்விடத்திலும் சிறப்பும் ஸ்வரூபமும குன்றுதவர். அஸத் - துஷ்டர்களுக்கு நீங்காத பிறவித் துன்பம் தருபவர். அஸத்க்ஷரம் - துஷ்டர்களிடம் நிலைத்திராதவர். சுகம் நிலைக்காமல் செய்பவர். நல்லவர்களை நல்லது செய்யவும், கெட்டவர்களைக் கெட்டதை நாடவும் செய்பவர். ஸதே நம:, ஸதே அக்ஷராய (அக்ஷராய ஸதே) நம:, அஸதே நம:, அஸத்க்ஷராய நம:, என்று நாமங்கள். *(481)*

482. அவிஜ்ஞாதா - அறிபவரல்லாதவர்.

'நான்' இதனை இப்படி அறிகிறேன் என்று பொறிகளின் மூலம் கிடைத்த குறிப்பை உணர்பவன் ஜீவன். அவனே அறிபவன். அவனிடமுள்ள ஆத்மதத்துவம் அஹங்கார-மமகார-வாஸனைகளால் மறைக்கப்பட்டுள்ளது. விஜ்ஞானமய கோசத்தால் மறைக்கப்பெற்ற

1. शुभ्रमक्षरं वेदयते (प्रश्न) एतद्वै तदक्षरं गार्गि (बृहदा ३. ८. ८)

ஆத்மா அறிபவன். கோசங்களை ஞானத்தால் அகற்றி உண்மை நிலையைக் காணும்போது, அந்த ஆத்மா செறிந்த பேரறிவே வடிவானவன்.[1] அறிவு அறியாது. அறிவைப் பயன்படுத்துபவனே அறிவான். பேரறிவின் ஒளியில் மனம் கண் முதலியவை காணும் காட்சியே 'நான் பார்க்கிறேன்' என்பது முதலான அறிவு. இப்படி அறிபவன் ஜீவன். அவனைக்காட்டிலும் வேறுபட்ட ஞானமே ஸ்வரூபமாக உள்ள ஆத்மா-அறிபவரல்லாதவர்.

அடியார்கள் செய்த தவறுகளை உணராதவர். 'உச்யமாநோ அபி பருஷம் நோத்தரம் ப்ரதிபத்யதே. ந ஸ்மரத்யபகாராணும் சதமப்யாத்மவத்தயா. (ராமா. 2-10-11) (482)

483. ஸஹஸ்ராம்ஶு: - ஆயிரம் ஒளிக்கதிர்கள் உள்ளவர்.

ஆயிரக்கணக்கான ஒளிக்கதிர்களால் உலகை விளக்குகிற ஸூரியனின் வடிவில் அந்த ஆயிரக்கணக்கான ஸூரிய ஒளிகளாக இருப்பவர். ஸூரியனது ஆயிரக்கணக்கான ஒளிகளுக்கு ஒளியாயிருப்பவர்.[2] 'யதாதித்யகதம் தேஜ: ஜகத் பாஸயதே அகிலம். யச் சந்த்ரமஸி யச் சாக்நௌ தத் தேஜோ வித்தி மாமகம்.' (கீதை. 15-12) எல்லாமறிந்த பகவானது ஞான ஒளி ஆயிரக்கணக்கில் எங்கும் பரவியுள்ளது. ஆயிரக்கணக்கான ஞான ஒளிக்கதிர்கள் கொண்டவர். (483)

484. விதாதா - நன்கு தாங்குபவர்.

உலகம் சிதறாமல் தாங்குவதற்கென ஆதிசேஷன் திக்கஜங்கள் இமயம் முதலிய குலாசலங்கள். இவற்றை அமைத்திருந்தும் திருப்தியுறாமல் அவற்றையும் தாங்கித் தானும் வராஹர் கூர்மர் ஆதாரசக்தி எனப் பல வடிவங்களில் நன்கு தாங்குபவர். உலகின் நியதியைக் காக்க விதியாக நின்று தவறிழைப்பவர்களுக்குக் கெடுதி விளைவித்தும் நல்லவர்களுக்கு நன்மை புரிந்தும் நேராக்குபவர். (நா. 39, 44) முறைப்படி சிறந்த பொருளைச் சீராக அமைப்பவர். பிரும்மாவையும் படைத்தவர்.[3] (484)

1. अरे इदं महद्भूतं अनन्तमपारं विज्ञानघन एव (बृह. २. ४. १२) अद्रष्ट अश्रोता अमन्ता अबोद्धा। (छान्दोग्य ७. ९)
2. येन सूर्यस्तपति तेजसेद्धः। (तै, ब्रा ३. १२. ९) वर्चोदास्त्वमसि सूर्यस्य द्युम्नोदास्त्वमसि चन्द्रमसः। (तै. आ. १०. ६३)
3. यो ब्रह्माणं विदधाति पूर्वं (श्वेताश्व ६. १८)

485. க்ருதலக்ஷண: - நன்கமைந்த லக்ஷணங்கள் உள்ளவர்.

*பொறிகளால் உணரமுடியாத பூர்ணமான அவரது நிலையை எந்தக்குறிப்பீடும் (லக்ஷணமும்) இவர் இன்னார் எனக்குறிப்பிடமுடிவதில்லை. எனினும் ஸத் சித் ஆனந்தம் என்ற சிறப்புக் குறிப்பீடுகள் அவரை அடையாளம் காட்டுகின்றன. அதற்காகவே அவர் தன்னைப் பற்றிய குறிப்புகளைத் தரும் வேதம் முதலியவற்றைத் தானே முன்னதாக அமைத்துத் தந்துள்ளார்.[1] உயிரினம் ஒவ்வொன்றையும் இனவாரியாகப் பிரித்து அவைகளுக்கெனத் தனித்தனி அடையாளங்களை அமைத்துள்ளார். தன்னைச் சார்ந்தவனெனக் குறிப்பிடுவதற்குத் தக்க தகுதிகளையும் முன்னதாக அறிவித்துள்ளார். தன்னை எளிதில் அறியும்படி ஸ்ரீவத்ஸமெனும் மரு, கௌஸ்துபம், மஞ்சள்பட்டாடை மேக வண்ணம், சங்கு சக்கிரம் என்ற ஆயுதங்கள், சேஷ ஆஸனம், கருட வாஹனம் என்ற பல அடையாளங்களை அமைத்துக்கொண்டு உள்ளார். இப்படி அடையாளங்களை அமைத்துக் கொண்டவர். (485)*

गभस्तिनेमिः सत्वस्थः सिंहो भूतमहेश्वरः ।
आदिदेवो महादेवो देवेशो देवभृद्गुरुः ॥ ८३ ॥

கபஸ்திநேமிஸ் ஸத்வஸ்த்தஸ் ஸிம்ஹோ பூதமஹேஶ்வர:
ஆதிதேவோ மஹாதேவோ தேவேஶோ தேவப்ப்ருத் குரு:. 83

486. கபஸ்திநேமி: - ஒளி வட்டத்தின் நடுவில் உள்ளவர்.

*ஸூரியனது ஒளி வட்டத்தின் நடுவே உள்ளவர்.* "த்த்யேய: ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்தீ நாராயண:' ஸூர்ய மண்டலத்தின் நடுவே ஸூர்யனாக ஸூர்யநாராயணராக நாராயண *ராகத் தியானம் செய்யப்பெறுபவர்.*[1] ஒளிமிக்க ஸுதர்சன சக்கிரம் *உள்ளவர். (486)*

487. ஸத்வஸ்த்த: - ஸத்வ குணத்தில் நிற்பவர்.

*ஒளி பொருந்திய ஸத்வகுணத்தை முக்கியமாய் கையாள்பவர். ரஜோ குணமும் தமோ குணமும் அறிவு பேதலிப்பிற்கு*

---

1. यो वै वेदांश्च प्रहिणोति तस्मै । (श्वेताश्व ६. १८)
2. आदित्यो वा एष एतन्मण्डलं, य एष एतस्मिन्मण्डलेऽर्चिर्दीप्यते । य एष एतन्मण्डलेऽर्चिषि पुरुषः । (तै.आ.१०.१४)

*இடமளிப்பவை. ஸத்வ குணம் ஒன்றே உள்ளதை உள்ளவாறு காட்டும்,: மாற்றிக்காட்டாது. அது மனத்தின் தெளிவையும் அறிவின் கூர்மையையும் வெளிப்படுத்துகிறது. ஒளிமயமான ஸத்வ குணத்தைத் தன் செயல்களுக்கு ஆதாரமாக கொண்டவர். ஸத்வம் - உயிரினங்கள். உயிரினம் அனைத்திலும் உள்ளிருப்பவர். ஸத்வம் - ஸத்வகுணம் மிக்க மனம். அந்த மனத்தில் - அடியார்களின் தெளிந்த மனத்தில் நிலைத்து நிற்பவர். (487)*

488. ஸிம்ஹ: - சிங்கம் போன்றவர்.

*சிங்கம் பிராணிகளில் வீர்யம் மிக்கது. சிங்கம் போன்று பராக்கிரமம் உள்ளவர். எளிதாகத் துன்புறுத்துபவர். ஸத்யபாமையை பாமை என்றும் பீமஸேனனைப் பீமன் என்றும் பாதிப்பெயரால் கூப்பிடுவதுபோல் நிருஸிம்ஹரை ஸிம்ஹர் என்று குறிப்பிடலாம். அந்த நரசிம்மராக இருப்பவர். தனது பராக்கிரமத்தை உணராமல் எதிர்ப்பவரைச் சிங்கம் போன்று குதறி மாய்ப்பவர். (488)*

489. பூதமஹேஶ்வர: - உயிரினத்தின் பேராளுனர்.

*தோன்றிய பொருளனைத்தையும் தன் விருப்பப்படி ஆள்பவர்களான பிரும்மா முதலானவருக்கும் மிகப் பெரியவர். பூதம்-ஸத்தியம். ஸத்யம் என்ற நிலையிலிருந்துகொண்டு, உலகின் பேராளுமை பெற்றவர்.*[1] பரம் பாவம்... மம பூதமஹேச்வரம் *(கீதை 9-11) (489)*

490. ஆதிதேவ: - உலகை ஏற்றுக்கொண்ட தேவர்.

*எல்லாவற்றையும் தன்னுள் ஒடுக்கி ஏற்றுக் கொண்டவரானதால் அவர் ஆதி: - (ஆதீயந்தே பூதாநி அநேந) அத்தகையதேவர். (நா. 334) (490)*

491. மஹாதேவ: - பெருந்தேவர்.

*பெரிதான ஆத்மஞான யோகமான ஈசுவரத் தன்மையால் பெருமைப்படுபவர். யோகிகள் ஆத்மஞானத்தையே பெரும் யோகம் என்று கருதுவர். அந்தப்பெரும் யோகத்தில் சிறப்புடன் விளங்குபவர்.*[2].

1. स वा अयमात्मा सर्वेषां भूतानामधिपतिः, सर्वेषां भूतानां राजा। (बृहदार २,६. १५)
2. सर्वान्भावान्परित्यज्य आत्मज्ञानयोगैश्वर्ये महति महीयते। तस्मादुच्यते महादेवः। (अथर्वशिरः ६०)

*மஹாதேவ: - பெருந்தேவர். சிவபெருமானுக்குரிய பெயர்களில் ஒன்று. எல்லோராலும் வணங்கத்தக்கவர், எங்கும் பரந்து நிற்பதால் உருவமைப்பால் பெரியவர். அலகிலா விளையாட்டுடையவராகையால் பெரியதேவர். ஸர்வஜ்ஞராக எல்லாமறிந்தவரானதால் பெரியவர். எல்லோரையும் காப்பாற்றுவதால் பெரியவர். சிவபெருமானின் எட்டு சரீரங்களில் சந்திரனின் வடிவில் உள்ளவர் மஹாதேவர்.*[1] *(491)*

**492. தேவேஶ: - தேவர்களின் ஈசுவரன்.**

*பூதமஹேச்வரனுக எல்லா உயிரினத்திற்கும் ஈசரே தேவர்களின் ஈசராகவும் உள்ளார். (492)*

**493. தேவப்ப்ருத் குரு: - தேவர்களைக் காக்கின்ற இந்திரனுக்கும் ஈச்வரர்.**

*தேவர்களை அரசனுக இருந்து தாங்குபவர் இந்திரன். அவரைவிட மேம்பட்டவர். இந்திரனைக் கட்டுப்படுத்துபவர்.*[2] *தேவர்களைத் தாங்குபவராயும் எல்லா வித்தியைகளையும் பிரளய காலத்தில் தன்னுள் அடக்கிப் படைக்கு முன் பிரம்மாவிற்கு உபதேசிப்பவராயும் உள்ளவர். தேவப்ருத் குரவே நம:.*

*தேவப்ருத் குரு: என்று ஸ்ரீபட்டர் இரு நாமங்களாக பொருள் கூறுகிருர். தன் விருப்பப்படி தேவர்களுக்குத் தக்க பொறுப்புகளை அளித்துத் தாங்குபவரானதால் தேவப்ருத். அந்தப் பொறுப்புகளைத் தேவர்களுக்கு வேதங்கள் மூலம் உணர்த்துபவராவதால் குரு:. (நா. 209) (493)*

**उत्तरो गोपतिर्गोप्ता ज्ञानगम्यः पुरातनः ।**
**शरीरभूतभृद्भोक्ता कपीन्द्रो भूरिदक्षिणः ॥ ८४ ॥**

**உத்தரோ கோபதிர் கோப்தா ஜ்ஞானகம்ய: புராதந:**
**ஶரீரபூதப்ருத் போக்தா கபீந்த்ரோ பூரிதக்ஷிண: 84**

---

1. तत्पुरुषाय विद्महे महादेवाय धीमहि । (तै. आ. १०) महादेवाय त्र्यंबकाय त्रिपुरान्तकाय । (श्रीरुद्रप्रश्ने) तं देवतानां परमं च दैवतम् । (श्वेताश्व ६. ७)
2. भयादिन्द्रश्च सूर्यश्च । (कठ २. ३. ३)

**494. உத்தர: - கரைசேர்ப்பவர்.**

*பிறப்பிறப்பென அலைபாய்கிற கடலின் கரை சேர்ப்பவர். அசுரர்களால் ஏற்படுகின்ற ஆபத்துகளிலிருந்தும் நல்லோர்களைக் காப்பாற்றுபவர்.[1] உலகைவிட மேம்பட்டவர்.[2]* *(494)*

**495. கோபதி: - பசுக்களைக் காப்பாற்றுபவர்.**

*கோகுலம் பிருந்தாவனம் முதலிய இடங்களில் பசுக்களை மேய்த்துக் காப்பாற்றியவர். வாழ வழிதெரியாமல் கால்நடைபோல் வாழ்ந்து வருபவர்களை வழிகாட்டிக் கட்டுப்படுத்திக் காப்பவர். கோ-பூமி. அதனைக் காப்பாற்றுபவர். பூமிதேவியின் மணாளர்.[3] (நா. 592) கோ - வாக்கு. வேதம் முதலியவற்றையும் மொழிகளையும் காப்பாற்றுபவர்.[4] தான் சொன்ன சொல்லைக் காப்பற்றுபவர்.* *(495)*

**496. கோப்தா - காப்பாற்றுபவர்**

*எதிரிகள் காணாதபடி மறைத்து அணைத்துக் காப்பவர். பரிவும் தயையும் காரணமாக தன்னை அடைந்தவர்கள் கேடு அடையாதபடி காப்பவர். (நா. 593)* *(496)*

**497. ஜ்ஞானகம்ய: - அறிவால் உணரத்தக்கவர்.**

*பரம்பொருளைப் பேரறிவால் மட்டும் உணரமுடியும். பொறிகளால் கண்டோ மனத்தால் எண்ணியோ அடையமுடியாது. மனத்தை அடக்கிப் பொறிகளை வெளியேறாதபடி உள்ளிழுத்து உள்நோக்கிய ஸமாதியில் உணரப்பெறுபவர்.* *(497)*

**498. புராதந: - தொன்மையானவர்.**

*காலத்தைக் கடந்து காலவரை தோன்றுமுன்னரே இருந்து தொன்றுதொட்டிருப்பவர். காலத்தால் அளவிட முடியாதவர். ஒவ்வொரு கல்பத்திலும் அவர் முதலிலிருந்ததாகப் புராணம் முதலியவற்றிலிருந்து அறியப்பட்டவர்.[5]* *(498)*

---

1. विश्वस्मादिन्द्र उत्तरः। (ऋक्सं १०.८६.२) 2. विश्वाधिको रुद्रो महर्षिः (तै.आ.१०.३)
3. महीं देवीं विष्णुपत्नीं (तै.ब्रा. ३.१.२) 4. वाक्पतिश्चक्षुष्पतिः । (तै.आ.१.६)
5. *ஸ்ரீ பட்டரின் உரைப்படி 500வது நாமம்.*

499. சரீரபூதப்ருத் - உடலாகியவைகளைத் தாங்குபவர்.

*உடல் தனிப்பொருள் அல்ல. உடல் மனம் ஆத்மா என்ற கூட்டு தானே பிரியாதபடி பிராணசக்தி இணைத்துக் காப்பாற்றுவதால் உடல் நிலைத்துள்ளது. அப்படி உடலாகியவற்றை இணைத்து உயிராகித் தாங்குபவர்.* **"சரீரேந்த்ரிய ஸத்வாத்ம ஸம்யோகோ தாரி ஜீவிதம்"** (சரக 1-1-42) *தனித்தனிப் பொருளாக ஜடமாக இருந்தவற்றைச் சேதன சரீரமாக பகவான் ஆக்கியதே அவர் இருப்பதை உணர்த்துகிறது.*[1] *(499)*

500. போக்தா - அனுபவிப்பவர்.

*போகத்திற்குரிய பொருளை அனுபவிக்கும்வரை நன்கு காப்பாற்றி பின் உரிய நேரத்தில் அனுபவிப்பதே போகம். அதனால் புஜ் என்ற வினை காப்பாற்றுதல் அனுபவித்தல் என்ற இருபொருளுள்ளது. பூமியை ஆள்வது பூமியில் கிட்டக்கூடிய போகத்தைப் பெறவே. உணவாக அனுபவித்த பிறகு உணவு தனித்திருப்பதில்லை. உண்டவனுடன் ஒன்றி அவனாகவே ஆகிவிடுகிறது. உலகைக் காப்பாற்றுகிறார். உலகை தன்னுள் ஒடுக்கிக்கொள்ள உணவாக்கி விழுங்குகிறார். விழுங்கியதும் உலகம் என்ற நிலை தனித்திராமலானதும் தானே எல்லாமாகிப் பரமானந்தத்தை அனுபவிக்கிறார். செறிந்த ஆனந்தமாக இருக்கிறார்.*[2]

*உலகியலில் வேள்வி முதலானவற்றில் அளிக்கப்பெறுவதை அக்னியை முகமாகக் கொண்டு ஏற்பவர். விழிப்பில் ஸ்தூலமான உடலாலும், கனவில் ஸூக்ஷ்மமான உடலாலும், தூக்கத்தில் அதில் அழுந்திய மனத்தாலும் உலகை வெவ்வேறுவிதமாக அனுபவிக்கின்ற ஜீவனின் வடிவில் உள்ளவர்.*[3] *(நா. 143, 888) (500)*

---

1. एष भूताधिपतिरेष भूतपालः एष सेतुर्विधरणः। (बृहदा ४. ४. २२)
2. यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः। (कठ १. २. २५) असौ हि सर्वत्र सर्वदा सर्वात्मा सन्सर्वमत्ति। (नृसिंहोत्तर ४. ४.) ब्रह्म वा इदं सर्वं अत्तृत्वात्। (नृसिंहोत्तर ७. ९)
3. स्थूलभुग्वैश्वानरः, प्रविविक्तभुक् तैजसः, आनन्दभुक् चेतोमुखः प्राज्ञः। (नृसिंहपूर्व ४. ४. ६ नृसिंहोत्तर १. ६. ८) तं वा एतं त्रिशरीरभूतं आत्मानं त्रिशरीरं परं ब्रह्मानुसन्दध्यात्स्थूलत्वात्स्थूलभुक्त्वात्सूक्ष्मत्वात्सूक्ष्मभुक्त्वाचैक्यादानन्दभुक्त्वाच्च। (नृसिंहोत्तर १.४)

501. கபீந்த்ர: - வானரர்களின் தலைவர்.

*ஒன்றோடொன்று பொருந்தாதவையும் முற்றிலும் வேறுபட்ட தன்மையுடையவையுமான ஐந்து பூதங்களைப் பொருத்தி உடலாக்கி அதில் நின்று உடலால் கிடைக்கும் போகத்தைப் பெறுவது எளிதல்ல. ஸ்ரீ ராமனாக இருந்து, சபலமும், சஞ்சலமும், பலமும் கொண்ட வானரர்களை சேனாவீரர்களாக்கி அவர்களை மனிதனை தனக்கு அடங்கி நடக்கச் செய்து கடலுக்கு அணைகட்டிப் பெரும் போரில் வெற்றி அளிப்பவர்களாக்கியதைப் பார்க்கும்போது உடலை ஆண்டது பெரிதல்ல எனத் தோன்றும். அப்படி வானரர்களை ஊக்குவித்தவர். தேவர்களே வானரர்களானார்கள். அவர்களின் தலைவர். குரங்குகளையே ஆட்டிப்படைப்பவர் நம் மனத்தை ஆள்வது மிக எளிது. கபிகளில் - பன்றிகளில் சிறந்த வராஹமூர்த்தி. (நா. 101) (501)*

502. பூரிதக்ஷிண: - பெருந்தக்ஷிணை உள்ளவர்.

*தக்ஷிணை - தன்பொருட்டு யாகத்தில் கலந்துகொண்டு செயலாற்றியதற்காக யாகம் புரிபவர் தரும் வெகுமதி. பகவான் உலகோடு ஒட்டி வாழவும் உலகிற்கு வழிகாட்டவும் ஸ்ரீராமன் முதலிய அவதாரங்களில் பல வேள்விகளைப் புரிந்துள்ளார். பிறரை வேள்விபுரியச் செய்துள்ளார். அவற்றில் தக்ஷிணைகளை எவரும் எதிர்பார்த்திராதபடி பெருத்த அளவில் தந்தவர். மிகப் பெரியவரும் சமர்த்தருமானவர். (502)*

सोमपोऽमृतपः सोमः पुरुजित्पुरुसत्तमः ।
विनयो जयः सत्यसन्धो दाशार्हः सात्वतांपतिः ॥ ८५ ॥

ஸோமபோऽம்ருதபஸ் ஸோம: புருஜித் புருஸத்தம:
விநயோ ஜயஸ் ஸத்யஸந்த்தோ தாஸார்ஹஸ் ஸாத்வதாம்பதி: 85

503. ஸோமப: - ஸோமத்தை அருந்துபவர்.

*ஸோமம் என்ற அமிருதசத்து நிரம்பிய கொடியைப் பிழிந்தெடுத்த சாற்றைத் தேவர்களுக்கு வேள்விகளில் ஹவிஸாக அளிப்பதை தேவதைகள் வடிவில் ஏற்றுப் பருகுபவர். தேவர்களுக்கு அளித்து மிகுந்ததை அருட்பிரசாதமாக அருந்துகிற வேள்வி புரிபவன் வடிவில் இருப்பவர். வேள்விபுரிபவன் சிவபெருமானது எட்டு சரீரங்களில் ஒன்று. ("யா ச ஹோத்ரீ" சாகுந்தலம் 1.1) (503)*

504. அம்ருதப: - அம்ருதம் அருந்தியவர்.

*ஆத்மானந்தமே அமுதம். அதனைப் பருகுபவர். தன்வந்தரியாகிப் பாற்கடலிலிருந்து அம்ருதக்குடம் ஏந்தி வந்து மோஹினியாக அம்ருதம் வழங்கித் தேவர்களை அமுதம் சாப்பிடச் செய்து தானும் அருந்தியவர். வேள்விகளில் அக்னியில் ஹோமம் செய்யப்பெற்ற பொருள்களைத் தைவசக்தி நிரம்பிய அக்னி வடிவில் ஏற்று. அவற்றைத் தேவர்களின் உணவான அமுதமாக்கித் தேவதைகளுக்கு அளித்துச் சாப்பிடச் செய்பவர். அம்ருதம் அருந்துகின்ற தேவர்களின் வடிவில் இருப்பவர். (நா. 503) (504)*

505. ஸோம: - சந்திரனாக இருப்பவர்.

*ஸோம யாகத்திற்கு உதவுகிற ஸோமம் என்ற கொடி அழியாதது. கிள்ளிக்கிள்ளி எறிந்தாலும் முளைக்கும். அந்தக்கொடி சந்திரனின் கிரணங்களால் வளர்ச்சி பெறும். பௌர்ணமியன்று பூர்ண வளர்ச்சி பெறும். இத்தகைய ஓஷதிகள் அனைத்திலும் அமுதச்சத்து நிரம்பச் செய்பவர் சந்திரன். பூமியில் விளைகிற உணவுப் பொருள் அனைத்தையும் ஸோமக்கொடி போன்ற ஓஷதிகளையும் சந்திரன் வடிவில் நின்று பகவான் இரவில் சத்துள்ளதாக ஆக்குகிறார்.* 'புஷ்ணாமி சௌஷதீஸ் ஸர்வாஸ் ஸோமோ பூத்வா ரஸாத்மக: *(கீதை 15. 13) அக்னி சக்திக்கு நேர் எதிரானது ஸோம சக்தி. குளிர்ந்து புஷ்டி தரும் சக்தியுள்ளவனுதலால் சந்திரன் - ஸோம:. அந்த அமுத சக்தி நிறைந்த ஸோமக்கொடி, ஸோமக்கொடி போன்ற ஓஷதிகளை அமுதச்சத்து நிரம்பியவைகளாகச் செய்கின்ற சந்திரன் இவர்கள் வடிவில் இருப்பவர்.*

*சந்திரன் சிவபெருமானது எட்டு சரீரங்களில் ஒன்று* "யே த்வே காலம் விதத்த:" *(சாகுந்தலம் 1.1) சிவபெருமானது சந்திரனாகிய வடிவில் இருப்பவர். ஸோம: - உமயா ஸஹித:. உமை தேவியாருடன் கூடிய சிவபெருமானின் வடிவில் இருப்பவர்.*[1] *உமா-பிரும்மவித்யை. கேநோபனிஷத்தில் இந்திரனுக்குப் பரம்பொருளைப் பற்றி உபதேசிக்க வந்தவள். அந்த பிரும்ம*

1. उमासहायं परमेश्वरं प्रभुं (कैवल्य ७) नमः सोमाय च रुद्राय च। (श्रीरुद्रप्रश्ने) अपाम सोमममृता अभूम। (अथर्वशिरसि)

வித்யையுடன் கூடியிருப்பவர். வித்யையும் ஞானமும் கூடியிருக்கும்.

வேள்விகளில் அளிக்கப்பெறுகிற ஸோமலதையைப் பரம்பொருளாகத் தியானம் செய்து பரம்பொருளின் தன்மைகளே அதில் ஏற்றி அதனே அர்ப்பணம் செய்வர். உலகில் உள்ள தனைத்தின் தோற்றத்திற்குக் காரணம் ஸோமமே என வேதம் கூறுவதை ஸ்காந்தம் விளக்குகிறது.[1] "மதீநாம் ச திவ: ப்ருத்வ்யா: வந்ஹேஸ் ஸூர்யஸ்ய வஜ்ரிண:. ஸாக்ஷாதபிச விஷ்ணோச்ச ஸோமோ ஜநயிதேஶ்வர: ஏவம் ஜாத: புநஸ்ஸோம: புநாதி ஸகலாந்த: ஸோமோவை ஹ்யாத்மந: . ஸோமமாத்மாநம் வேத்தி சங்கர:" (ஸ்காந்தம் - ஸனத்குமாரஸம்ஹிதை) உமையுடன் கூடிய சங்கரர் (ஸோமர்) ஸோமக்கொடியைத் தனது சரீரமாக நினைக்கிறார். ஸோமலதையால் சிவன் வழிபடத்தக்கவர். 'ஸோமேந ஸோமமாராத்ய பீத்வாசேஷம் சிவஸ்ய தம். ஜாநாமி ஸம்யக் தம் ஸோமம் சிவம் சம்பும் மஹேச்வரம்' (ஸ்காந்தம் ஸநத்குமார ஸம்ஹிதை) ஸோமலதை கபர்தியின் சரீரம் என்று வேதமும் கூறுகிறது.[2] ஸோமரான சிவபெருமானது சரீரமான ஸோமலதையாக இருப்பவர். (505)

506. புருஜித் - பலரை வெல்பவர்.

எண்ணற்ற பல எதிரிகளே வெல்பவர். 'ஸ்ரீராமன் உண்மை பேசி உலகை வெல்வார். வாரி வழங்கி ஏழைகளே வெல்வார். சொன்ன சொல் கேட்டுப் பெரியோர்களே வெல்வார். போரில் வில்லால் எதிரிகளே வெல்வார்.' "ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:. குரூந் சுச்ரூஷயா வீரோ தநுஷா யுதி சாத்ரவான்" என வால்மீகி கூறுவார். (ராமா. 2, 12, 29) இப்படிப் பலரைப் பல வகைகளில் வெல்பவர். (506)

507. புருஸத்தம: - சிறந்த பலவாக இருப்பவர்.

அவர் படைத்தவைகளில் பல பல்வகைகளில் சிறந்தவை. விசுவரூபரானபடியால் பல பொருள்களாகவுமிருப்பவர்.[3] மிகச்

1. सोमः पवते जनिता मतीनां जनिता दिवो जनिता पृथिव्याः।
जनिताग्नेर्जनिता सूर्यस्य जनितेन्द्रस्य जनितोत विष्णोः॥ (ऋक्संहिता ९.९६.५ साम ५२७, ९४३)
2. अयं सोमः कपर्दिने (छन्दसि षष्ठयर्थे चतुर्थी)। (ऋक्संहिता ९. ६७. ११)
3. इन्द्रो मायाभिः पुरुरूप ईयते। (बृहदार २. ५. १९)

சிறந்தவராகவும் இருப்பவர். தன்னிடம் பக்தி கொண்டு தன்னை வழிபடுகிற பல பெரியோர்களின் உள்ளத்தில் நிலைத்துத் தானிருப்பது தெளிவாகத் தெரியுமாறு இருப்பவர். *(507)*

508. விநய: - அடக்குபவர்.

*துஷ்டர்களைத் தண்டனையால் அடக்கி வழிப்படுத்துபவர். தன்னை அண்டியவர்களுக்கு "மனத்தை அடக்குங்கள், தன்னுடையது என்ற அபிமானம் கொள்ளாமல் வாரி வழங்குங்கள். பரிவுடன் பழகுங்கள்" என உபதேசித்து நல்வழிப்படுத்துபவர்.*[1] *(508)*

509. ஜய: - வெல்பவர்.

*தனது பெருமையால் எல்லோருக்கும் மேலானவராக, எல்லோரையும் வெற்றி கொண்டவராக இருப்பவர். தனது பக்தர்களுக்கு ஆட்பட்டுக் குற்றேவல் புரிபவர். (509)*

510. ஸத்யஸந்த்த: - உண்மையான ஸங்கல்பமுள்ளவர்.

*அவரது திட்டங்கள் ஸங்கல்பங்கள் என்றும் நிறைவேறிவிடும். அவை பொய்யாகப் போவதில்லை.*[2] *சொல்தவறுதவர்.* 'ராமோ த்விர் நாபிபாஷதே'. *ராமன் முன் பேசியதை மாற்றி மறுபேச்சு பேசுவதில்லை (ராம. 2, 18, 30)* 'அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம், த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம். நது ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய. *"உயிரையும் ஸீதையாகிய உன்னையும் லக்ஷ்மணனையும் இழக்க நேரிடினும் சொன்ன சொல் காப்பேன்" (ராமா. 3, 10, 18) (510)*

511. தாஸார்ஹ: - பக்தர்களின் அளிப்பிற்கு ஏற்றவர்.

*பக்தர்கள் தம்மிடம் உள்ளதனைத்தையும், தன்னையே கூடப் பகவானுக்குத் தயங்காமல் அளிப்பர். அவற்றை ஏற்க அவருக்கு பூர்ணத் தகுதி உள்ளது. அதனால் தாச - அர்ஹ: - வழங்குவதற்கு ஏற்றவர். யது வம்சத்தில் தாசார்ஹர்கள் என்ற பிரிவைச் சேர்ந்த கண்ணனாக இருப்பவர். (511)*

1. दाम्यत दत्त दयध्वं इति तदेतत्त्रयं शिक्षेत् दमं दानं दयामिति। (बृ. ५.२)
2. सत्यकामः सत्यसङ्कल्पः। (छान्दोग्य ८. १. ५)

512. ஸாத்வதாம் பதி: - ஸாத்வதர்களின் தலைவர்.

*ஸத் - பரம் பொருள். அதனை அறிந்தவர் ஸத்வான். அவர்களது வழி முறை ஸாத்வதம் எனும் சாஸ்திரம். அது பக்தர்கள் பக்தியைப் பெருக்கிக்கொள்ளும் வழியைப் போதிக்கிறது. அதனைப் பின்பற்றுபவர்களுக்கு தலைவர். யது வம்சத்தில் ஒரு பிரிவான ஸாத்வத இனத்திற்குத் தலைவர் - கண்ணன். (512)*

जीवो विनयितासाक्षी मुकुन्दोऽमितविक्रमः।
अंभोनिधिरनन्तात्मा महोदधिशयोऽन्तकः॥ ८६ ॥

ஜீவோ விநயிதா ஸாக்ஷீ முகுந்தோऽமிதவிக்ரம:
அம்ப்போநிதிரநந்தாத்மா மஹோததிஶயோऽந்தக:. 86

513. ஜீவ: - ஜீவன்.

*உயிராகிப் பொறிகளையும் மனத்தையும் இயக்கி வாழ வைப்பவன் ஜீவன்.[1] (ஜீவயதி) க்ஷேத்ரஜ்ஞன். (நா. 16) விராட் வடிவில் இயக்கம் காணாதபோது அதனுள் ஜீவன் வடிவில் நுழைந்து இயக்கி வைத்தவர். (நா. 8) அடியார்களைப் பரிவுடன் வாழ வைப்பவர். (513)*

514. விநயிதாஸாக்ஷீ - அடக்கத்தைக் கண்காணிப்பவர்.

*இந்த நாமம் விநயிதாஸாக்ஷீ, விநயிதாऽஸாக்ஷீ என்று இரு வகையில் பொருள் தரக்கூடியது. விநயிதா, ஸாக்ஷீ என இரு நாமங்களாக்கி ஸ்ரீ பட்டர் பொருள் தருகிறார் விநய: - உடல் மன அடக்கம், பண்பாடு, பண்பட்டவனின் தன்மை, தன் விருப்பப்படி நடக்காமல் பெரியோர்கள் அழைத்துச் செல்லும் பாதையில் கட்டுப்பாட்டிற்குள் அடங்கி நடத்தல். இதனை குரு வடிவிலும் உள்ளத்தில் அந்தர்யாமி வடிவிலும் நின்று கண்காணிப்பவர். இப்படிக் கண்காணிப்பது பேரறிவைத் தருவதற்காக. (நா. 15) ஜீவனாக இருப்பவரே அந்தர்யாமியாகவுமிருந்து வழிகாட்டுபவர். (விநயிதாயா: ஸாக்ஷீ)*

*விநயிதா எங்கும் பரவிச் செல்பவர். அஸாக்ஷீ, தன்னைத் தவிர வேறு பொருள் காணாதவர். எங்கும் ஆத்மாவையே கண்டு*

1. स वा एष भूतानीन्द्रियाणि विराजं देवताः कोशांश्च सृष्ट्वा प्रविश्यामूढो मूढ इव व्यवहरन्नास्ते माययैव। (नृसिंहोत्तर ९)

ஆத்மாவைத் தவிர பொருள் காணுதவராகி, ஆத்மாவாக உலகமெங்கும் பரவி நிற்கிற ஞானியானவர்.

விநயிதா - அரசகுமாரர்களைப்போல் பக்தர்களைச் சீராட்டி அரவணைத்து வளர்ப்பவர். ஸாக்ஷீ - பக்தர்களின் ஒழுக்கங்களைக் கண்காணிப்பவர், விநயிதாஸாக்ஷிணே நம:, விநயித்ரே அஸாக்ஷிணே நம:, விநயித்ரே நம:, ஸாக்ஷிணே நம:. (514)

515. முகுந்த: - முக்தி அளிப்பவர்.

நல்வழி காட்டிக் கட்டுப்படுத்திக் கண்காணித்துத் தேர்ந்தவர்களுக்கு முக்தி தருபவர். (515)

516. அமிதவிக்ரம: - அளவிட முடியாத ஆற்றலுள்ளவர்.

பகவான் தன் திருவடியால் உலகை அளந்த ஆற்றல் எதனுலும் அளவிட முடியாதது.[1] உலகைப் படைப்பதற்காகப் பிருகிருதி தொடங்கி உயிரினம் வரை வரிசையையும் அமைப்பையும் சீராக்கி வெளியிட்ட ஆற்றலும் ராவணன் முதலிய எதிரிகளிடம் காட்டிய பராக்கிரமமும் அளவிட முடியாததே. (நா. 641) (516)

517. அம்ப்போநிதி: - தேவர்கள் முதலானோர் தங்குமிடம்

தேவர்கள், மனிதர்கள், பித்ருக்கள், அஸுரர்கள் என நான்கு இனங்களும் ஆற்று நீர் போல் பகவானிடமிந்து தோன்றிப் பகவானிடம் சேர்ந்தன. வேதத்தில் ஒரு கதை. உலகைப்படைக்க முற்பட்ட பகவான் சூலுற்ருர். உடன் கருத்தரித்தவள்போல் களைத்துக் கருநிறமும் பசுமையும் பெற்று அயர்வை அடைந்தார். (1) உயிர் மாத்திரம் சுற்றி வந்தது. அந்நிலையில் அஸுரர் வெளி வந்தனர். (2) அவர்களைக் கண்டதும் தான் தந்தையாகிவிட்ட அபிமான எண்ணம் தோன்றியது. அந்நிலையில் பித்ருக்கள் வெளிவந்தனர். (3) இவர்களைக் கண்டதும் திட்டமிட்டுச் செயல் புரியும் மனனசக்தி தோன்றியது. இதன் விளைவாக மனிதர்கள் வெளிவந்தனர். (4) திட்டமிட்ட பணி நன்கு விளங்குவதற்கு அவற்றைச் சிறப்படையச் செய்யும் எண்ணம் வந்தது. இதன் விளைவாக தேவர்கள் வந்தனர். இப்படி ஆற்றொழுக்காக ஒன்றன் பின் ஒன்ருக இவர்கள் தோன்றியதால் இந்த நான்கு இனங்கள்

1. यस्योरुषु त्रिषु विक्रमणेषु । अधिक्षियन्ति भुवनानि विश्वा । (तै. ब्रा. २. ४. ३)

*அம்பஸ் - நீர் எனப்பட்டன.*[1] *இந்த இனங்கள் தோன்றிய இடமும் சென்றடையுமிடமும் பகவானே.*

*அம்ப்ப: - நீர். பெரிய நீர்தேக்கமான கடலாக இருப்பவர். 'ஸரஸாமஸ்மி ஸாகர:' (கீதை. 10 24). கடல் பகவானின் விபூதிகளில் ஒன்று. அம்பஸி நிதீயதே - நீரினுள் மறைந்துறைகிற கூர்மமூர்த்தி. திருப்பாற்கடல் கடையப்பெறுகையில் மந்தரமலைக்கு ஆதாரமாகக் கடலினுள் மறைந்திருந்தவர். உலகில் ஆதார சக்தியாக பூமி மிதக்கும் காரண ஜலத்தில் மறைந்திருப்பவர்.* *(517)*

518. அநந்தாத்மா - முடிவற்ற வடிவுள்ளவர்.

*தேசமும் காலமும் பொருளின் எல்லையை வகுப்பவை. இங்கிருப்பது அங்கு இராது. இன்று இருப்பது நாளை இராது. தேசத்தாலும் காலத்தாலும் குறுகாமல், இந்த - அந்தப் பொருள் அல்லது வேற்றுப் பொருளாலும் குறுகி முடிவுறாமல், நித்யமாக எங்கும் நிரம்பிய எல்லாமாக உள்ளவர். உலகின் ஆதாரமான அனந்தன் எனும் ஆதிசேஷன் வடிவில் உள்ளவர். எல்லையற்ற - எண்ணற்ற வடிவில் உள்ளவர்.*[2] *(நா. 659, 886, 932)* *(518)*

519. மஹோததிசய: - பெருங்கடலில் படுத்திருப்பவர்.

*உலகை ஒடுக்கி நீரில் கரைத்துப் பெரும் கடலாகக் காணப்படுகிற காரண ஜலத்தில் படுத்திருப்பவர். முசுகுந்த சக்கிரவர்த்திக்குப் பிரளயக் காட்சி தந்தபடி ஆலிலையில் கால்கட்டை விரலை கையால் பிடித்து வாயினுள் வைத்துச் சப்பிக் கொண்டிருக்கின்ற பாலமுகுந்த வடிவினர்.* *(519)*

520. அந்தக: - முடிவை ஏற்படுத்துபவர்.

*பால முகுந்தர் வடிவில் முசுகுந்தருக்குக் காட்சி அளித்தபடி உலகைத் தன்னுள் ஒடுக்கிக்கொண்டு உலகின் முடிவைத் தந்தவர். ஸங்கர்ஷணர் வடிவில் வெளியாகி உலகை முடிப்பவர்.* *(520)*

**अजो महार्हः स्वाभाव्यो जितामित्रः प्रमोदनः ।**
**आनन्दो नन्दनो नन्दः सत्यधर्मा त्रिविक्रमः ॥ ८७ ॥**

---

1. तानि वा एतानि चत्वार्यंभांसि । देवा मनुष्याः पितरोऽसुराः । (तै.आ. ब्र.२.३.८)
2. अचिन्त्यमव्यक्तमनन्तरूपं (कैवल्य ६)

அஜோ மஹார்ஹஸ் ஸ்வாபாவ்யோ ஜிதாமித்ர: ப்ரமோதந:
ஆநந்தோ நந்தநோ நந்த: ஸத்யதர்மா த்ரிவிக்ரம: 87

521. அஜ: - மன்மதனாக இருப்பவர்.

*அ என்பது விஷ்ணுவைக் குறிக்கும். அ என்ற அக்ஷரம் பகவானின் விபூதி.* "அக்ஷராணும் அகாரோ அஸ்மி". *(கீதை. 10. 33). அந்த விஷ்ணுவிடமிருந்து தோன்றிய மன்மதனும் பகவானே. தர்மத்திற்கு விரோதமில்லாத காமம் பகவானின் விபூதி.* "தர்மாவிருத்தோ பூதேஷு காமோ அஸ்மி" *(கீதை. 7. 11). அந்த காமத்தின் வடிவிலுள்ளவர். (நா. 95, 204, 295,).*

*உலகம் ஒடுங்கும்போது பஞ்ச பூதங்களும் தாம் தோன்றியவாறே ஒடுங்குகின்றன. பரம்பொருளிடமிருந்து ஆகாசம், ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து அக்னி, அக்னியிலிருந்து ஜலம், ஜலத்திலிருந்து பிருதிவி, அதிலிருந்தும் உணவும் உண்பவரும் மற்றதும் என்று தோன்றிய வரிசையை ஒட்டி, உலகம் பிருதிவியில், பிருதிவி ஜலத்தில், ஜலம் அக்னியில் அக்னி வாயுவில், வாயு ஆகாசத்தில், ஆகாசம் பரம்பொருளில் என அடங்குவது அமைகிறது. ஆகாசமானது தனது தந்மாத்திரமான சப்தத்தில் ஒடுங்கி, சப்தம் பிரணவத்தில் அடங்கி, பிரணவம் தன் மூலமான 'அ' என்ற ஒலியில் அடங்குகின்றது. அகாரப் பொருளானவர். (அகாரவாச்யதயா ஜாத:)*[1] *(521)*

522. மஹார்ஹ: - பூஜைக்குரியவர்.

*விழாவாகக் கொண்டாடப்பெறும் வழிபாடு - மஹ:. அதற்கு உரியவர். பக்தியின் கடைசிப்படியான (ப. 26, 34) தன்னையே அர்ப்பணம் செய்து வழிபடுவது சிறந்த பூஜை. அதற்கு உரியவர். (522)*

523. ஸ்வாபாவ்ய: - தானே பிறக்க முடியாதவர்.

*எப்போதும் ஸித்தர் பகவான். (நா. 97) நித்யராக பூர்ணராக இருப்பதால், தோன்றுவதும் இதுவாக அதுவாக ஆவதும் அவரால் இயலாது. உடையவர். பகவான், உடமை உயிரினம் பகவானின் உடமையான உலகத்தால் உடையவனாகக் கருதத் தக்கவர். (523)*

1. अथैष उ एवाकार आप्ततमार्थः (नृसिंहोत्तर ५. १)

524. ஜிதாமித்ர: - சத்துருக்களை வென்றவர்.

*காமம் குரோதம் வெறுப்பு முதலிய உள் எதிரிகள் ஹிரண்ய கசிபு ராவணன் முதலிய வெளி எதிரிகள், இத்தகைய நட்பெண்ணமில்லாதவர்களை வென்றவர். (524)*

525. ப்ரமோதந: - மகிழ்பவர்.

*ஆத்மானுபவமாகிய நிலைத்த ஆனந்தத்தில் மூழ்கியவர். இல்லற இன்பம் - மோத:. ஆத்மானந்தம் - ப்ரமோத:, பேரின்பம். தானும் ஆனந்தமடைந்து பிறரையும் ஆனந்தமடையச் செய்பவர். தியானத்தில் அமர்ந்ததும் தியானித்த வடிவில் பேரின்பம் தருபவர். தன்னைத் தியானம் செய்வதை உணர்ந்து மகிழ்பவர். (525)*

526. ஆநந்த: - பேரானந்த வடிவினர்.

*ஆனந்தமே இவரது வடிவம்.[1] வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத பேரானந்தம் அது. (526)*

527. நந்தந: - மகிழ்விப்பவர்.

*தான் ஆனந்த வடிவரானதால் தன்னை அடைந்தவருக்கும் அந்த பேரானந்தத்தை அளித்து மகிழ்பவர்.[2] குழந்தை தாய் தந்தையரைத் தன் அருகாமையாலேயே மகிழ்விக்கிறது. தனிப்பட்ட செயலால் அல்ல. அதுபோல் பகவானின் அருகாமையே மகிழ்விக்கிறது. அப்படிச் செயலால் விளையாத மகிழ்ச்சியாக இருப்பவர். (527)*

528. நந்த: - மகிழ்வதற்குரிய பொருட் செழிப்புள்ளவர்.

*பேரானந்தமடையத் தேவையான ஸாதனங்கள் அனைத்தும் நிரம்பியவர். அ-நந்த: - சிற்றின்பம், மிகக் குறுகியது. நிறைவு காண முடியாதது. நிறைவே பரம சுகம். நிறைவற்றதில் சுகம் நிலைக்காது.[3] நிறைவற்ற சிற்றின்பமல்லாதவர். (528)*

---

1. आनन्दरूपममृतं यद्विभाति। (मुण्डक २. २. ७) प्रज्ञानघन एवानन्दमयः। (नृसिंहोत्तर १.१) आनन्दरूपः सर्वाधिष्ठानः (नृसिंहोत्तर) आनन्द आत्मा। (तैत्तिरीय २. ५) आनन्दो ब्रह्म (तैत्तिरीय ३. ६) एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति। (बृहदा ६. ३. ३२)
2. एष ह्येवानन्दयाति (तैत्तिरीय २. ७)
3. यो वै भूमा तत्सुखं, नाल्पे सुखमस्ति। (छान्दोग्य ७. २३. १)

529. ஸத்யதர்மா - ஸத்யமான இயல்புள்ளவர்.

*ஞானம் முதலிய ஆறு சிறப்புகளும் (நா. 137, 170, 176) பகவானிடத்தில் எப்போதும் இயல்பாக நிலேத்துள்ளன. உண்மையான பொருளேக் காண்கிற இயல்புடையவர். நேர்மையான நடத்தையுள்ளவர். (529)*

530. த்ரிவிக்ரம: - மூன்றடிவைப்புகள் உள்ளவர்.

*மூன்று உலகங்களேயும் மூன்றடிவைத்துக் கடந்தவர்.[1] மூன்று வேதங்களேயும் கடந்த - அவைகளால் விளக்க முடியாத பெருமையுள்ளவர்[2] மூன்று உலகங்களிலும் உள்ளும் புறமும் பரவிநிற்பவர். (நா. 534) வ்யூஹங்களில் ஏழாமவர். (530)*

**महर्षिः कपिलाचार्यः कृतज्ञो मेदिनीपतिः।**
**त्रिपदस्त्रिदशाध्यक्षो महाशृङ्गः कृतान्तकृत्॥ ८८॥**

**மஹர்ஷி: கபிலாசார்ய: க்ருதஜ்ஞோ மேதிநீபதி:,**
**த்ரிபதஸ் த்ரிதசாத்த்யக்ஷோ மஹாச்ருங்க: க்ருதாந்தக்ருத் 88**

531. மஹர்ஷி: கபிலாசார்ய: - மஹரிஷி கபிலாசார்யர்.

*மந்திரங்களே உணர்ந்தவர் ருஷி. 'மந்த்ர த்ரஷ்டா ருஷி:' வேதங்கள் அனேத்தையும் உணர்ந்தவர் மஹரிஷி. வேதத்தின் பொருளுணர்ந்து அதன் வழி நடந்து பிறரையும் வழிகாட்டி நடக்கச் செய்பவர் ஆசார்யர். ஆசரணே என்ற வேத வழியின் நடைமுறையில் ஐயம் ஏற்பட்டால் அதனேத் தீர்த்து நம்பிக்கை உண்டாக்குபவர் ஆசார்யர். மஹரிஷியும் ஆசாரியருமான கபிலர் தேவஹூதிக்கும் கர்த்தமருக்கும் பிள்ளேயாகப் பிறந்த ஜ்ஞானாவதாரம்.[3] ஸாங்க்யம் என்ற தத்துவ விஞ்ஞானத்தின் ஆசாரியர். ஞானஸித்தர். பகவானின் விபூதி.* **"ஸித்தாநாம் கபிலோ முநி:** *(கீதை 10, 26) ஸகரரின் அறுபதினுயிரம் புத்திரர்களே யோகாக்னியால் சாம்பராக்கி ஸகரரின் வம்சத்தினரான பகீரதன் மூலம் கங்கையைக் கொணர்ந்து கரையேறச் செய்தவர். புகையில்லாத தணல் நிறமுள்ளவரானதால் கபில:. இரு பதங்கள் கொண்ட நாமம்.*

---

1. त्रीणि पदा विचक्रमे (तै. ब्रा. २. ४. ६)
2. विष्णोर्नु कं वीर्याणि प्रवोचं यः पार्थिवानि विममे रजांसि। (तै. सं. १. २. १३)
3. ऋषिं प्रसूतं कपिलं महान्तम्। (श्वेताश्व ५. २)

மஹர்ஷி:, கபிலாசார்ய: என தனித் தனி நாமங்களாக ஸ்ரீ பட்டர் உரை தருகிறார். பொருள் அதுவே. (531)

532. க்ருதஜ்ஞ: - உலகமும் ஆத்மாவுமானவர்.

க்ருதம் - செயலாலமைந்த இந்த உலகம். ஜ்ஞ: - செயலாலமையாத ஆத்மா. அசேதனமான இவ்வுலகமும் சேதனனான ஆத்மாவும் பகவானே. கபிலரிடம் தவறிழைத்த ஸகர புத்திரர்களுக்காக அவர்களது ஸகோதர புத்திரனான அம்சுமான் வணங்கிவேண்டியதும் அம்சுமானின் வணக்கத்தை ஏற்று ஸகர புத்திரர்களை மன்னித்தவர். நல்லதை ஏற்றுக் கெட்டதை மறப்பவர். (நா. 82) (532)

533. மேதிநீபதி: - பூமியின் கணவர்.

மது, கைடபன் என்ற இரு அசுரர்களைக் கொன்று அவர்களின் மேதஸ் எனும் கொழுப்பைச் சேர்த்து திடப்படுத்தியதால் பூமி மேதிநீ. அவளின் கணவர். வராஹராக வடிவெடுத்து பூமியைக் காப்பாற்றியவர். படைப்பின் தொடக்கத்தில் பூமி நீரில் மூழ்கி அழுந்தியபோது பிரும்மா வேண்ட, யஜ்ஞவராஹராகத் தோன்றியவர், ஆதார சக்தியாக நின்று பூமியை நிலை சிதறாமல் தாங்கினார். இந்தத் தோற்றத்தில் பூமி தேவியிடம் அதிகம் அன்பு செலுத்தி வராஹர் பூமி தேவியின் கணவர் ஆனார். இவரே பின்னர் திதியின் பிள்ளையான ஹிரண்யாக்ஷனைக் கொன்றவர். கபிலர் வடிவில் பாதாளத்திலிருந்து கொண்டு யோக சக்தியால் பூமியைத் தாங்குகிறார். "யஸ்யேயம் வஸுதாக்ருத்ஸ்நா வாஸுதேவஸ்ய தீமத:. மஹிஷீ மாதவஸ்யைஷா ஸ ஏவ பகவான் ப்ரபு:. காபிலம் ரூபமாஸ்த்தாய தாரயத்யநிசம் தராம்." (ராமா. 1. 40, 2-3) (533)

534. த்ரிபத: - மூன்று அடிவைப்புகள் உள்ளவர்.

வாமனராக வந்த பெருமான் மூன்றடிகளால் உலகளந்தார். முதல் அடி மண்ணிலும் இரண்டாமடி விண்ணிலும் மூன்றாம் அடி மேலான தனது தனி நிலையான பரம பதத்திலும் பதிந்தது. மூன்றாம் பதமான பரமபதமானது உயிரினம் சென்று திரும்பி வரக்கூடிய நிலையல்ல. இப்படி மூன்று அடி வைப்புகள் உள்ளவர். உலகைக் காப்பாற்றுவது, உலகிற்கு உதவக் கூடிய தேவதா சக்தியைக் காப்பாற்றுவது. இவ்விரண்டு பணிகளிலும் ஈடுபடாத மூன்றாம் நிலை தன் தனி நிலை - பரமபதம் என மூன்று நிலைகள் உள்ளவர். (நா. 530)

அடி எடுத்து வைப்பதென்பது, ஒன்றை முடித்து மற்றொன்றைத் துவங்குவதைக் குறிக்கும். விராட்டாக ஆனார், அதனை இயக்கி வைக்கும் தேவதைகள் ஆனார். இவ்விரண்டிலும் முழுமை பெறாததால் தானே ஜீவனாகி உட்புகுந்தார் என மூன்று முயற்சிகளால் படைப்பு நிறைவுற்றது. இம்மூன்று முயற்சிகளே மூன்று பதங்கள், மூன்றாம் பதமாகிய ஜீவனாகி உள் நுழைந்தது சிறந்தது - பரமபதம்.

வாமனாவதாரத்திற்கு முன்னரே பகவான் த்ரிபதராக த்ரிவிக்ரமராக அறிமுகமாகியுள்ளதைப் பல இடங்களில் வேதம் உணர்த்துகிறது. காலசக்கிரத்தின் சுழலில் 90 நாட்களுக்கு ஒரு பருவமாக ஆண்டு எனும் கால வரையை நான்கு தாண்டுதலில் பகவான் தாண்டுகிறார்.[1] ஆண்டின் துவக்கத்தில் சூரியனின் அந்தர்யாமியாக நின்று ஸௌர்யனுடன் தானும் சென்று உத்தராயணத்தின் நடு எல்லையாகிய ஸௌர்யனது மேஷராசி பிரவேசத்திலிருந்து மிதுன ராசி ஸஞ்சாரம் ஈறான ஒரு நடை, மறுபடி தக்ஷிணாயனமான கடக ராசி பிரவேசம் தொடங்கி தனுர் ராசி ஸஞ்சாரம் ஈறான இரண்டாம் நடை, மறுபடி உத்தராயணமாக மகர ராசியில் தொடங்கி மீன ராசி வரை உத்தராயணத்தின் நடுப்பகுதியை அடைந்த மூன்றாம் நடை என ஓராண்டில் மூன்று நடைகளில் உலகை அளந்து உலகின் வாழ்விற்கு உதவும் காலப் பகுதிகளை அமைத்துத் தருகிறார்.[2]

உலகைத் தாங்குவதற்காக மூன்றடிகளை எடுத்துவைத்தவர். உலகைக் காப்பவர் அவர். மறுத்துச் செயலாற்ற முடியாத வீரர் அவர். தாங்க வேண்டிய பொருள்களைத் தாங்கினார். மூன்றாவது அடி அவரது பெரும் பதம். அதில் பெரும் தேன் ஊற்று உள்ளது. தெய்வத் தன்மை பெற விரும்புபவர் அந்நீரைப் பருகி ஆனந்த மடைவர்.[3]

பலியிடம் மூன்றடி மண் கேட்டுப் பெற்ற பகவான் அவன் பெற்றிருந்த உடைமைகளை ஒரே அடியால் அளந்தார். அவனது

1. चतुर्भिः साकं नवतिं च नामभिः चक्रं न वृत्तं व्यतीरवीयत्। (ऋ. सं. १.१५५.६)
2. वि यो ममे पृथिवीं सूर्येण। (ऋ. सं. ५. ८५. ५)
3. त्रीणि पदा विचक्रमे। विष्णुर्गोपा अदाभ्यः। ततो धर्माणि धारयन्। तदस्य प्रियमभि पाथो अश्याम्। नरो यत्र देवयवो गदन्ति। उरुक्रमस्य स हि बन्धुरित्था। विष्णोः पदे परमे मध्व उत्सः। (तै. ब्रा. २. ४. ६)

புண்யச் செயல்களால் மறுமையில் பெறவிருப்பதை மற்றொரு அடியால் அளந்தார். மூன்றாவது அடி மண்ணிற்கு இடம் எங்கே என்று கேட்டார். 'கொடுப்பவன் எனத் தனித்து நீங்கள் நினைக்கும் வரை, நீங்கள் அளந்துள்ளவற்றில் நான் அடங்கினவனல்லவே! அதனால் நான் மீதமிருக்கிறேன். என்னை அளந்துகொள்ளுங்கள்' என்று தன்னைப் பகவானின் திருவடிகளில் அர்ப்பணம் செய்து கொண்ட பலி இரு திருவடிகளால் அளந்தவற்றைக்காட்டிலும் பெரிதாக - பரமபத ஸ்தானமாக ஆகிவிட்டான். முதல் அடியால் அவனது ஸ்தூல உடைமைகளையும் இரண்டாவது அடியால் அவனது ஸூக்ஷ்ம உடைமைகளையும் மூன்றாவது அடியால் அவனது காரண வடிவில் உள்ள பிரகிருதி தந்த அவித்யை எனும் அஹங்காரமமகாரங்களையும் ஏற்றுத் தனதாக்கிக்கொண்ட பெருமான்.[1]

சென்றது நடப்பது நிகழவிருப்பது என்ற மூன்றிலும் தன் திருவடிகளை - தனது செல்வாக்கை வைத்திருப்பவர்.

பிரும்மத்திற்கு நான்கு பாதங்கள் (பாதம். கால் பங்கு) இவை முறையே அவித்யா ஸுவித்யா ஆனந்தம் துரீயம் என. இவற்றில் அவித்யா எனும் கால் பங்கு உலகமாகியது. மற்ற மூன்று பங்குகளும் அம்ருதமாக விண்ணில் தங்கியுள்ளன. இந்த மூன்று பாதங்களுக்கும் வடிவமில்லை. அவித்யா பாதத்தில் விரிந்த உலகில் உணர்வேற்பதும் (சேதனம்) உணர்வேற்காததும் (ஜடம்) ஆன உலகம் அனைத்திலும் பரம்பொருள் வியாபித்திருக்கிறது.[2]

பதம் - அடையாளம். வராஹராகத் தோன்றியபோது மூன்று திமிள் அடையாளம் கொண்டவர் (நா. 61).

அனுபவிக்கப்பெறுகின்ற ஜடமான உலகம், அனுபவிப்பவனாகிய ஜீவன், இவ்விரண்டையும் கூட்டுவித்து அந்தர்யாமியாக ஆட்டுவிக்கும் ஈசன் என்ற மூன்று நிலைகளைக் காட்டுபவர். பிரகிருதி, புருஷன் (நா. 20) ஈசுவரன் என்ற மூன்று நிலைகளில் இருப்பவர். பிரணவத்திலுள்ள அகாரம், உகாரம்,

---

1. पादचतुष्टयात्मकं ब्रह्म, तत्रैकमविद्यापादं विद्यानन्दतुरीयाख्य पादत्रयममृतं भवति। अवशिष्टं अविद्याश्रयं भवति। (त्रिपाद्विभूतिमहानारायण ४. ३, ९)

2. पादोऽस्य विश्वा भूतानि। त्रिपादस्यामृतं दिवि। त्रिपादूर्ध्व उदैत्पुरुषः। पादोऽस्येहाभवात्पुनः। ततो विष्वङ् व्यक्रामत्। साशनानशने अभि। तस्माद्विराडजायत। (पुरुषसूक्तं, त्रिपाद्विभूति ४. ९)

*மகாரம் என்ற மூன்று பதத்தன்மை பெற்ற அக்ஷரங்களால் விளக்கப்பெறுபவர். (534)*

**535. த்ரிதசாத்த்யக்ஷ: - மூன்று நிலைகளைக் கண்காணிப்பவர்.**

*விழிப்பு கனவு தூக்கம் என மூன்று நிலைகளைக் கண்காணிப்பவர். பொறிகளுக்குப் பொருளைப்படும்படி செய்து மனத்தில் பதித்து ஏற்படக்கூடிய அறிவில் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களின் பாதிப்பு ஏற்படுகிறது. அக்குணங்களால் மனம் முழு மலர்ச்சி பெற்றிருந்தால் விழிப்பும், பாதி மலர்ச்சியுற்றிருந்தால் கனவும், விழித்தலால் ஏற்பட்ட களைப்பின் காரணமாகத் தளர்ந்த மனம் லயமடைந்திருந்தால் தூக்கமும் நேர்கின்றன. இந்த மூன்று நிலைகளிலும் ஸாக்ஷியாக விளங்குபவர்.*

*படைப்பு, காப்பு, லயம் என்ற மூன்று நிலைகளிலும் சென்றது, நடப்பது, நடக்கவிருப்பது என்ற கால நிலைகளிலும் கண்காணிப்பவர்.*

*பாலியம், (1-5 வயது) கௌமாரம், (6-15 வயது) யௌவனம், (16-40 வயது) மத்யமம், (41-60 வயது) வார்த்தக்யம், (மூப்பு) (61-100 வயது) என்ற ஐந்து உடல் நிலைகளில் தேவர்கள் மூன்றாவது நிலையான யௌவனம் மட்டுமுள்ளவர்கள். மூப்பில்லாதவர். தோற்றம் வளர்ச்சி அழியாமை என்ற மூன்றே நிலைகள் உள்ளவர்கள் - த்ரிதசர்கள். அவர்களின் தலைவர். வஸுக்கள் 8, ருத்திரர்கள் 11, ஆதித்யர்கள் 12, அச்வினீ தேவர்கள் இருவர் என தேவர்களில் முப்பத்தி மூன்று கணங்கள் உண்டு. அந்த மூன்று பத்துகள் உள்ள தேவர்கள் த்ரிதசர்கள். இவர்களின் தலைவர். (535)*

**536. மஹாச்ருங்க: - பெரும் கொம்புடையவர்.**

*மத்ஸ்யரும் கூர்மரும் பெருங்கொம்புள்ளவர். மத்ஸ்யரின் பெருங்கொம்பில் கட்டப்பட்ட ஓடத்தில் ஸத்யவ்ரதர் சென்றார். (நா. 364) (536)*

**537. க்ருதாந்தக்ருத் - படைக்கப்பட்டதை முடிப்பவர்.**

*தானே படைத்தைத் தானே முடிவடையச் செய்பவர். விதியாக முன் திட்டமிடப்பட்டுள்ளதை நிறைவேற்றுபவர். எல்லோரது*

முடிவையும் ஏற்படுத்தும் மிருத்யுவையும் பிரளய காலத்தில் முடிவுக்குட்படச் செய்பவர்.[1] (நா. 303) (537)

महावराहो गोविन्दः सुषेणः कनकाङ्गदी।
गुह्यो गभीरो गहनो गुप्तश्चक्रगदाधरः ॥ ८९ ॥

மஹாவராஹோ கோவிந்த: ஸுஷேண: கநகாங்கதீ.
குஹ்யோ கபீரோ கஹநோ குப்தஶ் சக்ரகதாதர: 89.

538. மஹாவராஹ: - பெரும் பன்றி வடிவினர்.

விரிந்த பூமியைத் தாங்குவதற்காகப் பெரும் பன்றிவடிவை ஏற்றவர். (538)

539. கோவிந்த: - மந்திரங்களால் உணரத்தக்கவர்.

வேதம் முதலியவற்றிலுள்ள மந்திரங்களாலும் வேதத்தின் கடைப்பகுதிகளான உபநிடதங்களின் வாக்கியங்களாலும் உணர்ந்து அடையப் பெறுபவர் (நா. 187) மஹாவராஹராகி நீரில் மூழ்கிய பூமியைத் தேடிப் பெற்றவர். வ்யூஹங்களில் நான்காமவர். (ப. 25) (539)

540. ஸுஷேண: - நல்ல ஸேனைகள் உள்ளவர்.

ஆதித்யர்கள் 12, விச்வேதேவர்கள் 10, வஸுக்கள் 8, துஷிதர்கள் 26, ஆபாஸ்வரர்கள் 64, மருத்துக்கள் 49 மஹாராஜிகர்கள் 30, ஸாத்தியர்கள் 12, ருத்திரர்கள் 11, என 9 கணங்கள் கொண்ட நல்ல ஸேனைகள் கொண்டவர். (நா. 125)

ஸம்ஸாரிகளையும் முக்தர்களையும் நித்ய ஸூரிகளையும் வசப்படுத்த ஸேனை போன்று தொடர்ந்து அணிவகுத்து வரும் மந்திரங்களுடன் கூடியவர். மஹாவராஹராக ஹிரண்யாக்ஷனை நன்கு முற்றுகையிட்டவர். (540)

541. கநகாங்கதீ - தங்கத் தோள்வளைகளுள்ளவர்.

தோள்வளை, கேயூரம், கிரீடம் முதலிய வீரர்களின் ஆபரணம். தங்கத்தாலான பளபளக்கும் தோள்வளைகளைத் தோள்களில் பூண்டவர். (நா. 140) (541)

1. मृत्युर्यस्योपसेचनं। (कठ २. २५) मृत्युमृत्युं नमाम्यहम् (नृसिंह)

542. குஹ்ய: - இதயக் குகையில் உள்ளவர்.[1]

வெளியில் உள்ள பொருள்களைக் கண்டு மட்டும் பழகிய பொறிகளுக்கும் மனத்திற்கும் எட்டாதவர். உள்நோக்கால் உணரத்தக்கவர். அவ்வழியைப் போதிக்கவல்லதும் ரஹஸ்யமாகப் பாதுகாக்கப் பெற்றதுமான உபநிஷத் என்ற வேதப் பகுதியைத் தக்க குருவின் மூலம் உபதேசமாகப் பெற்று அவர் காட்டிய வழியில் உணரக்கூடியவர். இருளடைந்த குகையில் உள் நுழைகையில் வெளியில் வெளிச்சத்திற்குப் பழக்கப்பட்ட கண்களுக்கு ஒன்றும் புலப்படாது. சிறிது அங்கேயே தங்கி வெளி வெளிச்சத்தில் நாட்டமின்றி கருத்து ஊன்றிக் காணத் தொடங்கினால் சிறிது சிறிதாக அங்குள்ள பொருள்கள் புலப்படும், அப்படி வெளி நோக்கற்ற கண்கள் அகமாகிய இதயக் குகையில் காண்கிற ரஹஸ்யமாய் மறைந்திருப்பவர். பிறர் காட்டி உணர்த்த முடியா ததால் தானே காட்டி உணர்த்துபவர். *(542)*

543. கபீர: - ஆழம் காண முடியாதவர்.

ஞானம் பலம் முதலிய ஆறு குணங்கள் நிரம்பியவராதலால் அவரது தன்மை இத்தகையது என முழுவதும் அறிய முடியாதவர். ஆழம் மிகுந்திருந்தும் தெள்ளிய நீரோடையில் அடித்தலம் அருகில் தெரிவதுபோல் அவரைப்பற்றி எல்லாம் அறிய முடியுமாப் போல் இருந்தாலும் ஆழம் காண முடியாதவர். அருகில் இருப்பது போல் தெரிந்தாலும் தூரத்தில் இருப்பவர். *(543)*

544. கஹந: - நெருங்க முடியாதவர்.

அடர்த்தி மிக்க காட்டினுள் எளிதில் நுழையமுடியாது. அதுபோல் நிர்குணமான பரம்பொருளிடம் ஞானம், வைராக்யம், பக்தி முதலிய ஸாதனங்களைப் பெறுதவர் நெருங்கமுடியாது. காடும், பாதுகாப்பரணும் 'கஹன' என்ற சொல்லின் பொருள். காட்டினுள்ளே, அரணுக்குள்ளே என்ன, எவ்விதம் இருக்கிறது என்றறிய முடியாது. அதுபோல் பரம்பொருளை எப்படி இருக்கிறார்

1. यो वेद निहितं गुहायां (तैत्तिरी २. १) आत्माऽस्य जन्तोर्निहितो गुहायां (कठ १. २ २०) हन्त त इदं प्रवक्ष्यामि गुह्यं ब्रह्म । (कठ २. २. ६) आविः सन्निहितं गुहाचरं नाम । (मुण्डक २. २. १) आत्माऽस्मिन् सन्देह्ये गहने प्रविष्टः । बृहदार ४. ४. १३) गुहाशयं निष्कलमद्वितीयं। (कैवल्य २३)

என்று திட்டவட்டமாக அறியவும் முடியாது. விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மனித உணர்விற்கிடமான மூன்று நிலைகளிலும் உணரப்பெறுகிற பொருள் பற்றிய அறிவுமட்டும் கிட்டும். அந்நிலைகளுக்கு ஸாக்ஷியாக, மூன்று நிலைகளாலும் பாதிப்புறுத ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்ட அந்த மூன்று நிலைகளிலும் உணர்வைத் தந்த கரணங்களால் இயலாது (நா. 382) இவரை இப்படிப் பிரித்துப் பார்க்கின்ற வலிவுள்ளவர்களால் மட்டும் உணரக் கூடியவர். (544)

545. குப்த: - மறைக்கப்பெற்றவர்.

வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டக்கூடியதையே மற்ற பொறிகள் புலப்படுத்தும். இவர் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதவர். சிற்றறிவால் அறிந்ததையே வாய் பேசும். மனம் எண்ணும். சிற்றறிவிற்கப்பாற்பட்ட முழு வடிவத்தை வாயும் மனமும் விளக்காது. உபநிடதங்களும் பூர்வாசாரியர்களும் மறை பொருளாகவே உணர்த்துகின்றனர். சிரத்தையுடன் குருவை அணுகி அவரருள் பெற்றுச் சாதனையில் தொடர்ந்து ஈடுபடுவனுக்கே மறைபொருள் துலங்கும். அப்படி எளிதில் துலங்காதவாறு மறைக்கப் பெற்றவர். (545)

546. சக்ரகதாதர: - சக்கிரம் கதை ஏந்தியவர்.

பகவானுக்கு ஐந்து ஆயுதங்கள். சங்கம் சக்கிரம், கதை, வில், கத்தி என. பாஞ்சஜன்யம், ஸுதர்சனம், கௌமோதகீ, சார்ங்கம் நந்தகம் என முறையே அந்த ஐந்திற்கும் பெயர். தாமஸ அஹங்கார தத்துவம் சங்காகவும், மனஸ் தத்துவம் சக்கிரமாகவும், புத்தி தத்வம் கதையாகவும், ராஜஸாஹங்கார தத்துவம் வில்லாகவும், ஞான தத்துவம் கத்தியாகவும் இறைவனால் அமைக்கப்பெற்றது என்று விஷ்ணு புராணம் (1. 22. 69-74) கூறும். 'புத்திரப்யாஸ்தே கதாரூபேண மாதவே. பூதாதிமிந்த்ரியாதிம் ச த்விதாஹங்காரமீச்வர: பிபர்த்தி சங்க ரூபேண சார்ங்க ரூபேண ச ஸ்திதம். சக்ரஸ்வரூபம் ச மநோ தத்தே விஷ்ணு: கரே ஸ்த்திதம். பிபர்த்தி யஶ் சாஸிரத்னம் அச்யுதோ அத்யந்த நிர்மலம். வித்யாமயம் து தத் ஜ்ஞானம் அவித்யாகோஶஸம்ஸ்திதம்.' மனஸ், புத்தி, அஹங்காரம், வித்யை, அவித்யை என்பவை தத்துவங்கள் (நா. 8, 111) வித்யை எனும் தத்துவம் ஜீவன் பெறத்தக்க சிறுஅறிவு. ஈசனின் ஸர்வஜ்ஞ நிலையாகிய பேரறிவிலிருந்தும் மாறுபட்டது. அவித்யை என்பது தன்னையும் (உலகையும்) பரம்பொருளையும்

*பிரித்துப் பார்க்கச் செய்யும் அஜ்ஞானம். வித்யை எனும் கத்திக்கு உறையாகும். வித்யையும் அவித்யையும் மாயா தத்துவம் என்றும் வித்யா தத்துவமென்றும் சாக்த நூல்கள் கூறும். இப்படி மனஸ் தத்துவமான சக்கிரத்தையும் புத்தி தத்துவமான கதையையும் இரு கைகளில் ஏந்தியவர். (546)*

**वेधाः स्वाङ्गोऽजितः कृष्णो दृढस्सङ्कर्षणोऽच्युतः ।**
**वरुणो वारुणो वृक्षः पुष्कराक्षो महामनाः ॥ ९० ॥**

**வேதாஸ் ஸ்வாங்கோऽஜித: க்ருஷ்ணோ த்ருடஸ்ஸங்கர்ஷணோऽச்யுத:**
**வருணோ வாருணோ வ்ருக்ஷ: புஷ்கராக்ஷோ மஹாமநா: 90**

**547. வேதா: - படைப்பவர்.**

*ரஜோ குணத்தைக் கையாண்டு உலகைப் படைக்கிற பிரும்மாவாயிருப்பவர். ஒழுங்கு முறையுடன் அததனை அதனதனிடத்தில் வைப்பவர். அளவில்லாததும் மங்களகரமுமான பெருமைகளைப் பக்தர்களுக்கு வழங்குபவர். (547)*

**548. ஸ்வாங்க: - தனக்குத்தானே உதவிக்கொள்பவர்.**

*படைப்பிலோ மற்ற பணிகளிலோ பிறர் உதவி எதிர்பாராமல் தனக்குத்தானே கருவியாகி உதவிக்கொள்பவர். இவருக்குத் துணை அல்லது ஸாதனம் தேவை இல்லை. அகில உலக அரசராக விளங்குபவராதலால் அரசணிகளான வெண்குடை, வெண்சாமரம் முதலிய சிறப்பிலக்கணங்களை உடையவர். (548)*

**549. அஜித: - வெல்லப்படாதவர்.**

*அவர் தோன்றியுள்ள பல நிலைகளிலும் யாராலும் வெல்லப்படாதவர். எதனையும் எதிர்பார்க்காதவரானதால் தடையோ குறையோ இல்லாதவர். சாக்ஷுஷம் எனும் ஆறுவது மன்வந்தரத்தில் வைராஜர் என்பவருக்கு ஸம்பூதி என்பவளிடம் தோன்றியவர் அஜிதர் எனும் அவதாரம். அந்த மன்வந்தரத்தின் காப்பாளர். திருப்பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிருதத்தைச் சாதித்துத் தந்தவர் இவரே, (பாகவதம் 8, 5, 9).*

**550. க்ருஷ்ண: - வியாஸர்.**

*இரு தீவுகளுக்கிடையே பராசரருக்கு ஸத்யவதியிடம் பிறந்தவர். கருமை நிறம் கொண்டவரானதால் க்ருஷ்ண:. பின் வேதத்தை வகுத்தமையால் வியாஸரானார். (நா. 57) கருநிறம்*

கொண்டவை கண்ணன் முதலிய அவதாரங்கள். கலப்பை நுனியில் பொறுத்தப்பட்ட கரு நிறமுள்ள இரும்புப்பட்டை, பூமியைக் கிளறப்பயன்படுவது. அதுபோல் கறுத்தவர். ஏர் நுனியில் பொறுத்தப் பெறும் கறுத்த இரும்புப்பட்டையாகிப் பூமியைக் கிளறி உழுது செழிப்பை உண்டாக்குபவர். 'க்ருஷாமி மேதிநீம் பார்த்த பூத்வா க்ருஷ்ணாயஸோ மஹாந். க்ருஷ்ணோ வர்ணஸ்ச மே யஸ்மாத் தேந க்ருஷ்ணோऽஹமர்ஜுந. (பாரதம் - சாந்தி. 143-49) (550)

551. த்ருட: - தன் நிலையில் உறுதியுடன் நிற்பவர்.

*தன் நிலையிலோ உருவமைப்பிலோ செயலாற்றலிலோ நழுவாமல் உறுதியுடன் நிற்பவர். அடியார்கள் காணும்படி உறுதியுடன் புலனாகக்கூடிய வடிவமைப்பு கொண்டவர். (551)*

552. ஸங்கர்ஷண: - அச்யுத: - தன்னிலை நழுவாமல் இழுப்பவர்.

*இரு பதங்கள் கொண்ட நாமம். ஸங்கர்ஷணாய அச்யுதாய நம:. ஸம்ஹார வேளையில் உயிரினத்தைத் தன்பால் இழுத்துக்கொள்பவர் - ஸங்கர்ஷண: (நா. 138) தன் நிலையிலிருந்து நழுவாதவர் - அச்யுத:. (100 318) ஸங்கர்ஷணர் என்ற வ்யூஹநிலையிலுள்ளவர். (ப. 25) ஸங்கர்ஷண: அச்யுத: என்று பட்டர் உரைப்படி இரு நாமங்கள்.*

*த்ருட: ஸங்கர்ஷண: அச்யுத: என்ற மூன்று நாமத்தொடர் கவனத்திற்கு உகந்தது. பீஷ்மர் மிக அழகாக இந்தத்தொடரை அமைத்திருக்கிறார். (552)*

553. வருண: - வருணர்.

*மாலைக்கதிரவன் வருணர் எனப்படுவார். சூரியன் மாலையில் தன் ஒளிக்கதிர்களையும் வெப்பத்தையும் சுருக்கித் தன்னிடம் அடக்கிக்கொள்வதால் வருணனாகிறார் (ஸம்வ்ருணோதி). (காலையில் உதிக்கும் சூரியன் மித்ரர்; நண்பனைப் போன்று தட்டி எழுப்பி ஊக்குவிப்பவர். பகலில் துண்டாடிச் சிதைக்க முடியாத செங்கதிரோன் - ஆதித்யர்). மாலையில் ஸந்தியாவந்தனத்தின் போது ஸூர்யனை வருணராகத் தியானிப்பது வழக்கம்.[1] மூவுலகையும் சூழ்ந்திருப்பவர்.[2] (553)*

554. வாருண: - வருணனின் குமாரர்.

*வருணனின் பிள்ளைகள் வஸிஷ்டர், அகஸ்த்யர், வால்மீகி பிருகு முதலானோர். அவர்கள் வடிவில் இருப்பவர். மித்ரன்,*

1. इमं मे वरुण श्रुधी हवं (तै. सं. २. १. ११)
2. येनावृतं खं च दिवं महीं च । (तै. आ. १०. १)

வருணன் என்ற இரு தேவதைகளின் வீர்யத்தில் ஊர்வசியிடம் பிறந்தவர் வஸிஷ்டரும், அகத்தியரும். பிரும்மாவின் புதல்வராகப் பிறந்த வஸிஷ்டர் சாபத்தால் ஊர்வசியிடம் மறு பிறப்பு பெற்றார். வருணனுக்குச் சர்ஷணீ என்பவளிடம் பிறந்தவர் வால்மீகியும் பிருகுவும். பகவானுக்குத் தான் உடைமை என்று தன்னை வரித்து கொண்டவர்களிடம் வசிப்பவர். *(554)*

555. வ்ருக்ஷ: - மரம்போல் அசையாதவர்.

*காற்றில்லாத இடத்தில் உள்ள மரம்போல் ஆடாமல் அசையாமல் மாறுபாடில்லாமல் இருப்பவர்.*[1] நல்லோர்களுக்கு நிழல்தரும் மரம் போல் ஓய்வு தருபவர். நல்ல பலனைப் பழமாகத் தரும் மரமாய் இருப்பவர். *(555)*

556. புஷ்கராக்ஷ: - இதயத்தாமரையில் பரவி நிற்பவர்.

தியானம் செய்ததும் இதயமாகிய தாமரையில் தன் முழு ஸ்வரூபத்துடன் விளங்குபவர். அருள் மழை பொழிந்து போஷிக்கின்ற கண்கள் உள்ளவர். நிறைவுற்றது புஷ்கரம். (புஷ்கலம்). நிறைந்தநோக்குள்ள கண்கள் உள்ளவர். (நா. 40) (556)

557. மஹாமநா: - பெருமனம் படைத்தவர்.

பகவானது செயல்முறை அவரது மனத்தின் ஸங்கல்பத்தால் மட்டும் நிகழ்கிறது. படைப்பு முதலியவை அனைத்தும் மனத்தால் நிகழ்வதால் பெருமனம் - மிகவும் உதாரமான மனப்பான்மை கொண்டவர். *(557)*

भगवान्भगहाऽऽनन्दी वनमाली हलायुधः ।
आदित्यो ज्योतिरादित्यः सहिष्णुर्गतिसत्तमः ॥ ९१ ॥

பகவான் பகஹாऽऽநந்தீ வநமாலீ ஹலாயுத:
ஆதித்யோ ஜ்யோதிராதித்யஸ் ஸஹிஷ்ணுர் கதிஸத்தம: 91

558. பகவான் - பகங்கள் உள்ளவர்.

பேராளுமை, வீர்யம், கீர்த்தி, செல்வம், பேரறிவு, வைராக்கியம் என்ற ஆறும் பகம் எனப்படும். பேராளுமை

1. वृक्ष इव स्तब्धो दिवि तिष्ठति । (तै. आ. १०. १२)

என்பது எல்லா விஷயங்களிலும் எல்லா வகையிலும் ஆட்படுத்தும் தன்மை. எல்லோருக்கும் மேலான அதிபதியாக விளங்குவது. வீர்யம் என்பது பெரும் எதிரிகளையும் எதிர்த்து வெல்கிற சக்தி. கீர்த்தி - எல்லோராலும் புகழப்படுகிற தன்மை. செல்வம் - செல்வத்தின் தேவதையான லக்ஷ்மியிலிருந்து தொடங்கிச் செல்வத்தால் பெறத்தக்க அனைத்து நிறைவுகள். பேரறிவு - எல்லாவற்றையும் எக்காலும் அறிந்துணர்ந்திருப்பது. வைராக்கியம் - பற்றற்ற நிலை.[1] இவை எப்போதும் ஈசனிடம் நிரம்பி நிற்பதால் பகவான். உற்பத்தி, ஒடுக்கம், செல்வச் சேர்க்கை, ஆபத்து, அறிவு, அறியாமை என்ற உலகின் ஆறு நிலைகளையும் நன்கு உணர்ந்தவர் செல்வம், பொருள் ஈட்டுவதில் உள்ள நாட்டம், பெருமை, வீர்யம், புகழ் இவை அனைத்தையும் பெற்றவர். தீமை சிறிதும் கலவாததும் நன்மைமிக்கதுமன மங்களமான வடிவமைந்தவர். (558)

559. பகஹா - பகத்தை அழிப்பவர்.

பகம் எனப்படுகிற முன் செய்த புண்யத்தால் விளைந்த செல்வம் செல்வாக்கு முதலியவற்றைப் பிரளய காலத்தில் செயலற்றதாக்குபவர். செல்வம் முதலியவைகளைத் தானே சென்றடைபவர். (559)

560. ஆநந்தீ - ஆனந்தமுள்ளவர்.

ஆனந்தமே வடிவானவரானதால் என்றும் அகலாத ஆனந்தத்துடன் கூடியவர். நந்தீ என்று ஸ்ரீபட்டர் பதத்தைப் பிரிக்கிறார். நந்தகோபரைத் தந்தையாகப் பெற்றவர். மதுவை அருந்தி கோபிகளுடன் கூடி ஆனந்திக்கிற பலராமரானவர். (560)

561. வநமாலீ - வநமாலையுள்ளவர்.

வநமாலை - காட்டில் பூத்த பூக்களாலான மாலை. (வநம் - அடர்த்தியுள்ள தாமரை). தாமரைப்பூவாலான மாலை. முழங்கால் வரை நீண்டதும், எல்லாப் பருவங்களிலும் பூக்கக்கூடிய பூக்களாலானதும், நடுவில் கடம்பப்பூவாலான குஞ்சம்

1. न तस्येशे कश्चन (तै. आ. १० १०) उग्रं वीरं महाविष्णुं (नृसिंहपूर्व) तस्य नाम महद्यशः (तै.आ.१०.१) श्रियं लक्ष्मीमौपलामम्बिकां गां (नृसिंहपूर्व) यः सर्वज्ञः सर्ववित् यस्य ज्ञानमयं तपः (मुण्डक १.१.९) स वा अयमात्मा ब्रह्म अकाममयः (बृहदार ४.४.५)

கொண்டதுமான வநமாலே. ஐந்து நிறங்களுள்ள பூக்களே அடுக்கடுக்காக கோர்த்து முழங்கால் வரை தொங்கும் வைஜயந்தீ என்பதும் வநமாலேயே. இந்த ஐந்து நிறப்பூக்கள் ஐந்து பூத தன்மாத்திரங்களின் தொகுப்பைக் குறிக்கும். இந்த வநமாலேயை எப்போதும் தரிப்பவர். (561)

562. ஹலாயுத: - கலப்பையை ஆயுதமாகக் கொண்டவர்.

வஸுதேவருக்கு ரோஹிணியிடம் பிறந்தவரும் கண்ணனின் மூத்த சகோதரரும் கலப்பையை ஆயுதமாகக் கொண்ட வருமான பலராமராயிருப்பவர். கலப்பையை ஆயுதமாகக் கையில் ஏந்திய பலராமராக வழிபட உழவு நல்ல பலனளிக்கும். (562)

563. ஆதித்ய: - அதிதியின் பிள்ளே.

அதிதியின் பிள்ளேகளாகப் பிறந்த பன்னிருவரில் கடைசியான வாமனராயிருப்பவர். (நா. 39) அதிதியே தேவகியானுள் என்று புராணம் கூறும். அந்த தேவகியின் மகளுகப் பிறந்த கண்ணன். (நா. 39) (563)

564. ஜ்யோதிராதித்ய: - ஒளி மண்டலமான சூரியன்.

ஒளி மண்டலமான ஸூர்யனின் அந்தர்யாமி. ஒளி மண்டலமான ஸூர்யன் எனும் தேவதை. ஒளி வடிவில் வந்த அதிதியின் பிள்ளே - வாமனர். (நா. 39) (564)

565. ஸஹிஷ்ணு: - பொறுப்பவர்.

பூமியைப் போன்று பொறுமை உள்ளவர் என ஸ்ரீராமனே நாரதர் விளக்குகிறுர். க்ஷமயா ப்ருதிவீஸம: (ராமா. 1-1-18) தன்னிடத்தில் பிற பொருளாலும் பிறராலும் ஏற்படும் பாதிப்புகளுக்கு பிரதிச் செயல் புரியாமல் ஏற்பதும் அவற்றைப் பொருட்படுத்தாததும் பொறுமையாகும். சீதம் - உஷ்ணம், ஸுகம் - துக்கம் முதலிய துவந்துவங்களேத் தாங்குபவர். குளிர்ச்சியையும் வெப்பத்தையும் வரவேற்க முடியாத சூழ் நிலேயிலும் அவற்றைப் பொறுத்து ஏற்பது பொறுமையின் அடையாளம். எதிரி சரணடைந்ததும் அவரிழைத்த தவறுகளேப் பொருட்படுத்தாமல் மறந்துவிடுவார். அதிதிக்கும் அவளே ஒத்த கௌஸல்யைக்கும் தேவகிக்கும் பிள்ளேயாகப் பிறந்தமையால்

*அவர்களிடமிருந்து பொறுமை பெற்றதாக அந்த அந்த அவதாரங்களில் காட்டிக்கொள்கிருர். (565)*

566. **கதிஸத்தம: - சென்றடையக்கூடிய சிறந்த இடம்.**

*தவறுகளைப் பொருட்படுத்தாதவரானதால் அவரைச் சென்றடைவது எளிது. தவறுகளை மன்னிப்பதில் உதாஸீனராக இல்லாமல் தன்னை அடைந்தவர் தவறிழைத்தவராயினும் பரிவுடன் அரவணைத்து அவர்களைக் கரையேற்றுபவர். அதனுல் கதி: - சென்றடையத்தக்கவர். கதி: - ஞானம். ஞானமே பெறத்தக்கவைகளில் சிறந்தது. அந்த ஞானமாயிருப்பவர். சென்றடையத்தக்கவர்களில் நித்தியராக நிலைத்தவராயும், மிகவும் நல்லவராயும், மிகச் சிறந்தவராயும், மிகவும் செயல்திறமை கொண்டவராயும் உள்ளவர். ஸத் - நிலைத்திருப்பது, நல்லது, சிறந்தது, சாமர்த்தியம் உள்ளது, பூஜிக்கப் பெற்றது. ஸத்தில் சிறந்தவர் - ஸத்தம:. நம்பிக்கையுடன் சென்றடையத்தக்கவர்களில் சிறந்தவர். (566)*

सुधन्वा खण्डपरशुर्दारुणो द्रविणप्रदः ।
दिविस्पृक् सर्वदृग्व्यासो वाचस्पतिरयोनिजः ॥ ९२ ॥

ஸு॰தந்வா கண்ட பரசுர் தாருணோ த்ரவிணப்ரத:
திவிஸ்ப்ருக் ஸர்வத்ருக் வ்யாஸோ வாசஸ்பதிரயோநிஜ: 92

567. **ஸு॰தந்வா - அழகிய வில்லுள்ளவர்.**

*சார்ங்கமென்ற அழகிய வில்லுள்ளவர். (நா. 181, 546, 857, 996). இந்திரியங்களின் மூல தத்துவத்தை வில்லாகக் கொண்ட பரமன் ஞானேந்திரியங்களையும் கர்மேந்திரியங்களையும் அதில் அம்புகளாக்கிப் பூட்டுபவர். (விஷ்ணு புராணம். 1.22.73) (567).*

568. **கண்டபரசு: - துண்டாடும் கோடரியுள்ளவர்.**

*இருபத்தோரு தடவை க்ஷத்திரியர்களைத் துண்டாடிய கோடரி கொண்டவர் பரசுராமர். சிவபெருமானும் கோடரியை ஆயுதமாக ஏந்தியவர். ஸத்தியத்தில் நிலைத்தவராயிருக்கும் தன்மையையே அவர் கோடரியாக்கினுர். பரசு: ஸத்ய நிஷ்டதா. (சிவாகமம்) கஜாஸு॰ரனை சிவபெருமான் கோடரியால் வெட்டும்போது கோடரியின் நுனி தெறித்து விழுந்தது. அப்படிக் குறையுற்ற கோடரியைப் பெருமையுடன் அடையாளமாகக் கொண்ட*

சிவபெருமான். பரசுராமரும் சிவபெருமானுமாக இருப்பவர். ருத்திரருக்கும் நரருக்கும் நடந்த போரில் ருத்திரர் பேரில் எறிந்த கோடரியின் நுனி முறிந்தமையால் கண்டபரசு:. ஸுதந்வா அகண்ட பரசு: எனப் பதம் பிரிப்பதுண்டு. துண்டாடப் பெறாத கோடரியுள்ளவர். (568).

569. தாருண: – கொடியவர்.

கோடரியைக் கையில் ஏந்திய நிலையில் கொடியவர். நல்வழியை வெறுப்பவர்களிடம் கொடியவராக நடந்துகொள்பவர். உள் - வெளி எதிரிகளைப் பிளந்து மாய்ப்பவர். (569).

570 த்ரவிணப்ரத: – செல்வமளிப்பவர்.

கொடியவராயினும் சிறந்த பொருளை நாடித் தம்மை அடைபவருக்கு விரும்பிய செல்வத்தை அளிப்பவர். உடனே பயன் படத்தக்கத் திரவமாக உள்ள செல்வம் திரவிணம். அதனைத் தருபவர். இடது கையில் தத்துவ சாஸ்த்ர நூல்களையும் வலது கையில் ஞான முத்திரையையும் ஏந்திய வியாஸராக சாஸ்திரஜ்ஞானச் செல்வத்தை நாடிய சீடர்களுக்கு அளிப்பவர். (570).

571. திவிஸ்ப்ருக் – வானைத் தொட்டவர்.

தனது ரஹஸ்யமான அம்ருத மயமான வடிவில் உலகிற்கப்பாற்பட்ட விண்வெளியில் இருப்பவர். தனது கால்பங்கால் உலகமாகி மீதமுள்ள முக்கால்பங்கால் விண்வெளியில் இருப்பவராக வேதம் கூறுகிறது.[1] (நா.534) அபரஜ்ஞானமாகிற உலகியல் பற்றிய அறிவுநூல்களால் அறியப்படாதவராகி பரஜ்ஞானம் தரும் பிரும்ம வித்யையால் உலகிற்கப்பாற்பட்ட பரமபதத்தைத் தொட்டு உணர்த்துபவர். வானத்தைத் தொடுகிற விரிந்த அறிவு பெற்ற வியாஸர். (571)

572. ஸர்வத்ருக் வ்யாஸ: – எல்லாமறிந்த வியாஸர்.

பரவித்யை எனப்பெறும் பிரும்ம வித்யை, அபரவித்யை எனப்பெறும் வேதங்கள், உபவேதங்கள், வேதாங்கங்கள், தர்சனங்கள், இதிஹாஸ புராணங்கள், மற்ற

1. त्रिपादस्यामृतं दिवि। (छान्दोग्य ३. १२. ३)

அறிவுக்களஞ்சியங்களாக விளங்குகிற நூல்கள் இவை எல்லாவற்றிலும் உயரிய நோக்கும் ஆழ்ந்த அறிவும் கொண்டவர் - ஸர்வத்ருக். இவ்வறிவு நூல்கள் எல்லாமே அவரது கண்கள். பேரறிவின் வலிவால் பெற்ற சிற்றறிவின் விளக்கங்களாக அமைந்த நூல்கள் இவை. இந்தக்கண்க்ள் மூலம் உலகில் எந்தப் பொருளைக் கண்டாலும் அவற்றின் உண்மை நிலையும் தோற்றமும் தெளிவாகப் புரியும். அத்தகைய ஞானக்கண்கள் படைத்தவர். அதனுல் எல்லாமான பரதத்துவத்தின் முழுமையைக் கண்டவர்,[1] ஸர்வத்ருக். அத்தகைய பேரறிவைச் சிற்றறிவால் ஏற்கும்படி தமது நூல் தொகுப்புகளால் விளக்கியவர். பரந்த பரதத்துவத்தைப் பற்றிய சிறப்புகளை அதிகாரங்களாகப் பிரித்து விஷய வாரியாகச் சிற்றறிவு ஏற்கக்கூடிய வகையில் தொகுத்துத் தந்தவர் வ்யாஸர். ஸர்வத்ருக்காயும். வியாஸராயும் ஸர்வத்ருக்கான வியாஸராயுமிருப்பவர்.

பராசரருக்கு ஸத்யவதியிடம் குமாரராகப் பிறந்த வியாஸர், ஈசுவரனது ஞானசக்தியின் ஆட்பட்டவராகி, அளவற்ற விரிவு கொண்ட வேதங்களை அவை பயன்படும் வரிசையில் நான்கு வேதங்களாக்கி, வேதவியாஸரானுர். (ப. 10-11) ருக்வேதத்தை 21கிளைகளுள்ளதாகவும், யஜுர்வேதத்தை 101 கிளைகள் உள்ளதாயும், ஸாமவேதத்தை ஆயிரம் கிளைகள் உள்ளதாயும், அதர்வ வேதத்தை ஒன்பது கிளைகள் உள்ளதாயும் அமைத்தார். "ஏக சதம் அத்வர்யுசாகா: ஸஹஸ்ரவர்த்மா ஸாமவேத:, ஏகவிம்சதிதா பாஹ்வ்ருச்யம் நவதா ஆதர்வணோ வேத:" (பதஞ்ஜலியின் மஹாபாஷ்யம் - பஸ்பசாந்ஹிகம்). அப்படி புராணங்களை 18 ஆகப் பிரித்தார்.

வைவஸ்வதமன்வந்தரம் தொடங்கி 27 சதுர் யுகங்கள் முடிந்து, 28வது சதுர் யுகம் இப்போது நடைபெறுகிறது. கிருதயுகத்தில் ஒரே வேதமாயிருந்தவைகளை முதல் துவாபர யுகத்தின் இறுதியில் கலியுகம் தொடங்குமுன் பிரும்மாவே வியாஸராகி நான்கு வேதங்களாக்கிஞர். பின்னர் அடுத்த கலியுகத் தொடக்கத்தில் வைவஸ்வதமனுவே வியாஸராகித் தொகுத்தார். அப்படி 28 சதுர்யுகங்களில் 28 வியாஸர்களாகத் தோன்றியவரும் இந்த விஷ்ணுஸஹஸ்ர நாமத்தைத் தொகுத்துத் தந்த பராசர குமாரரான வியாஸரும் பகவானே. (ப. 11) (விஷ்ணு புராணம். 3, 3, 9, 21)

1. सर्वस्य द्रष्टा (नृसिंहोत्तर २. १)

வரவிருக்கும் கலியுகத் தொடக்கத்தில் துரோணரின் குமாரரான அச்வத்தாமா வியாஸராகித் தொகுப்பார். அவரும் பகவானே.

ஸர்வத்ருக் வியாஸ: என ஸ்ரீ பட்டர் இரு நாமங்களாகப் பொருள் தருகிறார். ஸர்வத்ருக்வியாஸாய நம:, ஸர்வத்ருசே வ்யாஸாய நம:, ஸர்வத்ருசே நம:, வியாஸாய நம:, (572).

573. வாசஸ்பதி: - அயோநிஜ: - கருவகத்திலிருந்து வெளிவராத வாக்கிற்குப்

வாக்கின் நாயகன் வாசஸ்பதி. பிரும்மாவிற்கும் தேவ குருவான பிருஹஸ்பதிக்கும் இது இயற்பெயராகும். வித்யையைக் காப்பவர். வித்யா தேவியான ஸரஸ்வதியின் கணவர் பிரும்மா. அவர் பகவானின் தொப்புளில் தோன்றியவர். தந்தையின் சுக்கிலம் தாயின் கருவறையில் சோணிதத்துடன் சேர்ந்து வளர்ந்து கருவகத்திலிருந்து வெளியானவர் - யோநிஜராவார். பிரும்மா தாமரையில் தோன்றியவரானதால் யோநிஜர் அல்ல, அயோநிஜரான வாக்கின் பதி. வேதம் முதலிய வித்யைகளைப் பகவானிடமிருந்து பெற்றுத் தக்க சிஷ்யர்களுக்குப் போதித்ததால் வாசஸ்பதி - வித்யைகளை ஆள்பவராகிறார். பிரும்மாவே முதல் சதுர்யுகத்தில் வேதங்கள் முதலியவற்றைப் பிரித்துத் தொகுத்தமையால் பிரும்மாவும் ஸர்வத்ருக்வியாஸரே. (நா. 572) இரு பதங்கள் கொண்ட நாமம் இது. வாசஸ்பதயே அயோ நிஜாய நம:.

ஐந்தாம் வேதமாகிய மஹாபாரதத்தைத் தொகுத்தவராதலால் பராசர குமாராகிய வியாஸரே வாசஸ்பதி. ஸாரஸ்வதர் (அபாந்தரதமா:) என்ற ஒன்பதாவது வியாஸர் (ப. 10, 11) பகவானின் வாக்கிலிருந்து தோன்றியவர். (பாரதம் சாந்தி. 349, 39). அதனால் அவர் அயோநிஜர் என இரு நாமங்களாக ஸ்ரீ பட்டரின் உரை. வாசஸ்பதயே நம:, அயோ நிஜாய நம:. (573).

**त्रिसामा सामगः साम निर्वाणं भेषजं भिषक् ।**
**संन्यासकृच्छमः शान्तो निष्ठा शान्तिः परायणम्[1] ॥ ९३ ॥**

த்ரிஸாமா ஸாமகஸ் ஸாம நிர்வாணம் பேஷஜம் பிஷக்
ஸம்ந்யாஸக்ருத் ஶமஶ்ஶாந்தோ நிஷ்டா ஶாந்தி: பராயணம்.[1] 93

1. परायण:- பராயண: என்ற பாடமுண்டு.

574. த்ரிஸாமா - மூன்று ஸாமங்களைக் கொண்டவர்.

வியாஸர் வகுத்துத் தந்த நான்கு வேதங்களில் வேள்விகளில் கூற வேண்டிய தேவதைகளின் துதியை முக்கியமாகக் கொண்டது ஸாமவேதம். இனிய கானமாகப் பாட வேண்டியது. இது பகவானின் விபூதி. "வேதாநாம் ஸாமவேதோ அஸ்மி" (கீதை. 10, 22). அந்த ஸாமவேதத்தில் முக்யமானவை பிருஹத்ஸாம, ரதந்தரஸாம, வாமதேவ்யஸாம என்ற மூன்று ஸாமங்கள். அவை மூன்றும் தேவவ்ரதம் எனப்படுபவை. அந்த மூன்று ஸாமங்களால் ஸாமவேதமறிந்தவர்களால் துதிக்கப்பெறுபவர். (574).

575. ஸாமக: - ஸாமத்தைப் பாடுபவர்.

ஸாமவேத கானத்தைச் செய்பவரும் பகவானே. பரம்பொருளை அனுபவித்து ஆனந்த மேலீட்டால் உலகை மறந்து பிரும்மஞானியாகி பிரும்மத்தை ஸாமமாகப் பாடுபவர் உண்டு[1] அந்த பிரும்மஞானியாயிருப்பவரும் பகவானே. ஸாமவேதத்தை அறிந்து பாடுபவன் எல்லாமறிந்தவன் ஆகிறான்.[2] (575).

576. ஸாம - ஸாமவேதம்.

ஸாமவேதம் இனிமையானதும் மென்மையானதுமாகும். இனிய மென்மையுள்ள இதமான சொல் 'ஸாமம்'. அத்தகைய சொல்லமைப்பு கொண்டதால் இந்த வேதம் ஸாமவேதம். துரியோ தனன் முதலானவருக்கு இதமாக மென்மையாகப் போரிலிருந்து விலகப் பகவான் கூறியது அனைத்தும் ஸாமம் என்ற உபாயமாகும். காரியத்தைச் சாதிக்கக்கூடிய சொல் 'ஸாமம்'.[3] இத்தகைய 'ஸாமம்' ஆக இருப்பவர். (576).

577. நிர்வாணம் - துக்க நீக்க நிலையாயிருப்பவர்.

எல்லா துக்கங்களும் அடங்கிப் பரமானந்தம் மேலிட்ட நிலை நிர்வாணம் ஆகும். வாணம் - உடல். உடலுடனும் அதனால் ஏற்பட்ட 'நான்', 'எனது' என்ற இரு உணர்வுகளுக்குட்பட்டதுடனும் தொடர்பு இருக்கும் வரை

1. इमान्लोकान्कामान्नी कामरूप्यनुसञ्चरन्। एतत्साम गायन्नास्ते। (तैत्तिरीय ३. १०)
2. ऋचो ह यो वेद स वेद देवान् यजूंषि यो वेद स वेद यज्ञान्। सामानि यो वेद स वेद सर्वम्।
3. यत्खलु साधु तत्सामेत्याचक्षते। (छान्दोग्य २. १. १)

துக்கமே முடிவானதாக இருக்கும். உடலுடன் தொடர்பற்ற நிலையில் பற்றுகள் நீங்கி, துக்கத்தின் தோற்றுவாய்கள் அடைபட்டு, இயல்பாக உள்ள ஆத்மானந்தம் அனுபவத்திற்கு வரும்.[1] இதனை மோக்ஷம் என்பர். புண்யம், பாபம் என்ற வினைத்தொடர்பு நீங்கி மறு பிறப்பிற்கான காரணங்கள் விலகி, வெள்ளரிக்காய் கொடியிலிருந்து விடுபடுவதுபோல் இருக்குமிடத்திலேயே பிடிப்பு நீங்கி, சாந்தியுடன் இருப்பதே மோக்ஷம். "அபுண்ய புண்யோபரமே யம் புநர்பவ நிர்ப்பயா:. சாந்தாஸ் ஸம்ந்யாஸிநோ யாந்தி தஸ்மை மோக்ஷாத்மநே நம:" *(பாரதம். 11, 47, 56)* "அபுண்ய புண்யோபரமே க்ஷீணேசேஷாப்திஹேதவ:. யத்ர கத்வா ந சோசந்தி தத் விஷ்ணோ: பரமம் பதம்". *(விஷ்ணு புராணம். 2, 8, 12).* *காற்று கூட வீசாத ஏகாந்தம் நிர்வாணம். ஆடை முதலிய மறைக்க கூடியவை அகன்ற நிலை நிர்வாணம். ஆத்மாவை மறைக்கக்கூடிய தனைத்தும் அகன்று காற்று கூடத் தனிப் பொருளாக உணரப்பெறுத ஏகாந்த நிலையான ஆத்மானந்த நிலை நிர்வாணமாகும். அது பரமனே. (577).*

578. பேஷஜம் - இதமான மருந்து.

*ஸம்ஸாரம் எனும் கொடும் நோய்க்கு இது இதமான மருந்து, நிர்வாணமெனும் ஆனந்த நிலையை உண்டாக்கும் நல்மருந்து, பரிவுடன் மென்மையுடன் தடவி வேதனையைத் தணிப்பதுபோல் இதமாயும் மென்மையுடனும் உள்ள மருந்து. (578).*

579. பிஷக் - வைத்தியர்.

*ஸம்ஸார பயத்தை நீக்கவல்ல மருந்தாக பிரும்மவித்யையை கீதை முதலியவற்றின் உபதேசத்தின் மூலம் அளித்த வைத்தியர் பகவான்.*[2] நோயறிந்து நோய் நீங்கும் வழி அறிந்து முறைப்படி ஹிதமாக மருத்துவம் புரிபவர்போல், சிஷ்யனின் அறியாமையின் தரமறிந்தும் அறிவின் தரமறிந்தும் ஹிதமாக பரஜ்ஞானம் வரும்படி உபதேசித்து ஸம்ஸார நோயைத் தீர்க்கும் வைத்தியர். *(நா. 164) நிர்வாணம் பேஷஜம் பிஷக் என்ற சொற்றொடர் நோயுற்றவர் நோய் நீங்குவதற்காக ஜபிக்கக்கூடிய மந்திரம். (579).*

---

1. अशरीरमलोहितं शुभ्रं (प्रश्न ४. १०)
2. भिषक्तमं त्वा भिषजां शृणोमि । (ऋ. सं. २. ३३. ४) प्रथमो दैव्यो भिषक् । (तै. सं. ४. ५. १)

**580. ஸம்ந்யாஸக்ருத் - ஸன்யாஸத்தை அமைத்தவர்.**

நிர்வாணம் (நா. 577) பெறுவதற்கு ஏற்ற உபாயமான ஸன்யாஸ ஆசிரமத்தை நான்காவது ஆசிரமமாக குடீசகர், பஹூதகர், ஹம்ஸர், பரம ஹம்ஸர் எனப் பல வகைகளில் அமைத்துத் தந்தவர். பிரும்மசரியம், கிருஹஸ்தாசிரமம், வானப்ரஸ்தம் என்ற மூன்றையும் அவரே தான் ஏற்படுத்தினுர். எனினும் ஸன்யாஸாச்ரமம் ஞானம் பெற சிறந்த மார்க்கம் என்று பகவானுக்கு அதில் ஆதரவு அதிகமுண்டு. ஈசனிடத்தில் எல்லாப் பொறுப்புகளையும் ஒப்படைத்துத் தான் பற்றுகளிலிருந்து ஓய்வு பெறுவதும் ஸன்யாஸமே, அதற்கு வழி காட்டுபவர் அவரே. (580).

**581. ஶம: - மனவடக்கமுண்டாக்குபவர்.**

ஸன்யாஸ ஆசிரமத்திற்கு இன்றியமையாததும் ஆத்ம ஞானத்திற்கு உரியதுமான சாதனம் - சமமாகும். பிரும்ம வித்யை பற்றிய நூலறிவு பெற்றுப் பின் புலனடக்கம் பெற்று ஆத்ம ஸ்வரூபத்தில் மனம் பதிந்திருப்பது சமம் எனப்படும்.[1] ஸன்யாஸிக்கு இது முக்கியமானது. பிரும்மசாரிக்குக் குரு சொன்னபடி கேட்பதும், கிருஹஸ்தனுக்குத் தானமும், வானப்பிரஸ்தனுக்கு கர்மேந்திரியங்களின் அடக்கமும், ஸன்யாஸிக்கு சமமும் முக்கியமானவை. பிரளய காலத்தில் எல்லா உயிரினங்களையும் தன்னிடம் அடங்கும்படி செய்பவர். மனவடக்கமே சமம். காமம், குரோதம் முதலியவை ஏற்படாமல் மனமடங்கும்படி செய்பவர். (581).

**582. ஶாந்த: - மனமடங்கியவர்.**

பொங்கி எழத்தக்க சூழ்நிலையிலும், ஞானியின் சிறந்த லக்ஷணமான மனவடக்கத்தால் ஏற்பட்ட அமைதி இயல்பாக அமைந்தவர். அவர் எதிரில் மற்றவரும் அமைதி பெறுவர்; துவேஷம், மனக்கொதிப்பு நீங்கப்பெறுவர்.[2] (582).

**583. நிஷ்ட்டா - பெருநிலையாயிருப்பவர்.**

மனமடங்கிப் பற்றற்ற நிலையிலும் ஸமாதி நிலையிலும்

---

1. विप्राणं विनयो ह्येष शमः प्राकृत उच्यते। (मांडूक्य अलात ८६)
2. निष्कलं निष्क्रियं शान्तं (श्वेताश्व ६. १९) शान्तमजरममृतं (प्रश्न ५. ७) तद्यच्छेच्छान्त आत्मनि। (कठ १. ३. १३)

எல்லாவற்றையும் மறந்து ஆத்ம சுகத்தையே அனுபவிக்கிற பெருநிலை அவரே. பிரளயத்தில் எல்லாம் ஒருங்கே லயித்து நிலைபெறும் இடமும் அவரே. (583).

584. ஶாந்தி: - அமைதியானவர்.

மனமடங்கிப் பற்றற்றுப் பெருநிலைபெற்றவர் பெறும் அமைதியும் அவரே.[1] ஆனந்தமான பரம்பொருள் அமைதியே வடிவானது. இதுகாறும் அறியாமையால் ஏற்பட்டிருந்த பயம், சோகம், குழப்பம் முதலியவை நீங்கிய நிலை. அது ஞான ஸ்வரூபமான பரம்பொருளே. (584).

585. பராயணம் - சிறந்த சேருமிடம்.

பிறப்பும் இறப்பும் என்று திரும்பி வராதவாறு நித்யானந்தம் நிறைந்ததும் மேலாக அடையவேண்டியதுமான இடம் அது. பரமம் ய: பராயணம் (சு. 15) அதனைத் தவிர வேறு அடையவேண்டிய இடம் இல்லை.[2] ஸாதன பக்தி மூலம் முக்கியமான பரபக்தியை அடைவதற்கான சிறந்த வழி அவரது அருளால் மட்டுமே புலப்படும். (ப. 12-19) மனமடங்க 'ஸன்யாஸக்ருத் சமச்சாந்தோ நிஷ்ட்டா சாந்தி: பராயணம்' என்பது ஜபிக்கத்தக்கது. (585).

शुभाङ्गः शान्तिदः स्रष्टा कुमुदः कुवलेशयः ।
गोहितो गोपतिर्गोप्ता वृषभाक्षो वृषप्रियः ॥ ९४ ॥

ஶுபாங்கஶ் ஶாந்தித: ஸ்ரஷ்டா குமுத: குவலேஶய:
கோஹிதோ கோபதிர் கோப்தா வ்ருஷபாக்ஷோ வ்ருஷப்ரிய: 94

586. ஶுபாங்க: - அழகிய வடிவமைப்புள்ளவர்.

ராமனாக, கிருஷ்ணனாக, லக்ஷ்மீ நாராயணனாகத் தோன்றும்போது மனத்தையும் கண் முதலிய ஞானேந்திரியங்களையும் ஈர்க்கத்தக்க வடிவழகு கொண்டவர். முழங்கால் வரை நீண்டகைகள், விரிந்து விண் என்று மேடிட்டு நிமிர்ந்த மார்பகம், சதைகளில் மறைந்த தோள்பட்டை, சங்குபோன்ற கழுத்து, என்றவாறு ராமனின் அழகை நாரதரும்

1. तेषां शान्तिः शाश्वती नेतरेषाम् । (कठ २. २. १३)
2. आकाशो ह्येवैभ्यो ज्यायानाकाशः परायणम् । (छान्दोग्य १. ९)

*(1,1,9-11) ஆஞ்சநேயரும் (5-95, 8-20) அனுபவித்துச் சொல்கிறார்கள். (ராமாயணம்) இவரது கருணையால், யோகத்தின் எட்டு அங்கங்களும் நன்கு மங்களமாக அமையக்கூடுமானதால் இவர் சுபாங்க:. (586).*

587. ஶாந்தித: - அமைதி தருபவர்.

*தனது அழகிய வடிவைக் காட்டி விருப்பும் வெறுப்புமற்ற நிலையை உணர்த்துகிற மன அமைதி தருபவர். மிகவும் மேலான சாந்தி பகவானுடன் இணைந்திருப்பதால் மட்டுமே கிட்டும். அதுவும் அவரருளால்தான் பெற முடியும். அந்த சாந்தியை அருள்பவர்.*[1] *(587).*

588. ஸ்ரஷ்டா - படைப்பவர்.

*முன்வினைப்பயனுக உடற்கூட்டைப் பெறவிருப்பவர்களை மீண்டும் மீண்டும் படைப்பவர். படைப்பிலிருந்தும் ஓய்வு பெற்றவராகப் பல நாட்கள் தனித்திருந்து மறுபடி படைக்கத் தொடங்கியவர்*[2]. *(588).*

589. குமுத: - பூமியில் மகிழ்பவர்.

*பூமி பகவானது பிரிய பத்தினி. அவளிடம் மகிழ்பவர். பூமியில் ராமரும், கிருஷ்ணருமாகத் தோன்றித் தான் நடத்திய லீலைகளால் தானே மகிழ்பவர். பூமியில் பிரும்மா முதல் சிறுபுழு வரை அனைவரையும் வாழ வைத்து அவரவர்க்குரிய போகங்களை அளித்து மகிழ்பவர். (589).*

590. குவலேசய: - பூமியைச் சூழ்ந்த நீரில் படுப்பவர்.

*பூமியைக் கடல் சூழ்ந்துள்ளது. காரியத்தைக் காரணம் சூழ்ந்து நிற்கும். ஜலத்திலிருந்து பூமி தோன்றிற்று.*[3] *அதனுல் பூமியைச் சுற்றி ஜலம் உள்ளது. அதில் படுத்திருப்பவர். குவலம் - பாம்பு. பாம்புகள் வயிற்றால் பூமியை அணைத்து நகரும். அத்தகைய பாம்பரசனின் மடியில் தூங்குபவர். குவலம் - இலந்தைப் பழம்.*

---

1. तमीशानं वरदं देवमीड्यं निचाय्यैनां शान्तिमत्यन्तमेति।
विश्वस्यैकं परिवेष्टितारं ज्ञात्वा शिवं शान्तिमत्यन्तमेति। (श्वेताश्व ४. ११. १४)
2. विश्वस्य स्रष्टारं अनेकरूपं (श्वेताश्व ४. १४)
3. अद्भ्यः पृथिवी (तैत्तिरीय २).

அதில் ஒளிந்திருந்து பரீக்ஷித்தை மாய்த்த தக்ஷகனும் மந்தரமலையைச் சுற்றி அமிருதம் கடையக் கயிறான வாசுகியும் பகவானின் விபூதியே. 'ஸர்பாணாமஸ்மி வாஸுகி:'. (கீதை. 10, 28) பூமியில் திரும்பத் திரும்பப் பிறந்து சுற்றி வருபவர்களும் தனது உடலுக்கும் பொறிகளுக்கும் தானே ஈசனென நினைத்திருப்பவர்களுமான ஜீவர்களைக் கட்டுப்படுத்துபவர். (590).

591. **கோஹித: – பசுக்களுக்கு ஹிதமானவர்.**

பசுக்களைக் காப்பாற்றுவதற்காகக் கோவர்த்தன மலையைத் தாங்கிப் பசுக்களுக்கு இதமானவர். கோ - பூமி. பூமியில் பாரத்தைக் குறைப்பதற்காகக் கண்ணனாகப் பிறந்து பல துஷ்ட அரசர்களையும் அசுரர்களையும் மாய்த்துப் பூமிக்கு இதமானவர். கோ - இயற்கை, பிரகிருதி. தனக்கு க்ஷேத்திரமாயுள்ள பிரகிருதி தனது பீஜத்தை ஏற்பதற்காக அதற்கு வரையறை அமைத்து இதத்தைத் தருபவர். கோ - ஸ்வர்க்கம், போக பூமியான விண்ணுலகம். அதற்கு ஹிதமாக அசுரர் முதலானவரை அழித்தவர். (591)

592. **கோபதி: – பூமியின் கணவர்.**

பூமியின் காப்பாளரான கணவர், பசுக்களைக் காப்பாற்றுபவர். இயற்கையையும் விண்ணுலகையும் காப்பவர். (நா. 495) (592)

593. **கோப்தா – காப்பவர்.**

உலகைப் படைத்துக் காப்பவர்.[1] தன்னைத் தன்மாயையால் மறைத்துக் கொள்பவர். வினை-வினைப்பயன்-பிறப்பு. சுகம் துக்கம் என்ற சக்கிரச் சுழலைத் தவறு நேராமல் காப்பவர்.[2] (நா. 496) (593)

594. **வ்ருஷபாக்ஷ: – விரும்பியதைத்தருகிற கண் உள்ளவர்.**

விரும்பியதனைத்தையும் தன் கடைக்கண்ணோக்கால் வழங்குபவர். வ்ருஷப: - விரும்பியதைத்தரும் தர்மம். தர்மத்திலேயே கருத்துள்ளவர். தர்மத்தையே கண்ணாகக் கொண்டவர். வேதம் ஓதுதல் போன்ற அறநெறிகளால் காணத்தக்கவர். தர்மத்தை அச்சாகக்கொண்டு உலகச் சக்கிரத்தைச் சுற்றுபவர். (594)

---

1. संसृज्य विश्वा भुवनानि गोप्ता । (अथर्वशिरसि ५)
2. ஸ்ரீபட்டர் உரைப்படி இது 600வது நாமம்.

595. வ்ருஷப்ரிய: - தர்மத்தைப் பிரியமாகக் கொண்டவர்.

*தர்மத்தைக் காப்பதற்காகப் பிறவியற்றவரும் பிறக்கிறார்.* "**தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே.**" *(கீதை. 4.8) தர்மத்திடம் பிரியம் கொண்டவர். தர்மமாயும் பிரியமாயுமிருப்பவர். (வ்ருஷச்ச ப்ரியச்ச). வாழ்க்கையில் பற்றுடன் அறநெறியைப் பின்பற்றி ஈடுபடுவது பிரவிருத்தி தர்மம். பற்றற்று மனத்தைப் பகவானிடம் செலுத்தித் துறவுகொள்வது நிவிருத்தி தர்மம், இரு வழிகளையும் விரும்புபவர். இரு வகைகளாலும் அவரது அன்பைப் பெறலாம். (595)*

**अनिवर्ती निवृत्तात्मा संक्षेप्ता क्षेमकृच्छिवः ।**
**श्रीवत्सवक्षाः श्रीवासः श्रीपतिः श्रीमतां वरः ॥ ९५ ॥**

**அநிவர்தீ நிவ்ருத்தாத்மா ஸம்க்ஷேப்தா க்ஷேமக்ருத் ஶிவ:**
**ஸ்ரீவத்ஸவக்ஷா: ஸ்ரீவாஸ: ஸ்ரீபதி: ஸ்ரீமதாம் வர: 95.**

596. அநிவர்தீ - திரும்பாதவர்.

*தர்மத்தில் பிரியமுள்ளவரானதால் தர்மத்திலிருந்தும் திரும்பாதவர். தேவர்களும் அசுரர்களும் போரிடும்போது தேவர்களுக்கு உதவச் சென்ற பகவான் அசுரர்களை வெல்லாமல் போர் முனையிலிருந்து திரும்பமாட்டார். பிரவிருத்தி தர்மத்தில் ஈடுபட்டவர்களைத் திரும்பப் பிறக்கச் செய்து ஸம்ஸார பந்தத்திலிருந்தும் மீட்காதவர். (596)*

597. நிவ்ருத்தாத்மா - பற்று விலகியவர்.

*இயல்பாகவே பொருள் நாட்டமில்லாத மனமுள்ளவர். பொதுவாக மனிதன் பொருள் நாட்டத்தால் ஏற்படும் துன்பங்களைக் கண்டு ஆராய்ந்து பின் நாட்டத்தை விடுவான். இறைவனுக்கு பொருள் நாட்டமின்மையும் நிவிருத்தி தர்மத்தில் ஈடுபாடும் இயற்கையாகவே அமைந்துள்ளது. பற்றற்று நிவிருத்தி தர்மத்தில் ஈடுபட்டவர். (597)*

598. ஸம்க்ஷேப்தா - சுருக்கிக்கொள்பவர்.

*படைக்கும்போது மஹத்தாக விரிவடையச் செய்ததை ஸம்ஹார காலத்தில் அணுவளவில் குறுக்கித் தன்னுள்*

*சேர்த்துக்கொள்பவர். பிரவிருத்தி தர்மத்திலிருப்பவரிடம் இயற்கையாக உள்ள அறிவும் பெருமையும் குறுகும்படி செய்பவர். (598)*

599. க்ஷேமக்ருத் - க்ஷேமத்தைச் செய்பவர்.

*தன்னுடையவராக ஏற்றுக்கொள்ளப் பெற்றவரின் நலனைக் கருத்துடன் செய்து கொடுப்பவர். நிவிருத்தி தர்மத்திலுள்ளவரது நலனைச் செய்பவர். (599)*

600. சிவ: - தூய்மைப்படுத்துபவர்.[1].

*தன்னை நினைப்பவரின் பாபத்தைப் போக்கித் தூய்மைப்படுத்தி மங்களம் பெறும்படி செய்பவர். (நா. 27) இந்த நாமத்திலிருந்து பகவானின் மங்கள வடிவவிளக்கம் தொடர்கிறது. (600)*

601. ஸ்ரீவத்ஸவக்ஷா: - ஸ்ரீவத்ஸத்தை மார்பில் கொண்டவர்.

*ஸ்ரீவத்ஸம் என்பது பகவானின் மார்பில் உள்ள மரு. அது மஹாபுருஷனுக இருப்பதன் அடையாளம். வெண்ணிற ரோமவலச்சுழி. ஸ்ரீவத்ஸம் என்பதும் கௌஸ்துபம் போன்ற ரத்தினம் என்பர். பிரதானம் என்ற மூலப்பிரகிருதியை ஸ்ரீ வத்ஸமாக்கித் தரித்துள்ளார்.* **"ஸ்ரீவத்ஸ ஸம்ஸ்த்தான தரம் அநந்தேந ஸமாச்ரிதம். ப்ரதானம்"** *(விஷ்ணு புராணம் 1, 22, 69). ஆத்ம ஜோதியின் பேரொளி ஸ்ரீவத்ஸம்.* **"தத்ப்ரபா வ்யாபிநீ ஸாக்ஷாத் ஸ்ரீவத்ஸம் உரஸா விபு:.** *(பாகவதம். 12, 11, 10)" (601)*

602. ஸ்ரீவாஸ: - லக்ஷ்மியின் இருப்பிடம்.

*லக்ஷ்மி தேவி இவரை விட்டகலாதவளாக என்றும் இவரிடம் குடிகொண்டதால் லக்ஷ்மியின் இருப்பிடமானவர். (602)*

603. ஸ்ரீபதி: - லக்ஷ்மியின் கணவர்.

*திருப்பாற்கடலைக் கடையும்போது அமிருதத்தின் உடன்பிறப்பாகத் தோன்றி அங்கிருந்தவர்களை ஒதுக்கிவிட்டு இவரைச் சென்றடைந்த லக்ஷ்மியால் பதியாக ஏற்கப்பெற்றவர். கடலில் தோன்றுவதற்கு முன்னரும் அவர்தான் லக்ஷ்மியின்*

1. शिव एको ध्येय: (अथर्वशिखा ४) नम: शिवाय च शिवतराय च । (तै. आ. ४. ५. ८) न सन्न चासच्छिव एव केवल: (श्वेताश्व ४. १८)

அழகிய மணவாளர். ஸ்ரீ - அழகிய பதி: - கணவர். லக்ஷ்மியை காப்பாற்றுபவர்.[1] ஸ்ரீ: - பரம்பொருளிடம் உள்ள பராசக்தி - மாயை. அதனைக்காப்பற்றுபவர்.[2] (603)

604. ஸ்ரீமதாம் வர: - செல்வந்தர்களுக்குள் சிறந்தவர்.

இயற்கையாக லக்ஷ்மியை எப்போதும் தன்னிடம் கொண்டவர். மற்றவரிடம் இவரது திருவருளால் லக்ஷ்மி சில நேரங்களில் சென்றடைவாள். சென்றடையாத் திரு உடையானை நித்ய ஸ்ரீமான் பகவான். அதனால் ஸ்ரீமான்களில் சிறந்தவர்.

ருக் வேதம், யஜுர் வேதம், ஸாம வேதம் என்ற மூன்றும் ஸ்ரீ: எனப்படும்.[3] அந்த வேதங்களை ஓதி வசப்படுத்திய அந்தணர்களுக்கும் வேதத்தைப் பகவானிடமிருந்து பெற்ற பிரும்மா முதலானவர்க்கும் அந்த வேதங்களே அழியாச் செல்வம். அப்படி வேதத்தைச் செல்வமாகப் பெற்ற பெரியோர்களால் முக்கியமானவராகக் கொண்டாடப் பெற்றவர். (604)

**श्रीदः श्रीशः श्रीनिवासः श्रीनिधिः श्रीविभावनः**
**श्रीधरः श्रीकरः श्रेयः श्रीमान् लोकत्रयाश्रयः ॥ ९६ ॥**

**ஸ்ரீதஶ் ஸ்ரீசஶ் ஸ்ரீனிவாஸ: ஸ்ரீநிதிஶ் ஸ்ரீவிபாவந:.**
**ஸ்ரீதரஶ் ஸ்ரீகரஶ் ஶ்ரேய: ஸ்ரீமாந் லோகாத்ரயாஶ்ரய: 96**

605. ஸ்ரீத: - செல்வத்தை வழங்குபவர்.

அண்டியவர்களுக்கும் செல்வத்தை வேண்டுபவர்களுக்கும் செல்வம் அளிப்பவர். லக்ஷ்மிக்கு லக்ஷ்மியாக இருக்கும் தன்மையை அளித்தவர். அவரை அடைந்ததால்தான் லக்ஷ்மி வேண்டுவதைப் பெற அனுகத்தக்கவளாக ஸ்ரீயாக ஆனாள். (605)

606. ஸ்ரீஶ: - ஸ்ரீதேவிக்கு ஈசர்.

மூன்று வேதங்களாகிய ஸ்ரீ தேவிக்கு ஈசர். லக்ஷ்மி தேவியைத் தன் விருப்பப்படி செயலாற்றச் செய்யும் பேராளுமை பெற்றவர்.

1. ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ। (तै. आ. ३. १३) अस्येशाना जगतो विष्णुपत्नी। (श्रीसूक्तम्)
2. परास्य शक्तिर्विविधैव श्रूयते। (श्वेताश्व ६. ८)
3. ऋचः सामानि यजूंषि। सा हि श्रीरमृता सताम्। (तै. आ. १.२. १)

ஸூர்யன், சந்திரன் முதலானவரிடம் உள்ள ஒளிக்கும் செல்வந்தரிடமிருக்கும் செல்வத்திற்கும் ஈசன். அன்பினுல் லக்ஷ்மி தேவிக்கு ஆட்பட்டு அவள் விருப்பப்படி இயங்குபவர். (ஸ்ரீ: ஈசா யஸ்ய). (606)

607. ஸ்ரீநிவாஸ: - செல்வத்தின் இருப்பிடம்.

ஸ்ரீ: - இறைவனருளால் செல்வம் சென்றடைந்த நல்லோர்கள். அவர்களிடத்தில் எப்போதும் தங்கியுள்ளவர். (நா. 183) எங்கு லக்ஷ்மி உள்ளாளோ, அங்கு ஹரி இருப்பார். 'யதோ லக்ஷ்மீ ஸ்ததோ ஹரி:' அமிருதக் கொடிக்குக் கல்பக மரம் போல் கொழுகொம்பாக லக்ஷ்மி தேவிக்கு அருகில் உள்ளவர். (607)

608. ஸ்ரீநிதி: - ஸ்ரீ தேவியின் பாதுகாப்பகம்.

ரத்னம் போன்ற உயர்ந்த பொருள்களைக் காப்பகத்தில் பிறர் கண்களில் படாதவாறு வைத்துக் காப்பதுபோல் தனது சக்திகள் அனைத்தின் வடிவமான ஸ்ரீதேவியைத் தன் மார்பில் வைத்துப் பீதாம்பரத்தால் மறைத்துக் காப்பாற்றுபவர். எல்லா சக்திகளுக்கும் காப்பிடம். லக்ஷ்மீ தேவியையே பெரும் நிதியாக செல்வக் குவியலாகக் கொண்டவர். (608)

609. ஸ்ரீவிபாவந: - செல்வத்தால் பெருமைப்படுத்துபவர்.

ஸ்ரீலக்ஷ்மீ தேவியால் தன்னைப் பெருமையுடன் வெளிப்படுத்திக்கொண்டும், லக்ஷ்மீ தேவியைத் தான் பெருமைப் படுத்தியும் அவளது திருக்கண்ணேக்கால் பெற்ற செல்வத்தால் அவரவரவர்கள் வினைக்கேற்ப வாழ்க்கை நிறைவைத் தந்து பெருமைப் படுத்தியும் ஸ்ரீ தேவியின் விபவத்தைப் பரப்புபவர். (609)

610. ஸ்ரீதர: - லக்ஷ்மீ தேவியைத் தாங்குபவர்.

உலகின் அன்னையான லக்ஷ்மீ தேவி பகவானின் எல்லா சக்திகளின் வடிவம், என்றும் தன்னை விட்டகலாதவளாகத் தேவியைத் தன் திருமார்பில் - இதயத்தில் தாங்குபவர். தங்கம் நிறத்தையும், ரத்தினம் ஒளியையும், பூ மணத்தையும், சந்திரன் குளிர்ச்சியையும், அமுதம் இனிமையும் விட்டகலா திருப்பதுபோல் பகவான் இவளை விட்டுப் பிரியாமல் இருக்கிறார். வ்யூஹங்களில் ஒன்பதாமவர். (ப. 25) (610)

611. ஸ்ரீகர: - லக்ஷ்மியைத் தங்கும்படி செய்பவர்.

*தான் எடுக்கும் ஒவ்வொரு தோற்றத்திற்கும் இணையாக ராமனுக்குச் சீதையாக, கண்ணனுக்கு ருக்மிணியாக, லக்ஷ்மீ தேவியைத் தோன்றச் செய்து அவள் அருளைப் பரப்பித் தன்னை நினைத்து வழிபடுகிற அடியார்களிடம் தேவியை நித்யவாஸம் புரியும்படி செய்பவர். நித்ய ஸ்ரீயான மோக்ஷத்தையும் அவரது திருவடிகளையும் அடையச் செய்பவர். (611)*

612. ஸ்ரேய: - சிறந்த மேம்பாடாயிருப்பவர்.

*வாழ்வில் பெரிதும் உழைத்துப் பெறக்கூடிய சிறந்த மேம்பாடு பேரின்பமே வடிவான அவரது அருளே. என்றும் குன்றுததும் அகலாததுமான நித்யானந்தமே அவரது வடிவம். அந்த நித்யானந்தத்தைப் பெறுவதே பெரும் பேறு. கண், காது, மனம் முதலியவை இன்பம்பெறப் பயன்படுகிற சிற்றின்பப்பொருளைநாடாமல் பகவதனுபவம் பெறுவதே அடையத்தக்கவற்றில் சிறந்தது. கேடுகளனைத்தும் நீங்கிய நிலை அது[1] (612)*

613. ஸ்ரீமான் - பல விபூதிகளை எப்போதும் கொண்டவர்.

*ஸ்ரீ: - பகவானின் பெருமைகளை விளக்குகின்ற தோற்றங்கள். விபூதி எனப்படுபவை. மற்றும் பகவானுக்குச் சோபைதருகிற பல வகைப்பட்ட பகவத் சக்திகள். இவைகளை என்றும் நிறைவுள்ள தாகத் தன்னிடம் கொண்டவர். (நா. 22, 178, 220) (ஸ்ரீ என்ற சொல்லுடன் தொடங்கும் நாமங்கள் 17.).*

*ச்ரேய: ஸ்ரீமான் என்று பட்டர் உரைப்படி ஒரே நாமம். உயிரினம் வாழ்வின் மேம்பாட்டிற்காக அவசியமாக அடைய வேண்டிய ஸ்ரீ எனும் லக்ஷ்மீ தேவியை எப்போதும் தன்னிடம் கொண்டவர். துயருற்றபோது துயர் நீங்கவும், ஏழ்மை வாட்டும்போது செல்வம் பெறவும், ஆயுள் ஆரோக்கியம் பெருமை புகழ் முதலிய வாழ்வின் இன்றியமையாத இன்ப நிறைவுகளைப் பெறவும் லக்ஷ்மீ தேவியே அணுகத்தக்கவள். அவள் இருக்குமிடம் பகவான். (613)*

---

1. अन्यच्छ्रेयोन्यदुतैव प्रेयः, तयोः श्रेय आददानस्य साधुभवति, श्रेयो हि धीरोऽभि प्रेयसो वृणीते (कठ २. २-१)

614. லோகத்ரயாஶ்ரய: - மூவுலகத்தின் ஆதாரம்.

மூவுலகும் அதனதன் நிலையில் சீருடன் இருக்கச் செய்யும் ஆதாரம் பகவானே. தாயைப்போல், தந்தையைப்போல் உலகம் அண்டிநிற்கிற இடம். (614)

**स्वक्षः स्वङ्गः शतानन्दो नन्दिर्ज्योतिर्गणेश्वरः।**
**विजितात्माविधेयात्मा सत्कीर्तिश्छिन्नसंशयः ॥ ९७ ॥**

**ஸ்வக்ஷஸ் ஸ்வங்கஶ் ஶதாநந்தோ நந்திர் ஜ்யோதிர்கணேஶ்வர:**
**விஜிதாத்மாவிதேயாத்மா ஸத்கீர்த்திஶ்ச்சின்னஸம்ஶய:, 97.**

615. ஸ்வக்ஷ: - அழகிய கண்கள் உள்ளவர்.

தாமரை போன்ற அழகிய கண்களும், மற்ற பொறிகளும் உள்ளவர். அவரை உணர உதவுகிற பொறிகளே சிறந்த பொறிகள். நம் பொறிகளைச் சிறந்த பொறிகளாக்குபவர். (615)

616. ஸ்வங்க: - சிறந்த அங்க அமைப்புள்ளவர்.

அவரது கண், காது முதலிய அங்கங்கள் நன்கு அமைந்து முழு வடிவின் சோபையைக் காட்டி மனத்தைக் கவருகின்றன. (616)

617. ஶதாநந்த: - எண்ணற்ற ஆனந்தங்கள் கொண்டவர்.

உள்ளம் களிப்படைவது என்ற வகையில் ஆனந்தம் ஒன்றேயாயினும் அதனைப் பெற உதவக் கூடிய பொறிகள், பொருள்கள், சூழ்நிலைகள், காலம், தேசம் முதலியவற்றால் நூற்றுக்கணக்கான வகைப்பட்டதாகக் காணப்படுகிறது. கால்நடையின் ஆனந்தம், மனிதனின் ஆனந்தம், தேவனின் ஆனந்தம், ருஷியின் ஆனந்தம் எனப் பெறுபவனது தகுதிக்கேற்ப ஆனந்தம் வேறுபட்டதாகத் தோன்றும். விஷயப் பற்றற்ற ஞானியடைகிற பேரானந்தத்தையே, விஷயப் பற்றின் காரணமாகப் போகி பல வகைப்பட்டதாகத் துளித் துளியாகப் பெறுகிறான். துளித் துளியாக நூற்றுக்கணக்கான வழிகளில் பெற்ற ஆனந்தம் அவரது வடிவே.[1] (617)

1. एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति । (बृहदारण्य ६. ३. ३२) ते ये शतं मानुषाः... देवानां.., इन्द्रस्य..., प्रजापतेः... आनन्दाः... स एको ब्रह्मण आनन्दः । श्रोत्रियस्य चाकामहतस्य (तै. आ. २. ८)

618. நந்தி: - ஆனந்த வடிவினர்.

*மனிதனின் ஆனந்தம், தேவரின் ஆனந்தம் என மனிதர்களேயும், தேவர்களேயும் காட்டிலும் வேறுபட்டதாக, அவர்களால் அடையத்தக்க ஆனந்தமாக நூற்றுக்கணக்கான வகைகளில் காணப்பெற்ற ஆனந்தம், பேரானந்தத்தின் பகுதித் தோற்றமே. ஆனந்தத்தின் முழு வடிவம் பகவான். பகவானின் முழுவடிவம் ஆனந்தம்.[1] எங்கும் எந்நிலேயிலும் எப்போதும் மகிழ்பவர். (நா. 526, 528). நந்தி - சிவபெருமானின் வாகனம், படைத்தலேவரும் கூட அவர் சிவபெருமானுகிய பரமானந்தத்தைப்பெற்று எப்போதும் மகிழ்பவரானதால், நந்தி. அந்த வடிவில் இருப்பவர். (நா. 113) 618)*

619. ஜ்யோதிர்கணேச்வர: - ஒளிக்கூட்டத் தலேவர்.

*சூரியன், சந்திரன் முதலிய ஒளி தரும் மண்டலங்கள் - ஜ்யோதி:, வீட்டின் உள்ளே இருட்டைப் போக்குகின்ற தீபமும் நம் கண்களுக்குள்ளே உறைந்து பொருள்களேப் பார்வையால் விளக்குவதும் ஜ்யோதி:, இப்படிப் பலதரப்பட்ட ஜோதிக் கூட்டங்களின் தலேவர். அவற்றை ஆட்படுத்தி அதனதன் பணிகளில் தூண்டுபவர்.[2] அவர் ஒளியாக நின்று உலகை விளக்க, அந்த ஒளி தானேதான் எனப் பகட்டாகக் கூறிக்கொள்ளுகின்ற ஒளி மண்டலங்கள், அவர் எதிரே கைகட்டி நிற்கின்றன. (619)*

620. விஜிதாத்மா - மனத்தை வசத்தில் கொண்டவர்.

*மனத்தை அடக்குவதற்கெனத் தனி முயற்சியோ சாதனமோ தேவைப்படாதவர். தானே அடங்கிய மனம் அமைந்தவர். அடைய வேண்டியதனேத்தையும் முன்னரே அடைந்தவரானதால் இனி அடைய வேண்டியது இராததால் மனம் வெளியே இழுத்து அதன் வசத்தில் நடப்பதற்கு அவசியமில்லே. அடியார்களின் அன்பிற்குக் கட்டுப்படுபவர். அன்பால் வெல்லப்படுபவர். (620)*

621. அவிதேயாத்மா - பிறருக்கு அடங்காதவர்.

*தன்னேத் தன் வசத்தில் கொண்டமையால் பிறர் வசமாகாதவர். பிறர் கட்டளேக்கடங்கி அவர் குறிப்பறிந்து செயல்படும் நிலேயில்*

1. विज्ञानमानन्दं ब्रह्म (बृहदार ३. ९. २४)
2 तच्छुभ्रं ज्योतिषां ज्योतिः। तमेव भान्तमनुभाति सर्वम्। (मुण्डक २. २. ९. ११)

இல்லாதவர். நிறைவுற்றவரானதால் மற்றொன்றிற்கு அடிமையாகாதவர்.

விஜிதாத்மா, விதேயாத்மா எனப் பிரித்து பட்டர் பொருள் கூறுகிறார். அடியார்களின் அன்புக் கட்டளைக்குத் தன்னை உட்படுத்திக்கொள்பவர். (621)

622. ஸத்கீர்த்தி: - நிலைத்த கீர்த்தி உள்ளவர்.

கீர்த்தி - புகழ்ந்து கூறத்தக்க பெருமை. அவரது பெருமைகள் அனைத்தையும் கூற இயலாது. ஆனால் சிறிதளவு, உணர்ந்த அளவு கூறியதனைத்தும் உண்மையானவை, நிலைத்தவை, எந்நிலையிலும் மாறாதவை. (622)

623. ச்சிந்நஸம்ஶய: - ஐயம் களைந்தவர்.

உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எல்லாவற்றையும் உள்ளது உள்ளபடி அறிந்தவரானதால் அவருக்கு எதிலும் ஐயம் இல்லை. அவரைப்பற்றித் துளியும் ஐயம் ஏற்படாமல் ஐயத்தைக் களைந்துவிடுவார். (623)

उदीर्णः सर्वतश्चक्षुरनीशः शाश्वतस्थिरः ।
भूशयो भूषणो भूति[1] र्विशोकः शोकनाशनः ॥ ९८ ॥

உதீர்ணஸ் ஸர்வதஶ்சக்ஷுரநீஶஶ் ஶாஶ்வதஸ்த்திர:
பூஶயோ பூஷணோ பூதிர் வி[1]ஶோகச் ஶோகநாஶந: 98

624. உதீர்ண: - மேம்பட்டவர்.

அவர் எல்லாமறிந்தவர், எல்லாம் வல்லவர், பேராண்மை கொண்டவர், அதனால் அனைத்தையும்விட மேம்பட்டவர்.[2] புறக்கண்களால் காணுமளவில் அவதாரங்களாக வெளிப்பட்டவர். எளிதில் புலப்படுபவர். (624)

625. ஸர்வதஶ் சக்ஷு: - எங்கும் கண்களுள்ளவர்.

எதையும் எங்கும் ஞானக்கண்களால் பார்ப்பவர்.[3] அவதாரம்

1. अशोकः அஶோக: (பா)
2. विश्वाधिको रुद्रो महर्षिः । (श्वेताश्व ४. १२)
3. विश्वतश्चक्षुरुत विश्वतस्पात् । (श्वेताश्व ३. ३)

*எடுத்தபோது எல்லா நிலேகளிலுமுள்ள எல்லோராலும் எங்கும் பார்க்கப் பெற்றவர். (625)*

626. அநீஶ: - தன்னே ஆட்படுத்துபவரற்றவர்.

*எல்லோருக்கும் ஈசனுயிருக்கும் அவரைக் கட்டுப் படுத்தக்கூடிய ஆளுமை பெற்றவர் ஒருவருமில்லே.*[1] *தன்னே அண்டிய அடியார்களிடம் தனது ஆளுமையைக் காட்டாமல் அவர்கள் வசத்தில் இருப்பவர். (626)*

627. ஶாஶ்வத ஸ்த்திர: - எப்போதுமிருந்து கொண்டு நிலேத்திருப்பவர்.

*அடிக்கடி பலருக்குப் புலப்படுவதால் அவர் சாச்வதர். எப்போதும் இருப்பவர். வளர்வதும் தேய்வதுமான மாறுபாடுகளற்றவரானதால் ஸ்திரர். (56, 120, 203) பல தோற்றங்களே அடிக்கடி காண்பித்தும் பக்தர்களுக்குக் காட்சி தந்தும் எக்காலும் இருப்பதை உணர்த்துபவர்.*[2] *(627)*

628. பூஶய: - பூமியில் படுத்கிருப்பவர்.

*மனிதனுகத் தோன்றியபோது மனிதனுக்குரிய கட்டுப்பாடுகளுக்கு உட்படுகிறுர். அதனுல் இலங்கை நோக்கிச் செல்லும்போது கடல் குறுக்கிடக் கடலரசனிடம் வழிவிடக் கோரிப் பூமியில் விரதமாகப் படுத்திருந்தவர். பூமி தேவியிடம் பரிவு உள்ளவர். (புவி சய: அனுசய: யஸ்ய). பக்தர்களின் கோரிக்கையை ஏற்றுப் பல திவ்ய க்ஷேத்திரங்களேத் தமது இருப்பிடமாக்கிக் கொண்டவர். (628)*

629. பூஷண: - இருக்குமிடத்தை அழகுறச் செய்பவர்.

*ராமனுகப் பிறந்து அயோத்தியையும், கிருஷ்ணனுகப் பிறந்து கோகுலம், பிருந்தாவனம், வடமதுரை, துவாரகை முதலியதையும் தன் இருக்கையால் அழகுறச் செய்தவர்.* **'ஜயதிதே அதிகம் ஜந்மநா வ்ரஜ: ச்ரயத இந்திரா சச்வதத்ரஹி'.** *கண்ணன் பிறந்ததாலேயே கோகுலத்தில் லக்ஷ்மீதேவி காலடி வைத்தாள்,*

---

1. न तस्येशे कश्चन। (तै.आ.१०.१.१०) न तस्य कश्चित्पतिरस्ति लोके न चेशिता। (श्वेताश्व ६.९)
2. अहमेकः प्रथममासं वर्तामि भविष्यामि च। (अथर्वशिरस् १)

கோகுலம் களை மிக்கதாயிற்று. (பாகவதம் 10, 31) யாவருக்கும் உதவும்படி தன் லீலைகளைக் காட்டி எளிமையுடன் பழகித் தன்னைச் சிறப்பித்துக் கொண்டவர். (629)

630. பூதி: - பெருமையின் வடிவம்.

பூதி: - இருக்கை, பெருமை, செல்வம், பேராண்மை, அணிமா முதலிய யோக சித்திகள், இவை அனைத்தின் வடிவமாய் உள்ளவர். பெருமை அடைய வாய்ப்பு அற்றவர்க்கும் அருளால் பெருமை சேரச் செய்பவர். (630)

631. விஶோக: - சோகமகன்றவர்.

ஆநந்தமே வடிவான பகவானுக்கு சோகம் ஏற்படுவதில்லை. ஸீதையை இழந்து சோகமுற்றவராகக் காட்சி தருவது உலகியலை ஒட்டி மனிதனாக வாழ்ந்து காட்டவே. 'ஸ்த்ரீஸங்கிநாம் கதிமிதி ப்ரதயன் சசார (பாகவதம் 9, 10, 11) இழப்போ, இழப்புபற்றிய பயமோ சோகத்திற்குக் காரணம். பகவான் எதையும் இழந்த தில்லை. எவரையும் ஆதரவற்றவராகக் கைவிடாததால் அவர்கள் விஷயத்திலும் துயரப்படுவதில்லை.[1] அசோக: என்றும் பாடமுண்டு (நா. 336) பொருள் அதுவே. (631)

632. ஶோகநாஶந: - சோகத்தைப் போக்குபவர்.

அவரை நினைத்த பக்தனின் சோகத்தை உடன் அகற்றி விடுவார்.[2] ஆத்ம ஞானம் ஏற்பட்டதும் சோகம் மறைகிறது. (632)

अर्चिष्मानर्चितः कुम्भो विशुद्धात्मा विशोधनः ।
अनिरुद्धोऽप्रतिरथः प्रद्युम्नोऽमितविक्रमः ॥ ९९ ॥

அர்ச்சிஷ்மாநர்ச்சித: கும்ப்போ விஶுத்த்தாத்மா விஶோதந:
அநிருத்த்தோऽப்ரதிரத: ப்ரத்யும்நோऽமிதவிக்ரம: 99

633. அர்ச்சிஷ்மான் - சிறந்த ஒளி மிக்கவர்.

ஒளி அதிகமாக உள்ளவர். பரம்பொருளின் பேரொளியால் சூரியன், சந்திரன் முதலானோர் ஒளிமிக்கவர் ஆனார்கள்.

1. विशोको विजिघत्सः (छान्दोग्ये ८. १. ५)
2. तरति शोकमात्मवित्। (छान्दोग्य ७. १. ३) तत्र को मोहः कः शोकः (ईश. ७)

நெருப்பின் சேர்க்கையால் இரும்புத் துண்டு நெருப்புப் பிழம்பு ஆனதுபோல் அது நிகழ்ந்தது. அதனுல் ஒளிமிக்கவராயிருப்பவர்.

தனது மகிமை பக்தரின் வெளிக் கண்களுக்குப் புலப்படாத பேரொளி என்பதால் அவர்கள் அறியுமளவில் தமது பேரொளியைக்குறைத்தும் தமது பேரொளியைக் காணும் வகையில் பக்தரது உள்ளத்தையும் பொறிகளையும் திறமையுள்ளதாக்கியும் உணரப்பெறுபவர். இயற்கைக்கு அப்பாற்பட்ட திவ்யப்பேரொளி படைத்தவர். (633)

634. அர்ச்சித: - வழிபடப் பெற்றவர்.

பிரும்மாதி தேவர்களும், ஸூர்யன் சந்திரன் முதலான ஒளி மண்டலங்களும் தம்மிடம் பகவானது திவ்ய சக்தி பிரதிபலிக்கக் கோரி அவர்களால் வழிபடப் பெற்றவர்.

அர்ச்சாவதாரமாகக் கோயில்களிலும், வீடுகளிலும் திவ்ய மங்கள வடிவுடன் பக்தர்களால் வழிபடப் பெற்றவர். (634)

635. கும்ப: - கும்பம் போன்றவர்.

கும்பம் தன்னுள் அடங்கிய நீரைப் பாதுகாப்பது போல், உலகமனைத்தையும் தன்னுள் அடக்கிக் காப்பவர்.[1] திவ்ய க்ஷேத்திரங்களில் பெருமையுடன் அவரவர் கண்டறிந்த வடிவுள்ளவராகப் பேரார்வத்துடன் காணப் பெறுபவர். (635)

636. விஶுத்த்தாத்மா - மிகவும் தூயவர்.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களும் அறிவிலும் எண்ணத்திலும் பாதிப்பு ஏற்படுத்துபவை. அதனுல் எதனை எப்படி அறியவேண்டுமோ அப்படி அறிய முடியாமலாகலாம். பகவானே மூலப்பிரகிருதிக்கும் அப்பாற்பட்டவர். மூலப்பிரகிருதியிடமிருந்து தோன்றிய முக்குணங்கள் அவரிடம் எத்தகைய பாதிப்பையும் விளைவிக்க இயலாது. அதனுல் தூய அறிவுள்ளவர், தூயவர்.

அவரவரது புண்ய பரிபாகப்படி பக்தர்களுக்குத் தமது எல்லா விபவங்களையும் தம்மையும் வழங்கிவிட்டதால் தன்னை மீதப்படுத்திக்கொள்ளாதவர். (636)

1. उभे अस्मिन् द्यावापृथिवी अन्तरेव समाहिते (छान्दोग्य ८. १. ३) तस्मिन्सर्वं प्रतिष्ठितम्। (बृहदारण्य १.५.१)

637. விஶோதந: - தூய்மைப்படுத்துபவர்.

*தன்னைத் தியான நிலையில் மனத்தில் பதித்துக்கொண்டவர்களது பாபங்களைக் களைபவர். அதனுல் அவர்களது எண்ணத்திலும் அறிவிலும் முக்குணப் பாதிப்பு ஏற்படாதவாறு பாதுகாத்துத் தன்னை முழுவதும் அறியச் செய்பவர். திவ்ய க்ஷேத்திரங்களில் உடலைக் கிடத்தியவர் தன்னை வந்தடையப் பாபங்களைப் போக்குபவர். (637)*

638. அநிருத்த்த: - அநிருத்தர்.

*உலகைப் படைக்க எடுத்த நான்கு வ்யூஹ வடிவங்களில் அநிருத்தராயிருப்பவர். (நா. 138, 185) உலகைப் படைக்க முற்பட்டு மூலப்பிரகிருதியினுள் நுழைந்து உலகமாகி விரிந்த பின் உலகமானவை தனித்தனியாகப் புரிகின்ற கோடிக்கணக்கான பல்வேறு பணிகளில், ஒவ்வொன்றிலும், தன்னைக் காட்டிக்கொண்டு, நல்லோர்களைக் காத்து, தர்மத்தை நிலைநிறுத்திப் பக்தர்களுக்கு உதவுபவராக தன்னை வெளிப்படுத்திக்கொள்ளும் காப்புக் கடவுள்.* **'அநிருத்த: ஸ ஈசாந: வ்யக்தஸ் ஸர்வேஷு கர்மஸு'** *(பாரதம் - சாந்தி 339, 39) திவ்ய க்ஷேத்திரங்களில் அநிருத்தராகக் காட்சி தருபவர். தானும் தடையுருமல், பக்தர்களின் பணிகளில் தடைநேராமல், காப்பவர். (638)*

639. அப்ரதிரத: - எதிரியற்றவர்.

*தடை செய்கின்ற எண்ணம் கொண்டு எதிர்த்துப் போரிடத் தேரோட்டி வருகின்ற எதிரி பிரதிரதர். அத்தகைய எதிரி இல்லாதவர். (639)*

640. ப்ரத்யும்ந: - செல்வம் மிக்கவர்.

*நான்கு வ்யூஹாவதாரங்களில் ஒருவர் ப்ரத்யும்நர். அவர் மனத்தின் தேவதையான காமதேவனின் வடிவம்.* **"ஸ மந: ஸர்வபூதாநாம் ப்ரத்யும்ந: பரிபட்யதே"** *(பாரதம் - சாந்தி 339, 38) த்யும்நம் - ஆசை. ஆசையின்றி வாழ்வில்லை. ஒவ்வொரு நொடியும் மனம் ஏதேனும் ஒன்றைப்பற்றிக் கோட்டை கட்டி அதற்காகப் பணிபுரிவதே வாழ்க்கையாகிறது. இந்த மனதின் மூலதத்துவம் பிரத்யும்நர்.*

*த்யும்நம் - செல்வம். மனம் கட்டும் கோட்டை நிறைவேற அளவற்ற செல்வம் தேவை. செல்வமில்லாதவனின் ஆசை வீணே. ஆசையைத் தூண்டுகின்ற காமதேவதை பிரத்யும்நர், நிறையச் செல்வமுள்ளவர். அதனைத் தருபவர். (நா. 138, 295).*

*த்யும்நம் - ஒளி. தன்னைத்தானே தன் ஒளியால் விளக்கிக் கொள்பவர். உள்ளே மறைந்திருக்கும் ஆத்ம ஒளியைப் புலப்படுத்துபவர். ஆத்மாவை அறிகிற வேட்கை மிக்கச் சிறந்த ஆசையாக இருப்பவர். பெருஞ்செல்வம் கொண்ட குபேரனாயிருப்பவர். (640)*

641. அமிதவிக்ரம: - அளவிட இயலாத செயல்முறை கொண்டவர்.

*பிரத்யும்நராக மனத்தத்துவத்தின் தேவதையானதால் அளவிடமுடியாத அடக்கவொண்ணாத பல செயல்முறைகளை வகுத்து எதனாலும் தடையுறாததும் சலிப்புறாததுமான மனோவேகத்துடன் செயலாற்றுபவர். செயல்முறைகளை வகுப்பதற்குக் காலத்தால் வெகுதூரம் முன்னேறிப் பின் வருவனவற்றை மனக் கண்களால் எதிர்நோக்கி அவற்றிற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்பவராதலால் குறுகாத மனவிரிவு கொண்டவர். (நா. 516) (641)*

कालनेमिनिहा वीरः[1] शौरिः शूरजनेश्वरः ।
त्रिलोकात्मा त्रिलोकेशः केशवः केशिहा हरिः ॥ १०० ॥

காலநேமிநிஹா வீரஶ்[1] ஶௌரிஶ் ஶூரஜநேஶ்வர:
த்ரிலோகாத்மா த்ரிலோகேஶ: கேஶவ: கேஶிஹா ஹரி: 100.

642. காலநேமிநிஹா - காலநேமியைக் கொன்றவர்.

*காலநேமி என்ற அசுரனைப் போரில் சக்ராயுதத்தால் மாய்த்தவர். காலநேமியே கம்ஸனாகத் தோன்றியதும் கண்ணனாகி அவனை மாய்த்தவர். காலத்தின் சக்கிரங்களில் மாயையால் சிக்கி அறியாமையால் சுழன்று வருகின்றவர்களுக்கு இதமளிப்பதற்காகக் காலச்சக்கிரச்சுழலைத் தடை செய்பவர். காலத்தால் வினைப்*

1. वीरः शूरः शूरजनेश्वरः, शौरिः शूरः शूरजनेश्वरः, शौरिः वीरः शूरजनेश्वरः

*வீரச் சூரச் சூரஜநேச்வர: சௌரிச் சூரச் சூரஜநேச்வர:, சௌரிர்வீரச் சூரஜநேச்வர: (பா)*

பாதிப்பைப் பெறாதபடி செய்பவர். காலனான யமனின் சக்கிரச் சுழலைத்தடை செய்பவர். (642)

643. வீர: - புறமுதுகு காட்டாதவர்.

எதிரியைக் கண்டு நடுங்கி (ஈர - கதௌ கம்பநே ச)ப் புறமுதுகு காட்டி ஓடுகிற கோழையாகாதவர். சூரர். சிறப்பாக முன்னேறிச் செல்பவர். (நா. 401, 658) (643)

644. ஶௌரி: - சூர வம்சத்தில் தோன்றியவர்.

சூர வம்சத்தில் தோன்றிய கண்ணன். உத்பலாவதகம் என்னும் க்ஷேத்திரத்தில் சௌரி என்ற திவ்ய நாமத்துடன் கோயில் கொண்டவர். (நா. 340) (644)

645. ஶௌரஜநேஶ்வர: - சூரர்களாகிய மக்களின் தலைவர்.

இந்திரன் முதலான தேவ வீரர், ஸுக்ரீவன் முதலான வானர வீரர், அர்ஜுனன் முதலான மனித வீரர், இவர்களைத் தம் மக்களாகக் கருதி அவர்களுக்கு இதம் புரியும் தலைவர். யது வம்சத்தின் சூரர் என்ற கிளையில் வந்த மக்களின் தலைவர்.

இங்குள்ள பாட பேதங்களின்படி வீர: என்பதற்குப் பதிலாக 'சூர:' என்று முன்னம் பின்னும் வருகிறது.[1] சூர: - வீரன். (நா. 339) மற்றவைகளின் பொருளில் மாற்றமில்லை. (645)

646. த்ரிலோகாத்மா - மூவுலகிற்கும் ஆத்மா.

பூமி புவர்லோகம் ஸ்வர்கம் என்ற மூவுலகும் இவரைக் காட்டிலும் வேறுபடாததால் மூவுலக வடிவில் உள்ளவர். பக்தர்களுக்கு அருள்புரிய மூவுலகையும் எப்போதும் சுற்றிச் சுற்றிவருபவர். (த்ரீந் லோகாந் அததி ஸததம் கச்சதி) (646)

647. த்ரிலோகேஶ: - மூவுலகையும் ஆள்பவர்.

மூன்று உலகங்களையும் தன் ஆளுகைக்கு உட்படுத்தி அவற்றில் அடங்கியவர்களைத் தம் தம் பணிகளில் ஈடுபடுத்திக் கட்டுப்படுத்துபவர்.[2] (647)

1. अभित्वा शूर नो नुमः । (अथर्वशिरः ५)
2. एष लोकपाल एष लोकेशः (कौषीतकी ३)

648. கேஶவ: - ஒளிக்கதிர்கள் கொண்டவர்.

*ஸூரியன் முதலிய ஒளி மண்டலங்களில் தன் நுண்ணிய ரோமம் போன்ற ஒளிக்கதிர்களைப் பரவச் செய்தும், ஸூரியன் முதலான ஒளி மண்டலங்களின் உள்ளுறையும் அந்தர்யாமியாகியும் ஒளிவிடுபவர். (நா. 23)* **"அம்ஶவோ யே ப்ரகாஶந்தே மமைதே கேஶஸம்ஜ்ஞிதா:. ஸர்வஜ்ஞா: கேஶவம் தஸ்மான் மாமாஹு: த்விஜஸத் த்மா:".** *(பாரத - சாந்தி. 350, 48)*

*பிரும்மா, விஷ்ணு, ருத்திரர் என மூவர் கேசங்கள் எனப்பெறுவர். அவர்களை சக்தியாகக் கொண்ட பரம்பொருள். அக்னி, ஸூர்யன், வாயு என்ற மூன்று சக்திகள் கொண்டவர்.*[1] *அஸுரர்களால் ஏற்பட்ட பாதை நீங்குவதற்காகத் தேவர்களால் வேண்டப்பெற்ற நாராயணர் தனது முடியிலிருந்து கரு நிறமும் வெண்ணிறமும் கொண்ட இரு கேசங்களைப் பிடுங்கி இவை கண்ணனாகவும், பலராமராகவும் தோன்றி உதவுவர் என வரம் தந்தார் (விஷ்ணு புராணம் (5, 1, 59-63)* **"தத்ராயம் அஷ்டமோ கர்ப்போ மத்கேஶோ பவிதாஸுரா:".** *இவ்வாறு கேசங்களே கண்ணனாகத் தோன்றச் செய்தவர். க: - பிரும்மா, ஈச: - ருத்திரர் இவர் இருவரையும் தன் அம்சமாக வெளிப்படுத்தியவர்.* **"கோ ப்ரம்ஹா இதி ஸமாக்க்யாத:, ஈஶோऽஹம் ஸர்வதேஹிநாம். ஆவாம் தவாம்ச ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவான்".** *(ஹரி வம்சம். 279, 47) (648)*

649. கேஶிஹா - கேசியைக் கொன்றவர்.

*கேசி என்ற அசுரன் கம்ஸனால் ஏவப்பெற்று குதிரை வடிவில் பிருந்தாவனத்தில் கண்ணனை மாய்க்க வந்தபோது அவனை மாய்த்தவர். கேசியைக் கொன்றதாலும் க்லேசத்தைப் போக்குவதாலும் கேசவர் என்பர் (நா. 23). (649)*

650. ஹரி: - துன்பத்தைக் களைபவர்.

*வேதத்தை தொடங்கும்போதும் முடிக்கும்போதும் தீர்த்த ஸ்நானம் முதலிய புண்ணியப் பணிகளைத் தொடங்கும்போதும் பாபங்கள் நீங்க இந்தத் திருநாமம் கூறப்படுகிறது. வேருடன் ஸம்ஸார பயத்தைப் போக்குபவர். கலி ஸந்தரண உபநிஷதம் கலியால் ஏற்படுகின்ற கெட்ட எண்ணங்கள் அகல இந்த நாமத்தை*

1. त्रय: केशिन: ऋतुथा विचक्षते। (ऋ. सं. १. १६४. ४४)

உபதேசிக்கின்றது. இத்துடன் சேர்ந்த இரு நாமங்கள் 'ராம', 'கிருஷ்ண' என்பது. யாகங்களில் மந்திரங்களால் சேர்ப்பிக்கப் பெறுகின்ற அவிர்ப்பாகத்தைத் தனதென ஏற்பதாலும், பாபத்தைப் போக்குவதாலும் பசுமையான பச்சைமேனி நிறம் கொண்டமையாலும் ஹரி: எனப்படுபவர்.[1] "தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே" (சங்கரர் ஹரிமீடே ஸ்துதி). வ்யூஹ நிலையிலும் உள்ளவர். (ப. 25) *(650)*

**कामदेवः कामपालः कामी कान्तः कृतागमः।**
**अनिर्देश्यवपुर्विष्णुर्वीरोऽनन्तो धनञ्जयः ॥ १०१ ॥**

**காமதேவ: காமபால: காமீ காந்த: க்ருதாகம:**
**அநிர்தேச்'யவபுர் விஷ்ணுர் வீரோऽநந்தோ தநஞ்ஜய: 101**

**651. காமதேவ: - காமனாக தேவனாக இருப்பவர்.**

அறம், பொருள் இன்பம், வீடு என்ற நான்கையும் விரும்புபவர்களுக்கு அவற்றை அருள்பவராக மன்மதனாக, பிரத்யும்னராக விளங்கும் தேவர். நம் மனத்தில் அறநெறிக்குப் புறம்பாக ஆகாத காமமாக, தெய்விக விருப்பமாக விளங்குபவர். 'தர்மாவிருத்தோ பூதேஷு காமோ அஸ்மி'. (கீதை. 7, 11) *(651)*

**652. காமபால: - விரும்பியதைக் காப்பவர்.**

விரும்பியதை உரிமையுடன் பெற்று அதனை இழக்காதவாறு காப்பவர். *(652)*

**653. காமீ - விரும்பியதை நிறையப் பெற்றவர்.**

பகவான் பூர்ணகாமரானபடியால் விரும்பியதை நிறைவுறப் பெற்றவர். விரும்பியதைவிடச் சிறந்த பொருளை வழங்குவதில் தணியாத ஆவலுடையவர். *(653)*

---

1. विश्वं नारायणं हरिम्। (तै. आ. १०. १३)
हरे राम हरे राम राम राम हरे हरे।
हरे कृष्ण हरे कृष्ण कृष्ण कृष्ण हरे हरे॥
इति षोडशकं नाम्नां कलिकल्मषनाशनम्।
षोडशकलावृतस्य जीवस्यावरणविनाशनम्।
ततः प्रकाशते परं ब्रह्म मेघापाये रविरश्मिमण्डलीव॥ (कलिसन्तरणोपनिषत् ६.२)

654. காந்த: - மனத்தை ஈர்ப்பவர்.

ஒப்பற்ற அழகாலும் குணச் சிறப்பாலும் மனத்தைக் கவர்பவர். மிக அழகிய வடிவம் தாங்கியவர். ஆசை நிறைவுற்றவரே மன நிறைவுள்ளவரே அழகராவார். (நா. 296) க: - பிரும்மா. பிரும்மாவின் ஆயுளுக்கும் ஒரு எல்லே உண்டு. பரம் என்ற அவரது ஆயுளேயும் முடிப்பவர். (654)

655. க்ருதாகம: - ஆகமங்களேத் தோற்றுவித்தவர்.

வேதங்களேயும் ஆகமங்களேயும் தனது ஆணேயாகத் தோற்றுவித்தவர். (655)

656. அநிர்தேஶ்யவபு: - குறிப்பிட இயலாத வடிவமைப்புள்ளவர்.

இது இன்னதெனக் குறிக்கப் பெயரும் வடிவும் இடமும் நிறமும் ஏனேய சிறப்புகளும் தனித்தனியே தோன்றிய பொருள்களனேத்திற்கும் உண்டு. பகவான் இவைகளேக் கடந்தவர். அதனுல் இன்ன வடிவமைப்பு கொண்டவர் எனக் குறிப்பிட முடியாது. பெயர் முதலியவை மாருதிருந்தாலும் குறிப்பிட முடியலாம். இவர் அவ்வப்போது அந்தந்த பெயரையும் மற்றதையும் தனதாக்கிக்கொண்டாலும் அவற்றை மாற்றிக்கொண்டே இருப்பவர். அதனுல் 'இவர் தான்', 'இப்படித் தான்' எனக்குறிப்பிட முடியாதவர்[1]. (நா. 177) (656)

657. விஷ்ணு: - மண்ணும் விண்ணுமளாவி நிற்பவர்.

மண்ணும் விண்ணுமளாவி நிற்கின்ற திருமேனி ஒளி கொண்டவர். "வ்யாப்தே மே - ரோதஸீ பார்த்த காந்தி: அப்ப்யதிகா ஸ்த்திதா" (பாரதம் சாந்தி. 350, 43) (நா. 2, 258) (657)

658. வீர: - சிறப்பாகச் செயல்படுபவர்.

பக்தர்களின் மனத்தை எளிதில் சென்றடைவதாலும் போரில் ஆயுதங்களே வேகமாகச் செலுத்துவதாலும், புதிது புதிதாக உலகைத் தோற்றுவிப்பதாலும் வீரர். (நா. 401, 643) (658)

---

1. अनिर्देश्यं परमं सुखम्। (कठ २. २. १४)

659. அநந்த: - முடிவற்றவர்.

*ஆரம்பமும் முடிவுமற்றவர். நேற்றும், இன்றும், நாளையும் என்றும் நித்தியராக இருப்பவரானதால் காலத்தால் முடிவற்றவர். எங்கும் பரவி இருப்பவரானதால் தேசத்தால் முடிவுறுதவர். எல்லாமாயிருப்பவரானதால் ஆணுகப் பெண்ணுக, அதுவாக இதுவாக இல்லை எனப் பொருளால் முடிவு கூற முடியாதவர்.[1] எல்லா சிறப்புகளையும் கூறி முடிக்க இயலாதவாறு விரிந்த குணச் சிறப்புள்ளவர். அச்யுத, அநந்த, கோவிந்த என்று மூன்று நாமங்களில் ஒன்று. (ப. 27, 518, 886) (659)*

660. தநஞ்ஜய: - செல்வத்தை வென்றடைந்தவர்.

*தர்மபுத்திரரின் ராஜஸூயம் நடப்பதற்குத் தேவையான செல்வத்தை அரசர்களுடன் போரிட்டு வென்று காணிக்கையாகப்பெற்ற அர்ஜுனனைத் தனது விபூதியாகக்கொண்டவர்.* "பாண்டவாநாம் தநஞ்ஜய:". *(கீதை 10, 37) செல்வத்தில் பற்றற்ற ஞானியால் சிறந்த விருப்பத்திற்குரிய செல்வமாகப் பெறப்படுபவர். (660)*

ब्रह्मण्यो ब्रह्मकृद् ब्रह्मा ब्रह्म ब्रह्मविवर्धनः ।
ब्रह्मविद्ब्राह्मणो ब्रह्मी ब्रह्मज्ञो ब्राह्मणप्रियः ॥ १०२ ॥

ப்ரம்ஹண்யோ ப்ரம்ஹக்ருத் ப்ரம்ஹா ப்ரம்ஹ ப்ரம்ஹவிவர்த்தந:
ப்ரம்ஹவித் ப்ராம்ஹணோ ப்ரம்ஹீ ப்ரம்ஹஜ்ஞோ ப்ராம்ஹணப்ரிய:
102

661. ப்ரம்ஹண்ய: - தவம் முதலியவற்றிற்கு இதமானவர்.

*பரம்பொருளின் ஸங்கல்பத்தால் விராட் வடிவில் விரிந்த உலகத்தைப் படைத்த பிரும்மா, பிரும்மா பெற்ற வேதங்கள், வேதம் தருகின்ற பேரறிவு, அதற்கு உதவ வேதம் வகுத்துள்ள தவ முறைகள் அவற்றை வேதம் கூறியபடி முறை வழுவாமல் பின்பற்றுகிற அந்தணன் இவை அனைத்தும் பிரும்மமே. இவற்றிற்குத் துணையாக உதவுபவர். (சு. 13)*

*எல்லாவற்றையும் அனுபவிக்கின்ற ஜீவன். அவனது அனுபவத்திற்கு அளவற்ற ஸாதனங்களாக அமைந்த பிரகிருதி.*

1. सत्यं ज्ञानमनन्तं ब्रह्म । (तै. उ. २. १) अनन्तमव्ययं कविं (तै. आ. १०. १२)
नैव स्त्री न पुमानेष: (श्वेताश्व ५. १०)

*அதனுல் பெறப்படும் மிகவும் விரிந்த சுகம், இந்த மூன்றிற்கும் இதமானவர். ப்ரும்மமாகிய தவத்தைத் தானே ஆசாரியனுகச் செய்து காட்டி நிற்கின்ற நரர் நாராயணர் வடிவில் தவ முறைகளைக் காப்பாற்றுபவர். ஹயக்ரீவன் என்ற அஸுரன் வேதத்தை அபகரித்துச் சென்றபோது மத்ஸ்யமூர்த்தியாக அவனைக் கொன்று வேதத்தைக் கொணர்ந்து காப்பாற்றியவர், வேதத்தால் பெறத்தக்க பேரறிவை கீதை முதலியவற்றல் பரப்பியவர். தவச்சீலரான அந்தணர்களைக் காப்பாற்றுவதற்காக அடிக்கடி தோன்றுபவர். (661)*

662. ப்ரும்ஹக்ருத் - தவம் முதலியவற்றைப் படைத்தவர்.

*பிரும்மா, தவம், வேதம், அந்தணர் முதலானேரைச் சிறப்புப் பொருளாகப் படைத்தவர்.[1] (662)*

663. ப்ரம்ஹா - பிரும்மாவாயிருப்பவர்.

*பரமன் தன்னையே படைத்தற்குரிய பொருளாக்கிக் கொண்டமையால் முதலில் படைக்கப்பெற்ற பிரும்மாவும் அவரே. அவர் மூலமாக உலகைப் படைத்துப் போஷிப்பவர்.[2]*

*ப்ரும்ஹக்ருத் ப்ரும்ஹா என்று ஸ்ரீபட்டர் உரைப்படி ஒரே நாமம். பிரகிருதியை மஹத் அஹங்காரம் என வரிசையாக விரிவடையச் செய்து உலகமாகத் தோற்றுவித்தும் பிரும்மாவை நியமித்து அவருக்குப் படைப்பு முறை போதித்தும் உதவியவர். (663)*

664. ப்ரம்ஹ - பரம்பொருள்.

*பிரகிருதி பெறுகின்ற விரிவு அனைத்திற்கும் இடம் அளிப்பதும் விரிவடையச் செய்வதுமான பெரும்பொருளான பரம்பொருள். ஸத்யம், ஞானம், அநந்தம் என்று உபநிடதங்களால் உருவகப்படுத்தி விளக்கப்பெற்றது. வேற்றுமையற்று, இருக்கை ஒன்றே வடிவமாகிப் பொறிகளுக்கும் சொல்லுக்கும் அகப்படாமல் தன்னுணர்வு ஒன்றல் மட்டும் உணரக்கூடிய பேரறிவு.* "ப்ரத்யஸ்தமிதபேதம் யத் ஸத்தாமாத்ரம் அகோசரம்: வசஸாம், ஆத்மஸம்வேத்யம், தத் ஜ்ஞானம் ப்ரும்ஹஸம்ஜ்ஞிதம்". *(விஷ்ணு புராணம். 6, 7, 53). தனது திவ்ய*

1. स प्राणमसृजत तपो मन्त्राः कर्म लोकाः लोकेषु च नाम च। (प्रश्न ६. ४)
2. सर्वाणि बृंहयतीति ब्रह्म। (अथर्वशिखा २)

*மங்கள குணங்களால் வ்யக்தநிலைக்கு வந்ததும் அவ்யக்த நிலையிலிருப்பதும் வ்யஷ்டியாயும் ஸமஷ்டியாயும் உள்ளதுமான தனைத்திற்கும் ஊட்டமளிப்பவர். தானும் ஊட்டம் நிறைந்து பெரிதிலும் பெரிதாக இருப்பவர்.* **(664)**

665. **ப்ரம்ஹவிவர்த்தந: - தவம் முதலியவற்றை வளர்ச்சியுறச் செய்பவர்.**

*பேரறிவையும் தவம் முதலானவற்றையும் வளர்ப்பவர்.* **(665)**

666. **ப்ரம்ஹவித் - வேதமறிந்தவர்**

*வேதத்தையும் அதன் பொருளையும் முழுவதும் அறிந்தவர். அந்தணர்கள் தவமியற்றியபோது பரம் பொருள் வேத வடிவில் அவர்களைச் சென்றடைந்தது. வேதத்தைக் கண்டறிந்த ருஷிகள் வடிவில் உள்ளவர்.[1] வேதம் அறியச் செய்பவர்.* **(666)**

667. **ப்ராம்ஹண: - அந்தணராயிருப்பவர்.**

*வேதமோதியும், ஓதுவித்தும் வேதத்திற்காகவே இருப்பவர் (ப்ரம்ஹண: வேதஸ்யாயம் ப்ராம்ஹண:) அந்தணர். வேதத்தால் அறியத்தக்கதை உணர்த்தத் தானே ஸ்ரீ தத்த குரு முதலிய அந்தணர் வடிவில் தோன்றியவர்.[2]* **(667)**

668. **ப்ரம்ஹீ - வேதம் முதலானவற்றைத் தன் உடைமையாகக் கொண்டவர்.**

*வேதமும், தவமும், அந்தணரும், பிரும்மாவும், பரம்பொருளைக் காட்டவே வந்தமையால் பரம்பொருளின் உடைமை. பரம்பொருளை உணர்த்தவே தோன்றியவை.* **(668)**

669. **ப்ரும்ஹஜ்ஞ: - வேதம் உணர்ந்தவர்.**

*பகவானது மூச்சுக் காற்றாகவும், சரீரமாகவும் உள்ள வேதத்தின் முழுப்பொருள் உணர்ந்தவர் வடிவினர். (நா. 128, 131)* **(669)**

---

1. अजान्ह वै पृश्नींस्तपस्यमानान्ब्रह्म स्वयंभ्वभ्यानर्षत्त ऋषयोऽभवन्तदृषीणामृषित्वम् । (तै.आ.२.९) 2. वेदान्तकृद्वेदविदेव चाहम् । (कैवल्य २२)

670. ப்ராம்ஹணப்ரிய: - வேதத்திற்காக வாழ்பவனிடம் பிரியமுள்ளவர்.

*வேதம் ஓதி உணர்ந்து ஓதுவித்து வேதத்திற்காகவே வாழ்கின்ற அந்தணருக்கு வேண்டியவர். அந்தணரைத் தனக்கு வேண்டியவராகக் கொண்டவர். வேதமே பகவான். அதனை ஓதுகிற போது வேதத்தில் அந்தணருக்கு ஏற்பட்ட பிரியம் பகவானிடத்தில் பிரியமாக ஆகிறது. வேதமாகத் தன்னுள் அமர இடமளித்த அந்தணரிடம் பகவானுக்கும் பிரியம். (670)*

**महाक्रमो महाकर्मा महातेजा महोरगः ।**
**महाक्रतुर्महायज्वा महायज्ञो महाहविः ॥ १०३ ॥**

**மஹாக்ரமோ மஹாகர்மா மஹாதேஜா மஹோரக:**
**மஹாக்ரதுர் மஹாயஜ்வா மஹாயஜ்ஞோ மஹாஹவி: 103**

671. மஹாக்ரம: - பெரும் அடி வைப்பு உள்ளவர்.

*மூவுலகளந்த பெருமானின் அடி வைப்பு மிகப் பெரிது. நமது அளவைக் கருவிகளால் அளக்க முடியாதது. - அவற்றின் அளவைக்குள் அகப்படாத பெருமளவுள்ள அடி வைப்புள்ளவர்.[1] மிகக் கீழ் நிலையிலுள்ளவனையும் தனது பெரு நிலைக்குத் தாய் போல் அழைத்துச் செல்பவர். பெரிதை அடையச் செய்கின்றதும் வரிசைப்படுத்துவதுமான பெருஞ்செயலமைப்புள்ளவர். தன் பால். பசுவின் பால், அன்னம், அனைத்து உணவுப்பொருள் என வரிசையமைத்து உணவுப் பழக்கம் ஏற்படுத்துகின்ற தாய் போல் புண்யச் செயலில் ஈடுபாடு, நம்பிக்கை, முனைவு, ஸ்வரூபஜ்ஞானம், பக்தி, ஆத்ம நிவேதனம் என்றவாறு தன்னை அடையப் படிகளை அமைத்துத் தன்னை அடையச் செய்பவர். (671)*

672. மஹா கர்மா - பெருஞ்செயலர்.

*உலகைத் தோற்றுவித்துக் காத்துத் தன்னுள் ஒடுக்கிக்கொள்வதாகிய பெருஞ்செயல்கள் கொண்டவர். புழுவிலும் கடையனைப் புனிதனுக்குகின்ற பெருஞ்செயல் கொண்டவர். (672)*

1. शं नो विष्णुरुरुक्रमः । (तै. उ. १. १.)

673. மஹா தேஜா: - பெருஞ் தேஜஸ் கொண்டவர்.

*பேரொளிகளான ஸூர்யன் முதலானோருக்கும் மேம்பட்ட பேரொளி கொண்டவர். ஸூர்யனுக்கும் ஒளி வழங்கி உலகிற்கு ஒளி வழங்கிய பேரொளி.[1] (நா. 275, 483) மிக மிகப் பெரிது அஜ்ஞானம். உலகனைத்தும் அவரே என்ற உண்மையை மறைக்கு மளவிற்குப் பெரிது. அதனை விரட்டுகிற பேரொளி ஞானம். அவரை உணர்த்தும் பேரறிவு வடிவினர்.*

*துஷ்டர்கள் விஷயத்தில் தயையின்றி இறுகிய உள்ளமும் கொடூரத் தோற்றமும் கொள்வது, மிகவும் வலிவுள்ளவர்களையும் எதிர்த்தடக்கி வெற்றி கொள்வது, பிறரால் வெற்றி கொள்ள முடியாமை முதலிய குணங்களும் தேஜஸ் என்பதன் பொருளாகும். பெருந் தேஜஸ் கொண்டவர். (673)*

674. மஹோரக: - பெரும் பாம்பு.

*மார்பால் ஊர்ந்து செல்கிற பெரும் பாம்புகளில் வாஸுகி பகவானின் விபூதி.* 'ஸர்பாணாமஸ்மி வாஸுகி: *(கீதை. 10, 28) பயங்கரமான ஸர்பங்களின் வடிவில் இருப்பவர்.*

*பெரும் உள்ளத்தினுள்ளும் நுழைந்து ஆட்படுத்துபவர். தான் மிகப் பெரியவராயினும் மிக எளியவனது உள்ளத்திலும் அந்தர்யாமியாக வசிப்பவர். (674)*

675. மஹாக்ரது: - பெரும் வேள்வியாயிருப்பவர்.

*தனித்தொரு பயனைக் குறித்து செய்யப்பெறுகிற க்ரதுவாகிய அச்வமேதம் முதலானதன் வடிவிலிருப்பவர். (நா. 448) அவரது அருளைப் பெறச் செய்யப்பெறுகிற வேள்வி பெரு வேள்வியாகிறது. அவருக்கு அர்ப்பணம் செய்யப்பெறும் சிறிதளவு புண்ணிய காரியமும் பெருவேள்வியாகிவிடும். அந்தப் பெரு வேள்வி வடிவிலிருப்பவர். (675)*

676. மஹாயஜ்வா - பெரு வேள்வி புரிபவர்.

*வேள்வியும் அவரே. வேள்வி புரிபவரும் அவரே. உலகிற்கு வழிகாட்டுபவர்களாக ஸ்ரீராமனும், கிருஷ்ணனும் பெரும் வேள்விகளில் ஈடுபடுகிறார்கள், அவரைக் குறித்து வேள்வி*

1. येन सूर्यस्तपति तेजसेद्धः । (तै. ब्रा. ३. १२. ९)

புரிபவனும் மஹான் ஆகிறான். பகவானுக்கு எட்டு உடல்கள், ஐம்பூதங்கள், சந்திரன், ஸூர்யன், வேள்வி புரிபவன் என. (சாகுந்தலம் 1,1) "பூதார்க்க சந்த்ர யஜ்வானோ மூர்த்தயோ அஷ்டௌ ப்ரகீர்திதா:" (ஸ்மிருதி) அந்த வேள்வி புரிபவர் வடிவில் இருப்பவர். (676)

677. மஹாயஜ்ஞ: - சிறந்த ஜபயஜ்ஞமாக இருப்பவர்.

பலனை எதிர்பாராமல் கடமையெனக் கருதி செய்யப்பெறும் ஐந்து யஜ்ஞங்கள் (பஞ்ச யஜ்ஞங்கள்) யஜ்ஞம் எனப்பெறும். தேவர், பித்ருக்கள், ருஷிகள், மனித இனம், மற்ற உயிரினமென இவ்வைவரும் பலன் கருதாமல் அவரவர் கடமைகளைச் செய்வதால் மழை, ஸந்ததி, கல்வி முதலியவை மனிதனை வந்தடைகின்றன. இவற்றைப் பெற்றதற்கு நன்றி தெரிவிப்பதாக இந்த பஞ்ச யஜ்ஞங்கள் அமையும். அந்த தேவர் முதலிய ஐவரும் இறைவனின் அருள் வடிவமே. அவர்களைக் குறித்துச் செய்யப்பெறும் யஜ்ஞங்களும் ஈச்வர ஆராதனமே. எல்லா யஜ்ஞங்களிலும் ஜபயஜ்ஞம் மிகப் பெரிது. அது பகவானின் விபூதி. "யஜ்ஞானாம் ஜப யஜ்ஞோ அஸ்மி" (கீதை 10, 28) - ஜப யஜ்ஞம் எளிதில் செய்யக்கூடியது. பெரும் பலனளிக்கவல்லது. எப்போதும் செய்யக்கூடியது (ப. 16) வாமனரைப் பெற அதிதி புரிந்த விரதம், ஸ்ரீராமனைப் பெற தசரதர் புரிந்த புத்திர காமேஷ்டி முதலிய பெரும் வேள்விகளின் பலனாக வந்தவர். (677)

678. மஹாஹவி: - பெரும் அவிஸாக இருப்பவர்.

வேள்விகளில் அக்னியில் ஸமர்ப்பணம் செய்யப்படுகிற பொருளும் (அவிஸ்) பகவானே. "அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ: ஸ்வதா (அ)ஹம் அஹமௌஷதம். மந்த்ரோ (அ)ஹம் அஹமேவாஜ்யம் அஹமக்நி: அஹம் ஹுதம்". (கீதை 9, 16) "ப்ரம்ஹார்பணம் ப்ரம்ஹ ஹவி: ப்ரம்ஹாக்நௌ ப்ரம்ஹணா ஹுதம். ப்ரம்ஹைவ தேந கந்தவ்யம் ப்ரம்ஹகர்மஸமாதிநா (கீதை. 4, 24) ஹோமம் செய்ய உதவும் கரண்டி, (ஸ்ருக் ஸ்ருவம் முதலியவை) கரண்டியில் எடுக்கப்பெற்ற ஹோமப்பொருள் (அவிஸ்) அதனை ஏற்கும் நெருப்பு, ஹோமம் செய்பவன், அந்த ஹோமம் எனும் செயல் இவை அனைத்தும் பரம் பொருளே. பரம்பொருளே இந்தச் செயல் என்ற திட எண்ணத்தால் நடந்த ஹோமத்தின் பயனாக அடையப்பெறும் பயனும் பரம்பொருளே.

ரஹோயாகம் என்ற முறையில் ஞானமாகிய வேள்வித் தீயில் அர்ப்பணம் செய்யப்பெறுகிற 'நான்', 'எனது' எனும் எண்ணம் பெரும் அவிஸ் ஆகும். புண்ணியம் - பாபம், நற்செயல் - தீச்செயல், செயலாற்றத் தூண்டிய மனத்தின் ஸங்கல்ப - விகல்பங்கள், அதற்குத் தூண்டுகோலான தர்மம் - அதர்மம் என்ற செயல்கள் இவை இறைவனிடமிருந்து நம்மைப் பிரிப்பவை. இந்த எட்டையும் ஆஹுதி செய்த பின் மறைப்புகள் அனைத்தும் விலகித் தான் ஒளி வடிவினனாகத் தூயவனாக ஆகிவிட்டதாகப் பாவனை செய்வதே ரஹோயாகம். **"அந்த: நிரந்தர மநிந்தனமேதமாநே மோஹாந்தகார பரிபந்தினி ஸம்விதக்நௌ. கஸ்மிம்ச்சித் அத்புத மரீசிவிகாஸ பூமௌ விச்வம் ஜுஹோமி வஸுதாதி சிவாவஸாநம்".** "என்னுள் விறகின்றி இடைவிடாமல் கனன்று கொண்டிருப்பதும் மோகமாகிய இருட்டிற்கு எதிரியும் வியக்கத்தக்க ஒளிக்கதிர் பரப்புகின்றதும் இன்ன தன்மை படைத்தது என அறிய இயலாதிருப்பதுமான ஞானமாகிய வேள்வித் தீயில் பூமி முதல் சிவன் ஈறான முப்பத்தாறு தத்துவங்களாலான விசுவத்தை ஹோமம் செய்கிறேன்". (அந்தர்யாக விதானம்). பிரளயத்தில் எல்லாவற்றையும் அவிஸாக ஏற்றுத் தன்னுள் அடக்கிக்கொள்பவர். ஹோமம் செய்யப்பெற்ற பின் அப்பொருள் நெருப்பின் வடிவில் மறைந்து நெருப்பாகவே ஆகிறது. உலகமும் பரமனிடம் ஹோமம் செய்யப்பெற்றதும் பரமனாகவே ஆகிவிடுகிறது. (678)

**स्तव्यः स्तवप्रियः स्तोत्रं स्तुतिः[1] स्तोता रणप्रियः ।**
**पूर्णः पूरयिता पुण्यः पुण्यकीर्तिरनामयः ॥ १०४ ॥**

**ஸ்தவ்ய: ஸ்தவப்ரியஸ் ஸ்தோத்ரம் ஸ்துதஸ்ஸ்தோதா ரணப்ரிய:**
**பூர்ண: பூரயிதா புண்ய: புண்யகீர்த்திரநாமய:**

**679. ஸ்தவ்ய: - துதிக்குகந்தவர்.**

இவர் எல்லோராலும் துதிக்கப்பெறுகிறார். இவர் மற்றவரைத் துதிப்பதில்லை. இவரது துதிக்கு உகந்தவர் மற்றொருவர் இல்லை. செயற்கையாகச் சேர்க்கப்பெறாத திவ்ய குணங்கள் பெற்றமையால் இவரே எப்போதும் துதிக்கேற்றவர். இந்தஆயிரம் நாமங்களால் துதிக்கத் தக்கவர். எப்போதும் இயல்பாக

1. स्तुतः *ஸ்துத: (பா)*

அமைந்த குணங்களைச் சிறப்பித்துக் கூறுகிற (ப. 15) ஸ்துதிக்கு உரியவர்.[1] துதி எனும் சொல்லளவில் அடங்காத பெருமையுடைய வரானதால் இன்னம் பல்லாயிர ஆண்டுகள் துதித்தாலும் துதித்து முடியப் பெருத கீர்த்தி உள்ளவர், இன்னம் துதிக்கத்தக்க பெருமை உள்ளவர். (679)

680. ஸ்தவப்ரிய: - துதியை விரும்புபவர்.

எண்ணமும், செயலும், சொல்லும் நேராகிச் செய்யப் பெறும் துதியில் பகவான் மகிழ்வார். அது அவருக்குப் பிரியமானது. அவரைத் துதிப்பதற்கெனவே அளித்த வாயை - அளிக்கப்பெற்ற சொற்களஞ்சியத்தை அதற்கே பயன்படுத்தியதில் மகிழ்பவர். துதியால் மகிழ்வது தற்பெருமை உணர்வால் அல்ல. (680)

681. ஸ்தோத்ரம் - துதிக்கான சொல்லாயிருப்பவர்.

இறைவனது கல்யாண குணங்களைப் பாடுகிற சொல் அவரே. நல்ல சொல்லும் அவரருளால் தான் உருவாகிறது. (681)

682. ஸ்துதி: - துதி எனும் செயலாயிருப்பவர்.

செயலனைத்தும் அவரருளால்தான் உருவாகிறது. பகவானை உணர்ந்து அவரது மங்கள குணங்களைப் பாடுவது என்பது பேரருளின் விளைவாகும். துருவன் தவத்தின் பயனுகப் பகவானைக் கண்டதும் பேச்சிழந்து செயலற்று ஸ்தம்பித்து நின்ருன். அந்நிலை அவனுக்குப் பெருந்துன்பம் தந்தது. அருளாளரான பகவான் ஞானவடிவான சங்கினுல் அவனது காதருகே தொட்டார். துருவன் உணர்வைப் பெற்றுச் செயலாற்றலைத் திரும்பப் பெற்ருன். திரும்பப் பேசும் திறனைப் பெற்றது அவர் அருளால்தான் என்பதை உணர்ந்த துருவன் பேச்சை அவர்பால் திருப்பும் துதி எனும் செயலும் கைகூடுவதைக் கண்டு மகிழ்ந்து பாடுகிருன். "யோ அந்த: ப்ரவிஶ்ய மம வாசமிமாம் ப்ரஸுப்தாம் ஸஞ்ஜீவயத்யகில ஶக்திதர: ஸ்வதாம்நா. அந்யாம்ஶ்ச ஹஸ்த சரண ஶ்ரவண த்வகாதீன் ப்ராணுன் நமோ பகவதே புருஷாய துப்யம்". "என்னுள் நுழைந்தார். உணர்விழந்து இறந்தது போலான என் பேச்சுத் திறனுக்கு உயிரூட்டினுர். தன் தனிப்பட்ட பெருமையால் எல்லாவித சக்திகளையும் ஒருங்கே தருவதற்காக ஏந்தி நின்று கை. கால், காது, தோல் என ஒவ்வொன்றிற்கும்

1. तमीशानं वरदं देवमीड्यं, तं विश्वरूपं भवभूतमीड्यं (श्वे ५. ११. ६. ४)

*அசைவைத் தந்தார். அந்த பரம புருஷனை வணங்குகிறேன்'' என. அவர் அருளால்தான் அவர் பேர் பாட முடியும்.*

*ஸ்துத: என்று ஸ்ரீ பட்டரின் பாடம். முன் உள்ள ஸ்தோத்ரம் என்ற நாமம் துதிப்பதற்கான சொல்லையும் துதி எனும் செயலையும் குறிக்க, ஸ்துத: - அந்த சொல்லாலும், செயலாலும் துதிக்கப் பெறுபவர் பகவானே என்று பொருள்.* *(682)*

683. ஸ்தோதா - துதிப்பவர்.

*ரதந்தரம், வாமதேவ்யம், பிருஹத் என்ற மூன்று ஸாமங்களாலும், மந்திரங்களாலும் துதிப்பவரும் அவரே. இறைவனை வாயாரப் பாடவும் அவரது அருள் தேவை. தன்னைத் துதிப்பவரை இறைவன் துதிப்பார். இது அவரது இயல்பு.* *(683)*

684. ரணப்ரிய: - போரில் ஈடுபாடுள்ளவர்.

*எப்போதும் சங்கு, சக்கிரம், கதை, வில், கத்தி என்ற ஐந்து ஆயுதங்களை ஏந்திப் போருக்குச் சன்னத்தமாயிருப்பவர். உலகைக் காப்பதில் கவன மிகுதியால் ஏற்பட்ட கோலம் இது. ராவணாதியருடன் போரிடத் துடித்து நிற்பவர்.* *(684)*

685. பூர்ண: - நிறைந்தவர்.

*எல்லா ஆசைகளும் நிறைவுற்றவர். ஆசைகளை நிறைவேற்ற உதவுகின்ற சக்தி நிறைந்தவர். அடைய வேண்டியது அனைத்தையும் அடைந்தவர். எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர். தன்னைத் தவிர வேறொன்றில்லையாதலால் அடையத்தக்கதென ஒன்றையும் நாடாதவர். எதனையும் எதிர்பாராதவராதலால் துதிக்கும் எளிய வழிபாட்டிற்கும் எளிதில் வசப்படுபவர்.*[1] *(685)*

686. பூரயிதா - நிறைவு தருபவர்.

*தான் நிறைந்தவராதலால் தன்னிடமுள்ள நிறைவைத் தன்னை வழிபடுபவர்களுக்கும் அருள்பவர். எல்லாச் செல்வங்களும் எல்லா சக்திகளும் நிறைவுறச் செய்து பக்தர்களின் எதிர்பார்வைகளை நிறைவேற்றுபவர்.* *(686)*

---

1. पूर्णमद: पूर्णमिदं (बृहदा ५. १. १) पूर्णमप्रवर्ति (बृहदा २. १. ५) तदेतत्पूर्णमप्रवर्ति (छान्दोग्य ३. १२)

687. புண்ய: - புண்ணியர்.

எதிர்பார்வைகள் நிறைவதற்கு இடையூருக இருப்பவை பாபங்கள். முன் செய்த தீவினைகளின் தடம் மனத்தில் ஆழ்ந்து பதிந்திருப்பதால் தானே கிளர்ந்தெழும் தீய எண்ணங்கள், தீச்செயலில் ஈடுபடுத்தும். இவை யாவும் பாபங்களே. பகவானின் நினைவு இந்த பாபங்களை அகற்றித் தூய்மை தந்து, புண்யமான எண்ணங்களை ஏற்படுத்துகின்றது. தூய்மை தருவது புண்யம். புண்யச் செயலுள்ளவர் புண்ய:[1] பாபியையும் தன்னைத் துதிக்கத் தக்கவனுக்கும் புண்ணியர். (687)

688. புண்ய கீர்த்தி: - தூய்மை தரும் புகழ் உள்ளவர்.

அவரை நினைத்தால் தூய்மை ஏற்படும். நினைப்பதற்கு அவரது பெருமையுணர்வு தேவை. எங்கும் பரமனது தூய்மை தரவல்ல திவ்ய மங்கள குணங்கள் பரவி நிற்கின்றன. தேவரும், மனிதரும் அவரது புகழைப் பாடியவண்ணம் இருக்கின்றனர். தூய்மை தருகின்ற அவரது புகழ் நம் காதுகளில் தானே நுழைந்து நம் மனத்தையும் தூயதாக்குகின்றது. (688)

689. அநாமய: - நோயற்றவர்.

மீ என்ற வினைச்சொல் மரண மீறுன துன்புறுத்தலைக் குறிக்கும். உள்ளும் புறமும் துன்புறச் செய்தும், செயலிழக்கச் செய்தும். கட்டுப்படுத்துவது நோய் (ஆமய:) பிறப்பிறப்புத் தொடரே பெரும் நோய். அந்த நோய்கள் அற்றவர். தன்னை அண்டியவரது நோய் நீக்குபவர்.

நோய் போன்று உள்ளும் புறமும் துன்புறுத்துகிற சூழ்நிலையை அகற்றிப் புண்ய நினைவுகள் தந்து, பாப நினைவுகளை அகற்றி, தன் பெருமையை உணர்த்திப் பாடச் செய்து, அந்தப்பாட்டாகிப் பாட்டின் பொருளாகிப் பாட்டால் மகிழ்ந்து, தன் இயல்பாகிய நிறைவைப் பாடியவனுக்குமளித்து மகிழ்பவர் என்ற இறைவனின் சிறப்பை ஸ்தவ்ய: எனத் தொடங்கி அநாமய: என்பது வரை சித்திரிக்கிருர் பீஷ்மர். (689)

मनोजवस्तीर्थकरो वसुरेता वसुप्रदः ।
वसुप्रदो वासुदेवो वसुर्वसुमना हविः ॥ १०५ ॥

---

1. पुण्यो वै पुण्येन कर्मणा भवति । (बृहदा ३. २. १३. ४. ४. ५)

மநோஜவஸ் தீர்த்தகரோ வஸுரேதா வஸுப்ரத:
வஸுப்ரதோ வாஸுதேவோ வஸுர் வஸுமநா ஹவி: 105

690. மநோஜவ: - மனத்தின் வேகமுடையவர்.

*ஒன்றைச் சென்றடைவதில் காலமும், தேசமும், பொருளும் தடையாக இருக்கும். வேகத்துடன் செல்வதால் காலதேசங்களின் தடையை நீக்கலாம். வேகத்துடன் செல்பவனிடமிருந்து தடை செய்கின்ற பொருள் ஒதுங்கிவிடும். பகவான் செயல்படும் வேகம் மனத்தின் வேகத்தை ஒத்தது. ஒன்றைச் சென்றடைவதற்கு தற்போது இருக்கின்ற இடம் விட்டுப் பெயர வேண்டும். பகவான் எங்கும் நீக்கமற நிறைந்தவர். அவரால் அசைய முடியாதே ! மனம் இருக்குமிடத்தை விட்டு நகராமலேயே வெகு தூரம் செல்லும். அசைவில்லாமல் வேகமாகச் செல்லும். காலத்தின் முன்னும் பின்னும் செல்லும். பகவானும் இருக்குமிடம் விட்டசையாமல், காலமோ இடமோ கட்டுப் படுத்தாமல் எங்கும் எல்லாமாயிருப்பதனுல் எப்பொருளுடனும் வேகத்துடன் தொடர்புகொள்ள முடிந்தவர்.[1] மனத்தின் வேகத்தைப்போல் வேகமுள்ளவர். மனோஜவர் என ஆஞ்சநேயருக்குச் சிறப்புப் பெயர். கடலின் வடகரையிலிருந்தபடியே தென்கரையிலுள்ள இலங்கையை மனத்தால் சென்றடைந்தவர். 'ஜகாம லங்காம் மநஸா மநஸ்வீ' (ராமாயணம் 4-67-49) (690)*

691. தீர்த்தகர: - கல்வித்துறைகளை அமைத்தவர்.

*தீர்த்தம் - துறை. கல்வி எல்லேயற்ற நீர் நிலயம் போன்றது. நீர் நிலயத்தில் ஆபத்து இல்லாததும் எளிதில் இறங்கி நீராடுவதற்கு உதவுவதுமான துறைகளிருப்பதுபோல் கல்விக்கும் பல துறைகள் உள்ளன. பதினன்கு அல்லது பதினெட்டு வித்யா ஸ்தானங்கள் என அதனைக் குறிப்பிடுவர். (சு. 8) இது தவிர பௌத்தம், ஜைநம் முதலிய வேதத்தைப் பிரமாணமாக ஏற்காத வித்யா ஸ்தானங்களும் உண்டு. இவற்றைத் தோற்றுவித்தவர் பகவான். வேதம் முதலியவற்றை அபகரித்துச் சென்ற மதுகைடபர்களை ஹயக்கிரீவராகத் தோன்றி மாய்த்து வேதம் முதலியவற்றைப் பிரும்மாவிடம் தந்து போதித்தார். வேதத்திற்குப் புறம்பானவற்றை அஸுரர்களுக்கு உபதேசித்தார். (பாரத சாந்தி. 347).*

*தன்னைப்போல் நினைத்தால் தூய்மை தருகின்ற கங்கை, காவிரி போன்ற தீர்த்தங்களை அமைத்தவர். உயர்ந்ததல்லாததை உயர்ந்ததாக்கியவர். மதிப்பிழந்ததை மதிப்புள்ளதாக்குபவர். முதல் தீர்த்தங்கரரான ருஷபயோகியாயிருப்பவர். (பாகவதம். 5, 6,) (691)*

692. வஸுரேதா: - தங்கம் போன்ற வீர்யமுள்ளவர்.

*வஸு - தங்கம். தூய்மையும் ஒளியும் உள்ளது. மோதிரம், சங்கிலி போன்ற பல மாற்றுருவம் கொள்ளத்தக்க மூலப்பொருள். ரேதஸ் - கருவாகக்கூடிய ஆணின் விந்துவில் உள்ள மூலப்பொருள், காரணப்பொருள். உலகத்தைப் படைப்பதற்கான பகவானின் ஸங்கல்பம், அவரிடமிருந்து மாயையால் வெளியான மூலப்பிரகிருதியில் மாற்றத்தை விளைவித்தது. மூலப்பிரகிருதி உருகிய தங்கம் போல் தக தக என ஒளியுடனிருந்தது. அது பரஸ்பர இணைப்பு பெறாத தனித் தனி பூதங்களான ஆகாசம் முதலியவற்றின் மூலகாரணம். அதனுள் ஹிரண்ய கர்ப்பன் என்ற உலகப் படைப்பிற்கான சைதன்யத்தை வீர்யமாக்கி நுழைத்தார். அது தங்கமயமான உலகக் கரு ஆகியது. அது விராட் எனும் நிலைக்கு மூலகாரணமானது.* "தேவ: பூர்வமப: ஸ்ருஷ்ட்வா தாஸு வீர்யமவாஸ்ருஜத். ததண்டமபவத் ஹைமம் ப்ரும்ஹண: காரணம் பரம்" *தனது பேரொளியையே தனது தோற்றங்களுக்குக் காரணமாகக் கொண்டவர். (நா. 269, 270) (692)*

693. வஸுப்ரத: - செல்வமளிப்பவர்.

*குபேரன் முதலானவர்க்குச் செல்வம் அளிக்கும் தகுதியை அருளிய வள்ளல். இன்பம் தருவதும், நிலைத்து நிற்பதுமான செல்வம் வஸு. அறம், இன்பம் என்ற இரு புருஷார்த்தங்களுக்கு இதமான அர்த்தம் - வஸு, அதனை அருள்பவர். (நா. 269, 270 694) தன்னையே செல்வமாக - புத்திரனாக வஸுதேவர், தேவகி, அதிதி, கௌஸல்யை முதலானோர்க்குத் தந்தவர். (693)*

694. வஸுப்ரத: - பெருஞ்செல்வமாகிய மோக்ஷத்தைத் தருபவர்.

*அறம், பொருள், இன்பம் என்ற மூன்றைவிடச் சிறந்த பொருள் மோக்ஷமாகும். பகவானது நோக்கில் அதுவே சிறந்த செல்வம், நிலைத்த பேரானந்தம். அதனை அருள்பவர்.*[1] *மோக்ஷத்தில்*

1. विज्ञानमानन्दं ब्रह्म रातिर्दातुः परायणं (बृहदा. ३. ९. २८)

ஈடுபாடு ஏற்பட்டதும் உலகப்பற்று நீக்குவதற்காகப் பொருளாசையைத் துண்டிப்பவர். தேவர்களின் எதிரிகளான அசுரர்களின் செல்வங்களை அழிப்பவர். (வஸூந் ப்ரகர்ஷேண த்யதி கண்டயதி). உலகின் தந்தையாகிய தனக்கும் தந்தையாகின்ற பெரும் பேற்றை வஸுதேவர், தசரதர், கசியபர் முதலானோர்க்கு அருளியவர். (ஒரே சொல்லமைப்புடன் தொடர்ந்து வரும் இரு நாமங்கள்.) (694)

695. வாஸுதேவ: - வஸுதேவரின் குமாரர்.

வஸுதேவருக்குத் தேவகியிடம் தோன்றிய குமாரர்.[1] (நா. 332, 709) (695)

696. வஸு: - தங்குமிடமாயிருப்பவர்.

தோன்றிய பொருளனைத்தும் பகவானாகிய ஆதாரத்தின் மீது தோன்றுகின்றன. (வஸந்தி அஸ்மிந்) அவற்றினுள் ஜீவனாகவும், அந்தர்யாமியாகவும் இவர் உறைந்துள்ளார். (வஸதி). (நா. 104, 270, 332) வசிக்க நல்லிடமாகத் திருப்பாற்கடலைக் கொண்டவர். (696)

697. வஸுமநா: - பரந்த மனமுள்ளவர்.

பாகுபாடின்றி எல்லாம் பொருள்களிலும் பரவிநிற்கும் மனம் உள்ளவர். (697)

698. ஹவி: - அவிர்பாகமாக உள்ளவர்.

பிரும்மார்ப்பணமாகச் செய்யப்பெறும் வேள்வியில் எல்லாமே பிரும்மம். அத்தகைய வேள்வியில் ஹோமம் செய்யப்பெறும் பொருளாகிய அவிஸ்ஸாக இருப்பவர். தேவகியும் வஸுதேவரும் கம்ஸனிடமிருந்து பயமடைந்தபோது கோகுலத்தில் நந்தராலும் யசோதையாலும் வளர்ப்பதற்கு எடுத்துக்கொள்ளப் பெற்றவர். (நா. 678) (698)

**सद्गतिः सत्कृतिः सत्ता सद्भूतिः सत्परायणम्[2]**
**शूरसेनो यदुश्रेष्ठः सन्निवासः सुयामुनः ॥ १०६ ॥**

1. ஸ்ரீ பட்டர் உரைப்படி 700வது நாமம் இது.
2. सत्परायण: ஸத்பராயண: (பா)

ஸத்கதிஸ் ஸத்க்ருதிஸ் ஸத்தா ஸத்ப்பூதிஸ் ஸத்பராயணம்[1]
ஶூரஸேநோ யதுஶ்ரேஷ்டஸ் ஸந்நிவாஸஸ் ஸுயாமுந: 106

699. ஸத்கதி: - நல்லோர்கள் சென்றடையுமிடம்.

*பரம்பொருள் உள்ளதென்றுணர்ந்த நல்லோர்கள். (ஸத்) சென்று அடையவேண்டிய இடம்[1]. கதி: - அறிவு. உயர்ந்த அறிவுள்ளவர். தீயவர்களின் துன்புறுத்தலை நீக்கி நல்லோர்களுக்கு அடைக்கலமளித்து மகிழ்விப்பவர். (699)*

700. ஸத்க்ருதி: - நற்செயலுள்ளவர்.

*உலகைப் படைப்பது போன்ற உத்தமச் செயல்களும், கோகுலத்தில் வெண்ணெய் திருடியது, உரலில் கட்டுப்பட்டது, ராஸக்கிரீடை முதலிய திவ்ய லீலைகளும் அவரது சிறந்த செயல்கள். இச்செயல்களைப்பற்றிக் கேட்பவர்களும், நினைப்பவர்களும், அவர்கள் எத்தனை கெட்டவராயினும், நல்லவர்கள் ஆவர். அத்தகைய நற்செயல்கள் உள்ளவர். (700)*

701. ஸத்தா - நிலைத்திருக்கும் தன்மையானவர்.

*நிலைத்திருப்பது ஸத் ஆகும். ஸத்தாக இருப்பவற்றின் பொதுவான தன்மை ஸத்தா. இது வேற்றுமையற்றதான அனுபவமாகும்.[2] நாம் அறியாமையால் அனைத்தையும் ஒன்றுக்கொன்று வேறுவேறானதாகவே உணர்கிறோம். ஒரே இனம் என்று கண்டாலும் ஒன்றுக்கொன்று வேறுபடுகிறது. ஸஜாதீய பேதம் இது. மனிதனுக்கு மனிதன் வேறுபடுகிறான். வேறுபட்ட இனத்தைச் சார்ந்ததிலிருந்தும் தன் இனம் வேறுபடுகிறது. மனிதன் கால்நடைகளிலிருந்தும் வேறுபடுகிறான். இது விஜாதீய பேதமாகும். தன்னிடமே கண், காது, மூக்கு என்றவாறு வேறுபாடு காண்கின்றது. இது ஸ்வகதபேதம் ஆகும். இத்தகைய மூன்று வேறுபாடுகளுமற்றவர். வேறுபட்ட பலவற்றிலும் 'இது இருக்கிறது' 'அது இருக்கிறது', 'அதுவாக இருக்கிறது' என்று குறிப்பிடும் போது, எல்லாவற்றிலும் பொதுவாகக் காணப்படுகின்ற இருக்கையே பரம்பொருளின் ஸ்வரூபம்தான். அந்த இருக்கை - இருப்பதன் தன்மை வேறுபாடுகளற்றது.*

---

1. अस्ति ब्रह्मेति चेद्वेद । सन्तमेनं ततो विदुरिति । (तै. उ. ३)
2. एकमेवाद्वितीयं ब्रह्म । (छान्दोग्य ६. २. १)

ஸத் - நல்லோர் நல்லவர்களாயிருப்பது பகவானுல். தாமே நல்லோர்களின் இருப்பாக இருப்பவர். (701)

702. ஸத்ப்பூதி: - ஸத்தாகவும், சேதனனுகவும் இருப்பவர்.

நிலைத்த இருப்பு உள்ளவரானதால் பகவான் ஸத் ஆகிருர். அவர் ஒருவர்தான் உண்மையிலிருப்பவர். அவரது இருக்கையில் மற்றவை இருப்பவைகளாகத் தோன்றுகின்றன. அவை அனுபவத்தின் ஆதாரத்திலும் சாஸ்திர வழியில் ஆராயும்போதும் தனித்த நிலைத்த இருக்கை கொண்டதாகத் தெரியவில்லை. பகவான் ஒருவரே பூதி: - தான் இருப்பதைத் தானே விளக்கிக்கொள்கின்ற சேதனனுக ஒளிர்பவர். பலவாகத் தோன்றும் சித் சக்தி படைத்தவர். பிரபஞ்சம் ஸத்துமல்ல - மறைவதால். அஸத்துமல்ல ஸத்தாகத் தோன்றுவதால். ஸத்துமல்ல, அஸத்துமல்ல - எனில் அது எத்தகையது? இன்னதெனத் தீர்மானிக்க முடியாதது (அநிர்வசநீயம்) என்றே கூற முடியும் ஈச்வரன் இதிலிருந்தும் மாறுபட்டவர். அவரே சித்ஸ்வரூபத்துடன் இருப்பதாகத் தன்னைத் தானே விளக்கிக்கொள்பவர். (ஸத் பூதி:)

நல்லவர்களுக்குக் குமாரனுக, நண்பனுக, உறவினனுக, சாரதியாக, தூதனுக, வேலையாளாக எல்லாமாக இருப்பவர். (ஸதாம் பூதி:) (702)

703. ஸத்பராயணம் - நல்லோர்களின் மேலான நிலை.

ஸத் - நல்லவர். உண்மையறிந்தவரும் கடவுளிருப்பதை உணர்ந்தவரும் அவர் ஸத்தாக இருப்பதை உணர்ந்தவரும் நல்லவர். அவர் அடையவிரும்புவதும், பெரு முயற்சியுடன் அடையவிருப்பதும் பகவானே. ஸத்துக்களின் பரமமான - மேலான அயனம் - கதியாயிப்பவர். ஸத்பராயண: என்ற பாடப்படி பகவானையே தனது வலிவாக, உயிராக, நாதராகக் கொண்டவர்களான பாண்டவர் முதலானேருக்கு மேலான புகலிடமானவர். ''மம ப்ராணுஹி பாண்டவா:' (பார -உத் 90-33) அத்தகைய அன்பர்களையே தன் மேலான உயிராகக் கொண்டவர். ப்ரியோ ஹி ஜ்ஞானிநோ அத்யர்த்தம் அஹம், ஸ ச மம ப்ரிய: ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்,. (கீதை. 7-17-18) (703)

704. சூரஸேந: - சூரப்படை கொண்டவர்.

*சூரர்களான படை வீரர்களைக்கொண்ட ஸேனை உள்ளவர். யது வீரர்களும், பாண்டவ வீரர்களும், அனுமான், ஸுக்கிரீவன், விபீஷணன் முதலானோரும் பகவானது படை வீரர்கள். கண்ணன் சூரஸேன வம்சத்தில் வந்தவர். அதனால் சூரஸேந: (704)*

705. யதுச்ரேஷ்ட்ட: - யதுக்களில் மிகச் சிறந்தவர்.

*யது வம்சத்தில் பிறந்த யாதவர்களிடையே மிகச் சிறந்தவர். யதுக்களைப் புகழ்மிக்கவராகச் சிறந்தவர்களாக ஆக்கியவர். (705)*

706. ஸந்நிவாஸ: - நல்லோர்களின் புகலிடம்.

"நிவாஸவ்ருக்ஷ: ஸாதூநாம்" *எனத் தாரை புகழ்ந்தபடி (ராமாயணம். கிஷ்கி. 15, 19) கடவுள் இருப்பதை உணர்ந்த உத்தவர், அக்ரூரர், குசேலர் முதலான நல்லோர்களின் புகலிடமாக இருப்பவர். (706)*

707. ஸுயாமுந: - நல்ல யமுனைக்கரைவாசிகளுடன் கூடியவர்.

*யமுனைக்கரையருகில் கம்ஸன் முதலான துஷ்டர்கள் வசித்தமையால் யமுனையின் பெயர் கெட்டுவிட்டது. பகவான் யமுனைக் கரையில் தோன்றினார். யமுனைக்கரையைப் புனிதமாக்கிய தேவகீ, யசோதை. ராதை, வஸுதேவர், நந்தர், பலராமன் முதலானோரோடு அங்கு பல லீலைகளுடன் விளையாடி யமுனையை நல்ல யமுனையாக்கினார். தேவர்கள் கோபர்களாகத் தோன்றி பகவானுடன் யமுனைக்கரையில் வாழ்ந்தார்கள். அப்படித் தெய்வத்தன்மை மிக்க யமுனைக்கரை வாசிகளைக் கொண்டவர். தான் வாழ்ந்த இடம் என்ற அபிமானத்தால் யமுனைக்கரையில் வசிப்பவர்களை நல்லவர்களாக ஆக்குபவர். (707)*

भूतावासो वासुदेवः सर्वासुनिलयोऽनलः ।
दर्पहा दर्पदा दृप्तो दुर्धरोऽथापराजितः ॥ १०७ ॥

பூதாவாஸோ வாஸுதேவஸ் ஸர்வாஸுநிலயோऽநல:
தர்பஹா தர்பதோ த்ருப்தோ[1] துர்த்தரோऽதாபராஜித: 107

---

1. दर्पहाऽदृप्तः *தர்பஹா(அ) த்ருப்த: (பா)*

708. பூதாவாஸ: - உயிரினத்தின் இருப்பிடம்.

உயிரினமனைத்தும் அவரை இருப்பிடமாகக் கொண்டு அவரிடம் அடங்கியுள்ளன. (சு. 25) தன் வயிற்றில் உலகம் அமைந்துள்ளதைக் தாய்க்குக் கண்ணன் காட்டினார். நல்ல வீட்டில் குடியிருப்பவனுக்கு கிடைக்கின்ற பாதுகாப்பும், அமைதியும், இன்பமும் பகவானாகிய இருப்பிடத்தில் கிடைக்கின்றன. **'வஸந்தி த்வயி பூதாநி'** (ஹரி வம்சம். 275, 52) (708)

709. வாஸுதேவ: - உலகை மாயையால் மறைப்பவர்.

சூர்யன் உலகைத் தனது ஒளிக்கதிர்களால் வியாபித்து மூடுகிறான். அப்படி மூடுகின்ற ஒளிக்கதிர்களை அறியாமல், ஒளிக்கதிர்களால் விளக்கம் பெறுகின்ற உலகையே காண்கிறோம். பகவான் தனது பெரும் சக்தியான மாயையாகிய பெருமையால் உலகை மூடுகிறார். **"சாதயாமி ஜகத் விச்வம் பூத்யா ஸூர்ய இவாம்சுபி:"**, (பாரதம் சாந்தி. 350, 41) சிறுமையையே பெருமையாக மனிதனை நினைக்கும்படி செய்வதே அவரது பெரும் விளையாட்டு. விளையாடுவதால் தேவன். (சு. 8) 12 திருவக்ஷரங்கள் கொண்ட மஹா மந்திரத்தின் மூலக்கருவாயுள்ளவர். ஸங்கர்ஷணர், அநிருத்தர், ப்ரம்யும்நர் என்ற வ்யூஹ நிலைகளின் மேலாளர். (நா. 332, 695). (709)

710. ஸர்வாஸுநிலய: - எல்லா உயிர்களும் ஒடுங்குமிடம்.

கண், காது, மூக்கு முதலியவை விழித்திருக்கும் போது தனித்தனியாக இயங்குபவைகளாகக் காட்டித் தான் தான் உயிர் என விளம்பரப்படுத்திக் கொண்டன. நன்கு தூங்கும்போது அவை இயக்கம் குன்றித் தன் தனித் தன்மையை இழந்து ஜீவாத்மாவிடம் ஒடுங்கி மறைகின்றன. அத்தனை ஜீவர்களும் பிரளயத்திலும், ஸமாதி நிலையிலும் பரமாத்மாவிடம் ஒடுங்குகின்றனர். அப்படி உயிர் ஒடுங்குமிடம் அவர்.

கிருஷ்ணனின்றி உயிர் வாழ முடியாது என நீரிலிருந்து வெளியேற்றப்பெற்றுத் துடிக்கின்ற மீன்கள் போலான கோபிகள், கோபர்களின் உயிர்களுக்குப் பிடிப்பாயிருந்தவர். எல்லா உயிர்களின் உள்ளே உள்ள அந்தர்யாமி.[1] (நா. 960) (710)

---

1. सर्वाजीवे सर्वसंस्थे (श्वेताश्व २. ६) प्राणे तिष्ठन् प्राणादान्तरः । (बृहदा ३.७.६)

711. அநல: - அளவிலாத பெருமையுள்ளவர்.

*பகவானது பெருமைக்கும், சக்திக்கும் வரை இல்லை; அடியார்கள் விரும்பியதைத் தன்னிச்சையால் நிறைவேற்றுகின்ற பகவானுக்குத் தான் செய்தது போதாதென்ற குறையுணர்ச்சி ஏற்படும். அதனால் அநல:. தன் அடியார்களைத் துன்புறுத்துவதை பொறுக்காதவர். வழிபாட்டின் அளவாலும், அதற்குப் பயன்படுத்தப் பெறும் பொருள்களின் அளவாலும் திருப்தியுறாதவர், பக்தியால் மட்டும் திருப்தி அடைபவர். (நா. 293) (711)*

712. தர்பஹா - செருக்கை அடக்குப்பவர்.

*அறப்பாதைக்கு எதிராக நடப்பவர்களின் செருக்கை அடக்குபவர். தன்னிலே உணராதபடி உள்ளப்பூரிப்பு ஏற்பட்டு அறநெறியை மீறச் செய்யும் செருக்கு தர்பம். (த்ருப-ஹர்ஷமோஹனயோ:) அற நெறியில் செல்பவனும் தன்னால் நிறைவேறி வருகின்ற அறப்பணிகளால் பூரித்து இறுமாப்படையும் போது, "அவனால் இது ஆவதில்லை, இறையருளால் கூடுகிறது" என்று அவனுக்கு உணர்த்துவதற்கு, அவனது பணிகளைத் தடையுறச் செய்து செருக்கை அடக்குகிறார்.*

*கண்ணனாகத் தோன்றியபோது இந்திரன் செருக்குற்றுத் தன் வழிபாட்டை நிறுத்திய கோகுலவாஸிகளைத் தண்டிப்பதற்காகப் பிரளய காலத்து மழை பெய்து பிருந்தாவனத்தை அழிக்க முற்பட்டபோது கோவர்த்தன மலையைத் தாங்கி நின்று, பிரளயகாலத்துமழையால் கோகுலம் அழியாதபடியும் சுற்றியுள்ள பகுதிகள் பாதிக்கப்பெறாமலும் காப்பாற்றி இந்திரனது செருக்கை அடக்கியவர். பாரிஜாதத்தை ஸத்யபாமைக்குக் கொணர்ந்தபோதும் இந்திரனது செருக்கை அடக்கியவர். (712)*

713. தர்பத: - செருக்கைத் தருபவர்.

*அறநெறி வழுவாது நடப்பவர்கள் அறநெறிக்கு எதிரானவர்களால் துன்புறுத்தப்படும்போது அவர்களுக்கு இறுமாப்பு ஊட்டி எதிர்த்து நிற்கச் செய்பவர். ஸீதையைத் தேடிச் சென்ற ஆஞ்ஜநேயர், கடலைத் தாண்டும்போதும், ஸீதையைக் கண்டபின் ராவணனது சேனைகளை அழிக்கும்போதும், ராவணனுடன் பேசும் போதும் இப்படி இறைவன் அளித்த*

செருக்குடன் பேசுகிருர். தன்னை அண்டியவர்களுக்கு வலியூட்டி மதர்த்திருக்கச் செய்பவர். (713)

714. த்ருப்த: - மதர்த்திருப்பவர்.

தன்னிலேயாகிய பேரானந்த வெள்ளத்தில் மூழ்கி இருப்பதால் எப்போதும் மதர்த்திருப்பவர். அறநெறிக்கெதிரானவர்களுடன் போரிடுகையில், செருக்குள்ள தார்மிகச் செயலாளராக இருப்பவர். யசோதை, நந்தர் இவர்களின் லாலனையில் இறுமாந்திருப்பவர்.

தர்பஹா தர்பத: த்ருப்த: என்று மூன்று நாமங்களின் தொகுப்பு பீஷ்மரின் சொல்வன்மையைக் காட்டுகிறது. (ப. 28) தர்பஹா அத்ருப்த: என்றும் பதம் பிரித்து ஸ்ரீபட்டர் பொருள் கூறுகிருர். எதிரியின் செறுக்கை அடக்கித் தன்னடியார்களுக்குச் செறுக்கு அளிக்கின்ற பகவான் தான் செறுக்கடைவதில்லை. (714)

715. துர்த்தர: - தாரணையால் தாங்கவொண்ணுதவர்.

தியானத்திற்குகந்த வடிவுள்ளவராக இறைவனை உள்ளத்தில் பலகோலங்களில் அமர்த்தி அவ்வடிவில் மனமும் செயலும் இழந்து நிற்பது தாரணையாகும். தியானத்திற்கும் ஸமாதிக்கும் உதவுகிற யோக அங்கம் இது. பல பிறவிகளில் தாரணை செய்து இதயத்தில் இறைவனை நினைத்துப் பழகியவர்களுக்கே தியானம் கூடும். தியானத்திற்கேற்ற ஸகுண வடிவங்கள் பல உண்டு. எனினும் ஏதேனும் ஒரே தியான வடிவில் மனம் நிலைத்திருக்காது. நிர்குணவடிவம் தியானத்திற்கு உட்படாதது. ஸகுணவடிவம் மாறிமாறித் தோன்றும். நான் இவரைத் தியானிக்கிறேன் என்ற எண்ணத்தில் உள்ள தியானிப்பவன், தியானம் செய்யப்படுபவர், தியானம் என்ற திரிபுடி அகன்று தியானிக்கப் பெறுபவர் மாத்திரம் தோன்றும்படி மனம் ஒரே தியான வடிவில் ஒருமுகப்பட தாரணை உதவும். இது கடும் உழைப்பால் பெறக்கூடியது. பகவானை எளிதில் தாரணையால் தாங்க முடியாது. - மிகுந்த சிரமத்துடன் தாங்கக்கூடியவர் ஆகிருர்.

கட்டுக்கடங்காதவர். கண்ணன் கட்டுக்கடங்காதவர் என்பதைப் பல லீலைகளில் காட்டுகிருர். வயிற்றில் கயிற்ருல் கட்டுப்படாத தாமோதரர், துரியோதனன் சபையில் கட்ட முற்படும்போது விசுவரூபர் என்றவாறு மதம் பிடித்த யானை போல் தடையுருத - அடக்க முடியாதவராணுர். அதனுலேயே

*அவரை வெல்ல முடிவதில்லை என்பதைத் தொடர்ந்து வருகின்ற 'அத' குறிக்கும்.* *(715)*

716. அபராஜித: - வெல்லப்பெறுதவர்.

*காமம் முதலிய மன நோய்களாகிய உள் எதிரிகளாலும், அசுரர் முதலிய வெளி எதிரிகளாலும் வெல்லப் பெறுதவர். பாண்டவர்கள் வலிவுமிக்க கௌரவர்களால் வெல்லப்படாதது அபராஜிதரான பகவான் அவர்களின் துணையாக இருந்தமையால்தான். எங்கு கண்ணன் உள்ளாரோ, அங்கே வெற்றி.* "யத: க்ருஷ்ணஸ் ததோ ஜய:". "யத்ர யோகேச்வர: க்ருஷ்ண: - தத்ர ஸ்ரீர் விஜயோ பூதி: *(கீதை. 18, 78) (நா. 549)* *(716)*

विश्वमूर्तिर्महामूर्तिर्दीप्तमूर्तिरमूर्तिमान् ।
अनेकमूर्तिरव्यक्तश्शतमूर्तिश्शताननः ॥ १०८ ॥

விஶ்வமூர்த்திர் மஹாமூர்த்திர் தீப்தமூர்த்திரமூர்த்திமான்.
அநேகமூர்த்திரவ்யக்தஶ் ஶதமூர்த்திஶ் ஶதாநந: 108

717. விஶ்வமூர்த்தி: - உலகத்தை வடிவாகக்கொண்டவர்.

*சரமும் அசரமுமான உலகமனைத்தும் அவரது வடிவம். அவர் எல்லாமாயிருப்பதால் எளியாரை வலியார் துன்புறுத்த முடிவதில்லை. உலகனைத்தையும் தன் வடிவில் துர்யோதன ஸபையிலும், பாரதப் போரரங்கிலும் யசோதையிடமும் காட்டியவர்.*[1] *(717)*

718. மஹா மூர்த்தி: - பெருவடிவுள்ளவர்.

*ஆதிசேஷனின் மேல் பள்ளிகொண்டிருக்கின்ற மிகப் பெரிய வடிவம் கொண்டவர். உலகனைத்தையும் தன் உடலில் காட்டிய விச்வரூபர். உலகம் அவரது ஒரு பகுதியில் அடங்கிவிடுமளவில் பெருவடிவுள்ளவர்.* "விஷ்டப்ப்யாஹம் இதம் க்ருத்ஸநம் ஏகாம்சேந ஸ்த்திதோ ஜகத்" *(கீதை. 10, 42)* "தத்ரைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்நம் ப்ரவிபக்த மநேகதா, அபச்யத் தேவ தேவஸ்ய சரீரே பாண்டவஸ் ததா". *(கீதை, 11, 13)* "அநிருத்தோஹி லோகேஷு மஹாநாத்மேதி கத்த்யதே". *(பாரதம். சாந்தி. 340)* *(718)*

---

1. विश्वात्मानं परायणम् विश्वरूपाय वै नमोनमः (तै. आ. १०, १३-१४)

719. தீப்தமூர்த்தி: - ஒளி வடிவுள்ளவர்.

*ஞானமே ஒளிமிக்க வடிவம். அறிவொன்றே சூர்யன் முதலியதன் ஒளி இருக்கும்போதும் இல்லாதபோதும் பொருள் இருப்பதை விளக்குகிறது.[1] தனிச் சிறப்பு கொண்டுள்ள பல வடிவங்களால் ஒளிமிக்கவராக விளங்குபவர். விபூதிகள் என்று அத்தகைய வடிவங்களைக் கீதை. (10. அ) குறிப்பிடுகிறது. (719)*

720. அமூர்த்திமான் - வடிவில்லாதவர்.

*மிகப்பெரிய ஆத்மா ஜீவனாக வடிவு பெற்றதால் சிறியதாகவும், அளவில் அடங்கியதாகவும், காலதேசங்களுக்கு உட்பட்டதாகவும் ஆகிறது. இந்நிலை வினையால் ஏற்படுகிறது. வினை பகவானிடம் பாதிப்பை விளைவிப்பதில்லை. வினைப்பாதிப்பால் கட்டுப்படுத்துகின்ற வடிவமைப்பும் பகவானுக்கு இல்லை. தானே அவரிச்சையால் விளையாட்டாக ஏற்ற வடிவங்களே. (717- 719) வினை கட்டுப்படுத்துகின்ற வடிமைப்பில்லாதவர். வடிவமைப்பு பெறாத நிலையிலுள்ளதும் ஒன்றோடு ஒன்றிணைந்து (பஞ்சீகரணம்) உருப்பெறாததுமான (அவ்யக்தம்) ஐந்து பூதங்கள் அஹங்காரம் மஹத் பிரகிருதி என்ற ஸூக்ஷ்மதத்துவங்கள் வடிவிலுள்ளவர்.[2] (நா 8, 830) (720)*

721. அநேக மூர்த்தி: - பல வடிவங்கள் கொண்டவர்.

*தன்னிச்சையால் விளையாட்டாகவும் நெறிப் பாது காப்பிற்காகவும், உலகை வாழ்விப்பதற்காகவும் பல வடிவங்கள் கொண்டவர். கண்ணன் ஒரே அவதாரத்தில் மாயையால் பல உருக்களில் மாறி மாறித் தோன்றியவர். கண்ணன் தான் மணந்த 160008 மனைவியரிடமும் தனித் தனிக் கணவனாக விளங்கியதும் ராஸ லீலையில் ஒவ்வொரு கோபிக்கும் ஒரு கண்ணனாகக் கூடி விளையாடியதும் உண்டு.[3] (நா. 271, 468, 726) (721)*

722. அவ்யக்த: - வெளிப்படாதவர்.

*அவர் எடுத்த பல தோற்றங்களிலும் அவரது முழுச் சிறப்பு*

1. तमेव भान्तमनुभाति सर्वं (कठ २.२.१५) भारूपः सत्यसङ्कल्पः (छान्दोग्ये ३.१४)
2. दिव्यो ह्यमूर्तः (मुण्डक २.२) द्वे वा व ब्रह्मणो रूपे मूर्तं चामूर्तं च। (बृहदा ३.१)
3. एकैकं जालं बहुधा विकुर्वन् अस्मिन्क्षेत्रे संहरत्येष देवः। (श्वेताश्व ५.१३)

*வெளிப்படையாக உணரப்பெறவில்லை. யோகிகளான ஞானிகள் மாத்திரம் அவரது முழுச் சிறப்பைக் கண்டுள்ளனர். கண்ணனாக மனித வடிவில் வந்தும் பரம்பொருளின் உண்மை நிலை தெளிவாக எல்லோராலும் அறிய முடியாதவாறு மறைந்திருந்தது.* "அவ்யக்தம் வ்யக்திமாபந்தம் மந்யந்தே மாம் அபுத்தய:. பரம் பாவமஜாநந்தோ மமாவ்யய மநுத்தமம்". *(கீதை. 7, 24)*[1] *(722)*

723. ஶதமூர்த்தி: - பல வடிவங்கள் உள்ளவர்.

*ஏற்ற வடிவம் ஒன்றாயினும் பார்ப்பவர் கண்களுக்குப் பலவாறாகப் புலப்பட்டவர். கண்ணன் கம்ஸன் அமைத்த அரங்கில் நுழையும்போது, மல்லர்கள் இடியாகவும் ஆண்கள் பேரழகனாகவும், பெண்கள் மன்மதனாகவும், கோபர்கள் நண்பன் எனவும், கம்ஸனைச் சார்ந்தவர்கள் எதிரி என்றும், வசுதேவர்-தேவகி சிசுவென்றும், கம்ஸன் தன்னைக் கொல்ல வருபவன் என்றும், யோகிகள் பரம்பொருள் என்றும், யாதவர்கள் தங்களை வாழவைக்கத் தோன்றியுள்ள மேலான தெய்வம் எனவும் பலவாறாக மதித்தனர்.* மல்லாநாமசநி:, ந்ருணாம் நரவர:, ஸ்த்ரீணாம் ஸ்மரோ மூர்த்திமான். கோபீநாம் ஸ்வஜந:, அஸதாம் க்ஷிதிபுஜாம் சாஸ்தா, ஸ்வபித்ரோ: சிசு:, ம்ருத்யுர் போஜபதே:, விராட் அவிதுஷாம், தத்வம் பரம் யோகிநாம், வ்ருஷ்ணீநாம் பரதேவதேதி விதிதோ ரங்கம் கத: ஸாக்ரஜ: *(பாகவதம். 10, 43, 17)*[2]

*அர்ஜுனனுக்குக் காட்டிய விச்வ ரூபத்தில் பல தோற்றங்களுடையவராக விளங்கியவர். பல பருவங்களில் தனித்துக் காணும் பூக்களும், பழங்களும் எப்போதும் கல்பக வ்ருக்ஷத்தில் காணப்படும் என்பர். தேங்காயை விரும்புவன் அதில் தேங்காயைப் பார்ப்பான். மாம்பூவை விரும்புவன் மாம்பூவை அதில் கண்பான். அப்படி விரும்புவர் விரும்பும் பல வடிவங்களில் காணப்பெறுபவர்.* *(723)*

1. न सन्दृशे तिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्चनैनम्। (तै. आ. १०. १ (श्वेता ४. २०) अचिन्त्यमव्यक्तमनन्तरूपं (कैवल्य ६)

2. त्वं स्त्री पुमानसि त्वं कुमार उतवा कुमारी। त्वं जीर्णो दण्डेन वञ्चसि त्वं जातो भवसि। (श्वेताश्व ४. ३) सर्वाणि रूपाणि विचित्य धीरः नामानि कृत्वाऽभिवदन्यदास्ते। (पुरुषसूक्तं)

724. ஶதாநந: - பல முகங்கள் கொண்டவர்.

*ஏற்ற வடிவங்களுக்கேற்பப் பல முகங்கள் கொண்டவர். பகவானைக் கண்டவர்களின் நோக்கில் பல மாறுபட்டமுகங்கள் காணப்பெற்றன. கம்ஸனுக்கு யமனது முகமாயும், வஸுதேவருக்குப் பச்சிளம் பாலகனின் முகமாயும், மதுரை நகர்ப் பெண்களுக்கு மன்மதனின் முகமாயும் காணப்பெற்ற முகம் கொண்டவர். உலகில் தான் ஏற்ற சராசரங்களான பல வடிவங்களின் முகங்கள் கொண்டவர்.[1] உலகில் பொருள்கள் தோன்றுவதற்கான காரணங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் காலம்தான் காரணம் என சோதிடர் கூறுவர். இயற்கை என உலகியலார் கூறுவர்; அவ்விதமே வினைப்பயன், யதிருச்சை, பஞ்சபூதங்கள், பிரகிருதி, ஜீவன் இவை காரணம் என்பவரும் உண்டு. இவை அனைத்தும் அவரே. ஆனால் ஆராய்ச்சியாளரால் பலவிதமாகக் காணப்படுகிறார்.[2] அதுபோல் நியாயம் மீமாம்ஸை முதலிய வைதிக தர்சனங்கள், ஜைனம், பௌத்தம் முதலிய அவைதிக தர்சனங்கள் இவை ஒவ்வொன்றிலும் தீர்ந்த முடிவாகப் பலவிதமாகக் காணப்பெறுபவர். (724)*

एको नैकः सवः कः किं यत्तत्पदमनुत्तमम्।
लोकबन्धुर्लोकनाथो माधवो भक्तवत्सलः ॥ १०९ ॥

ஏகோ நைக: ஸவ: கம் கிம் யத் தத் பதமநுத்தமம்
லோகபந்துர் லோகநாதோ மாதவோ பக்தவத்ஸல: 109

725. ஏக: - ஒன்றானவர்.

*பல வடிவங்களில் காணப்பெறுபவர் ஒருவரே. வேறுபாடுகள் அனைத்தும் உண்மையானவை அல்ல. அதே இனத்தைச் சேர்ந்த வேறு பொருளோ, வேறு இனத்தைச் சேர்ந்த பொருளோ வேற்றுமையைக் காட்டும். வயதாலும், கை, கால் முதலிய உருவமைப்பாலும் தானே தன்னிடத்தில் வேறுபாட்டை*

1. सर्वानन शिरोग्रीवः (श्वेताश्व ३. ११)
2. कालः स्वभावो नियतिर्यदृच्छा भूतानि योनिः पुरुष इति चिन्त्यम्। (श्वेताश्व १. २)

*உணரலாம். அவர் ஒருவரே உள்ளார்.[1] அதனால் தன்னிடத்து வேறுபாடோ, வேற்றினத்து வேறுபாடோ, தனக்குள்ளே வேறுபாடோ அற்றவர். (நா. 701) அவரது பெருமைக்கு ஈடான பெருமைகளைக் கொண்டவர் வேறொருவரில்லை. இணையற்றவர். ஏகஸ்மை நம: (ச) ஏகாய நம: (ப) (நா. 1. 965) (725)*

**726. நைக: – ஒன்றாயில்லாதவர்.**

*ஒன்றாயிருப்பவரே பலவாக மாயையால் தோன்றுகிறார். மாயையால் ஏற்படுகிற பன்மை உண்மை நிலையைப் பாதிக்காது. இந்திரஜால வித்தையால் ஒருவன் ஒரே பொருளைப் பலவாகக் காட்டுவான். பெரும் மாயாவியான பகவான் பலவாக ஆவதில் வியப்பில்லை.[2] தனது பிரதிபிம்பமான பல ஜீவர்களைத் தன் வடிவங்களாகக் கொண்டவர். விராட் என்ற நிலையில் பல வடிவங்கள் பெற்றவர்.[3] கீதையில் குறிப்பிட்டுள்ளவாறு பல விபூதிகள் கொண்டவர். நைகஸ்மை நம: (ச) நைகாய நம: (ப) (நா. 1) (726)*

**727. ஸவ: – ஸவமெனும் வேள்வியானவர்.**

*ஸோமலதை எனும் கொடியைப் பிழிந்து எடுத்த சாற்றைப் பயன்படுத்துகின்ற வேள்வி ஸோம யாகம் 'ஸவம்' எனப்பெறும். அந்த வேள்வியானவர். பலவாறாகத் தோன்றுகின்ற பொருளனைத்திலிருந்தும் பிழிந்தெடுத்த ஸாரமாய் இருப்பவர்.*

*ஸ: வ: என்று ஸ்ரீபட்டார். உரைப்படி இரு நாமங்கள். ஸ: - அதோ அவர் எனக்குறிப்பிடும்படி கிருஷ்ணனாகத் தோன்றியபோது ஒன்றுமறியாப் பேதைகளான கோபச் சிறுவர்களால் அடையாளம் காட்டப் பெற்றவர். வ: - எல்லாவற்றையும் தன்னிடமிருக்கச் செய்பவர். எல்லாவற்றிலும் ஆத்மாவாக உள்ளிருப்பவர். ஸவாய நம: (ச) ஸாய நம:, வாய நம: (ப). (727)*

1. एकमेवाद्वितीयं (छान्दोग्य ६. २. १) एकल एव मध्ये स्थाता (छान्दोग्य ३. ११) अनेजदेकं मनसो जवीय: (ईश ४) एको हि रुद्रो न द्वितीयाय तस्थुः। (श्वेताश्व ३. २) ईशते देव एक: (श्वेताश्व १. १०)
2. इन्द्रो मायाभि: पुरुरूप ईयते। (बृहदा २. ४. १९)
3. एष वै बहुल आत्मा। (छान्दोग्य ५. १५)

728. க: - ஸுகமாக இருப்பவர்.

*கம் - ஸுகம். எல்லா உயிரினமும் வேண்டுகிற தனக்கு அனுகூலமான ஸுகமாயிருப்பது பரம்பொருள். பரம்பொருளைத் தவிர வேறு ஸுகமில்லை[1] தியாகத்தின் எல்லையில் உணரப்பெறும் சுகமே பெரியது. அகந்தை, மமதைகளின் தியாகத்தின் எல்லையில் சுகமாயிருப்பவர். க: ஒளியுள்ளது. மிகுந்த அழுக்கால் ஒளியற்றிருக்கின்ற பொருளில் தான் இருந்தாலும் தனி ஒளியுடன் விளங்குபவர். காய நம: (728)*

729. கிம் - யாது என ஆராயப்படுபவர்.

*வேண்டப்பெறுவது யாது? பரம்பொருளுணர்வே. பரம்பொருள் என்பது என்ன? கேள்வியே சிறந்த கேள்வி. அதற்கு விடை என ஒன்றும் கிட்டாமல் கேள்வி மேல் கேள்வி எழுந்து விடையாகத் தானே உணரப்பெறும் பரம்பொருள். ''கிம் தத் ப்ரம்ஹ'' (கீதை 8, 1) எதனை அறியாவிடில் ஒன்றையும் அறியாததாகுமோ, அதனை அறியத்தான் வேண்டும். அதனை அறியத் தூண்டுவதும் பரம் பொருளே.[2] கஸ்மை நம: (ச) கிமே நம: (ப) (நா. 1) (729)*

730. யத் - முன்னறியப்பட்டவர்.

*''எதிலிருந்து இந்த உலகம் தோன்றியதோ அந்தப் பரம்பொருள்'' எனக் குறிப்பிடப்படுவர்.[3] முன்னறியப்பட்ட தொன்றையே எது என்று குறிப்பிட முடியும். அப்படி எது, எதில் இருந்து, எதனால் என்றவாறு குறிப்பிடப்பெறுபவர். யஸ்மை நம: தன்னை அண்டியவர்களைக் காப்பதில் முனைந்து உள்ளவர். யதே நம: (நா. 1) (730)*

731. தத் - அந்தப் பரம்பொருள்.

*தத் - அது. எட்டாத தூரத்தில் இருப்பது, புலப்படாதது, வெளிப்படையாகக் கூறவொண்ணாதது, ஆனால் கருத்தில் உள்ளது. இத்தகையதை தத் (அது) என்பர். பரம்பொருளைத் தத்*

---

1. कं ब्रह्म। (छान्दोग्य ४. १० ५)
2. किं कारणं ब्रह्म (श्वेताश्वतर १. १) सोऽन्वेष्टव्यः (छान्दोग्य ८. ७. १)
3. यतो वा इमानि भूतानि जायन्ते...... यत्प्रयन्त्यभि संविशन्ति। (तै. उ. ३. १)

என்பர்.[1] யத் (எது) என்று (நா. 730) எதனைக் குறிப்பிட்டார்களோ தத் - அது. தஸ்மை நம:. "ஓம் தத் ஸதிதி நிர்தேசோ ப்ரம்ஹணஸ் த்ரிவித: ஸ்ம்ருத" (கீதை 17, 23) ஓம் எனவும் தத் எனவும் ஸத் எனவும் மங்களமான பரம்பொருள் குறிப்பிடப்பெறும். ஓம் தத் ஸத் என்று குறிப்பிடுவதால் செய்த பணிகள் அனைத்தும் முழுமையடையும் என்பர்.

தத் - பரவி நிற்பது. தானே உலகமாக விரிந்து எங்கும் காணக் கிடைப்பது. (தநோதி - விஸ்த்ருணுதி) ததே[1] (तते) நம:, ததே (तदे) நம: (731)

**732. பதம் அநுத்தமம் - சிறந்த இடம்.**

அடையப்பெறுகின்ற இடம் பதமாகும். (பத்யதே கம்யதே) ஞானிகளும் முக்தி பெறுவதில் நாட்டமுள்ளவர்களும் அடைய வேண்டிய இடம். 'எதனைக் காட்டிலும் வேறு சிறந்தொன்று இல்லையோ, அது அநுத்தமம். இயற்கையாகத் திரு அமைந்த இடம். சென்றடையாத் திரு உள்ள இடம்.[2] (நா. 80) (732)

**733. லோகபந்த்து: - உலகின் உறவினர்.**

பந்து - உறவிற்குக் கட்டுப்படுபவன், உறவால் கட்டுப்படுத்துபவன் (பத்த்நாதி) உலகம் முழுவதும் ஆதாரமான பரம் பொருளில் கட்டப்பட்டுள்ளது[3] உலகிற்கு ஆதாரமானவர். பெற்றோரைப் போல் அரவணைத்து உலகைக் காப்பவர். உலகின் உற்றாராகி உற்றாரின் கடமையாக நன்மை - தீமை பற்றி விளக்கி நல்வழி காட்டுபவர். தந்தை, தாய், உடன்பிறந்தான், உறவினன், நண்பன், புகலிடம் என்றவாறு எல்லாமான பந்து. (733)

**734. லோகநாத: - உலகால் அணுகப்பெறுபவர்.**

உலகின் உடைமையாளர். நன்மை பெறவும், தீமை நீங்கவும், உலகால் கோரிக்கையுடன் அணுகப்பெறுபவர். (நாத்யதே)

---

1. तत्त्वमसि (छान्दोग्य ६. ८. ७) ओं तद्ब्रह्म (तै. आ. १०. ६८) तदिति वा एतस्य महतो भूतस्य नाम भवति । तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि।
2. तदेतत्पदनीयमस्य सर्वस्य यदयमात्मा (बृहदारण्य १. ४. ७) सा काष्ठा स परा गतिः। (कठ १. ३. ११) तद्विष्णोः परमं पदं (कठ १. ३. ९) आकाशः परायणं (छान्दोग्य १. ९) सूत्रं नाम परं पदं (ब्रह्म)
3. यस्मिन् लोका निहिता लोकिनश्च (मुण्डक २. २. २)

*நல்வழியிலுள்ள புதல்வனைத் தகப்பன் நாடுவதுபோல் உலகை நாடுபவர். (நாததே) உலகை வாட்டி நல்வழிப்படுத்துபவர். (உபதபதி) உலகம் அமைய வேண்டிய வகை பற்றி எப்போதும் திட்டமிடுபவர். (ஆசாஸ்தே) உலகை ஆட்படுத்தி நடத்துபவர். (ஈஷ்டே) (734)*

735. மாதவ: - மது குலத்தில் தோன்றியவர்.

*யது வம்சத்தின் ஒரு கிளை மது குலம். அதில் தோன்றியவர். (நா. 72, 167) (735)*

736. பக்தவத்ஸல: - பக்தர்களிடம் அன்பு பூண்டவர்.

*வத்ஸல: - அன்பு நிறைந்தவர், தன் மக்களாக ஏற்றுக்கொண்ட பக்தர்களிடம் நிறைந்த அன்பு கொண்டவர். அவர்களது நிறைவால் தன் நிறைவு என்று ஆழ்ந்த பிரியம் கொண்டவர். அவர்களது நன்மையை நாடுவதில் உள்ள பரபரப்பால் வேறு ஈடுபாடுகளில்லாதவர். (நா. 471) (736)*

**सुवर्णवर्णो हेमाङ्गो वराङ्गश्चन्दनाङ्गदी ।**
**वीरहा विषमश्शून्यो घृताशीरचलश्चलः ॥ ११० ॥**

**ஸுவர்ணவர்ணோ ஹேமாங்கோ வராங்கஶ் சந்தநாங்கதீ**
**வீரஹா விஷமஶ் ஶூன்யோ க்க்ருதாஶீரசலஶ் சல: 110**

737. ஸுவர்ணவர்ண: - தங்கவண்ணமுள்ளவர்.

*தங்கம் போல் ஒளிகுன்றா வண்ணம் கொண்டவர்.[1] (737)*

738. ஹேமாங்க: - தங்கம் போன்ற உருவமைப்புள்ளவர்.

*ஸூர்யனின் நடுவில் மனத்தைக் கவர்கின்ற தங்கம் போன்று ஒளிமயமான அங்கங்களுள்ளவர். "த்யேய: ஸதா.... ஹிரண்மயவபு: த்ருதசங்கசக்ர:" (ஸந்தியாவந்தனம்)[2] (738)*

---

1. यदा पश्यः पश्यते रुक्मवर्णं (मुण्डक ३. १. ३) आप्रणखात्सर्व एव सुवर्णः । (छान्दोग्य १. ६. ६)
2. य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषः (छान्दोग्य १. ६. ६)

**739. வராங்க: - சிறந்த வடிவமைப்புள்ளவர்.**

*வடிவமைப்பிற் சிறந்தவைகளாகக் கருதப்பெறும் ஸாமுத்திரிகா லக்ஷணங்கள் அனைத்தும் ஒருங்கே அமைந்தவர். வடிவழகை (736, 738) நாமங்கள் போற்றுகின்றன. தலை, நெற்றி, கண், தோள், மார்பு முதலியதில் ஸாமுத்திரிகா லக்ஷணங்கள்கொண்ட ராமனது சிறந்த உடலமைப்பை ஆஞ்சநேயர் ஸீதா தேவியிடம் விளக்குகிறார். (ராமாயணம். 5, 35) (நா. 586) (739)*

**740. சந்தநாங்கதீ - இதம் தரும் தோள்வளைகள் உள்ளவர்.**

*மனத்திற்கு இதமளித்து அயர்வு நீக்கி மகிழ்ச்சி தருவது சந்தனப் பூச்சு. அதைப்போல் இதம் தரும் அங்கதம் என்ற தோள்வளைகள் கொண்டவர். (நா. 541) (740)*

**741. வீரஹா - வீரர்களை மாய்ப்பவர்.**

*தர்மத்தைக் காப்பதற்காக தர்மத்தின் எதிரிகளை மஹா வீரர்களாயினும் மாய்ப்பவர். மேனியழகையும் மென்மையையும் கண்டு கண்ணனை எளிதில் மாய்த்துவிட நினைத்த பூதனை, சகடன் முதலானோரை - பெரும் வீரர்களை அழித்தவர். (நா. 166, 927) (741)*

**742. விஷம: - ஈடற்றவர்.**

*எல்லாவற்றிலும் மாறுபட்டவரானதால் இணையற்றவர்.*[1] **"ந த்வத் ஸமோஸ்தி அப்ப்யதிக: குதோ அந்ய:".** *(கீதை 11, 43)* நேர்மையுள்ளவர்களிடத்தில் நேர்மையுடனும், நேர்மையற்றவர்களிடத்தில் நேர்மையற்றும் நடந்து *கொள்பவரானதால் ஒரே சீரான நடைமுறைகொள்ளாதவர். (742)*

**743. ஶூந்ய: - தனிச் சிறப்பில்லாதவர்.**

*நெருப்பிற்குச் சூடு, நீருக்குக் குளிர்ச்சி, காற்றிற்கு அசைவு என்றிவ்வாறு ஒவ்வொரு பொருளிலும் தனிச் சிறப்புகள் வேறுபடுத்துகின்றன. பகவானிடம் அவருக்கெனத் தனிச் சிறப்பு ஒன்றுமே இல்லை. மனிதனாகத் தோன்றிய போதும் மனித இயல்பாக அமையக்கூடிய குறைகள் அற்றவர்.*[2] *மனிதனாகப்*

---

1. न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते। (श्वेताश्व ६. ८)
2. स्वप्रकाश मानन्दघनं शून्यं (नृसिंहोत्तर ६. ३) नान्तः प्रज्ञं न बहिः प्रज्ञं नोभयतः प्रज्ञं (नृसिंहपूर्व ४. ७)

*பிறந்தால் பிறந்த நொடியிலிருந்து பிற பொருளை நம்பித்தான் வாழ முடிகிறது. இது பெருங்குறை என்கிறாள் சீதை.* **''திகஸ்து மாநுஷம் ஜந்ம திகஸ்து பரவச்யதாம்''.** *(ராமா. 5, 25, 20) (743)*

744. க்க்ருதாஸீ: - வேண்டுதல் நழுவியவர்.

*'இது வேண்டும்' என்ற எதிர்பார்வை, அதற்குப் பிறர் உதவியை நாடுதல், அவர்களைக் கோருதல், கோரியதைக் கோரப் பெற்றவர் வழங்குதல் என்றொரு தொடர் உண்டு. இவை அனைத்தும் குறையுணர்ச்சிகள். பகவானிடமிருந்து இவை நெய்போல் உருகிக் கசிந்து நழுவி விட்டன. தேவையுணர்ச்சி இல்லாதவர். நெய் போன்று நெய்ப்புடன் உலகை அன்பால் பிணைப்பதைப் பெரிதும் எதிர்பார்ப்பவர். கோபர்களின் வீட்டில் கிடைத்த நெய், தயிர் முதலியவற்றில் ஆவல் உடையவர். (744)*

745. அசல: - அசையாதவர்.

*தன் நிலையிலிருந்தும் தன் திறமையிலிருந்தும் தன் குணச் சிறப்புகளிலிருந்தும் சிறிதும் சலனமடையாதவர். மலைபோன்று பெருத்த எதிர்ப்பிலும் அசையா திருப்பவர்.*[1] *(745)*

746. சல: - அசைபவர்.

*அசையாதிருப்பவரே வாயுவாகத்தானே அசைந்தும் மற்றவற்றை அசைத்தும் உலகை இயக்குபவர். பாண்டவர் முதலிய நட்பு கொண்டவர்களுக்காகத் தானே தனக்கு ஏற்படுத்திக்கொண்டவரையை மீறுபவர். பாரத யுத்தத்தில் பீஷ்மருக்கு எதிராகத் தன் சபதத்தை மீறிச் சக்கிரம் ஏந்தியது அர்ஜுனனிடம் பரிவால். (746)*

अमानी मानदो मान्यो लोकस्वामी त्रिलोकधृत्।
सुमेधा मेधजो धन्यः सत्यमेधा धराधरः ॥ १११ ॥

அமாநீ மாநதோ மாந்யோ லோகஸ்வாமீ த்ரிலோகத்ருத்[1]
ஸுமேதா மேதஜோ தந்யஸ் ஸத்யமேதா தராதர: 111

---

1. शान्तमचलमद्वयानन्दविज्ञानघन एवास्मि। (परमहंस)
2. त्रिलोकधृक् *த்ரிலோகத்ருக் (பா)*

747. அமாநீ - மதியாதவர்.

*'தான்' அல்லாததைத்' 'தான்' என்றும் 'தனது' அல்லாததை 'தனது' என்றும் மதிப்பது அறிவின்மை. ஞானஸ்வரூபராகையால் இப்படித் தவருக மதியாதவர். தனக்குரிய பெருமையைவிடத் தன்னிடம் அதிகமாகப் பெருமையிருப்பதாக நினைப்பதும் நினைக்கச் செய்வதும் தற்பெருமையாகும். இந்தத் தற்பெருமையும் இல்லாதவர். உண்மையில் இருக்கின்ற பெருமையைக் கூடத்தாழ்த்தித் தூதனுகவும், தேரோட்டியாகவும், சேவகனுவும் கூச்சமின்றி செயல்படுபவர். (747)*

748. மாநத: - மதிப்பையளிப்பவர்.

*மாயையால் அறிவை மறைத்துத் தனதல்லாததில் தனதென்றும் தான் அல்லாததில் தான் என்றும் உணரச் செய்து தவருக மதிக்கச் செய்பவர். பல்வேறு பிறவிகளில் தொடர்ந்து வந்த அறியாமையை இப்பிறவியிலும் தொடரச் செய்து வினைப்பயனை அனுபவிப்பதற்காக நியதி எனும் விதியாக இருந்து இந்தத் தவருன உணர்ச்சியை ஒருபுறம் அளிக்கிருர். (மாநம் - ஆத்மாபிமாநம் ததாதி) மற்ருெருபுறத்தில் அடியார்களுக்கு அவர்கள் எதிர்பாராத வகையில் சமுதாயத்தின் நன்மதிப்பைப் பெற்றுத் தருகிருர். (மாநம் ததாதி). நேர்மையற்ற பாதையில் செல்பவர்களது மதிப்பைக் குலைத்துவிடுகிருர். (மாநம் த்யதி - கண்டயதி) மனிதப் பிறப்பின் இயல்பாக அமைகின்ற தான் தனது என்ற பற்று ஞானிகளைப் பாதிக்காதவாறு பற்றைத் துண்டித்துவிடுகிருர். (மாநம் ஆத்மாபிமாநம் த்யதி). அர்ஜுனனுக்குத் தேரோட்டியாகி, பேரரசரான தர்மபுத்திரருக்குச் சிற்றரசனுகி நின்று பெருமை கூட்டியவர். (748)*

749. மாந்ய: - மதிப்பிற்குரியவர்.

*எல்லாவற்றிற்கும் ஈசனுனதால் பெருமதிப்பிற்கு உரியவர். அனைவரது வழிபாட்டிற்குரியவர். தன் பக்தர்களுக்குத் தானே கீழ்படிந்தவராகி அதனையும் பெருமையாகக் கொள்பவர்.*

*பெருமதிப்பிற்கு உரியவரெனக் கூறும்போதே அப்படி எவரும் மதிப்பதில்லை என்பதும் புலனுகும். பகவானது முழுப் பெருமை உணர்ந்தவர் மிகச் சிலரே. மனித வடிவில் தோன்றிய தன்னை யாரும் தக்கபடி மதிக்கவில்லை என்று பகவான் கூறுகிருர்.* "அவஜாநந்தி மாம் மூடா: மாநுஷீம் தநுமாச்ரிதம். பரம்

பாவமஜாநந்தோ மம பூதமஹேச்வரம்" (கீதை 9, 11)

தன்னைப் பெரியவனாகக் காட்டிக்கொள்ளாமல் (அமாநீ) தன்னைச் சார்ந்தவர்களை மதிப்புக்குரியவர்களாக்கி (மாநத:) அதிலேயே பெருமைகொள்பவராக (மாந்ய:) இருப்பதை இந்த மூன்று நாமங்கள் அழகாகக் காட்டுகின்றன (ப. 29) (749)

750. லோகஸ்வாமீ - உலகின் உடைமையாளர்.

கீழ் ஏழு மேல் ஏழாக உள்ள பதினான்கு உலகங்களுக்கும் தலைவர்.[1] (750)

751. த்ரிலோகத்ருத் - மூன்று உலகங்களையும் தாங்குபவர்.

பதினான்கு உலகங்களில் கீழ் உள்ள ஏழையும் நடுவிலுள்ள பூமியையும், மேலுள்ள ஆறு உலகங்களையும் மூவுலகங்கள் என்று பிரித்துக் குறிப்பிடுவர். பூமிக்குத் தனிச் சிறப்பு உண்டு. இவற்றை நிலைகுலையாமல் தாங்குபவர். த்ரிலோகத்ருக் என்ற பாடமுண்டு. பொருளில் மாற்றமில்லை (நா. 647) த்ரிலோகத்ருதே நம:, த்ரிலோகத்ருஷே நம:. (751)

752. ஸுமேதா: - நல்ல மேதையுள்ளவர்.

வருமுன் அறிவதும் சூழ்நிலையால் பாதிக்கப் பெறாததுமான அறிவும், கடினமான விஷயங்களை எளிதில் ஏற்கும் கிரஹண சக்தியும் மேதை எனப்படும். எந்நிலையிலும் கலங்காத நுண்ணறிவு பெற்றவர். தன்னை வழிபடுபவரிடம் நல்லெண்ணம் கொண்டவர். (752)

753. மேதஜ: - வேள்வியில் தோன்றியவர்.

தசரதரின் அச்வமேத வேள்வியில் தோன்றிய ஸ்ரீராமரும், வேனனின் தொடையைக் கடைந்த வேள்வியில் பிருதுவும், காஞ்சியில் பிரும்மாவின் வேள்வியில் தோன்றிய வரதராஜரும் மேதஜமான வடிவம் கொண்டவர்கள். தீக்ஷையுடன் வேள்விபுரிகிற தீக்ஷிதராக, யஜமான வடிவில் உள்ளவர். பகவானின் எட்டு வடிவங்களில் யாகம் புரிபவரும் ஒருவர். "யா ச ஹோத்ரீ" (சாகுந்தலம்) (நா. 973, 977) (753)

---

1. एष लोकाधिपतिः (कौषीतकी ३. ९)

754. தந்ய: - கொடுத்து வைத்தவர்.

ஒரு பொருளை இன்று பெற, இதற்கு முன் கொடுத்து வைத்திருக்க வேண்டும். இன்று பெற்றுள்ள செல்வம் முன் செய்த நல்வினையால் விளைந்தது. செய்ய வேண்டியதைச் செய்து முடித்தவன் தன்னை கிருதார்த்தன் எனவும் தன்யன் எனவும் கூறிக்கொள்வான். பகவான் எல்லாம் நிறைந்தவராகவே எப்போதும் உள்ளார். அதனால் அந்த நிறைவைப் பெற அவரே உரியவர். தன் கடமைகளைச் செவ்வனே செய்து தான் நிறைவு பெற்றுவிட்டதாக நினைத்துக்கொள்பவர்.

பரம்பொருளை நாடுவதில் உதவுகின்ற விரதங்கள், கதைகள், தத்துவங்கள் முதலியவை பற்றிய நினைவு, பந்தமின்றி மோக்ஷமடைவதில் நாட்டம், ஐம்புலன் அடங்கியிருத்தல் உயிரினத்திடம் பரிவு முதலிய நல்லெண்ணங்கள் இவை வாழ்நாள் முழுவதும் தொடர்ந்திருந்து உயிர் பிரியும்போது தீவிரமடைந்து காணப்பட்டால் அதனை 'தன்யஸ்மரணம்' என்பர். வாழ்நாள் முழுவதும் இந்த எண்ணம் வலுத்திருந்தால் மட்டும் உயிர் நீங்கு முன் இந்த சிந்தனை தீவிரமடைந்து துலங்கும். அந்தக் கடைசி சிந்தனையே ஜீவனுக்கு மறு பிறப்பில் உயர்ந்த கதியை - சிறந்த பிறப்பைத் தருவதாகும். அத்தகைய தேவ நிலையை அளிக்கவல்ல தன்ய நினைவைத்தருபவர், அந்த தன்ய நினைவாக இருப்பவர். "ஸ்ரோத்ரார்த்த மார்கணமஹாவ்ரத பாவநாதி நிர்ப்பந்த்த மோக்ஷகமநாகதிஹேதுசிந்தா. பஞ்சேந்த்ரியாத்யுபமமப்ச தயாச பூதே த்த்யானம் ச தந்யமிதி தத்ப்ரவதந்தி ஸந்த:. தந்யா தேவகதி:" (பவிஷ்யோத்தர புராணம்). செல்வம் சேர உதவுபவர். (தநாய ஹித:) தன்யம் என்று ஜோதிடர் கூறுகிற சிறந்த யோகமாயிருப்பவர். பெருஞ்செல்வம் பெற்றவர். (754)

755. ஸத்யமேதா: - உண்மையான அறிவு பெற்றவர்.

வருமுன் அறிவதும், நுட்பமான பொருளையும் எளிதில் ஏற்பதும், வேறு சூழ்நிலையாலோ இடையூறுகளாலோ பிழையுறாதபடி, உண்மையான நிலையைக் காட்டுவதுமான மேதை உள்ளவர். முன்னறிவும் நுண்ணறிவும் செயலில் பயன்படுவதாக அமைந்து பயன்தருகிற அறிவானவர். பகவானைத் தனக்கு உற்ற பந்துவாக நினைத்தவனது எண்ணம் என்றும் பொய்க்காதபடி நடப்பவர். (755)

756. தராதர: - பூமியைத் தாங்குபவர்.

*எல்லா உயிரினங்களையும் பொறுத்துத் தாங்குவதால் பூமி 'தரா' ஆகிறது. பூமியை வராஹர், ஆதிசேஷன், திக்கஜங்கள், குல பர்வதங்கள் என்ற வடிவங்களில் தாங்குபவர்.*[1] *(நா. 182, 235, 317, 369)* *(756)*

तेजोवृषो द्युतिधरः सर्वशस्त्रभृतां वरः ।
प्रग्रहो निग्रहो व्यग्रो नैकशृङ्गो गदाग्रजः ॥ ११२ ॥

**தேஜோவ்ருஷோ த்யுதிதரஸ் ஸர்வஶஸ்த்ரப்ப்ருதாம் வர:**
**ப்ரக்ரஹோ நிக்ரஹோ வ்யக்ரோ நைகஶ்ருங்கோ கதாக்ரஜ: 112**

757. தேஜோவ்ருஷ: - மழை பொழிபவர்.

*சூரியனின் ஒளிக்கதிர்கள் பூமியிலுள்ள நீரை ஆவியாக்கித் தேஜஸ் எனும் வடிவடையச் செய்து விண்ணிற்கு எடுத்துச் சென்று மறுபடி குளிரச் செய்து மேகமாக்கிப் பூமியில் மழையாகப் பொழிகின்றன. இந்த ஒளிக்கதிர் வடிவில் மழைபொழிபவர் பகவான். வெயிலையும் மழையையும் தருபவர் இவரே. நட்பைக்காப்பாற்றுவதற்காகத் தன் தனிப்பட்ட ஒளியைப் பொழிபவர்.* *(757)*

758. த்யுதிதர: - மேனி ஒளியை எப்போதும் கொண்டவர்.

*சூர்யனின் கதிர்களில் காண்கிற ஒளியைத் தன்மேனி ஒளியாகிக் கொண்டவர். சூர்யன் சந்திரன் மின்னல் ரத்னம் முதலியவற்றின் ஒளியைத் தாங்குபவர். தேவர்களுக்கே உரித்தான த்யுதி எனும் மேனி ஒளி.*[2] *கொண்டவர்.* *(758)*

759. ஸர்வஶஸ்த்ரப்ப்ருதாம் வர: - எல்லா ஆயுதமேந்திய வர்களிலும் சிறந்தவர்.

*ஆயுதமேந்திப் போரிடுபவர்களில் சிறந்த ராமன் தனது விபூதி என்கிறார் கண்ணன். "ராம: சஸ்த்ரப்ப்ருதாமஹம்" (கீதை 10, 31)*

---

1. येनेमे विधुते उभे । विष्णुना विधृते भूमी । दाधर्थ पृथिवीमभितो मयूखैः (तै. आ. १. ८)

2. देवो दानाद्वा दीपनाद्वा द्योतनाद्वा (निरुक्त ७. १५)

*அப்படி ஸ்ரீ ராமனாக ஸ்ரீ கிருஷ்ணனாக ஆயுதமேந்திய சிறந்த வீரராக விளங்குபவர். (759)*

760. ப்ரக்ரஹ: - அன்பளிப்பை ஏற்பவர்.

*பக்தர்கள் அளிப்பது இலையாயினும் பழமாயினும் நீராயினும் பக்தியுடன் அளிக்கப்பெறின் அன்புடன் விரும்பி வேகத்துடன் ஏற்பவர். தேரோட்டியாக இருந்து அர்ஜுனனை அடக்கி ஆண்டதுபோல் புத்தியாகிய தேரோட்டியாகி மனத்தைக் கடிவாளமாக்கிப் பொறிகளை அடக்குபவர். அவர் அருளாகிய கடிவாளத்தால் தன் மனமாகிய காட்டுக் குதிரையைப் பக்தன் அடக்குகிறான். அத்தகைய அடக்கும் சக்தியானவர். (760)*

761. நிக்ரஹ: - தன்வசத்தில் கட்டுப்படுத்துபவர்.

*மனவடக்கத்தைத் தந்தும், மனமடங்காதவர்களைத் தனது அடக்கியாள்கின்ற சக்தியால் ஆட்படுத்தியும் நன்னிலையில் கட்டுப்படுத்துபவர். தான் அருகில் இருப்பதாலேயே துஷ்டர்களையும் அடங்கியிருக்கச் செய்பவர். (761)*

762. வ்யக்ர: - முனைந்தவர்.

*தான் முடிவற்றவர் (அக்ரம்-முடிவு). அதனால் கட்டுப்படுத்துவதில் எப்போதும் முனைந்தவர். தனது பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றுவதில் முனைந்தவர். அர்ஜுனனைப் பாதுகாக்கக் கோணல் வழியில் சென்றவர். (அக-கோணலாகச் செல்வது.) (762)*

763. நைகச்ருங்க: - ஒன்றுக்கு மேற்பட்ட கொம்புகள் உள்ளவர்.

*கொம்புகளைப் பிடிக்கக் கால்நடை பிராணிகள் அடங்கிவிடும். அவ்விதமே பகவானைப் பிடிக்க ஓங்காரம், வேதம், ஒலி இம்மூன்றும் கொம்புகளாகின்றன. அகாரம், உகாரம், மகாரம், நாதம் என்று நான்கு கொம்புகளுள்ளது ஓங்காரம். நான்கு வேதங்கள் யஜ்ஞ புருஷனின் கொம்புகள். பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரி என ஒலியின் நான்கு கொம்புகள்[1] ஓங்காரம்,*

1. चतुःशृङ्गोऽवमीद्गौर एतत्। चत्वारि शृङ्गाः। (तै. आ. १०. १२)
चत्वारि शृङ्गा इति वेदा वा उक्ताः। (निरुक्त १३. ७) अकारोकार मकारनादरूपशृङ्गचतुष्टयोपेतः। (सायणभाष्यम्)

யஜ்ஞ புருஷர், ஒலி என்ற வடிவங்களில் நான்கு கொம்புகள் உள்ளவர்.

ச்ருங்கம் - எதிர்க்கும் முறை. அர்ஜுனனது தேரோட்டியாக, கீதையை உபதேசித்து அர்ஜுனனைப் போரில் ஈடுபடுத்தியவராக, சமயம் நேரும்போது ஆயுதம் ஏந்தியவராக, வெற்றிக்கான யுக்திகளைப் பாண்டவர்களுக்குக் கூறுபவராக எதிரிகளைத் துன்புறுத்துவதில் பல முறைகளைக் கையாண்டவர். (763)

764. கதாக்ரஜ: - கதனுக்கு மூத்தவர்.

வஸுதேவருக்குத் தேவ ரக்ஷிதா என்ற மனைவியிடம் பிறந்த கதனுக்கு முன் கண்ணனாகப் பிறந்தவர். ருக்மிணி தன் கடிதத்தில் கண்ணனை அழைக்க 'கதாக்ரஜ:' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறாள். கண்ணனைப் பார்த்தவாறே உபதேசிக்கிற பீஷ்மரின் நினைவில் இந்தப் பெயர் வருகிறது.

கதம் - நிகதம் - வேதங்கள், வேதமந்திரங்கள், தசரதரின் அச்வமேத யாகத்தின் இறுதியில் நடந்த புத்ரகாமேஷ்டியில் வேதமந்திரங்களின் சக்தியால் ராமனாக முன் தோன்றியவர். வேதம் தோன்றும் முன்னரே அதனை ஏற்கத் தகுதி பெற்ற பிரும்மாவாக முன் தோன்றியவர். உலகப் படைப்பில் முதலில் தோன்றியது வேதங்கள். வேத ஒலியுடன் தோன்றிய ஹிரண்யகர்ப்பராக இருப்பவர்.[1]

கத: - வெளிப்படையான ஒலி. இந்த ஒலி தொண்டை முதலிய இடங்களில் அடிபட்டு ஓசையாக வெளியாகுமுன் மூலாதாரத்தில் பராவாகவும் தொப்புகளில் பச்யந்தியாகவும் மார்பில் மத்யமாவாகவும் இருக்கிறது. பரா என்ற மூல , ஒலி வடிவம். மிக ஸூக்ஷ்மமானது. கதம் எனும் ஒலியின் மூலமான பரா என்ற சப்தப்பிரம்ஹ வடிவினர். (764)

**चतुर्मूर्तिश्चतुर्बाहुश्चतुर्व्यूहश्चतुर्गतिः**
**चतुरात्मा चतुर्भावश्चतुर्वेदविदेकपात् ॥ ११३ ॥**

**சதுர்மூர்த்திஸ் சதுர்பாஹுஸ் சதுர்வ்யூஹஸ் சதுர்கதி:**
**சதுராத்மா சதுர்ப்பாவஸ் சதுர்வேதவிதேகபாத் 113**

1. हिरण्यगर्भः समवर्तताग्रे (तै. सं. ४. १. ८)
यो ब्रह्माणं विदधाति पूर्वं योवै वेदांश्च प्रहिणोति तस्मै।

**765. சதுர்மூர்த்தி: - நான்கு வடிவங்கள் கொண்டவர்.**

*விராட், ஸூத்ராத்மா, அவ்யாக்ருதர், துரீயர் என நான்கு வடிவங்கள் கொண்டவர். விராட் - மூலப்ரகிருதியின் ஸ்தூலத் தோற்றம். (நா. 8.) ஸூத்ராத்மா - (ஹிரண்யகர்ப்பர்) மூலப்ரகிருதியின் ஸூக்ஷ்மத் தோற்றம். (நா. 320, 411) அவ்யாக்ருதர் - அவ்யக்தம் எனப்படும் மூலப்ரகிருதி. (நா. 8) துரீயர் - இந்த நிலைகளைக்கடந்த பரம்பொருள் - பரமபுருஷர் - புருஷோத்தமர் எனப்படுபவர். (நா. 8, 24).*

*பகவான் அவதாரங்களில் வெண்மை, சிகப்பு, மஞ்சள் கலந்த சிகப்பு, கறுப்பு என நான்குவித மேனி வண்ணங்கள் கொண்டவர். பலராமர், கிருஷ்ணர், ப்ரத்யும்னர், அநிருத்தர் என நால்வராக யதுகுலத்தில் தோன்றியவர். (765)*

**766. சதுர்பாஹு: - நான்கு கைகள் உள்ளவர்.**

*தேவர்களில் விநாயகர் முதலான நான்கு கைகள் உள்ளவர் பலரிருப்பினும், சதுர்புஜர், சதுர்பாஹு என்ற பெயர் நாராயணனது சிறப்புப் பெயராகும் (நா. 140) (சங்கரர்) தேவகியிடம் தோன்றிய போதும் தனது தனிச்சிறப்புள்ள நான்கு கைகளுடன் தோன்றினார்.* **"தமத்புதம் பாலகமம்புஜேக்ஷணம் சதுர்புஜம்"** *(பாகவதம் 10, 3, 9) (766)*

**767. சதுர்வ்யூஹ: - நான்கு பிரிவுகள் உள்ளவர்.**

*சரீரபுருஷர், சந்த: புருஷர், வேதபுருஷர், மஹா புருஷர் என நான்கு பிரிவுகள் கொண்டவர்.[1] பத்வரின் குமாரான பரத்வர் என்ற மகரிஷி இந்த நான்கு வ்யூஹங்களைக் கண்டவர். 1. நான் என்று கூறித் தன்னைக் காட்டிக்கொள்ளும் சரீரியான ஆத்மா. அதனுள் விளங்கும் சேதனனான ஆத்மா. இவர் சரீரபுருஷர். 2. அகச என்று சரியாக உச்சரிக்கப் பெற்ற எழுத்து வடிவிலுள்ள ஆத்மா. சந்த: புருஷர் 3. வேத வடிவிலுள்ளவர் வேதபுருஷர். 4. கால வடிவிலுள்ளவர் மஹாபுருஷர். என்ற வ்யூஹங்களாயுள்ளவர். (நா. 138) (767)*

1. चत्वार:पुरुषा इति बाध्व: शरीरपुरुषश्छन्द: पुरुषो वेदपुरुषो महापुरुष इति । (ऐतरेयारण्यक ३. २. ९)

768. சதுர்கதி: - நான்கு அடையுமிடங்களாக இருப்பவர்.

*பிரும்மசர்யம். கிருஹஸ்தம், வானப்ரஸ்தம், ஸன்யாஸம் என்ற நான்கு ஆசிரமங்கள், பிராமணர், க்ஷத்திரியர், வைச்யர் சூத்திரர் என்ற நான்கு வர்ணங்கள். இந்நிலைகளில் இந்தப் பாதைகள் மூலம் முறைவழுவாது நடப்பதால் அடையுமிடமாயுள்ளவர்.*

*உபாஸனைக்கேற்ப ஸ்வர்கம், பிரும்மலோகம், கைவல்யம், மோக்ஷம் என்ற நான்கு நிலைகளுக்கு அழைத்துச் செல்பவர். (768)*

769. சதுராத்மா - திறமையுள்ளவர்.

*(சதுர: ஆத்மா) மனத்தில் விருப்பு. வெறுப்பு முதலியவற்றால் குழப்பம் இல்லாததால் தடங்கலின்றித் தன் செயல்களில் ஈடுபடுகிற திறமை உள்ளவர். மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற நான்கு தத்துவங்களில் ஒன்றின் அபிமானியாக நான் என்று ஆத்மாவைக் குறிப்பிடுவர். அப்படி நான்கு தத்துவங்களால் சூழப்பட்ட ஆத்மாவாக இருப்பவர். (நா. 8, 137) இந்த நான்கின்வடிவில் உள்ளவர். (நா. 173).*

*விழிப்பு, கனவு, தூக்கம் இம்மூன்றைக் கடந்த துரீயநிலை என்ற நான்கு நிலைகளிலும் உணரப் பெறுபவர். (769)*

770. சதுர்பாவ: - நான்கின் தோற்றுவாய்.

*அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பேறுகளின் உற்பத்தி இடமாக இருப்பவர். விழிப்பு முதலிய நான்கு நிலைகளில் நான்கு விதமான செயல்கள் உள்ளவர். வாஸுதேவர் முதலிய வ்யூஹ நிலைகளிலும் நான்கு செயல்களை வெளிப்படுத்துபவர். (நா. 138) (770)*

771. சதுர்வேதவித் - நான்கு வேதப்பொருள் உணர்ந்தவர்.

*நான்கு வேதங்களையும் பொருளுடன் முறைப்படி ஐயந்திரிபின்றி உணர்ந்தவர். அப்படி உணர்ந்தவர் வடிவிலிருப்பவர். இறைவனது வ்யூஹங்கள் விபவாவதாரங்கள் இவற்றின் பெருமையை உணர்வதற்கு வேதங்களையும் அவற்றின் உபநிடதப் பகுதிகளையும் நன்கு ஓதியறிந்த ஒருவனால் தான் இயலும். (771)*

772. ஏகபாத் - கால்பங்கானவர்.

*எங்கும் நிரம்பியுள்ள பரம்பொருளின் கால்பங்கு கொண்டே இவ்வுலகம் விரிவடைந்திருக்கிறது.[1] (நா. 534) பங்கிட முடியாத பரம்பொருளின் கால்பங்கு இது. பூர்ணமான அதன் நிலையிலிருந்து உலகமாகிய பகுதி மிகக் குறைந்த அளவில் உள்ளதே.* "விஷ்டப்ப்யாஹமிதம் க்ருத்ஸ்நம் ஏகாம்சேந ஸ்த்திதோ ஜகத்" *(கீதை. 10, 42)*

*பகவானது எல்லா அவதாரங்களும் பகவானது ஆறு சக்திகளில் ஒன்றிரண்டு சக்திகளை மட்டும் வெளிப்படுத்துகின்ற அம்சாவதாரங்களே. ராமனும், லக்ஷ்மணனும், பரதனும், சத்ருக்னனும் பகவானின் அம்சமே. ராமனை அரைப்பங்கிலும் மற்றவர் கால்பங்கிலும் தோன்றியவர் என வால்மீகி அவர்களைக் குறிப்பிடுகிறார்.* "விஷ்ணோரர்த்தம் மஹா பாகம்", "ஸாக்ஷாத் விஷ்ணோச் சதுர்ப்பாகம்" "விஷ்ணோரர்த்த ஸமந்விதௌ". *(ராமாயணம் 1, 18, 11, 14) என. அவற்றில் கால்பங்குகளில் தோன்றினவர்களான பரத, லக்ஷ்மண, சத்ருக்னர்கள் வடிவில் இருப்பவர். பிரித்தால் குறைவதில் தான், கால் - அரை என்ற பங்கீடு உண்டு. பூர்ணத்தைப்பங்கிட இயலாது. எனினும் ராமாதியரை அவ்வாறு பங்கிட முயன்ற வால்மீகி அரை + கால் + அரை என ஒன்றே கால்பங்காக்கி விட்டார். பூர்ணத்தை உலகியல்படி பிரிக்க இவ்வாறாகிவிடக்கூடும்.*

*ஒரு காலில் நிற்பவராக மும்மூர்த்திகளின் வடிவம் கொண்ட சிவபெருமானை ஆலயங்களில் காணலாம். இருபுறங்களிலும் பிரும்மாவையும், விஷ்ணுவையும் கொண்ட ஏகபாதர் என்ற சிவபெருமானின் தோற்றமிது. அவ்வடிவில் இருப்பவர். (772)*

समावर्तोऽनिवृत्तात्मा[2] दुर्जयो दुरतिक्रमः ।
दुर्लभो दुर्गमो दुर्गो दुरावासो दुरारिहा ॥ ११४ ॥

ஸமாவர்தோऽநிவ்ருத்தாத்மா[1] துர்ஜயோ துரதிக்ரம:
துர்லபோ துர்கமோ துர்கோ துராவாஸோ[1] துராரிஹா. 114

1. पादोऽस्य विश्वा भूतानि । (तै. आ. ३, १२)
2. निवृत्तात्मा *நிவ்ருத்தாத்மா* दूरावासः *தூராவாஸ: (பா)*

773. ஸமாவர்த: - நன்கு சுழலவைப்பவர்.

பிறப்பும் இறப்பும், பகலும் இரவும், சுகமும் துக்கமும் சீதமும் உஷ்ணமும் எனத் திரும்பத் திரும்ப வாழ்க்கைச் சக்கிரத்தைச் சுழல வைப்பவர். ஒரு நிலையிலிருந்து மற்ருேர் நிலைக்கு மாற்றுபவர். இந்தச் சுழலில் அறியாமையால் சிக்குண்டவர்கள் தன்னை வழிபடும்போது சுழலைத் தேக்கி நிறுத்துபவர். வழிபடுபவர்களைக் காப்பாற்றத் திரும்பத்திரும்பத் தோன்றுபவர். (773)

774. அநிவ்ருத்தாத்மா - தொடர்பிராதவராக இல்லாதவர்.

எங்கும் எப்போதும் நிரம்பியிருப்பவராதலால் அவர் தொடர்புகொள்ளாத காலமோ, தேசமோ, பொருளோ இல்லை. எல்லாவற்ருேடும் தொடர்புகொண்டவர்.

நிவ்ருத்தாத்மா என்ற பாடப்படி பற்றிராதவர். (நா. 229, 597) பரிவால் பல தோற்றங்களுக்கு உட்பட்டு லீலையாகப் பல அருட்செயல்கள் புரிந்தவராயினும் அவற்றில் ஒட்டாத மனப் பாங்குள்ளவர்.[1] (774)

775. துர்ஜய: - வெல்ல முடியாதவர்.

அன்பாலன்றி வேறு எண்ணத்தால் வெல்ல முடியாதவர். தேவர்களாலும் வென்று வசப்படுத்த முடியாதவர். (775)

776. துரதிக்ரம: - மீற முடியாதவர்.

உலகச் செயல்களைத் தன் ஆணையால் கட்டுப் படுத்துபவராகையால் இவரது ஆணைக்குப் பயந்து அதனை மீற முடியாமல் அக்னி, சூரியன் முதலானோர் தம் தமது செயல்களில் ஈடுபடுகின்றனர்.[2] அவரது திருவடிகளை விட்டு வேறு போக்கிடமில்லை. உலகம் அவரை மீறிச் செயல்பட அனுமதிக்காதவர். (776)

777. துர்லப: - எளிதில் கிட்டாதவர்.

யோகி ஞானி பக்தர் தவிர மற்றவர்களுக்குக் கிட்டாதவர்.

1. तदेतत्पूर्णमप्रवर्ति। (छान्दोग्य ३. २. ९)
2. महद्भयं वज्रमुद्यतम्। (कठ २. ३. २)

அவரைப் பற்றிய அறிவும், அவரிடம் நீங்காத அன்பும் பெறுவதும் எளிதல்ல. அவற்றை ஸாதனமாகக்கொண்டு அவரைப் பெறுவது மிகக் கடினமானது. 'பக்த்யா லப்ப்யஸ்த்வநந்யயா' (கீதை 8, 12) (777)

778. துர்கம: - எளிதில் உணர முடியாதவர்.

பரம்பொருளைப் பற்றிய உணர்வு பெறத் தேவையான சிரவணம் (குருவிடமிருந்து பெறும் நூலறிவு), மனனம் (அப்படிப் பெற்ற அறிவைக்கொண்டு ஆராய்ந்து தெளிவது), நிதித்த்யாஸனம் (தெளிந்த உள்ளத்துடன் மற்ற புலன்களிலிருந்தும் மனத்தைத் திருப்பிப் பரம்பொருளில் பதித்து வேறு எண்ணங்கள் இன்றி தன்மயப்படுதல்) என்ற மூன்று உபாயங்கள் எளிதில் கைகூடாதவையாதலால் அவரை உணர்வது எளிதல்ல[1] கண் வலிவற்றவனால் நடுப்பகல் சூரிய ஒளி காணமுடியாதிருப்பதுபோல் அணுகுவதற்கு அரிதானவர். (778)

779. துர்க: - அடைய அரிதானவர்.

உபாயங்கள் பலவற்றைக் கையாண்டும், இடையிடையே தோன்றுகின்ற இடையூறுகளால் மிகுந்த சிரமத்துடன் அடையக்கூடியவர். அறியாமை முதலியவை அரண்போல் தடுத்துவிடக் கூடுமாதலால் அவரை அடைவது அரிது. (779)

780. துராவாஸ: - எளிதில் உள்ளத்தில் பதியாதவர்.

தியான வழியில் முனைந்து ஈடுபட்ட பின்னரும், யோகியாலும் மனத்தில் எளிதில் நிறைத்துக்கொள்ள அரிதானவர். எளிதில் அவரது பரமபதத்தில் இடம் கொள்வதும் இயலாதாகையால் எட்டுவதற்கு அரிதானவர். தூராவாஸ: என்ற பாடமுண்டு. எளிதில் எட்டாதவாறு, தூரத்தில் இருப்பவர். (780)

781. துராரிஹா - கெட்டவர்களை அழிப்பவர்.

கெட்ட வழியில் செல்வதையே பழக்கமாகக் கொண்டவர்களை அழிப்பவர். அவர்களை அழிக்க நல்வழி அவர்கள் மனதில் பதியாதபடி மாயையால் அவர்களை மயக்கிக் கெட்ட வழியில்

1. श्रवणायापि बहुभिर्यो न लभ्यः । (कठ १. २. ७) नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन (कठ १. २. २३)

ஈடுபாட்டை வளர்த்துத் தானே மடியச் செய்வதுண்டு.[1] புத்தராகத் தோன்றி வேதத்திற்கு எதிரான வழியைக் காண்பித்துக் கெட்டவர்களைக் கெடச் செய்தவர். (781)

शुभाङ्गो लोकसारङ्गः सुतन्तुस्तन्तुवर्धनः
इन्द्रकर्मा महाकर्मा कृतकर्मा कृतागमः ॥ ११५ ॥

**ஶுபாங்கோ லோகஸாரங்கஸ் ஸுதந்துஸ் தந்துவர்த்தந:**
**இந்த்ரகர்மா மஹாகர்மா க்ருதகர்மா க்ருதாகம: 115**

782. **ஶுபாங்க: - மங்களமான வடிவமைப்புள்ளவர்.**

*மங்களமான அவயவங்கள் உள்ளவர்.*[2] *(782)*

783. **லோகஸாரங்க: - உலகின் சாரத்தைக்கொள்பவர்.**

*உலகில் எது சாரமோ அதனால் அடையப்பெறுபவர். சாந்தோக்ய உபநிஷத்தில் ஒரு சிறு கதை. உலகின் தந்தை உலகை வாட்டிப் பிழிந்தார். வெளியான சாரம் மூன்று வேதங்கள். மூன்று வேதங்களை வாட்டினார். பூர் புவஸ் ஸுவ: என்ற ஒலி சாரமாக வந்தது. அவைகளை வாட்டிப் பிழிந்தார்.*[3] *பிரணவம் சாரமாகக் கிட்டியது. எல்லாவற்றின் சாரமான பிரணவத்தால் அடையப்பெறுபவர் - விளக்கப்பெறுபவர்.*

*உலகமளிக்கிற ஸாரமான பொருளை ஏற்பவர். பக்தியுடன் ஆர்வத்துடன் அளிக்கப் பெறுவதே ஸாரமாகும். "ஸம்ஸாரே கிம் ஸாரம் கம்ஸாரேஸ் சரணகமல பரிபஜநம்" என்றவாறு உலகில் ஸாரமான செயலாகிய பக்திமிக்க வழிபாட்டால் அடையக் கூடியவர், அத்தகைய வழிபாட்டை ஏற்பவர். (783)*

784. **ஸுதந்து: - மங்களமாக உலகாக விரிந்தவர்.**

*சிறிதளவு பஞ்சிலிருந்து நீண்ட நூலைப் போல் தன்னிடமிருந்து*

---

1. एष उ एवैनमसाधुकर्म कारयति तं यमधो निनीषते। (कौषीतकी ३. ९)
2. हिरण्यश्मश्रुः हिरण्यकेशः आप्रणखात्सर्व एव सुवर्णः, कप्यासं पुण्डरीकमेवमक्षिणी । (छान्दोग्य १. ६. ६. )
3. प्रजापतिर्लोकानभ्यतपत्तेभ्योऽभितप्तेभ्यस्त्रयी विद्या संप्रास्रवत्तामभ्यतपत्तस्या अभितप्ताया एतान्यक्षराणि सम्प्रास्रवन्त भूर्भु वःस्वरिति तान्यभ्यतपत्तेभ्योऽभितप्तेभ्य ओंकारः सम्प्रास्रवत् । (छान्दोग्य २. २३, २. ३)

உலகை விரித்தவர். அசுரர்களைக் கவர்வதற்காக அழகான ஆனால் எளிதில் தாண்ட முடியாத உறுதியான வலையைவைத்திருப்பவர். (784)

**785. தந்துவர்த்தந: - நீண்ட உலகை வளர்ப்பவர்.**

உலகை நீண்ட நூலைப்போல் விரிவடையச் செய்து வளர்ப்பவர், பாதுகாப்பவர், (வர்த்தயதி - பூரயதி) நிரப்புவர், தேவை இல்லாததை வெட்டிப் பிரிப்பவர். (வர்த்தயதி - சேதயதி) ஒளிக்கதிர்போல் பாப வாழ்க்கைச் சுழல் எனும் நூலை நீளச் செய்பவர். நல்ல எண்ணமற்ற பாபிகளை மறுபடி பாபச் செயலில் ஈடுபடுத்தித் துக்கச் சுழலில் ஆழ்த்துபவர். (785)

**786. இந்த்ரகர்மா - இந்திரனுகச் செயல்புரிபவர்.**

மூவுலகையும் காக்கும் பணி இந்திரனுடையது. இந்திரன் முதலானோர் பகவானால் உலகப் பாதுகாப்பிற்காக நியமனம் பெற்ற அதிகார தேவதைகள். அரசரது படையிலுள்ள வீரனின் செயல் அரசரது செயலாவதுபோல் இந்திரனது செயலும் பகவானது செயலாகின்றது. இந்திரனது ஆளுகை பகவானுக்கு உட்பட்டதே. இந்திரன் முதலானோரது அதிகாரத்தைப் பாதுகாப் பதற்காகவே உலகப் பாதுகாப்பைத் தனது செயலாகக் கொண்டவர். (786)

**787. மஹாகர்மா - பெருஞ்செயலாளர்.**

உலகைப் பாதுகாப்பதையும் உலகின் மூலப்பொருள்களாக ஆகாசம் முதலிய ஐந்து பூதங்களைத் தோற்றுவிப்பதையும் ஏனைய பணிகளையும் தமது பணிகளாக்கிக் கொண்டவர். சில அசுரர்களை மாயையால் ஏமாற்றி அழிப்பதும், தன்னை அண்டி நிற்கின்ற அடியார்களைக் காப்பற்றவும் கெட்டவர்களைத் தண்டிப்பதற்குமாகக் கருணையால் ஏற்றுக்கொண்ட செயல். அதனால் அதுவும் நேர்மைக்குட்பட்ட பெருஞ்செயலே. (நா. 672) (787)

**788. க்ருதகர்மா - செய்ய வேண்டியதைச் செய்து முடித்தவர்.**

செய்ய வேண்டியதனைத்தையும் மீதமின்றிச் செய்து முடித்தவர். எல்லாம் வல்லவராகையால் அவரால் செய்ய முடியாததென ஒன்றுமிருப்பதற்கில்லை. அறப்பணியே பணியாக அனைத்துப் பணிகளைச் செவ்வனே செய்து முடித்தவர். பகவான் அசுரர்களை

மயக்குவதற்கெனவே அவர்களைப் போன்று தானும் பணியாற்றுவதுண்டு. புத்தர் பகவானின் அவதாரம் என்பர். வேதத்தில் நம்பிக்கையில்லாதவர்களையும் வேதகர்மங்களைச் செய்யத் தகுதி பெறுதவர்களையும் மயக்குவதற்கென நாத்திகர்போல் நடித்தவர். (788)

789. க்ருதாகம: - வேதத்தைத் தோற்றுவித்தவர்.

உலகப் பணிகளை நெறிப்படுத்துவதற்கென வேதங்களையும் மற்ற நன்னெறி நூல்களையும் வெளியிட்டவர்.[1] நாத்திகர்களுக்கான சமய நூல்களையும் செய்தவர். (நா. 655) (789)

उद्भवः सुन्दरः सुन्दो रत्ननाभः सुलोचनः ।
अर्को वाजसनः शृङ्गी जयन्तः सर्वविज्जयी ॥ ११६ ॥

உத்ப்பவஸ் ஸுந்தரஸ் ஸுந்தோ ரத்நநாபஸ் ஸுலோசந:
அர்கோ வாஜஸநஶ் ஶ்ருங்கீ ஜயந்தஸ் ஸர்வவிஜ்ஜயீ. 116

790. உத்ப்பவ: - சிறந்த தோற்றத்தைக் கொண்டவர்.

தன் விருப்பப்படி ஸ்ரீராமனுக, கிருஷ்ணனுகப் பிறக்கிறுர். உலகில் தோன்றிய பொருள் எதற்கும் தன் விருப்பப்படி தோன்ற இயலாது. சிசு கண் மூடிப் பிறக்கும். பிறந்தவுடன் அழும். உடல் அழுக்கால் மூடப்பட்டிருக்கும். கண்ணன் மலர்ந்த தாமரைக் கண்ணனுக உடலழுக்கின்றி தொப்புள் கொடி எனும் தாயின் உடல் தொடர்பின்றி தோன்றுகிறுர். பிறப்பற்றவன் பிறக்கும்போது நடவாததெல்லாம் நடக்கின்றது. நள்ளிரவில் அக்னி ஹோத்திரத் தீ கண கணவென்று எரிகிறது. கடலோரத்தில் இருக்கும் மேகங்களின் ஒலி மதுரையில் மிருதங்க ஒலியாகக் கேட்கிறது. தமோ குணம் நிரம்பிய வேளையில் நல்லோர் மனம் தெளிவுற்றிருக்கிறது. (பாகவதம் 10, 3) இப்படி நடவாததெல்லாம் நடைபெறும்படி மேலான நிலையில் தோன்றியவர். (உத்தமோ பவோ யஸ்ய) மற்ற உயிரினத்தைப்போல் பிறப்பால் கட்டுப்படுபவரல்ல. ஸம்ஸாரபந்தமும் அதற்கான பிறப்பும்

1. अस्य महतो भूतस्य निश्वसितमेतत् यदृग्वेदो यजुर्वेदः सामवेदोऽथर्वाङ्गिरस इतिहासः पुराणं विद्या उपनिषदः श्लोकाः सूत्राण्यनुव्याख्यानानि व्याख्यानानि। (बृहदा २. २. १०)

*அற்றவர். (உத்கத: பவ: யஸ்மாத்). பிறப்பற்றவர் பிறப்பதும் பிறந்த பின்னரும் பிறப்பற்றவரின் நிலையில் பந்தமற்றிருப்பதும் பகவானின் விசித்திரமான செயல். (நா. 373) புத்தராக, ஜினராக தனிப்பட்ட மோக்ஷத்தை உபதேசிப்பதாகக் காட்டித் தானும் தன்னைப் பின்பற்றுபவர்களும் ஸம்ஸார பந்தம் விலகினவர்களாக நடித்துக் காண்பிப்பவர். (790)*

**791. ஸுந்தர: - அழகானவர்.**

*மனத்தைக் கவர்கின்ற அழகிய தோற்றமுள்ளவர். புத்தரின் வடிவமைப்பும் மிக அழகானதாகும். (791)*

**792. ஸுந்த: - நன்கு நெகிழ்ந்தவர்.**

*கருணையால் நனைந்த உள்ளம் கொண்டமையால் தன்னிடம் அன்பு கொண்டவர்களிடம் அதிகம் நெகிழ்ந்து பரிவுகாட்டுபவர். மோஹினி, புத்தர் முதலிய அவதாரங்களில் கண்ணைக் கவர்கின்ற மேனி அழகால் அசுரர்களின் மனத்தையும் நெகிழ்த்துபவர். (792)*

**793. ரத்நநாப: - ரத்தினம் போன்று அழகிய தொப்புள் உள்ளவர்.**

*கண்ணனாக மதுரையில் தோன்றிக் கோகுலம் சென்றவரை யசோதையின் மகனாகக் கோபிகள் காண்கின்றனர். அவர்களைப் பெரு வியப்பிற்கு உள்ளாக்கியது - ரத்தினம் போன்று மழமழப்பும் ஒளியும் கொண்ட கண்ணனின் தொப்புள். அன்று பிறந்த குழந்தையின் தொப்புளில் கசிவும் புண்ணும் இருக்கும். கண்ணனது தொப்புள் மழமழப்புடன் ரத்தினம்போல் அழகும் கொண்டதாயிருந்தது. தாயின் வயிற்றில் தொப்புள் கொடி மூலம் உணவு கொண்டதன் அடையாளமே தெரியவில்லை. புத்தரின் தோற்றத்திலும் புலமையைக் காட்டும் அழகிய வயிற்றில் ரத்னம்போல் மழமழப்புடன் தொப்புள் காணப்பட்டது. (793)*

**794. ஸுலோசந: - அழகிய கண்கள் உள்ளவர்.**

*அழகிய கண்களும் நல்ல பேரறிவும் கொண்டவர். (லோசநம் - தர்சனம் - ஞானம்)[1] (794)*

---

1. *பட்டர் உரைப்படி இது 800வது நாமம்.*

**795. அர்க: - வழிபடத்தக்கவர்.**

*உலகில் எல்லோருடைய வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரிய பிரும்மா முதலானோரால் வழிபடப் பெற்றவர். பாமரனும் கடவுளெனக் கண்டு வணங்குகின்ற ஸூர்யனாக இருப்பவர்.*[1]

*பெரியோர்களால் சிறந்த அறிவாளியாக (புத்தர்) சிறந்த வீரராக (மஹா வீரர்) துதிக்கப் பெற்றவர். (795)*

**796. வாஜஸந: - உணவை வழங்குபவர்.**

*உலகம் தோன்று முன்னரே அதற்கான உணவைத் திட்டமிட்டு ஏற்படுத்தியவர், அதனை உரிய முறையில் வழங்குபவர். சிசு தோன்றுவதற்கு முன்னரே அது அந்நிலையில் ஏற்கத் த்க்கவாறு உணவை அதனிடம் குறையா அன்பு கொண்ட தாயின் மார்பகத்தில் ஊற்றாகப் பெருகச் செய்தது இந்த உணவளிப்பின் ஒரு அடையாளச் செயல். உணவேற்பதையும் உணவூட்டுவதையும் பெரிதாக மதிக்கச் செய்பவர். (796)*

**797. ச்ருங்கீ - கொம்புள்ளவர்.**

*மத்ஸ்யாவதாரத்தில் கொம்புள்ள மீனாகத் தோன்றியவர். அவரது கொம்பில் ஓடத்தைப் பாம்பாகிற கயிற்றால் ஸங்கர்ஷணர் கட்டினார். (மத்ஸ்ய புராணம்) புத்தாவதாரத்தில் கொம்பு போன்ற அமைப்புள்ள மயில்தோகைக் கொத்தைக் கையில் கொண்டவர். (797)*

**798. ஜயந்த: - மாபெரு வெற்றிகொள்பவர்.**

*எதிரிகளை வெல்பவர். எதிரிகளை வெல்வதற்குப் பாண்டவர் முதலானோருக்கு உரிய துணையாக உதவியவர். நூலறிவுமிக்க பண்டிதர்களை வாதத்தால் வெல்பவர். (798)*

**799. ஸர்வவித் ஜயீ - எல்லாமறிபவர் - வெற்றிகொள்பவர்.**

*ஸர்வித் ஜயீ என்ற இரு சொற்கள் கொண்ட நாமம். எல்லாவற்றையும் பொதுவாயும் தனிச் சிறப்புடனும் அறிபவர்.*[2]

1. उतैनं गोपा अदृशन्नदृशन्नुदहार्यः । उतैनं विश्वा भूतानि स दृष्टो मृडयाति नः । (तै. सं. ४. ५. १)
2. यः सर्वज्ञः सर्ववित्। (मुण्डक १. १. ९, २. २. ७)

*அறிவாளியானதால் உள் எதிரிகளான காமம், கோபம் முதலானவற்றையும் வெளி எதிரிகளான இரணியாக்ஷன், இரணியகசிபு, ராவணன் முதலியவர்களையும் வெல்லும் பழக்கமுள்ளவர். எல்லாமறிபவராகி காமம் முதலியவற்றை வென்ற ஞானியாக இருப்பவர். அறிவாளிகளையும் வெல்பவர். (ஸர்வவிதோ ஜயதி). ஸர்வவிதே ஜயிநே நம:. ஸர்வவிஜ்ஜயிநே நம: (799)*

**सुवर्ण बिन्दुरक्षोभ्यः सर्ववागीश्वरेश्वरः ।**
**महाह्रदो महागर्तो महाभूतो महानिधिः ॥ ११७ ॥**

**ஸுவர்ண பிந்துரக்ஷோப்யஸ் ஸர்வ வாகீஸ்வரேஸ்வர:**
**மஹாஹ்ரதோ மஹாகர்தோ மஹாபூதோ மஹாநிதி: 117**

**800. ஸுவர்ண பிந்து: - அழகிய அவயவங்கள் உள்ளவர்.**

*தங்கத்தைப் போன்று நன்னிறமுள்ள கண், காது முதலிய உறுப்புகள் உள்ளவர்.[1] பகவான் வேள்விகளில் அக்கினி குண்டத்திலிருந்து வெளிப்படும்போது நெருப்பிலிருந்து வெளியாக, நெருப்பில் ஒளி குன்றுததும் குறையாததுமான தங்க சரீரத்தைக்கொள்வார். ம் என்ற அழகிய (பிந்து) அனுஸ்வார எழுத்தோடு கூடிய சிறந்த வர்ணமான ஓகாரத்துடன் கூடிய ஓங்காரமாக இருப்பவர்.[2] அழகாகப் பேசி மயக்குபவர். (800)*

**801. அக்ஷோப்ய: - கலக்க முடியாதவர்.**

*ஆசை, கோபம் முதலியவற்றாலும், அசுரர்களாலும் கலக்கமுறாதவர். ஆழ்ந்த கருத்துள்ளவராதலால் மாற்றெண்ணத்தைப் புகுத்தி மாற்ற முடியாதவர். விருப்பு, வெறுப்புகளில் கலங்காதவர். (நா. 999) (801)*

**802. ஸர்வ வாகீஸ்வரேஸ்வர: - சொல்லதிபருக்கு அதிபர்.**

*மனக்கலக்கமில்லாமையால் நல்ல பேச்சாளராக விளங்குபவர். வேதத்தை நான்முகங்களால் வெளியிடுபவர் பிரும்மா - அழகிய பேச்சும், அறிவுமுள்ளவர் பிருஹஸ்பதி.*

1. आप्रणखात्सर्व एव सुवर्णः । (छान्दोग्य १. ६६)
2. ओमिति ब्रह्म । (तै. अ. १. ८२) तत्ते पदं संग्रहेण ब्रवीम्योमित्येतत् । (कठ १. २. १५)

இருவரும் வாகீச்வரர். இவர்களது அருளால் வாகீச்வரரானவர் பலர். இவர்களுக்கும், அழகிய சொல்வன்மையும், வாதத்திறமையும் கொண்டவர்கள் அனைவருக்கும் பகவான் மேலாளர். *(802)*

803. மஹாஹ்ரத: - ஆழ்ந்த பெரு மடு போன்றவர்.

*அண்ட முடியாத ஆழ்ந்த நீர்த்தேக்கம் போன்றுள்ள ஆனந்தக்கடலான பகவானிடம், கோடை தாபம் நீங்க ஆழ்ந்த ஓடையை அடைபவர் போல், ஞானிகள் ஆழ்ந்து பிரும்மானந்த அனுபவம் பெற்று நிம்மதியடைவர். புண்ணியம் செய்தவர் இந்த மடுவில் ஆழ்ந்து நிறைவு பெறுவர். பாபம் செய்தவர் இந்த மடுவில் ஆழ்ந்து மீள முடியாமல் தவிப்பர். (803)*

804. மஹாகர்த: - பெரும் பள்ளம் போன்றவர்.

*பகவானுகிய ஆழ்ந்த நீர்த்தேக்கத்தில் ஆழ்ந்து பெற்ற ஆனந்தம் இனமறிய முடியாதது. அவரும் ஆழம் அறிய முடியாத இருண்ட பள்ளம் போன்றவர். அவரது பெரும் மாயையே அவரை இருண்ட பள்ளமாகக் காட்டுகின்றது. வேதத்திற்கு முரணுகச் செல்பவர்களை ரௌரவம் முதலிய மீள முடியாத பள்ளங்களாகிய நரகங்களை அடையச் செய்பவர். (804)*

805. மஹாபூத: - பெரும் பொருள்.

*பூத: - உருவாகி முழுமை பெற்று புலப்படும் பொருள். மிகப் பெரியபொருள் கூடக் காலத்தாலும், தேசத்தாலும் வேறு பொருளிலிருந்து வேறுபடுவதாலும் குறுகியதாகத்தான் இருக்கும். பகவான் ஒருவரே காலம் முதலியவற்றுல் குறுகாத மிகப் பெரும் பொருள். நல்லோர்களான பெரியோர்களைத் தம்மவராக்கிக்கொண்டவர். (805)*

806. மஹாநிதி: - பெரும் காப்பகம்.

*உலகமனைத்தையும் நல்லோர்களையும் தன்னுள் மறைத்துப் பெரு நிதிபோல் காப்பாற்றுபவர். (806)*

**कुमुदः कुन्दरः कुन्दः पर्जन्यः पावनो[1]ऽनिलः ।**
**अमृताशोऽमृतवपुः सर्वज्ञः सर्वतोमुखः ॥ १२८ ॥**

1. पवनः *பவந: (பா)*

குமுத: குந்தர: குந்த: பர்ஜன்ய: பாவநோऽநில:.
அம்ருதாஸோऽம்ருதவபுஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வதோமுக: 128

807. குமுத: - பூமியை மகிழ்விப்பவர்.

*அவ்வப்போது அவதாரம் எடுத்து பூமிக்குப் பாரமாயுள்ள அஸுரப் பண்புள்ளவர்களை அழித்துக் களைபிடுங்கி பூமியை நன்னிலைக்கு மீளச் செய்து மகிழ்விப்பவர். பூமியில் நன்மக்களுடன் மகிழ்பவர். (807)*

808. குந்தர: - முல்லை போன்ற நற்பயன்களைத் தருபவர்.

*முல்லை போன்று மென்மையும், நன்மணமும், அழகும் கொண்ட புண்ணியச் செயல்களின் பலனைத் தருபவர். முக்தி தரும் பரம்பொருளைப் பற்றிய அறிவைத் தருபவர். இரணியாக்ஷனைக் கொல்வதற்கு வராஹராகப் பூமியைப் பிளந்து சென்றவர். (808)*

809. குந்த: - முல்லை போன்று அழகானவர்.

*முல்லை போன்று மென்மையும், நன்மணமும், அழகும் கொண்ட வடிவமுள்ளவர். பரசுராமராகி எல்லா அரசர்களையும் வென்று பூமியைக் கசியபருக்கு வழங்கியவர். உலகை ஆண்ட அரசர்களைப் பரசுராமராகி அழித்தவர். (கும் ததாதி த்யதி வா) யோக ஸாதனைகளில் மேன்மேல் அடையக்கூடிய இடங்களை வரிசையாகத் தருபவர். (809)*

810. பர்ஜந்ய: - குளிர்விக்கும் மேகம் போன்றவர்.

*மழையாகி வானிலிருந்து இறங்கி குளிர்விப்பவர். ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி தைவிகம் என்ற மூன்று வகை தாபங்களையும் அகற்றுபவர். (உடல், மனம் முதலியவற்றைத் தன்செயலின் விளைவாகத் துன்புறுத்துவது ஆத்தியாத்மிகம். எதிரி, விலங்கு முதலியவற்றால் நேரும் துன்பம் ஆதி பௌதிகம். மழை காற்று முதலிய தெய்வச் செயலால் நேர்ந்த துன்பம் ஆதி தைவிகம்.) பகவானை அறிந்தவரும், அடைந்தவரும் தாபம் நீங்கப் பெறுவதற்கு மழை போன்று தன் அருள் வெள்ளத்தைப் பொழிபவர். பர்ஜன்யராகி உலகைக் குளிர்விப்பதையே பணியாகக்கொண்ட மழைக்கு அதிதேவதையாக இருப்பவர்.[1] தாபத்தை நீக்கி அறிவைத் தெளிவுபடுத்துபவர். (810)*

1. अग्नी पर्जन्या ववतं धियं मे। (ऋ. सं. ६. ६२. १६)

**811. பாவந: - தூய்மைப்படுத்துபவர்.**

*மழையாகிப் பூமியையும், அதில் வசிப்பவர்களையும் தூய்மைப்படுத்துபவர். மழை போன்று, அருள் வெள்ளம் பொழிந்து உடல், மனம் முதலியவற்றில் படிந்துள்ள மாசு நீக்கி அவற்றைத் தூயதாக்குபவர். பவந: என்ற பாடமாயினும் அதே பொருள். (நா. 291) (811)*

**812. அநில: - தூண்டப் பெறுதவர்.**

*மேகத்தைப் பொழியவேண்டிய இடத்திற்கு நகர்த்திச் செல்லும் காற்று பிறர் தூண்டுதலின்றித் தானே செயல்படுகிறது. அந்தத் தூண்டப்பெறுத காற்று வடிவில் உள்ளவர். நல்லோர்களை வினைகளில் சிக்கிப் பிறப்பிறப்புகளில் மாட்டிக்கொள்ளத் தூண்டாதவர்.* **'ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு:'** *(கீதை 5, 14)* **இல:** *- தூங்குபவன். அவன் மெத்தனமாகத் தன் நிலை உணராமல் ஆழ்ந்த அறியாமைத் தூக்கத்தில் இருப்பான். பகவான் ஞானவடிவமானதால் எப்போதும் அயர்வற்ற தெளிந்த மனமுள்ளவர். (ந - இல:) நில: - ஒளிந்து மறைந்து வாழ்வது, பகவான் எளிதில் உணரும்படி வெளிப்படையாக இருப்பவர். பக்தர்களுக்கு எளிதில் கிட்டுபவர். பக்தனின் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் பிறர் தூண்டுதலின்றிச் செயல்படுபவர். (நா. 234) (812)*

**813. அம்ருதாஶ: - அமுதம் உண்பவர்.**

*ஆச: - உணவு, பருகும் நீர். தூய்மையும் இனிமையும் நிரம்பிய மழை நீர் அமுதமாகும். அதனைப் பருகும் ஜீவன் அவரே. பாற்கடலில் கடைந்தெடுத்த அமுதத்தைப் பருகும் தேவனும் அவரே. அவர்களை அப்படிப் பருகச் செய்ய வந்த மோஹினியும் அவரே. ஆத்மானந்தமே பேரமுதம். அதனை அருந்தியவர், ஆத்மானந்தத்தில் திளைப்பவர். அடியார்களைத் தனது கல்யாண குணங்களாகிற அமுதத்தைப் பருகச் செய்பவர். ஆசா - கோரிக்கை, எதிர்பார்வை. அவர் கோருவதும் எதிர்பார்ப்பதும் வீணாகாதவை, அமிருதமானவை. (813)*

**814. அம்ருதவபு: - அழியா உடலுள்ளவர்.**

*ஜீவனமான மழைநீர் திடமான உடலமைப்பு தரும். இனிய வாழ்வைத் தரும். அமுதம் போன்று இனிக்கிற உடலமைப்பு,*

*அழியாத உடலமைப்பு கொண்டவர். ஸ்ரீராமனுக கண்ணனுகத் தோன்றி யுகங்கள் சென்றுவிட்டபோதிலும் இன்றும் அதே உடலமைப்பில் காட்சி தருபவர். ஆராவமுதமாகத் தோற்றமுள்ளவர். (814)*

815. ஸர்வஜ்ஞ: - எல்லாமறிந்தவர்.

*எல்லாவற்றையும் பொதுவாகவும், தனிச் சிறப்புகளுடனும் அறிந்தவர். (நா. 453)[1] பக்தர்களின் சக்தியையும் அவர்களால் சாதிக்க முடிவதையும், முடியாததையும் அறிந்தவர். (815)*

816. ஸர்வதோமுக: - எங்கும் முகமுள்ளவர்.

*விராட் வடிவிலும், எல்லாமாயிருக்கும் நிலையிலும் பல திக்குகளையும் காண்கின்ற முகங்கள் அவருக்குப் பல உண்டு.*[2] 'ஸர்வதோ அக்ஷிசிரோமுகம்' (கீதை 13, 13) முகம் - வழி, அவரைச் சென்றடையப் பல வழிகள் உண்டு. "இதனுல் அடையலாம், அதனுல் அடைய இயலாது" என்றில்லை. எவ்வழியிலேனும் எளிதில் அடையக் கூடியவர். அதனுல் எங்கும் வழியுள்ளவர். (816)

सुलभः सुव्रतः सिद्धः शत्रुजिच्छत्रुतापनः ।
न्यग्रोधो दुम्बरोऽश्वत्थश्चाणूरान्ध्रनिषूदनः ॥ ११९ ॥

ஸுலபஸ் ஸுவ்ரதஸ் ஸித்தஶ் ஶத்ருஜித் ஶத்ருதாபந:.
ந்யக்ரோதோ தும்பரோऽஶ்வத்தஶ் சாணூராந்த்ர நிஷூதந: 119

817. ஸுலப: - எளிதில் கிடைப்பவர்.

*அவர் படைத்துள்ள பொருள்களாலேயே அவரை எளிதில் வழிபட முடியும். இலை, பூ, காய், நீர் என இயற்கை வடிவில் அவர் தரும் பொருளை நம்மிடமிருந்து பெற்று மகிழ்பவர். பக்தி என்ற அன்பு பகவானிடம் அந்த மகிழ்ச்சியை உண்டாக்கிவிடும். விலை மதிக்க வொண்ணுத பெரும் பொருளாக அவர் இருந்தாலும்*

---

1. यः सर्वज्ञः सर्ववित् (मुण्डक १, ९)
2. विश्वतश्चक्षुरुत विश्वतोमुखः (तै. आ. १०. १) प्रत्यङ्जनास्तिष्ठति सर्वतोमुखः । (श्वेताश्व २, १६) प्रत्यङ्मुखास्तिष्ठति विश्वतोमुखः (तै. आ. १०. १)

*அன்பிற்கு வசப்பட்டு எளிய பொருளை ஏற்று நமக்கு வசமாகக் கூடியவர். (817)*

818. ஸுவ்ரத: - அளித்ததை நன்கு ஏற்பவர்.

*சபரீ, விதுரர், ஸுதாமா (குசேலர்) முதலானோர் அன்பால் அளித்ததனைத்தையும் உண்டு மகிழ்ந்தவர். விரதம் – உணவு முதலியவற்றை ஏற்பதில் கட்டுப்பாடு. நர நாராயணர் வடிவில் தவமியற்றுகையில் விரதத்தை நன்கு கையாண்டவர். தன்னை அண்டியவர்களை எவ்வகையிலும் காப்பாற்றுவதென்ற நல்விரதம் பூண்டவர். தன்னை ஆராதிப்பதற்கெனத் தான் தோன்றிய திதிநக்ஷத்திரங்களைப் புனிதமாக்கி அன்று அழகிய மங்களமான விரதம் கொள்ளும்படி செய்தவர். (818)*

819. ஸித்த: - சித்தி பெற்றவர்.

*அவரைக் குறித்துச் செய்த விரதங்களின் பலனைத் தர எப்போதும் ஆயத்தமாயிருப்பவர். (நா. 97) அணிமா, மஹிமா முதலிய யோக முறையில் பெறக்கூடிய சித்திகளை யோகப் பயிற்சி இன்றி தானே இயற்கையாகப் பெற்றுச் சித்தரானவர். அதேபோன்று, எக்காலும் இருப்பவரானதாலும்[1] முன்னரே ஸித்தர். அவரைக் காப்பவராக்கிக்கொள்ளத் தனி முயற்சி அவசியமிராததாலும் ஸித்தர். அவர் அடியார்களைக் காப்பதற்குச் சித்தராக இருப்பதைப் பகவத் தத்துவமறிந்தவர் உணர்வர். (819)*

820. சத்ருஜித் - எதிரியை வென்று அடக்குபவர்.

*பகவானின் ஆணைகளுக்கு உட்பட்டு மூவுலகும் வாழப் பணிபுரிபவர்கள் தேவர்கள். அவர்களுக்கு எதிரிகள் பகவானுக்கே எதிரிகள். பகவானுக்கு விருப்பு, வெறுப்பு, துவேஷம் முதலியவை கிடையாது. அசுரர்கள் தாம் செய்த தீமைகளின் வினைப்பயனாக அழிகிறார்கள். அந்த வினைப்பயனைக் கூட்டுவிக்கின்ற ஈச்வரன் தேவர்கள் மூலமாகவும் ககுத்ஸ்தர், புருகுத்ஸர், தசரதர், முசுகுந்தர் முதலிய வீரர்கள் மூலமாகவும் அசுரர்களை மாய்க்கிறார். (820)*

821. சத்ருதாபந: - எதிரிகளை வாட்டுபவர்.

*எதிரிகள் தாம் செய்த வினைப்பயனை உயிருடன்*

1. सदेव पुरस्तात् सिद्धं हि ब्रह्म। (नृसिंहोत्तर ९. ९)

இருக்கும்போதே அநுபவிக்குமாறு துன்பங்களைத் தந்து வாட்டுபவர். (821)

822. ந்யக்ரோத: - கீழ்நோக்கி வளர்பவர்.

*ந்யக்ரோத:* - ஆலமரம். மேல் வளர்ச்சிபெறுமளவிற்குக் கீழும் வேர் திடமாக வளர்வதால் ஆலமரம் பேய்க்காற்றிலும் விழாமல் பல்லாண்டுகள் நிலைத்திருக்கிறது. அதனால் மரங்களுக்கும் காட்டிற்கும் அரசன் (வனஸ்பதி) என்ற இனத்தைச் சாரும். இதனடியில் தக்ஷிணாமூர்த்தியாக இறைவன் காட்சி தருவார். பகவான் இந்த ஆல்போல் குறுக்கிலும் கீழும் அதிகமாக வளர்ந்த உலகமாக இருப்பவர் (ந்யக்ரோஹதி) அதேநேரத்தில் எல்லோருக்கும் மேலிருப்பவரும்கூட. ந்யக் - தாழ்த்துவது. ரோத: - மறைப்பது. இயற்கையாகப் பந்தமற்ற ஜீவாத்மாவிற்கு உடலின் தொடர்பாகிய பந்தமளித்துத் தாழ்த்திச் சுயநிலை மறைத்து உயிரினமாக வாழவைக்கிறார்.

தன்னைக்காட்டிலும் தாழ்ந்துநின்று கைகட்டி இருப்பவர்களான பக்தர்களால் அவர்களுக்கு அருளும் வகையில் முன் நிறுத்தப் பெறுபவர். தன்னை வணங்கி நிற்கும் அடியார்களுக்கு அருளாமல் இருக்க முடியாதவாறு கட்டுப்படுத்தப்படுபவர். (822)

823. உதும்பர: - விண்ணிற்கு மேம்பட்டவர்.

*உதும்பர:* - அத்திமரம். குருவாகவும் தனித்து தத்தாத்ரேய குருபகவானின் வடிவிலும் வழிபடப்பெறும் மரம். அத்தி மரத்தினடியில் ஸ்ரீ தத்தகுரு பாதுகைகளை வைத்து வணங்குவர். ஊர்க் - உணவு. உணவாகிப் போஷிப்பதாகையால் உதும்பரம்.[1] உத்-உம்பரம் - (அம்பரம்) - ஆகாயம். வானளாவியும் - அதற்கு மேம்பட்டும் தான் படைத்த உலகிற்கு அப்பாற்பட்டும் இருப்பவர். முதலில் படைக்கப்பெற்ற ஆகாயம் எனும் பூதம் கார்ய நிலையில் முதலாவதாகும். அதற்கும் முற்பட்ட பகவான் காரண நிலையில் இருப்பவர். உணவாகி எல்லா உயிரினத்தையும் போஷிப்பவர்.

*ந்யக்ரோத: - உதும்பர:* என்ற இரு நாமங்களைச் சேர்த்துச் சொல்லும்போது இலக்கண முறையில் ந்யக்ரோத உதும்பர:

1. ऊर्वा अन्नमुदुम्बरः (तै. ब्रा. १. ३. ८)

என்று கூற வேண்டியிருப்பினும் பெரியோர்கள் ந்யக்ரோதோ தும்பர: என்றே விருத்த அமைப்பை ஒட்டிச் சொல்லிவருகிறார்கள். ந்யக்ரோதும்பர: என ஒன்றாக ஸ்ரீ பட்டர் குறிப்பிடுவார். தாழ்மையுடன் வணங்குபவர்களுக்குக் கட்டுப்படுபவராயும் விண்ணிற்கு மேம்பட்டவராயும் இருப்பவர். மிக மேம்பட்டவராயினும் தாழ்ந்தவர்களும் எளிதில் அணுகும்படி கீழே வருபவர் எனப்பொருள். *(823)*

824. அச்வத்த: – நாளை இல்லாதவர்.

*'நாளை இது இருக்காது' என்ற எண்ணக்கூடிய நிலையற்ற பொருளாயிருப்பவர். 'அச்வத்த: ஸர்வ வ்ருக்ஷாணாம்' (கீதை 10-26) என்றபடி அரசமரம் பகவானின் விபூதி. அரசமரத்தின் எந்தப் பகுதியும் எளிதில் காய்ந்து ஒடியும். நிலைத்திராது. மற்ற இடங்களில் குடியிருக்க அனுமதிக்கப் பெறாத பறவையினம், பூத பிசாசங்கள். அலக்ஷ்மீ முதலியவற்றின் குடியிருப்பு. வேரில் பிரும்மாவும் நடுவில் விஷ்ணுவும் மேற்பகுதியில் சிவனும் இருப்பதாக நினைத்து வலம் வந்து வணங்குவர். மரங்களின் அரசனானதால் (வனஸ்பதி) அரசு என்றே பெயர். திரும்பத் திரும்ப முளைப்பதால் என்றும் அழியாது. எளிதில் ஒடிவதால் நிலைத்துமிராது. மூலப்ரகிருதி முதல் புல் பூண்டுவரை தொடர்புள்ள இந்த உலகம் ஓர் அரசமரத்தைப் போன்றது. இதன் வேர் பகவான். ஆனால் மேல் உள்ளார். இதன் கிளைகள் பிரபஞ்சம். அது கீழே பரவி நிற்கிறது. இதுவே இந்த அரசமரத்தின் தனிச் சிறப்பு.[1] இது எளிதில் மறையும். தொடர்ந்து தோன்றும். அதனால் நித்யமும் அநித்யமுமாகும். அதன் வேர் பரம்பொருள். அந்த அரசம் வேராக இருப்பவர். தேவர்கள் அமுதம் அருந்தியதால் அழிவற்றவர்களாகக் காணப்பெறினும் அவர்களும் அழிபவர்களே. அந்த தேவர்களாகவும் அவர்களின் அந்தர்யாமியா கவுமிருப்பவர். (824)*

825. சாணூராந்த்ரநிஷூதந: – சாணூரனெனும் அந்திரனை அழித்தவர்.

*கம்ஸனின் சபையில் இருந்த அந்திர தேசத்து மல்லன் சாணூரன் என்பவன். கம்சனின் அழைப்பில் வட மதுரைக்கு*

1. ऊर्ध्वमूलोऽवाक्शाख एषोऽश्वत्थः सनातनः । तदेव शुक्रं तद्ब्रह्म । (कठ २. ३. १)

*கண்ணன் வந்தபோது மற்போரில் அவனுடன் சண்டையிட்டு அழித்தார். (825)*

सहस्रार्चिः सप्तजिह्वः सप्तैधाः सप्तवाहनः ।
अमूर्तिरनघोऽचिन्त्यो भयकृद्भयनाशनः ॥ १२० ॥

ஸஹஸ்ரார்ச்சிஸ் ஸப்தஜிஹ்வஸ் ஸப்தைதாஸ் ஸப்தவாஹந:
அமூர்த்திரநகோऽசிந்த்யோ பயக்ருத் பயநாசந: 120

826. ஸஹஸ்ரார்சி: - ஆயிரம் ஒளிக்கதிர்கள் கொண்டவர்.

*எண்ணற்ற ஒளிக்கதிர் கொண்டவர். (நா.489, 719) விசுவரூபம் எடுத்த பகவானின் உடலிலிருந்து கிளம்புகின்ற ஒளி ஒரே சமயத்தில் ஆயிரக்கணக்கான சூர்யர்களின் ஒளிக்கு ஈடானது என்று கீதை கூறுகிறது (11-12) காயவைத்தல், பழுக்கச் செய்தல், சூடேற்றுதல், ஒளியால் விளக்குதல் போன்ற ஆயிரக்கணக்கான செயல்களுக்கான கதிர்கள் கொண்ட சூரியனாக விளங்குபவர். சூரியனிடத்தில் அத்தகையை கிரணங்களைப் புகுத்தியவர். (826)*

827. ஸப்தஜிஹ்வ: - ஏழு நாக்குகள் கொண்டவர்.

*அக்கினி பகவானுக்கு காளீ கராளீ மனோஜவா ஸுலோஹிதா தூம்ரா ஸ்புலிங்கினீ விச்வருசீ என ஏழு நாக்குகள் உண்டு. இவை வேள்விகளில் தரப்பெறுகின்ற விதவிதமான ஆஹுதிகளை ஏற்கின்றன.[1] ஹிரண்யா, கனகா, ரக்தா, கிருஷ்ணா, ஸுப்ரபா, அதிரக்தா, பஹுரூபா என்றும் அவைகளுக்குப் பெயர்.[2] அப்படி ஏழு நாக்குகளுள்ள அக்கினியாயிருப்பவர். (827)*

---

1. काली कराली च मनोजवा च सुलोहिता या च सुधूम्रवर्णा ।
स्फुलिङ्गिनी विश्वरुची च देवी लेलायमाना इति सप्त जिह्वाः ।
(मुण्डके १. २. ४) सप्त ते अग्ने समिधः सप्त जिह्वाः (तै.सं.१.५.३)

2. *ஹிரண்யா முதலிய ஸத்வகுணமுள்ள ஏழு நாக்குகள் ஸாத்விகமான யாகங்களிலும், பத்மராகா, ஸுவர்ணா, பத்ரலோஹிதா, லோஹிதா, ச்வேதா, தூமினீ, கராலிகா என ஏழு ரஜோ குணமுள்ள நாக்குள் காம்ய கர்மங்களிலும், காளீ கராளீ முதலிய ஏழு தமோகுணமுள்ள நாக்குகள் க்ரூர கர்மங்களிலும் ஹவிஸை ஏற்பவை. தேவர்கள், பித்ருக்கள், கந்தர்வர், யக்ஷர், நாகர், பிசாசர், ராக்ஷசர் என்று இவைகளின் ஏழு தேவதைகள்.*

**828. ஸப்தைதா: - ஏழு ஜ்வாலைகள் உள்ளவர்.**

*அக்னியை ஸமித்து நெய் முதலிய எரி பொருள் போட்டுத் தூண்டும்போது ஏழு வித ஜ்வாலைகள் எழும். அந்த ஏழு ஜ்வாலைகள் கொண்ட அக்கினி பகவானாக இருப்பவர். ஏதஸ் - ஸமித் எனும் எரிபொருள். ஹோமம் செய்யப்பெறும் மரச் சுள்ளிகள், அரசு, அத்தி, பலாசு, வன்னி, நருமுருங்கை, வேங்கை, ஒரிலைத்தாமரை என்ற ஏழு ஸமித்துகளால் தூண்டப்பெறுபவர் அக்னி. இந்த ஸமித்துக்களால் செய்யப்பெறும் வேள்விகளால் அடையப் பெறுபவர். ஏழு வகைப்பட்ட பாகயஜ்ஞங்கள், ஹவிர்யஜ்ஞங்கள், ஸோமயஜ்ஞங்கள் இவற்றால் வழிபடப் பெறுபவர். (828)*

**829. ஸப்த வாஹன: - ஏழு குதிரைகள் கொண்டவர்.**

*ஸப்த - ஊர்ந்து பரவும் தன்மை உள்ளது. ஸப்த என்ற பெயருள்ளது. கிரண வடிவில் ஊர்ந்து பரவுகிற குதிரைகள் உள்ள ஸூர்யன்.* **"ஸர்பணஸ்வபாவாச்வோபேத: ஸப்தஸங்க்யாக அச்வோபேதோ வா"** *(ருக்ஸம்ஹிதை 5, 45, 9, ஸாயண பாஷ்யம்). ஸூரியன் ஒரே குதிரை உள்ளவர். அதன் பெயர் ஸப்த என்பது.[1] ஸப்த - ஏழு, ஏழுகுதிரைகள் உள்ள சூரியனாயிருப்பவர்.*

*காயத்ரீ, ப்ருஹதீ, உஷ்ணிக், ஜகதீ, த்ரிஷ்டுப், அனுஷ்டுப், பங்க்தி என ஏழு சந்தங்கள் (யாப்புகள்) வேத வடிவினரான சூர்ய பகவானைக் குதிரைகளாகச் சுமக்கின்றன.* **'ஹயாச்ச ஸப்த சந்தாம்ஸி தேஷாம் நாமாநிமே ச்ருணு. காயத்ரீ ச ப்ருஹத்யுஷ்ணிக் ஜகதீ த்ரிஷ்டுபேவ ச. அனுஷ்டுப் பங்க்திரேதாநி சந்தாம்ஸி ஹரயோ ஹரே:** *(விஷ்ணு புராணம். 2, 8, 5,)* **ஸப்தாச்வ ரூபாச் சந்தாம்ஸி வஹந்தே வாதரம்ஹஸ:** *(மத்ஸ்ய 125, 46)*

*ஆரோகர், ப்ராஜர், படரர், பதங்கர், ஸ்வர்ணரர், ஜ்யோதிஷீமான், விபாஸர் என்று ஏழு சூர்யர்கள், ஆரோகர் நாம் காணும் சூர்யன். ப்ராஜர் முதலிய மூவர் மேருவின் அடியிலும் ஸ்வர்ணரர் முதலிய மூவர் மேருவின் சிகரத்தின் மேல் நோக்கியும் ஒளி தருபவர்களானதால் காண முடியாதவர்கள். இந்த ஏழு சூர்யர்களாக ஒளியைப் பரப்புபவர். ஏழு வாயுக்களால் ஒளி பரப்பப்படுபவர். (நா. 331)*

---

1. एको अश्वो वहति सप्तनामा (तै. आ. ३. ११)

ஏழு ஏழாக இந்த உடலில் பல அமைப்புகள் உண்டு. ரஸம், ரக்தம் முதலிய தாதுக்கள் ஏழு. அது போன்று தலையில் உள்ள துவாரங்கள் ஏழு. இரு கண்கள், இரு மூக்குகள், வாய் என. அவை வழியே பிராண சக்தி வெளிச் சென்று பொருளுணர்வு பெற்றுத் திரும்புகிறது. ஏழு துவாரங்கள் வழியே உணர்வைக் கொணர்கின்ற பிராணன் ஸப்த வாஹந:. அந்த ஏழுதுவாரங்களில் அமைந்த பொறிகள் வழியே வெளிப்பட்டுப் பொருள்களைத் தொடுகின்ற பிராணனாகிய அக்னிக்கு ஏழு நாக்குகள் - ஏழு வெளிப்பாடுகள். அதனால் ஏழு நாக்குடையவன் பிராணன் - ஸப்தஜிஹ்வ:. அந்த நாக்குகளின் வழியே வெளியாகின்ற உணர்வுக்கதிர்கள் - ஏழு ஜ்வாலைகள். ஏழு ஜ்வாலைகள் பெற்றவர் பிராணன் - ஸப்தைதா:. (ஏத: - ஜ்வாலை) அந்த ஏழு உணர்வுகளுக்குப் பொருளாகிய உணர்வை எரிபொருள்போல் தூண்டுபவை ஏழு. உருவம், சுவை, மணம், சப்தம் என்ற சிறப்புள்ளவை. ஸப்தைதா: (ஏத: - விறகு) பொருளறிவே ஹோமம். இவ்வாறு பொருளறிவின் விளக்கமாக இந்த நாமங்களை உபநிடதம் விளக்குகின்றது.[1] இந்த ஏழுவகை உணர்ச்சிகளைத் தரும் பிராணனாக இருப்பவர். (829)

830. அமூர்த்தி: - கன வடிவமற்றவர்.

மூர்த்தி: - உருப்பெற்றது. வினைப்பயனை அனுபவிப்பதற்கெனப் பெற்ற உடல் உருப்பெற்றது. மனிதன், மாடு என்று அடையாளம் காட்டக் கூடியவாறு உருவமைப்பு கொண்டது. வினைத் தொடர்பற்ற இறைவன் அத்தகைய உருவமைப்பு கொள்ளாதவர்.

உலகைப் படைக்கத் தொடங்கிய இறைவன் உயிரினம் தோன்றியதும் அதற்குப் பசியும், தாகமும் ஏற்படச் செய்தார். பிறகு அவற்றிற்கான உணவைப் படைக்க ஐந்து பூதங்களையும் கன உருவமைப்புள்ளதாக்கினார். அப்படிக் கன வடிவம் பெற்ற உணவு இரு வகை. சரம், அசரம் என. பூனைக்கு எலிமுதலியவை சரமானவை. எலிக்கு நெல் முதலிய தான்யம் முதலியவை அசரமானவை. இந்த இரு வகை உணவுகளும் உடலைத்தாங்கின.

1. सप्त प्राणाः प्रभवन्ति तस्मात्सप्तार्चिषः समिधः सप्त होमाः ।
सप्त इमे लोका येषु चरन्ति प्राणा गुहाशया निहिताः सप्त सप्त ॥
(मुण्डक२.१.८)

*அந்த உடலில் உணவாகாமலும் உண்பவனுகாமலும் உள்ளவர் ஆத்மா. அதனுல் அவர் உணவிற்கான கன வடிவமற்றவர்.*[1] *(830)*

831. அநக: - பாபமும் துன்பமுமற்றவர்.

*தீயவினைகளும் தீயவினைகளால் ஏற்பட்ட பாபமும், பாபத்தால் விளைகின்ற துன்பமும் அற்றவர். (நா.146) விருப்புவெறுப்புகளுக்கு உட்படாதவராதலால் வினைத்தொடர்பும் அதனைத் தொடர்கிற துன்பமும் ஜீவனைப் பாதிப்பதுபோல் இவரைப் பாதிப்பது இல்லை*[2] *(831)*

832. அசிந்த்ய: - நினைக்கவொண்ணுதவர்.

*முன்னதாக மனத்தில் பதிந்துள்ள பொருளை இது இத்தகையது என நினைத்துப் பார்க்கவோ ஆராயவோ இயலும். மனத்தில் பதியக் கண் முதலிய பொறிகள் மூலம் பொருள் உருவகப்பட்டிருக்கவேண்டும். பொறிகளுக்கு அகப்படாதவரும் மனத்திற்குப் புலப்படாதவருமானதால் அவர் நினைக்க முடியாதவராகிறுர். பொறிகளுக்கு அகப்பட்டு மனத்தில் புலப்படுகின்ற உலகப் பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டவர் என்றும் மனம் பொறிகள் இவற்றின் புலனுக்கு அப்பாற்பட்டவர் என்றும் கூட எண்ண முடியாது. எண்ணமே புலனுவதைப் பற்றித்தான் எழும். புலனுகாதவை எண்ணத்திற்கும் உட்படா. அதனுல் உவமை காட்டியும் விளக்கமுடியாதவர்.*[3] *(832)*

833. பயக்ருத் - பயத்தை உண்டாக்குபவர்.

*தன் ஆணை மீறித் தவறுன வழியில் செல்பவருக்குப் பயத்தை உண்டாக்குபவர். (பயம் கரோதி) தன் ஆணைகளுக்கு உட்பட்டு நேர் வழியில் செல்பவருக்குப் பயத்தை நீக்குபவர் (பயம் க்ருந்ததி) இதை அடுத்த நாமமும் விளக்கும் (833)*

---

1. स ईक्षत, इमे नु लोका लोकपालाश्च अन्नमेभ्यः सृजा इति । सोऽपोभ्यतपत् । ताभ्योऽभितसाभ्यो मूर्तिरजायत या वै सा मूर्तिरजायत अन्नं वै तत् । (ऐतरेय ३. १ २)
2. शुद्धमपापविद्धपम् । (ईश ८) अतिच्छन्दा अपहतपाप्मा... शोकान्तरम् अनन्वागतं पापेन । (बृहदार ४. ३. २१)
3. अचिन्त्यमव्यपदेश्यं (माण्डूक्य ७) तद्दिव्यमचिन्त्यरूपं । (मुण्डक ३. ७)

834. பயநாசந: - பயத்தைப் போக்குபவர்.

*பெரியோர்கள் வகுத்துள்ள அறநெறி வழுவாது நடப்பவர்களின் பயத்தைப் போக்குபவர். துன்பம் நேரும்போது துணை நின்று பயத்துக்குக் காரணமானவைகளை அகற்றுபவர். தன்னால் விரும்பப் பெறுததும் வெறுக்கப்பெறுவதும் உண்டாகுமோ என்ற அச்சமே பயம். விருப்புவெறுப்புகளை அகற்றி வினைப்பயனாக விளைகின்ற துன்பத்தை மனமார வரவேற்று அனுபவிக்கின்ற பண்பை வளர்த்துப் பய உணர்ச்சியை நீக்கிவிடுபவர். முன் வினைப்பயனாகத் துன்பம் நேருகையில் அதனால் பாதிப்புறாத மனோதிடம் தருபவர். (நா. 935) (834)*

अणुर्बृहत्कृशः स्थूलो गुणभृन्निर्गुणो महान् ।
अधृतः स्वधृतः स्वास्यः प्राग्वंशो वंशवर्धनः ॥ १२१ ॥

அணுர் ப்ருஹத்க்ருசஸ் ஸ்தூலோ குணப்ருந் நிர்குணோ மஹான்
அத்ருதஸ் ஸ்வத்ருதஸ் ஸ்வாஸ்ய: ப்ராக்வம்சோ வம்சவர்த்தந:
121

835. அணு: - அணுவானவர்.

*கண்களால் உணர்வதற்குள்ள வடிவமைப்பு கண் ஏற்கின்ற அளவிற்குச் சிறுத்திருந்தாலும், பெருத்திருந்தாலும் கண் பார்க்காது. கண்ணாலோ அதற்குப் பார்க்க உதவுகின்ற உபகரணங்களாலோ காண முடியாத அளவிற்குச் சிறுத்த வடிவம் கொண்டதும், பகுக்க முடியாததுமான மிக மிக நுண்ணிய பொருள் அணு. பொருளில் மிகச் சிறியது. பரமாணு என்பது அதிலும் சிறியது. அந்த அணுவாக இருப்பவர். பொறிகளுக்குப் புலப்படாதவர். அறிவால் உணரத்தக்கவர்.[1] அணிமா என்ற யோக சித்தியுள்ளவராதலால் பெருவடிவிலிருந்தாலும் அணுவாகிவிடுபவர். தஹரம் எனும் இதயவெளி மிகச் சிறியது. அதில் உள்ள ஜீவன் அதிலும் சிறியவர். அந்த ஆத்மாவாக, அந்த ஆத்மாவினுள் ஆத்மாவாக உள்நுழைந்திருப்பவர் ஆனதால் அணுவளவிலானவர். (835)*

---

1. एषोऽणुरात्मा चेतसा वेदितव्यः (मुण्डक ३. १. ९) अणोरणीयान् (तै. आ. १०. १, कठ १. २. २०) अणुरेष धर्मः (कठ १. १. २१)
यदणुभ्योऽणु च (मुण्डक २.२.२) अणीयान्ह्यतर्क्यमणुप्रमाणात् (कठ १.२.८)
एष मेऽन्तर्हृदयेऽणीयान् (छान्दोग्य ३.१४) स य एषोणिमा (छान्दोग्य ६.८.७)

*இந்த நாமத்திலிருந்து தொடங்கி முன்னதற்குப் பின்னது முற்றிலும் மாறுபட்டதானப் பல நிலைகளில் பகவானை நாமங்கள் விளக்குகின்றன.*

836. ப்ருஹத் - பெரிதாயிருப்பவர்.

*உருவில் பெரிதாயிருப்பது, உலகைப் பெரு வளர்ச்சியடையச் செய்வது பரம்பொருள். பரம் பொருள் வியாபித்துள்ள பெருமளவிற்கு ஈடாக வளர்ந்த வேறு பொருளில்லை. மிகப் பெரிய தோற்றம் கொண்ட இந்த முழு உலகமே அந்தப் பரம்பொருளின் கால் பங்குக்கும் குறைவான இடத்தையே நிரப்பியுள்ளது. பரம்பொருளின் முழு வடிவில் உலகம் அணுவிலும் அணு. அதனால் அவர் பெரிதிலும் பெரியவர். உலகம் இத்தனை பெரிதாவதற்கு அவரிடமுள்ள பெரு வெளி இடமளிக்கிறது.*[1] மஹிமை *என்ற யோக சக்தி* இதன் *மூலம்வெளிப்படுகிறது. அணு என்ற நிலைக்கு நேர்மாறான நிலை - ப்ருஹத் என்பது (நா. 172) (836)*

837. க்ருச: - மெலிந்தவர்.

*பருத்தவர் அல்ல என்பதை மெலிந்தவர் என்று குறிப்பிடுகின்றனர். கண்களுக்குப் புலப்படுகின்ற வடிவுள்ள பொருளாயின் அது மெலிந்ததா, என்று ஆராயலாம். இங்கு பருத்தவரா என்ற கேள்விக்கு மெலிந்தவர் என்றும் மெலிந்தவரா என்ற கேள்விக்குப் பருத்தவர் என்றும் க்ருச: - ஸ்த்தூல: என்ற இரு நாமங்கள் பதில் கூறுகின்றன. உண்மையில் அவர் இளைத்தவரோ பருத்தவரோ அல்ல. எல்லாமாயிருப்பவர், கண்களுக்குப் புலப்படாதவர், ஆதலின் இந்த மெலிவுக்கும் பருப்பத்திற்கும் உட்படாதவர்.*[2] *மிகப் பருத்தவராயிருக்கும் பகவான்* லகிமா *என்ற யோக சக்தியால் நொடியில் மெலிந்தவராவார். (837)*

838. ஸ்தூல: - பருத்தவர்.

*பிரபஞ்சமாக விரிந்து பருத்தவர். அணுவாக இருப்பவர்* ப்ராப்தி *என்ற யோக சக்தியால் பூமியில் நின்றே வானைத்*

1. गोजा अद्रिजा ऋतं बृहत् (कठ २. २. २) महतो महीयान् (कठ १. २. २०) ततः परं ब्रह्म परं बृहन्तं (श्वेताश्व ३. ७)
2. अस्थूलमनणु (बृहदा ३. ८. ८)

தொடுபவர் போல் பருத்தவராவார். திடீரென இளைத்தவர் பருப்பதாலும், பருத்தவர் இளைப்பதாலும், முன்னிருந்த நிலையில் கண்டு பழகியவரால் தற்போது அடையாளம் கா... ...லாது. அதுபோல் முழுவதும் மாறுபடுகின்ற பல நிலைகளில் பகவானைக் காண்பவர் பகவானது இயற்கை வடிவம் இன்னதென அறிய முடியாமல் திகைத்து நிற்பர். அணுவிற்கும் அணு, மஹத்திற்கும் மஹத், மெலிந்ததற்கும் மெலிந்தவர், பருத்ததற்கும் பருத்தவர் க்ருச: என்ற நிலைக்கு நேர்மாறான நிலை ஸ்தூல:. கரிமா என்ற சித்தி இது. (நா. 53, 436) (838)

839. குணப்ப்ருத் - குணங்களைத் தாங்கி நிற்பவர்.

பகவான் உலகைப் படைத்துக் காத்து ஒடுக்கும் சங்கல்பத்திற்கேற்றவாறு உலகைப் பலவாகப் பிரித்துத் தனித்தோற்றம் கொண்டுள்ளவையாக அது இது எனத் தெரியச் செய்வதற்காக, ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களைத் தாங்கி நிற்கிறார். பகவத் தத்துவத்தைக் காட்டிலும் அந்த குணங்கள் வேறுபட்டவை. ஆனால் அவற்றைத் தனது குணங்களாகக் காட்டிக்கொண்டு அந்தந்த குணங்களுக்கேற்ற பணிகளைப் புரிகிறார்.[1] முக்குணங்களால் உலகைத்தாங்குபவர். ஈசித்வம் என்ற யோக சக்தியுள்ளவராகக் காட்சி தருபவர். (839)

840. நிர்குண: - குணமற்றவர்.

ஸத்வம் முதலிய குணங்களைத் தன் குணங்களாக வெளிப்படுத்துகின்ற நிலையிலும் தான் சுய நிலையில் குணங்கள் அற்றவர்.[2] ஸ்படிகம் தன் மேல் வைத்த சிகப்புப்பூவின் நிறத்தை ஏற்றுச் செந்நிறமுடன் காட்சி தருவதும், உண்மையில் நிறமற்றிருப்பதும் குணப்ப்ருத் நிர்குண: என்ற இரு நாமங்களின் பொருளை விளக்கும். இயற்கையின் குணங்கள் ஒன்றும் தன்னைப் பற்றாதபடிதான் ஸ்வதந்திரராக இருப்பவர். வசித்வம் என்ற யோக சித்தியால் தான் பிறரால் பாதிப்படையாதிருப்பவர். குணப்ப்ருத் என்ற நிலைக்கு நேர்மாறான நிலை நிர்குண: (840)

841. மஹான் - மிகப் பெரியவர்.

சொல்லிலும், எண்ணத்திலும், அளவிலும் அடங்காதவர். முன்

1. ज्ञः कालकारो गुणी सर्वविद्यः (श्वेताश्वतर ६. २)
2. साक्षी चेता केवलो निर्गुणश्च । (ब्रह्म ६)

*வந்த ஆறு நாமங்கள் விளக்கியபடி நேர்மாறுபட்ட நிலைகளில் காணப்படுபவரைச் சொல்லோ, எண்ணமோ, அறிவோ எப்படி விளக்கும்?[1] ஒலி முதலிய குணச் சிறப்புகள் அற்றவர். இணையானதும் மிக்கதுமான மற்றொரு ஸூக்ஷ்மப் பொருளில்லாதபடி மிகவும் ஸூக்ஷ்மர், நித்தியத்தன்மை, தூய்மை, எங்கும் நீக்கமற நிரம்பியிருத்தல் முதலிய அவரது தன்மைகளைப் பாதிக்கவோ, கட்டுப் படுத்தவோ, மாறுபாடடையச் செய்யவோ கூடாதவர். வடிவு, தேசம், காலம் முதலியவற்றால் அடங்காதவர். அதனால் மிகப் பெரியவர். அவரது விருப்பங்கள் தடையுறாதவை, அதனால்* பிராகாம்யம் *என்ற யோக சித்தியை வெளிப்படுத்துகிறார். நிழல்போல் உட்புகுந்து பிறர் மனத்தை வசப்படுத்துவது, தன் விருப்பப்படி நினைவிற்கொணரவும் மறக்கவும் செய்வது (மத்த: ஸ்ம்ருதி: ஞானம் அபோஹனம் ச) முதலியவை பிராகாம்யத்தின் பெருமைகள்,. (841)*

**842. அத்த்ருத: – தாங்கப் பெறாதவர்.**

*அனைத்தையும் தாங்குபவராதலால் வேறொன்று இவரைத் தாங்குவதற்கில்லை. எதற்கும் கட்டுப்படாதவர். (நா. 81) (842)*

**843. ஸ்வத்த்ருத: – தன்னாலேயே தாங்கப் பெற்றவர்.**

*தானே தன்னைத் தாங்கிக் கொண்டிருப்பவர். (நா. 326) தனக்கு ஆதாரமாக வேறொன்றைக் கொண்டிராதவர். அவரது பெருமையே அவரைத் தாங்குகிறது.[2] தாங்குகின்ற பொருள் அனைத்தையும் வேறொன்று தாங்கிக்கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஒன்றை மற்றொன்று தாங்குகின்றது என்ற நிலை முடிவற்றுச் செல்லு மாதலால் எல்லா ஆதாரங்களுக்கும் ஆதாரமாக பகவானைக் கொள்கிறோம். அவருக்கு ஆதாரம் அவரே. பரம்பொருளைத் தவிர வேறு ஒன்று இல்லை. வேறொரு பொருள் இருக்கக்கூடுமானால் எது அதற்கு ஆதாரம் என்ற கேள்வி எழலாம். ஒருவனுக்கு உதவிக்கு வர ஒருவரும் வராதபோது உனக்கு யார்*

1. वेदाहमेतं पुरुषं महान्तं (श्वेताश्व ३. ८) महान्प्रभुर्वै पुरुषः (श्वेताश्व ३. १२) अणोरणीयान्महतो महीयान् (श्वेताश्व ३.२०)
महान्तं विभुमात्मानं (कठ २. १. ४) तमाहुरग्र्यं पुरुषं महान्तम् (श्वेताश्व ३.१९)
2. स भगवः कस्मिन् प्रतिष्ठित इति । स्वे महिम्नि । यदि वा न महिम्नीति । (छान्दोग्य ७. २४. १)

உதவி என்ற கேள்விக்கு எனக்கு நானே உதவி என்பான். உதவ ஒருவருமில்லை என்பதே பொருள். அதுபோல் அத்ருத: - வேறொன்றால் தாங்கப் பெறாதவர் என்பதில் ஸமாதானம் அடையாதவருக்கான மற்றொரு விளக்கம் ஸ்வத்ருத: - தன்னைத் தானே தாங்கிக்கொள்பவர் என. எதனாலும் தாங்கப் பெறாதவர், எதனையும் சார்ந்திராதவர்.

இவரது பெருமை மந்திர சித்தி தவம் முதலிய ஸாதனங்களால் செயற்கையாகப் பெற்றதல்ல. இயற்கையாகவே அமைந்தது. அந்த ஈச்வரத் தன்மையால் நிலைநிற்பவர். (843)

**844. ஸ்வாஸ்ய: - அழகிய முகமுள்ளவர்.**

ஆஸ்யம் - முகம். தாமரை இதழின் உட்புறம் போல் செம்மையும், மென்மையும், கவர்ச்சியும் நிரம்பிய முகம் உள்ளவர். அவரது முகத்திலிருந்து வெளி வந்த மூச்சுக்காற்றான வேத ஒலியும் மென்மையும் அழகும் கொண்டது. ஆஸ்யா - ஆஸனம் - இருக்கை. அஜ்ஞான மறைப்பில்லாத பரிசுத்தமான இருக்கை கொண்டவர். (844)

**845. ப்ராக்வம்ஶ: - முதலில் தோன்றிய வம்சம் உள்ளவர்.**

புகழ் பெற்ற ஒருவரை முதல் மனிதராகக்கொண்டு தொடங்குவது வம்சம். ஸூர்ய வம்சம், சந்திர வம்சம், ரகு வம்சம், யது வம்சம் என. இந்த வம்சங்களும், வம்சத்தை தோற்றுவித்தவர்களும் பகவானுக்குப் பிற்பட்டவர்களே. பகவானது வம்சம் எல்லா வம்சங்களுக்கும் முந்தியது. ஒவ்வொரு கல்பத்திற்கும் படைப்பைத் தொடங்கி முதலில் வம்சத்தைத் துவக்குபவர் அவரே. வம்சம் என்பது ஒருவருக்குப் பின் தோன்றுகிற அவரது கிளை. அந்தக் கிளைக்கு முன்னவர். இவரிடமிருந்து தோன்றியது பிரபஞ்சம் என்ற வம்சம். பிரபஞ்சமே எல்லாவற்றிற்கும் முந்தியது. அதற்கும் முந்தியவர். பகவான். நித்ய ஸூரிகளான முத்தர்களுக்கு மூலபுருஷர். நித்ய ஸூரிகளின் வம்சத்திற்கு ஆதாரமாக முன்னிருப்பவர். (845)

**846. வம்ஶ வர்த்தந: - வம்சத்தைப் பெருக்கச் செய்பவர்.**

பிரபஞ்சமாகிய தன் வழித் தோன்றல்களையும் தான் பிறந்த வம்சங்களையும் நித்ய ஸூரி வம்சங்களையும் பெருக்கச் செய்பவர். அப்படியே அந்த வம்சங்கள் பயன் தராதபோது அவற்றைத்

*துண்டிப்பவர். கண்ணன் தான் தோன்றிய யது வம்சத்தையே தான் வைகுந்தமேறு முன் அழித்தார். (பாகவதம் 11, 30) (846)*

**भारभृत्कथितो योगी योगीशः सर्वकामदः ।**
**आश्रमः श्रमणः क्षामः सुपर्णो वायुवाहनः ॥ १२२ ॥**

**பாரப்ப்ருத் கதிதோ யோகீ யோகீஶஸ் ஸர்வகாமத:**
**ஆஶ்ரம: ஶ்ரமண: க்ஷாமஸ் ஸுபர்ணோ வாயு வாஹந: 122**

847. பாரப்ப்ருத் – சுமையைத் தாங்குபவர்.

*பூமியின் பெருஞ்சுமையை ஆதிசேஷர் முதலிய வடிவில் தாங்குபவர். தன்னை அண்டியவர்களின் துயர்களை நீக்கி அவர்களது யோக க்ஷேமப் பொறுப்பையும், தன்னை அடைவதற்கான பொறுப்பையும் தாங்குபவர். (847)*

848. கதித: – புகழப்பட்டவர்.

*பல்லாயிரமாண்டுகளான பின்னரும் தொடர்ந்து ஒரே விதமாகப் புகழப் பெற்றவர். குன்றாத புகழுடையவர். வேதம் முதலியவற்றால் பரதத்துவமெனப் புகழப் பெற்றவர்.[1] (848)*

849.யோகீ – அறிவால் அடையத்தக்கவர்.

*யோகம் - சேராததைச் சேர்த்து வைப்பது யோகம். பரம்பொருளிடம் பதியாத மனத்தை அவரிடம் பதியச் செய்வது யோகம். (நா. 18) பொறிகள் இழுத்துச் செல்லும் பாதையில் மனம் போனபடி என்றிராமல் லட்சிய நோக்குடன் மனத்தைக் கட்டுப் படுத்துவது யோகம். அத்தகைய யோக முறைகளால் அடையத்தக்கவர். யோகம் - மனவடக்கம். தானே தன்னைத் தன்னிடம் எப்போதும் காண்பதாகிய ஸமாதிநிலை. அந்நிலையில் பெறத்தக்கவர். கூடாதனவற்றைக் கூட்டுவிப்பவர். (849)*

850. யோகீஶ: – யோகிகளின் தலைவர்.

*யோக வழியறிந்தும் மெத்தனத்தால் தன்னிலை தவறி யோகத்திலிருந்தும் நழுவ நேராமல் காப்பாற்றி யோகிகளின் தலைவராயிருந்து யோகம் கூடும்படி செய்பவர். (நா. 19) (850)*

1. वेदैरनेकैरहमेव वेद्यः (कैवल्य २२)

851. ஸர்வகாமத: - எல்லா விருப்பங்களையும் அளிப்பவர்.

*வாழ்க்கை நலன்களை கோரிச் செய்யப்பெறும் நற்பணிகளின் பயனாக அனைவரது விருப்பங்களையும் நிறைவேறச் செய்கின்றவர்.[1] யோக வழியில் சமாதி நிலைவரை செல்லாமல் நடுநிலைகளில் ஏற்பட்ட சிறு சிறு பலன்களையே பெரும் பயனாக நினைப்பவர்களின் ஆசையையும் நிறைவேற்றுபவர். (நா. 298) (851)*

852. ஆஶ்ரம: - இளைப்பாறும் இடம்.

*ஸம்ஸாரம் எனும் காட்டில் திரிந்து களைப்படைபவர்களுக்கு ஆங்காங்கு மாற்றுபசாரமளித்து ஓய்வு தருபவை பிரும்மசர்யம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், ஸன்யாஸம் என்ற ஓய்வு நிலைகள். திரிந்து களைத்து ஓய்வை நாடி வருபவர்களுக்கு ஓய்வும், களிப்பும் தருபவை ஆசிரமங்கள். புறக்காட்சியை விரும்பாமல் அகக்காட்சிக்காக ஏகாந்தத்தைக் காட்டில் நாடிய முனிவரின் ஆசிரமம். அப்படியே விழிப்பு. கனவு என்ற இரு நிலைகளிலும், பொறிகளும் மனமும். அலைத்தழித்ததால் களைத்தவர்களுக்கு நல்ல தூக்கமெனும் ஆசிரமம், மூன்று நிலைகளிலும் களைப்பை உணர்ந்த ஞானிக்கு ஸமாதி, மோக்ஷம் என்ற படிப்படியாக அமைந்த ஆசிரமங்கள். இவையாக அமைந்து களைப்பை நீக்கி ஓய்வு தருபவர்.*

*யோக வழியில் அடையவேண்டிய நிலையை அடையத் தவறியவர்களுக்கு மறு பிறவியில் மேலும் யோகம் எளிதில் கூடுகின்ற வாய்ப்பைத் தருகிற நற்குலப் பிறப்பைத் தந்து யோகம் கூடச் செய்து இதுவரை அலைந்ததால் ஏற்பட்ட களைப்பை அகற்றுபவர்.*

*யோக வழியில் அவருடன் எண்ணத்தால் கூடியவர்களுக்கு நிம்மதி அளித்துத் தன்னிடமே இளைப்பாறச் செய்பவர். (852)*

853. ஶ்ரமண: - வருத்துகிறவர்.

*நல்வழிகாட்டியும் விவேகமின்றிப் பிறப்புச் சுழலில் சிக்குபவர்களுக்கு விதியாயிருந்து வினைப்பயனை அனுபவிக்கச் செய்து வாட்டுபவர். முன் வினை நீங்கத்தக்க நோன்பு*

1. एष उ एव वामनीरेष सर्वाणि वामानि नयति। (छान्दोग्य ४. १५. ३)

முதலியவற்றின் மூலம் உடல், மனம் வருந்தச் செய்து மனவடக்கம் பெறச் செய்பவர். கடும் நோன்பு புரிகிற யோகாப்பியாசிகளின் வடிவில் இருப்பவர். (ச்ரமணர் - கடும் நோன்பு புரிந்து உடலை வாட்டிக் கொள்பவர். சமணர்) *(853)*

854. க்ஷாம: - அழிப்பவர்.

*உயிரினமனைத்தையும் மரணம் எனும் நிலையை அடைவதற்கு முன் பொறிகளும், உடலும், மனமும் தன் தன் நிலையிலிருந்து சிறிது சிறிதாகத் தளரச் செய்து ஒடுக்கி முடிவிற்கு அழைத்துச் செல்பவர்.*

*க்ஷம: - க்ஷாம:. எதனையும் சாதிக்கவல்ல திறமையுள்ளவர். (நா. 442-443) நற்கருமம் புரிபவனை என்றும் கெடாதபடி மேன்மேலும் நல்வழிப்படுத்தி மேனிலை பெறச் செய்பவர் (854)*

855. ஸுபர்ண: - நல்லிலைகள் கூடிய மரமாயிருப்பவர்.

*தன் நினைவுடன் நற்பணி புரிபவர்களுக்கு ஸம்ஸாரம் என்பதை நிழல் தருகிற பசுமை ததும்புகிற இலைகள் நிரம்பிய மரமாக ஆக்குபவர். வேதத்தையே இலைகளாகக்கொண்ட ஸம்ஸாரமாகிய அச்வத்த (அரச) மரம் என்ற கீதை விளக்குகிறது* 'சந்தாம்ஸியஸ்ய பர்ணாநி - ஏஷோ அச்வத்த: ஸநாதந: *(கீதை. 15,1) (நா. 192)*

*பறவைகளுக்குத் தான் சென்றடைய வேண்டிய இடத்தை அடைய, இறக்கைகள் உதவுமாப்போல், நல்ல அழகிய இறக்கையாக நின்று மேனிலை அடையச் செய்பவர். இரண்டு இறக்கைகள் 1. நல்வழிகாட்டும் வேதம் முதலியவை. 2. அவ்வழி செல்லும் பெரியோர்களின் நடைமுறை. இந்த இரு இறக்கைகளாகி நற்கதி அடையச் செய்பவர். (855)*

856. வாயுவாஹந: - வாயுவை அசையச் செய்பவர்.

*எந்தக் கட்டிற்கும் உட்படாத வாயுவையும் அவரை ஒத்த சூர்யன், இந்திரன், யமன் முதலானோரையும் கடுமையான ஆணைக்குட்படுத்தி அவரவர் பணிகளில் ஈடுபடுத்துபவர்.[1] (நா. 331) தன்னை அண்டியவர்கள் எந்நிலையில் இருப்பினும் காற்றைப்போல் சுமந்து கரை சேர்ப்பவர். காற்றைப்போல் விரைவாகச் செல்கிற கருடனைச் சுமக்கச் செய்து அவர்களைக் காப்பாற்றுபவர். (856)*

1. भीषाऽस्माद्वातः पवते। (तै. उ. २. ८)

धनुर्धरो धनुर्वेदो दण्डो दमयिता[1] दमः।
अपराजितः सर्वसहो नियन्ताऽनियमोऽयमः ॥ १२३ ॥

தநுர்த்தரோ தநுர்வேதோ தண்டோ தமயிதா[1] தம:
அபராஜிதஸ் ஸர்வஸஹோ நியந்தாऽநியமோऽயம: 123

857. தநுர்த்தர: - வில்லேந்தியவர்.

*ஆணையைச் செலுத்துபவர் கடுமையைக் காட்ட ஆயுதம் ஏந்துவார். புல்லையும் அம்பாக்கிச் செலுத்தும் சிறந்த வில்லாளியான ஸ்ரீராமனாக விளங்குபவர். சார்ங்கம் என்ற வில்லேந்தியவர். (நா. 76, 181, 996) (857)*

858. தநுர்வேத: - வில்வித்தை அறிந்தவர்.

*வில் வித்தை அறிந்து வில் வீரரானவர். வில் வித்தையாக இருந்து வீரர்களை அடைந்து அவர்களை வீரர்களாக்கியவர். மந்திர சக்தியால் நினைத்தபடி அம்பைச் செலுத்தவும், செலுத்திய அம்பைத் திரும்பப் பெறவும், இயற்கையை மாற்றி அமைக்கவும் வல்ல தனுர் வேதமாக இருப்பவர். (858)*

859. தண்ட : - தண்ட நீதியாயிருப்பவர்.

*மக்களை நேர்வழிப்படுத்துவதற்கெனச் சட்ட திட்டங்களையும் ஆணை முறையையும் அமைத்து, மீறுபவர்களைத் தண்டித்தும் செயலிழக்கச் செய்தும் வழிப்படுத்தி ஆட்படுத்துவதற்கான முறை தண்ட நீதி - அரசாணை. அது பகவானின் விபூதி.* **'தண்டோ தமயதாமஸ்மி'** *(கீதை 10, 38) யமனின் ஸம்ஹார சக்தியை காட்டுகிற ஆயுதமான தண்டமாயிருப்பவர். (859)*

860. தமயிதா - அடக்குபவர்.

*அடக்கி ஆளும் அரசர். முடிவைத் தந்து எல்லோரையும் அடக்கவல்ல யமன் முதலானோராக இருப்பவர். (நா. 190) (860)*

861. தம: - அடக்குமுறையாக இருப்பவர்.

*அடக்கி ஆள்கிற அரசர் முதலானோரின் ஆணையாக, ஆணைப்படி நடக்கிற அடக்குமுறையாக இருப்பவர். அந்த*

1. दमयिताऽदमः, नियमो यमः *தமயிதா(அ)தம:, நியமோ யம: (பா)*

*ஆணைக்கு அடங்கி நடப்பதால் பெறக்கூடிய புலனடக்கமும் உடலின் சஞ்சலத் தன்மையைக் கட்டுப்படுத்துகின்ற முயற்சியும் தமமாகும்.*

*அதம: என்ற பாடம். - பேராண்மையால் உலகை அடக்கி ஆளுகின்ற பகவான் பிறரால் அடக்கமுடியாதவர். (861)*

862. அபராஜித: – பிறரால் வெல்லப் பெருதவர்.

*இவரது ஆணையை மீறி நடப்பவரோ, இவரைத் தன் ஆணைக்கு உட்படுத்துபவரோ உலகில் இல்லை. (நா. 716) எதிரிகளால் வெல்லப்பெருதவர். (862)*

863. ஸர்வஸஹ: – எல்லாவற்றையும் பொறுப்பவர்.

*மிகக் கொடும் எதிரிகளின் தாக்குதலையும் தாங்கி அசையாதிருப்பவர். அவர்கள் அறியாமையால் எதிர்ப்பதை உணர்ந்து அவற்றைப் பொருட்படுத்தா திருப்பவர்.* **'ந கச்சித் நாபராத்த்யதி'.** *(ராமாயணம் 6, 113, 45) தவறிழைப்பது மனித இயல்பு எனக் கொண்டு மன்னித்துவிடுபவர். (நா. 144, 565) (863)*

864. நியந்தா – கட்டுப்படுத்துபவர்.

*அவரவர்களை அவரவர்களுக்குகந்த பணியில் கட்டுப் படுத்துபவர்.[1] தண்ட நீதியில் நீதி முறையை மீற முடியாதபடி நல்வழியில் கட்டுப்படுத்துவதற்கே முதலிடம். மீறியவரைத் தண்டிப்பதற்கு இரண்டாமிடம். அந்தர்யாமியாயிருந்து நேர்வழியை உணர்த்திக் கெட்ட வழியைப் பற்றி அச்சுறுத்தி நல்வழிப்படுத்துபவர். தன்னை வழிபடப் பல முறைகளைக் காட்டி எதிலேனும் ஒன்றில் ருசி உண்டாக்கி வழிப்படுத்துபவர். (864)*

865. அநியம: – கட்டுப்பாடற்றவர்.

*செய்யவும் செய்யா திருக்கவும் செய்ததை மாற்றவும் பூர்ண சுதந்திரமுள்ளவர். இவரைக் கட்டுப்படுத்துகின்ற வேறு கட்டுப்பாடோ கட்டுப்படுத்துபவரோ இல்லாதவர்.*

*நியம: - என்றும் பதம் பிரிப்பதுண்டு. யோக முறைகளில் ஓர் அங்கமான நியமமாக இருப்பவர். உடல் தூய்மை, மனமகிழ்ச்சி,*

1. अभिमन्ता जीवो नियन्तेश्वरः (नृसिंह. उ. ९. ७)

தவம், வேதம் ஓதுதல், ஈச்வர தியானம் இவை நியமங்கள் எனப்படும். (யோக ஸூத்திரம் 2, 32) மன ஓட்டத்தைத் தடை செய்து மனத்தை நிலைநிறுத்த உதவுகின்ற பயிற்சிகள் இவை. நியம: - விதியாக நின்று வினைப் பயனைத் தந்து கட்டுப்படுத்துபவர். (நா. 161) (865)

866. அயம: - யம பயமற்றவர்.

அவரால் உயிரினத்தின் முடிவிற்காகப் படைக்கப் பெற்று அவரது ஆணைக்குட்பட்டுச் செயலாற்றுகின்ற யமன் ஆதியும் அந்தமுமற்ற இறைவனுக்கு யமனாக இருக்க முடியாது. யம: என்ற பாடமும் உண்டு. அஹிம்ஸை, ஸத்யம், திருடாமை, பிரும்மசரியம், பொருள் சேர்க்காமை ஆகியவை யமம் என்ற யோகப் பயிற்சி முறையில் அடங்கியவை. (யோக ஸூத்திரம். 2, 30) யமம் என்ற யோக முறையாகவும் அதனால் பெறப்படுகின்ற புலனடக்கமாகவும் இருப்பவர். (நா. 162) ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் அடக்குபவர். உயிரினத்தின் வாழ்வைக் கட்டுப்படுத்தும் யமனாயிருப்பவர். (866)

सत्ववान्सात्विकः सत्यः सत्यधर्मपरायणः ।
अभिप्रायः प्रियार्होऽर्हः प्रियकृत्प्रीतिवर्धनः ॥ १२४ ॥

ஸத்வவான் ஸாத்விகஸ் ஸத்யஸ் ஸத்யதர்ம பராயண:.
அபிப்ராய: ப்ரியார்ஹோऽர்ஹ: ப்ரியக்ருத் ப்ரீதிவர்த்தந: 124

867. ஸத்வவான் - மனத்திட்பம் உள்ளவர்.

போரில் பயமின்றி முன் செல்கிற சூரத்தனம், கலக்கமுறச் செய்கின்ற சூழ்நிலையிலும் கலக்கமுறாத தீரத்தன்மை, எதிரி எத்தகையவனாயினும் எதிர்த்து முழு முனைவுடன் தாக்குகின்ற வீரத்தன்மை முதலிய மனத்திண்மையைக் காட்டுகின்ற தன்மைகள் அனைத்தும் பொருந்தியிருப்பவர். (867)

868. ஸாத்விக: - ஸத்வகுணத்திலிருப்பவர்.

ஈசுவரனது செயலில் மாயையின் விளக்கம் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் மூலம் நடைபெறுகிறது. ரக்ஷணம் (காப்பு) என்ற பணியில் ஸத்வ குணத்தைத் தனிச் சிறப்பாக ஏற்று

விஷ்ணுவாகக் காட்சியளிப்பவர். மனத்தெளிவு, மனத்திண்மை, ஸுக உணர்ச்சி இவை ஸத்வகுணத்தின் தனிச் சிறப்புகள், தர்மம், ஞானம், வைராக்யம், ஐச்வர்யம் என்ற நான்கும் ஸத்வகுணத்தைக் கடைப்பிடிப்பதன் பலன்கள. அந்த ஸத்வ குணத்திலேயே நின்று காப்பு என்ற பணியைப் புரிபவர். (868)

869. ஸத்ய: - நல்லோருக்கு நல்லவர்.

ஸத்-வேதம். முதலிய நன்னூல்களில் வகுத்துள்ளபடி நேர்மையுடன் நடப்பவர். பரம்பொருள் ஒன்று உண்டு என்று ஆராய்ந்து தெளிந்தவர். அந்த 'ஸத்யத்தின் செயல்களை நிறைவுறச் செய்து அவர்களுக்கு இதமாக உதவுப்வர். (ஸத்ஸு ஸாது:) (நா. 106, 212) உண்மையான பெருமைகளுள்ளவர். (869)

870. ஸத்ய தர்மபராயண: - ஸத்யமும் தர்மமும் மேலானதெனக் கொண்டவர்.

தானறிந்த அளவில் உண்மையானதைக் கூறுதல் ஸத்யமாகும். தான் உணர்ந்த அளவில் வேதம் முதலியவை விளக்கிய அறப்பாதையில் நேர்மையுடன் நடப்பது தர்மம். இவ்விரண்டுமே வாழ்வின் முக்கியமான குறிக்கோளெனக் கொண்ட நல்லவராயிருப்பவரும் அவரே. ஸத்யத்தாலும் தர்மத்தாலும் அடையப்பெறும் மேலான இடமாயிருப்பவர். ஸத்யத்தையும் தர்மத்தையும் உவப்பானதாகக் கொண்ட ஸ்ரீராமன் முதலிய வடிவில் தோன்றியவர். (நா. 289, 529) (870)

871. அபிப்ராய: - எதிர்பார்க்கப்படுபவர்.

வாழ்வில் கிட்டவேண்டிய பெரும்பேறாக கருத்தாழத்துடன் அனைவராலும் எதிர்பார்க்கப்படுபவர். உலகத்தைக் காப்பு ஒடுக்கம் என்ற இருநிலைகளிலும் தன்னை நோக்கி வரச்செய்பவர். ஸத்யத்திலும் தர்மத்திலும் நிலைத்து நிற்பவரால் வேறு விஷயப் பற்றற்று நாடப்பெறுபவர். (871)

872. ப்ரியார்ஹ: - அன்பிற்குரியவர்.

தனக்குப் பிரியமான சிறந்த பொருளைத் தனக்கு மிகப் பிரியமானவருக்களிப்பது மனித இயல்பு. பிரியமே அப்படிக்

அளிக்கத் தூண்டுகிறது. உடல், உடைமை, மனைவி, மக்கள், சொத்து முதலியவை பிரியமானதாயினும் அவைகளைவிடத் தனக்கு மிகப் பிரியமான பொருள் 'தான்' ஆகிய ஆத்மாவே. அந்த ஆத்மா ஈசனே.[1] அதனால் தனக்கு மிக மிகப் பிரியமானதனைத்தையும் ஈசனுக்குப் பிரியத்துடன் அர்ப்பணம் செய்யும்போது அந்தப் பிரியத்திற்கு ஏற்றவராகப் பிரியத்துடன் தருவதை ஏற்கிறார். தன்னிடமே பிரியமனைத்தையும் காட்டுபவரான ஞானிக்கு ஏற்ற அன்பர். (872)

873. அர்ஹ: - வழிபடத்தக்கவர்.

வரவேற்று இடமளித்துப் பாராட்டி அன்புடன் உபசரித்து வணங்க ஏற்றவர். வேறு பொருளில் நாட்டமிராதவர்களாலும் நாடுவதற்கேற்றவர். (873)

874. ப்ரியக்ருத் - பிரியத்தைச் செய்பவர்.

அன்புக்குரியவர் தனக்கு அன்புடன் அளிப்பதை ஏற்றுத் தன்னைக் கடன்பட்டவராக உணர்ந்து அவர்களது விருப்பத்தைத் தானே வலிய வந்து நிறைவேற்றுபவர். நல்லோர்களைத் தனது அன்பர்களாக ஆக்குபவர். விரும்பக்கூடாதவற்றை நல்லோர் விரும்பியபோது அந்த நாட்டத்தைத் துண்டித்துக் காப்பவர். (874)

875. ப்ரீதிவர்த்தந: - அன்பை வளர்ப்பவர்.

நல்லோர்களுக்குத் தன்னிடம் அன்பை ஏற்படுத்தி வளர்ப்பவர். அவர்கள் விரும்பியதை அளித்து மகிழ்விப்பவர். (875)

विहायसगतिर्ज्योतिः सुरुचिर्हुतभुग्विभुः ।
रविर्विरोचनः सूर्यः सविता रविलोचनः ॥ १२५ ॥

விஹாயஸகதிர் ஜ்யோதிஸ் ஸு²ருசிர் ஹு³தபுக் விபு:
ரவிர் விரோசனஸ் ஸூ²ர்யஸ் ஸவிதா ரவிலோசந: 125

1. आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति। (बृहदा ४. ५. ६)

876. விஹாயஸகதி: - வானில் செல்பவர்.

*விஹாயஸ: - தடையற்றது, ஆதாரமற்றது, மிகப் பெரிது, ஆகாயம். தடையற்றதும் மிகப் பெரிதுமான - கதி - நடையுள்ளவர் - சூரியன். அவர் வானில் செல்கிறார். வானில் செல்வதால் அவரது நடை தடையுறுவதில்லை. ஆகாசம் தடையற்றது. அதற்கு வேறு ஆதாரமில்லை. மிகவும் விரிவானது. அதனால் அதை முழுவதும் பரவிச் செல்கின்ற சூர்யனது நடை பெரு நடையாகிறது. தடையற்றுச் செல்பவரும், மிகப் பெரிய நடை கொண்டவரும், வானில் செல்பவருமான ஸௌர்யனாக இருப்பவர். வாழ்வில் விரும்பியதை நிறைவேற்றுகின்ற (ப்ரியக்ருத் - ப்ரீதிவர்த்தந:) இறைவனது பரிவே சூர்யனாக வடிவெடுத்துள்ளது. சூர்யன் முதலிய பல்கோடி ஒளி மண்டலங்களைப் பிணைத்து நிற்கும் சிம்சுமார சக்கிரத்தில் அதன் இதயமாக விஷ்ணு பதமாக வானில் நிற்பவர். (நா. 384, 386). தடையற்றதும் மிகப் பெரியதுமான பரம பதத்தை அடைய உபாயமாக இருப்பவர். இதனைத் தொடர்கின்ற 10 நாமங்களும் சூர்யனைப் பல கோணங்களில் விளக்குகின்றன. (876)*

877. ஜ்யோதி: - தானே ஒளிர்பவர்.

*தானே தன் ஒளியால் விளங்குபவர். பேரொளியாக இருப்பவர். மற்ற ஒளிகளால் இந்த ஒளியை விளக்க முடியாது.[1] நிறம் முதலிய பாகுபடுத்தக்கூடிய தொன்றுமில்லாத சுத்தமான ஒளி. (நா. 564) (877)*

878. ஸுருசி: - சிறந்த பிரகாசம் உள்ளவர்.

*ருசி: - தெளிவு, துலக்கம், பிரகாசம். சூர்யன் தன் தூய ஒளிகளால் பொருளை நன்கு துலக்குபரானதால், பொருள் தெளிவாகத் தெரிகிறது. நல்ல தெளிவு தரும் பிரகாசம் உடையவர். பளபளப்பு உள்ளவர். ருசி - விருப்பம். உலகைக் காப்பதில் சிறந்த விருப்பம் உள்ளவர். உயிரினத்தின் வாழ்வில் சூர்யனது பங்கு மதிப்பிட இயலாத அளவில் பெரிது. (878)*

1. नारायणपरो ज्योतिः (तै. आ. १०. १३) अत्रायं पुषः स्वयं ज्योतिः (बृहदार ४. ३. ९)

879. ஹுதபுக் - ஹோமம் செய்ததை உண்பவர்.

*வேள்விகளில் அந்த அந்த தேவதைகளின் மனநிறைவை வேண்டி அக்னியில் இடப்படும் பொருளை அக்னி தேவன் அந்தந்த தேவதைகளுக்கு உவப்பான உணவாக்கிச் சூர்யனிடம் சேர்ப்பிக்கிறார். சூர்யன் தன் ஒளிகளால் அதனை ஏற்றுப் பாதுகாத்துத் தேவர்களிடம் ஒப்படைக்கிறார்.* "அக்நௌ ப்ராஸ்தா ஆஹுதி: ஸம்யக் ஆதித்யம் உபதிஷ்டதே" *(மனுஸ்ம்ருதி) ஹுதம் புநக்தி - வேள்வியில் அக்னியில் இடப்பட்டதைக் காப்பவர் சூர்யன். அந்தந்த தேவதை வடிவில் இருந்து வேள்வியில் அளிக்கப்பெற்றதை உண்பவர் பகவான். ஹுதம் புங்க்தே. (நா. 887) (879)*

880. விபு: - எங்கும் பரவி நிற்பவர்.

*விபு: - பரவியவர். ஒளியால் எங்கும் பரவி நிற்பவர் சூரியன். அதனால் ஆங்காங்கு நடைபெறுகின்ற வேள்விகளில் இடப்பட்டதை ஏற்க முடிகிறது. விபு: - உடைமையாளர். மூவுலகைத் தன் உடைமையாகக்கொண்டவர். (880)*

881. ரவி: - துதிக்கப்பெறுபவர்.

*ரூயதே - ஸ்தூயதே. சைவர், வைஷ்ணவர், சாக்தர், காணபதர், கௌமாரர், ஸௌரர் எனப் பல வகைகளில் தெய்வத்தைக் கண்டு வழிபடுகின்றவர்களால் அந்தந்த தேவர் வடிவில் துதிக்கப்பெறுபவர் சூரியன்.* 'ஸவித்ருமண்டல மத்த்யவர்தீ *நாராயண:', 'ஸௌரமண்டல மத்த்யஸ்தம் ஸாம்பம்', 'பானுமண்டலமத்த்யஸ்தா'. சூரியன் பகவானின் ஒரு விபூதி.* 'ஜ்யோதிஷாம் ரவிரம்சுமான்', *(கீதை. 10, 21). பூமியிலுள்ள நீர்ப்பகுதியை ஆவியாக்கி எடுத்துச் செல்வதால் ரவி என்று கூறுவர்.* 'ரஸாநாம் ச ததா ஆதாநாத் ரவிரித்யபிதீயதே. *(விஷ்ணு தர்மோத்தரம்) (நா. 39) (881)*

882. விரோசந: - பலவிதமாக ஒளிர்பவர்.

*காலை, பகல், மாலை என்று பொழுதுக்கேற்பவும் கோடை, மழை, பனி எனப் பருவத்திற்கேற்பவும் வெயிலை அனுபவிப்பவருக்கேற்பவும் தேவதையாக அவரை வழிபடுபவரது மனநிலைக்கேற்பவும் பலவிதமாகக் காட்சி தருபவர். செடி கொடிகளின் வளர்ச்சி, பிராண சக்தி அளிப்பது, உலர்த்துவது*

*முதலிய பல பணிகளில் பயன்படுகின்ற பலதரப்பட்ட கிரணங்கள் உள்ளவர். சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், அக்னி என்ற பல தோற்றங்களில் ஒளிர்பவர். (882)*

883. ஸூர்ய: - உலகைத் தோற்றுவிப்பவர்.

*ஆகாயத்தில் பாம்பு போல் சீறிச் செல்பவர் (ஸரதி). ஒளியின்றி வேற்றுப்பொருள் ஒன்றிருப்பதையே உணர முடியாது. உலகமிருப்பதையே சூரியனின் ஒளியால் உணர்கிறோம். பல விதமாக இவ்வுலகத்தை நம் முன் தோற்றுவிப்பவர். நமக்கு வேண்டிய நற்பொருளனைத்தையும் உண்டாக்குபவர். (ஸூதே). தாமரையை மலரச் செய்கிறார். தாமரை செல்வத்தின் தேவதையாகிய லக்ஷ்மியை மலரச் செய்கிறது என்று கவிகள் கூறுவர். செல்வம் கொழிக்கச் செய்பவர். (ஸூதே ச்ரியம்).[1] (883)*

884. ஸவிதா - வெளிப்படுத்துபவர்.

*தாய் தன் கருவில் உள்ளதை நன்கு வளர்த்து உரிய காலத்தில் கருவறையிலிருந்து வெளிப்படுத்துவதுபோல் உலகில் உள்ள புல் பூண்டிலிருந்து அனைத்தையும் நன்கு வளர்த்து உலகம் அனுபவிக்கத்தக்க வடிவில் வெளிப்படுத்துகிறார் (ஸூதே) உயிரினத்திற்கு உற்சாகம் அளித்துச் செயலில் ஈடுபடுத்துபவர். (ஸுவதி)* 'தியோயோந: ப்ரசோதயாத்' *(காயத்ரீ)* 'ப்ரஜாநாம்து ப்ரஸவநாத் ஸவிதேதி விகத்யதே' *(விஷ்ணுதர்மோத்தரம்).[2] (நா. 399, 969) (884)*

885. ரவிலோசந: - சூரியனைக் கண்களாகக் கொண்டவர்.

*விராட் வடிவில் பகவானின் கண்களாகச் சூரியனும் சந்திரனும் இருக்கிறார்கள். ஸூர்யன் வலது கண்.[3] ஒளிமிக்க கிரணங்களால் உலகைக் காணச் செய்பவர். (885)*

[4]अनन्तो हुतभुग्भोक्ता सुखदो नैकजोऽग्रजः ।
अनिर्विण्णः सदामर्षी लोकाधिष्ठानमद्भुतः ॥ १२६ ॥

---

1. सूयमानत्वात्सूर्यः (मैत्रायणी ५) वायुस्त्वं सूर्यस्त्वं (गणपति)
2. सवनात्सविता (मैत्रायणी ८)
3. अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ (मुण्डक २. १. ४)
4. अनन्तहुतभुग्भोक्ता, असुखदः नैकदः अद्भुतं *அநந்த ஹுதபுக் போக்தா அஸுகத: நைகத: அத்புதம் (பா)*

அநந்தோ ஹுதபுக் போக்தா ஸுகதோ நைகஜோऽக்ரஜ:
அநிர்விண்ணஸ் ஸதாமர்ஷீ லோகாதிஷ்டானமத்புத:. 126

886. அநந்த: - எல்லையற்றவர்.

*அவரது பரப்பிற்கும் சிறப்பிற்கும் எல்லையில்லை. எங்கும், எப்போதும், எல்லாமாயும் இருப்பவர். அவரது குணச் சிறப்புகளுக்கும் எல்லையில்லை.* **'நாந்தம் குணாநாம் கச்சந்தி தேநாநந்தோ அயம் அவ்யய:'** *(விஷ்ணு புராணம் 2, 5, 24) அநந்தர் என்ற ஆதிசேஷராயிருப்பவர். (நா. 659) (886)*

887. ஹுதபுக் - ஹோமம் செய்ததைக் காப்பவர்.

*ஹோமம் செய்ததில் குறைகள் இருப்பினும் அவற்றைப் பூர்ணமாக்கிக் காப்பவர். இறைவனின் நாமம் கூறிச் செய்த ஹோமம் குறைகளிருப்பினும் நிறைவு பெறுகின்றது.* **'யஸ்ய ஸ்ம்ருத்யா ச நாமோக்த்யா தபோயாக க்ரியாதிஷு. ந்யூநம் ஸம் பூர்ணதாம் யாதி ஸத்யோ வந்தே தமச்யுதம்'.** *(நா. 879) (887)*

888. போக்தா - அனுபவிப்பவர்.

*பகவானது மாயை பிரகிருதி என்ற வடிவெய்தி இவ்வுலகமாகக் காட்சியளித்தபோது ஸாக்ஷியாயிருந்து அந்த பிரகிருதியின் விளையாட்டைக் கண்டு ரசிப்பவர். (புங்க்தே). உலகைத் தன் பொருளாக மதித்துக் காப்பவர். (புநக்தி) (நா. 143, 500) (888)*

889. ஸுகத: - சுகமளிப்பவர்.

*பக்தர் விரும்பிய சுகங்களையும், பெரும் சுகமாகிய மோக்ஷத்தையும் தருபவர். பக்தர்கள் தன்னை நோக்கி வருவதில் தடையாயுள்ள பற்றை நீக்குவதற்காகப் பொருள் நாட்டம் குறையும் வண்ணம் பொருளால் வரும் சுகத்தைத் துண்டிப்பவர். அஸுகத: - பக்தர்களின் துன்பத்தைத் துண்டிப்பவர். (889)*

890. நைகஜ: - பல தடவைகள் தோன்றியவர்.

*பக்தர்களின் துன்பத்தைக் களைவதற்கும் தர்மத்தைக் காப்பாற்றுவதற்கும் பல பிறவிகள் எடுத்தவர்.* **'யதா யதாஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத, அப்ப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மா நம் ஸ்ருஜாம்யஹம்'.** *(கீதை 4, 7) நைகத: நிறையத்தருபவர். (890)*

891. அக்ரஜ: - முன் தோன்றியவர்.

உலகம் தோன்று முன் அதன் மூலக்கருவாக ஹிரண்யகர்ப்பராகத் தோன்றியவர்.[1] *(891)*

*விஹாயஸகதி: எனத் தொடங்கி அக்ரஜ: என்ற நாமம் வரை கௌஷீதகீ உபநிஷத்தில் கூறப்பட்டுள்ள பர்யங்கவித்யையின் பல நிலைகள் விளக்கப்பெறுவதை ஸ்ரீபட்டர் குறிப்பிடுகிறார். பக்தி முதிர்ந்த நிலையில் பரஜ்ஞானம் ஏற்பட்டு மற்றவர் மரணத்திற்கு உட்படுவதுபோலல்லாமல், உடலின் இறுதியில் ஸுஷும்ணு நாடியின் துவாரம் வழியே பிராணவாயு வெளிப்பட்டுப் பரமபதம் செல்ல உபாயமாயிருப்பவர் - விஹாயஸகதி:. அவர்கள் செல்கிற அர்ச்சிராதிமார்க்கம் என்ற பாதை சிறந்த ஒளி மயமாக இருக்கும். பாதையின் தொடக்கத்தில் பேரொளி (அர்ச்சி:). காணும். அது - ஜ்யோதி:. ஸூரியனின் ஒளியால் திகழும் நடுப்பகலில் அவர்களது இந்த பிரயாணம் அமையும். அது - ஸுருசி:. தன் கதிர்களால் அமுதத்தை அள்ளித்தரும் சந்திரனின் நிலவுகாணும் வளர்பிறையில் அது அமையும். (ஹுதபுக்விபு: என்று ஒரு நாமமாகக்கொண்டு அமுதமாக ஆகும் ஹோமப் பொருளை ஏற்று வளர்த்து வருபவர் எனப் பொருள் தருகிறார் ஸ்ரீபட்டர்). சூரியனது சக்தி மிகுந்து காணும் உத்தராயணத்தில் அது அமையும். ரவி: - அது யுகாதியான ஸம்வத்ஸரமாயிருக்கும். (நா. 422) வாயு மூலம் கட்டுப்படுவதால் சர சர எனச் செல்வார் - ஸூர்ய:. அப்போது சந்திரன் மின்னல் வருணன் என்று அந்த வாயு மார்க்கத்தில் கடக்கும் பலவற்றை உணரச் செய்பவர் (ரவிலோசந:). ஸ்ரீபட்டர், அநந்த ஹுதபுக் போக்தா என்று ஒரே நாமமாகக்கொள்கிறார். வேள்விகளில் ஹோமம் செய்யப்பெறுபவற்றை ஏற்கும் இந்திரன், உலகைப் படைத்துக் காப்பாற்றும் பிரஜாபதியான பிரும்மா இவர்களைத் தன் வசத்தில் கொண்டவரானதால் பரமபத மார்க்கத்தில் இந்திரலோகத்தையும், பிரும்மலோகத்தையும் கடக்கச் செய்கிறார் - அநந்த ஹுதபுக் போக்தா. அங்கு மனிதத்தன்மைக்கு அப்பாற்பட்ட ஒருவன் இவனிடமுள்ள ஸம்ஸார வாசனையை அகற்றிப் பிரும்ம சுகத்தை அனுபவிக்கச் செய்கிறான் - ஸுகத: - (நைகத: என்ற பாடம்). எண்ணற்ற மாலை. சந்தனப்பூச்சு, ஆடை முதலியவைகளைக் கொணர்ந்து நூற்றுக்கணக்கான அப்ஸரஸ்*

1. हिरण्यगर्भः समवर्तताग्रे (तै. सं. ४. १. ८) ब्रह्म पुराणमग्रयं। (बृहदा ४.४. १८)

பெண்கள் இவரை அணிவித்து மகிழ்விக்கின்றனர் அப்படிச் சிறப்பாக வரவேற்கப்பட்ட முக்தனின் முன் பகவான் தோன்றுகிறார் - அக்ரஜ: - இப்படி முக்தியடையவனின் சிறப்பாக விஹாயஸகதி: என்பதனைத் தொடங்கி அக்ரஜ: என்பது வரை நாமங்கள் விளக்குகின்றன.

892. அநிர்விண்ண: - ஏக்கமற்றவர்.

வேண்டியது கிடைக்காத போதும், கிடைத்தது போதாத போதும் வரக்கூடிய ஏக்கம் அவருக்கு இல்லை. அவர் எல்லாம் பெற்றவர். ஆசையற்றவர். விரும்பியதை பெறுவதற்குத் திறமையுள்ளவர். அதனால் ஏக்கத்திற்கு வாய்ப்பில்லை. பொருளால் கிட்டுகின்ற சுகம் முன் வாஸனையின் விளைவாக ஏற்றத் தாழ்வுடன் உணரப் பெறுகிறது. சுகம் குறையும்போது ஏக்கமோ, வெறுப்போ வரும். பகவான் ஆநந்த பூர்ணர். வற்றாத, குறையாத பிரும்மானந்த வடிவினர். அதனால் ஆனந்தத்தை அனுபவிக்கத் தடையுமில்லை. (நா. 435) பக்தர்கள் விரும்பியதைத் தருவதிலும் அவர்களது யோக க்ஷேமங்களை அமைத்துத் தருவதிலும் சலிப்படையாதவர். தன்னை அண்டியவர்களை ஸம்ஸாரச் சுழலிலிருந்து காப்பாற்றித் தனது பரம பதத்தில் சேர்த்துக்கொண்டதும் கவலையற்றிருப்பவர். கண்ணனாகப் பல போகப் பொருள்களை அனுபவித்தும் சலிப்படையாதவர். (892)

893. ஸதாமர்ஷீ - ஸாதுக்களைப் பொறுத்துக் கொள்பவர்.

நல்லோர்கள் எப்போதாயினும் பிழை செய்தாலும் அதனைப் பொறுத்துக்கொள்பவர். (ஸத் - ஆ - மர்ஷீ) குற்றம் குறைகளைப் பொருட்படுத்தாதவர். 'ந ஸ்மரத்யபகாராணாம் சதமப்யாத்ம வத்தயா. (ராமாயணம் 2, 1, 11) எப்போதும் பொறுப்பவர். (ஸதாமர்ஷீ). தான் எதிர்பார்க்காதிருந்தாலும் தனது அடியார் செய்கின்ற உபசாரங்களைப் பொறுமையுடன் ஏற்பவர். (893)

894. லோகாதிஷ்டானம் - உலகின் ஆதாரம்.

தனக்கெனத் தனித்து ஆதாரத்தை எதிர்பாராத பரம்பொருள் உலகின் ஆதாரமாகிறது. கிளிஞ்சல் அதற்கு முற்றிலும் மாறுபட்ட வெள்ளியாகப் பிரமையின் காரணமாகத் தோன்றுகிறது. அந்த வெள்ளிக்குக் கிளிஞ்சல்தான் ஆதாரம். அதுபோல் உலகிற்குப் பரம்பொருள் ஆதாரம். உலகைத் தோற்றுவித்து அது நிலை குலையாமல் தாங்குகின்ற ஆதாரமாயிருப்பவர். கூர்மர், வராஹர்,

*ஆதிசேஷன், குலாசலங்கள் வடிவில் தாங்கி நிற்பவர்.*[1] *(நா. 614, 647)* *(894)*

895. அத்ப்புத: - விந்தையானவர்.

*வகையறிய முடியாமல், சொல்லால் விளக்க முடியாமல் இருந்தும் உண்மையாகத் தோன்றுவது விந்தைப் பொருளாகிறது. அவரைப் பற்றி அறியப் பல நூல்கள் இருந்தும் அவரைப்பற்றி அறியப் பலர் முற்படுவதில்லை. அது ஏன்? நூல்கள் பல கற்றும் அவரை அறிய முடியவில்லை. அது ஏன்? ஒரு சிலர் மாத்திரம் அவரைப் புரியும்படி விளக்குகின்றனர். ஒரு சிலரே அப்படி விளக்கியதை உணர்கின்றனர். அது ஏன்? அவரது வடிவமைப்போ, செயலோ, மற்ற சிறப்புகளோ இவை இப்படி இப்படி என வரையறுத்துக் கூற முடியவில்லை. அது ஏன்? பொருந்தாதவை அவரிடம் பொருந்துகின்றன. பொருந்தக் கூடியவை அவரிடம் பொருந்துவது இல்லை. அது ஏன்? இப்படிப் புரியாத பல கேள்விகளுக்கு இடமாயும், விடை தெரிந்தும் வகை தெரியாதிருப்பதாயும் உள்ள பெரும் புதிராக இருப்பவர்.*[2] *அத்ப்புதம் என்று பாடமுண்டு. பொருள் இதே.* *(895)*

**सनात्सनातनतमः कपिलः कपिरप्ययः**[3] **।**
**स्वस्तिदः स्वस्तिकृत्स्वस्ति स्वस्तिभुक्स्वस्तिदक्षिणः ॥ १२७ ॥**

ஸநாத் ஸநாதநதம: கபில: கபிரப்யய:[3]
ஸ்வஸ்தித: ஸ்வஸ்திக்ருத் ஸ்வஸ்தி ஸ்வஸ்திப்புக் ஸ்வஸ்திதக்ஷிண: 127

896. ஸநாத் - பழையவர்.

*அந்நாள் இந்நாள் எனக் குறிப்பிட முடியாத அளவிற்குப் பழையவர். அந்த கால அளவையே பகவானின் விபூதிகளில் ஒன்று. 'கால: கலயதாம் அஹம்' (கீதை 10, 30) அநாதியான கால வடிவில் இருப்பவர்.* "பரஸ்ய ப்ரம்ஹணோ ரூபம் புருஷ: ப்ரதமம் த்விஜ. வ்யக்தாவ்யக்தே ததைவாந்யே ரூபே காலஸ்

---

1. आधारमानन्दमखण्डबोधं (कैवल्य १४)
2. श्रवणायापि बहुभिर्यो न लभ्यः शृण्वन्तोऽपि बहवो यं न विद्युः (कठ १. २.७) सदसस्पतिमद्भुतं (तै. आ. १०. १)
3. कपिरव्ययः *கபிரவ்யய; (பா)*

ததாபரம் (விஷ்ணு புராணம். 1, 2, 15) முக்தர்களால் அனுபவிக்கப் பெறுபவர். (896)

**897. ஸநாதநதம: - பழையவர்களுக்கும் பழையவர்.**

*மிக முதியவர்களான பிரும்மா முதலானவர்க்கும் முதியவர். எக்காலத்திலும் இருப்பவர், மிகப் பழமையிலும் புதுமை துலங்குபவர். (897)*

**898. கபில: - கடல் தீயாக இருப்பவர்.**

*கடல் தன் எல்லைமீறுதபடி அதன் உள்ளிருக்கின்றபடபா எனும் கடல் தீ காப்பாற்றுகின்றது. அதன் நிறம் கபிலம் - கருமை கலந்த பொன் நிறம். நீரால் அணைக்க முடியாததும் நீரில் தோன்றியதும் கபில நிறம் கொண்டதுமான கபிலர் என்ற படபாக்கினியாக இருப்பவர். பெருந் தீயாக ஸகரரின் 60000 பிள்ளைகளை எரித்தவர் கபிலர். (நா. 531) கார்மேகத்தின் இடையே உள்ள மின்னலின் நிறமுடையவர். (898)*

**899. கபி: - நீரைப் பருகுபவர்.**

*கம் - நீர். பூமியிலுள்ள நீர்ப் பகுதியைத் தன் கதிர்கள் மூலம் குடிக்கிற சூர்யனுயிருப்பவர். கபி: - பன்றி. கடல் நீரில் அமிழ்ந்து நிலையற்றிருந்த பூமியைத் தாங்கிக் காப்பாற்றி நிலை நிறுத்திய வராஹராயிருப்பவர். (நா. 101). (899)*

**900. அப்யய: - சென்றடங்குமிடம்.**

*உலகம் பிரளயத்தின்போது பகவானிடம் சென்றுஅடங்குகிறது. அப்படி உலகம் அடங்கப்பெறும் இடமாயிருப்பவர்.*

*ஸ்ரீபட்டர் உரைப்படி கபி: அவ்யய: என்ற இரு சொற்களுடைய ஒரே நாமம். ஆனந்தத்தைப் பருகிக்கொண்டிருப்பவர். மாறுதல் அற்றவர். (900)*

**901. ஸ்வஸ்தித: - மங்களம் வழங்குபவர்.**

*தனது அடியார்களுக்குப் பயன்படுமாறு சிறந்த மங்களத்தைத் தருபவர். ஸ்வஸ்தி - ஸு அஸ்தி - நல்லதை மட்டும் நினைப்பதும் பேசுவதும் செய்வதுமான மங்களம். (901)*

902. ஸ்வஸ்திக்ருத் - மங்களமாக்குபவர்.

*மங்களமல்லாததையும் மங்களமாக்குபவர். தன் குணங்களை அனுபவிக்கச் செய்து மங்களம் தருபவர். (902)*

903. ஸ்வஸ்தி - மங்களமாயிருப்பவர்.

*பரமானந்த வடிவமான மங்களமாயிருப்பவர். (நா. 63) (903)*

904. ஸ்வஸ்திபுக் - மங்களத்தை அனுபவிப்பவர்.

*மங்களத்தைத் தானும் அனுபவிப்பவர். (புங்க்தே) மங்களத்தின் மங்களத்தன்மையைக் காப்பவர். (புநக்தி). (904)*

905. ஸ்வஸ்திதக்ஷிண: - மங்களமாக வளர்பவர்.

*மங்களத்தை வழங்குவதில் திறமை கொண்டவர். பக்தர்களின் மனத்தில் மங்களமாக வளர்ந்து கொண்டிருப்பவர். உயிரினமனைத்திலும் அவரவரது வினைக்கேற்ப ஆனந்த வடிவில் வளர்ந்துகொண்டிருப்பவர், மங்களத்தை விரைவில் நிறவேறச் செய்பவர். இறைவனை நினைத்த அளவிலேயே மனிதன் மங்களத்தின் இருப்பிடமாகிவிடுகிறான்.* "ஸ்ம்ருதே ஸகல கல்யாணபாஜநம் யத்ர ஜாயதே. புருஷ:, தமஹம் நித்யம் வ்ரஜாமி சரணம் ஹரிம்". *தனக்குச் செய்த பணிவிடைக்கேற்ப மங்களத்தையே ஊதியமாக தக்ஷிணையாக வழங்குபவர். (905)*

अरौद्रः कुण्डली चक्री विक्रम्यूर्जितशासनः ।
शब्दातिगः शब्दसहः शिशिरः शर्वरीकरः ॥ १२८ ॥

அரௌத்ர: குண்டலீ சக்ரீ விக்ரம்யூர்ஜித ஶாஸந:.
ஶப்தாதிகஶ் ஶப்தஸஹஶ் ஶிஶிரஶ் ஶர்வரீகர:. 128

906. அரௌத்ர: - கொடுமையற்றவர்.

*விருப்பிலும், செயலிலும் கொடுமையற்றவர். கொடுமையை வெளிப்படுத்துகின்ற கோபமற்றவர். மங்களத்தின் நேர் எதிரி கொடுமை. ஆசை கொடுமையானது. ஆசையை நிறைவேற்றும் முயற்சியும் ஆசை தடைபடும்போது ஏற்படுகின்ற கோபமும் கொடுமையானது, நிறைந்த குடம் போன்று நிறைவுடன், பற்றற்றவரிடம் இந்தக் கொடும் நிலைகள் ஏற்பட வாய்ப்பில்லை. குணச்சிறப்பால் குளிரக் காட்சி தருபவரானதால்*

கொடுமையற்றவர். பயம் தரும் நிலைகளிலும் கருணையால், உள்ளத்தால் குளிரச் செய்பவர். *(906)*

907. **குண்டலீ - பாம்பாயிருப்பவர்.**

குண்டலம்போல் சுற்றி வளைத்துப் படுத்திருக்கின்ற ஆதிசேஷனும் சிறந்த பாம்புகளும் ஆனவர். குண்டலம் போன்று சுற்றி வரும் குண்டலினீ சக்தியாயிருப்பவர். சூரியனைப்போல் பளபளப்புடன் துலங்குகின்ற அழகிய குண்டலங்கள் கொண்டவர். ஸாங்க்யமும் (முதிர்ந்த நூலறிவும்) யோகமும் (அறிவை முன்னிட்ட சிறந்த செயல் முறையும்) பகவானது குண்டலங்கள். **"பிபர்தி ஸாங்க்யம் யோகம் ச தேவோ மகரகுண்டலே"** *(பாகவதம் 12, 11, 12)* *(907)*

908. **சக்ரீ - சக்ரமுடையவர்.**

மனமெனும் தத்துவத்தையே ஸுதர்சனம் என்ற சக்கிரமாகக் கொண்டவர். **"சலஸ்வரூப மத்யந்தம் ஜவேநாந்தரிதா நலம். சக்ரஸ்வரூபம் ச மநோ தத்தே விஷ்ணு: கரே ஸ்த்திதம்".** *(விஷ்ணு புராணம். 1, 22, 71)* துஷ்டர்களை அழிக்கப் பயன்படுகின்ற சக்ரம் கொண்டவர். *(நா. 417, 545, 995)* *(908)*

909. **விக்ரமீ - சிறந்த நடையுள்ளவர்.**

பெருமளவைத் தாண்டுகின்ற பெருநடை கொண்டவர். *(நா. 75)* சூரத்தன்மை மிக்கவர். *(909)*

910. **ஊர்ஜிதஶாஸந: - நிலைத்த ஆணையுள்ளவர்.**

பலம் மிக்கவராலும் மீற முடியாதபடி நிலைத்த பேராணை செலுத்துபவர். *(910)*

911. **ஶப்தாதிக: - சொல்லிற்கப்பாற்பட்டவர்.**

வகையறிந்தால் சொல்லால் விளக்க முடியும். சப்தசக்திக்கும் அப்பாற்பட்ட சக்தி கொண்ட பகவானின் சிறப்புகள் சொல்லிலடங்காதவை.[1] *(911)*

1. यतो वाचो निवर्तन्ते (तैत्तिरीय २. ४)

912. ஶப்தஸஹ: - சொல்லின் பொருள்.

*உலகில் உள்ள நூல்களனைத்தும் அவரையே பொருளாகக்கொண்டு அவரை விளக்கவே பெருவிரிவு கொண்டுள்ளன. அவரே நூல்களின் முடிந்த முடிவு[1]. சொல் விளக்கமற்ற கஜேந்திரனின் பிளிறலுக்கும் செவி சாய்த்து அதன் பொருள் உணர்ந்து உதவுகின்ற பாங்கில் பிளிறலையும் சொல்லாக்கிப் பொருள் கொண்டவர். (912)*

913. ஶிஶிர: - குளிரச் செய்பவர்.

*கோடை வெயிலில் காய்ந்தவனுக்குக் குளிர் தரும் மர நிழல் போல், ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம் என்ற தாபங்களால் வாடியவருக்கும் குளிர்ச்சி தந்து இளைப்பாறுமிடமாய் இருப்பவர். துன்புற்ற அடியார்களின் துன்பம் நீக்கி மனம் குளிரச்செய்பவர். (913)*

914. ஶர்வரீகர: - இரவை உண்டாக்குபவர்.

*உயிரினம் ஓய்வு பெற இரவைத் தந்து களைப்பாற்றுபவர். ரஜோ குணம் மிக்கதான பகலில் உயிரினம் பெற்ற சுறு சுறுப்பையும், செயல் நாட்டத்தையும் தமோ குணம் மிக்கதான இரவு மாற்றிச் செயலிழக்கச் செய்து அயர்வு தந்து 'நான்', 'எனது' என்ற நினைவை அகற்றுவதன் மூலம் ஓய்வெடுக்கச் செய்கிறது. இது இயற்கை தரும் பேருதவி. அப்படி இரவாகி நின்று ஓய்வு தருபவர். இரவில் ஏற்படும் தூக்கத்தில் உலகம் பற்றிய நினைவே அகன்றுவிடுகின்றது. இந்த நினைவின்மையே சுகமாக உணரப் பெறுகின்றது. விழித்துக்கொண்டிருக்கும்போதே இந்த உலக நினைவற்ற ஞானி இரவால் ஏற்படும் சுகத்தை எப்போதுமே அனுபவிக்கிறார். வெளிப் பொருள் பற்றிய அறிவகன்ற தூக்க நிலையை சுகமாக மற்றவர் அனுபவிப்பதுபோல், வெளிப்பொருள் பற்றிய அறிவகன்று பேரறிவில் மூழ்கி ஆத்மானுபவம் பெறுகின்ற நிலையில் ஞானி சுகம் பெறுகிறான்.* **'யா நிசா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ. யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிசா பச்யதோ முநே:',** *(கீதை 2, 69) அஞ்ஞானிக்கும் ஞானிக்கும் ஓய்வளிக்கும் இரவை ஏற்படுத்துபவர். பிறரை மாய்க்கவல்ல ஆயுதங்களைக் கையில் ஏந்தியவர். (914)*

1. सर्वे वेदा यत्पदमामनन्ति। (कठ १. २. १५)

अक्रूरः पेशलो दक्षो दक्षिणः क्षमिणां वरः ।
विद्वत्तमो वीतभयः पुण्यश्रवणकीर्तनः ॥ १२९ ॥

அக்ரூர: பேஶலோ தக்ஷோ தக்ஷிண: க்ஷமிணாம் வர:
வித்வத்தமோ வீதபய: புண்யஶ்ரவணகீர்த்தந: 129

915. அக்ரூர: - குரூரனல்லாதவர்.

*செயல் வடிவில் வெளி வராமல் உள்ளடங்கிய கோபத்தால் ஏற்படுகின்ற மனக்கொதிப்பு குரூரமாக வேலை செய்கிறது. ஆசை தடைபட்டதும் தடைக்குக் காரணமானவற்றைத் தகர்க்க முயன்று அதில் தோல்வியுற்றதால் கோபம் வருகின்றது. ஆழ்ந்த பாதிப்பு ஏற்பட்டதால் மனம் மயங்குகின்றது. வெறி கலந்த உள்ளமெரிகின்ற நிலை. அது க்ரூரம். ஆசை தடைபடுவதோ, கோபத்தைக் காட்ட முடியாமல் போவதோ இல்லாததால் இந்த குரூர எண்ணம் பகவானுக்கு ஏற்படுவதில்லை. நரஸிம்மராக ஹிரண்ய கசிபுவை அழிக்க முறபட்டபோது கொண்ட பயங்கரத் தோற்றமும் செயலும் முன் விளக்கிய மனப்பாதிப்பால் ஏற்பட்டதல்ல, செயற்கையாக ஏற்கப்பட்டது. பிரஹ்லாதனைக் கண்ட நொடியில் அது கனிந்த அன்பு வடிவாகிவிட்டது. (915)*

916. பேஶல: - மென்மையுள்ளவர்.

*பூ போன்ற மென்மையுள்ள இதயம் படைத்தவர், கருணையும் பரிவும் மிக்கவர். செயலும், மனமும், சொல்லும் கனிந்து காண்பவர். கஜேந்திர ரக்ஷணம் முதலிய லீலைகளில் ஆடை அணிகள் கலைந்த நிலையிலும் அழகிய தோற்றமுள்ளவர். (916)*

917. தக்ஷ: - திறமையுடன் விரைவாகச் செயல்படுபவர்.

*முதிர்ச்சியும் செயல் நுட்பமும், திறமையும் கொண்டு விரைவுடன் செயலாற்றுபவர். கோரிய நொடியில் எதிரில் நின்று பலன் தருபவர். (நா. 423) (917)*

918. தக்ஷிண: - இனிது பழகுபவர்.

*மாறுபட்ட கருத்துள்ள பலருடன் பழகும்போது மாறுபடுகிற கருத்துகளால் நிலைகுலையாமல் பிறர் மனம் நோகாதபடி சாமர்த்தியத்துடன் கருத்தொற்றுமை ஏற்படச் செய்து நிலைமையைச் சாதகமாக்கிக்கொள்பவர். - பிறருடன் மனமொத்து*

*வாழ்பவர் - தக்ஷிண:. கஜேந்திரனுக்கு முதலேயிடமிருந்து விடுதலேயளித்தும், முதலேக்குத் தன் சக்ரத்தால் உயிர் நீக்கி மோக்ஷமளித்தும் நிலேமையைச் சமாளித்தவர். இருவரது நன்மையையும் ஒரே செயலால் கூட்டுவித்தவர். அனுசரணேயும் பரிவும் அக் கரையும் கொண்டவர். (918)*

919. க்ஷமிணும் வர: - பொறுமையாளர்களில் சிறந்தவர்.

*க்ஷமா - பொறுமை, திறமை, பாரம் தாங்குகின்ற சக்தி. பொறுமையில் பூமிக்கொப்பானவர் 'க்ஷமயா ப்ருதிவீஸம:. (ராமாயணம் 1, 1, 18) பொறுமையுள்ள பூமி முதலானேரை விடச் சிறந்தவர். திறமைமிக்கவர்களுள் சிறந்தவர். பூமி முதலியவற்றைத் தாங்குகின்ற குல பர்வதங்கள், திக்கஜங்கள், ஆதிசேஷன் முதலானேரைவிடச் சிறந்தவர். (நா. 442) (919)*

920. வித்வத் தம: - அறிவாளர்களில் சிறந்தவர்.

*அறிவாளர்கள் அனேவரும் பகவானது பேரறிவின் ஒரு பகுதியைப் பெற்றதால் சிறப்புறுகிறர்கள். ஆத்ம ஞானியே சிறந்த அறிவாளர். பேரறிவாளரான பகவான் அறிவாளர்களுக்குள் சிறந்தவர். பக்தனது குறை தீர வழி வகை அறிந்தவர். சிறந்த அறிவாளியானதால் பொறுத்தவராகிறர். (920)*

921. வீதபய: - பயமகன்றவர்.

*பிறப்பிறப்பாகிய சுழலில் சிக்குவதில் உண்டாகின்ற பயமே மிகப் பெரிய பயம். ஆதியுமந்தமுமற்ற பகவான் பயமற்றவர். பக்தர்களுடைய பயத்தை அகற்றுபவர். பிறரது பயத்தை அகற்று பவரிடம் பகவானின் பெருமை துலங்குகிறது.*

*அரௌத்ர: எனத் தொடங்கி இந்த நாமம் வரை பகவானது செயல் திறமை விளக்கப் பெறுவதைக் காணலாம். எண்ணத்திலோ, எண்ணத்தை வெளிப்படுத்துவதிலோ, செயலிலோ கொடுமையின்றி (அரௌத்ர:) மென்மையுடன் செயல்படுகிறர். (பேசல:) தேவைப்பட்டபோது, கோபத்தை வரவழைத்துக்கொண்ட நிலேயிலும் மனப் பாதிப்பின்றி செயலில் தேவையான அளவில் கடுமை காட்டி உடன் பரிவு காட்டுகிறர். (அக்ரூர:) செயலே நோக்கி அடிவைக்கும்போதே பெரு நடையுடன் கம்பீரமாகச் செயல்படுவார். செயலில் சிறுமை இருக்காது. (விக்ரமீ) இட்ட ஆணேயைச் சஞ்சலமின்றி*

செயலாற்றுவார். (ஊர்ஜித சாஸன:) குளிர்ந்த தோற்றமும் அமைதி தரும் அருகாமையும் கொண்டவர். (சிசிர: சர்வரீகர:) செயல் நேர்த்தியும் (தக்ஷ:) விட்டுக் கொடுப்பதும் அனுசரணையும் பரிவும் கருத்தொருமிக்கச் செய்யும் திறனும் கொண்டவர். (தக்ஷிண:) செயல்முடியும் வரை பொறுத்துச் செயலின் முழுப் பொறுப்பையும் ஏற்பவர். (க்ஷமிணும் வர:) செயல் திறமைக்காதாரமான குற்றமறிந்து களையவும் சிறப்பறிந்து சேர்க்கவும் அறிவாற்றல் கொண்டவர். (வித்வத்தம:) உறுதியுடன் பின் விளைவு பற்றிய பயமின்றித் துணிந்து செயலாற்றுபவர். (வீதபய:) ஒரு ஆணையாளரைப் பற்றிய அழகிய திறனாய்வு. (921)

922. புண்ய ப்ரவண கீர்த்தந: - தன் புகழ் கேட்பதும் பாடுவதும் புண்யம் தருவதாக அமைத்துக்கொண்டவர்.

பரம்பொருளைப் பற்றிய நிர்குண ஸ்வரூபத்தை உபநிஷத்து முதலானவைகளிலிருந்து குரு முகமாகக் கேட்டறிவது சிரவணம். அப்படிக் கேட்டறிந்ததை ஓங்காரம் முதலிய பிரதீகங்கள் மூலம் திரும்பத் திரும்ப ஜபம் செய்வது கீர்த்தநம். இவ்விரண்டும் பிறப்பிறப்பென்ற கெடுதியைப் போக்கும் புண்யச் செயல்கள். பரம் பொருள் உலகைக் காக்கத் தாம் ஏற்றுக்கொண்ட பல தோற்றங்களை மனத்தில் பதிக்கின்ற திவ்யக் கதைகளையோ திவ்ய நாமங்களையோ கேட்பதும் அவற்றைப் பாடுவதும் அத்தகைய புண்யச் செயல்களே. மனத்தில் கெட்ட எண்ணங்களும் கெட்ட செயல்களுக்கான தூண்டுதல்களும் ஏற்படுவதைத் தடுத்து நல்ல எண்ணங்களும் நல்ல செயல்களுக்கான தூண்டுதல்களும் உண்டாக்குபவை புண்யம் தரும் செயல்கள். பகவானது நாமங்கள் காது வழியே மனத்தினுட்புகுந்து துர்வாஸனையை அகற்றி நல்வாஸனையை ஏற்படுத்துவதால் புண்ய நாமங்களாகின்றன. (நா. 687, 688, 925) 'ய இதம் ச்ருணுயாந் நித்யம் யச்சாபி பரிகீர்த்தயேத். நாசுபம் ப்ராப்நுயாத் கிஞ்சித் ஸோமுத்ரேஹச மாநவ:. (ச்லோகம், 141) (922)

उत्तारणो दुष्कृतिहा पुण्यो दुःस्वप्ननाशनः ।
वीरहा रक्षणः सन्तो जीवनः पर्यवस्थितः ॥ १३० ॥

உத்தாரணோ துஷ்க்ருதிஹா புண்யோ துஸ்ஸ்வப்நநாசந:.
வீரஹா ரக்ஷணஸ் ஸந்தோ ஜீவந: பர்யவஸ்த்தித:. 130

923. உத்தாரண: - கரை சேர்ப்பவர்.

கடல் போன்று ஆழ்ந்ததும் பரந்ததும் கரை காணாததுமான ஸம்ஸாரத்திலிருந்தும் பரிவால் மீட்டுக் கரை சேர்ப்பவர். பிறப்பிறப்பறச் செய்பவர். ஆத்மவலிவாக நின்று தானே கரையேறச்செய்பவர். *(923)*

924. துஷ்க்ருதிஹா - கெட்ட வினையை அகற்றுபவர்.

ஸம்ஸாரக் கடலிலிருந்து மனிதனைத் தானே கரை சேர முடியாதபடி தடுப்பவை முன் வினையாகத் தொடர்கின்ற பாபச் செயல்கள். பகவானது திருநாமங்களும் பகவானும் முன்வினைகளைச் சுட்டெரித்துத் தடையைப் போக்கிவிடுகின்றனர். அவரது நினைவே பாபத்தை அகற்றுகிறது. கெட்டவினை புரிபவர்களை அழிப்பவர். (நா. 992) அவர்களைத்திருத்துபவரும் கூட *(924)*

925. புண்ய: - புண்யம் தருபவர்.

பகவானை நினைப்பதும் அவனது திருநாமங்களைச் சொல்வதும் மற்ற பக்திப்படிகளின் மூலம் பகவானை அணுகுவதும் தன் செயல் முறையாகக்கொண்ட பக்தர்களின் செயலனைத்தையும் புண்ணியச் செயலாக்குபவர். (நா. 687) (ப. 19) *(925)*

926. துஸ்ஸ்வப்நநாசந: - கெட்ட கனவுகளைப் போக்குபவர்.

பகவானை நினைப்பவர்களுக்கும் அவர் பெயர் கூறுபவர்களுக்கும் கெட்ட கனவுகள் ஏற்படுவதில்லை. பின்னர்வரும் கெடுதலைக் கெட்ட கனவு உணர்த்துகிறது. பக்தர்களுக்குக் கெடுதலே ஏற்படாதாகையால் அவற்றை முன் உணர்த்துகிற கெட்டகனவு ஏற்படுவதில்லை.

பகவான் கரை சேர்ப்பவர். அவரது கருணை குற்றம் காணாமல் கரை சேர்க்கிறது. பாபவினை அதற்குத் தடையாக நிற்கலாம். அது பலனளிக்கும் தருவாயில் கெட்டவினை புரிந்தவனுக்குப் பகவான் பின்னர் விளையவிருப்பதைக் கெட்ட கனவாகக் காட்டுவது உண்டு. அதனால் விளையவிருப்பதை முன் உணர்ந்து பரிஹாரம் காண முடியும். என்றோ வசமின்றியோ சுயநினைவுடனோ அவரது திருநாமம் கூற, அது பழக்கமாக, அது பண்ணிய வினையாகி, மனத்தில் நல்லெண்ணங்களை நிரப்பிப் பாப வினைகளை

வலிவிழக்கச் செய்து, பகவானது கருணையை நம்பால் திருப்பி நம்மைக் கரையேறச் செய்கிறது. பகவானது நாம மகிமையால் வலிவிழந்த கெட்ட வினைகள் கெட்ட கனவுகளை ஏற்படுத்துவதில்லை. கெட்ட வினைகள் பெரும்பாலும் மனத்தையே துன்புறுத்துகின்றன. எண்ணத்தளவில் புரிந்த சில பாபங்கள் கெட்ட கனவுகளாகத் தோன்றி நடுங்க வைக்கின்றன. அத்துடன் அவை வலிவிழந்துவிடும். கெட்ட வினைகள் தீர்வதால் கெட்ட கனவுகள் தோன்றுவதில்லை. இந்தத் தொடர்பை உத்தாரண: என்று தொடங்கிய நான்கு நாமங்கள் விளக்கும். *(926)*

927. வீரஹா - கெட்ட போக்குகளை அழிப்பவர்.

*முன் வினைகள் பல. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வழியே நம்மை இழுத்துச் செல்கின்றன. அவை அனைத்தும் பிறப்பிறப்பெனும் சுழலில் சிக்க வைப்பவை. பகவான் நம் அறிவைத் தூண்டி, செயல் முறை காட்டி, நல்வழியில் அழைத்துச் சென்று ஸம்ஸாரச் சுழலில் சிக்க வைக்கின்ற வீரமெனும் கெட்டபோக்குகளிலிருந்தும் நம்மை மீட்கிறார். வீரனை அழிப்பவர். (நா. 166, 741) (927)*

928. ரக்ஷண: - காப்பாற்றுபவர்.

*ஸத்வகுணம் மிக்க மஹாவிஷ்ணு வடிவில் உலகின் காப்புப் பணியை ஏற்றவர். ஆபத்திலிருந்து காப்பாற்றுபவர். (928)*

929. ஸந்த: - நல்லோர்கள் வடிவானவர்.

*பகவான் இருப்பதையும் அவருக்கும் தனக்கும் உள்ள தொடர்பையும் உணர்ந்து அதற்கேற்ற நல்வழிகளில் நடப்பவர்கள் ஸத்வ குணம் நிரம்பியவர்கள் - ஸத்தான நல்லவர்கள். கெட்ட போக்கிலிருந்து மீட்கவும் ஆபத்தில் சிக்காமல் காக்கவும் குரு முதலிய நல்லவர்கள் வடிவில் தானே வந்து ஆட்கொள்பவர். இது பன்மையில் அமைந்த சொல். ஸத்ப்யோ நம:.*

*தன்னை அண்டியவர்களைப் பல்கிப் பெருகச் செய்பவர், அவர்களது உடைமையானவர், அவர்களது விருப்பம் கூடச் செய்பவர். ஒருமைச்சொல், ஸந்தாய நம:. (929)*

930. ஜீவந: - வாழ வைப்பவர்.

*உயிராகி நின்று உயிரினமனைத்தையும் வாழச் செய்பவர்.[1] (நா. 66, 320, 407) ஸத்ஸங்கத்தை அளித்து நல்லவராக்கி வாழ வைப்பவர். அவரது கைகளால் ஏற்படும் அழிவும் முக்தி ஈறான பெருவாழ்வை அமைத்துத் தரும். (930)*

931. பர்யவஸ்த்தித: - சூழ்ந்து நிற்பவர்.

*உலகமனைத்திலும் உள்ளும் புறமும் பரவி நிற்பவர். துணைகோரியவனைச் சூழ்ந்து நிற்பவர். ஸத்ஸங்கத்தால் ஏற்பட்ட பகவதனுபவம் கெடாதபடி முன்னும் பின்னும் பக்கலிலும், பகலிலும், இரவிலும் கூட நிற்கின்ற அனுபவத்தைத் தருகிறவர். நல்லவர்கள் வடிவில் நல்வழிப்படுத்தும் பொறுப்புடன் சூழ நிற்பவர்.[2] (931)*

अनन्तरूपोऽनन्तश्रीर्जितमन्युर्भयापहः ।
चतुरश्रो गभीरात्मा विदिशो व्यादिशो दिशः ।। १३१ ।।

அநந்தரூபோऽநந்தஸ்ரீர் ஜிதமந்யுர் பயாபஹ:
சதுரஶ்ரோ கபீராத்மா விதிஶோ வ்யாதிஶோ திஶ: 131

932. அநந்தரூப: - எல்லையற்ற வடிவங்கள் கொண்டவர்.

*அவரது வடிவம் அடி முடி காண முடியாதது. அந்தமற்றது. அவர் எடுத்த தோற்றங்கள் எண்ணிமாளாதவை[3] (நா. 518) (932)*

933. அநந்தஸ்ரீ: - அளவற்ற சக்தி படைத்தவர்.

*ஸ்ரீ: - சக்தி. அளவற்ற மேலான சக்தி படைத்தவர். அவரது மாயா சக்தி அவரது ஸங்கல்பத்திற்கு ஆட்பட்டு ஒவ்வொரு உயிரிலும் கலந்து பலவிதத் திறமைகளை வெளிப்படுத்துகிறது.[4] பக்தர்களுக்கு வாரிவழங்குவதற்கென கணக்கற்ற செல்வங்கள் கொண்டவர். (933)*

---

1. कस्मिन्नहमुत्क्रान्ते उत्क्रान्तो भविष्यामि, कस्मिन्व प्रतिष्ठिते प्रतिष्ठास्यामीति स प्राणमसृजत । (प्रश्न ६. ३)
2. अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः । (तै. आ. १०. ११)
3. अचिन्त्यमव्यक्तमनन्तरूपं (केवल्य ३)
4. परास्य शक्तिर्विविधैव श्रूयते । (श्वेताश्व ६. ८)

934. ஜிதமந்யு: - உள்ளக்குமுறலை அடக்கியவர்.

*ஆசை தடைபட்டால் கோபம் வருகிறது. கோபம் வளர்ந்து புருவ நெறிப்பு, கடும் சொல், உடல் படபடப்பு முதலிய வெளிக்குறிகளைக் காட்டக் குரோதமாகிறது. அப்படிக் கோபத்தை வெளிப்படுத்த முடியாத போது மனத்தினுள் குமுறிக் கனன்று கோபத்திற்குக் காரணமானவனையும், கோபப்படுபவனையும் ஒருங்கே தாக்கிக் கொண்டிருக்கின்ற மன்யுவாகிறது. பகவானுக்குக் கோபம் வருவதில்லை. கோபத்தைச் செயற்கையாக ஏற்படுத்திக்கொண்டாலும் எளிதில் அடக்கிகொள்வார். (நா. 462) கோபத்தை வெளிப்படையாக அடக்கி மனத்தளவில் குமுறுவதற்குத் தேவையான எதிரி என்ற வேரூன்றிய மனப்பான்மையை அவர் எவரிடமும் கொள்வது இல்லை. அதனால் மன்யு என்ற நிலையை அடையாமலேயே கோபம் அடங்கிவிடுகிறது. (934)*

935. பயாபஹ: - பயத்தைப் போக்குபவர்.

*உண்மையான துன்பம் வருமுன்னரே துன்பம் வருமோ என்ற திகில், பயம் முதலிய உணர்ச்சிகள் உண்மையான துன்பத்தைவிட அதிகத் துன்பம் தருவதுடன் நீடித்தும் இருக்கக்கூடும். பகவானது துணையை நம்பியவர்கள் பயப்படுவது இல்லை. பயத்தைப் போக்கித் துன்பத்தைத் தாங்கும் துணிவைத்தருபவர். (நா.834) (935)*

936. சதுரஶ்ர: - வினைக்கேற்ற பலன் தருபவர்.

*காரியத்தைக் கன கச்சிதமாக - ஒழுங்கும் வரிசையும் மீறாதபடி செய்பவர் சதுரச்ர:. சதுரமாக - நான்கு கோணங்களும் நேர்கோட்டில் ஒரே அளவில் அமைந்தது சதுரச்ரம். வினைக்கேற்ற பலனைத் தருவதில் நேர்மையுள்ளவர். தன்னை அண்டியவருக்காகச் சுறுசுறுப்புடனும் திறமையுடனும் செயலாற்றுபவர். (936)*

937. கபீராத்மா - ஆழ்ந்தமனம் உள்ளவர்.

*எளிதில் கலங்காமையும் எளிதில் கருத்தை வெளியிடாமையும் தீர யோசிப்பதும் இயல்பாக அமைந்தவர். ஆழங்காணமுடியாத உள்ளக் கருத்தைக் கொண்டவர். (நா. 543) (937)*

938. விதிச: - கோரியதைத் தருபவர்.

*அவரவரது தகுதிக்கேற்பக் கோரியவற்றை தருபவர். துதிக்கும் அப்பாற்பட்ட சிறப்புள்ளவர்.* **(938)**

939. வ்யாதிச: - பலவாறு ஆணையிடுபவர்.

*இந்திரன் முதலானோருக்கு அவரவரது நிலைப்படி பலவிதமாக ஆணையிடுபவர். அவரவர் விரும்புகின்றபடி பலன்களை அளிப்பவர்.* **(939)**

940. திச: - நல்லது - கெட்டதை அறிவிப்பவர்.

*வேதம் நல்லதையும் கெட்டதையும் அறிவிக்கிறது. நல்லதை ஏற்கவும் கெட்டதைத் தவிர்க்கவும் வேதம் முதலியவற்றால் வழிகாட்டுபவர்.* **(940)**

**अनादिर्भूर्भुवो लक्ष्मीः सुवीरो रुचिराङ्गदः ।**
**जननो जनजन्मादिर्भीमो भीमपराक्रमः ॥ १३२ ॥**

**அநாதிர் பூர்ப்புவோ லக்ஷ்மீஸ் ஸுவீரோ ருசிராங்கத:**
**ஜநநோ ஜநஜந்மாதிர் பீமோ பீமபராக்ரம:. 132**

941. அநாதி: - ஆதியற்றவர்.

*ஆதி: - காரணம், தொடக்கம். பொதுவாக ஒன்று தோன்ற அதற்கு முன்னிருந்த மிக நெருங்கியது ஒன்று காரணமாவதைக் காண்கிறோம். பகவானுக்கு முற்பட்டு ஒருவரும் இல்லை. அவரே முதல்வர். அவரை யாரும் உற்பத்தி செய்யவில்லை. தானே தானாக இருப்பவர். அவரே எல்லாவற்றிற்கும் காரணம். அவரிடமிருந்து உலகம் தொடங்கியது. அதனால் அநாதி. செருக்குற்றவர்களால் பகவான் என ஏற்கப்பெறாதவர். (ந ஆதீயதே).* **(941)**

942. புவோ பூ: - பூமிக்கு ஆதாரம்.

*எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ள பூமிக்கு அவரே ஆதாரம். பூமியின் தனி இயல்பான பொறுமையாயிருப்பவர். பகவானுக்கும் தனக்கும் உள்ள தொடர்பின் நிலையறிந்தவனே இருக்கத் தக்கவன், இருப்பவன் - பூ:. மற்றவன் இருந்தும் இல்லாதவன். அப்படி இருப்பவனுக்குப புகலிடமாயிருப்பவர். புவோ புவே நம:* **(942)**

943. லக்ஷ்மீ: - லக்ஷ்மியாயிருப்பவர்.

பெண்பால் சொல் இது. லக்ஷ்மீ: - லக்ஷ்மீதேவி, அழகு, சிறப்பு, ஒளி, செல்வம், நிறைவின் அடையாளம். லக்ஷ்மீதேவி பகவானை விட்டு எப்போதும் அகலாதவள், திருமார்பில் குடிகொண்டவள். ராமனாகவும், கண்ணனாகவும் தோன்றியபோது சீதை ருக்மிணி எனக் கூட வந்தவள். பகவானின் சக்தி, கருணை, மாயை முதலியவற்றின் மூலமானவள். அவளும் பகவானே. லக்ஷ்ம்யை நம:.

புவ: என்ற சொல்லை இத்துடனும் இணைத்து புவ: லக்ஷ்மீ: என்று கொள்வது உண்டு. பூமியின் அழகும் செல்வமும் பெருமையும் அவரே. புவோ லக்ஷ்ம்யை நம:. பூ: - பூலோகம், புவ: - புவர்லோகம் - பூமிக்கும் ஸ்வர்கத்திற்கும் இடையே உள்ள வானுலகம். லக்ஷ்மீ: - ஆத்மவித்யை. இம்மூன்றாயும் இருப்பவர். பூர்ப்புவோ லக்ஷ்மீ: என்று ஒரேநாமம். பூமியையும் புவர்லோகத்தையும் சந்திரன் சூர்யன் முதலிய ஒளி மண்டலங்கள் மூலம் விளக்குபவர். பூமி, புவர்லோகம் இவற்றின் சோபையாயிருப்பவர். பூர்ப்புவோ லக்ஷ்ம்யை நம:. (943)

944. ஸுவீர: - அழகிய பல வழிகளால் அடையப் பெறுபவர்.

ஈர: - முயற்சி, செயல்முறை, அணுகுமுறை, அடையுமிடம், பல வழிகளில் பல முயற்சிகளால் பல செயல் முறைகளால் அடையப்பெறுபவர். (நா. 401, 643, 658) பலதரப்பட்ட வாஸஸ்தானம் உள்ளவர். யோகிகளின் இதயம், சூர்யமண்டலம், பாற்கடல் முதலியவற்றைத் தன்னிடமாகக் கொண்டவர். எளிய பக்தர்களைப் பாதுகாக்கும் நல்ல வீரர். எப்படிப்பட்ட நிலையையும் தனக்குச் சாதகமாக்கிக் கொள்கின்ற நல்ல வீரர். (944)

945. ருசிராங்கத: - அழகிய தோள்வளையுள்ளவர்.

தோள்களைப் பாதுகாப்பதும் தோள்களுக்கு அணியாக உள்ளதுமான அழகிய தோள்வளையைத் தரித்தவர். அழகிய வடிவமைப்பைத் தருபவர். கம்ஸனின் அரண்மனையிலிருந்த கூனிக்குக் கூனலை நிமிர்த்தி அழகிய வடிவமைப்பைத் தந்தவர். (நா. 541, 741) (945)

946. ஜநந: - பிறக்கச் செய்பவர்.

*மக்களைப் பெறுபவர். தாயுமானவர். மக்களை வினைக்கேற்பப் பிறக்கச் செய்பவர். பகவதனுபவம் பெறத்தக்க பிறவியைத் தருபவர். (946)*

947. ஜநஜந்மாதி: - மக்கள் பிறப்பின் காரணம்.

*வினைப்பயனை அனுபவிக்க மக்கள் பலவகைப்பட்ட பிறவியைப் பெறக் காரணமாகிருர். (ப. 6)* நல்லோர்களாக, பக்தர்களாகப் பிறக்கக் காரணமான புண்யமாயிருப்பவர். தாயின் வயிற்றில் சுக்கிலமும் சோணிதமும் கலக்கும்போது ஜீவனுக இவர் முதலில் உட்புகுந்ததும் சுக்கிலமும் சோணிதமும் இணைந்து கருவாகிப் பிறப்பு ஏற்பட்டது. வினையால் பிறக்க நேர்ந்ததும் தாயின் கருவறையில் தனக்கு வேண்டிய சரீரத்தைத் தானே எடுக்கும் ஜீவனுகியவர். *(947)*

948. பீம: - பயந்தரும் தோற்றமுள்ளவர்.

*தன் ஆணையை மீறியவரை தன் தோற்றத்தால் பயமுறுத்துபவர்.*[1] *பயப்படச் செய்வது ஆணைக்குட்படுத்தவே. (948)*

949. பீம பராக்ரம: - பயம் தரும் வீரமுள்ளவர்.

*தர்மத்தை நிலைகுலைத்த அசுரர்களை நடுங்கவைக்கின்ற போர்த்திறமை உள்ளவர். பயங்காட்டித் தன் உருவை மனத்தில் பதித்துத் தன்னை அடையச் செய்யவும் பயங்கரமான வீரத்தைக் காட்டுகிருர்* 'பயாத் கம்ஸ:' *(பாகவதம் 7, 1, 130) (949)*

आधारनिलयोऽधाता पुष्पहासः प्रजागरः ।
ऊर्ध्वगः सत्पथाचारः प्राणदः प्रणवः पणः ॥ १३३ ॥

**ஆதாரநிலயோऽதாதா புஷ்பஹாஸ: ப்ரஜாகர:.**
**ஊர்த்த்வகஸ் ஸத்பதாசார: ப்ராணத: ப்ரணவ: பண:. 133**

950. ஆதார நிலய: - தாங்குபவைகளுள் ஒளிந்திருப்பவர்.

**தனி உடலுக்கும் உலகிற்கும் ஆதாரமானவை ஐந்து பூதங்கள், ஆகாசம், வாயு, நெருப்பு, ஜலம், பூமி என. ஆகாசம் இடமளித்துத்**

1. महद्भयं वज्रमुद्यतम् (कठ २. ३. २)

தாங்குகின்றது. வெற்றிடமில்லையேல் சலனமில்லை. சலனமில்லையேல் உயிர்ப்பும் வாழ்வுமில்லை. அந்தச் சலனத்தைத் தருகின்ற வாயு அதற்கு அடுத்த ஆதாரம். ஒரு பொருள் மற்றொரு பொருளாக மாறுவதற்கான சூட்டைத் தருகின்ற அக்னி அதற்கு அடுத்த ஆதாரம். உண்ணும் உணவு அந்த உணவாகவே உடலில் அமையாமல் உருத்தெரியாதபடி தசை இரத்தம் என மாறுகிறது. இது அக்னி செய்யும் பணி. அப்படி மாற்றியதைக் கரைத்துப் பரப்பி இடத்தை நிரப்புகின்ற ஜலம் ஒரு ஆதாரம். கனபரிமாணம் தந்து பொருளாகக் காட்சி தரச் செய்கின்ற பூமி அதற்கு அடுத்த ஆதாரம். ஒவ்வொன்றும் தனிச் சக்தி கொண்டவையாக ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருந்தபோது அவற்றினுள் நுழைந்து இணைத்து உடலாகவும் உலகமாகவும் காட்சி தரச் செய்தவர். **''அஹம் வைச்வாநரோ பூத்வா பசாம்யந்நம் சதுர்விதம்''** நான் நெருப்பாக ஆகி உட்செலுத்தப்பட்ட பலதரப்பட்ட உணவைப் பக்குவம் செய்கிறேன். உடலின் தாதுக்களாக மாற்றுகிறேன். **'காமாவிச்ய ச பூதாநி தாரயாம்யஹமோஜஸா'**, 'பூமியினுள் நுழைந்து மற்ற நான்கு பூதங்களையும் உயிரினத்தையும் என் வலிவால் தாங்குகிறேன்' (கீதை, 15, 13, 14) இப்படி ஆதாரங்களின் உள்ளிருந்து அவற்றைத் தன்னிலையில் இருத்தி உலகாக மாற்றி அவற்றையும் தாங்குபவர்.[1] அற வழியில் நிலைத்து நின்று உலகியலுக்கு ஆதாரமாக வழிகாட்டுகின்ற பெரியோர்களின் உள் உறைந்துள்ளவர். (950)

**951. அதாதா - வேறு தாங்குதலற்றவர்.**

ஆதாரமானவற்றையும் தாங்குபவரான பகவான் தன்னைத் தாங்க வேறொன்றையும் எதிர்பாராதவர். தன் பெருமையில் நிலைத்திருப்பவர்.[1] தாதா என்றும் பிரிப்பது உண்டு. உலகனைத்தையும் தன்னுள் அடக்குவதற்காகக் குடிப்பவர். (நா. 39, 43) தானே ஆசாரியனாகி உலகிற்கு வழிகாட்டி நிலைநிறுத்துபவர். (951)

**952. புஷ்பஹாஸ: - பூப்போல் சிரிப்பவர்.**

மொட்டு நிலையில் மணமோ, அழகோ, விரிவோ இன்றி

1. यः सर्वेषु भूतेषु तिष्ठन्सर्वेभ्यो भूतेभ्योऽन्तरो यं सर्वाणि भूतानि न विदुर्यस्य सर्वाणि भूतानि शरीरं यः सर्वाणि भूतान्यन्तरो यमयति एष ते आत्मा। (बृहदा ३.७.१५)
2. कस्मिन्प्रतिष्ठित इति स्वे महिम्नि। (छान्दोग्य ७. २४. १)

சுருங்கியிருந்ததே பூவாக மலர்ந்து விரிந்து மணத்துச் சிரிப்பது போல் பிரகிருதி நிலையில் அவ்யக்தமாக (இனமறிய முடியாதவாறு) இருந்து பின் உலகமாக விரிந்து ஆனந்த இயல்புகளை வெளிப்படுத்துபவர். அடியார்களுக்குத் தன்னை அனுபவிக்கிற சக்தி அளித்துப் பூ போல் மலரச் செய்பவர். அவர்களது இதயத்தில் பூவாக மணப்பவர். *(952)*

953. ப்ரஜாகர: - நன்கு விழித்திருப்பவர்.

தமோகுணம் மறைப்பதால் அறியாமைவடிவான தூக்கம் வருகின்றது. பேரறிவாளரானதாலும் தமோகுணத்தின் மறைப்போ, ரஜோகுணத்தின் கலக்கமோ அவரது அறிவைப் பாதிக்க முடியாதாகையாலும் அவர் எப்போதும் விழித்திருப்பவர் - அறிவு மலர்ந்திருப்பவர். பயிரைக் காக்க உழவன் இரவு பகலாக விழித்திருப்பதுபோல் உலகைக் காக்க நன்கு விழித்திருப்பவர் - கருத்துடன் கண்காணிப்பவர். *(953)*

954. ஊர்த்வக: - மேனோக்கிச் செல்பவர்.

எல்லோருக்கும் மேலாக - எல்லோரையும்விட மேம்பட்டவராக நிற்பவர், மேனோக்கிச் செல்பவர். தன்னை அண்டியவர்களை மேனோக்கி அழைத்துச் செல்பவர், கருத்துடன் உலகைக் காக்க, உலகின் மேல் நின்று கண்காணிப்பவர். *(954)*

955. ஸத்பதாசார: - நற்பாதையில் நடப்பவர்.

எல்லோரையும்விட மேம்பட்டவராகத் தான் ஆனதற்குத் தான் நல்வழியில் நடப்பதே காரணம் என்று காட்டுபவராக நல்லோர்கள் பின்பற்றும்படி நல்ல பாதையில் நடப்பவர். **'ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந. நாநவாப்த மவாப்தவ்யம் வர்த்த ஏவஹி கர்மணி. மம வர்த்மாநுவர்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வச:.'** (கீதை. 3, 22) தன்னை அண்டியவர்களுக்கு வழிகாட்டி நல்வழியில் நடக்கச் செய்பவர். நல்லோர்கள் தொடர்ந்து பயமும் சிரமமுமின்றி சென்று வரும் பாதையே நல்வழி - ஸத்பதம். அதில் தொடர்ந்து தளராமல் சலனமடையாமல் சென்று வருவதே ஆசாரம். நல்வழியில் ஆசாரம் உள்ளவர் - ஆசாரம் கொள்ளச் செய்பவர். *(955)*

956. ப்ராணத: - உயிரூட்டுபவர்.

*கருவறையில் அசுவத்தாமனின் அஸ்திரத்தால் உயிரிழந்த பரீக்ஷித் முதலானவரை உயிர் தந்து மீட்டவர். விஷயப்பற்றால் மயங்கித் தன்னை மறந்து ஆத்மநாசம் அடைந்தவர்களுக்குப் பற்று நீக்கி ஆத்ம சக்தியை மீட்டவர். (நா. 65, 321, 408) நல்வழியில் செல்லச் சக்தி தருபவர். (956)*

957. ப்ரணவ: - பிரணவமாயிருப்பவர்.

*ப்ரணவ: - மிகப் புதிது, வணக்கத்திற்கு உரியது. வணங்குவதற்கு உதவுவது, மேனோக்கி அழைத்துச் செல்வது. இந்தப் பெருமைகள் கொண்ட ஓங்காரமாயிருப்பவர். (நா. 1, 409) பரமாத்மாவை உணர்த்துகின்ற சொல்வடிவம் ஓங்காரம். 'தஸ்ய வாசக: ப்ரணவ:' (யோக ஸூத்ரம் 1, 27) அது பரமாத்மாவிடம் அழைத்துச் செல்லும். அவரை வணங்கிப் பாடச் செய்யும். (957)*

958. பண: - செயலுக்கேற்ற பயனளிப்பவர்.

*வணிகன் தக்க விலை பெற்றுப் பொருள் தருவது போல் புண்யத்தை விலையாக ஏற்றுப் பலன் தருபவர். பக்தனை மேலான இடத்திற்கு நல்வழிகாட்டி அழைத்துச் செல்வதால் பக்தன் புண்யங்களையே செய்கிறான். அதன் விலையாக சுகத்தைப் பெறுகிறான். பகவானது கருணை பெறாதவன், நல்வழி காட்டும் பெரியோர்களது துணை பெறாமல், நல்வழி செல்லாமல் தீய வழியில் சென்று தீயதைச் செய்து பாபத்தின் விலையாகத் துன்பத்தைப் பெறுகிறான். சில சமயம் பக்தர்களின் தலைவனாகவும், சில சமயம் பக்தர்களின் தாஸனாகவும் மாறி பண்டமாற்று செய்பவர். (958)*

**प्रमाणं प्राणनिलयः प्राणभृ[1]त्प्राणजीवनः ।**
**तत्त्वं तत्त्वविदेकात्मा जन्ममृत्युजरातिगः ॥ १३४ ॥**

ப்ரமாணம் ப்ராணநிலய: ப்ராணப்ருத்[1] ப்ராணஜீவந:
தத்த்வம் தத்த்வவிதேகாத்மா ஜன்மம்ருத்யுஜராதிக: 134

1. प्राणधृत् ப்ராணத்த்ருத் என்ற பாடமுண்டு.

959. ப்ரமாணம் - அறிவாகியவர்.

அறிவைக்கொண்டு உலகை இது அது என அளவிட்டு அறிவதால் அறிவு ப்ரமாணமாகிறது. அந்த அறிவு நேரிடை அளவிற்கு உட்படாதது. அறிவால் உணரப்பெறுவதைக் கொண்டே அறிவை அளக்கலாம். கண்ணுல் காணப்பெறுகின்ற பொருளைக் கொண்டே கண்ணின் பார்வையை (அறிவை) அளக்கலாம். அந்த அறிவை அளக்கிற அறிவிற்கு எல்லையில்லை. அது ப்ரஜ்ஞானம் - பேரறிவு. அந்தப் பேரறிவு வடிவாகிய பரம்பொருள்[1] 'ஜ்ஞான ஸ்வரூபமத்யந்த நிர்மலம் பரமார்த்ததः. தமேவார்த்த ஸ்வரூபேண ப்ராந்தி தர்சநதः ஸ்த்திதம்.'' ஞானம் அப்பழுக்கற்றது. பார்க்கப்படுகிற பொருளையே அறிவாகப் பிரமித்து அதனையே அறிவென்பர். (விஷ்ணு புராணம் 1, 2, 6) ஐயந்திரிபின்றி வேதத்தின் உட்பொருளை உணர்த்துகின்ற பேரறிவாளர். (959)

960. ப்ராண நிலய: - உயிர்களுக்கு ஒடுங்குமிடம்.

ப்ராண: - பொறிகள், பிராணன் அபானன், வ்யானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து வாயுக்கள். பொறிகள் எனும் பிராணன் தூக்கத்தில் ஜீவனுள் அடங்கி விழிப்பில் வெளிவருகிறது. பிராணன் ஒடுங்குமிடமாகிய ஜீவனுக இருப்பவர். உள் இழுக்கப் பெறுகின்ற மூச்சுக்காற்று மூலம் உட்சென்று உயிரூட்டுகின்ற பிராணன், வெளியிடுகின்ற காற்று மூலம் அசுத்தத்தை வெளிப்படுத்துகின்ற அபானன், உடல் முழுவதிலும் அசைவனைத்தையும் செய்கின்ற வியானன், கர்மேந்திரியங்களை இயக்கிச் சுறுசுறுப்பும் வலிவும் மேனி அழகும் தருகிற உதானன், உணவை ஏற்று உடற்பகுதியாக்கி மலத்தை வெளிப்படுத்துகின்ற ஸமானன் என்ற ஐந்து வாயுக்களும் அடங்குமிடமாகிய ஜீவனுக இருப்பவர், உயிர் வாழ்கின்ற (ப்ராணன்) ஜீவன் அடங்குமிடமாகிய பரம்பொருளாயிருப்பவர். பொறிகளின் சக்தியையும் பிராண வாயுக்களையும் ஜீவனையும் பிரித்துத் தன்னுள் ஒடுக்குபவர். கூட்டில் பறவை அடைவது போல் ஜீவன் ஓய்விடமாகச் சென்றடையக் கூடியவர். (960)

961. ப்ராணப்ருத் - பிராணனுக்கு ஊட்டமளிப்பவர்.

உணவு முதலியதன் மூலம் பிராணனுக்கு ஊட்டமளித்துத்

1. प्रज्ञानं ब्रह्म (ऐतरेय ५.३)

தாங்குபவர். ப்ராணப்ப்ருதே ப்ராணத்த்ருதே நம: ப்ராணத்த்ருத் என்ற பாடப்படி ஜீவர்களைத் தாய் போல் தாங்குபவர். (961)

**962. ப்ராணஜீவந: - உயிருக்கு உயிரூட்டுபவர்.**

பிராணன் - உயிர். பிராணவாயு மூலம் உடலில் உயிரை நிலைக்க வைக்கின்ற பகவான்தான் உண்மையில் உயிர். பிராணவாயுவின் மூலம் வாழ வைப்பவர்.[1] பிராணவாயு உடல் மனம் முதலியவை உயிர்ப்பிற்கான கூட்டுப்பொருள்கள். அவை உயிரல்ல. அவற்றை இணைத்த பகவான் உயிராகிறார். (962)

**963. தத்த்வம் - மூலப்பொருள்.**

விளைபொருளனைத்தும் நிலைக்காதவை. விளைபொருளாக மாறியதும் விளைபொருளாகத் தோன்றியதும் விளைபொருள் அழியும்போது தான் அழியாததும் தத்துவம் - உண்மையான மூலப்பொருளாகிறது. அத்தகைய மூலப்பொருள் - பரம்பொருள் ஒன்றே. மற்ற மூலப்பொருள்களனைத்தும் சில காலம் வரை சிலவற்றிற்கு மூலப்பொருளாக இருப்பவையே. அவை வெகுகாலம் அழியாதவையாக இருக்கக்கூடும். எப்போதும் எல்லாவற்றிற்கும் மூல தத்துவமாயுள்ள பிரும்மத்தைக் குறிப்பிடுகின்ற சொல்வடிவம் தத்துவம். தத் - அது எனக் குறிப்பிடத்தக்கது. அதன் தன்மை தத்துவம். அது என நெருப்பைக் குறிப்பிடலாம். அதன் தன்மையான சூட்டை உணரலாம். அது எனக் குறிப்பிட முடியாது. அதுபோல் பரம் பொருளின் தன்மையான ஸத் சித் ஆனந்தம் என்ற தன்மையைக் குறிப்பிட முடியாது. குறிப்பிட முடியாத உணரக் கூடிய தத்துவமானவர்.

தயிரில் வெண்ணெய் போல் எல்லாவற்றின் ஸாரமாயிருப்பவர். (963)

**964. தத்த்வவித் - தத்துவமறிந்தவர்.**

மிக நுட்பமானதும் அறிவிற்கெட்டாததுமான தனது மூல தத்துவ நிலையை முழுதும் அறிந்தவரும் அவர் ஒருவரே. (964)

**965. ஏகாத்மா - எங்கும் நிரம்பிய ஒரே பொருள்.**

எங்கும் நீக்கமற நிரம்பியுள்ளவர். அப்படி நிரம்பி இருத்தலால்

1. न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन। इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ। (कठ २. २. ५)

தன்னைத் தவிர வேறு பொருள் இல்லாத ஏகமாயும் இருப்பவர்.[1] உயிருள்ளதும் உயிரில்லாததுமான அனைத்திற்கும் ஆத்மாவாக இருப்பவர். (965)

966. ஜந்ம ம்ருத்யு ஜராதிக: - பிறப்பிறப்பு மூப்புகளைக் கடந்தவர்.

வாழ்வதனைத்தும் பிறப்பு, இறப்பு, மூப்பு என்ற மூன்று நிலைகளுக்கு உட்படுவை. மாறுதலுக்கு உட்படுபவை. அவர் ஒருவரே மாறுதலுக்கு உட்படாதவர்.[2] (966)

भूर्भुवस्स्वस्तरुस्तारः सविता[3] प्रपितामहः ।
यज्ञो यज्ञपतिर्यज्वा यज्ञांगो यज्ञवाहनः ॥ १३५ ॥

பூர்ப்புவஸ்ஸ்வஸ்தருஸ்தாரஸ்ஸவிதா[3] ப்ரபிதாமஹ:
யஜ்ஞோ யஜ்ஞபதிர் யஜ்வா யஜ்ஞாங்கோ யஜ்ஞவாஹந: 135

967. பூர்ப்புவஸ்ஸ்வஸ்தரு: - பூ: புவ: ஸ்வ: என்பவைகளால் கடந்தவர்.

ஐதரேய ப்ராம்ஹணத்தில் (ருக்வேதத்தின் பிராம்ஹணப் பகுதியில்) ஒரு விளக்கம். ''பரம்பொருளின் ஸங்கல்பப்படி மூவுலங்கள் தோன்றின. பூமி, வானுலகம், விண்ணுலகம் என. மறுபடி எழுந்த ஸங்கல்பப்படி அவற்றிலிருந்து மூன்று ஜோதிகள் எழுந்தன. பூமியிலிருந்து அக்னியும், வானிலிருந்து வாயுவும், விண்ணிலிருந்து ஸுூரியனும். மறுபடியும் எழுந்த ஸங்கல்பத்தால் அவற்றிலிருந்து மூன்று வேதங்கள். அக்னியிலிருந்து ருக்வேதமும், வாயுவிலிருந்து யஜுர்வேதமும், ஸுூரியனிலிருந்து ஸாமவேதமும் தோன்றின. மறுபடி எழுந்த ஸங்கல்பத்தால் அவற்றிலிருந்து மூன்று ஸாரங்கள், ருக்வேதத்திலிருந்து பூ: என்றும், யஜுர்வேதத்திலிருந்து புவ: என்றும், ஸாமவேதத்திலிருந்து ஸ்வ: என்றும் தனி ஒலிகள் (வ்யாஹ்ருதி) எழுந்தன. அவற்றைக்கொண்டு ஹோமம் செய்தனர்.'' என. (5, 5, 32) அந்த ஹோமங்களால் மூவுலகையும்

1. आत्मा वा इदमेवाग्र आसीन्नान्यत्किञ्चन मिषत् । (ऐतरेय १. १)
2. न जायते म्रियते वा विपश्चित् । (कठ १. २. १५) यत्तच्छान्तमजरममृतं (प्रश्न ५.७)
स वा एष महानज आत्मा अजरोऽमरोऽमृतोऽभयो ब्रह्म । (बृहदा ४. ४. २५)
3. सपिता ஸபிதா (பா)

*கடந்தவர். மூவுலகையும் காப்பாற்றியவர். பூர் புவ: ஸ்வ: என்ற வ்யாஹ்ருதி மந்திரங்களாலான ஹோமங்களால் மற்ற மந்திரங்கள் உச்சரிப்பு முதலியவற்றில் ஏற்பட்ட குறைகளை நீக்கியவர். இந்த வ்யாஹ்ருதி மந்திரத்தால் குறிப்பிடப்பெறும் மூன்று உலகங்களையும் வியாபித்து மரம் போல் நிற்பவர். மூவுலகமாகிய ஸம்ஸார விருக்ஷமாயிருப்பவர். இந்த-வ்யாஹ்ருதிகளுடன் செய்யப்பெற்ற ஹோமங்களால் மழை, உணவுப்பொருள், பயிர் முதலியவற்றைத் தந்து காப்பாற்றியவர்.* ''அக்நௌ ப்ராஸ்தா ஆஹுதி: ஸம்யக் ஆதித்யம் உபதிஷ்டதே. ஆதித்யாத் ஜாயதே வ்ருஷ்டிர் வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா: *(மனுஸ்ம்ருதி 3, 76) ''அக்னியிலிட்ட ஆஹுதி சூர்யனைச் சென்றடைய சூரியன் மழையைத் தர, அதனால் பயிர்கள் செழித்து உணவாக, அதனால் மக்கள் வாழ்கிறார்கள்.'' பறவைகள் மரங்களை ஓய்விற்குச் சென்றடைவதுபோல் மூவுலகமும் சென்றடையத்தக்க நிழல் தரும் மரமாயிருப்பவர். (967)*

**968. தார: - கரையேற்றுபவர்.**

*ஸம்ஸாரமாகிய கடலைத் தாண்டச் செய்பவர். (நா. 337-338) ஓங்காரமாயிருப்பவர்.[1] (968)*

**969. ஸவிதா - தந்தை.**

*உலகைப் பெற்றவர். (நா. 39, 884).[2] ஸவித்ரே நம:, வாழ்விற்கு அவசியமான பொருளனைத்தையும் படைத்து அனுபவிக்கச் செய்பவர். ஸபிதா என்ற பாடமுண்டு. ஸ: பிதா என்ற இரு தனிச் சொற்களாக் கொண்டால் அந்த உலகின் தந்தை - வேதங்கள் முதலியவற்றில் புகழ் பெற்ற தந்தை. தஸ்மை பித்ரே நம:. ஸபிதா என ஒரே சொல்லாகக் கொண்டால் எல்லோருக்கும் பொதுவான தந்தை. ஸபித்ரே நம:. (969)*

**970. ப்ரபிதாமஹ: - பிதாமஹருக்கும் மூத்தவர்.**

*பிதாமஹ: - தந்தைக்குத் தந்தை, வீட்டிற்கு மூத்த தந்தை, பிரபிதாமஹ: - அவருக்கும் தந்தை, கொள்ளுப்பாட்டனார். உலகின் பாட்டனார் பிரும்மா. பிரும்மாவிற்குப் பிதாமஹர்*

---

1. यस्मादुच्चार्यमाण एव गर्भजन्मव्याधिजरामरणसम्सारमहाभयात्तारयति त्रायते च तस्मादुच्यते तारम्। (अथर्वशिर: ४)
2. देवो वरुण: प्रजापति: सविता। (छान्दोग्य १.१२) सवनात्सविता (मैत्रायणी ५.७)

என்றே பெயர். அவருக்கும் தந்தை ஸ்தானத்தில் மூத்தவர் பகவான். ப்ரபிதாமஹராக இருந்து பிண்டத்தை ஏற்கின்ற பகவான். "பிதா பிதாமஹச்சைவ ததைவ ப்ரபிதாமஹ: அஹமேவாத்ர விஜ்ஞேய: த்ரிஷு பிண்டேஷு ஸம்ஸ்த்தித:" (பாரத. சாந்தி. 345, 21) (970)

971. யஜ்ஞ: - சேர்த்து வைப்பவர்.

வினைப்பயன் உயிரினத்தைச் சென்றடையும்படி செய்பவர். செயலின் பலனை அவரவர் அனுபவிக்கச் செய்பவர். (நா. 445) யஜ என்ற வினைச்சொல்லிற்கு தெய்வ வழிபாடு, சேர்க்கையை உண்டாக்குவது, கொடை என்ற பொருள் உண்டு. ஞானயஜ்ஞம் முதலிய வேள்வியாக, வேள்வித் தீயாக, தெய்வவழிபாடாக, ஸாத்விகமான தானமாக இருப்பவர். (971)

972. யஜ்ஞபதி: - வேள்வியைக் காப்பவர்.

அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், சாதுர்மாஸ்யம், பசுபந்தம், ஸோம யாகம் என்ற வேள்விகளைக் காப்பவர். அவரது பெயரை ஸ்மரித்ததும் வேள்விகளில் உள்ள குறைகள் நீங்கும். வேள்விகளில் தரப்பெறும் ஹவிஸ்ஸை ஏற்பவர். வேள்விகளின் பலனைத் தருபவர். 'அஹம் ஹி ஸர்வ யஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச'. (கீதை. 9, 24) தன்னைக் குறித்துச் செய்யப்பெறுகிற வேள்விகளின் பயனைத் தருபவர். (972)

973. யஜ்வா - வேள்வி புரிபவர்.

பகவானுக்கு ஐந்து பூதங்கள். ஸூரியன், சந்திரன் வேள்வி புரிபவர் என்ற எட்டு வடிவங்கள் உண்டு. வேள்வி புரிபவர் வடிவிலிருப்பவர். அவதாரங்களில் உலக நன்மைக்காகத் தானே வேள்வி புரிந்தவர். (நா. 676, 977) (973)

974. யஜ்ஞாங்க: - வேள்விவடிவானவர்.

யாக வடிவில் உள்ள பகவானின் உடலமைப்பாக யாகத்தின் பல செயல் முறைகளும், ஸாதனங்களும், மந்திரங்களும் அமைந்தன என ஹரி வம்சமும் வராஹரது உடல் முழுவதும் வேள்வியின் அங்கங்களால் அமைந்ததென பாகவதமும் கூறும். (3, 13, 35-39) வேள்விகளைத் தனது வழிபாட்டின் அங்கமாகக் கொண்டவர். யாகத்திற்கு உதவும் பொருளாக இருப்பவர். (974)

975. யஜ்ஞவாஹந: - வேள்விகளை நடத்துபவர்.

*எந்த நற்பணியும் இறைவன் திருவருளால்தான் கூடும்.[1] நல்லோர்களுக்கு அருள்புரிந்து, சக்தியையும், சிரத்தையையும் அளித்து, வேள்விகளை நடத்தித் தருபவர். (975)*

**यज्ञभृयज्ञकृयज्ञी यज्ञभुग्यज्ञसाधनः ।**
**यज्ञान्तकृयज्ञगुह्यमन्नमन्नाद एव च ॥ १३६ ॥**

யஜ்ஞப்ப்ருத் யஜ்ஞக்ருத் யஜ்ஞீ யஜ்ஞபுக் யஜ்ஞஸாதந:
யஜ்ஞாந்தக்ருத் யஜ்ஞகுஹ்யமந்நமந்நாத ஏவச 136

976. யஜ்ஞப்ப்ருத் - வேள்வியைப் போஷிப்பவர்.

*ருத்விக்குகள் என்ற வேள்வி புரிபவர்கள் மூலம் வேள்வியை முறை வழுவாமல் நடத்திக் காப்பவர். ருத்விக்குகளில் ஒருவர் பிரும்மா எனப்படுபவர். பிரும்மாவாகி வேள்வி தொடங்கியதிலிருந்து முடியும் வரை ஒவ்வொன்றையும் கண்காணித்து வழிகாட்டித் திருத்தி வேள்வி நிறைவுறச் செய்கின்ற பொறுப்புள்ளவர். (976)*

977. யஜ்ஞக்ருத் - வேள்வியை ஏற்படுத்தியவர்.

*படைப்பைத் தொடங்கியதும் உலகம் தானியங்கியாக, தேவர், மனிதர் என்ற இரு இனங்களுக்கும் வேள்வி மூலம் பிணைப்பை ஏற்படுத்தித் தானே வேள்வி என்ற அமைப்பை ஏற்படுத்தி முதலில் வேள்வி புரிந்தவர். (புருஷ ஸூக்தம்) உலகின் இறுதியில் வேள்வி நடைபெறாதபடி செய்து வேள்வியால் ஏற்பட்டிருந்த தேவ - மனிதப் பிணைப்பைத் துண்டித்து அதனால் மழையின்றி உணவின்றி வாட்டி அழித்தவர். (நா. 3) (977)*

978. யஜ்ஞீ - வேள்வியின் உடமையாளர்.

*வேள்வி அவரது வழிபாட்டிற்காக அவருக்காகவே செய்யப்படுகின்றது. அவரே அதன் உரிமையானர். (978)*

979. யஜ்ஞ புக் - வேள்வியால் இன்புறுபவர்.

*வேள்வியை ஏற்றுக் காப்பாற்றுபவர். வேள்வியால் நிறைவுறுபவர். (979)*

---

1. एष ह्येव साधुकर्म कारयति। (कौषीतकी ३. ८)

980. யஜ்ஞஸாதந: - வேள்விகளை ஸாதனமாக்கிக்கொண்டவர்.

*பகவானை அடைய வேள்விகள் ஸாதனமாகின்றன. ஈச்வரார்ப்பண எண்ணத்துடன் புரிந்த வேள்விகள் சித்தசுத்தி அளித்து பகவானை உணர்த்துவதால் பகவானை அடைவதற்கு ஸாதனங்களாகின்றன.* *(980)*

981. யஜ்ஞாந்த க்ருத் - வேள்விகளின் பலனைத் தருபவர்.

*தன்னை நினைத்து வைஷ்ணவ மந்திரங்கள்*[1] *ஜபித்தாலும் பூர்ணாஹுதி தந்தாலும் வேள்வியால் பெறத்தக்க பலன் அனைத்தையும் தருகின்றவர். அவரது நாமஸ்மரணத்துடன் செய்யப் பெறுகின்ற வேள்வியைக் குறையுற்றிருந்தாலும் நிறைவுறச் செய்பவர்.* "யஸ்ய ஸ்ம்ருத்யா ச நாமோக்த்யா தபோயாகக்ரியாதிஷு. ந்யூநம் ஸம்பூர்ணதாம் யாதி ஸத்யோ வந்தே தமச்யுதம்." *(981)*

982. யஜ்ஞ குஹ்யம் - ஞானயஜ்ஞமாயிருப்பவர்.

*வேள்விகள் பெரும்பாலும் வெளிப்படையாகப் பலர் அறிந்த பொருள்களால் செய்யப்பெறுவை. தனித்துச் சுயநலத்திற்காக எதனையும் கோராதபடி, வேள்வியைக் கடமையாகச் செய்யும்போதும், ஈச்வரார்ப்பணமாகவோ ஈச்வராராதனமாகவோ கருதிச் செய்யும்போதும் உலகிலனைத்தையும் பகவானாகவும் பகவானை அனைத்துப் பொருளாகவும் உணர்கின்றபோதும் தனது அந்தரங்கத்தையே ஸாதனமாகக் கொண்டு செய்யப்பெறுவதால் ஞானயஜ்ஞமாகிறது. அத்தகைய ரகசிய வேள்வியாக இருப்பவர். அத்தகைய ரஹஸ்ய வேள்விகளுக்கும் பகவானுக்கும் வேற்றுமை யில்லை.*

*யஜ்ஞ: - என்ற நாமம் தொடங்கி யஜ்ஞ குஹ்யம் என்ற நாமம் வரை ஒரு தொடர்ந்த கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது. வேள்வி பகவானை வழிபடுவதற்காக ஏற்பட்டது. அதனை முதலில் பகவானே செய்துகாட்டினார். அந்த வேள்வி பகவானே. அதற்காக வளர்க்கப்படும் ஹோமத்தீ, அதனைத் தாங்கும் ஹோமசாலை, வேள்விபுரிபவர், வேள்வி புரிபவரது கைகள், அந்தக் கைகளில் உள்ள ஸ்ருக் ஸ்ருவம் என்ற ஹோமக் கருவிகள், அதில் ஏந்தப்பெற்ற நெய் அன்னம் முதலிய ஹோமப்பொருள், அதனை*

---

1. इदं विष्णुर्विचक्रमे त्रेधा निदधे पदम्। समूढमस्य पांसुरे। (तै. आ. १.२.१२)

நெருப்பிலிடும் செயல், அதனால் ஏற்படும் நல்வினை, அந்த நல்வினையால் ஏற்படுகின்ற சுகானுபவம், அந்த நல்வினையை ஈச்வரார்ப்பணம் என்ற கருத்துடன் செய்வதற்கான பற்றற்ற நிலை. அந்த நிலையில் செய்யப்பெறும் வேள்வியால் ஏற்படும் சித்தசுத்தி, அதனால் ஏற்படும் ஆத்மஞானம், அதனால் ஏற்படும் ஆத்மாநந்தம். அந்த ஆத்மாவாக ஆனந்தமாக இருக்கும் பரம்பொருள் அனைத்தும் பகவானே. 'ப்ரும்ஹார்ப்பணம் ப்ரும்ஹ ஹவி: ப்ரம்ஹாக்நௌ ப்ரம்ஹணா ஹுதம். ப்ரம்ஹைவ தேந கந்தவ்யம் ப்ரம்ஹகா்ம ஸமாதிநா.' *(கீதை 4-24)* வேள்விகள் மிகச் சிறந்தவையாயினும் இறுமாப்பும் கெட்ட எண்ணமும் கொண்ட தக்ஷனின் யாகத்தைக் கெடுத்து வேள்வி புரிபவனின் தலையையே ஹோமப் பொருளாக்கியவரும் ருத்ரர் வடிவில் உள்ள பகவானே. போஜன வேளையில் வயிற்றில் இடும் உணவுப்பொருளையே ஹோமப் பொருளாகவும் உணவை ஏற்கும் சக்தியையே பிராணன் முதலிய தேவதைகளாகவும் பாவித்து உணவேற்கும்போது. அது பிராண அக்னிஹோத்ரம் எனும் வேள்வியாகிறது. இப்படி பிராணன் முதலிய வடிவில் உணவை ஹோமப் பொருளாக ஏற்பவரும் பகவானே''. இதையே மேலும் இரு நாமங்கள் விளக்குகின்றன. *(982)*

983. அந்நம் - உணவானவர்.

உண்ணப்படுவதும் உண்பதும் 'அந்நம்' ஆகும். உண்ணும் உணவு உட்செல்லும்போதே நமது ஆயுளின் அளவையும் உணவின் அளவுக்கேற்றபடி குறைத்துவிடுகிறது. பிறக்கும் போதே ஆயுளின் வரையும் ஏற்கவேண்டிய உணவின் வரையும் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன. சிறந்த நற்செயலால் இதனை அதிகமாக்கவும் கெட்டசெயலால் குறைக்கவும் முடியலாம். ஓர் ஆயுட்கால வரையில் உண்ணவேண்டிய அளவை, உணவில் உள்ள நப்பாசையால் அவ்வப்போது அதிகமாக ஏற்கப் பல நோய்கள் வடிவில் அந்த உணவு ஆயுளைக் குறைத்துவிடுகிறது. 'காலோந ந யாதோ வயமேவ யாதா: போகா ந புக்தா வயமேவ புக்தா:' அப்படி உணவாகும் பொருள் பகவானே! *(983)*

---

1. अयतेऽत्ति च भूतानि (तै.उ.२.२) अहमन्नमन्नमदन्तमद्मि। (तै. उ. ३. ४)

**984. அந்நாத: - உணவை உண்பவர்.**

*உணவும் அவரே. உண்பவரும் அவரே.* **'அஹம் வைச்வாநரோ பூத்வா.... பசாம்யன்னம் சதுர்விதம்'.** *பற்கள் கடித்து மென்று நாக்கு உணர்ந்த சுவையைச் சுவைத்து விழுங்கி ஜீர்ணித்து உடலைப் புஷ்டி செய்வது, அவரது சக்தி ஒவ்வொரு செயலிலும் உட்புகுவதால் அமைகிறது. உலகம் இருவகை - உணவு, உண்பவன் என. இரண்டும் அவரே. அந்நமந்நாத ஏவச என்பதில் ஏவச என்பது இதனைக் குறிப்பிடுகிறது.*

*விச்வம் (நா. 1-983) எனத் தொடங்கி இந்த விரிந்த பரந்த உலகில் காணப்பெறும் சிறிதும் பெரிதும் அவரே. மிக நெருக்கத்தில் உண்ணும் உணவும் உண்பவனுன தானும் அவரே என விளக்கி, பகவானின் ஸர்வாத்ம பாவம் என்ற எல்லாமாயிருக்கும் தன்மையை தர்மபுத்திரருக்கு விளக்கி வந்த பீஷ்மாசாரியர், தங்கள் எதிரில் அமர்ந்து தான் தரும் உபதேசங்களைச் செவிமடுத்துக்கேட்கும் கண்ணனே - அந்த விச்வம் - அந்நாத: ஆகிய பரம்பொருள் என்பதனைச் சுட்டிக் காட்டி முடிவுரையாகச் சில நாமங்களைக் கூறுகிறுர். (984)*

**आत्मयोनिः स्वयंजातो वैखानस्सामगायनः ।**
**देवकीनन्दनः स्रष्टा क्षितीशः पापनाशनः ॥ १३७ ॥**

**ஆத்மயோநிஸ் ஸ்வயம்ஜாதோ வைகாநஸ்ஸாமகாயந:**
**தேவகீ நந்தநஸ் ஸ்ரஷ்டா க்ஷிதீச: பாபநாசந: 137**

**985. ஆத்மயோநி: - தானே தனக்குக் காரணமானவர்.**

*சுக்ல சோணிதச் சேர்க்கை முதலியவை காரணமாக ஜீவர்கள் தம் தம் சரீரங்களைப் பெறுவதுபோல் பகவான் தான் தோன்றுவதற்கு வேறு காரணம் பெற்ருரில்லை. தானே தனக்குக் காரணமானவர், வேறு காரணங்களற்றவர்.[1] பால் சர்க்கரையைத் தன்னுடன் கலக்கச்செய்து அதற்குத் தன் வடிவம் தருவதுபோல் பக்தர்களைத் தன்னுடன் கலக்கச்செய்து தாளுகவே ஆக்குபவர். (985)*

**986. ஸ்வயம்ஜாத: - தானே தோன்றியவர்.**

*தானே தோன்றியவர்.[2] வசுதேவரும் தேவகியும் கண்ணன்*

1. स विश्वकृद्विश्वविदात्मयोनिः । (श्वेताश्व ६. १६)
2. तदात्मानं स्वयमकुरुत (तै.आ.२.७)

தோன்றக் காரணமானார்களே எனில் அவர்களிருவருக்கும் பெற்றோராகும் பெருமையளிப்பதற்கே அவர்களிடம் பிறந்ததுபோலத் தோன்றினார். கிழக்கில் பூர்ணசந்திரன் உதிப்பதுபோல் கண்ணன் தோன்றினார் என சுகாசார்யரின் ஞானதிருஷ்டி கண்டது. **"தேவக்யாம் தேவ ரூபிண்யாம் விஷ்ணு: ஸர்வகுஹாசய: ஆவிராஸீத் யதா ப்ராச்யாம் திசீந்துரிவ புஷ்கல:'.** *(பாகவதம் 10-3-8) அவருக்கு மறைவிலிருப்பது வழக்கம். தேவகியிடம் குடியிருந்தார். தானே வெளிவந்தார். (தேவகி பெறவில்லை) கிழக்கு திக்கிற்கும் சந்திரனுக்கும் எத்தனை ஒட்டுதலோ அத்தனையே தேவகிக்கும் கண்ணனுக்கும். தேவகியின் கருவறையில் நுழையவும் தங்கவும் அங்கிருந்து வெளியேறவும் அத்தனை சுதந்திரம்.* **"பகவாநபி விச்வாத்மா பக்தாநமபயம்கர:. ஆவிவேசாம்சபாகேந மந:. ஆநகதுந்துபே:. ததார ஸர்வாத்மகம் ஆத்மபூதம் காஷ்ட்டா யதா ஆநந்தகரம் மநஸ்த:.''** *(பாகவதம் 10-2 16, 18) எனத் தேவகியின் கருவில் பகவான் நுழைந்த சீரைச் சுகாசார்யர் வர்ணிக்கிறார். பிறரது வேண்டுதலை எதிர்பாராமல் தானே வருபவர். (986)*

**987. வைகாந: - தோண்டிச் சென்றவர்.**

*வராஹராகிப் பூமியைத் தோண்டிப் பாதாளம் சென்று ஹிரண்யாக்ஷனை மாய்த்தவரும் பிறவித் துன்பத்தைத் தோண்டிக் களைபவரும் இவரே. (987)*

**988. ஸாமகாயந: - ஸாமகானம் செய்பவர்.**

*வேதங்களில் ஸாமவேதம் பகவானின் விபூதி* **"வேதாநாம் ஸாமவேதோ அஸ்மி''** *(கீதை 10-22) அதனைப் பாடவேண்டும். மகிழ்ச்சிமிக்க நிலையில் பிரும்ம ஞானி தன்னை மறந்துள்ள போது தானே பாடித்[1] தானே எல்லாமானதை எக்களிப்புடன் கூறுவார்.[2] கண்ணன் சிறந்த பிரும்மஞானியாதலால் ஸாமகானம் செய்பவர். மனத்தைச் சமநிலைக்குக் கொணர்கின்ற வேணுகானம் செய்பவர். (988)*

**989. தேவகீ நந்தந: - தேவகியின் மைந்தன்.**

*தேவகியை மகிழ்விக்கின்ற கண்ணன் அந்தப் பரம் பொருளே.*

1. एतत्साम गायन्नास्ते। हावु हावु हावु... सुवर्न ज्योतीः। (तै.आ.३.१०)
2. अहं मनुरभवं सूर्यश्च (बृहदा १.४.१०)

*யசோதைக்கும் தேவகி என்ற பெயருண்டு. அவர் யசோதையை மகிழ்விப்பவரும்கூட (989)*

990. ஸ்ரஷ்டா - படைப்பவர்.

*தன் பிறந்தநாளை எல்லோரும் அறியும்படி தேவகியிடம் தோன்றிய கண்ணனே பிரும்மாவைத் தன் நட்சத்திரமான ரோஹிணியில் பிறக்கச்செய்து அந்த நட்சத்திரத்தில் தானும் பிறந்தார். உலகைப் படைத்தவர்.[1] (நா. 588) (990)*

991. க்ஷிதீச: - பூமியை ஆண்டவர்.

*கண்ணனாகத் தோன்றியபோது யயாதியின் சாபத்தை மதித்துத் தான் அரசராகப் பட்டம் கட்டிக்கொள்ளாவிட்டாலும் ஸ்ரீராமனாக* "இக்ஷ்வா கூணாமியம் பூமி: ஸசைல வநகாநநா. ம்ருகபக்ஷிமனுஷ்யாணாம் நிக்ரஹாநுக்ரஹேஷ்வபி" *என மனிதர்களுக்கு மட்டுமல்ல. மிருகங்கள், பக்ஷிகள் முதலான வற்றையும் அடக்கி ஆண்ட அரசர்களின் வழி வந்தவர். (ராமா 4.18.6) பதினான்கு உலகங்களுக்கும் அதிபனாயினும் பூலோகத்திடம் அதிகப் பரிவுகாரணமாக அதனை ஆள அடிக்கடித் தோன்றியவர். (991)*

992. பாபநாசந: - பாபத்தைப் போக்குபவர்.

*பாபம்நீங்க உடல் துன்பம் விளைவிக்கின்ற கடும் முறைகள் பல உண்டு. அவற்றால் அழியாத பாபங்களும் உண்டு. பகவானை நினைப்பதாலும் அவர் பெயரைக் கூறுவதாலும் எளிய முறையில் அவருக்கு எதையேனும் பக்தியுடன் அளிப்பதாலும் அவர் இருப்பதாக நினைத்து அத்திசை நோக்கி வணங்குவதாலும் பாபங்கள் நீங்கிவிடுகின்றன. கண்ணனாகத் தோன்றியபோது வெண்ணெய் திருடியும் கோபிகளுடன் விளையாடியும் பாமரன் போல் அவர் செய்த லீலைகளைக் கதைகளாகப் பாடிக்கேட்டு கூடப் பாபத்திலிருந்து எளிதில் விபட்டு விடுகிறான். அந்த லீலைகள் எளிதில் மனத்தில் பதிந்து பகவானை மனத்தில் இருத்திவிடுவதால், தியானம் செய்ய எளியவை. அவரது பெயர் கூறினாலே பாபம் போகுமென்று தான் விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம் தொடங்கப்பெற்றது.* 'விஷ்ணோர் நாம ஸஹஸ்ரம் மே ச்ருணு பாபபயாபஹம்' *என. (ச்லோ 18). முடிவுரையும் பாபநாசந: என அமைகிறது. (992)*

1. स इमाल्लोकानसृजत (ऐतरेय १. २)

शङ्खभृन्नन्दकी चक्री शार्ङ्गधन्वा गदाधरः ।
रथाङ्गपाणिरक्षोभ्यः सर्वप्रहरणायुधः ॥ १३८ ॥

सर्वप्रहरणायुध ओं नमः इति

ஶங்க்கப்ப்ருந் நந்தகீ சக்ரீ ஶார்ங்கதந்வா கதாதர:
ரதாங்கபாணிரக்ஷோப்ய: ஸர்வப்ரஹரணாயுத: 138

ஸர்வப்ரஹரணாயுத ஓம் நம: இதி.

993. ஶங்க்கப்ப்ருத் - சங்கம் ஏந்தியவர்.

*பாஞ்சஜந்யம் என்ற சங்கு ஏந்தியவர். தாமஸம் எனும் அஹங்காரம் (4, 8, 7, 10) ஐந்து பூதமூலதத்துவங்களுக்கும் மூல தத்துவமாகும். ஐந்தைத் தோற்றுவிக்கிற பூதாதி - தாமஸம் என்ற பெயர் பெற்ற அஹங்காரத் தத்துவத்தின் வடிவானதால் பாஞ்சஜந்யம் என்ற பெயர். பஞ்சஜனன் என்ற சங்கு வடிவிலிருந்த அஸுரனைக் கொன்றதும் அந்த சங்கும் பகவானுக்கு அணியாகியது.* பூதாதி மிந்த்ரியாதிம்ச த்விதாஹங்காரம் ஈச்வர: பிபர்த்தி சங்கரூபேண சார்ங்கரூபேணச ஸ்த்திதம்". *(விஷ்ணுபு 1-220) அதனை வாயிலுள்ள காற்றால் (பரணம்) நிரப்புவதால் எழுகிற ஒலி அறியாமை யெனும் எதிரியையும் உடல் வலிவுள்ள எதிரியையும் அழிக்கும். அதனால் அதுவும் ஆயுதமாகின்றது. (993)*

994. நந்தகீ - நந்தகத்தையுடையவர்.

*நந்தகம் என்ற பட்டாக்கத்தி வித்யை வடிவமானது. அதன் உறை அவித்யையாலானது.* "பிபர்தி யச்சாஸிவரம் அச்யுதோ அத்யந்த நிர்மலம். வித்யாமயம் ததஜ்ஞானமவித்யாகோஶஸம் ஸ்த்திதம்" *(விஷ்ணுபு. 1-22-74) அதனை எப்போதும் வைத்துக்கொண்டிருப்பவர். (994)*

995. சக்ரீ - சக்கிரமுடையவர்.

*மனஸ் தத்துவத்தைச் சக்கிரமாக ஏந்தியவர். கஜவரதனாக, கண்ணனாகத் தோன்றியபோது சக்கிரம் அதிகம் பயன்பட்டுள்ளது. (நா. 417, 546, 908) (995)*

996. சார்ங்க தந்வா – சார்ங்கமென்ற வில்லுடையவர்.

*சார்ங்கமென்ற வில்லுள்ளவர். (நா. 76, 81, 857) இந்திரியங்களின் மூல தத்துவமான ராஜஸ அஹங்கார தத்துவமே இந்த வில்லாயிற்று (நா. 8)* **'இந்திரியாதிம் அஹங்காரம்... சார்ங்கரூபணேச ஸ்த்திதம்'.** *(விஷ்ணுபு. 1-22-70) (996)*

997. கதாதர: – கதை ஏந்தியவர்.

*கௌமோதகி எனும் கதையை ஏந்தியவர் (நா. 546) புத்தி தத்துவமே கதையாகிறது.* **"புத்திரப்யாஸ்தே கதாரூபேண மாதவே."** *(விஷ்ணுபு. 1-22, 69) கண்ணனுக் தோன்றியபோது காண்டவ வனத்தை எரிக்க அர்ஜுனனுக்கு உதவிய கண்ணனுக்கு வருணன் அன்பளிப்பாகக் கௌமோதகியைத் தந்தார். (பாரத. 1-224-28) குமுத: (நா. 589) - குமோதக: - பூமியை மகிழ்விப்பவர் எனப்பகவானுக்குப்பெயர். அவருடையதானதால் கௌமோதகீ. (குமோதகஸ்ய இயம்) (997)*

998. ரதாங்கபாணி: – தேர்ச் சக்கரத்தை ஏந்தியவர்.

*ரதாங்கம் - சக்கிர ஆயுதம், தேர்ச் சக்கிரம், பாரதயுத்தத்தில் கண்ணன் தான் ஆயுதம் ஏந்துவதில்லை என பிரதிஜ்ஞைசெய்திருந்தார். ஒன்பதாவதுநாள் போரில், பீஷ்மரது போர் வெறியை அடக்கத் தனது வாக்கை மறந்து ரதத்திலிருந்து குதித்துச் சாட்டையை எறிந்துவிட்டு ஆயுதமின்மையை உணர்ந்து அங்கு சிதறிக்கிடந்த ஏதோ ஒரு தேர் சக்கிரத்தை ஏந்தி பீஷ்மரைக் கொல்லவந்தார். அப்படி ஓடிவந்த கண்ணனைக் கண்ட பீஷ்மர் மகிழ்ச்சியுடன்* **'ஏஹ்யேஹி புண்டரீகாக்ஷ தேவதேவ நமோ அஸ்து தே'** *என்று வரவேற்றார். (பாரதம். பீஷ்ம. 106-64) அந்தக் காட்சி பீஷ்மருக்கு விஷ்ணு ஸஹஸ்ரநாமங்கள் கூறும்போதும் நினைவில் பசுமையாக இருக்கிறது. அதனால்தான் பின்னர் முக்திபெற அந்த ரதாங்கபாணியான பகவானே தனக்குக் கதி என்று அவரை வேண்டுகிறார்.* **"ஸ்வ நிகமமபஹாய மத்ப்ரதிஜ்ஞாம்ருதமதிகர்தும் அவப்லுதோ ரதஸ்த்த:. த்ருத ரத சரணோ அப்ப்யயாச் சலத்கு: ஹரிரிவஹந்து மிபம் கதோத்தரீய:. சிதவிசிகஹதோ விசீர்ணதம்ச:. க்ஷதஜபரிப்லுத ஆததாயிநோமே. ப்ரஸபமபிஸஸார மத்வதார்த்தம் ஸ பவது மே பகவான் கதிர் முகுந்த:"** *(பாகவதம். 1-9-37, 38) அந்தக் காட்சி மனத்தை விட்டகலாததால் மிக விரும்பிய நாமமாக ரதாங்கபாணி: என்ற நாமம் முடிவுரைக்கு முன்னோடியாகிறது.*

தேர்ச்சக்கரம் ஆயுதமாகுமா என்ற ஐயம் கடைசிநாமத்தால் மறையும்.

ரதாங்கம் - ரதத்தை ஓட்டுவதில் துணைபுரியும் குதிரையின் கடிவாளமும் சாட்டையும். அதனை ஏந்தியவர். "தோத்ர வேத்ரைக பாணயே" என்று இதை பிரார்த்தனை சுலோகம். (998)

**999. அக்ஷோப்ய: - கலக்கமுடியாதவர்.**

ஆயுதமேந்தியும் ஆயுதமில்லாமலும் இருந்தபோது சிறிதும் கலங்காதவர், பிறரது தாக்குதலால் தகர்க்கமுடியாதவர், பார்த்தசாரதிக் கோலத்தில் பத்துநாட்கள் பாரதப்போரில் தான் கண்ட கண்ணனைப் பீஷ்மர் விளக்குகிறார். (நா. 80) (999)

**1000. ஸர்வப்ரஹரணாயுத: - எல்லாவற்றையும் அழிக்கிற ஆயுதம் கொண்டவர்.**

சங்கு, சக்கிரம், கதை, வில், கத்தி என்ற ஐந்து புகழ்பெற்ற ஆயுதங்களுடன் தேர் சக்கிரமும் ஆயுதமானதுபோல் நரசிம்மருக்கு நகமும் ராமருக்குப் புல்லும் கண்ணனுக்கு முலைப்பால் குடிப்பதும் கூட மாய்க்கும் ஆயுதமாகின்றது. அதுபோல் பாதுகாக்கவும் எதனையும் பயன்படுத்துவார். அவரது ஸங்கல்பமே எதனையும் செய்யும். அவர் ஸத்ய ஸங்கல்பர். சாதனங்களின் உதவி அவருக்குத் தேவை இல்லை. அவர் எல்லாவற்றையும் ஆட்டிப் படைப்பவர், எல்லாமறிந்தவர், எல்லாமானவர். அதனால் எதனாலும் அடிப்பார். எதனாலும் காப்பாற்றுவார்.

ஓம் எனத் தொடங்கியதை ஓம் என்று கூறிமுடிப்பது வழக்கம். கடைசி நாமத்தை இரண்டாவது தடவை உச்சரித்து ஓங்காரத்துடன் நம: என்று கூறி முடிக்கிறார். ஓங்காரம் மங்களத்தைக் குறிக்கும். ஹரியை வணங்கித் தொடங்கிய பணி நாள், நட்சத்திரம், யோகம், கரணம், லக்னம் என்ற நல்வேளைகளில் நடத்தியதாக ஆகும். **"தன்யம் ததேவ லக்னம் தந்நக்ஷத்ரம் ததேவபுண்யம் அஹ:. கரணஸ்யச ஸா ஸித்தி: யத்ர ஹரி: ப்ராக் நமஸ்க்ரியதே" "ததேவ லக்னம் ஸுதிநம் ததேவ தாராபலம் சந்த்ரபலம் ததேவ. வித்யாபலம் தைவபலம் ததேவ லக்ஷ்மீபதே தே அங்க்ரியுகம் நமாமி".** கிருஷ்ணனை வணங்கியவன் மறுபிறப்பு எய்துவதில்லை 'க்ருஷ்ணப்ரணாமீ ந புநர்ப்பவாய' என்று கண்ணனை வணங்கி அவரது பேராயிரத்தை பீஷ்மர் முடிக்கிறார். (1000)

# फलश्रुतिः

## பலச்ருதி - பயனுரை

वनमाली गदी शार्ङ्गी शङ्खी चक्री च नन्दकी ।
श्रीमान्नारायणो विष्णुर्वासुदेवोऽभिरक्षतु ॥ १३९ ॥
वासुदेवोऽभिरक्षतु ओं नमः इति ।[1]

வநமாலீ கதீ ஶார்ங்கீ ஶங்க்கீ சக்ரீ ச நந்தகீ
ஶ்ரீமாந்நாராயணோ விஷ்ணுர் வாஸுதேவோ அபிரக்ஷது. 139
வாஸுதேவோऽபிரக்ஷது ஓம் நம: இதி[1]

*வநமாலையுடையவரும் கதை சார்ங்கம் சக்ரம் நந்தகம் இவற்றை எப்போதும் கொண்டவரும் எங்கும் நிரம்பியவரும் எல்லாவற்றினுள்ளும் வசிப்பவரும் எல்லாவற்றிற்கும் இருப்பிடமானவரும் அலகிலா விளையாட்டுடையாரும் லக்ஷ்மியுடன் எப்போதும் கூடியவருமான நாராயணன் சுற்றிலும் நின்று காப்பாற்றட்டும்.*

इतीदं कीर्तनीयस्य केशवस्य महात्मनः ।
नाम्नां सहस्रं दिव्यानामशेषेण प्रकीर्तितम् ॥ १४० ॥

இதீதம் கீர்தநீயஸ்ய கேஶவஸ்ய மஹாத்மந:
நாம்நாம் ஸஹஸ்ரம் திவ்யாநாமஶேஷேண ப்ரகீர்த்திதம். 140

*இவ்வாறு புகழத்தக்கவரும் பெருமைமிக்கவருமான கேசவரின் இந்த திவ்யமான பேராயிரம் முழுவதும் கூறப்பட்டது.*

य इदं शृणुयान्नित्यं यश्चापि परिकीर्तयेत् ।
नाशुभं प्राप्नुयात्किंचित् सोऽमुत्रेह च मानवः ॥ १४१ ॥

ய இதம் ஶ்ருணுயாந்நித்யம் யஶ்சாபி பரிகீர்த்தயேத்
நாஶுபம் ப்ராப்நுயாத் கிஞ்சித் ஸோऽமுத்ரேஹ ச மாநவ: 141

*எவன் இதனைத் தினமும் கேட்கிறானோ, எவன் இதனைக்*

---

1. *இந்த சுலோகம் ஸஹஸ்ரநாமத்தின் முடிவில் கூறும் தியான சுலோகமாகும். மஹாபாரதத்தில் இல்லாதது, வழக்கில் உள்ளது. இதனை மூன்று தடவை சொல்வர்.*

*கொண்டு பகவானைத் துதிக்கிறானோ அந்த மனிதன் இம்மையிலும் மறுமையிலும் சிறிதும் கெடுதலை அடையமாட்டான்.*

वेदान्तगो ब्राह्मणः स्यात्क्षत्रियो विजयी भवेत् ।
वैश्यो धनसमृद्धः स्यात् शूद्रः सुखमवाप्नुयात् ॥ १४२ ॥

வேதாந்தகோ ப்ராம்ஹணஸ் ஸ்யாத் க்ஷத்ரியோ விஜயீ பவேத்
வைச்யோ தநஸம்ருத்தஸ் ஸ்யாத் சூத்ரஸ் ஸுகமவாப்நுயாத். 142

*(அவரவர் தகுதிப்படி இதனைப் படிப்பதாலும் கேட்பதாலும்) அந்தணன் உபநிடதங்களில் விளக்கப்பெற்ற ஆத்ம-தத்வமறிந்தவனாகவும், க்ஷத்திரியன் போரில் வெற்றி பெறுபவனாகவும், வைச்யன் செல்வச்செழிப்புள்ளவனாகவும் ஆவான். சூத்திரன் இன்பத்தைப் பெறுவான்.*

धर्मार्थी प्राप्नुयाद्धर्ममर्थार्थी चार्थमाप्नुयात् ।
कामानवाप्नुयात्कामी प्रजार्थी चाप्नुयात्प्रजाम् ॥ १४३ ॥

தர்மார்த்தீ ப்ராப்நுயாத் தர்மமர்த்தார்த்தீ சார்த்தமாப்நுயாத்
காமாநாவப்நுயாத் காமீ ப்ரஜார்த்தீ சாப்நுயாத் ப்ரஜாம். 143

*தர்மத்தை விரும்புவர் தர்மத்தையும் பொருளை விரும்புபவர் பொருளையும் காமத்தை விரும்புபவர் காமத்தையும் ஸந்ததியை விரும்புபவர் ஸந்ததியையும் பெறுவர்.*

भक्तिमान्यः सदोत्थाय शुचिस्तद्गतमानसः ।
सहस्रं वासुदेवस्य नाम्नामेतत्प्रकीर्तयेत् ॥ १४४ ॥

यशः प्राप्नोति विपुलं [1]ज्ञातिप्राधान्यमेव च ।
अचलां श्रियमाप्नोति श्रेयः प्राप्नोत्यनुत्तमम् ॥ १४५ ॥

न भयं क्वचिदाप्नोति वीर्यं तेजश्च विन्दति ।
भवत्यरोगो द्युतिमान् बलरूपगुणान्वितः ॥ १४६ ॥

பக்திமாந் யஸ் ஸதோத்த்தாய சுசிஸ் தத்கதமாநஸ:
ஸஹஸ்ரம் வாஸுதேவஸ்ய நாம்நாமேதத் ப்ரகீர்தயேத். 144

யச: ப்ராப்நோதி விபுலம் [1]ஜ்ஞாதி ப்ராதாந்யமேவ ச
அசலாம் ஶ்ரியமாப்நோதி ஶ்ரேய: ப்ராப்நோத்யநுத்தமம். 145

1. याति *யாதி (பா)*

ந பயம் க்வசிதாப்நோதி வீர்யம் தேஜஶ்ச விந்ததி
பவத்யரோகோ த்யுதிமான் பலரூபகுணாந்வித:. 146

வாசுதேவரிடத்தில் நிலைத்த பக்திகொண்டு. எப்போதும் ஈடுபட்டு, உள்ளத்தூய்மையும் புறத்தூய்மையும் பெற்றவனாக, பகவானிடத்திலேயே மனதைச் செலுத்தி இப்போது கூறப்பட்ட பகவான் வாசுதேவரின் ஆயிரம் நாமங்களைக் கூறுபவன், பெரும் புகழையும் சுற்றத்தாரிடையே மதிப்பையும் நிலைத்த செல்வத்தையும் மிகச்சிறந்த பேறுகளையும் பெறுகிறான். எதிலும் பயமற்றவனாக, வீர்யத்தையும் தேஜஸையும் பெறுகிறான். நோயற்றவனாகிறான். வலிவும் அழகும் குணச்சிறப்பும் பெறுகிறான்.

रोगार्तो मुच्यते रोगाद्बद्धो मुच्येत बन्धनात् ।
भयान्मुच्येत भीतस्तु मुच्येतापन्न आपदः ॥ १४७ ॥

दुर्गाण्यतितरत्याशु पुरुषः पुरुषोत्तमम् ।
स्तुवन्नामसहस्रेण नित्यं भक्तिसमन्वितः ॥ १४८ ॥

ரோகார்தோ முச்யதே ரோகாத் பத்த்தோ முச்யேத பந்த்தநாத்
பயாந் முச்யேத பீதஸ்து முச்யேதாபந்ந ஆபத: 147

துர்காண்யதிதரத்யாஶு புருஷ: புருஷோத்தமம்
ஸ்துவந் நாமஸஹஸ்ரேண நித்யம் பக்திஸமந்வித:. 148

தினமும் பக்தியுடன் புருஷோத்தமனை ஆயிரம் நாமங்களால் துதிக்கிறவன், நோயால் துன்புறுபவனானால் நோயிலிருந்து விடுபடுகிறான். விலங்கிடப்பட்டவன் விடுபடுகிறான். பயந்தவன் பயத்திலிருந்து விடுபடுகிறான். ஆபத்தில் சிக்கியவன் ஆபத்திலிருந்து மீள்கிறான். கடப்பதற்கு இயலாத இடையூறுகளை எளிதில் கடந்துவிடுகிறான்.

वासुदेवाश्रयो मर्त्यो वासुदेवपरायणः ।
सर्वपापविशुद्धात्मा याति ब्रह्म सनातनम् ॥ १४९ ॥

न वासुदेवभक्तानामशुभं विद्यते क्वचित् ।
जन्ममृत्युजराव्याधिभयं नैवोपजायते ॥ १५० ॥

வாஸுதேவாஶ்ரயோ மர்த்யோ வாஸுதேவ பராயண:
ஸர்வபாபவிஶுத்தாத்மா யாதி ப்ரம்ஹ ஸநாதநம். 149

ந வாஸுதேவபக்தாநாமஶுபம் வித்யதே க்வசித்
ஜந்மம்ருத்யுஜராவ்யாதிபயம் நைவோபஜாயதே. 150

வாஸுதேவனைப் புகலிடமாகக் கொண்டவனும் வாஸுதேவனையே அடைய வேண்டிய சிறந்த இடமாகக் கொண்டவனும், பாபங்கள் அனைத்தும் நீங்கித் தூய்மை பெறுவான். நித்யமான பரம்பொருளை அடைவான். வாஸுதேவனிடம் பக்தி கொண்டவர்களுக்குக் கெடுதி எப்போதும் நேராது. பிறப்பு இறப்பு மூப்பு நோய் இவற்றின் பயம் தோன்றாது.

इमं स्तवमधीयानः श्रद्धाभक्तिसमन्वितः ।
युज्येतात्मसुखक्षान्तिश्रीधृतिस्मृतिकीर्तिभिः ॥ १५१ ॥

न क्रोधो न च मात्सर्यं न लोभो नाशुभा मतिः ।
भवन्ति कृतपुण्यानां भक्तानां पुरुषोत्तमे ॥ १५२ ॥

இமம் ஸ்தவ மதீயாந: ஶ்ரத்தா பக்திஸமந்வித:
யுஜ்யேதாத்மஸுகக்ஷாந்தி ஸ்ரீத்ருதிஸ்ம்ருதிகீர்த்திபி: 151

ந க்ரோதோ நச மாத்ஸர்யம் ந லோபோ நாஶுபா மதி:
பவந்தி க்ருதபுண்யாநாம் பக்தாநாம் புருஷோத்தமே. 152

சிரத்தையும், பக்தியும் கொண்டவனாக இந்த ஸ்தோத்திரத்தைச் சொல்பவன் ஆத்மசுகம், பொறுமை, செல்வம், மன உறுதி, நினைவாற்றல், புகழ் இவற்றைப் பெறுவான். புருஷோத்தமனிடம் பக்தி கொண்டவர்கள் புண்யம் புரிந்தவர்கள். அவர்களுக்குக் கோபம் வராது, பகையிராது, பேராசை இராது, கெட்ட எண்ணம் தோன்றாது.

द्यौः सचन्द्रार्कनक्षत्रा खं दिशो भूर्महोदधिः ।
वासुदेवस्य वीर्येण विधृतानि महात्मनः ॥ १५३ ॥

ससुरासुरगन्धर्वं सयक्षोरगराक्षसम् ।
जगद्वशेऽवर्ततेदं कृष्णस्य सचराचरम् ॥ १५४ ॥

इन्द्रियाणि मनो बुद्धिः सत्वं तेजो बलं धृतिः ।
वासुदेवात्मकान्याहुः क्षेत्रं क्षेत्रज्ञ एव च ॥ १५५ ॥

த்யௌஸ் ஸசந்த்ரார்க நக்ஷத்ரா கம் திசோ பூர் மஹோததி:
வாஸுதேவஸ்ய வீர்யேண வித்ருதாநி மஹாத்மந:. 153

ஸஸுராஸுரகந்த்தர்வம் ஸயக்ஷோரகராக்ஷஸம்
ஜகத் வசேऽவர்ததேதம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம். 154

இந்த்ரியாணி மநோ புத்தி: ஸத்வம் தேஜோ பலம் த்த்ருதி:
வாஸுதேவாத்மகாந்யாஹு: க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞ ஏவச. 155

*சந்த்ரன் ஸூர்யன் நக்ஷத்திரம் இவற்றுடன் கூடிய வானுலகமும் ஆகாயமும் திசைகளும் பூமியும் கடலும் வாஸுதேவனின் பேராண்மையால் நிலைத்து நிற்கின்றன. அசுரர், தேவர் கந்தர்வர், யக்ஷர், நாகர், ராக்ஷஸர் என்ற பல இனங்களும் அசைவதும் அசையாததும் கொண்ட இந்த உலகம் க்ருஷ்ணனின் வசத்தில் அடங்கிவிட்டது. பொறிகள், மனம், புத்தி, இயல்பு, தேஜஸ், வலிவு, உறுதி இவையும் உடலும் ஆத்மாவும் வாஸுதேவரின் வடிவங்கள்.*

सर्वागमानामाचारः प्रथमं परिकल्पते ।
आचारप्रभवो धर्मो धर्मस्य प्रभुरच्युतः ॥ १५६ ॥

ऋषयः पितरो देवा महाभूतानि धातवः ।
जङ्गमाजङ्गमं चेदं जगन्नारायणोद्भवम् ॥ १५७ ॥

योगो ज्ञानं तथा सांख्यं विद्याः शिल्पादिकर्म च ।
वेदाः शास्त्राणि विज्ञानमेतत्सर्वं जनार्दनात् ॥ १५८ ॥

ஸர்வாகமாநாமாசார: ப்ரதமம் பரிகல்பதே.
ஆசாரப்ரபவோ தர்மோ தர்மஸ்ய ப்ரபுரச்யுத:. 156

ருஷய: பிதரோ தேவா மஹாபூதாநி தாதவ:
ஜங்கமாஜங்கமம் சேதம் ஜகந்நாராயணோத்பவம். 157

யோகோ ஜ்ஞானம் ததா ஸாங்க்யம் வித்யாஶ் ஶில்பாதிகர்ம ச.
வேதாஶ்ஶாஸ்த்ராணி விஜ்ஞானமேதத் ஸர்வம் ஜநார்தநாத் 158

அறநூல்களில் கூறப்பட்ட நடைமுறைகளை - ஸதாசாரங்களை வாழ்க்கை முறையாக ஏற்று வாழ்நாள் முழுதும் தொடர்ந்து கடைபிடிப்பதே முக்கியமானதாகும். அந்த ஆசாரத்தின் தோற்றுவாய் தர்மம். பகவானுல் உலகை நிலைநிறுத்த அமைக்கப்பெற்ற தர்மம் ஸதாசாரத்தால் ஆளுமைமிக்கதாக ஆகின்றது. அச்யுதர் அந்த தர்மத்தையே தன் வலிவாகக்கொண்டு உலகைக் கட்டுப்படுத்துகிறார். ருஷிகளும் பித்ருக்களும் தேவர்களும் ஐந்து பூதங்களும் அவற்றாலான ஜட உலகின் மூலக்கனிமங்களும் அசைவதும் அசையாததுமான இந்த உலகமும் நாராயணனிடமிருந்து தோன்றியவையே. அறிவைத் தரும் யோகமும் ஸாங்கியமும் சிக்ஷை கல்பம் முதலிய வேதாங்கங்களும் சில்பம் முதலிய தொழில் முறைகளும் வேதங்களும் சாஸ்திரங்களும் அனைத்தும் ஜனார்த்தநரிடமிருந்து தோன்றியவையே.

एको विष्णुर्महद्भूतं पृथग्भूतान्यनेकशः ।
त्रीन्लोकान्व्याप्य भूतात्मा भुंक्ते विश्वभुगव्ययः ।। १५९ ।।

ஏகோ விஷ்ணுர் மஹத்ப்பூதம் ப்ருதக்ப்பூதாந்யநேகச:.
த்ரீந் லோகாந் வ்யாப்ய பூதாத்மா புங்க்தே விச்வபுகவ்யய:. 159

எங்கும் பரவி நிற்கின்ற பரம்பொருளான பகவான் உலகமனைத்திற்கும் மூலக்கருவாகிய மஹத்தாக ஆனார். பலவாகப் பிரிந்து தனித்தனி வடிவங்கள் பெற்று மூவுலகத்தையும் நிரப்பினார். அவரே தோன்றி ஒவ்வொரு பொருளின் ஆதமாவாகியுள்ளார். அவற்றிலிருந்து விலகாதவராகச் சிறிதும் மாறுபடாதவராக விரிந்த இந்த உலகை அனுபவிப்பவராக இருக்கிறார். உலகைத் தன்னுள் அடக்கிக் கொள்கிறார். (ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் செய்பவர் அவரே)

इमं स्तवं भगवतो विष्णोर्व्यासेन कीर्तितम् ।
पठेद्य इच्छेत्पुरुषः श्रेयः प्राप्तुं सुखानि च ।। १६० ।।

विश्वेश्वरमजं देवं जगतः प्रभुमव्ययम् ।
भजन्ति ये पुष्कराक्षं न ते यान्ति पराभवम् ।। १६१ ।।
न ते यान्ति पराभवम् ओं नमः । इति

இமம் ஸ்தவம் பகவதோ விஷ்ணோர் வ்யாஸேந கீர்திதம்.
படேத்ய இச்ச்சேத் புருஷ: ஶ்ரேய: ப்ராப்தும் ஸுகாநிச. 160

விஶ்வேஶ்வரமஜம் தேவம் ஜகத: ப்ரபுமவ்யயம்.
பஜந்தி யே புஷ்கராக்ஷம் நதே யாந்தி பராபவம். 161.
ந தே யாந்தி பராபவம் ஓம் நம: இதி.

*இம்மையிலும் மறுமையிலும் இன்பமாக வாழ விரும்புகின்ற மனிதன் வியாஸரால் கூறப்பட்ட இந்த விஷ்ணுவின் துதியைப் படிக்கவேண்டும். உலகின் ஆளுனரும், பிறப்பில்லாதவரும், உலகின் உடைமையாளரும், மாறுபாடற்றவரும், தாமரைக்கண்ணனுமாகிய பகவானை வழிபடுபவர்கள் வாழ்க்கையில் தோல்விபெறமாட்டார்கள். ஓம் நமஸ்காரம்.*[1]

अर्जुन उवाच —

पद्मपत्रविशालाक्ष पद्मनाभ सुरोत्तम ।
भक्तानामनुरक्तानां त्राता भव जनार्दन ॥ १६२ ॥

அர்ஜுந உவாச —

பத்மபத்ர விஶாலாக்ஷ பத்மநாப ஸுரோத்தம.
பக்தாநாமநுரக்தாநாம் த்ராதா பவ ஜநார்தந. 162

*அர்ஜுனன் கேட்டான் — தாமரை இதழ்களைப் போல் விரிந்த கண்கள் உள்ளவரே, தாமரையைப் போன்று வட்டமான தொப்புள் உள்ளவரே. தேவர்களில் சிறந்தவரே, மக்களால் அணுகப்பெறுபவரே ! உம்மிடம் அன்பு பூண்ட அடியார்களைக் காப்பாற்றுவீராக.*

श्री भगवानुवाच —
यो मां नामसहस्रेण स्तोतुमिच्छति पाण्डव ।
सोऽहमेकेन श्लोकेन स्तुत एव न संशयः ॥ १६३ ॥

1. *இத்துடன் மஹாபாரதத்தில் விஷ்ணுஸஹஸ்ரநாமம் அடங்கிய பகுதி முடிவுறுகிறது. இது அனுசாஸன பர்வத்தின் 149 வது அத்தியாயமாக உள்ளது. (சில பதிப்புகளில் 144 வது 154வது அத்தியாயம். அத்தியாயப் பிரிவில் கொண்டுள்ள மாற்றத்தால் இந்த வேறுபாடு) இனிவரும் சுலோகங்கள் வழக்கிலுள்ளவை. பத்ம புராணம் கீதை முதலியவற்றிலிருந்து தொகுத்தவை.*

ஸ்ரீ பகவான் உவாச —

**யோ மாம் நாமஸஹஸ்ரேண ஸ்தோதும் இச்சதி பாண்டவ.**
**ஸோऽஹமேகேந ஶ்லோகேந ஸ்துத ஏவ ந ஸம்ஶய:. 163**

*பகவான் கூறினார் - பாண்டவனே ! என்னை ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தால் துதிக்க விரும்பினால் (அப்படிச் செய்ய இயலாவிடில்) (பின்வருகிற) சுலோகத்தின் மூலமே துதிக்கபெற்றவனாகிறேன். ஐயமில்லை (அது வியாஸர் கூறியது).*

व्यास उवाच —

वासनाद्वासुदेवस्य वासितं[1] ते जगत्रयम् ।
सर्वभूतनिवासोऽसि वासुदेव नमोऽस्तु ते ॥ १६४ ॥
वासुदेव नमोऽस्तु ते ओं नमः इति ।

வ்யாஸ உவாச—

**வாஸநாத் வாஸுதேவஸ்ய வாஸிதம்[1] தே ஜகத்த்ரயம்**
**ஸர்வபூத நிவாஸோऽஸி வாஸுதேவ நமோऽஸ்துதே. 164**
**வாஸுதேவ நமோऽஸ்துதே ஓம் நம: இதி.**

*வியாஸர் கூறினார் - மூவுலகும் வாஸுதேவர் உறைவிடமான தால் நிலைத்திருக்கிறது. வாஸுதேவரே ! நீர் எல்லோர் உள்ள இடத்திலும் மறைந்துள்ளவர். உமக்கு வணக்கம், (ஸஹஸ்ரநாமத்திற்கு ஈடாகச் சொல்லத்தக்க சுலோகம் இது).*

पार्वत्युवाच—

केनोपायेन लघुना विष्णोर्नामसहस्रकम् ।
पठ्यते पण्डितैर्नित्यं श्रोतुमिच्छाम्यहं प्रभो ॥ १६५ ॥

ईश्वर उवाच —

श्रीराम राम रामेति रमे रामे मनोरमे ।
सहस्रनाम तत्तुल्यं रामनाम वरानने ॥ १६६ ॥
रामनाम वरानने ओं नमः इति ।

1. भुवनत्रयं *புவனத்ரயம் என்ற பாடமுண்டு.*

பார்வத்யுவாச —

கேநோபாயேந லகுநா விஷ்ணோர் நாமஸஹஸ்ரகம்.
பட்ட்யதே பண்டிதைர் நித்யம் ஶ்ரோதுமிச்சாம்யஹம் ப்ரபோ. 165

ஈஶ்வர உவாச—

ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே
ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வராநநே. 166

ராமநாம வராநநே ஓம் நம: இதி.

*பார்வதி கேட்டாள் — அறிவாளிகள் பேராயிரம் கூறக் கையாண்ட எளிய உபாயத்தைக் கேட்க விரும்புகிறேன்.*

*சிவபெருமான் சொன்னார் — அழகிய என்மனம் ஈர்த்தபெண்ணே ! அழகிய முகமுள்ளவளே ! ஸ்ரீராம ராம ராம என்று கூறுவதே எளியது. அந்த ராம நாமத்திற்கு ஈடு ஸஹஸ்ரநாமமே. ஸஹஸ்ரநாமத்திற்கு ஈடு ராம நாமமே — ராம நாமமே. (ஸஹஸ்ர நாமத்திற்கு ஈடாகச் சொல்லக்கூடியது ராம என்பது)*

ब्रह्मोवाच—

नमोऽस्त्वनन्ताय सहस्रमूर्तये
सहस्रपादाक्षिशिरोरुबाहवे ।
सहस्रनाम्ने पुरुषाय शाश्वते
सहस्रकोटियुगधारिणे नमः ॥
सहस्रकोटियुगधारिणे ओं नमः ॥ इति । १६७ ॥

ப்ரம்ஹா உவாச—

நமோऽஸ்த்வநந்தாய ஸஹஸ்ரமூர்த்தயே
ஸஹஸ்ரபாதாக்ஷி ஶிரோருபாஹவே.
ஸஹஸ்ரநாம்நே புருஷாய ஶாஶ்வதே
ஸஹஸ்ரகோடி யுகதாரிணே நம:.
ஸஹஸ்ரகோடி யுகதாரிணே நம: ஓம் நம: இதி 167

*பிரும்மா கூறினார் - எல்லைகாண முடியாதவரும் ஆயிரக்கணக்கான வடிவங்களில் தோன்றுபவரும்*

*ஆயிரக்கணக்கான கால்கள் கண்கள் தலைகள் பெருங்கைகள் கொண்டவரும் ஆயிரக்கணக்கான பெயர்கள் கொண்டவரும் என்றும் நிலைத்துள்ளவரும் ஆயிரக்கணக்கான யுகங்கள் என்ற பெருங்காலவரையைத் தொடர்ந்து வரச் செய்பவருமான பரம புருஷருக்கு வணக்கம். ஆயிரக்கணக்கானயுகங்கள் என்ற பெருங்காலவரையைத் தொடர்ந்து வரச்செய்பவருக்கு வணக்கம்.*

सञ्जय उवाच—

यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।
तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥ १६८ ॥

ஸஞ்ஜய உவாச—

யத்ர யோகேஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தநுர்த்தர:
தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர்மதிர் மம. 168

*ஸஞ்ஜயர் கூறினார் - எல்லாவற்றையும் இணைத்து வைப்பவரான ஈசனான கண்ணனும் வில்லேந்திய குந்தியின் குமாரனான அர்ஜுனனும் உள்ள இடத்தில் செல்வமும் வெற்றியும் செழிப்பும் நிலைத்த நீதியும் இருக்கும் என்பது என் கருத்து.*

भगवानुवाच—

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ १६९ ॥

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ १७० ॥

அநந்யாஶ் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே
தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம். 169

பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம்
தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே. 170

*பகவான் கூறினார் - வேறொரு போக்கின்றி என்னையே நினைத்து வழிபட்டு என்னிடமே முழுவதும் ஈடுபட்டவர்களின்*

*தேவையைத் தந்து காப்பாற்றும் வாழ்க்கைப் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறேன். நல்லோர்களைக் காக்கவும் தீவினை புரிபவர்களை அழிக்கவும் தர்மத்தை நிலைநிறுத்தவும் சங்கடம் நேரும் போதெல்லாம் தோன்றிவருகிறேன்.*

आर्ता विषण्णाः शिथिलाश्च भीताः
घोरेषु च व्याधिषु वर्तमानाः ।
सङ्कीर्त्य नारायणशब्दमात्रं
विमुक्तदुःखाः सुखिनो भवन्ति ॥ १७१ ॥

ஆர்த்தா விஷண்ணாஶ் ஶிதிலாஶ்ச பீதா:
கோரேஷு ச வ்யாதிஷு வர்தமாநா:
ஸங்கீர்த்ய நாராயணஶப்தமாத்ரம்
விமுக்தது:க்காஸ் ஸுகிநோ பவந்தி. 171

*துன்புற்றவர், சோகத்தால் வாடியவர், தளர்ந்தவர், பயந்தவர், கடும் நோயால் வாடுபவர் இவர்கள் நாராயண என்ற ஒரே சொல்லைத் திரும்பத் திரும்பப்பாட துக்கம் நீங்கிச் சுகம் பெறுகிறார்கள்.*

आपदां अपहर्तारं दातारं सर्वसंपदाम् ।
लोकाभिरामं श्रीरामं भूयो भूयो नमाम्यहम् ॥ १७२

ஆபதாம் அபஹர்தாரம் தாதாரம் ஸர்வஸம்பதாம்।
லோகாபிராமம் ஸ்ரீராமம் பூயோ பூயோ நமாம்யஹம்॥ 172

*ஆபத்துக்களை நீக்குபவரும் எல்லாச் செல்வங்களையும் அளிப்பவரும் உலகைத் தன் பால் ஈர்ப்பவருமான ஸ்ரீராமனை மேலும் மேலும் வணங்குகிறேன்.*

आर्तानां अर्तहन्तारं भीतानां भीतिनाशनम् ।
द्विषतां कालदण्डं तं रामचन्द्रं नमाम्यहम् ॥ १७३ ॥

ஆர்தாநாம் ஆர்திஹந்தாரம் பீதாநாம் பீதிநாஶநம்
த்விஷதாம் காலதண்டம் தம் ராமசந்த்ரம் நமாம்யஹம்॥ 173॥

*துயருற்றவரின் துயரைக் களைபவரும் பயந்தவரின் பயத்தைப் போக்குபவரும், எதிரிகளுக்கு யமதண்டம் போன்றவருமான சந்திரனைப் போன்று இதமான ராமனை நான் வணங்குகிறேன்.*

अग्रतः पृष्ठतश्चैव पार्श्वतश्च महाबलौ ।
आकर्णपूर्णधन्वानौ रक्षेतां रामलक्ष्मणौ ॥ १७४ ॥

அக்ரத: ப்ருஷ்டதஶ்சைவ பார்ச்வதஶ்ச மஹாபலோ।
ஆகர்ணபூர்ணதந்வாநௌ ரக்ஷேதாம் ராம லக்ஷ்மணௌ॥ 174 ॥

*பெரு வலிவ கொண்டவர்களும் காதுவரை வில்லின் நாணிழுத்து ஆயத்தமாக இருப்பவர்களுமான ராமனும் லக்ஷ்மணனும் முன்னும் பின்னும் பக்கத்திலுமிருந்து காக்கட்டும்.*

सन्नद्धः कवची खड्गी चापबाणधरो युवा ।
गच्छन्ममाग्रतो नित्यं रामः पातु सलक्ष्मणः ॥ १७४ ॥

ஸந்நத்த்த: கவசீ கட்கீ சாபபாணதரோ யுவா।
கச்ச்சந் மமாக்ரதோ நித்யம் ராம: பாது ஸலக்ஷ்மண:॥ 175 ॥

*கவசம் பூண்டு கத்தியும் வில்லும் அம்பும் ஏந்தி ஆயுத்தனுக யுவாவாக என்முன் சென்று கொண்டு லக்ஷ்மணனுடன் கூடிய ராமன் காக்கட்டும்.*

नमः कोदण्डहस्ताय सन्धीकृतशराय च ।
खण्डिताखिलदैत्याय रामायापन्निवारिणे ॥ १७५ ॥

நம: கோதண்டஹஸ்தாய ஸந்த்தீக்ருதஶராய ச।
கண்டிதாகிலதைத்யாய ராமாயாபந்நிவாரிணே॥ 175 ॥

*கோதண்டத்தைக் கையில் ஏந்தி அம்பை பூட்டி எல்லா அரக்கர்களையும் அழித்து ஆபத்து நீக்குகிற ராமனுக்கு நமஸ்காரம்.*

रामाय रामभद्राय रामचन्द्राय वेधसे ।
रघुनाथाय नाथाय सीतायाः पतये नमः ॥ १७७ ॥

ராமாய ராமபத்ராய ராமசந்த்ராய வேதஸே।
ரகுநாதாய நாதாய ஸீதாயா: பதயே நம:॥ 177 ॥

*ராமனுக்கு, மங்களமான ராமனுக்கு, சந்திரனைப் போன்று இதமான ராமனுக்கு, உலகைப் படைத்தவனுக்கு, ரகுவம்சத் தலைவனுக்கு, என் நாதனுக்கு, ஸீதையின் மணாளனுக்கு நமஸ்காரம்.*

अच्युतानन्तगोविन्दनामोच्चारण भेषजात् ।
नश्यन्ति सकला रोगाः सत्यं सत्यं वदाम्यहम् ॥ १७८ ॥

அச்யுதாநந்த கோவிந்த நாமோச்சாரண பேஷஜாத்।
நச்யந்தி ஸகலா ரோகா: ஸத்யம் ஸத்யம் வதாம்யஹம்॥ 178 ॥

*அச்யுதர் அநந்தர் கோவிந்தர் என்ற நாமங்களை உச்சரிப்பதாகிய மருந்தால் எல்லா நோய்களும் தீர்கின்றன. இது உண்மை! உண்மை! என நான் கூறுவேன்.*

सत्यं सत्यं पुनः सत्यं उद्धृत्य भुजमुच्यते ।
वेदात् शास्त्रं परं नास्ति न दैवं केशवात्परम् ॥ १७९ ॥

ஸத்யம் ஸத்யம் புந: ஸத்யம் உத்ருத்ய புஜமுச்யதே।
வேதாத் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி ந தைவம் கேசவாத்பரம்॥ 179 ॥

*இது உண்மை! உண்மை! மறுபடி கை உயர்த்தி இது உண்மை எனக் கூறப்படுகிறது. வேதத்தைவிட உயர்ந்த சாஸ்த்ர மில்லை. கேசவனைவிட உயர்ந்த தெய்வமில்லை.*

शरीरे जर्जरीभूते व्याधिग्रस्ते कलेबरे ।
औषधं जाह्नवीतोयं वैद्यो नारायणो हरिः ॥ १७० ॥

சரீரே ஜர்ஜரீபூதே வ்யாதிக்ரஸ்தே கலேபரே।
ஔஷதம் ஜாந்ஹவீதோயம் வைத்யோ நாராயணோ ஹரி:॥ 180 ॥

*உடல் தளர்ந்து உறுப்புகளும் நோய்களுக்குள்ளாகிய நிலையில் கங்கை நீரே மருந்து. நாராயணனை ஹரியே வைத்தியர்.*

आलोड्य सर्वशास्त्राणि विचार्य च पुनः पुनः ।
इदमेकं सुनिष्पन्नं ध्येयो नारायणो हरिः । १८१ ॥

ஆலோட்ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந: ।
இதமேகம் ஸுநிஷ்பந்நம் த்யேயோ நாராயணோ ஹரி:॥ 180 ॥

*எல்லா சாஸ்த்ரங்களையும் அலசி மேலும் மேலும் ஆராய்ந்த பின் நாராயணனை ஹரியே த்யானிக்கத் தக்கவன் என்பது ஒன்றே முடிவானது.*

यदक्षरपरिभ्रष्टं मात्राहीनं तु यद्भवेत् ।
तत्सर्वं क्षम्यतां देव नारायण नमोऽस्तुते ॥ १८२ ॥

யதக்ஷரபரிப்ப்ரஷ்டம் மாத்ராஹீநம் து யத்பவேத்।
தத்ஸர்வம் க்ஷம்யதாம் தேவ நாராயண நமோஸ்துதே॥ 182 ॥

*எழுத்து நழுவியோ உச்சரிப்பின் அளவு குறைந்தோ உள்ளதனைத்தையும் பொறுத்துக் கொள்வீர், தேவ! நாராயண! உமக்கு வணக்கம்.*

विसर्गबिन्दुमात्राणि पदपादाक्षराणि च ।
न्यूनानि चातिरिक्तानि क्षमस्व पुरुषोत्तम ॥ १८३ ॥

விஸர்கபிந்துமாத்ராணி பதபாதாக்ஷராணி ச।
ந்யூநாநி சாதிரிக்தாநி க்ஷமஸ்வ புருஷோத்தம॥ 183॥

*புருஷோத்தமரே! விஸர்கம், பிந்து அளவிலும் சொல் ச்லோகத்தின் பகுதி அல்லது எழுத்தளவிலும் கூடியும் குறைந்து முள்ளதைப் பொறுப்பீராக.*

स्वस्ति प्रजाभ्यः परिपालयन्तां
न्याय्येन मार्गेण महीं महीशाः ॥
गोब्राह्मणेभ्यः शुभमस्तु नित्यं
लोकाः समस्ताः सुखिनो भवन्तु ॥ १८४ ॥

ஸ்வஸ்தி ப்ரஜாப்ய: பரிபாலயந்தாம் ந்யாய்யேந மார்கேண மஹீம் மஹீசா: ॥
கோப்ராஹ்மணேப்ய: சுபமஸ்து நித்யம் லோகா: ஸமஸ்தா: ஸுகிநோ பவந்து॥ 184॥

*மக்கள் அனைவருக்கும் மங்கள முண்டாகுக! நாடாளுபவர் நேரான வழியில் நாட்டை ஆளட்டும்! பசுவினத்திற்கும் அந்தணருக்கும் மங்களம் உண்டாகட்டும். என்றும் அனைத்துலகினரும் சுகம் பெறட்டும்.*

कायेन वाचा मनसेन्द्रियैर्वा बुद्ध्याऽऽत्मना वा प्रकृतेः स्वभावात् ।
करोति यद्यत्सकलं परस्मै नारायणायेति समर्पयामि ॥ १८४ ॥

காயேந வாசா மநஸேந்த்ரியைர்வா
புத்த்யாऽऽத்மநா வா ப்ரக்ருதேஸ் ஸ்வபாவாத்.
கரோமி யத்யத் ஸகலம் பரஸ்மை
நாராயணாயேதி ஸமர்பயாமி. 184॥

*உடலாலும் சொல்லாலும் செயலாலும் பொறிகளாலும் அறிவாலும் இவற்றின் கூட்டாகிய என்னாலும் இயற்கைக்கு வசப்பட்டு இயல்பாகியது எதெதனைச் செய்துவருகிறேனோ அவை எல்லாவற்றையும் அந்தப் பரனை நாராயணனது திருவடிகளில் ஸமர்ப்பணம் செய்கிறேன்.*

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமஸ்தோத்திரம் முற்றிற்று.

# ஆயிரம் நாமங்களின் அகராதி

ஸம்ஸ்கிருத அகராதி முறையும் தமிழ் அகராதி முறையும் சில இடங்களில் வேறுபடும். ஸம்ஸ்கிருதத்தில் உயிரெழுத்தான ऋ தமிழில் மெய்யெழுத்தாகி 'ரு' வில் சேரும். சவர்க்கத்தைச் சேர்ந்த 'ஜ' வ விற்குப் பின் ஷஸஹ விற்கு முன் இடம் பெறும். 'க' வின் கூட்டெழுத்தான 'க்ஷ' கடைசியில் இடம் பெறும். ஷஹஸ விற்கு முன் இடம் பெறவேண்டிய श 'ச' வாகி க வைத் தொடரும்.